# தற்காலத் தமிழ் இலக்கியத்தின் புதிய போக்குகள்

தொகுதி - 1




அருள்மிகு பழனியாண்டவர்
மகளிர் கலைக் கல்லூரி, தன்னாட்சி,
தேசியத்தர மதிப்பீடு B++
பழனி 624 615

தமிழ்த்துறை - உயராய்வு மையம்

# தற்காலத் தமிழ் இலக்கியத்தின் புதிய போக்குகள்

தொகுதி - 1




*அருள்மிகு பழனியாண்டவர்*
*மகளிர் கலைக் கல்லூரி, தன்னாட்சி,*
*தேசியத்தர மதிப்பீடு B++*
*பழனி – 624 615.*

தமிழ்த்துறை - உயராய்வு மையம்

# நூல் விவர அட்டவணை


| | | |
|---|---|---|
| 1. | நூலின் பெயர் | : தற்காலத் தமிழ் இலக்கியத்தின் புதிய போக்குகள் |
| 2. | பதிப்பாசிரியர்கள் | : தமிழ்த்துறை - உயராய்வு மையம்,<br>அருள்மிகு பழனியாண்டவர் மகளிர் கலைக் கல்லூரி, தன்னாட்சி.<br>தேசியத்தரம் B ++<br>சின்னக்கலையம்புத்தூர், பழனி. |
| 3. | முதற்பதிப்பு | : மார்ச்சு 2005 |
| 4. | மொழி | : தமிழ் |
| 5. | பக்கங்கள் | : 312 |
| 6. | வெளியீடு | : தமிழ்த்துறை - உயராய்வு மையம்,<br>அருள்மிகு பழனியாண்டவர் மகளிர் கலைக் கல்லூரி, தன்னாட்சி.<br>தேசியத்தரம் B ++<br>சின்னக்கலையம்புத்தூர், பழனி. |
| 7. | கணினி ஆக்கம் | : அரசு கம்ப்யூட்டர்ஸ் & ஆப்செட் பிரிண்டர்ஸ்,<br>போன் : 04545 - 241313, செல் : 09362510543. |
| | விலை | : ரூ. 350 |

# வாழ்த்துரை

அருள்மிகு தண்டாயுதபாணி சுவாமி திருக்கோயில் நிர்வாகத்தின் கீழ் இயங்கி வரும் அருள்மிகு பழனியாண்டவர் மகளிர் கலைக் கல்லூரித் தமிழ்த்துறையினர் **"தற்காலத் தமிழ் இலக்கியத்தின் புதிய போக்குகள்"** என்ற தலைப்பில் தேசியக் கருத்தரங்கினை நடத்துகின்ற முயற்சி பாராட்டுக்குரியது. தமிழே முருகன்; முருகனே தமிழ் என்ற பெருமைக்குரிய தமிழ்மொழி நெடிய நீண்ட தொன்மை சான்ற இலக்கிய இலக்கண மரபினை உடையது. வாழ்க்கை நெறிமுறைகளை வரையறுக்கும் "பொருள் இலக்கணம்" கண்ட மொழி தமிழ்மொழியே. உயர்தனிச் செம்மொழிக்கான தகுதிகளைப் பெற்ற நம் தமிழ்மொழி "செவ்வியல் மொழியாம்" உரிமையை காலம் தாழ்த்தேனும் பெற்றுள்ளது. யுனெஸ்கோ எனும் உலக அரங்கம் தனது ஆய்வின் முடிவாக, இன்னும் நூறாண்டுகளில் "தமிழ் எனும் மொழியே இருக்காது" என்று தெரிவித்த போது, தமிழ் ஆர்வலர்களுக்கு எல்லாம் அச்செய்தி அதிர்ச்சியைத் தந்தது. எனினும் பாலி மொழியால் பாதிக்கப்படாமல் வடமொழியால் வாடிப் போகாமல், விசயநகரத்தாரின் தெலுங்கு மொழியால் தீர்ந்து போகாமல் வளர்ந்த தமிழ் மொழி, ஆங்கில மோகத்தால் மட்டும் அழிந்து விடுமா என்ன? அழியாது முன்னைப் பழமைக்கும் பழமையாய்ப் பின்னைப் புதுமைக்கும் புதுமையாய் புதிய வேகத்தில் வளர்ந்து வருகின்றது என்ற நம்பிக்கையை இத்தமிழ்க் கருத்தரங்கம் ஏற்படுத்துகின்றது.

**"தற்காலத் தமிழ் இலக்கியத்தின் புதிய போக்குகள்"** - என்ற தலைப்பில் தமிழ் கூறும் நல்லுலகில் இருந்தும், பிற மாநிலங்களில் இருந்தும் தமிழ் ஆர்வலர்கள் பங்கேற்று இலக்கியம் - வகைமை - கோட்பாடு - இயக்கம் ஆகிய அனைத்துக் கூறுகள் குறித்தும், தற்காலத் தமிழ் இலக்கியப் போக்குகளின் மாற்றங்கள் - பாடுபொருள் குறித்தும் ஆய்வு நோக்கில் குழுமி விவாதிக்கின்ற முறையில், இக் கருத்தரங்கை ஏற்பாடு செய்துள்ள எமது திருக்கோயில் நிர்வாகம் சார்ந்த மகளிர் கலைக் கல்லூரி தமிழ்த்துறையினரின் முயற்சியை நான் பெரிதும் பாராட்டுகின்றேன். இதேபோன்று மேன்மேலும் பலதுறைகளிலும் தமிழின் வளர்ச்சிக்கென இக்கல்லூரித் தமிழ்த்துறை பாடுபடும் என்பது வெள்ளிடைமலை.

வாழ்க அவர்தம் தமிழ்ப்பணி ; வளர்க அவர்களது முயற்சி ; இக்கருத்தரங்கம் செவ்வனே நிறைவெய்த அருள்மிகு தண்டாயுதபாணி சுவாமியின் திருவருள் நாளும் துணை நிற்கும் என வாழ்த்துகிறேன்.

திரு. *த. சுந்தரம்*
நிர்வாக அதிகாரி/இணை ஆணையர்
அருள்மிகு தண்டாயுதபாணி சுவாமி திருக்கோயில்
கல்லூரிச் செயலர் & தாளாளர்
அருள்மிகு.பழனியாண்டவர் மகளிர் கலைக் கல்லூரி,
பழனி - 624 615.

## அணிந்துரை

பழனி அருள்மிகு தண்டாயுதபாணி சுவாமி திருக்கோயில் நிர்வாகத்தின்கீழ் இயங்கிவரும், அருள்மிகு பழனியாண்டவர் மகளிர் கலைக்கல்லூரி கலை, அறிவியல், கணினி எனப் பலதுறைகளிலும் பரிணமித்து வளர்ந்து வருகின்றது. மாணவியருக்குப் புத்தக வாசிப்பால் புத்தம்புதிய அறிவைப் புகட்டுவதோடு மட்டுமின்றி, ஆராய்ச்சி மனப்பான்மையினையும் வளர்த்து வருகின்றது. இவ்வளர்ச்சியால் முகிழ்த்ததே தமிழ்த்துறைப் பேராசிரியர்கள் அனைவரும் கூடி நடத்தும் **"தற்காலத் தமிழ் இலக்கியத்தின் புதிய போக்குகள்"** என்னும் பொருண்மையில் அமைந்த தேசியக் கருத்தரங்காகும். தமிழ் இலக்கியத்தில் காலந்தோறும் வளர்ந்து வருகின்ற புதுப்புது ஆய்வு முயற்சிகளைத் தொகுத்தளிக்க முயல்கின்றது இக் கருத்தரங்கம்.

புனைவியல், நடப்பியல், நவீனத்துவம், பின் நவீனத்துவம், அமைப்பியல், பின் அமைப்பியல், பெண்ணியம், தலித்தியம், பெரியாரியம், மார்க்சியம், ஹைகூ, சென்ரியு, லிமெரிக், லிமெரிக்யு எனத் தற்காலத் தமிழின் வளர்ச்சிப் போக்கினைப் பல்வேறு ஆய்வாளர்களைக் கொண்டு இக்கருத்தரங்கு மீள்பார்வை செய்கின்றது.

புத்திலக்கியத்தின் புதிய இயக்கங்களின் கொள்கைகளையும், கோட்பாடுகளையும் மாணவர்களும், திறனாய்வாளர்களும் தெரிந்து கொள்வதற்கு இக்கருத்தரங்கு பெருமளவு பயன்படும் என்பதற்குச் சான்றுகளாக இந்நூல்களில் இடம்பெற்றிருக்கும் அனைத்துக் கட்டுரைகளும் திகழ்கின்றன.

புனைவியல், நடப்பியல் என்ற இருபெரும் பொருண்மைகளினின்று கிளைத்தவையே பிற இயக்கக் கூறுகள் என்பதை, இந்நூல்களுள் இடம் பெற்றுள்ள பெரும்பான்மையான கட்டுரைகள் உணர்த்துகின்றன. மனித உரிமைகளும், பொருளாதாரப் பகிர்வு, பயன்பாடு ஆகியவற்றுக்கான இயங்கு தளங்களும் முரண்படுவதே மேற்கண்ட இலக்கிய இயக்கங்கள் தோன்றுவதற்கான காரணிகள் என்பதையும் பெரும்பாலான ஆய்வாளர்கள் புரியவைத்துள்ளனர்.

முற்காலத்தில் பெண்களும் பெண்ணுரிமைகளும் முடக்கி வைக்கப்பட்டன. இம் முட்டுக்கட்டைகளை நீக்கியவர் பாரதி. இதனால், பெண்கள் சற்று நிம்மதிப் பெருமூச்சு விட்டனர். இருப்பினும், ஆங்காங்கே இவர்களுக்கு எதிராகப் பிரச்சினைகள் தோன்றிக் கொண்டுதான் உள்ளன. இவை யாவும் இலக்கியங்களில் இயன்ற அளவு பிரதிபலித்துள்ளன என்றாலும், முழுமையான தீர்வு இன்னும் ஏற்படவில்லை. இச்சிக்கல்களை முற்றிலும் புறந்தள்ளும் வண்ணம் தங்கள் புரட்சிக்கருத்துகளைப் போர்வாளாய்க் கொண்டு, தொண்ணூற்றுக்கும் மேற்பட்ட திறனாய்வாளர்கள் பெண்ணியக் கட்டுரைகள் படைத்துள்ளனர். ஞாலத்தின் ஞானிகளாய்த் திகழும் தகுதிவாய்ந்த பெண்கள் அனைவரும் எள்ளளவும் இழிவாகக் கருதப்படக்கூடாது என்பதையே இவர்களுடைய கருத்துகள் புலப்படுத்துகின்றன. இக்கருத்தரங்கக் கட்டுரைகள் அனைத்தும், இரு தொகுதிகளாகப் பகுத்து நூலாக்கம்

செய்யப்பட்டுள்ளதால் ஒரு தொகுதியைப் பெண்ணியம் ஆக்கிரமித்துள்ளது. என்பதை அறிகையில் “ஆணுக்குப் பெண் சமம்” என அன்று நாம் எண்ணியதை இன்று முழுமையாக எய்திவிட்டோம் என உரக்கக் கூற வேண்டு போல் உள்ளது.

நவீனத்துவம், பின் நவீனத்துவம் சார்ந்த கட்டுரைகள் யாவும் மற்ற பொருண்மைகளில் அமைந்த கட்டுரைகளைத் தன்வயப்படுத்திவிட்டன. சமுதாய வளர்ச்சிக்கேற்ப இலக்கிய முன்னேற்றமும் புதுமைப்போக்கில் மாறிக்கொண்டு வருகின்றது என்பதற்கு உரிய சான்றாகப் பெரும்பான்மையான கட்டுரைகள் அமைகின்றன. மார்க்சியம், அமைப்பியல், பின் அமைப்பியல், பெரியாரியம் சார்ந்த கருத்துகள் இவ்வாய்வுத் தொகுதிகளில் சிறுபான்மை இடம்பெற்றிருப்பது தமிழ்த் திறனாய்வாளர்கள் இச் சிந்தனைகளில் மேலும் கவனம் செலுத்த வேண்டும் என்பதை வலியுறுத்துகின்றது.

தலித்தியப் பொருண்மை அதிக ஆய்வாளர்களின் கவனத்தை ஈர்த்துள்ளது. சமுதாயத்தின் அழகுகளை முருகியல் உணர்வோடு படைத்த படைப்பாளிகள் விளிம்புநிலை மக்களையும் வழியெடுத்துப் பார்த்துள்ளனர். இக்கடைநிலை மக்களின் கடைத்தேற்றம் கூடிய விரைவில் நிகழ்ந்தேறும் என்று கட்டியங் கூறுமுகமாக அக்கட்டுரைகளின் கருத்து வீச்சுகள் அமைகின்றன.

எட்டுத்திக்குகளிலும் நிலவும் இலக்கியச் செல்வங்கள் தமிழ் மக்களின் அறிவை மேலும் செழுமைப்படுத்தி வருகின்றன என்பதனை ஹைகூ, சென்ரியு, லிமெரிக், லிமெரிக்யு என்ற கவிதைக் கோட்பாட்டுக் கட்டுரைகள் மெய்ப்பிக்கின்றன.

கடலியல், சுற்றுப்புறச் சூழலியல், இருத்தலியல் எதிர்காலவியல் போன்ற கோட்பாடுகளைப் பிரதிபலிக்கும் கட்டுரைகள் இந்நூல்களுள் இடம்பெற்றிருப்பது நவீன இலக்கியத்திறனாய்வுக் கொள்கைகள் நாள்தோறும் திறனாய்வாளர்களால் உற்றறியப்படுகின்றன என்பதை உணர்த்துகின்றன. இருதொகுதிகளிலும் இடம்பெற்றுள்ள கருத்துகளைக் கண்ணுறுகையில், தமிழின் தனித்தன்மை மேலும், மேலும் நிலைத்த தன்மையை அடையும் சாத்தியக்கூறுகள் அதிகரித்தே வருகின்றன என்றே கூற வேண்டும்.

வருகைபுரிந்த அனைத்துக்கட்டுரைகளையும் பகுத்துத் தொகுத்து அரிதுமுயன்று நூல்களாக்கி, இக்கருத்தரங்கை நிகழ்த்தியிருக்கும் தமிழ்த்துறைப் பேராசிரியர்கள் அனைவரின் முயற்சியும் நினைந்து நினைந்து போற்றற்குரியது. இனி வருங்காலங்களிலும் இவர்கள் இத்தகைய சிறப்புமிக்க பணிகளில் தொடர்ந்து ஈடுபட்டு வெற்றிபெற வாழ்த்துகின்றேன்.

திருமதி. *சந்திரகாந்தா ஜெயபாலன்*
முதல்வர் - அருள்மிகு பழனியாண்டவர் மகளிர் கலைக் கல்லூரி,
சின்னக்கலையம்புத்தூர், பழனி.

# பதிப்புரை

தமிழ் இலக்கிய வரலாற்றில் பாரதி ஒரு மைல்கல். அவனுக்குப் பின்னர் இலக்கியம் நவீனமாக்கப்பட்டு - புதுப்புது பார்வைகளும் தாக்கங்களும் ஏற்பட்டன. அந்தப் பின் நவீனத்துவத்தை அறிமுகப்படுத்த வேண்டும் என்ற ஆவலினாலேயே, இத்தலைப்பு எங்களால் தேர்வு செய்யப்பெற்றது. நவீனத்துவமும் - பின் நவீனத்துவமும் இன்றைய நடைமுறை மரபுமீறல், உடைத்தல் முதலிய எதிர்கலாச்சாரத்தை ஏந்தி வருகின்ற உண்மையை யாரும் மறுப்பதற்கில்லை. புதுக்கவிதை மரபினைத் தாண்டி, ஹைகூ, சென்ரியு, லிமெரிக், லிமெரிக்யு போன்ற கவிதை வகைமைகளையும் கொண்டிருக்கும் பின் நவீனத்துவத்தை அலசுவதற்காகவே இக்கருத்தரங்கானது ஏற்பாடு செய்யப் பெற்றுள்ளது. நவீனமான தலைப்பில் நவ நவமான 235 கட்டுரைகளை ஆர்வலர்கள் எழுதியுள்ளனர். அதனைப் புத்தக வடிவில் தொகுத்தளித்துள்ளோம்.

கருத்தரங்கம் என்றவுடனேயே நடத்துங்கள் என்று அனுமதி வழங்கியும், புத்தக வடிவில் கொண்டுவர முனைந்தபின்னர், ஏற்பட்ட பல்வேறு இடர்பாடுகளைக் களைய தக்க ஆலோசனைகள் வழங்கியும், பல்லாற்றானும் துணை நிற்கும் எம் கல்லூரி முதல்வர் முனைவர் திருமதி. ***சந்திரகாந்தா ஜெயபாலன்*** அவர்களை நன்றியுடன் இக்குழு நினைவு கூர்கிறது.

பணம் பற்றாக்குறை என்றவுடனேயே, அதனை நீக்க நானிருக்கிறேன் என்று முன்வந்து எங்கள் குறையைக் களைந்ததுடன் வாழ்த்துரையினையும் வழங்கிய, எங்கள் கல்லூரிச் செயலர் & தாளாளர் அருள்மிகு தண்டாயுதபாணி சுவாமி திருக்கோயில் இணை ஆணையர் மேதகு. ***த. சுந்தரம்*** பி.ஏ.பி.எல்., அவர்களுக்கு எங்கள் பதிப்புக்குழு மனமார்ந்த நன்றிதனை உவந்தளிக்கின்றது.

கட்டுரைகளைத் தட்டச்சு செய்தும், குறுந்தட்டு வடிவாக்கம் செய்தும் தந்த செல்வன். த. சித்திரசேகரையும், நூலாக்கம் செய்து தந்த அரசு கம்ப்யூட்டர்ஸ் & ஆப்செட் பிரிண்டர்ஸ், மனியரசனையும் இக்குழு நன்றியுடன் பாராட்டுகிறது.

ஆக்கமும், ஊக்கமும் அளித்த துறை ஆசிரியர்களுக்கும், கட்டுரையாளர்களுக்கும் இக்குழு நன்றிதனை நல்குகிறது.

தோன்றாத்துணையாகும் கந்தப் பெருமான், எங்கள் சொந்தப் பெருமான் அவனுக்கும் எங்கள் நெஞ்சம் நிறைந்த நன்றிகள்.

**- பதிப்புக்குழு -**

# பொருளடக்கம்

*வாழ்த்துரை*

*அணிந்துரை*

*பதிப்புரை*

| வ. எண் | பெண்ணியம் | பக்க எண் |
|---|---|---|

## தலித்தியம்

# கவிஞர் வைரமுத்துவின் கவிதைகளில் "பெண்ணியம்"

*ஆ. அந்தோணி அலெக்சாண்டர்* எம்.ஏ., பி.எட்., ஆய்வியல் நிறைஞர்,
உருமுதனலட்சுமி கல்லூரி, திருச்சி.

Feminism என்ற சொல்லுக்கு நேர் தமிழ்ச் சொல்லாகப் பெண்ணியம் என்று கூறுகிறோம். இந்த ஆங்கிலச் சொல், பெண்ணைக் குறிக்கும். Feminism என்ற இலத்தீன் மொழிச் சொல்லிலிருந்து தோன்றியது. பெண் என்னும் சொல் பெண்களுக்குரிய அனைத்து இயல்புகளையும் உணர்த்தும் சொல்லாகும்.

பெண்ணியம் என்ற இச்சொல் 1890-ல் இருந்து பாலின சமத்துவக் கோட்பாடுகளையும், பெண்ணுரிமைகளைப் பெறச் செயற்படும் இயக்கங்களைக் குறிக்கப் பயன்பட்டு வருகின்றது. தமிழில் பெண்ணியம் பெண்நிலை, வாதம் , பெண்ணுரிமை ஏற்பு என்ற சொற்கள் இதற்குரிய சொற்களாக வழங்கி வருகின்றன.

பெண்ணியம் புராண இதிகாசக் காலங்களில் தோன்றிவிட்டது எனலாம். சிவன் பார்வதிக்கு தன் உடலில் பாதியை கொடுத்தும், திருமால் இலக்குமிக்கு நாவில் இடம் தந்து ஆண் பெண் சம உரிமையை நிலைநாட்டும் குறியீடுகளும். மனித இனம் என்று தோன்றிற்றோ, அன்றே அவர்களிடையே முரண்பாடுகள் வளர்ந்து தாய்வழிச் சமூகம், தந்தை வழிச்சமுதாயம் நிலவும் தருணத்தில் பெண்கள் மிகவும் துன்புற்றனர். இத்துன்ப நிலையைப் பெறாத பலர் பெண்ணுரிமைக்காகப் போராடத் துவங்கினர். இது பெண்ணியத் தோற்றத்திற்கு வழி வகுத்தது எனலாம்.

பெண்ணின் இயல்புகளைப் பெற்றிருப்பது பெண்மையாகும். பெண்ணைப் பற்றிய கொள்கை அல்லது கோட்பாட்டைக் குறிப்பது பெண்ணியமாகும். சமுதாயம் காலந்தோறும் பெண்களுக்குக் கொடுத்திருந்த இடத்தையும், விதித்திருந்த விதிகளையும், அடிமைத்தளத்திருந்து பெண்கள் விடுதலை பெறவும், சம உரிமை பெறவும் தோன்றி பெண்ணியக்க உணர்வுகளையும் இது விளக்கும்.

"ஆணும் பெண்ணும் நிகரெனக் கொள்வதால்/அறிவிலோங்கி வையந்தழைக்குமாம்
பூணு நல்லறத் தோடிங்கு பெண்ணுக்குப்/போந்து நிற்பது தாய் சிவசக்தியாம்"

என்று புதுமைப் பெண்களுக்காக குரல் கொடுத்த பாரதியின் வழிவந்தவர் கவிப்பேரசு வைரமுத்து. இவரது கவிதைகளில் பெரும்பாலான கவிதைகள் பெண்ணுரிமைச் சிந்தனைகளை மையமாகக் கொண்டும் அவர்களது வாழ்வு மலர்வதற்குப் பாடுபடுவது போன்றும் அமைந்துள்ளன.

குடும்ப நிறுவனம் ஆணாதிக்கத்திற்கு மிதமிஞ்சிய மையக் குவியலான அதிகாரத்திற்கும், இடம் தந்து பெண்ணை அடிமைப்படுத்தும்போது பெண் அதைவிடுத்து வெளியே வந்து போராட வேண்டும் என்று பெண்ணியலாளர்கள் வலியுறுத்துகின்றனர்.

"இந்தத் தேசம்/ஒரு
கனவில் குதித்துக்/கரையேர வேண்டும்
அதற்குப்/பெண்களின் உதடுகள் அல்ல
நமது கைகளும் காலங்களும்/சிவக்க வேண்டும்"

என்று பெண்களுக்குப் பல்வேறு விதமாக ஏற்படும் இடையூறுகளையும், துன்பங்களையும் கவிதை மூலம் துடைக்க முயற்சி செய்கிறார். கவிஞர் இறுதியில் "நமது கதைகளும் காலங்களும் சிவக்க வேண்டும்" எனத் தீர்ப்புக் கூறுவதாக அவர் கவிதை அமைந்துள்ளது. பெண்களை படிதாண்டுதல் கூடாது, சமையலறை தாண்டி பெண் வருதல் கூடாது என்றும் விதிக்கப்பட்ட ஆடவர் ஆதிக்க வரையறைகள் லட்சுமணக் கோடுகள் இக்காலப் படைப்புகளில் உடைக்கப்படுகின்றன. இவையே சமூக மாற்றத்திற்கும் வழிவகுப்பதாகும் என்ற சிந்தனையைக் கவிஞர்,

"கொடிகளாம் நீங்கள்/கொடிகள் தாம்
கொம்பினைத் தேடிக்/காற்றில் அலையும்
காட்டுக் கொடியல்ல/இந்நாட்டின்
தேசியக் கொடியென்று/தெரியப்படுத்துங்கள்"

என்று கூறி எழுச்சி ஊட்டுகிறார். ஆண்பிள்ளைகள் படித்தால் போதும் என நினைத்து அவர்களை படிக்க வைப்பதிலேயே முழுக்கவனத்தையும் செலுத்துகிறார்கள். பெண்களுக்கும் உரிமை உண்டு. எந்த இயற்கையாலும் அதனைத் தடுத்துவிட முடியாது என்பதை,

"முகச்சவரத்தைப் போலவே/பள்ளி கூடமும்
ஆண்களுக்கானது/என்னுமோர் எண்ணம்"

எனக்கூறி அவர்களது அறியாமையை வெளிப்படுத்தி சிந்திக்க வைத்து, அனைத்துப் பெண்களையும் பள்ளிக்கு அனுப்ப வேண்டும் என வைரமுத்து வலியுறுத்துவது சமுதாய முன்னேற்றத்திற்கு பயன்படும் என்பதில் ஐயமில்லை.

கல்வி என்பது மனிதனை உருவாக்கிறது வாழ்க்கையை அவனுக்கு கற்றுத்தருவதும் கல்விதான். ஆனால் கல்விக் கூடங்கள் வாழ்க்கையை கற்றுத் தருவதற்கு மாறாக எழுத்துக்களையும் கட்டாயம் அறிமுகம் செய்து கொண்டிருக்கிறது என்பதை,

"பள்ளிக் கூடத்தில்/உன்னைச்
சேர்ப்பது பற்றி நான்/சிந்திக்கவில்லை
அங்கே/உனக்கு நிகழ்வது/எழுத்துக்களின்
கட்டாய அறிமுகந்தான்/வாழ்க்கையை வாசிக்க/நீ
தெருவுக்குத்தானே/திரும்பி வர வேண்டுமாய்"

எனப் பயன்படாத பாடத் திட்டங்களைச் சாடுகிறார். கற்பவரிடத்தில் உள்ள ஆற்றலை வெளிக் கொணர்ந்து அதனை வளர்ப்பதே கல்வியின் வேலை, கற்பவர் எதை விரும்புகிறார்களோ அதைக் கற்றுத் தந்தால்தான் அறிவும் ஆற்றலும் வளரும்.

"அவர்கள் மூளையில்/விதையைப் போல்
தூவப்பட வேண்டிய அறிவு/ஆணியைப் போல்
அறைப்படுகிறது"/

எனக் கூறுகின்றார். பிள்ளைகள் மூன்று வயதிலேயே மூட்டை தூக்கும் காலம் இது. புத்தகங்களைப் பையிலிட்டுக் கையில் எடுத்துச் செல்லும் நிலைகள். "குருவி தலையில் பனம் பழத்தை வைப்பது போல்" மாணவர்கள் தலையில் ஏராளமான புததகங்கள் ஏற்றப்படுகின்றன. நமது பாடத்திட்டங்கள் மாலையைக் கிள்ளி எலியைப்பிடிக்கும் வித்தையை விளக்கிக் கொண்டிருக்கின்றன என்பதனை நகைச்சுவையாடு,

"பல இளம்பெண்கள்/புத்தகச் சுமை பொறுக்காமலேயே
பூப்பெய்தி விட்டார்கள்"/"பள்ளி செல்லும் சிறுவன்
ஒவ்வொரு விடியலும்/தான்/நாடு கடத்தப்படுவதாய்
நசிந்து போகிறான்!"/

என்று கூறுவதிலிருந்து மாணவர்களுக்குப் புத்தகச் சுமையைக் குறித்துப் பாடத் திட்டங்களை மாற்றியமைக்க வேண்டும் என்னும் அவரது எண்ணம் தெரிகிறது. பெண்களின் அவல நிலையை எண்ணி வருத்தமுற்ற கவிஞர்,

"பாஞ்சாலியோ?/வா மகளே! வா!
துச்சாதனன் உன்னைத்/தொட்டிழுக்க வரும்போது
மாதவிலக்கானதனால்.../ஓராடை கட்டி நீ
உள்ளே இருந்தாயாம் ?/இங்கே/நான்வாழும் தேசத்தின்
நடைபாதை ஓரத்தில்/உடுத்தத் துணியில்லா/ஒரு கோடிச் சகோதரியர்...
ஓராடை மட்டுந்தான்/உடுத்திருக்கின்றாரே!/மாதமெல்லாம் அவர்களுக்கு
மாதவிலக்கா மகளே?

என நெஞ்சம் குமுறுவதைப் பார்க்கும்போது, அவர் ஏழைப் பெண்களின் துன்பத்தை ஏழ்மையைப் போக்குவதில் எவ்வளவு ஆர்வம் காட்டுகிறார் என்பதை உணரமுடிகிறது. மாதமெல்லாம் அவர்களுக்கு மாதவிலக்கா மகளே? என கேட்கும் கேள்வியில் ஆயிரம் பொருள்கள் அடங்கிக் கிடக்கின்றன. நீங்கள் உயிரற்ற பொம்மைகளாய்ப் பிறந்திருக்கக் கூடாதா ஜவுளிக் கடையில் கடையில் வண்ண வண்ண சட்டைகளை அணிந்து கொண்டு நின்றிருக்கலாமே, மனிதர்களாய் பிறந்து எதைக் கண்டீர்கள் என அவர் வருந்துவதை,

"சகோதரிகள்/நீங்கள்/ஜவுளிக்கடைப் பொம்மைகளாய்
ஜனித்திருக்கக் கூடாதா?/

எனக் கவிஞர் கூறுகின்றார். பெற்றோர்கள் ஏழைகளாய் இருந்துவிட்டால் வீடுகளில், பெண்கள் தாங்களே சம்பாதித்தவரைத் திருமணம் செய்து கொள்ள வேண்டிய நிலை இருப்பதை கவிஞர் வைரமுத்து கூறும்போது,

"சீதனம் கொடுக்கச்/சேர்த்து வைக்கத்தான் சிலர்
வேலை பார்க்க விரைந்தனர்/அவர்கள் உழைப்பு
வங்கிக் கணக்கை/நிறைத்தது - அப்போது
தலையிலும் இரண்டொன்று/நரைத்தது!
பாவம்/பள்ளியறை என்றால்/பள்ளிகூடத்தின் அறை என்று
அர்த்தப்படுத்திக் கொண்டு/அவர்கள் அமைதி அடைகிறார்கள்!

என்று அவர் சொல்லும் போது பல கன்னிப் பெண்கள் வேலைக்குப் போவதன் காரணத்தையும், திருமணச் செலவுக்குப் பணம் சேர்ப்பதற்குள் அவர்களுக்கு முதுமை வந்துவிடுவதையும், முதுமை வந்து விட்டால் பொறுமை வந்து விடுவதையும் காணமுடிகின்றது.காதல் மணத்தின் ஒரு பிரிவாகக் கலப்பு மணத்தைக் கொள்ளலாம். சமுதாயத்தில் சாதி, பேதமும், சமயவாதமும் ஒழிய வேண்டுமெனில், கலப்புமணம் பெருக வேண்டும். ஆனால் சமுதாயம் கலப்பு மணத்தை வரவேற்கவில்லை. கலப்புமணம் செய்து கொண்டோர்க்குச் சொல்ல முடியாத துன்பங்கள் வந்து சேருகின்றன. குழந்தைகளைப் பள்ளியில் சேர்க்கும்போதும், திருமணம் செய்து கொடுக்கும்போது வெறியர்களால் பல துன்பத்திற்குள்ளாகிறார்கள். இவைகளை மனத்தில் கொண்ட வைரமுத்து,

"அநேகமாக இந்நாட்டில்/காதல் தோல்வி அடையாதவர்கள்
காதலிக்காதவர்கள் மட்டுந்தான் !/கலப்பு மணம் செய்ய புகுந்தோர்
கதை கேட்டால்/கவிதை அழும்/கனவு அழும்
கண்ணீரும் அழும்"/

என்றும் தம் வேதனையை வெளிப்படுத்துகிறார்.

"மண்ணெண்ணெய் விலையேற்றத்திற்குக்/காதல் தோல்வியும் ஒரு
காரணமல்லவா?/காதலின் கழுத்து/நெரிக்கப்படும்போது
கலப்பு மணத்தின் கண் பிதுங்காதா?/

என்றும்,

"கலப்பு மணத்தின்/கல்யாணப் பத்திரிக்கை
காதல் அச்சகத்தில்/அச்சேரட்டும்"

என்று கவிதையின் மூலம் கலப்புத் திருமணத்திற்கு அடிப்படை காதல்தான். காதல் திருமணம் வெற்றியடைந்தால்தான் கலப்பு மணம் பெருகும் என்கிறார்கள்.

பெண்ணுரிமை என்பது என்னவெனில் ஆணைப் போலவே பெண்ணுக்கும் வீரம், வன்மை, கோபம், ஆளுந்திறம் உண்டென்பதை ஆண்மக்கள் ஒப்புக் கொள்ள வேண்டும் என்பதாகும். ஆணும் பெண்ணும் சமமானவர்கள் என்பதை நிலைநாட்டுகிறார் வைரமுத்து,

"சீர்திருத்தம் என்பது/அவர்களின் ஆணியைப்
பிடுங்குவதன்று/பழைய அஸ்திவாரங்களின்/ஆணிவேரையே அறுப்பது
அப்போதுதான்/பெண்ணுக்கு நிரந்தர மரியாதை/நிர்ணயமாகும்"

சமுதாய வளர்ச்சியில் பங்கு கொள்ளச் செல்லும் பெண்களே உங்கள் அறிவுக்குப் போட்டிருக்கும் முகத்திரையை விலக்குங்கள் எனக் கேட்டுக் கொள்கிறார். இதனை,

"சுய சிந்தனை உள்ள/தோழியரே/உங்கள்
அறிவுக்குப் போட்டியிருக்கும்/பர்தாவை அகற்றுங்கள்"

என்கிறார்.

"மனைவியின் புன்னகை/திருவோட்டையும்
ஒரு/மகுடமாய் மாற்றிவிடும்/அவள் கண்ணீரோ
மகுடத்தையும்/ ஒரு/திருவோடாய் மாற்றிவிடும்"

என்னும் கவிதையில் பெண் என்பவள் எதையும் சாதிக்கும் ஆற்றல் பெற்றவள் என்பதையும் அவளால் எதனையும் ஆக்கவும், அழிக்கவும் முடியும், அவள் மகிழ்ச்சியடைவாளேயானால் ஆக்கம் உண்டாகும். அவள் துன்பப்படுவாளேயானால் அழிவுதான் உண்டாகும் என எச்சரித்து பெண்களுக்குரிய உரிமைகளைக் கொடுத்து அவர்களை மகிழ்ச்சியோடு வைத்துக் கொள்ள வேண்டும் என வலியுறுத்துகிறார்.

## "புல்லாங்குழலே" யில் பெண்ணியச் சிந்தனைகள்

முனைவர். *சு. அழகிய நம்பி*, தமிழ் இணைப் பேராசிரியர்,
அ. சானகியம்மாள் கல்லூரி, சிவகாசி.

**முன்னுரை :-**

இருபதாம் நூற்றாண்டில் பரபரப்பாக பேசப்படும் இலக்கியக் கொள்கைகளுள் பெண்ணியமும் ஒன்றெனலாம். கவிஞர் புவியரசுவின் "புல்லாங்குழலே" என்னும் புதுக்கவிதை நூலில் காணப்படும் பெண்ணியச் சிந்தனைகளை ஆய்வதாக இவ்வாய்வுக்கட்டுரை அமைகிறது.

**பெண்ணியம் - அன்றும் இன்றும் :-**

தொடக்ககால இலக்கியங்கள் பெண்ணடிமைத்தனத்தைப் பெரிதும் பேணி வளர்த்தன எனலாம். உலகப் பொதுமறையாம் திருக்குறளைத் தந்த திருவள்ளுவர் கூட அவருடைய காலத்திய மரபை மீற முடியாமல்,

"தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யும் மழை" (குறள் 55)

என்றும்,

"தற்காத்துத் தற்கொண்டாற் பேணித் தகைசான்ற
சொற்காத்துச் சோர்விலாள் பெண்" (குறள் 56)

என்றும் பாடியுள்ளார். மேலும் திருக்குறளின் "மக்கட் பேறு" என்ற அதிகாரத் தலைப்பைப் பரிமேலழகர் "புதல்வரைப் பெறுதல்" என மாற்றியமைத்துள்ளார். ஆனால் பகுத்தறிவு இயக்கம் சார்ந்த புலவர் குழந்தை போன்றோர் "மக்கட் பேறு" என்றே அவ்வதிகாரத்தைக் குறிப்பிடுகின்றனர்.

"திருவள்ளுவர் புதல்வரைப் பெறுதலே சிறப்பு என்று எவ்விடத்தும் குறித்தாரில்லை" என்பர் (தமிழண்ணல், பெண்ணியக் கட்டுரைகள், ப. 48) பெண்பாற் புலவரான ஔவையாரைக் கூட " தையல் சொல் கேளேல்" என அவருடைய காலச் சமுதாயம் பாட வைத்தது எனலாம். எனினும் புதிய ஆத்தி சூடிகளைப் பாடிய பாரதியும், பாரதிதாசனும், "தையலை உயர்வு செய்" (பாரதியார், புதிய ஆத்தி சூடி 50) என்றும், "பெண்ணோடு ஆண் நிகர்" (பாரதிதாசன், ஆத்திசூடி 63) என்றும் பாடியுள்ளனர். பாரதிதாசன், பாரதியை விஞ்சி நின்று ஆணொடு பெண் நிகர் என்று பாடாமல் பெண்ணோடு ஆண் நிகர் எனப் பாடியப் புதியதொரு வழித்தடத்தை அமைத்துத்தந்துள்ளார் எனலாம். இருபதாம் நூற்றாண்டில் பெண்ணுரிமைக்காகக் குரல் கொடுத்தவர்களில் தலையாய இடத்தைப் பெறுபவர் பகுத்தறிவுப் பகலவன் பெரியாரே என்பதை எவராலும் மறுக்க இயலாது எனலாம். அவர் கற்பு என்னும் தலைக்குள் பெண்கள் மட்டுமே அடைக்கப்படும் அவல நிலையை எதிர்த்து,

"ஆண்களுக்கு கற்பு இருந்தால் அது தானாகவே பெண்களையும் கற்பாக இருக்கச் செய்யும். பெண்களுக்கு மட்டும் கற்பு இருந்தால் அது ஆண்களைக் கற்புடன் இருக்கச் செய்ய உதவாது" என்பார் (குடிஅரசு, 03.11.29, ப.8) இக்கருத்து புறநானூற்றின்,

"நாடா கொன்றோ காடா கொன்றோ
அவலா கொன்றோ மிசையா கொன்றோ
எவ்வழி நல்லவ ராடவர்
அவ்வழி நல்லை வாழிய நிலனே" (புறம். 187)

என்ற பாடற்கருத்துடன் ஒப்பிடத் தக்கதாக அமைந்துள்ளது. மேலும் பெண் உரிமை பெற வேண்டுமானால் அவர்களிடம் காணப்படும் நகைப்பித்தும் துணிப்பித்தும் ஒழிய வேண்டும் என்பதை,"ஆண்கள் பார்க்கும் எல்லா வேலைகளையும் ஆண்கள் செய்யும் எல்லாத் தொண்டுகளையும் பெண்கள் பார்க்க முடியும்; உறுதியாக முடியும் என்பேன். ஆனால் நகைப்பைத்தியம், துணிப்பைத்தியம் பிடித்து அவற்றை அணிந்து கொண்டு ராயல் நடை நடக்கும் அடிமை இழிவு, சுயமரியாதை அற்ற பைத்தியம் ஒழிய வேண்டும்" என்பார். (குடிஅரசு, 29.01.46, ப.8)

மேலும் பெண்களின் விலங்குகளைக் கந்தர்வன்,

"தலையில் பூவிலங்கு
கையில் பொன் விலங்கு

காலில் வெள்ளி விலங்கு
சுவாசத் தடைக்கு
மூக்கில் கல் விலங்கு
ஒவ்வொரு மூச்சிலும்
அவன்
விலங் குகளை நுகர்கிறாள்" (கந்தர்வன், சிறைகள், ப. 27)

என்று கூறுவது சில நேலங்களில் ஏற்றுக் கொள்ளத் தக்கதாகவே உள்ளது எனலாம்.

## புவியரசுவின் "புல்லாங்குழலே"

கண்ணதாசன் பதிப்பக வெளியீடாக 1999ல் வெளிவந்துள்ள புவியரசுவின் "புல்லாங்குழலே" என்னும் கவிதைத் தொகுப்பில் பல மாறுபட்ட பெண்ணியச் சிந்தனைகள் காணப்படுகின்றன.

## மனிதப் பிறப்பு

மனிதப்பிறப்பின் தோற்றுவாயை சிவலிங்கத் தத்துவத்தின் அடிப்படையில் அவர் எழுதியுள்ள "ஆதியந்தம்" என்னும் கவிதையில் ஆபாச நெடியுள்ளமையால் அக்கவிதை அடிகளைக் கட்டுரையில் எழுதுவதைத் தவிர்க்க நேர்ந்தது.

## இல்லாளின் சிறப்பு

கணவனின் மன அமைதி அவனுக்கு அமையும் மனைவியைப் பொறுத்தே அமையும் என்பதை அவர்,

"என் நிம்மதி/என் மனைவி தந்தது" (புவியரசு, புல்லாங்குழலே, ப. 9)என்று குறிப்பிடுவதன் வழி அறிய முடிகிறது. "உறவுக் கலக்கல்" என்னும் கவிதையில் புவியரசு, கால மாற்றத்தில்

"உறவுகள் எல்லாம்
ஒன்றில் ஒன்றாய்
ஒன்று வேறாய்
மாறியும் கலந்தும்
குழம்பி விட்டன" (மேலது, ப. 32)

என்று பாடும் அவர் மாறாமல் இருப்பது தாய் போலத் தன்னை அணைத்துக் கொண்ட மனைவி மட்டுமே என்பதை,

" சில காலத்திற்கு முன்பு
ஒரு நாளிரவு
இரண்டரை மணிக்கு
உறக்கத்தின் நடுவில்
நான் முனகிய போது
தட்டிக்கொடுத்து
தாயாக மாறிய
மனைவி மட்டும்
இன்னும் மாறாமல்
இருக்கிறாள் தாயாகவே" (மேலது, பக். 33-34)

என்று பாடுகிறார். இதன் வழி நல்ல மனைவியைத் தாய்க்கு ஒப்பிட்டு அவர் பாடியிருப்பதை அறிய முடிகிறது.

## இல்லறப் பிணைப்பு

இல்லறம் என்ற பிணைப்பிலும் "அவன்" என்ற ஆண்மகன் பெரிய எழுத்துடையவனாகவே பேதங்காட்டி நின்றதைப் புவியரசு, "சொல்லு பொருளுமற்றுச் சும்மா" - ஒரு கவிதையில்

"அவன்
- பெரிய எழுத்தில் அவன் -
அன்று
- காலம் சாப்பிட்டுக் காணாமல் போன அன்று -
கைக்குக் கிடைத்த
சொல் மணிகளை

ஒலிமாயச் சரட்டில்
ஏதேச்சையாக எழுத்தும் கோத்து
பொருளில் கழுத்தில்
தாலி கட்டி முடித்தது முதல்
இது/அது
இப்படி /அப்படி
பந்தப்பட்டு கிடக்கின்றன" (மேலது, ப.87)

என்று பாடுகின்றார், பெண்ணொருத்தியின் கழுத்தில் தாலிகட்டி முடித்த ஆண் ஒருவன் சொல் திறனால் அவளைச் சொக்க வைத்ததை - பாவம் சிக்க வைத்ததைக் கவிஞர் பாடியுள்ளார் எனலாம். சிலப்பதிகாரக் கோவலனும், மனையறம் படுத்த காதையில் கண்ணகியை பலபடப் பாராட்டிய பின்னர் உச்சமாக,

"மாசறு பொன்னே! வலம்புரி முத்தே !/காசறு விரையே ! கரும்பே!! தேனே !
அரும்பெறந் பாவாய்! ஆருயிர் மருந்தே !/பெருங்குடி வாணிகன் பெருமட மகளே !
மலையிடைப் பிறவா மணியே என்கோ !/அலையிடைப் பிறவா அமிழ்தே என்கோ !
யாழிடைப் பிறவா இசையே என்கோ !/தாழிருங் கூந்தல் தையால்" (சிலப்பத்திகாரம் 2:73-80)

என்று பாராட்டிப் பேசுவதோடு புவியரசுவின் மேற்குறித்த கவிதை வரிகளை ஒப்பிடலாம்.

## திருக்குடும்பம்

ஆணாதிக்கச் சமூகம் பற்றி, "ஆணாதிக்கச் சமூகத்தில் ஆண்கள், பெண்களை ஆள்வது என்பது பாலியல் ரீதியான இயற்கையாக அமைந்த பிறப்புரிமை என்ற அடிப்படைத் தளத்தில் இயங்கும் அனைத்து அதிகாரப் பிரிவுகளிலும் ஆண்களின் கை ஓங்கியுள்ளது என்பர். திருக்குடும்பம் என்னும் தலைப்பில் கவிஞர் புவியரசு பாடியுள்ள பாடலிலும் ஓர் ஆதிக்க வெறி பிடித்த ஆணைப் படம் பிடித்துக் காட்டும் வகையில்,

"அவளுக்கு அவன்தான் கடவுள்/கணவனே கண்கண்ட தெய்வம்
கணவனும் கடவுளும் ஒன்றுதானே/கல்வடிவம்
கல்லென்றாலும் கணவனல்லவா/கரம் பிடித்த நாள் தொட்டுக்
கண்ணீர்ப் பூக்களால் அர்ச்சிக்கிறாள்/அவளது கடவுள் கரையவில்லை
அவள்தான் கரைந்து விட்டாள்/கரைந்து கரைந்து உருகி உருகி
பின் இறுகி இறுகிக் கல்லானாள்/பாத தூளி பட்டு உயிர்க்க
ஒரு இராமன் வருவதற்கான /சாத்தியக் கூறே இல்லை

இப்போது

அவள் அம்மிக்கல் /அவள் மடியில் ஒரு குழவிக்கல்" (புவியரசு, புல்லாங்குழலே, ப. 94)
என்று பாடுகிறார்.

## ஏழ்மைச் சூழலில் பெண்கள்

ஏழ்மையின் காரணமாகக் கடினமாக உழைக்கும் பெண்களுக்காகப் புல்லாங்குழல் இசையைத் தருவது எப்போது என்ற வினாவுடன் அவர்,

"விதியை நொந்து /செங்கல் சுமக்கும்/ஏழைப் பெண்ணின் /காய்ந்துப் பிளந்த/கால்களுக்காக நீ/
கானம் இசைப்பது/எப்போது? (மேலது, ப. 134)

என்று பாடுகிறார். மேலும் ஏழைப் பெண்களின் வறுமை நிலையை

"நமது தேசத்தின்/கோடான கோடி ஏழ்மைக்/குடில்களின்/கோபியர்கள்/
நிர்வாணங்களாய்க்/கண்ணீர்க் குளத்தில்/மூழ்கிக்கொண்டிருக்கையில்" (மேலது, ப, 164)

அதற்குக் காரணமான கண்ணபிரான்கள் போதையில் புரளுவதாக அவர் பாடுகின்றார். இதன் வழி மேற்குறித்த நிலைகளை மாற்ற வேண்டும் என்ற அவருடைய சமூக அக்கறையை அறிய முடிகின்றது.

## தொகுப்புரை

கவிஞர் புவியரசுவின் புல்லாங்குழலே என்னும் கவிதைத் தொகுப்பு இல்லாளின் சிறப்பயையும், இல்லறப் பிணைப்பின் இன்றியமையாமையையும் எடுத்துரைக்கின்றது. என்பதை அறிய முடிகின்றது. ஆணாதிக்க வெறியைத் தம் பாடல்களில் ஏளனம் செய்யும் கவிஞர் ஏழ்மைச் சூழலில் பெண்கள் படும் இன்னல்களையும் படம் பிடித்துக் காட்டுகின்றார் என்பதையும் அறிய முடிகின்றது.

# கவிஞர் வைரமுத்துவின் இன்னொரு தேசிய கீதத்தில் பெண்கள் நிலை

*தா.க. அனுராதா,* முனைவர் பட்ட ஆய்வாளர், தமிழியல் துறை,
அண்ணாமலைப் பல்கலைக்கழகம், அண்ணாமலைநகர், சிதம்பரம் - 608 002.

உலகிடையே தோன்றி வளர்ந்த பண்பட்ட மொழிகளில் தமிழ் மொழியும் ஒன்று. அம்மொழியை வளர்த்த தமிழர்கள் பண்பட்டவர்கள். அம்மரபில் தோன்றிச் சமுதாய அவலங்களைக் கண்டு, மக்களுக்கு விழிப்புணர்ச்சியை ஏற்படுத்த விழையும் கவிஞர்களுள் வைரமுத்தும் ஒருவராவார். பெண்கள் தன்னம்பிக்கை உடையவர்களாகத் திகழ வேண்டும் பெண்டிரைக் குடும்பத்தில் அடிமைகளாக நடத்தும் நிலை மாறவேண்டும் என்பதைத் தன்னுடைய கவிதைகளின் மூலம் சுட்டிக்காட்டியுள்ளார். அக்கவிதைகளின் வழி பெண்களின் நிலையை சமுதாயத்திற்கு அறிவுறுத்துவதை நோக்கமாகக் கொண்டு இக்கட்டுரை அமைகின்றது.

### முதிர்கன்னி :

இன்றைய சமுதாயத்தில் எதிர்கொள்ளும் பல்வேறு பிரச்சனைகளுள் கவிஞர்கள் அழுத்தமாகவும், ஆழமாகவும் கையாண்டிருக்கும் முக்கியப் பிரச்சனை முதிர்கன்னியின் அவலம் ஆகும். திருமணத்தை எதிர்நோக்கி இருக்கும் இம்முதிர்கன்னியின் அவலத்தையும், கனவையும் ஆற்றாமையும், சோகத்தையும், ஏக்கத்தையும் ஹைகூக் கவிஞர்கள் தம் படைப்புகளில் நுட்பமாகவும், துல்லியமாகவும் பதிவு செய்துள்ளனர். வைரமுத்துவும் முதிர்கன்னியின் நிலையை,

"வைகாசி வந்தால்/ முப்பத்தி மூன்று
முடிகிறது அவளுக்கு"

என்ற வரிகளின் மூலம் உணர்த்துகின்றார். இளம்பெண் முன்பெல்லாம் கனவு காணவேண்டும் என்றே உறங்குவாளாம். வயது செல்லச் செல்ல உறக்கமே கனவாகிவிட்டது என்ற நிலையை,

"முன்பெல்லாம்/கனவுகளுக்காகவே
உறங்கினாள்/இப்போதோ
உறக்கமே/ஒரு கனவாகிவிட்டது" (இ.தே.கீதம், ப.18)

இவ்வாறு எடுத்துக்காட்டுகின்றார்.

### பெண்ணின் மனநிலை

திருமணம் ஆகாவிட்டாலும் கனவிலே நம் வாழ்க்கையை முடித்துக் கொள்ளலாம் என்று பெண்கள் இருந்தாலும் உலகத்தார் அவளை விட்டு வைப்பதே கிடையாது. அவளைப் பேசும் பேச்சிலே அவள் மனம் கலங்குகின்றாள் என்பதை,

"பாவம்/தன்
கண்ணீர் முத்துக்களைக்/கோக்கத்தான்
நொந்து நொந்து அவள்/நூலாய் இளைத்தாளோ?"

என்று கவியரசு கலங்குகின்றார்.

### விதவைக் கோலம்

கணவன் இறந்தபின்பு பெண் விதவையாகிறாள். விதவைக்கோலம் கொடுமையிலும் கொடுமையானது. இப்போது உள்ள பெண்களெல்லாம் திருமணம் ஆகாமலேயே விதவைக்கோலம் பூண்டுவிடுவதை,

"முன்னொரு பிராயத்தில்/பூக்களின்
அணிவகுப்பு மரியாதையைத்/தன் கூந்தலில்
ஏற்றுக்கொண்டாள்/இன்றும் தான் சூடுகிறாள்
இது தான்/விதவையல்ல என்று
வெளிக்காட்ட மட்டும்தான் "(இ.தே.கீதம். ப.18)

என்ற கவிதை வரிகளின் மூலம் அறிய முடிகின்றது.

### விழிப்புணர்வு :

பெற்றோர் தம் பெண்ணின் உணர்வுகளுக்கும் ஆசைகளுக்கும் மதிப்பளிப்பதில்லை. அன்றுமுதல் இன்றுவரை சமூகத்தில் ஏற்பட்டுள்ள மூடநம்பிக்கையால் உன் எதிர்காலத்தை உனது பெற்றோர்கள் ஜாதகத்திடம் மட்டுமே ஒப்படைத்துவிட்டு ஒதுங்கிக் கொள்ளும் போதும் நீ ஒய்ந்து கிடக்காதே பொங்கிஎழு என்று பெண்களுக்கு எழுச்சியினை ஏற்படுத்துவதை,

"உன் எதிர்காலத்தை/உனது பெற்றோர்கள்
ஜக்தகத்திடம் மட்டுமே/ஒப்படைத்து விட்டு
ஒதுங்கிக் கொள்ளும் போது" (இ.தே.கீதம், ப.130)

நீ அமைதியாக இருக்காதே அப்படி இருந்துவிட்டால் உன் வாழ்வு நாசமாக்கப்படும் என்று கூறுகின்றார். பெண்களை ஏமாற்றும் மனிதர்கள் பலர் உள்ளனர். தூங்காதே விழித்திரு என்று கூற நினைத்த வைரமுத்து,

"உன்/கண்ணில் மையையும்
நெஞ்சில் கரியையும்/ஒரே நேரத்தில்
பூசுவார்கள்/ஒப்புக் கொள்ளாதே" (இ.தே.கீதம். ப.131)

என்கிறார். பெண்தானே என்று தயங்கி இருந்தால் ஔவையார் போன்ற பெண்பாற் புலவர்களும் ஜான்சிராணி லட்சுமிபாய், விக்டோரியா மகாராணி போன்ற வீரம் நிறைந்த பெண்களும் வரலாற்றில் இடம் பெற்றிருக்க முடியாது. பெண்கள் முன்னேறுவதைக் கெடுக்க பலர் முயல்வர்.

"நீ முளைக்கத் தொடங்கும் /முயற்சியிலேயே
சுற்றியிருக்கும் / களைகளின் வேர்கள்
கழன்று வேர்கள்/ கழன்று போகட்டும்" (இ.தே.கீதம். ப.132)

என்று தூங்கிக் கொண்டிருக்கும் பெண்களின் மனதைத் தட்டி எழுப்புகின்றார். நம்முதல் சுதந்திரப் போரை சிலர் சிப்பாயக் கலகம் என்று கூறினார்கள். அதுபோல உனது சுறுசுறுப்பையும் சிலர் சுட்டித்தனம் என்று அடக்கலாம் அதனால் பயந்து ஒய்நது விடாதே,

"தூண்டாமலே எரியும்/ சூரிய விளக்காய்ச்
சுடர்விடு" (இ.தே.கீதம். ப.132)

என்று சீறுகின்றார். சில பெண்கள் வறுமையிலும் வாழ்க்கைச் சிக்கல்களிலும் அடிபட்டு துன்பப்படும் நிலையை உணாந்த கவிஞர்,

"உன் இரத்த ஓட்டம் / இந்த மண்ணுக்கு
இன்னும் சில கங்கைகளை/இழுத்து வரட்டும்
கோடை நாளில்/ஒரு
கிராமத்து ஊருணி போல/வாழும் மனிதரிடம்
என் நம்பிக்கை/வற்றிக் கொண்டிருக்கிறது" (இ.தே.கீதம். ப. 133)

பிறரை நம்புவதால் பயன் ஒன்றும் இல்லை என்று கூறுகின்றார்.

### வரதட்சணைக் கொடுமை :

பெண்களின் பிரச்சனைகளைப் பற்றி எல்லாக் கவிஞர்களுமே புதுக்கவிதை படைத்துள்ளனர். பெண் விடுதலைக்குக் குரல் கொடுத்தவர்களில் குறிப்பிடத்தக்கவர்கள் பாரதியாரும் பாரதிதாசனும் ஆவர். பெண்கள் தரப்பில் இன்னும் தீராத பிரச்சனைகளாக இருப்பது வரதட்சணைதான். வரதட்சணை கேட்பவர்களை தண்டிப்பதற்கென்று பல்வேறு சட்டங்கள் இயற்றப்பட்டிருந்தாலும் இன்னும் நடைபெற்றுக் கொண்டுதான் இருக்கின்றது. வரதட்சணை கேட்டு கொடுக்காமல் விட்டால் எத்தனை பேர் வீட்டு கேஸ் சிலிண்டர் வெடிக்கிறது. வரதட்சணை கொடுக்க வசதியில்லாத பெண்கள் திருமண சந்தையில் விலைபோவது இல்லை.

பெண்கள் பணத்தால் பாதிப்படைகின்றார்கள் என்பதைக் கொடி மரத்தின் வேர்கள் என்ற தலைப்பில் வைரமுத்து அவர்கள்,

"தாய்மை ஏன் தாமதம்/ என வினவுதீராயின்
என்/கண்ணிமை துடிக்க நான்/உண்டியல் உடைத்ததால்
கல்யாணம் தாமதம்"

என்று கூறுவதன் மூலம் உணர்கின்றோம். இப்படிப்பட்ட பெண் ஒருத்தி,

"பெருமூச்சு வெப்பத்தில் /மூக்குத்தித் தங்கமும்
இளகுதே / அந்தச்/ சீதை சிந்திக்கிறாள்
இந்த வரதட்சணை வில்லை/ வளைப்பது யார்?
ராமர்களுக்கு இன்று/ ரத்தமில்லை
இனி நாமே ஒடிப்பதேநியாயம்" (இ.தே.கீதம். ப. 200)

என்று பொங்கி எழுந்து பூவாக இருந்தவள் புயலாக மாறுவதைக் கவிஞர் எடுத்துக் காட்டுகின்றார்.

எங்கு பார்த்தாலும் மாமியார் கொடுமை மருமகள் சாவு என்ற செய்தியே இன்று அதிகம். திருமணத்திற்கு முன்பு எதுவும் வேண்டாம் நீ மட்டும் போதும் என்ற வாய், பின்பு தாய் பேசும் போது மூடிக்கொள்கிறது. இதனால் அவனையே நம்பி வந்த அந்தப் பெண் பழிவாங்கப்படுகிறாள் என்பதை,

"சோலை வண்டுகள்/தேன்குடிப்பதைக் கூடக்
கலைக்க விரும்பாத /கலாசாரம் வளர்த்த தேசம்
இன்று / பூக்களின் தலையில்/ பெட்ரோல் ஊற்றிவிட்டுத்
தீப்பெட்டி தேடுகிறது" (இ.தே.கீதம். ப.34)

இதன் மூலம் நமக்கு எடுத்துக் காட்டியுள்ளார்.

## பெண்முன்னேற்றம்

சமுதாயத்தில் மனித இனத்தின் தோற்றத்திற்கும் அதன் பல்வேறு செயற்பாடுகளுக்கும் பெண்கள் அடிப்படைக் காரணங்களாக அமைகின்றனர்.பிறப்பு முதல் இறப்பு வரை அவர்களின் பங்கு குறிப்பிடத்தக்கதாகும். ஒவ்வொரு சிந்தனையாளரும், தத்தம் சிந்தனைக்கேற்பவும், தாம் கொண்ட கொள்கைக்கேற்பவும் பெண்களைத் திறனாய்வு செய்துள்ளனர். "பெண்ணின் பெருத்தக்கயாவுள" என வியந்து போய் பெண் பாவப் பிறவி என்று பெண்ணைப் பழிக்கும் இழிநிலை வந்தது. பெண் கல்வி கற்பதற்குத் தகுதியற்றவள். நான்குபேர் நடுவில் நின்று பேசும் உரிமையற்றவள். அஞ்சுவதும், நாணுவதும், ஆணுக்கு அடிமை செய்துவம்தான் பெண்ணுக்கு வாழ்க்கை என்ற கருத்தினை எதிர்த்தவர் பாரதி.

"பெண்களறிவை வளர்த்தால் வையம்
பேதைமை யற்றிடும் காணீர்" (பாரதியார் கவிதைகள், பல்சுவை, ப. 245)

என்று இடித்துரைத்தார். இக்கருத்தையே வைரமுத்து பெண்கள் நினைத்தாலும் எந்தச் சாதனையும் செய்யலாம். பெண்களால் நாடு முன்னேறும். அதற்கு பெண்கள் துணையாக இருக்க வேண்டும் என்று,

"இங்கே /புதிய கலப்பைகளுக்காக/ஒரு நிலமும்...
இங்கே/புதிய சூரியர்களுக்காக/ஒரு வானமும்...
புதிய பூக்களுக்காக/ஒரு வனமும்../ஒரு யுகமாய்க் காத்திருப்பது
உன்னை எண்ணியல்லோ?" (இ.தே.கீதம்.ப.134)

என்று பெண்களை ஊக்குவிக்கின்றார். இதை நாம் எப்படி சாதிப்பது என்று கலங்க வேண்டாம்.

"ஆயிரம் தட்டுதல்களுக்குத்/திறக்காத கதவும்
உன்/ஒரே மிதியில் திறந்து கொள்ளும்/அந்த நம்பிக்கையோடு
உன்/அடுத்த அடியை எடுத்துவை" (இ.தே.கீதம். ப.134)

என்று பெண் முன்னேற்றத்திற்கான விழிப்புணர்வை ஊட்டுகின்றார் வைரமுத்து.

## முடிவுரை :

பெண்களின் முன்னேற்றம் மற்றும் தன்மையையும் கூறி எதிர்காலச் சந்ததியினர் ஏற்றமுடன் வாழப் பழைய பெருமை பேசுவது உதவாது என்பதனுடன் விழிப்புணர்வும், சீர்திருத்தமுமே பெண்களை முன்னேற்றமடையச் செய்யும் என்பதைத் தமது கவிதைகள் வழி தெரிவிப்பதைக் காணமுடிகிறது. வைரமுத்துவின் கவிதைகள் சமூகமாற்றத்திற்குக் குறிப்பாக பெண்கள் முன்னேற்றத்திற்கு துணைபுரியும் என்பதில் ஐயமில்லை.

# மாய எதார்த்தவாதத்தில் பெண்ணியம்

முனைவர். *நா.அனுராதா,* இணைப் பேராசிரியை,
பாத்திமாக் கல்லூரி, மதுரை.

## மாய எதார்த்தவாதம்

எதார்த்தத்தின் நீட்சி என்றும் மேஜிகல் ரியலிசம் என்பது வளமாகவும் சிக்கலாகவும் உள்ள நிஜத்தைச் சிறப்பாகச் சொல்ல வல்லது என்றும் எதார்த்தத்தின் கட்டுக்கோப்பான, காரண காரிய எல்லைகளை மீறி செயல்படுத்தும். அதன்மூலம் எதார்த்தம் வழங்கத் தவறிய ஓர் அனுபவத்தை சாத்தியப்படுத்துவதும்தான் மேஜிகல் ரியலிசம் என்றும் அறிஞர்களால் பலவாறு விளக்கப்படும் மாய எதார்த்தவாதம். உள்ளதை உள்ளவாறு காட்டாமல் உள்ளத்தை மயக்கும் மாயவித்தை போல் காட்டி, வாழ்க்கை நடப்புக்களை வேறொரு வடிவில் உணர்த்த முயற்சிக்கின்றது. எதார்த்தம் தராத ஒரு புதிய அனுபவத்தைத் தரப் பார்க்கின்றது. மாய வித்தைக்காரன் தனது ஜாலங்களால் எதார்த்தத்தைக் கண நேரம் மறக்க வைத்து மகிழ வைப்பான். இதற்கு முரணாக சில நேரங்களில் எதார்த்தத்திலுள்ள அவலங்களை உணர வைக்க மாயா ஜாலம் பேல் ஒன்றைக் கையாளுவது எந்த அளவிற்கு அந்த அவலத்தின் ஆழத்தை அழுத்தமாக உணர்த்தச் சரியாக உதவி நிற்கும் என்ற கேள்வியோடு கட்டுரை தொடர்கின்றது.

## பெண்ணியம்

மரபு, பண்பாடு என்ற பெயரில் ஆணுக்கு இணையாக இருக்க வல்ல பெண்ணின் அளப்பரிய ஆற்றல்களை நசுக்கி, காலங்காலமாய் அவளை அடிமைப்படுத்தி வதைத்த அவல நிலையிலிருந்து மீட்டு, ஆணுக்கு இணையான மதிப்பினைப் பெற்றுத் தருவதே பெண்ணியத்தின் நோக்கம். இந்நோக்கம் நிறைவேறுவதற்கான சிந்தனைகளும் செயல்களும் பெண்ணியம் எனப்படும். மனித இன உற்பத்தியின் ஆணிவேராக இருக்கும் பெண்ணின் பலதரப்பட்ட சிக்கல்களையும் துன்பங்களையும் சித்திரிப்பதின் வாயிலாக இலக்கியப் படைப்புக்களும் சமூகத்தில் பெண்நிலை குறித்த புரிதலைத் தந்து அந்நிலை உயர தம் பங்கை ஆற்றி வருகின்றன. பெண் படும்பாட்டை உள்ளவாறு சித்திரிக்கும் எதார்த்தப் போக்கு இதில் ஒருவகை என்றால் காரண காரிய எல்லைகளை மீறி நம் முடைய மாயக் காட்சிகளால் ஆன மாய எதார்த்தப் போக்கு மற்றொரு வகை. இந்த இரண்டாவது வகையில் இக்கலை வடிவத்தைச் செம்மையாகச் செதுக்கி விட வேண்டுமென்ற அதீத சிரத்தையில் பெண்துயரம் என்ற உள்ளடக்கம் சற்றே பின் தள்ளப்பட்டுவிடுகிறதோ என்ற ஐயம் எழுகின்றது.

## கதைகளில் மாய எதார்த்தமும் பெண்ணியமும்

ஐயத்திலிருந்து தெளிவு பெற மூன்று சிறுகதைகள் இங்கு ஆய்விற்கு உள்ளாகின்றன. ஜெயமோகனின் ஆயிரங்கால் மண்டபம் (1999), எஸ்.ராமகிஷ்ஷ்ணனின் ஏழு இறகுகள் (2001) பாவண்ணனின் ஏவாளின் இரண்டாவது முடிவு (2002) ஆகிய மூன்று கதைகளும் மாய எதார்த்தப் போக்கில் பெண் குறித்துப் பேசுகின்றன.

ஜெயமோகனின் கதையை மூன்று வரிகளில் சொல்லிவிடலாம். வயதான கிழவனுக்கு இளம்பெண் ஒருத்தியைத் திருமணம் முடிக்கவிருக்கிறார்கள்.. கோயில் ஒன்றில் திருமணம் நடைபெறவிருக்கின்றது. இளம்பெண் அங்கேயே தற்கொலை செய்து கொண்டுவிடுகின்றாள். சிறுமி ஒருத்தியின் பார்வையில் கதை சொல்லப்படுவதும் கோயில் கதை நிகழ் களமாக இருப்பதும் ஆசிரியருக்கு மாய எதார்த்தப் போக்கை ஒருவித நம்பகத்தன்மையோடு கொண்டு செய்வதற்குப் பெரிதும் உறுதுணை செய்கின்றன. சிறுமி ஆயிரங்கால் மண்டபத்திலுள்ள தூண்களில் கற்சிலைகள் பல ஒட்டிக் கொண்டிருப்பதைக் கவனிக்கின்றாள். அதிலுள்ள குதிரை வீரர்கள் தலையைத் திருப்பி அவளைப் பார்க்கின்றனர். தன்னை ஏளனமாகப் பார்க்கும் அவர்களில் ஒருவனை அவள் தடியா என ஏச அவன் முகம் சிறுத்து அவளை உற்றுப் பார்க்கின்றான். அவன் கால்களும் கைகளும் அசைந்தன. குதிரையின் விலாப்பக்கம் தோல் துடித்தது. அக்குதிரை வீரர்கள் பற்றி பலவிதச் சிந்தனைகளில் ஆழ்ந்த அச்சிறுமி இறுதியில் அவர்கள் கெட்டவர்கள். அவர்கள் ஒரு ராஜகுமாரியை குதிரையில் போய்த் தூக்கியபோது அவள்தான் சாபம் போட்டு அவர்களைக் கல்லாக ஆக்கிச் சுவரோடு ஒட்டி வைத்துவிட்டாள் என்ற முடிவிற்கு வருகின்றாள்.

திருமணம் செய்து கொள்ளவிருக்கும் தன் சித்தியைப் பார்க்கக் கோயிலுக்கு உள்ளே செல்கின்றாள். ஒவ்வொரு தூணிலும் விளக்கு ஏந்தி பாவையர் நின்று கொண்டிருக்கின்றனர். சிறுமி அவர்களை அக்காக்கள் இல்லை. மாமிகள் என நினைக்கின்றாள். மாமி தயக்கமாக வெளிப்பக்கம் குதிரைக்காரர்களைப் பார்த்த பிறகு, சினேகமாக புன்னகை புரிந்தாள்... எல்லா மாமிகளும் திரும்பிப் பார்த்துச் சிரித்தனர். அப்பொழுது சிறுமிக்குத் தன் சித்தி அழும் குரல் கேட்க அவள் அருகே சென்று சிறுமி சித்தியின் கண்ணைத் துடைத்து வயிற்றுவலியா என்று கேட்டவுடன், சித்தி இல்லடா.... அந்தத் தூணிலே செலை இல்லை. உடஞ்சு போயிருக்கு. அதான் சித்தி அழுதேன். என்கிறாள். அவள் காட்டிய தூண் மூளியாக உடைந்து நின்றிருநதது. கதையின் இறுதியில் மூளியான அத்தூணில் ஒரு சிலை

ஒட்டியிருந்தது. அது தன் சித்திதான் என உணர்ந்த சிறுமி, சித்தியைத் தேடி வரும் பெரியவர்களிடம் அவர்கள் சித்தியை அழ வைத்ததால் சித்தி இருக்கும் இடத்தைச் சொல்லப் போவதில்லை. நன்றாகத் தேடட்டும், எனச் சொல்லி மகிழ்கின்றாள்.

கோயிலின் வெளியே மண்டபத்திலுள்ள அச்சுறுத்தும் குதிரை வீரர்கள். சமூகத்தில் ஆதிக்கம் செலுத்தும ஆண்களையும் கோயிலுக்குள் நிற்கும் விளக்கேந்திய பாவையர் வீட்டினுள் தன் கடமைகள் ஆற்றும் பெண்களையும் குறியீடுகளாய் உணர்த்தி அமைகின்றன. பெண்ணின் வாழ்வைச் சிதைத்து அழிக்கும் ஆணாதிக்கச் சமூகத்தின் போக்கை உடைந்து மூளியான தூணில் ஒட்டிய புதுச் சிலையால் ஆசிரியர் உருவகப்படுத்துகின்றார். பொருந்தா மணம் போன்றவற்றால் பெண் வாழ்வின்றி அழியும் அவலத்தை மாய எதார்த்தப் போக்கில் சொல்லியிருந்தாலும், சிலைகள் சிரித்தன. அசைந்தன, அச்சுறுத்தின எனக் காட்டியிருந்தாலும் பெண் துயரம் நம் உள்ளத்தைத் தொடுவதற்கு அவை உதவி நிற்பதை மறுப்பதற்கில்லை.

எஸ். ராமகிருஷ்ணனின் ஏழு சிறகுகள் என்ற சிறுகதையில் வேம்பர்கள் என்னும் மேற்கு மலைவாசிகளான மூன்று இளம்பெண்களுக்குப் பாறைகளில் பூக்களைத் தத்ரூபமாக வரையும் ஆற்றல் உண்டு. அதிலும் சிறப்பாக அச்சித்திரப் பூக்களுக்கு வாசனையும் உண்டு. இது கண்டு அதிசயித்த ஏசுசபை பாதிரிகள் இருவர் தாவரப் பெருநூல் ஒன்றைத் தொகுக்க முடிவெடுத்து அம்மூன்று பெண்களையும் அவர்களின் தந்தையிடமிருந்து பதினேழு ரூபாய்க்கு விலைக்கு வாங்கி மேற்கு மலைத் தொடரின் அரிய மலர்களை அப்பெண்களைக் கொண்டு காகிதங்களில் வாசனையோடு வரையக் கட்டாயப்படுத்துகின்றனர். இருளைக் குடித்தவர் போல் இறுக்கம் கொண்ட அப்பெண்கள் தங்களுக்கு உணவு கொடுக்க வந்த பெண்ணின் காதைக் கடித்துத் துப்பிவிடுகின்றனர். பின் வேறு வகையில் தங்கள் எதிர்ப்பைக் காட்ட இயலாத அம்மூவரும் மலையிலும் பள்ளத்தாக்குகளிலும், மலைப்பிளவுகளிலும் உள்ள மலர்களை மணத்தொடு காகிதங்களில் சித்திரமாக்கினர். மூவரும் ஒருநாள் தப்பி ஓடிவிடுகின்றனர். வேட்டை நாய்களின் துணையோடு வேட்டைக்காரன் ஒருவனை அனுப்பி அப்பெண்களைத் தேட, இருவர் அகப்பட்டுக் கொள்கின்றனர். அதன்பிறகு எந்த எதிர்ப்பும் காட்டாது வேலையை விரைந்து முடிக்க வேண்டுமெனப் பாதிரியார் கட்டளையிட்டதால் நாளும் ஆயிரக்கணக்கான மலர்களை வரைந்தனர். உறக்கத்திலும் அவர்கள் விரல்கள் எதையோ வரைந்து கொண்டிருந்தன. ஆனால் இப்போது வரைந்த மலர்கள் தத்ரூபமாக இருந்தாலும் அவற்றில் வாசனை இல்லாது போயிற்று. இதற்கிடையில் மற்றொரு பெண்ணை வேட்டைக்காரன் எவ்வளவு முயன்றும் பிடிக்க முடியாது இறுதியில் அவளைச் சுட்டுக்கொன்றுவிடுகிறான். அவளை அந்த மலைப்பகுதியிலேயே புதைத்து விடுகின்றனர்.

வேலை முடிந்தபின் இரு பாதிரிமாரும் தங்கள் நூலை லிஸ்பனில் அச்சிட முடிவு செய்து அந்த இரு பெண்களையும் உடன் அழைத்துச் செல்கின்றனர். அங்கு ஒருநாள் எதிர்பாராத நிலையில் அவ்விருவரும் ஒரு தடாகத்தில் மீன்களெனத் தாவி நீருக்குள் சென்று மடிகின்றனர். பாதிரிமார் இருவரும் எதிர்பார்த்தபடி அந்த நூல் எவராலும் கவனிக்கப்படாத துயரத்தால் வயோதிகத்தின் முன்பே மரணித்தனர். ஆனால் தென்மலையில் சிலுவை நடப்பட்ட சமாதியொன்றில் கிளைத்த சிறு செடியொன்று கபில நிறத்தில் இரண்டு மலர்களை மட்டும் பூத்ததையோ, அது எப்போதும் பெண் வாசனையைச் சுரந்தபடியிருப்பதையோ காண அங்கு எவருமே இல்லை. வேம்பர்கள் அந்தப் பாதிரிமார்களை மறக்காது தம்மினப் பெண்களை விலைக்கு வாங்கிப் போனதை ஒரு புராணீகக் கதைப்பாடலைப் போல இன்றும் பாடிவருகின்றனர். மூவரில் ஒருத்தி இளம்பெண் ஒருத்தி மீது தெய்வமேறப் பெற்று சினத்துடன் கூக்குரலிட வேம்பர் இளம்பெண்கள் யாவரும் மாரடித்து உரத்து அழுது மொழியற்ற இசையில் ஓங்காரமிடுவது இரவெல்லாம் நீண்டு தொடர்கின்றது.

மனித இனத்தின் தொடக்ககாலப் பெண்கள் அளப்பரிய ஆற்றலோடு இருந்தனர் என்பது மலைவாசிப் பெண்கள் வாசனையோடு மலர்கள் வரையும் ஆற்றல் பெற்றிருந்தனர் என்பதால் உணர்த்தப்படுகிறது. ஆத்மார்த்தமாய் ஆற்றலொடு மனிதன் செயல்படும்போது அதன் விளைவு உன்னதமாயிருக்கும் என்ற எதார்த்தம், வரைந்த மலரில் வாசனையும் இருந்தது என மாய எதார்த்தமாய்ப் புனையப்பட்டுள்ளது. ஆற்றல் வாய்ந்த பெண்ணை காலப்போக்கில் ஆண் அடிமைப்படுத்தியதையும் அவளை அலைக்கழித்து ஆற்றல் குன்றச் செய்து அழிப்பதையும் அதனால் அவனும் எந்தப் பயனுமின்றி அழிவதையும் ஆசிரியர் கதையாகக் காட்டிச் செல்கின்றார். கதையில் பெண்படும் துயரம் ஆழமாக உணர்த்தப்பட்டிருந்தாலும் அதனினும் புனைவுக்கே முக்கியத்துவம் தரப்பட்டுள்ளது போல கதையின் போக்குக் காணப்படுகிறது.

பெண் விடுதலைக்கு முக்கிய வழிகளில் ஒன்றாகக் கர்ப்பத்தடையைக் குறிக்கும் பெரியார். பெண்கள் கர்ப்பத்தடையைப் பயன்படுத்தி பிள்ளைப் பெறுவதையே அடியோடு நிறுத்திவிட வேண்டும், என்ற அதி தீவிரக் கருத்தொன்றை வைக்கின்றார். இக்கருத்தே கதையானது போல பாவண்ணனின் ஏவாளின் இரண்டாவது முடிவு, எனும் படைப்பு அமைந்துள்ளது.

ஒரு நாட்டில் நாற்பது ஆண்டுகளாகக் குழந்தைகளே பிறக்கவில்லை. முதலில் இது ஆணின் கவலையாக இருந்து மெல்ல மெல்ல ஆண் சமூகத்தின் கவலையாக மாறி இறுதியில் அரசாங்கத்தின் பெருங்கவலையானது. ஏனெனில் உலக வங்கியிடமிருந்து எந்தக் கடன் உதவியும் இல்லை. இந்த நாட்டுப் பெண்கள் வழியாகத் தங்கள் நாட்டிலும் இந்தச் சூழல் வந்துவிடுமோ என்ற அச்சத்தில் பிறநாட்டு விமானப் போக்குவரத்துக்கள் நிறுத்தப்பட்டுவிட்டன. மொத்தத்தில் உலக வரைபடத்திலிருந்தே இந்த நாடு துண்டாகித் தொங்குவது போலிருந்தது. பெண்கள் குழந்தைகளைப் பெற்றுத் தர வேண்டுமென அரசு கெஞ்சியது. ஆண்களோடு தடையின்றித் தாம்பத்ய உறவு கொள்ளும் பெண்களுக்குக் கர்ப்பத்தடை எப்படிச் சாத்தியமானது எனப் பல வகைகளில் ஆராய்ந்து தோற்ற அரசு இறுதியாகக் கடைசியாகப் பறிந்த ஆண்மகனை அழைத்து பாசம் எனும் கருவியால் தன் தாயிடமிருந்து அந்த இரகசியத்தை அறிந்து வருமாறு வேண்டிக் கேட்கின்றது. தாயிடம் கேட்டபோது அவள் நீயே தப்பிப் பிறந்தவன்..... நீ பிறந்த மறுகணமே ஏதோ ஒரு சொல் காற்றுப் போல மிதந்து வந்து என் நெஞ்சைக் கிழித்துக் கொண்டு புகுந்தது போலிருந்தது. அச்சொல்லை உச்சரித்ததுமே அச்சொல் நினைவிலிருந்து மறந்துவிட்டது, எனச் சொல்கின்றாள். தாயின் இச்சொற்கள் இராஜ்குமார் என்பவர் எழுதிய ஏவாளின் இரண்டாவது முடிவு என்ற நாவலில் அப்படியே உள்ளதை நினைத்து மகன் வியப்படைகின்றான். அந்நாவலாசிரியர் இப்போது உயிருடன் இல்லை. இந்நாவலை எழுத அவர் சேகரித்த குறிப்புக்களைச் சென்று மகன் பார்வையிட்டபோது அதில் அவர் அச்சொல்லைக் கண்டறிய பல முயற்சிகளை மேற்கொண்டதும் இறுதியில் மூதாட்டியர் மூவரே அச்சொல்லைக் காற்றில் பறக்கவிட்டு பெண்களின் கர்ப்பத்தைத் தடை செய்தனர். அவர்கள் சகுந்தலையின் கருவைப் பிறக்க அனுமதிக்காமல் மாதக்கணக்கில் கருவறையிலேயே அடைத்து வைக்கமந்திரச் சொல்லைக் கற்றுத் தந்த ஒரு காட்டுப் பெண்ணின் வழிவந்தவர்கள். காட்டுப்பெண்கள் பலகாலம் தங்களுக்கு விருப்பமில்லாக் கருக்களைக் கலைக்கவும் பேறு காலத்தைத் தாமதப்படுத்தவும் பயன்படுத்திச் சலித்துப் போன நிலையில் ஊரை நோக்கி அச்சொல்லை மிதக்கவிட்டனர் என்றெல்லாம் அவர் அறிந்ததும் தெளிவாகக் குறிப்பிடப்பட்டிருந்தது. அவர் தன் குறிப்பில் தந்திருந்த வரைபடத்தின் உதவியோடு கதைநாயகன் அவ்விருப்பிடத்தை அறிந்து அம்மந்திரச் சொல்லின் மாற்றுச் சொல்லைக் கண்டறிந்து வருவது தேசத்திற்குத் தான் செய்யும் பெருந்தொண்டெனக் கருதி இம்மலைக் காட்டுப் பகுதியை அடைந்த போது அக்காட்டு நடுவே செயல்பட்டுக் கொண்டிருந்த அணு உலைகளின் அடுப்புகள் வெடித்துச் சிதறியதால் காடு முழுவதும் தீப்பற்றி அக்காட்டுகுள் வசித்த ஆதிவாசிகளில் ஒருவரைக் கூடக் காப்பாற்ற இயலாமல் போய்விட்டது என்பது அறிந்து பெருத்த ஏமாற்றத்திற்கு உள்ளானான் எனக் கதை முடிகின்றது. மானுட இன உற்பத்தி போதும் எனப் பெண் உறுதி பூண்டுவிடுவாளேயானால் பலவற்றையும் வெற்றிகொண்டு வருவதாய் மார்தட்டிக் கொள்ளும் மானுட வர்க்கமே ஒரு முடிவிற்கு வந்துவிடும் என்ற எதார்த்தமான எச்சரிக்கை மந்திரச் சொல்லால் மகளிர் மகப்பேற்றினைத் தடுத்துவிட்டனர் என மாய எதார்த்தப் போக்காய் வெளிப்படுத்தப்பட்டுள்ளது. தாய்வழிச் சமூகத்தில் பெண்கள் ஆணைச் சார்ந்து வாழவில்லை. அவர்களே சக்திவாய்ந்த மனித இனத் தொடக்கப்பாலினர் என்ற அறிஞர் தம் கருத்தின் சாயலோடு மந்திரச் சொல்லறிந்து பயன்படுத்தியது காட்டுவாசிப் பெண்கள் எனக் கதை புனையப்பட்டுள்ளது.

## முடிவுரை

பெண்ணின் துயரை, பெண்ணின் உயர்வை மாய எதார்த்தப் போக்கில் சித்திரிக்கும் இம்மூன்று சிறுகதைகளில் ஜெயமோகனின் படைப்பில் உள்ளடக்கமும் உத்தியும் ஒன்றோடொன்று இணைந்து, உணர்வுப்பூர்வமான அனுபவத்தைப் பெற முடிகின்றது. ஏனைய இருவர் படைப்பிலும் உத்தியின் வீச்சில் உள்ளடக்கம் செய்திபோல் சொல்லப்பட்டு, அறிவுப்பூர்வமான புனைவுகளாய் அமைகின்றன. அன்றாட வாழ்வும், பிரச்சனைகளும் இன்று சிறுகதையாகப் பெருகிய நிலையில் தான் அதை விலக்கி பின் நவீனப் புனைவியலுக்கான கதா முயற்சிகளை மேற்கொள்ளுவதாக ராமகிருஷ்ணன் கூறுவதும் அனுபவப் பொறியின் வழியாகத் தன்னை வந்தடைந்த வாழ்வின் தருணங்களை வெவ்வேறு வண்ணங்களோடு மாற்றி அளிப்பதாக பாவண்ணன் கூறுவதும் எந்த உத்தியாலும் தன்னளவில் இலக்கியத்தில் எதையும் சாதிக்க முடியாது. அடையும் இடமே அளவுகோல். மானுடத்தின் ஆத்மாவுடன் பேசும் கவனம் நமக்கு இருக்க வேண்டுமென ஜெயமோகன் கூறுவதும் இங்கு ஆழ்ந்து மனதில் கொள்ளத்தக்கன. உள்ளடக்கத்தையும் உருவத்தையும் தேர்ந்தெடுப்பது படைப்பாளனின் ஏகபோக உரிமை என்றாலும் பெண்ணைப் போன்ற சமூக அவலங்களை உள்ளடக்கமாய் ஏற்கும்போது அது உத்தியின் வீச்சில் நீர்த்துப் போய்விடாமல் பாதுகாக்க வேண்டியது படைப்பாளனின் தார்மீக கடமையாகும்.

## கட்டுரை ஆக்கத்திற்குப் பயன்பட்டவை


1. காப்ரியேல் கார்ஸியா மார்குவேஷ் - ஆர்.வெங்கடேஷ்
2. பெண்ணியம் - முனைவர் இரா.பிரேமா
3. உலக வரலாற்றில் பெண்கள் - தமிழாக்கம், வி.ராதாகிருஷ்ணன்
4. ஆயிரங்கா ல் மண்டபம் - ஜெயமோகன்
5. வெயிலைக் கொண்டு வாருங்கள் - எஸ்.ராமகிருஷ்ணன்
6. ஏவாளின் இரண்டாவது முடிவு - பாவண்ணன்.

## FEMINISM IN THE MODERN TAMIL SHORT STOREIS

**Dr.S.Andal,** Reader in English, Sri Meenakshi Govt. College (W), Madurai - 2.

The meaning of the term feminism may differ from person to person. But from my point of view feminism means, views which speaks in favour of non suppression of woman. In the same way though there are various types of feminism prevailing in this world yet for my convenience sake I have divided it as two types. They are traditional feminism and non-traditional feminism. Traditional feminism means, the woman who is suppressed though aware of her being suppressed yet continues to live in that unhappy situation and trying to show her opposing ideas only inwardly (in her mind). And non traditional feminism means, the woman who is suppressed, finds a solution to her suppression and escapes from that situation. The modern Tamil Short stories deal with both the type of feministic aspects. To prove this I have selected three Tamil short stories. One is a purana story under the title Kanopathirai published in Thinamalar News paper on 26.12.2004 Anmigamalar sheet (P.1). The second short story is Kannitch Sothanai (Virginity Test) written by R,Navaneetha Krishnan published in Thinamalar Varamalar, December 19th 2004 (P.28). Though the title in Feminism in the Modern Tamil Stories, I have selected one purana story along with the two modern Tamil Story because, this purana story attract the attention of the readers by favouring the non suppression of woman and this element of rising its voice for the non suppression of woman helps for my discussion regarding the feministic aspects which I found with other two short stories which I have selected for my discussion. And the aim of this paper is to discuss the feministic aspects which are found in the above mentioned stories.

A brief outline of these three stories will help the readers to follow the criticism. The first story is Kanopathirai. In this story Neelavathy - a Prostitute lived in Malkalpat. Her daughter Kanopathirai did not want to follow their traditional job. Because she thought of Pandarinathar as her husband and wished to serve him. So she went to pandaripuram. There her beauty attracted the king who came there. The king sent his messengers to her. When the messengers informed her about the king's wish, she asked the messengers to stay outside the temple. She also told them that she would be coming along with them after getting the last Dharshan of Lord Pandarinathar. She went inside the temple and worshipped Pandarinathar and asked Him to save her from the situation. Immediately a lighting flashed and she died. Afraid of the King's punishment the priest of that temple buried her body in the south Prahara of that temple. Then they prayed to Pandurengan. When they opened their eyes, to their surprise they say a perennial tree stood beautifully with leaves and flowers. When the king came to know this, he realized his fault and prayed for the forgiveness of Knopathirai and decided to lead his life in the service of Pandurengan.

In the story Vunnai Chuutri Oru Sorkkam ( A Heaven Around You) Akila the heroine by chance saw the date August 2nd in the daily sheet calendar. She started recollecting the happiness of that date with fresh memory. She flashed the important scene of that day which took place ten years back in her life - the day on which her husband Thinagar came to see her for the first time as a bride. Just to celebrate that memorable day she prepared special items in the morning itself and reminded him of the importance of that day. But her husband did not touch the food, and scolded her

வாய்க்கப் பெற்றவள். "அக்கா அடுத்த வாரம் டி.டி.ஈ பரீச்சை எழுதறேன். பாஸ் பண்ணிடுவேன். ஒரு டைபாங இன்ஸ்டிட்யூட் வைச்சுக் குடுத்திடு. லோன் போட்டாவது மெஷின் வாங்கிடலாம். ஒரு மூணு வருசம் நல்லா சம்பாதிக்கனும். அது வரைக்கும் கல்யாணம் அது இதுன்னு என்னை திசைதிருப்பிடாதே..." (கதாநாயகி. ப. 21) என்ற பூரணியின் பேச்சில் தன் எதிர்காலம் குறித்து முடிவெடுக்கும் சிந்தனைத் தெளிவும் சொந்தக் காலில் நிற்கும் துணிச்சலும் அவளுக்கு இருப்பதைக் காண முடிகின்றது." தன் லட்சியத்தில் இத்தனை தெளிவாய் இருக்கும் பெண் கல்யாணத்திலும் ஜெயிப்பாள். எந்த மாதிரியான புருஷன் தனக்குத் தேவை என்பதிலும் தெளிவாய் இருப்பாளே.... நம்மில் பாதிப் பெண்களுக்கு அந்தத் தெளிவு இல்லாததால் தானே சம்சார சங்கீதம் அபஸ்வரமாய் ஒலிக்கிறது" (கதாநாயகி. ப. 21) என்ற நீலாயதாட்சியின் குரல் கதையாசிரியரின் குரலாக அமையக் காணலாம்.

## 2. பெண்மையைப் போற்றுகிற ஆடவனை வாழ்க்கைத் துணையாகத் தேர்ந்தெடுத்தல்

வெறும் உடற்பசியைப் போக்குகின்ற உறவாக அல்லாமல், பெண்ணை மதிக்கின்ற, பெண்ணின் உணர்வுகளைப் போற்றுகின்ற, பெண்மை ஆளமுற்படாமல் நட்புச் செய்ய நினைக்கின்ற உயர்ந்ததொரு ஆடவனைத் தன் வாழ்க்கைத் துணையாகத் தேர்ந்தெடுக்கப்படுவதன் மூலம் ஆணாதிக்கச் சமூகத்திலிருந்து விடுபடலாம் என்று பரிந்துரை செய்கின்ற கதாசிரியர் அதனைத் தமது கதையில் வரும் நீலாயதாட்சியின் மூலம் தெளிவுபடுத்தியுள்ளார்.

பெண் விடுதலையை நாடிநிற்கும் முற்போக்குச் சிந்தனைவாதியாகக் கதையில் காட்டப்படும் கதாநாயகி நீலாயதாட்சி பெண்ணை, அவளது உணர்வுகளை மதிக்கின்ற ஒருவனே தனக்குக் கணவனாக வரவேண்டும் என்பதில் உறுதியாக இருக்கிறாள். உங்களுக்கும் உங்கள் அத்தை மகன் குமாருக்கும் திருமணமா எனக் கேட்ட ஆதியிடம் "நட்பு இல்லாத வெறும் கல்யாணம் வேண்டாம். உடல் பசிக்கு மட்டுமே இரைபோடற வெற்றுத் தாம்பத்யம் எனக்கு வேண்டாம். பொங்கவும் திங்கவும் மட்டுமே வாழ்க்கைன்னு சொல்ற ஆளோட இல்லறம் எனக்கு வேண்டவே...வேண்டாம்". (கதாநாயகி. ப. 41) எனக் கூறுகிற நீலாயதாட்சி, சீர் செனத்தி எனக் கேட்டுத் தன் கணவனாலும் அத்தையாலும் துரத்தப்பட்டு அடிக்கடி இல்லத்திற்கு வரும் தன் அக்கா மைதிலியிடம் "உன்னை மாதிரிச் சூழ்நிலைக் கைதியா அடிமையா வாழ எனக்கு முடியாது. இப்படியே தனிமரமா வேணா இருப்பேனே தவிர, தூக்குக் கயித்த தாலிக்கயிறாச் சுமக்க மாட்டேன்" (கதாநாயகி. ப. 13) எனவும், தன் அத்தை மகன் குமாரிடம், "பொம்பளைய மதிக்காத உனக்குப் பொண்டாட்டியா இருக்கறதை விடவும் தூக்குல தொங்கறது சுகம் தான்" (கதாநாயகி. ப. 81) எனக் கூறுவதும் திருமண உறவில் அவள் கொண்டிருந்த தெளிந்த சிந்தனையை காட்டுகின்றன. பெண்ணை, அவளது உணர்வுகளை மதிக்கின்ற, நட்புடன் ஏற்றுக்கொள்கின்ற ஒருவனையே மணாளனாக அடைவேன் என்கிற நீலாயாட்சியை, "காதலொருவனைக் கரம் பிடித்து - அவன் காரியம் யாவிலும் கைகொடுத்து" என்ற பாரதியாரினும் ஒருபடி மேலே சென்று தன் காரியத்தோடு கைகோர்த்து வருபவனையே, தனது கணவனாகத் தேர்ந்தெடுப்பேன் என்ற எண்ணம் கொண்டவளாகவும் ஆசிரியர் படைத்திருக்கிறார். இதனை, "என் நடிப்புத் திறமையை முடக்கிப் போட்டு அடுப்பில் விறகாய் எரிந்து விடாமல் ஆதரவு நெய்யூற்றி வளர்க்கும் துணை கிடைக்குமா? இல்லையென்றால் இப்படியே கடைசி மூச்சை விட்டுடலாம். சுதந்திரமாவது மிஞ்சும்" (கதாநாயகி, ப. 22) என்ற கூற்றின் வாயிலாக அறியலாம். அத்துடன் தான் விரும்பியது போல வீதி நாடகம் நடத்தி வரும் இயக்குநர் ஆதிபகவன் என்ற ஆதியிடம் தன் மனதைப் பறிகொடுக்கின்றாள் நீலாயதாட்சி. அவளைச் சிறந்த நடிகைக்கான விருது பெறச் செய்த ஆதி, "இனி மேடையிலும் என் வீட்டிலும் நீதான் கதாநாயகி, அடுப்பங்கரைக் கரித்துண்டாய் ஆகிவிடாமல்... கடைசி வரைக்கும் நீ வைரமாகவே இருக்கணும் - இருக்க வைப்பேன்." எனக் கூறிய போது, "இந்த மாதிரியான அறிவுத்துணையைத்தான் திருமணத்தில் தேடினேன். பொக்கிஷமே கையில் கிடைச்சாச்சு..."(கதாநாயகி, ப. 88) என மனநிறைவு எய்துபவளாகவும் கதாசிரியர் காட்டுகிறார்.

## 3. பொருளியல் சுதந்திரத்திற்கு வழிவகுக்கும் கல்வியை ஆதாரமாகக் கொள்ளுதல்

பெண்ணிற்குச் சுதந்திரம் என்பது பொருளாதாரச் சுதந்திரத்தையும் குறிக்கும். அதற்குக் கல்வி அவசியம் என்ற தீர்வை எடுத்துரைக்கும் கதாசிரியர் அதனை நீலாயதாட்சியின் அக்கா மைதிலி மூலம் விளக்குகின்றார். தன் அத்தை பேச்சியம்மாளும் கணவனும் நாலுமாதத்திற்கு ஒருமுறை சீர் செனத்தி வாங்கி வருமாறு துரத்தும் கொடுமையைப் பொறுத்துக் கொள்ளாத மைதிலி, "ஒத்தைப் பைசா சுயமாகச் சம்பாதிக்கத் துப்பில்லே. தைரியமாய் வாழத் துப்பில்லே... எதுக்குமே பிரயோஜனமில்லாமல் எதுக்குப்பா என்ன வளர்த்தே? ம்? வெறும் சோறு திங்கத்தான் பொண்ணுன்னால் நாயும் நாமும் ஒண்ணாச்சேப்பா. அடுத்த வேளைக்குப் புருஷன் சோறு போடுவானா? பட்டினி போடுவானான்னு தாலி கட்டினவன் கையை ஏக்கமாய்ப் பார்க்கிற கொடுமை எனக்கு வேண்டாம்ப்பா? நாலு எழுத்துப் படிக்க வைச்சிருக்கலாம்" (கதாநாயகி, ப. 11) என்று தந்தை

சண்முகம் பிள்ளையிடம் வேதனைப் பொங்கக் கூறுவதும், தன் தங்கை பூரணியிடம் "நல்லாப் படிக்கணும் பூரணி, என்னை மாதிரி படிக்காம கொள்ளாமக் கல்யாணம்கற தளையைப் பூட்டிக்காதே. புதை மணல்லே மூச்சுத்திணறி செத்துப் போயிடுவே - நல்லாப்படி - நிறையப்படி - புருஷனை விடவும் படிப்புதான் நிரந்தரத் துணை. சாஸ்வதமான உறவு" (கதாநாயகி, ப. 16) எனக் கூறுவதும் வாழக்கையை முழுவதும் புரிந்து கொண்ட பெண்ணொருத்தியின் அனுபவத்தில் மலர்ந்த ஆழமும் அழுத்தமும் கொண்ட வார்த்தைகள் என்பதை மறுப்பதற்கில்லை.

### 4. கணவன் தன்னை நிராகரித்தவிடத்து, அவனிலிருந்து விலகி நிற்றல்

பொருத்தமில்லாத கணவனை நிராகரிக்கச் சொல்லவில்லை. அதே சமயம் கணவன் தன்னை நிராகரித்தவிடத்து அவன் காலில் வீழ்நது தஞ்சம் புகுவதையும் ஏற்கவில்லை ஆசிரியர். சொத்திற்காக மூத்த மகனுக்கு மைதிலியைத் திருமணம் செய்து வைத்த பேச்சியம்மாள், தனது இரண்டாவது மகன் குமாருக்கு மைதிலியின் தங்கை நீலாவைத் திருமணம் செய்து கொடுக்க வேண்டும் இல்லையேல் மூத்த மருமகளை வாழாவெட்டியாக அனுப்பிவிடுவேன் என மிரட்டுகிறார். தான் படும் வேதனைகளைத் தங்கையும் அனுபவிக்க விரும்பாத மைதிலி தந்தையை சம்மதிக்க வேண்டாம் என்று கெஞ்சுகிறாள். தன் தாயின் பேச்சை ஏற்காத மனைவியின் மீது சினம் கொண்ட மைதிலியின் கணவன் அவளது தாலிக் கயிற்றைப் பற்றி இழுக்கிறான். அருகில் இருந்த நீலாயதாட்சி அக்கா தாலி என்று அலற மைதிலி, "விடு நீலா... இப்பத்தான் தூக்குக் கயிறிலேருந்து தப்பிச்சு வர்ற மாதிரி சுகமாயிருக்கு. சுதந்திரமா மூச்சுவிட முடியுது. இந்த நாய்ங்க தயவிலே வாழ வேண்டிய நிர்ப்பந்தத்தை அவங்களே இல்லைன்னு பண்ணிட்டாங்க. இனிமே நிம்மதி கூலி வேலை செய்தாவது ஒரு வாய்க் கஞ்சி குடிக்கலாம்"(கதாநாயகி, ப. 83) என்கிறாள். அவளது இந்தச் சொற்கள் ஆணாதிக்கத்திலிருந்து விடுதலை பெறத் துடிக்கின்ற பெண்ணொருத்தியின் ஆன்ம வெளிப்பாடாக அமையக்காணலாம்.

பெண் விடுதலைக்கான தீர்வுகள் பலவற்றைச் சுட்டிக்காட்டுகின்ற கதாசிரியர் ஆண்டாள் பிரியதர்ஷினி, வீதி நாடக இயக்குனரான ஆதிபகவன் குழுவினர் டெல்லியில் மாநிலங்கள் அளவில் நடைபெற்ற போட்டியில் கலந்து கொண்டு பெண்விடுதலை குறித்த நாடகத்தை நடத்திக் காட்டியதாகக் கதையை அமைத்துள்ளார். ஆடலும் பாடலும் கலந்த அந்நாடகத்தில் பெண்ணின் புலன்களை, சிந்தனையை, வாழ்க்கையைச் சிறைப்படுத்தி, அடிமைப்படுத்தி வைத்திருந்த ஆதிக்கச் சக்திகளைத் தகர்த்தெரியும் பெண்மையைப் படைத்துக்காட்ட முனையும் கதாசிரியரின் உள்ளத்திலிருந்த வெளிப்பட்ட உன்னத வரிகளுள் சில வருமாறு :

பெண்ணென்று பிறந்தோம்! சுமையாக இருந்தோம்!
விழியில்லாக் குருடாய் வழியில்லா முடமாய் / தினந்தோறும் தினந்தோறும் மடிந்தோம்! முடிந்தோம்!
நேற்றுவரையில் சங்கிலிச் சிறையில் / சிந்தனை இல்லை! செயல்களும் இல்லை!
கருவறை தொடங்கிக் கல்லறை வரைக்கும் / சுவாசம் கூடச் சுதந்திரம் இல்லை!
எடுபிடி யானாள் ஏமாளி யானாள் / படுக்கைச் சிதையில் சாம்பலாகிப் போனாள்

..................

உணர்வுகள் தொலைத்து உரிமைகள் தொலைத்து / உருவமும் தொலைத்த உடம்பின் எச்சம்!
களிமண் பிறப்பில் புயல் நுழைந்தது / எரிமலை வெடித்தது பூகம்பம் உடைத்தது!

.............

இன்று / இமயமும் தொடவும் அச்சம் இல்லை! / இமைக்கவும் நேரம் மிச்சம் இல்லை!
துணிவும் தெளிவும் பெண்ணின் சுவாசம்! / தலைமையும் தாய்மையும் பெண்ணின் கவசம்!

..........

சக்தியும் அவளே! முக்தியும் அவளே ! / பெண்ணுக்குப் புதிதாய் விதி செய்வோம் ! (கதாநாயகி, பக். 65 -66)என்ற அவ்வரிகள்,

## நிறைவுரை

பெண்ணை அடிமைப்படுத்தும் பிற்போக்குத்தனத்தைச் சுட்டிக்காட்டி, அதற்கான தீர்வுகளையும் கூறுவதன் மூலம் பெண்களுக்கு விழிப்புணர்சியையும், துணிச்சலையும் கொடுத்து விடுதலை பெற்ற பெண் சமதாயத்தைக் காண விழைகின்ற கதாசிரியர் ஆண்டாள் பிரியதர்ஷினியின் உயரிய நோக்கம் வரவேற்கத்தக்கது.

## குறிப்புரைகள்

1. திரு. வி.க. மணிமொழிகள், ப. 56.
2. டாக்டர். மு.வ. பெண்மை வாழ்க, ப. 5

# தற்காலக் கவிதைகளில் பெண்ணியம்

*ச.சௌ. கவிதா* விரிவுரையாளர், வாலாஜா பேட்டை, வேலூர் மாவட்டம்.

ஆடை, அணிகலன் ஆசைக்கு வாசமலர், தேடுவதும் ஆடவர்க்குச் சேவித்திருப்பதும் அஞ்சுவதும் நாணுவதும் ஆமையைப் போல் வாழுவதும் கெஞ்சுவதுமாகக் கிடக்கும் மகளிர் குலம் மானிடர் கூட்டத்தில் வலிவற்ற ஓர் பகுதி என்ற எண்ணத்தில் இன்றுவரை எள்ளளவும் மாற்றமில்லை. பெண்ணை தியாகச் செம்மலாய், மலராய், தாயாய், மனைவியாய், சகோதரியாய், மகளாய் பார்க்கும் இச்சமூகம் இன்னும் அவளை மானுட இனத்தின் மற்றொரு பிரிவாய்ப் பார்க்கவில்லை. உணர்வால், அறிவால் ஒத்தவள் என்பதை உணர மறுக்கின்றது. பெண்கள் இல்லாது துறைகள் இன்றில்லை. துணிவே துணையென்று வெற்றி நடைபோடும் பெண்கள் ஒருபுறம் இருந்தாலும் கழுகுக்கண் கொண்டே சமூகம் அவர்களைக் கண்காணிக்கிறது.

காலங்காலமாக இருந்த அடிமைத்தனம் இன்னம் ஒழிந்து விடவில்லை என்றாலும் பெண்ணைப் பெண்ணாக பார்க்க வேண்டும் என்பது இன்று எடுத்துச் சொல்லும் அளவுக்காவது துணிந்துள்ளனர் என்பதில் ஐயமில்லை. ஆணும் பெண்ணும் நிகரெனக் கொள்வதால் அறிவிலோங்கி இவ்வையம் தழைக்குமாம் என்று பாரதி தொடங்கிவைத்த கோட்பாட்டை இன்றைய கவிதைகளில் காணமுடிகிறது.

ஏ இந்துமா கடலிலிருந்து/வேகமாக வீசுகின்ற கடல் காற்றே/நாங்கள்
சமுதாய முள்வேலியில்/சிக்கித் தவிக்கிறோம்/நாங்கள் பெண்களாய்
பிறந்ததற்காகத்தான்/ஆணாதிக்கத்தால்/நாங்கள் எத்தனை நாள் தான்
ஆப்பிரிக்க அடிமைகளாய்/இருப்பது?/நாங்கள் கண்ணகிகள்
இல்லை கண்ணை மூடிக்கொண்டு /தவறுகளை ஏற்றுக்கொள்ள
நாங்கள் பிரசவத்து என்ஜின்கள்/இல்லை/நாங்கள் சுதந்திரிகள்
கடல் காற்றைப்போல்/ம. இளங்கோவன் - அரங்கேறும் அர்ப்பணங்கள்

என்ற கவிதையில் பெண்கள் அடிமைத் தளத்திலிருந்து மீளத் துடிப்பதை உணர்த்துகிறது. பிள்ளை பெறும் எந்திரமாகவே பார்க்கும் சமூகத்திற்குச் சாட்டையடியாய் அமைகிறது.

கனவுகளில்/மூழ்காதே/நிஜங்களை இழப்பாய்
கிளியாய்/இருக்காதே/சுய புத்தியைத்
தொலைப்பாய்/உன்னைப் /பெண்ணென்று உணர்
நீ எதையும் சாதிப்பாய்/ (ச. கௌ.கவிதா)

என்ற கவிதை புகழுரையில் மயங்கி, தன் வலிமையறியாது இருக்கும் பெண்களுக்கு விழிப்புணர்வை ஏற்படுத்துவதாக உள்ளதை அறிய முடிகிறது.

**சமூக அவலம்**

பெண்களாய் பிறந்து, வளர்ந்த பின் அடையும் துன்பங்கள் ஒருபுறம் என்றாலும் கருவிலேயே அழிக்கும் கொடுமை ஆறறிவு கொண்ட மனித இனத்தில் மட்டுமே உள்ளது. இந்நிலையினை சிசுவின் கோரிக்கை என்ற கவிதை அழகாக எடுத்துரைக்கின்றது.

கரும்பும்/பெண் கருவும் ஒன்றுதான்.
கரும்பு பூத்தால்/பாரம் குறைகிறது
கர்ப்பத்தில் பெண்ணென்றால்/சுமக்கும் நேரம் குறைகிறது
கணித்தவுடன்/கழுவ இது
கழிவறை அல்ல/கருவறை/(ச.கௌ. கவிதா)

என்ற கவிதை கருவறையிலே அழியும் பெண்ணுயிரின் துடிப்பாக அமைகிறது. கருவறை தாண்டி வெளியே வந்தாலும் அவள் கடந்து வரும் தடைகள் கொஞ்சமல்ல. ஒவ்வொரு பருவத்திலும் ஆணைச் சார்ந்து வாழ வேண்டும் என்ற விதி அச்சுறுத்தப்படுகிறது. திருமணச் சந்தையில் அவள் உணர்வும் மதிக்கப்படுவதில்லை. வறுமைக் காரணமாவோ, குடும்பச் சூழல் காரணமாகவோ, பணத்தாசைக் காரணமாகவோ, ஆதரவற்ற நிலை காரணமாகவோ பல பெண்களுக்கு கட்டாயத் திருமணங்களே நிகழ்கின்றன. அங்கும் வரதட்சணைக் கொடுமை தலைவிரித்து ஆடுகிறது. சட்டப்படி குற்றமென்றாலும் சமூகத்தில் சட்டத்திற்குத் தெரிந்தே நடந்துவரும் அவலம் இது. தற்காலக் கவிதைகள் இதனையும் கூறத் தவறவில்லை.

அஷ்ட லட்சுமிகளுக்கு/ஆராதனை - ஆனால்
நவரத்தினங்களை
எடைபோட்டுத்தான்/நங்கைக்கு மணமாலை
விளக்குகளுக்குத் தரப்படும்/மதிப்புக் கூட

விளக்கேற்றும் விரல்களுக்கில்லையிங்கு/ (கவிஞர் நிர்மலா சுரேஷ்)
நாங்கள் புதுமொழிகள் /கரும்பு தின்னக் கூலி
கொடுக்கிறோம்/(கவிஞர் திரு. இன்ப எழிலன்)
தட்சணை தாராளமயமாக்கப்பட்டால்/அவள் கையில் விளக்கு
தவணை தவறிப்போனால்/அவளே விளக்கு/ (ச.கௌ.கவிதா)

போன்ற கவிதைகள் வரதட்சணைக் கொடுமைகளைப் படம் பிடித்துக் காட்டுகின்றன. இதோடு முடிவதில்லை. திருமணமானவுடன் தன்னுடைய விருப்பு வெறுப்புகள், இலட்சியங்கள், உணர்வுகளை தன் கணவனுக்காக கை விட்டுவிடம் அறிவுறுத்தப்படுகிறார். அவள் திறமைக்கும் சாதனைகளும் அடுப்படியிலேயே அழிகின்றன.

நிபந்தனைகளிடாதே/நிர்பந்திக்காதே
நீயாக மாறச் சொல்லி/என்னை
நானாகவே இருக்க முடியாத/என்னால்
எப்படி முடியும்/நீயாக மாற?/ (அவள் விகடன் 2001)

என்ற கவிதை, தன் சுயத்தை இழக்க விரும்பாத ஒரு பெண்ணின் மன உறுதியை உணர்த்துகின்றது.

அறிவு அடுப்பங்கரையில்/அழகு ஆளோடியில்
மழை அவள் விழிநீர்/தோழீயே
வெளியே வாயேன்/ (மீனாட்சி கவிதைகள்)

இதனால் சாதிக்க வரும் தளிர்கள் சருகுகளாகிப் போனதையும் போவதையும் கண்கூடாக காண முடிகிறது. இதை இரா.மீனாட்சி அவர்களின் கவிதை அழகாக உணர்த்துகின்றது.

மதுரை நாயகியே/மீனாட்சித் தாயே/படியேறி
நடைதாண்டி/குளம் சுற்றி/கிளி பார்த்து
உன்னருகே ஓடிவரும்/உன் மகளை
உன் மகளே/வழிவம்பு செய்கிறான்
கோயிலிலும் காப்பில்லை/உன் காலத்தில் –
அழகி நீ/எப்படி உலாப் போனாய்

என்ற கவிதை கோயிலுக்குள் பெண்களுக்கான இக்கொடுமை நிகழ்வது சுட்டிக்காட்டப்படுகின்றது.

அதுமட்டுமல்ல இருபாலர் செய்யும் தவறுகளுக்கு பெண்ணை மட்டுமே தண்டிக்கும் பாரபட்சமும் நாம் அறிந்ததே. சட்டங்கள் சமமே என்றாலும் எழுதப்படாத சமூகச் சட்டங்கள் பெண்கள் மேலேயே கட்டமைக்கப்பட்டுள்ளன. வசவுச் சொற்களும் பெண்களைக் கொண்டே அமைக்கப்பட்டுள்ளன. ஆணாதிக்கச் சமூகத்தின் பிரதிபலிப்புத்தானே இவை.

வெளியில் வந்தவள்/விபச்சாரி
ஆனாள்/உள்ளே இருந்தவன்
உத்தமன்/ம்

என்ற கவிதையில் ஆணுக்கு விதிவிலக்கும் சமூகத்தில் உள்ள உயர்வும் வெளிப்படுகிறது. பெண்களுக்கு மட்டும் கற்பிக்கப்படும் கற்பொழுக்கம் ஆண்களுக்கும் கற்பிக்கப்பட வேண்டும் என்பது பாரதியால் மட்டுமே வற்புறுத்தப்படுகிறது.

கற்புநிலை யென்று சொல்ல வந்தார் – இரு
கட்சிக்கு மஃது பொதுவில் வைப்போம்

இக்கவிதையில் பெண்ணடிமைத் தனத்திற்கு சாட்டையடி கொடுக்கப்படுகிறது.

## ஆய்வு முடிவுகள்

(1) கருவாகம் காலந்தொட்டு, கண் மலர்ந்து, பூப்படைந்து, மணமாகி, தாயாகி இறக்கும் வரை பெண் உடலாலும் உள்ளத்தாலும் வதைக்கப்படுகின்றாள் என்பது உள்ளங்கை நெல்லிக்கனி.

(2) புரையோடிப்போன இதற்கு உடனடி நிவாரணம் கிடைக்காது. மனதுக்குள்ளேயே புழுங்கி வெந்தவர். நொந்தவர் எல்லாம் இன்று சிந்தித்து செயல்படத் தொடங்கியுள்ளனர். இதுவே வரவேற்கத் தக்கது.

(3) புகழுரைகளைக் கண்டு வளையாமல், அக்கினிக்குஞ்சுகளாக இருக்கச் சொல்வதை அறிய முடிகிறது.

(4) வரதட்சணை, கருக்கலைப்பு, குழந்தையின்மை, சிசுகொலை, திருமணம், பிள்ளைப்பேறு, பாலியல் பலாத்காரம், ஈவ்டீசிங் போன்ற அனைத்தையும் இன்றைய கவிதைகள் வெளிப்படையாகக் கூறத் தொடங்கியுள்ளன. ஆண்களோடு பெண் கவிஞர்களும் எழுகிறார்கள்.

# இந்தியப் பெண்களின் சமூக நிலை - (1947-ஆம் ஆண்டு வரை)

*ஆ.கவிதா*,எம்.ஏ.,எம்ஃபில்., எல்.ஆர்.ஜி. மகளிர் கல்லூரி, பல்லடம் சாலை, திருப்பூர் .

## முன்னுரை:

வரலாற்று நோக்கில் இந்தியப் பெண்களின் சமூக நிலையை நோக்கும்பொழுது சமுதாயத்தின் ஆரம்ப கால கட்டங்களில் அவர்களின் நிலை மேம்பட்டே இருந்தது என்று கருதக் காரணங்கள் உள்ளன. சமுதாயத்தின் ஆரம்ப கால கட்டங்களில் தாய்வழிச் சமுதாயம் வழக்கில் இருந்தது இப் பெண்கள் நிலை பற்றி சற்று விரிவாக காண்போம்.

## வரலாற்று காலத்தில் பெண்களின் சமூக நிலை வேதகாலத்தில் பெண்கள்:

இந்தியப் பெண்களின் சமுதாய நிலையை வரலாற்று நோக்கில் ஆராய விழைந்த அல்டேகர் கோசாம்பி, குரியே முதலிய சமூக அறிஞர்களும், சரித்திர வல்லுனர்களும் வேதகாலங்களில் பெண்களின் நிலை மேன்மையுற்றிருந்தது என்பதைச் சில ஆதாரங்களோடு விளக்குகின்றனர். ரிக் வேதத்தில் காணப்படும் சில பாடல்கள் அக்காலத்தில் வாழ்ந்த சில பெண்களால் இயற்றப்பட்டவை. இவ்வாறு பெண்கள் இயற்றிய பாடல்கள் இருபது ரிக்வேதத்தில் காணப்படுகின்றன. வேத காலத்தில் பெண்களும் ஆண்களைப் போன்று குருகுல வாசத்திற்கனுப்பப்பட்டு ஆண்களுக்கிணையாகக் கல்வி பயின்றனர். திருமணத்திற்கு முற்பட்ட கால கட்டத்தினை அவர்கள் அறிவை வளர்ப்பதற்கே பயன்படுத்தினர். மேலும், பெண்கள் தங்கள் மனதுக்கு இயைந்த கணவன்மார்களைத் தேர்ந்தெடுக்கும் உரிமையும் பெற்றிருந்தனர்.

## தொழில் துறையில் பெண்கள் நிலை:

பெண்கள் ஆண்களைப் போன்று விவசாயம், நெசவுத் தொழில், மட்பாண்டம் வனைதல் போன்ற தொழில்களிலும் ஈடுபட்டு ஆண்களுக்கிணையாகத் தொழிலில் பங்கு பெற்றனர். ஆண்களைப் போலவே வில், அம்பு போன்ற ஆயுதங்களைப் பயன்படுத்திப் போரிட்டன்ர. அவர்கள் ஆசிரியர்களாகவும், பாடகிகளாகவும், அதிகாரிகளாகவும் பணி புரிந்தனர். தாய்வழிப் பெயரையே சூட்டும் பழக்கம் இக்காலத்தில் பழக்கத்தில் இருந்தமை தாய் வழிச் சமூகம் அக்காலத்தில் இருந்தது என்பதற்குச் சான்றாக விளங்குகின்றது இவ்வாறான காரணங்களினால் பெண்கள் பல நிலைகளிலும் சிறந்து விளங்கினர்.

## சங்க இலக்கியங்களில் பெண்கள் நிலை

சங்க இலக்கியங்களும் பெண்களை ஆண்களுக்குச் சமமான நிலையில் காட்டவில்லை. அவை ஆண்களுக்கு என்று நில இயல்புகளையும் பெண்களுக்கென்று சில குணங்களையும், வரையறுத்துக் காட்டுகின்றன. வீரம் தலைமை தாங்கும் பண்பு முதலியவை ஆண்களுக்குரியவை என்று அவற்றை உயர்த்திக் காட்டுகின்றன. அதே சமயம் அச்சம், நாணம், மடம், பயிர்ப்பு என்பவை பெண்களுக்குரிய குணங்கள் என்று கூறிப் பெண்கள் இவற்றுடன் வாழ்வதே அவர்களுக்கு அழகு என்று வலியுறுத்துகின்றன. மேலும் சங்க இலக்கியங்கள் அகம், புறம் என்னும் இரு பெரும் பிரிவுகளில் அடங்கும். அகம் என்னும் பிரிவு வீட்டிற்கு உட்பகுதியிலும், வெளியிடங்களிலும் நிகழும் ஆண், பெண் உறவுகளான காதல், இல்லறம், ஊடல், பிரிவு, மக்களைப் பேணுதல், போன்ற பெண்களுக்கு முக்கியத்துவம் கொடுக்கும் பகுதிகள் விளக்கப்படுகின்றன. சங்க நூல்களும் அதன் பின்னர் தோன்றிய காப்பியங்களும் பெண்கள் கறவைத் தங்கள் தனிப் பெருங் குணமாகப் போற்றிக் கடைப்பிடிக்க வேண்டியதன் அவசியத்தையும் வலியுறுத்துகின்றன. கற்பு ஆண்களும், கடைப்பிடிக்க வேண்டுமென வலியுறுத்தவில்லை. ஆண்கள் எத்தனைப் பெண்களோடும் உறவு கொள்ளலாம். இவ்வாறு ஆண்கள் நடந்து கொள்வது அவர்களது தனியுரிமையாகவும் இதற்கு மேலாக அவர்களுக்குப் பெருமை அளிக்கும் செயலாகவும் கருதப்பட்டது.

## பெண்களின் நிலை வீழ்ச்சி:

காலம் செல்லச் செல்ல இந்தியப் பெண்களின் நிலை மேலும் வீழ்ச்சியுற்று அவர்கள் பல்வேறு கொடுமைகளுக்கும் ஆளாயினர். ஆனால் 19-ஆம் நூற்றாண்டில் இறுதிவரை நிலவிய இந்தியப் பெண்களின் சமூக நிலையுடன் ஒப்பிடும்பொழுது சங்க காலப் பெண்களின் நிலை ஓரளவு மேம்பட்டே இருந்தது. ஏனெனில் சங்க நூல்களில் காணப்படும் களவொழுக்கம் ஆதிகாலச் சமூகம் பெண்களுக்குத் தங்கள் வாழ்க்கைத் துணைவர்களைத் தேர்ந்தெடுக்கும் உரிமையை அளித்திருந்தது. பெண்கள் தங்கள் விருப்பத்திற்குப் பெற்றோர் உடன்படவில்லையெனில் தாங்கள் விரும்பிய ஆண்மகனுடன் உடன் போக்கு மேற்கொண்டு தங்கள் உரிமையை நிலை நாட்டவும் வலிமை பெற்றிருந்தனர். வீரத்திலும் சிறந்த தாய்மார்களைச் சங்க இலக்கியங்களில் காணலாம்.

**வீழ்ச்சிக்கு காரணம்:**

இந்தியாவில் ஏற்பட்ட பல்வேறு போர்களே இதற்கு ஒரு முக்கிய காரணம். இரு நாடுகளிடையே போர் நிகழ்ந்து முடிந்த பின்பு வெற்றி பெற்ற வேந்தனின் வீரர்கள் தங்கள் வெற்றிக்களிப்பின் ஒரு பகுதியாக தோல்வியுற்ற நாட்டு மன்னரைக் கைது செய்து இழிவு படுத்துவதும், அந்நாட்டுப் பொருட்களைச் சூறையாடுவதும் காலங்காலமாக வழக்கிலிருந்து வருகின்றன. இவை தவிர, தோல்வியுற்ற நாட்டு மன்னரின் மனைவியரையும், அந்நாட்டுப் பெண்களையும் கவர்ந்து சென்றும், கற்பழித்தும் இழிவு படுத்தினர். இதன்மூலம் அந்நாட்டை இழிவு படுத்துவதாகக் கருதினர். அடிக்கடிப் போர்களைச் சந்திக்க நேர்ந்தபொழுது அந்நாட்டுப் பெண்கள் வேற்றரசனால் இழிவு படுத்துவதற்கு முன்பாக உடன்கட்டை ஏறும் பழக்கத்தை மேறகொண்டனர். 4-ஆம் நூற்றாண்டில் இந்தியாவின் மீது படையெடுத்து வந்த அலெக்சாண்டர் என்னும் கிரேக்க அரசர் உடன்கட்டை ஏறும் பழக்கம் பஞ்சாப் மாநிலத்தில் நிகழ்ந்து வந்ததாகக் குறிப்பிடுகின்றார்.

பெண்கள் சுதந்திரமாக வாழ்ந்த நிலைமாறி ஒரு பெண் அவள் ஆயுட்காலம் முழுமையும் காக்கப்பட வேண்டியவள் என்ற கருத்து உருவாயிற்று இதை மனுநீதி போன்ற நூல்கள் ஒரு பெண் திருமணத்திற்குப் பின் அவள் கணவனாலும் முதுமைக்காலத்தில் அவளது மகனாலும் காப்பாற்றப்பட வேண்டியவள் என்று வலியுறுத்தின.

**பெண்களுக்கு இழைக்கப்பட்ட கொடுமைகள்:**

**பெண் சிசுக் கொலை:**

இந்தியாவின் பல பகுதிகளில் பெண் குழந்தைகள் பிறந்தவுடன் அவர்களைக் கொல்லும் பழக்கம் வழக்கில் இருந்தது. இக்கொடுமையைப் பெரும்பாலும்அக்குழந்தையின் உறவினர்களே புரிந்து வந்தனர். இப்பழக்கத்தை அவர்கள் கடைப்பிடித்து வந்ததால் அவர்களைக் கொடுமைக்காரர்கள் என்று எண்ணுவது தவறு. ஒரு பெண் குழந்தை பிறந்து, வளர்ந்து தன் வாழ்க்கையில் ஒவ்வொரு கட்டத்திலும் வெவ்வேறு விதமான துன்பங்களை அனுபவிப்பதற்கு மாறாக அவளைப் பிறந்தவுடன் கொன்று விடுவதே அவள் வாழ்க்கைப் பிரச்சினைக்குத் தீர்வாக அமையும் என்று கருதியே அவர்கள் இம்முறையைக் கடைப்பிடிக்கின்றனர். பெண்களின் வாழ்விற்கும், உயிருக்கும் இருந்த மதிப்பற்ற நிலைமையை இவ்வாறான வழக்கங்கள் கூறுகின்றன. பெண் சிசுக்கொலைகள் உத்திரப்பிரதேசம், பஞ்சாப், குஜராத், இராஜஸ்தான் முதலிய இடங்களில் அதிகமாக உள்ளது.

**இளவயதுத் திருமணம்:**

சங்க இலக்கியங்களின் அகத்துறைப்பாடல்கள் ஒரு காதலனும் , காதலியும் ஒருவரை ஒருவர் விரும்பிக் கருத்தொருமித்துத் திருமணம் புரிந்துகொண்டு இல்லறம் நடத்தியமையை விளக்குகின்றன. தலைவன் 16 வயதுடையவனாகவும், தலைவி 12 வயதுடையவளாகவும் இருந்ததை சிலப்பதிகாரம் கூறுகிறது. இந்நிலை காலப்போக்கில் மாற்றமடைந்து மணவாழ்க்கை என்றால் என்ன என்பதைக் கூட அறிய இயலாத இளம் பருவத்திலேயே ஆண்குழந்தைகளுக்கும் பெண் குழந்தைகளுக்கும் திருமணம் நடத்தி வைக்கும் பழக்கம் இந்தியாவின் பெரும்பாலான இடங்களில் வழக்கில் இருந்தது.

இளவயதுத் திருமணங்கள் ஆண், பெண் இருபாற் குழந்தைகளுக்கும் நடந்தாலும், இதனால் அதிகமாகப் பாதிக்கப்படுபவர்கள் பெண் குழந்தைகளேதிருமணம் ஆன பின்பும் ஆண் குழந்தைகள் வெளி உலகில் சுதந்திரமாகச் செயற்படவும், பின்பு சமூகப் பணிகளில் ஈடுபடவும் சுதந்திரம் இருந்தது. ஆயின் இள வயதிலேயே திருமணமான பெண் குழந்தைகள் கணவர் வீட்டிற்குச் சென்று குடும்பப் பொறுப்புகளைச் சுமந்து, குழந்தைகளைப் பெற்று தன் ஆசைகளை அடக்கி, அடங்கி ஒடுங்கி எல்லோருக்கும் கட்டுப்பட்டு, பணிவிடைகள் புரிந்து வாழும் வாழ்க்கைக்குத் தாய் வீட்டிலேயே இள வயது முதல் தயார் செய்யப்படுகின்றனர். மேலும் குடும்பங்களில் பெண்களின் உடல் வளர்ச்சி, தேக ஆரோக்கியம் முதலியவை அலட்சியப்படுத்தப்பட்டன. இதனால் இந்தியாவில் பெரும்பாலான பெண்கள் இரத்தச் சோகைக்கு ஆளாகியிருந்தனர். இவ்வாறான காரணங்களினால் பிள்ளைப்பேற்றின் பொழுது இறந்த பெண்களின் எண்ணிக்கை மிக அதிகமாக இருந்தது.

**பெண்களைத் தனிமைப்படுத்துதல்:**

பெண்களைத் தனிமைப்படுத்தும் வழக்கம் இந்தியாவின் எல்லா இடங்களிலும் கடைப்பிடிக்கப்பட்டு வந்தது. இது பெண்களை மற்றவர்கள் கண்களில் படாமல் பாதுகாத்து அவர்கள் புற வாழ்வில் ஈடுபடுவதைத் தடை செய்கின்றது. முகமதியர் வருகைக்குப்பின் பெண்கள் தங்கள் முகத்தையும் திரையிட்டு மறைக்கும் பர்தா/ முகத்திரையிடும் பழக்கம் பழக்கத்திற்கு வந்தது. பெண்ணும் அவள் கற்பும், ஆண்களால் பாதுகாக்கப்பட வேண்டியவை என்ற சமூக நியதி, பெண்களின் உலகம் வீட்டிற்கு உட்புறமும், ஆண்களின் உலகம் வீட்டிற்கு

உட்புறமும், ஆண்களின் உலகம் வீட்டிற்கு வெளிப்புறமும் ஆகும் என வரையறுத்தது. பெண்கள் வெளி உலக வாழ்வில் பங்கு கொள்வது அவர்கள் பாதுகாப்பிற்கு இடையூறு விளைவிக்கும் எனவும் கருதப்பட்டு அவர்கள் வீட்டினுள் அடைத்து வைக்கப்பட்டனர்.

### பெண்களுக்குக் கல்வி மறுக்கப்பட்டமை:

பெண்களின் உலகம் குடும்பமும் அதைச் சார்ந்த உலகமும்தான் என்ற வரையறை வலிமை பெற்றிருந்ததால், பெண்களுக்குக் கல்வியறிவு மறுக்கப்பட்டது. இளம் வயதிலேயே திருமணங்கள் நிகழ்ந்தமையால் பெண்களின் வாழ்க்கையில் குடும்ப வாழ்க்கைக்குரிய பயிற்சிகளைப் பெறுதே முக்கிய நோக்கமாக இருந்தது. பெண் வெளி உலகிற்கு சென்று கல்வியறிவு பெறுவது அவள் வாழ்க்கைக்குத் தேவையற்ற ஒன்றாகவும் இருந்தது. மேலும் பெண்களைத் தனிமைப்படுத்தும் வழக்கமும் அவர்களை வீட்டிற்குள்ளேயே அடைத்து வைக்கும் பழக்கமும் அவர்கள் வெளியிற் சென்று கல்வி பயிலத் தடையாக இருந்தன.

சமூக அமைப்பில் கல்வியறிவுள்ள பெண்களின் எண்ணிக்கை மிக மிகக் குறைவாகவே இருக்க முடியும். இந்தியாவின் முதல் சனத் தொகைக் கணக்கு 1871ல் எடுக்கப்பட்டது. அப்பொழுது கல்வியறிவு பெற்ற பெண்கள் 0.5 சதவிகிதமே இருந்தனர்.

### பலதாரமணம் :

ஒரு ஆண், பல பெண்களை மணக்கும் பழக்கமும் சமூகத்தில் நிலவியதொன்றாகும். இது பெண்களின் தாழ்ந்த சமூக நிலையையும் ஆதரவற்ற தன்மையையும் குறிக்கின்றது. ஒரு குடும்பத்தில் திருமணமாகிச் செல்லும் பெண் எந்தவகையிலாவது தனது கணவனது அல்லது தனது கணவனது பிற உறவினர்களது விருப்பத்திற்கு மாறாக நடந்தால். கணவன் தனக்கு விருப்பமான வகையில் எத்தனைப் பெண்களை வேண்டுமாயினும் மனைவியாக அடைந்து வாழ முடியும் வங்காளத்தில் . கூலின் அந்தனர்கள் நூற்றுக்கணக்கான பெண்களை மணந்தனர்.

### தேவதாசி முறை :

ஒழுக்கம் கற்பு என்னும் கருத்துக்களில் ஆணுக்கொரு நீதி, பெண்ணுக்கொரு நீதி என்ற ஒரு தலைப்பட்ட நீதி வழக்கிலிருப்பதை வெளிப்படையாகக் காட்டும் நிறுவனம் தேவதாசி முறையாகும். இது ஆண்களின் வசதிக்காகவும், அவர்களின் இச்சையை அவர்கள் விரும்பியபடி பூர்த்தி செய்யவும் ஏற்படுத்தப்பட்ட ஒரு திட்டமாகும்.

### கைம்மை நிலை:

இந்தியாவில் பெண்ணுக்கென்று தனியாக வாழ்வு கிடையாது. அவள் வாழ்விற்கு ஆதாரம் கணவனே. அதனால் கணவனை இழந்த பெண்கள் வாழத் தகுதியற்றவர்களாகக் கருதப்பட்டனர். அவர்கள் தங்கள் வாழ்வில் நல்ல ஆடைகளையோ, அணிகலன்களையோ அணியக் கூடாது. அவர்கள் உயிர் வாழத் தேவையான அளவுதான் உணவு உட்கொள்ள வேண்டும். பல உணவு வகைகளை அவர்கள் உண்பது தடை செய்யப்பட்டது. அவர்கள் மகிழ்ச்சியூட்டும் நிகழ்ச்சிகளில் கலந்து கொள்ளக்கூடாது. அவ்வாறான மங்கல நிகழ்ச்சிகளில் அவர்கள் அமங்கலப் பொருட்களாகக் கருதப்பட்டு விலக்கி வைக்கப்பட்டனர். அவர்கள் வாழ்வின் இன்பங்கள் அனைத்தையும் துறந்து மற்றவர்களின் ஆதரவில் பிழைப்பு நடத்த வேண்டிய நிலைமைக்கு உள்ளாயினர்.

### உடன்கட்டை ஏறுதல்:

கணவனை இழந்த பின்பு இவ்வாறான கைம்பெண்டிர் வாழ்க்கைக் கொடுமைகளை அனுபவிக்காது தப்புவதற்கு ஒரு வழிமுறையும் சமூகத்தில் வழக்கில் இருந்தது. அது கணவன் இறந்த பின்பு அவனுடன் உடன்கட்டை ஏறுவதாகும். பெரும்பாலான பெண்கள் இவ்வாறான கைம்மை வாழ்வு வாழ்வதைவிட உடன்கட்டை ஏறி வெந்து மடிவதே மேல் என முடிவு செய்து உடன்கட்டை ஏறத் துணிந்தனர். இவ்வாறு விதவைகள் உடன்கட்டை ஏறுவது அக்குடும்பத்து ஆண்மக்கள் அப்பெண்களின் கற்பைப் பாதுகாத்து அவர்களை ஆயுள் முழுவதும் ஆதரிக்கும் பொறுப்பிலிருந்தும் விடுவிக்கின்றது.

உடன்கட்டை ஏறும் பெண் நேராகச் சொர்க்கலோகம் புகுவாள் என்றும், கடவுளாக மதிக்கவும் வணங்கவும் படுவாள் என்றும் பெண்கள் நம்பினர். இவ்வாறு பெண்கள் நேரடியாகவும், மறைமுகமாகவும் உடன்கட்டை ஏறுமாறு வலியுறுத்தப்பட்டனர்.

### முடிவுரை:

இவ்வாறான கொடுமைகள் பெண்களின் உடலுக்கும் உள்ளத்திற்கும் அறிவுக்கும் கொடுக்கப்பட்ட தாழ்வான மதிப்பையே காட்டுகின்றன. மேலும் அவர்களை மனிதர்கள் என்று மதிக்காத சமூக நிலையைக் காட்டுகின்றன.

# கதாயுதங்களில் பெண்ணியமும் தலித்தியமும்

*பா.கவிதா*,எம்.ஏ.,எம்.பில்., தமிழ்த்துறை விரிவுரையாளர்,

சிதம்பரம்பிள்ளை மகளிர் கல்லூரி, மண்ணச்சநல்லூர், திருச்சி – 621 005.

பெண்களின் சிந்தனைகளை, செயல்பாடுகளை நேரடியாகக் கூறவல்லது இலக்கியங்கள். திரைப்படம், விளம்பரங்கள், சிறுகதை போன்றவை பெண்களின் செயல்பாடுகளை மறைமுகமாக எடுத்துரைக்கின்றன. பெண்களைப் பற்றி சித்தரிக்காத சிறுகதைகளே இல்லை. பெண்களை மையமிட்டுப் பலவகையான படைப்புகள் தோன்றினும் ஆண்கள் பெண்களை சரிநிகர் சமானமாகக் கருதவில்லை. போகப் பொருளாகவும், அடிமைகளாகவும், பெண்களை நடத்துகின்றனர். பெண்களே பெண்களை அடிமைப்படுத்தும் நிலையும், தாழ்த்தப்பட்ட பெண்களை அடிமைப்படுத்தும் நிலைகளையும் கதாயுதங்கள் சிறுகதை ஆய்கிறது.

## கிராமப் பெண்களின் அவலம்:

அரசாங்கத்தில் பணிபுரியும் ஆண்கள் அரசாங்கம் வழங்கும், அத்தியாவசமான பொருள்களைக் கிராம மக்களுக்கு வழங்காமல், வறுமையில் வாழும் பெண்களை மிகக் கீழ்தரமாக நடத்துகின்றனர் என்பதை பிரதீபா ராஜகோபாலன் *தீயில் எதுவும் வேகும்* எனும் சிறுகதையில் விளக்குகிறார்.

கால் வயிறு கஞ்சி குடிச்சே இவ்வளவு லொள்ளுன்னா ஆற்காடு கிச்சடிச் சோறு தின்னியன்னா எவ்வளவு லொள்ளு இருக்கும்.

சரித்தான் போங்கடி ஒரு வாய்க்கஞ்சியை ஏழு நக்கு நக்கறவங்களுக்கு மரியாதை என்னடி வேணும்.

(கதா. பக் – 15 : 16)

வறுமையில் வாழும் பெண்களை ஆண் சமூகம் எவ்வாறு நடத்துகின்றது என்பதை இச்சிறுகதை வரிகள் மெய்ப்பிக்கிறது.

## அலுவலகப் பெண்களின் அவலம்

பெண்கள் கல்லூரியில் முதல்வராகப் பணிபுரியும் தாட்சாயினி மற்ற பெண்களின் மன உணர்வுகளை சிதைத்து உரிமைகளைப் பறித்து அவர்களின் அடிப்படைத் தேவைகளை அறிந்து கொள்ளாது தன்னுடைய அதிகாரத்தை வெளிப்படுத்துகிறார். அந்தக் கொடுமையை பொறுத்துக் கொள்ளாத பெண்கள் போராட்டக்களத்தில் இறங்குகின்றனர். பெண்களே பெண்களுக்கு எதிரிகளாக வாழ்ந்து வருகின்றனர் என்பதை இந்துவரதன் *தாட்சாயினி* சிறுகதையில் வெளிப்படுத்தியுள்ளார்.

பச்சிளம் உடம்பான லதா தன் பிஞ்சுக் குழந்தையை நினைத்து ஜீவ அமுதமான தாய்ப்பாலினை குழந்தைக்கு ஊட்ட முடியவில்லை என்ற மன வேதனையில் வாடுகிறாள். பாலூட்ட முடியாமையால் தன் உடலில் உண்டான வலியினைத் தன் மனத்திற்குள்ளே நினைத்து.

மூன்று மாதம் முடிமையிலேயே கடுமையான சோதனை
சோதனை ஜீவ அமுதத்தை பிழிந்துவிட வேண்டியது
தான் அந்தரங்கமான இடத்தை தேடி செல்ல
தண்ணீரில்லா லேவட்டரி தவிர வேறு இடமில்லை
அதற்கு குட்டிச் சுவர் மேல் என்று நினைத்து சென்றாள் லதா. (கதாயும். பக். 64)

நேத்திலிருந்து புரொபஸர் ரோஜாராணி பெரிய கூடையில் அஞ்சு லிட்டர் கேன்ல தண்ணீர்

கொண்டாறாங்க. நான் கூட அவுங்க துறையில் ஏதோ விருந்து போல, எலுமிச்சைபழம் ஜூஸ் கொண்டாறாங்கனு செனைச்சேன் ஆனா அது லெட்ரின் போறத்துக்குக் கொண்டார தண்ணீனு பின்னாலதான் தெரிஞ்சுது.

பெண்கள் பணிபுரியும் கல்லூரியில் அடிப்படை வசதிகள் இல்லாமையால் அவர்கள் இன்னலுக்கு ஆட்படுகின்ற நிலையினை மேல் உள்ள சிறுகதை வரிகள் தெளிவுப்படுத்துகின்றன.

பெண்களே பெண்களுக்குத் தடைக் கற்களாக உள்ளனர் என்பதை சிறுகதையின் வழி அறியமுடிகிறது.

## தலித் பெண்களின் அவலம்:

தாழ்த்தப்பட்ட மக்களின் துயர் நிலையை எடுத்துரைக்கும் படைப்புகள் தலித்தியம், தாழ்த்தப்பட்ட இனமான குருவன் என்பனை முதலாளித்துவம் அடிமைப்படுத்தி அவன் மீது தவறான குற்றத்தை சுமத்தி அவனது மனைவி குருவக்காவை காவல் நிலையத்தில் பச்சிலம் குழந்தையுடன் அடைத்து துன்புறுத்துவதை பற்றி, கொட்டடி, கொட்டடி குருவக்கா எனும் சிறுகதையில் வேலராமமூர்த்தி எடுத்துரைத்துள்ளார்.

குருவக்காவை காவலர்கள் காவல் நிலையத்துக்கு அழைத்துச் சென்றனர். அவளது நிலையை நினைத்து ஊர் மக்கள் அஞ்சுகின்றனர்.

ரெண்டு பொழுதா போலீஸ் டேசன்ல இருக்கிற குருவக்காவைக் கெடுத்திப்பானங்களோ, புலம்பியபடி இருந்த பெண்களை போங்க கழுதைகளா என விரட்டியும், மண்டிக் கொண்டு வந்தனர். குருவக்க சின்ன வயசுப்புள்ளே அடிபட்டு கிடக்கும் குஞ்சுக்காக கரைந்து கொண்டே காக்கைகள் பறப்பதைப் போல் போலீஸ் ஸ்டேசனைச் சுற்றி வந்தனர். (கதாயுதம். பக். 86)

ஆண்களின் ஆதிக்க உணர்வு, ஒழுக்கக் கேடான செயல்களினால் கீழ் இன மக்களுக்கு இவ்வாறான கொடுமைகள் ஏற்படுவது உண்டு. நடந்து விடுமோ கீழ் இன மக்களுக்கு இழைக்கப்படும் கொடுமைகளை இக்கதை தெளிவாக காட்டுகிறது.

பெண்ணுக்குப் பெண் எதிரியாக இருப்பினும் அவ்ளையும் அழிக்க வேண்டும். பெண்களின் பிரச்சனைகளைத் தீர்க்க பெண்கள் போராட்டக் களத்தில் இறங்குதல் வேண்டும்.

அச்சம் கொண்டிருக்கும் வரைதான் ஆண்கள் வீழ்த்துவார்கள். பெண்கள் துணிந்து நின்றால் புறம்காட்டி ஓடிருவர்.

ஒற்றுமை இருந்தால் உண்டு வாழ்வு யாவரும் கூடி வாழ்ந்தால் தாழ்ந்தோர், உயர்ந்தோர் என்ற பாகுபாடு தோன்றாது.

மனிதர்களிடையே சமத்துவம் என்றாலே அது ஆண்-பெண் சமத்துவத்தையும் உள்ளடக்கியதுதான். ஆண், பெண் வேற்றுமை அகன்றால் தான் பொற்காலம் இனிதாகும் எனக்கருத்துக் கொண்டிருந்தான் மேலை நாட்டுக் கவிஞன் ஷெல்லி இக்கூற்றை அனைவரும் பின்பற்றினால் மனித நேயம் வளரும் என்பதில் ஐயம் இல்லை.

## துணைநூற்பட்டியல்


1. கதாயுதங்கள்
2. இலக்கியத்தில் மனித உரிமைகள் 4. 69.

# இக்கால இலக்கியங்களில் கிராமப்புற பெண்ணியம்

*நீ.வ. கருப்புச்சாமி,* விரிவுரையாளர், தமிழ்த்துறை,
கோபி கலை அறிவியல் கல்லூரி, கோபி - 638 453.

## தோற்றுவாய் :

ஆணுக்குப் பெண் நிகர் என்ற பாரதியின் பாட்டு அன்று ஏற்புடையவை. இன்றைய சூழ்நிலையிலும் தொழில்களிலும் தொழில் செய்யும் இடங்களிலும் ஏற்படும் பிரச்சினைகள் உடல்ரீதியாகப் பாதி, மனரீதியாக மறுபாதியும் ஏற்படுகின்றன. இன்றைய இலக்கியங்களில் பெண்களின் துன்பத்தையும், இன்பத்தையும் சரிபாதியாகப் பார்க்காமல் வேறுபட்ட கண்ணோட்டத்தில் படைக்கும் படைப்பாளிகள் உண்டு. சில படைப்பாளிகள் ஆண்களின் துன்பத்தையும், இன்பத்தையும் மிகைப்படுத்தி பார்க்கும் போக்கு நிலவிவருகின்றன.இந்தியாவில் ஆறு லட்சம் கிராமங்களில் பெண்கள் வாழ்கிறார்கள். கிராமங்களில் இந்தியாவின் பொருளாதாரம் உள்ளது. நாட்டுப்புறப் பெண்களின் உடல் உழைப்பே இந்தியப் பொருளாதார வளர்ச்சிக்கு உறுதுணையாக இருக்கின்றது. சமூகத்தில் உடல்நலம் - மனநலம் பாதுகாக்கப்படுகிற பொழுதுதான் பொருளாதார உயர்வு காணமுடியும். இல்லையெனில் என்ன செய்யலாம்? என்பது குறித்த சிந்தனையே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

## இலக்கியங்களில் கூறப்படும் பெண்கள் பிரிவுகள் :

கிராமப்புறப் பெண்களைப் பிரித்துப் பார்த்தால் வயது அடிப்படையில் இளையவர், நடுத்தர வயதினர், முதியவர் என்றும், கல்வியின் அடிப்படையில் படித்தவர், படிக்காதவர் என்றும், குடும்பத்தின் அடிப்படையில் - பெண் முதலில் தந்தைக்கும், திருமணத்திற்குப் பிறகு பெண் கணவனுக்கும், முதியவர் ஆன காலத்தில் மகனுக்கும் அடிமை எனப் பகுக்கலாம்.காப்பியங்களில் கதைத் தலைவர்களை மிகைப்படுத்திப் பார்க்கும் போக்கு நிலவிவருகின்றன. அதனை இலக்கியத் திறனாய்வாளர்கள் ஆண்; பெண் என்று வேறுபடுத்தாமல் சமநிலையில் திறனாய்வுக் கட்டுரைகள் படைக்க வேண்டும்.பொருளாதார அடிப்படையில் இருப்பவர்கள் - இல்லாதவர் என்றும், தொழில் அடிப்படையில் வேலைக்குச் செல்வோர் - வீட்டில் இருப்போர் என்று சிறுகதை, புதினம் இலக்கியங்களில் பாத்திரங்களைப் படைத்துள்ளனர். இன்றைய எழுத்தாளர்களில் சூரியகாந்தன், தமிழ்நாடன், சிவசங்கரி, கௌதம சித்தார்த்தன், சு.சண்முகசுந்தரம், பார்த்தசாரதி படைப்புகளில் இப்பகுப்பை அறியலாம். இன்றைய சிறுகதை, புதினம் இவற்றில் ஆண்களை உயர்வுப்படுத்தியும், பெண்களை இழிவுப் படுத்தியும் படைப்பதைத் தவிர்க்கலாம்.

## நாட்டுப்புறப் பெண்களின் மனநிலை:

நம்பிக்கை அதிகம் உள்ள இடமாகத் திகழ்வது கிராமம். குறிப்பாக கிராமப்புறப் பெண்கள் நம்பிக்கையில் பெரும்பங்கு வகிப்பது, காத்து - கருப்பு, தலைவிரித்தாடும் பேயோட்டும் நிகழ்ச்சி, கிராமப்புறப் பெண்களின் மத்தியில் நிகழக் காணலாம். சில நாட்டுப்புற ஆசிரியர்கள் அவற்றைப் படம் பிடித்துக் காட்டுகிறார்கள். ஆண்கள் பேயாடுவதில்லை. அவர்களுக்குப் பேய் பிடிப்பதில்லை. மேல் தட்டுப் பெண்கள் பேயாடுவதில்லை. கிராமத்து அறியாமை பெண்களை மட்டும் ஆட்டிப் படைக்கிறது. இதற்குக் காரணம் கிராமத்துக் குடும்பங்களில் பெண்கள் கருத்துக்களை வெளிப்படையாக உரத்தக்குரலில் எடுத்துக்கூறினால், அவளுக்கு கிருக்கி என முத்திரை குத்திவிடுகின்றனர். இது தவிர்க்கப்பட வேண்டிய ஒன்றாக உள்ளது. மேலும், தாய், தந்தை இறந்துவிட்டால் பெண் தனக்கு வேண்டிய பொருட்களைக்கூட வாங்க முடியாத அவலநிலை உள்ளது. அதை நாட்டுப்புறப் பாடல்களில் காணலாம்.

இன்னைக்கு
வடக்கே மதுரையிலே, வடமதுரைப் பேட்டையிலே
வளைய வளையலுன்னு, வளையக்கார செட்டிமகெ - நான்

வடக்கே நடைநீக்கி, வடவறமா தாழ்வாங்கி"- இந்த
வளைவெலை கேட்கமுடி - அந்த
வளையக்கார செட்டிமகென் - உன்னை
வளத்தும் ஐயன் எங்கேன்னு - என்னை
வளத்தும் ஐயன் போய்ச் சேர்ந்து - வகுகாலம் ஆச்சுதுன்னு - அந்த
வளையக்கார செட்டிமகள், வளையலெடுத்து சிட்டு
வருதூரம் போய் நடந்தேன் - நான்
வளைய வளையலுன்னு
அன்னி மருகறேனே, அருங்கிளியா வாடுறனே

சீர்வரிசை குறைச்சல் இல்லாமல் இருக்கவேண்டும் என்றும், பெண் நல்ல நிலையில் வாழ வேண்டும் என்றும் சீர்கொடுத்து அனுப்பினார்.

என்னென்ன சீதனங்கள் எங்கள் இளங்கொடிக்கு
தங்க பணிவிடையாம் தந்தார்கள் தானும் அங்கே
உட்கார்ந்து மோர்கடைய முக்காலி பொன்னாலயாம்
பிடித்து இருந்து பால் கறக்க பிடிகயிறு பொன்னாலயாம்

பஞ்சத்தில் பெற்றுச்சென்ற சீர் வரிசைகள் அனைத்தும் இழந்துவிட்டாள், தாய் வீடு போவோம் என்று வருகிறாள். தாய்வீட்டின் நிலை பயனற்ற நிலைமையில் உள்ளது.

தாய் வீட்டைத் தேடியங்கே தங்காளும் வாராள்
வாரதைக் கண்டாள் அங்கே மூளி அலங்காரியாம்
மூதேவி சண்டாளியாம் மூளி அவள் என்ன செய்தாள்
ஈரமண் கொண்டுவந்து இறுக்கிக் கதவடைத்தாள்

இதனை நாட்டுப்புற கதைப்பாடலில் காணலாம்.

கிராமப்புறப் பெண்களின் பொருளாதார நிலை :

பெண்களை உடைமைகளாகக் கருதும் கிராம சமூகத்தில் பெண்களுக்கு உடைமை என்பது பண்டம், பாத்திரம், துணிமணிகளாக இருக்க இயலும். இந்த நிலையில் தற்சார்பு என்பது கிராமப்புறப் பெண்களின் வாழ்க்கைக்கு மாறுபட்டு எட்டாத பாத்திரங்கள் இருக்க வாய்ப்பே இல்லை. விதவைப் பெண்கள் தங்கள் குழந்தைகளின் படிப்பைத் தொடர்ந்து படிக்க இயலாத நிலை, கணவனின் தம்பி, அண்ணன் சொத்தை வைத்துக் கொள்வதும் உண்டு.

மச்ச மச்சா நெல்விளையும்
மகுடச்சம்பா போர் ஏறும் - நான்
மச்சாண்டார் கையாலே கூலி வாங்கித்தின்னும்
மாபாவி ஆனேன்

கணவன் இல்லாததால் ஏற்பட்ட சூழ்நிலையை நாட்டுப்புறப்பாடல் எடுத்துக்காட்டுகிறது.

## கிராமப்புறப் பெண்களின் கொடுமைகள் :

பெண்களின் திருமணம் பெரும்பாலும் 18-20 வயதிற்குள் நடக்கிறது. சிசுக்கொலைகளைத் தடுக்க தனிப்பட்ட திட்டம் மேம்படுத்தப்பட வேண்டும். பெண்களிடம் குழந்தைகளின் சுகாதாரம் குறித்த கல்வி மேம்படுத்தப்பட வேண்டும். சில ஆண்கள் பெண்களை உதைத்துக் கொடுமைகள் செய்வதைக் காணலாம். தினசரி கூலி வேலை செய்யும் குடும்பங்களில் பெண்களை அடிப்பதைத் தொழிலாகக் கொண்டு உள்ள இன்றைய படைப்பாளிகளும் உண்டு. இன்றைய புள்ளிவிபரங்களின்படி தாழ்த்தப்பட்ட சமூகத்தில் 100 வீடுகளில் - 80 வீடுகளில் சண்டைகள். நடுத்தரக் குடும்பங்களில் 100 வீடுகளில் - 50 வீடுகளில் வரதட்சணைக் கொடுமைகள். மேல்தட்டு மக்களிடம் - 100 வீடுகளில் - 90 வீடுகளில் வரதட்சணைக் கொடுமைகள் நிலவுகின்றன. இதனை,

திருமணங்கள் சொர்க்கத்தில் நிச்சயிக்கப்படுவதில்லை

ரொக்கத்திலும், பவுனிலும் நிச்சயிக்கப்படுகின்றன - என்று வரதட்சணைக் கொடுமை பற்றி கவிஞர் சித்தரித்துக் காட்டுகிறார். மேலும், உறவுமுறை சிதைவுகள் ஏற்படுகின்றன.

என்னுடைய பாவி குறைகேட்டு, பாவி குறைகேட்டு
பாவைக்கனி தின்னாமே, பாவைக்கனி தின்னாமே - இந்த
பச்சமரத்தில் பறவையெல்லாம்
பதறி யழுதுன்னு இப்ப ....

இதனை வருத்தி அழும் நிலை நாட்டுப்புறப்பாடல் உள்ளதைப்போல இக்கால இலக்கியங்களில் வெளிப்படையாக படம்பிடித்துக காட்டுகிறது.

## பெண்ணியம் :

கம்போடியாவில் கிராமப்புறத்தில் உள்ள 35% வீடுகளில் பெண்கள்தான் குடும்பத்தை தலைமைதாங்கி நடத்துகின்றனர். அதுபோல் நம் நாட்டில் வளர்ச்சி அடையவேண்டும். ஆசியாவிலும், ஆப்பிரிக்காவிலும், ஆண்களைவிட ப் பெண்களே அதிகமான அளவில் விவசாயப் பணிகளில் ஈடுபடுகின்றனர். இந்தியாவில் கிராமப்புற பெண்களின் கனவுகள் சினிமாவை நோக்கியும், நகரங்களை நோக்கியும், திசை திருப்பப்படுகின்றன. மேலும், பணம், பதவி, புகழ் இருந்தால் எதையும் சாதிக்கலாம் என்ற நம்பிக்கையை மாற்றி உழைப்பின் உயர்வை வெளிப்படுத்திக் காட்ட வேண்டும்.

நாளையப்பொழுது நல்ல பொழுதாக வேண்டும் - என
நம்பிக்கை கொள்வாயடா, தன்னம்பிக்கை கொள்வாயடா

என்ற கண்ணதாசன் பாடல் நினைவில் மலர வேண்டும். விதவைப் பெண்களின் நிலை மாறவேண்டும்.

வாடாத பூப்போன்ற மங்கை நல்லாள்
மணவாளன் இறந்தபின் மணந்தால் தீதோ

புரட்சிக்கவிஞர் மெய்ப்பிக்கும் பெண்களை கிராமப்புறத்தில் தோற்றுவிக்க வேண்டும்.

## எதிர்காலத்தில் பெண்களின் நிலை

நலத்திட்டங்களைப் பெற்றுக் கொள்பவர்களாக மட்டும் பெண்களைப் பார்க்காமல் நாட்டின் வளர்ச்சிக்கும், சமூக மாற்றத்திற்கும் காரணமான பிரதிநிதிகளாக அவர்களை உருவாக்க வேண்டும்.

கடந்த 10 ஆண்டுகளில் அடிப்படைக் கல்விபெற்ற பெண்களில் 85% பேர் உயர்கல்விக்குள் நுழையவேண்டும். முன்புள்ளதை மாற்றி அமைக்க வேண்டும்.

பெண்ணை ஒரு மனுஷியாகத் தனித்துவம் உள்ளவளாகவும், சுய கௌரவம் காப்பவளாகவும், எதிர்வரும் குடும்பப் பிரச்சினைகளை எதிர்நின்று சமாளிப்பவளாகவும், கல்வியும், வேலைவாய்ப்பும் பெற்றவளாக வளர்ப்பதும், இன்றைய உலகத்திற்கு வெளிப்படுத்திக் காட்டப்பட வேண்டும்.

புதிய திட்டம் குறித்து பல பெண்களுக்கும் விழிப்புணர்வு இல்லை. இதனால் பல பெண்களுக்கு போய்சேர வேண்டிய திட்டம் சிலருடைய கையில் அகப்பட்டு கைநழுவிப் போய்விடுகிறது. எல்லோருக்கும் எல்லாத் திட்டமும் கிடைக்கும்படிச் செய்ய வேண்டும்.

இத்திட்டங்களை இன்றைய இலக்கியங்களில் கருப்பொருளாகக் கொண்டு படைத்தால் பெண்ணியம் வளரும் என்பதில் ஐயமில்லை.

# பவளக்கொடி நாடகங்களில் பெண்ணியம்

*கோவி.கருணாகரன்* முனைவர் பட்ட ஆய்வாளர்,
தமிழ் உயராய்வு மையம், யாதவர் கல்லூரி, மதுரை.

நாடகம் எளிதில் மக்களைச் சென்றடையும் ஊடகமாகும். அத்தகைய சிறப்புமிக்க நாடகங்கள் வாயிலாகப் பெண்ணியக் கருத்துக்களை ஒப்பீடாய்வு முறையில் விளக்குவதே இக்கட்டுரையின் நோக்கமாகும். புகழேந்திப்புலவர் எழுதிய பவளக்கொடி மாலையை மீட்டுவாக்கம் செய்த சங்கரதாஸ் சுவாமிகள் அவர் காலத்திற்கேற்றாற் போல் மாற்றி பவளக்கொடி சரித்திரம் என நாடகமாக எழுதியுள்ளார். இன்றைய நாடக ஆய்வாளரும் பாண்டிச்சேரிப் பல்கலைக்கழக நாடகத்துறைப் பேராசிரியருமான கே.ஏ.குணசேகரன், சங்கரதாஸ் சுவாமிகள் எழுதிய பவளக்கொடியிலிருந்து ஓரிரு பகுதிகளை மட்டும் எடுத்துக் கொண்டு, இன்றைய நாடகக் கலைஞர்களின் சிக்கல்களுடன் தைத்து பவளக்கொடி அல்லது குடும்ப வழக்கு என நவீன காலத்திற்கு ஏற்றாற்போல் நாடகத்தை மாற்றியமைத்துள்ளார். இவ்ஆய்வில் சங்கரதாஸ் சுவாமிகள் பவளக்கொடியிலும், கே.ஏ.குணசேகரன் பவளக்கொடியிலும் உள்ள பெண்ணிக் கருத்துக்களை மட்டும் ஒப்பாய்வு முறையில் இக்கட்டுரை ஆராய்கிறது. கட்டுரையை சுவைஞர்கள் எளிதில் சுவைக்கும் வண்ணம் இரு நாடகங்களின் கதைச் சுருக்கங்கள் கீழே தரப்பட்டுள்ளன.

### சங்கரதாஸ் சுவாமிகளின் நாடகக் கதைச் சுருக்கம்

புகழேந்திப் புலவர் எழுதிய பவளக்கொடியை உள்ளதை உள்ளபடியே சுவாமிகள் கூறியதால், தம் நாடகத்திற்குப் பவளக்கொடி சரித்திரம் எனப் பெயரிட்டார். ஆனால் இன்றைய சங்கரதாஸ் சுவாமிகள் நாடகக் குழுவினர் பவளக்கொடி என்றே அழைத்து வருகின்றனர். அந்நாடகத்தின் சுருக்கம்,

மதுரையை ஆளும் அல்லியின் மகன் புலந்திரன் பவளதேர் வேண்டுமென்று அடம்பிடிக்கின்றான். யாராலும் எளிதில் கொண்டுவர முடியாதப் பவளத்தை, கணவன் அர்ச்சுனனே கொண்டுவரமுடியும் என அல்லி தீர்மானிக்கிறாள். அனால் ஒரு வருடத்திற்கு ஒரு முறை வந்து செல்வேன் எனக் கூறிய அர்ச்சுனனோ வரவில்லை. கோபம் கொண்ட அல்லி, மகன் புலந்திரனுக்கு “ஜன்னி” கண்டிருப்பதாகத் தர்மருக்கு லிகிதம் எழுதுகிறாள். அர்ச்சுனனை வரவழைக்கத் தர்மர் தனக்குப் பாக்குச் சொச்கேறியதாகப் பறையறிவிக்கச் செய்கிறான். தர்மரின் நலன் கண்ட அர்ச்சுனன், புலந்திரனுக்கு “ஜன்னி” கண்டிருப்பதாக அறிகிறான். கிருஷ்ணன் உதவியோடு அல்லியைச் சந்திக்கிறான். மகனுக்குப் பவளம் தேடச் சென்றவிடத்தில் பவளக்கொடியாளையும் மணக்கிறான். எட்டு தினத்திற்குள் வராத அர்ச்சுனனைத் தேடி அல்லி, சுபத்திரை, தர்மர், பிமன், நகுலன், சகாதேவன் ஆகியோர் பவளக்காட்டிற்கு வருகின்றனர். அல்லி, கிருஷ்ணனால் சமாதானம் அடைந்தாள். பின்பு புலந்திரன் பவளரதம் ஓட்டுவதுடன் நாடகம் நிறைவடைகிறத.

### கே.ஏ.குணசேகரன் நாடகக் கதை சுருக்கம்

பவளக்கொடி அல்லது குடும்ப வழக்கு என்னும் இந்நாடகம் ஒன்று புராணக்கதையாகவும் மற்றொன்று நாடக நடிகர்களின் குடும்பக் கதையாகவும் பிரிந்து செல்கின்றது. ஒன்று ஒப்பனை அறைக்காட்சி என்றும் மற்றொன்று புராணக்காட்சி என்றும் இருதள நாடகமாக மாறிமாறிப் பின்னப்பட்டுள்ளது. ஒப்பனையறையில் ஆர்மோனியக்காரர், தரகர், அல்லிவேடம் (செண்பகம்) பூண்டாள், கோமாளி (மந்திரி) தாளக்காரர் ஆகியோர் தங்களுக்குள்ளே குடும்பச் சண்டைபோல் முணுமுணுக்கின்றனர். புராணக் காட்சியில் புலந்திரன் பவளம் கேட்கிறான். அல்லிராணி தர்மருக்கு லிகிதம் எழுதுகிறாள். லிகிதம் கண்ட தர்மர், அர்ச்சுனனை வரவழைப்பதற்குத் தனக்கு பாக்கு சொக்கேறியதாகப் பறையறிவிக்கச் செய்கிறார். அடுத்த காட்சியில் ஒப்பனையறையில் தரகர் காமஇச்சை கொண்டு செண்பகத்தின் தங்கை சுபத்திரையைக் கட்டித்தரச்சொல்லி துன்புறுத்துகிறான். எந்த கிருஷண்ன் வந்தாலும் காப்பாற்ற முடியாது எனச் செண்பகத்தை மிரட்டுகிறான் தரகர். புராணக்காட்சியில் கிருஷ்ணன் உதவியால் அர்ச்சுனன் பெண்வேடம் போட்டு பவளக்கொடியாளின் அழகை ரசிக்கின்றான். பின்பு அடுத்த காட்சியில் அர்ச்சுனன் இறந்ததாகப் பாசாங்கு செய்ய, அவன் மனைவிமார்களான அல்லி, பவளக்கொடி, சுபத்திரை, நாகக் கன்னி, பாஞ்சாலி, மின்னல் ஒளி ஆகியோர் சகக்கிழத்தி சண்டையிட்டு அர்ச்சுனன் உடலுக்குச் சொந்தம் கொண்டாடுகின்றனர். இறுதியில் அல்லிராணி, கிருஷ்ணனையும்

அர்ச்சுனனையும் விரட்டுகிறாள். இருவரும் தலைதெறிக்க ஓடுகின்றனர். இத்துடன் நாடகம் முடிகிறது.

### சங்கரதாஸ் சுவாமிகள் பவளக்கொடியில் பெண்ணியம்

பெண்ணியம் என்பது தனக்குரிய அடையாளத்தையும் சமூகத்தில் தனக்குரிய இடத்தையும் பெறுவது பற்றி பேசுவனவாகும். சமூகத்தில் பெண்ணினத்தின் நிலைப்பாட்டையும் அதில் ஏற்பட வேண்டிய அடிப்படை மாற்றங்களையும் பெண்ணியம் வலியுறுத்துகின்றது எனலாம்.

அவ்வகையில் சங்கரதாஸ் சுவாமிகள், தம் பவளக்கொடியில், அல்லிராணி என்பவளை மதுரையின் அரசியாகவும், அல்லியின் பெயரைச் சொன்னால் அனைவருக்கும் நடுங்குவர் என்ற உயரியப் பாத்திரமாகப் படைத்துள்ளார். இதன் மூலம் பெண்ணிற்கு ஆட்சி ஆளும் உரிமையும் வீரமும் வேண்டுமெனக் கருதினார் போலும். பெண்ணை முதன்மைப்படுத்தக் கருதி, நாடகத்திற்குள் வரும் பெண்ணின் பாத்திரத்துப் பெயரையே நாடகத் தலைப்பாக்கியிருக்கிறார் என்றால் உண்மையிலேயே அவர் துணிச்சலைப் பாராட்ட வேண்டும். ஏனெனில் அக்காலத்தில் பெண்ணடிமைக் கொடுமைத் தலைவிரித்தாடியது. பழமையின் பிடிப்பு போகாத காரணத்தால் சங்கரதாஸ் சுவாமிகள் பெண்ணடிமையையும் கூறியுள்ளார். அர்ச்சுனனுக்கு மூன்று மனைவியரைப் (அல்லி, சுபத்திரை, பவளக்கொடி) படைத்து அவர்களை மணப்பதற்கும், சமாதானத்திற்கும் கிருஷ்ணன் துணை போவதாக அமைத்திருப்பது கண்டிக்கத்தக்கதாகும். மனைவிக்குத் தெரியாமல் கணவன் பல மனைவியரை வைத்துக் கொண்டாலும் அதை மனைவி சகித்துக் கொண்டு அவனோடு இணைந்து வாழ்வதே பெண்களுக்கான பண்பாகும் என்ற கருத்தை சங்கரதாஸ் சுவாமிகள் தம் நாடகத்தின் முடிவான பாடமாக வைத்துப் பின்னப்பட்டிருப்பது பெண்ணிற்கு எதிரான கருத்தாகத் தெரிகிறது.

### கே.ஏ.குணசேகரன் பவளக்கொடியில் பெண்ணியம்

கே.ஏ.குணசேகரன் பவளக்கொடி நாடகம் முழுக்க முழுக்கப் பெண்ணிய நாடகமாகும். நாடகத் தளத்தில் பெண்களுக்கு ஏற்படுகின்ற கொடுமைகளை இந்நாடகம் சித்திரிக்கின்றது. ஆகையால் தான் பாதிக்கப்பட்டவர்களே தங்கள் அனுபவங்களை அழுத்தமாகச் சொல்லும் வண்ணம் நாடகத்தின் அனைத்துப் பாத்திரங்களும் பெண்களே ஏற்று நடித்துள்ளனர் எனலாம். தொடர்ந்து பல மனைவியரை மணந்த ஒவ்வொரு மனைவியிடமும் தன்னை ஏகபத்தினிவிரதனாக காட்டிக் கொண்ட அர்ச்சுனனை மடிவில் எல்லா மனைவியரும் ஒன்று சேர்ந்து தண்டிப்பதாக உள்ளது. பெண்களுக்குரிய சிக்கல்களை பெண்களே எதிர்த்துப்போராட வேண்டும் என்பது கே.ஏ.குணசேகரன் தம் பவளக்கொடி நாடகத்தில் உணர்த்தும் முதன்மைச் செய்தியாகும். கிருஷ்ணன் பல மனைவியரை மணப்பதற்குத் தணை போகின்றான். அதனால் இறுதியில் கிருஷ்ணன் தண்டிக்கப்படுகிறான். கடவுளேயானாலும் துரோகம் இழைக்கும் ஒருவனுக்குத் துணைபோனால் அந்தக் கடவுளையும் தண்டிக்க வேண்டும் என்று நாடக முடிவு உணர்த்துகிறது. ஒரு மனிதன் (அர்ச்சுனன்) பல மனைவியரை வைத்திருப்பது தகாது என்ற அறம் இந்நாடகத்தில் அழுத்தமாக வலியுறுத்தப்படுகிறது.

### இருவர் பவளக்கொடியிலும் உள்ள பெண்ணியம் - ஒப்பீடு

சங்கரதாஸ் சுவாமிகள் பவளக்கொடி, கே.ஏ.குணசேகரன் பவளக்கொடி ஆகிய இருநாடகங்களில் உள்ள பெண்ணிக் கருத்துக்கள் மட்டும் இங்கு ஒப்பிட்டு ஆராயப்படுகிறது.

“வற்புறுத்திப் பெண்ணைக் கட்டிக்கொடுக்கும்
வழக்கத்தைத் தள்ளி மிதித்திடுவோம்” (பாரதியார் கவிதைகள், ப.263)

எனப் பாரதியார் கூறுகின்றார். அதுபோல் தன்மனைவியை விடுத்து (தரகர்) மனைவியின் தங்கை (சுபத்திரை) மீது தீக்கண்ணோட்டம் கொள்வது அதனைவிட மோசமானதாகும் இச்செயல் கண்டிக்கத்தக்கதாகும்.

சங்கரதாஸ் சுவாமிகள் தமிழ் மரபையும் மீறி பெண்ணியம் பேசியுள்ளார். பவளக்கொடியாள், அர்ச்சுனனை, என்துரையே கலவி செய்ய வாருங்கள் (ப.85) என வெளிப்படையாக அழைப்பது, பெண் என்பவள் தன் உணர்வுகளைக் கணவனுடன் வெளிப்படையாகப் பகிர்ந்து கொள்ளலாம் என்பதை உணர்த்துகிறது. இது மரபுமீறிய செயல் என்றாலும் பெண்ணின் உணர்வுகளுக்கு முக்கியத்துவம் கொடுத்துள்ள சுவாமிகளின் செயலைப் போற்றலாம்.

*சுவாமிகள் ஓரிடத்தில் அசுத்தமான மாதர் கர்ப்பத்தில் பிறவாது, இந்தப் பவளக் கொடியில் பிறந்தவனா?*

அவர் (ப.53) எனக் கூறுமிடத்தில் மாதரின் தன்மையை இழிவுப்படுத்துகிறார் எனலாம். மாதர் தம்மை இழிவு செய்யும் மடமையைக் கொளுத்துவோம் என்ற பாரதியின் வரி இங்கு நினைவுகூறத்தக்கது. ஆனால் கே.ஏ.குணசேகரன் பெண்ணிற்கு ஏற்படும் சிக்கல்களைக் காட்டி அவர்களுக்கு தண்டனை வழங்கிவிடுகிறார்.

சுவாமிகள் நாடகத்தில், மூன்று மனைவியரை மணப்பதற்குக் கிருஷ்ணன் தணைபோவதாக் காட்டுவது பழமைப் போக்கில் பெண்ணடிமையை நியாயப்படுத்துகிறார் எனலாம். கே.ஏ.குணசேகரன் பல மனைவியரை மணந்து அர்ச்சுனனை அவன் மனைவிமார்களே எதிர்த்துப் போராடுவதாகப் படைத்துள்ளார். ஓர் ஆண் மகன் பல மனைவியரை மணந்த வாழலாம். சகக்கிழத்தியரான மனைவியர் தங்களுக்குள் ஒற்றுமையாய் இருந்து, கட்டிய கணவனோடு சேர்ந்து வாழ வேண்டும் என்ற பழமை வாதத்தை சங்கரதாஸ் சுவாமிகளின் பவளக்கொடி முடிவான பாடமாக உணர்த்துகிறது. அனால் கே.ஏ.குணசேகரனின் நாடகம் இதை மறுதலிக்கிறது.

மகாபாரதக் கிருஷ்ண்ணனைப் போலவே சுவாமிகளின் பவளக்கொடி கிருஷ்ணனும் பல சூழ்ச்சிகள் செய்வதாகப் படைக்கப்பட்டுள்ளான். மேலும் அர்ச்சுனனின் பெண் மோகத் தவறுகளுக்குக் கிருஷ்ணன் துணைபோகின்றான். அத்தகைய கிருஷ்ணனை ஆபத்பந்தவனாகவும் வணக்கத்திற்குரியவனாகவும் படைக்கிறார் சுவாமிகள். ஆனால் கே.ஏ.குணசேகரனின் பவளக்கொடியில் கிருஷ்ணன் இறுதியில் அர்ச்சுனனின் மனைவிமார்களால் ஓடஓட விரட்டப்படுகின்றான்.

### பெண்ணியமும் மாங்கல்யமும்

கே.ஏ.குணசேகரன் நாடகத்தில் அல்லி தன் கணவன் அர்ச்சுனனை ஏற்க மறுக்கிற போது கிருஷ்ணன் "மாங்கல்ய தாரணஞ் செய்த மணவாளன் பிழை செய்தால், மனைவி பொறுத்துக் கொள்வதே விரதா தர்மம்" என்று வாதிடுகிறான். கோமாளி குறுக்கிட்டு,

> "போட்டாண்டா ஒரு போடு மாங்கல்யம் இந்த
> மாங்கல்யத்தை வச்சுக்கிட்ட எவ்வளவு தில்லு, முல்லு, பித்தலாட்டம்
> ஆம்பிளைப் பயலுக செய்யுறானுக (வாயில் அடித்தவாறு) தமிழ்ச்
> சினிமாக்காரனுக மாங்கல்யத்தை வச்சுக்கிட்டு எவ்வளவு
> கிறுக்குத் தனமாகப் பெண்களை அடிமைப்படுத்துற கதைகளைப்
> பண்ணறானுக" (ப.39)

என்று பேசுவது, மாங்கல்யம் என்ற பெயரில் பெண்களை ஏமாற்றும் நயவஞ்சகர்களைக் கோமாளி என்ற பாத்திரம் தோலுரித்துக்காட்டுவதாக உள்ளது. சங்கரதாஸ் சுவாமிகள் நாடகத்தில் வருடத்திற்கொருமுறை வந்து போவதாகச் "சத்தியம்" செய்து விட்டு சென்ற அர்ச்சுனன் வரவில்லை. அல்லி இதனால் கோபமாய் இருக்கிறாள் மகனுக்கு "ஜன்னி" என்றதும் மகனைக்காண வருகின்றான் அர்ச்சுனன், அப்போது அல்லி அவனிடம் பேசாமல் மறுதலிக்கிறாள். அப்போது அர்ச்சுணன், "தாலி" கட்டிய கணவன் நான் வந்திருக்கேன் எனத் தாலியைக் குறியீடாய் காட்டி உரிமை கோருகிறான் அர்ச்சுனன், இவ்வாறு தாலி என்பது பெண்களுக்கு இடும் அடிமைச் சங்கிலியாகத்தான் இருந்திருக்கிறது. தாலி கட்டிவிட்டால் எங்கும் சென்றுவிட்ட எப்பொழுதும் வரலாம் என்று நினைக்கின்றனர் ஆண் சமூகத்தினர். இது கண்டிக்கத்தக்கதாகும். கே.ஏ.குணசேகரன் நாடகத்தில் இப்போக்கை கோமாளிப்பாத்திரம் மூலம் கண்டிக்கின்றார். ஆனால் சுவாமிகள் நாடகத்தில் கண்டிப்பதைவிடுத்த அப்போக்குக்கு கிருஷ்ணன் துணைபோவதாகவே உள்ளது.

### முடிவுகள்

சங்கரதாஸ் சுவாமிகள் நாடகத்தில் அவர்காலத்தில் உள்ள நிலையினைப் பதிவு செய்கின்றார். இருப்பினும் ஓரிரு இடங்களில் பெண்மையைப் போற்றுகின்றார். அனால் கே.ஏ.குணசேகரன் நவீன காலத்தின் தேவைகருதி முழுக்க முழுக்கப் பெண்ணிற்காக வாதாடும் நிலையினையே பார்க்க முடிகின்றத. பெண்களுக்கு ஏற்படும் அநீதிகளான பலதாரமணம், பழமையில் போற்றி பெண்ணடிமை செய்தல் போன்றவைகளை பெண்களே நின்று போராட வேண்டும் என்பது கே.ஏ.குணசேகரனின் கருத்தாகக் கொள்ளலாம்.

# ஜோதிர்லதா கிரிஜா முன்வைக்கும் பெண்ணியச் சிந்தனைகள்

முனைவர். *சி. காந்தி*, தமிழ் - விரிவுரையாளர்,
தேசியக் கல்லூரி, திருச்சி - 1.

தமிழ் எழுத்தாளர்களுள் குறிப்பிடத்தக்கவர்களில் ஜோதிர்லதா கிரிஜாவும் ஒருவர். இவர் எழுதியுள்ள சிறுகதைகளின் மைய நிகழ்வுகள் சமூகத் தளத்தை அடிப்படையாகக் கொண்டு இயங்குபவை. இவரது சிறுகதைகளில் "கோபுரக்கலசம்", "ஒரு சின்ன வீடு பெரிய வீடு ஆகிறது", "அம்மாவின் அந்தரங்கம்", "அடிபட்ட புலிகள்", "கடிதம் கிழிந்தது" ஆகிய சிறுகதைகளில் காணப்பெறும் பெண்ணியச் சிந்தனைகள் குறித்த செய்திகளை வெளிப்படுத்திக் காட்டுவதாக இக்கட்டுரை அமைகிறது.

சமூகக் கட்டமைப்பு என்பது பெண்ணியச் சிந்தனையாளர்களுக்கு ஓர் அடிமைச் சிறையாகவே தோன்றுகிறது. அதற்குள் சுயசிந்தனையற்ற நிலையில் இருக்கும் பெண்களுக்கு விழிப்புணர்வு ஏற்படுத்தி சுயமதிப்பு மிக்கவர்களாக அவர்களை ஆக்குவதே பெண்ணியச் சிந்தனையின் முனைப்பாக உள்ளது. இப்பெண்ணியம் குறித்து அறிஞர்கள் பலரும் விளக்கங்களைத் தருகின்றனர்.

ரோஸலிண்ட் டெல்மார் என்பவர் " பெண்களின் நிலையை மாற்றுகின்ற இயக்கம்"( A Movement of Change in the Position of Women ) என்று பெண்ணியம் குறித்துக் கருத்து கூறுகின்றார். பெண்ணியம் என்பது பெண்களுக்கான உரிமைகளைப் பெற்றுத் தருவது மட்டுமல்ல சமூகத்தையே மாற்றியமைக்க முயல்வதாகும் என்கிறார் சார்லட் பன்ச்.வழிவழியாகத் தொடர்ந்து வரும் ஆணாதிக்க ஆளுகையிலிருந்து வெளியேறி தனித்துவம் பெறத்துடிக்கும் முயற்சிக்கு உதவும் ஒரு போராட்டக் கருவியாகவே பெண்ணியம் என்ற கருத்தியல் இன்று புரிந்து கொள்ளப்படுகிறது. திருமணம், கற்பு, ஒழுக்கம் என்று சமூகம் வலியுறுத்துகின்ற விழுமங்கள், பெண்களைப் பொறுத்த வரையில் விலங்குகளாகவும் மாறிப்போகின்றன.

பெண்களின் உடல் சார்ந்தும் உளவியல் சார்ந்தும் பாலியல் சார்ந்தும் ஒடுக்கு முறைகள் பல வகையிலும் நிகழ்த்தப்படுகின்றன. இவ்வாறான ஒடுக்கு முறைகளை எதிர்ப்பதோடு தனித்த மதிப்பீடு சார்ந்த உரிமை பெற்ற வாழ்க்கையை வென்றெடுக்க பெண்ணியக் கருத்தியல் முன்மொழிகிறது.

இது போன்ற பெண்ணியம் தொடர்பான சில பதிவுகளை ஜோதிர்லதா கிரிஜாவின் சிறுகதைகளில் காண முடிகிறது. "கோபுரகலசம்" என்ற கதையில் ஒரு எழுத்தாளனாக இராஜசிம்மன் என்பவன் காட்டப் பெறுகிறான். தன் எழுத்துக்களின் மூலம் ஒரு சீரிய முற்போக்குச் சிந்தனையாளனாகத் தன்னை அடையாளப் படுத்திக் கொள்கின்றான். இவன் எழுத்துக்களின் மீதும் சிந்தனைகளின் மீதும் பெரும் மதிப்புக் கொண்ட வாசகி ஒருத்தி இருக்கிறாள். எழுத்தாளனோ தம் சொந்த வாழ்க்கையில் பிற்போக்குத் தன்மையைக் கொண்டவனாக சுரண்டல் சமூகத்தின் ஓர் அசலான பிரதிநிதியாக இருக்கிறான். தன் திருமணத்திற்கு வரதட்சணை வாங்குபவனாகவும், பெண்வீட்டாரிடமிருந்து பொருட்களை அதிகம் எதிர்பார்ப்பவனாகவும் இருக்கின்றான். இதை அறிகின்ற அவனுடைய வாசகி "படிப்பது ராமாயணம், இடிப்பது கோவிலா? உள்ளத்தில் உண்மை இல்லாதவர்களின் எழுச்சிக்கு இப்படி ஒரு வன்மை எப்படி வந்தது? சொந்த வாழ்க்கையில் நேர்மையாக நடக்க முடியாதவர்களுக்கு ஊரைத் திருத்த என்ன உரிமை இருக்கிறது" என்று குமுறுகிறாள்.

பெண்கள் முன்னேற்றத்திற்குப் பாடுபடுகின்றோம் என்று சொல்லித் திரிகின்ற போலி வேடதாரிகளை ஆசிரியர் இப்படி தோலுரித்துக் காட்டுகிறார். கபடத்தையும் பாசாங்கையும் கொண்டுள்ளவர்களை அடையாளம் கண்டு கொள்கின்ற அளவிற்குப் பெண்கள் அறிவும் ஆற்றலும் பெற்றுவிட்டர்கள் என்பதை இக்கதையின் மூலம் ஆசிரியர் காட்டுகிறார். "ஒரு சின்ன வீடு பெரிய வீடாகிறது" என்ற சிறுகதையிலும் வரதட்சணை என்ற பிரச்சனைப் பேசப்படுகின்றது. இக்கதையில் வரும் மங்களத்தம்மாள் தன் மகனுக்குப் பெண் பார்க்கிறாள். தனக்குக் கீழ் படிந்து நடக்க வேண்டும் என்பதற்காகப் படிக்காத பெண்ணாகப் பார்க்கிறாள். அந்த வகையில் கவிதா என்பவள் மருமகளாக வாய்க்கிறாள். ஆனால் மங்களத்தம்மாள் எதிர்பார்த்ததற்கு மாறாறக கவிதா தன்னுடைய சுயமதிப்பையும் உரிமையையும் நிலைநாட்டிக் கொள்பவளாக மாமியாரின் அடக்கு முறையை எதிர்ப்பவளாக இருக்கிறாள். மாமியார் மருமகள் பூசல் முற்றுகிறது.

வரதட்சணை வாங்காது திருமணம் முடித்துக் கொண்டதை மாமியார் சாதகமாக எடுத்துக்கொண்டு மருமகளைத் தூற்றத் தொடங்குகிறாள். கவிதர் அதற்குக் கடுமையான எதிர்ப்பைத் தெரிவிக்கிறாள். "வரதட்சணை வாங்காததைச் சொல்லிச் சொல்லிக் காட்டலைன்னா உங்க இரண்டு பேருக்கும் தூக்கம் வராதே"

என்று மாமியாரையும் கணவனையும் கவிதா சாடுகிறாள். "கல்யாணம்னு ஆகி மருமகளை வீட்டுக்குக் கூட்டிக்கிட்டுவந்தா எம்புட்டு வரதட்சணை வாங்கினீங்கனு நாலு பேரு கேட்கத்தான் செய்வாங்க" என்ற மாமியாரின் வார்த்தைகளைச் சமூகம் கூறுகிற சொத்தை வாதம் என கவிதா ஒதுக்கித் தள்ளுகிறாள்.

"அம்மாவின் அந்தரங்கம்" என்ற சிறுகதையில் பெண்கள் மீது ஆண்கள் எளிதில் ஐயம் கொள்கின்ற நிலைக்குக் கண்டனம் தெரிவிக்கப்படுகிறது. ரமணன் என்பவன் தன் மகன் குள்ளமாகவும், அழகில்லாமலும் பிறந்ததற்கு மனைவி மீது சந்தேகம் கொள்கின்றான். இதனால் குடும்ப வாழ்க்கை துயரமிக்கதாக மாறிவிடுகிறது. அவனின் மனைவி துன்பங்களைப் பொறுத்துக் கொண்டு வாழ்கிறாள். கணவனோடு பேசாமல் தனது மறுப்பையும் புறக்கணிப்பையும் தெரிவிக்கின்றாள். குழந்தை இப்படிப் பிறந்ததற்குக் காரணம் மரபுக்கூறுதான் என்று நிரூபித்துக் காட்டுகிறாள். "என்னை இந்த அளவுக்கு கொடுமைப்படுத்துற உங்களுக்கு தண்டனை என்ன தெரியுமா? தன் குழந்தை இல்லைங்கிற நினைப்பாலே வர்ற எரிச்சலும் அருவருப்புந்தான் அந்த எரிச்சலியே காலம் முழுக்கக் கழியட்டும்" என்று ரமணின் சந்தேக புத்திக்குச் சாட்டையடி கொடுக்கிறாள்.

"அடிபட்ட புலிகள்" எனும் சிறுகதையில் ராகவன் என்பவன் வத்சலா. கங்கா ஆகிய இரண்டு பெண்களையும் ஏமாற்றி திருமணம் செய்து கொள்கிறான். இரண்டு பெண்களுமே அவனால் பாதிக்கப்படுகின்றனர். வத்சலா திருமணம் கங்காவுக்குத் தெரியாது. சிறிது காலத்திற்குப் பிறகு வத்சலா ராகவனைத் தேடி வரும்போது கங்காவைச் சந்திக்கிறாள். அப்போது இருவரும் ராகவனால் தாங்கள் ஏமாற்றப்பட்டதை உணர்ந்து கொள்கின்றனர். இருவரும் ஒன்று சேர்ந்து ராகவனைத் துரத்தியடிக்கின்றனர்.

"அந்தக் காலத்துப் பெண்கள் இப்படிப்பட்ட புருஷனை வெறுத்தால் கூட அதனை வெளியே சொல்ல அஞ்சினார்கள். ஆனால் இப்போது அப்படி இல்லை. இனிமேல் ஆண்பிள்ளை ஏமாற்ற முடியாது. அவள் இப்போது ஓரளவுக்குத்தான் மௌனம் சாதிக்கிறாள். அத்துமீறிப் போனால் பதில் பேசி விடுகிறாள். வாயைத் திறந்து நியாயம் கேட்கிறார்கள்" என்று பெண்கள் தங்களை நிலைநிறுத்திக் கொள்கின்ற முயற்சியை இக்கதையின் மூலம் ஆசிரியர் காட்டுகிறார்.

திருமணம் என்பது முழுக்கவும் பொருளாதாரம் சார்ந்தே தீர்மானிக்கப் பெறுகிற அவலத்தைக் "கடிதம் கிழிந்தது" என்ற சிறுகதையின் மூலம் ஆசிரியர் வெளிப்படுத்துகிறார். ராமநாதன் தன்மகனுக்குப் பெண் பார்க்கிறார். கறுப்பு நிறமுடையவள் என்பதற்காகக் காயத்ரி என்ற பெண்ணை மறுக்கின்றார். அவரது வார்த்தைகள் காயத்ரியைப் புண்படுத்துகின்றன. பிறகு காயத்ரியின் தந்தை அதிகப் பணம் கொடுப்பதாகக் கூறியவுடன் காயத்ரியைத் தன் மகனுக்கு மணம் முடிக்க சம்மதிக்கின்றார். ஆனால் பொருளைப் கொடுத்து தனக்குரிய வாழ்வைப் பெற காயத்ரி சம்மதிக்கவில்லை. தனது மறுப்பை இப்படி தெரிவிக்கிறாள் "உம்மைப் போன்ற பணப் பிசாசுக்கு வாழ்க்கைப் படுவதை விட நிஜப் பிசாசுக்கு வாழ்க்கைப் படுவதே மேலென்று நான் நினைக்கிறேன். உம்மை மணக்க நான் தயாராக இல்லை. உம்மை மணக்கப்போகும் பெண்ணை ஆண்டவன் காப்பற்றட்டும்" என்கிறாள். சுயமதிப்போடு தன் வாழ்வைத் தீர்மானித்துக் கொள்கிற போராடும் பெண்களின் ஒரு பிரதிநிதியாகக் காயத்ரியை இக்கதையில் ஆசிரியர் படைத்துள்ளார்.

பாலியல் உறவுகளில் ஏற்படும் சிக்கலால் உடல் ரீதியாகவும் உளரீதியாகவும் அதிகம் பாதிப்புக்கு உள்ளாவது பெண்களேயாவர். தனது உடலைத் தொட்டுவிட்டவன் என்பதற்காக மன விருப்பமின்றியே அவனோடு வாழ்ந்து தீர்க்கிற அவலங்கள் இங்கு உண்டு. சமூகத்தின் பொதுப்புத்தியில் இது ஒரு நியாயமாகவே பதிந்துள்ளது. இப்படிப்பட்ட பெண்களின் மனவாதைகளைச் சமூகம் கணக்கில் எடுத்துக்கொள்வதில்லை. சமூக மனம் என்பதே ஆணாதிக்க மனப்பான்மையாக இருக்கும் போது பெண்களுக்குரிய நியாயத்தை எதிர்பார்ப்பதற்கில்லை. பெண்ணியச் சிந்தனை இவற்றையெல்லாம் முன்வைத்துப் போராடுகின்ற மன உறுதியைப் பெண்களுக்கு இன்று அளித்துள்ளது. இது போன்ற நிகழ்வை "அடிபட்ட புலி" என்ற கதையில் ஆசிரியர் சித்தரித்துள்ளார்.

இராகவன் வத்சலாவிடம் திருமண ஆசை காட்டி அவளது உடலை அடைந்து விடுகிறான். அவளை ஏமாற்றிவிட்டு அவன் கங்கா என்பவளைத் திருமணம் செய்து கொள்கிறான். பிறகு அவனது வஞ்சத்தை இரண்டு பெண்களுமே அறிந்து கொண்டு ஒன்று சேர்ந்து அவனை விரட்டியடிக்கின்றனர். மரபான பண்புகளில் ஊறிச் சக்களத்திச் சண்டை என்ற நிலைக்கு வராமல் பெண்களே பரஸ்பரம் தங்களுக்குரிய சிக்கல்களைப் புரிந்து கொண்டு செயல்படுவது. அவர்களை அறிவு ரீதியாகவும், உணர்வுரீதியாகவும் முதிர்ச்சி பெற்றவர்களாகக் காட்டுகிறது. இவ்வாறு பெண்களை அறிவிலும், பண்பிலும், செயல்பாடுகளிலும், ஆளுமையிலும் தனித்துவம் மிக்கவர்களாக, தற்சார்பு பெற்றவர்களாக ஆசிரியர் காட்டுவது, பெண்கள் முன்னேற்றத்தில் அவருக்குள்ள அக்கறையைக் காட்டுகிறது.

# பச்சை தேவதையின் பெண்ணியச் சிந்தனைகள்

*முனைவர். வ. கிருஷ்ணன்,* தமிழ் விரிவுரையாளர்,
அரசு கலைக்கல்லூரி உடுமலைப்பேட்டை

## முன்னுரை

பெண் படைப்பாளர்களில் சல்மாவின் கவிதைகள் குறிப்பிடத்தகுந்த இடம் வகிப்பவை. கவிஞரின் கவிதைகள் தட்டையான ஒரு தளத்தில் மட்டுமே அமைவதில்லை. பெண்ணின் தனிப்பட்ட உலகினை தெள்ளத் தெளிவாக எடுத்துரைக்கின்றன. ஒரு மாலையும் இன்னொரு மாலையும் தொகுப்பின் மூலம் பரவலான அடையாளம் பெற்ற கவிஞரின் இரண்டாவது தொகுப்பான "பச்சை தேவதை"யில் காணலாகும். பெண்ணியச் சிந்தனைகளைச் சுட்டிக்காட்டுவதை நோக்கமாகக் கொண்டு இக்கட்டுரை அமைகிறது.

## பெண்ணின் நிலை

சமுதாயத்தின் பாதிப் பகுதியாக இருப்பவள் பெண். தாய்வழிச் சமூகம் அடங்கி தந்தை வழிச் சமூகம் உருப்பெற்றவுடன் பெண் ஆணுக்குள் அடக்கப்பட்டாள். அடங்கி நிற்கவும் கற்பிக்கப்பட்டாள் கற்றுக்கொண்டாள். பொறுமையின் சிகரமாகவும் எதையும் தாங்கும் சுமை தாங்கியாகவும் வடிவெடுத்தாள். தன்னுடைய கையசைவில் இயங்குபவளாகவும் ஆடவரால் மாற்றப் பெற்றாள். இத்தகைய பெண் இன்றைய சமுதாயத்தில் உலவுவதைக் காண இயலும். இதனைக் கவிஞரின் ஏரி என்ற தலைப்பிலான கவிதை,

ஏங்கிக் கருமையுற்ற முகத்தோடு/ஏரி சலனமற்றிருக்கிறது
சில நாட்களுக்கு முன்/தயக்கமின்றி உன்னிடமிருந்து/காலியான மதுக்கோப்பைகளை
விட்டெறிந்திருந்தாய்..../....../நேற்றுக்கூடக்/கசந்து போன நம் உறவினை
இகழ்ந்து எச்சில் துப்பினாய்/தண்ணீரில்/எந்தக் காலமென்றில்லாமல்
எல்லாக் காலங்களிலும்/உன் கழிவுகளைக் கொட்டி/உன்னைக் சுத்தப்படுத்தியிருக்கிறாய்
இன்று இதில் எதையும்/நினைவுறுத்தாது/உன் தாகம் தணிக்கத் தயாராகிறாய்

என்று (ப.39) உருவகப்படுத்திக்காட்டுகிறது. ஆணின் செயல்கள் அனைத்தையும் ஏற்று பொறுமையாக தாங்கிக்கொள்ளும் பெண்ணின் நிலையினையே புலப்படுத்துவதாகக் கவிதை அமைகிறது. ஏரி என்பது சலனமற்றுத் தேங்கிய நீர்ப்பரப்பை மட்டும் குறிக்காது இந்தக் குணநலன்களுடனான ஆக்கப்பட்ட பெண்ணைக்குறிக்கின்றது.இன்னின்னவாறு இவ்விவ் வகையில் பெண் இருத்தல் வேண்டும் என்பது பலகாலும் சொல்லிச் வார்க்கப்பட்ட பெண் இதனின்றும் மீறாதவளாய் இருக்கிறாள். தன்னைப் பற்றி எண்ணாததான் வளர நினைக்காத பெண்ணை ஆதிக்கச் சமுதாயமான ஆணாதிக்கச் சமுதாயம் வரவேற்கிறது. இந்த வகையிலான பெண்ணை,

நீ கொண்டு வந்த பூச்செடிகள்/தொட்டியில் நடப்பட்டு/நீருற்றிய பின்னும்
தலைசாய்த்துக் கொண்டிருக்கின்றன/எப்பொழுதும் அது/தன் தோட்டத்து வெளியை விட்டு
வருவதில்லை/தன்னை இங்கு/ஊன்றிக் கொள்கிற ஒரு வேரை
வெளிப்படுத்துகின்றன./என்ற கவிதை (ப.15) குறிப்பிடுகின்றது. தன்நிலை தனக்கே தெரியாத போது அல்லது அறியப்படாத நிலையில் இயற்கையாக இயல்பானதொரு நிகழ்வு மூலம் தன் நிலையினைத் தெரிந்து கொள்ளல் வேண்டும்.

இருளில்/மிதிபட்டு நசுங்கிக்/கூழாகிய கரப்பானின் தசையை
இரவெல்லாம் உருவிய எறும்புகள்/விட்டுச்சென்றிருக்கின்றன
மேலெழவியலாத சிறகுகளையும்/வேண்டியிராத குச்சிக்கால்களையும்
வெகுநூதனமாய்/என்னை எனக்குக் காட்டவென/ என்ற கவிதை (ப.76) தன்னையறிதலைப்பற்றியதாக அமைகிறது. தன்னையறிதல் நிகழ்ந்தால் மட்டுமே தான் இருக்குமிடம் அறியப்படும். தன்னுடைய இருத்தல் உறுதி செய்யப்படாத போது நிலைத்து நிற்றல் என்பது இயலாத ஒன்றாகப் போய்விடும். தன்னை இனங்காட்டுவதாகவோ, இருத்தலை உறுதிசெய்யக் கூடியதாகவோ, இருத்தலை வெளிப்படுத்திக் கொண்டால்தான் பெண்ணின் இருப்பு பெரிதும் பேசப்படும். அங்ஙனம் இல்லையெனில் அவள் ஓர் உயிரற்ற சடப்பொருளாகவே கருதப்படுவாள் என்பதைக் கவிஞரின் உள்ளக்கருத்தாகப் பெறப்படுகிறது.

## ஆதிக்கத்தின் தாக்குதல்

பெண்ணிற்கு உண்டாகும் சிக்கல்கள், துயரங்கள், ஒடுக்குமுறைகள் முதலானவற்றிற்குப் பெரிதும் காரணமாக இருக்கும் நபர் ஆணாகத்தான் இருப்பான். தனக்கு உட்பட்டவள், அடங்கி இருப்பவள் என்று கருதுகிற மனநிலை-பெண்ணின் மீது ஆதிக்கம் செலுத்துகின்ற ஆணாதிக்கச் சிந்தனையில் பெண்படுகிற துயர் ஏராளம். இத்துயர் தனிப்பட்ட வகையில் ஒரு பெண்ணை மட்டும் பாதிப்பதில்லை. அடுத்த தலைமுறையையும் தாக்குகின்றது. இதனை,

விபச்சாரியின் மறைவிடங்களில்/பதுங்கித் திரிபவளென்கிற
உன் கற்பனைகளைக் கேட்டபடி/இங்கேதானிருந்து கொண்டிருக்கிறேன்.
என் நண்பனொருவனின் அடையாளம் சொல்லி/இவன் உங்கள் தகப்பனையும்
தன் குழந்தைகளைக்கொன்ற தாய்க்கு/என் சாயல்கள் அதிகமெனவும்
நம் குழந்தைகளுக்கு நீ சொல்கையில்/பிடிபடுகிறது
உன் ஆதிக்கவெளியில் எல்லை/என்னோடு மட்டும் முடிவதில்லை/என

என்ற கவிதையில் (ப.18) சல்மா கூறுகின்றார். முடிந்தவரை ஒரு பெண்ணை இழித்தும், பழித்தும் கூறுவதோடு அமையாமல் அடுத்த தலைமுறைவரை பெண்ணைக் கேவலப்படுத்துகிற ஆணாதிக்கத்தின் தாக்குதல் தடுக்கப்படவேண்டும். இத்தகைய குரலைத் தம் கவிதையில் கவிஞர் எழுப்புகிறார்.சகிப்புத்தன்மை மனிதனுக்கு இருக்கவேண்டிய நற்குணங்களுள் ஒன்று குறிப்பிட்ட எல்லைக்கு உட்பட்டு சகிப்புத்தன்மை இருக்கும்போது அதன் பயன் நல்லமுறையில் அமையும். எல்லை மீறிய நிலையில் சகிப்பத்தன்மையால் எந்தவிதப் பயனும் கிட்டாது. தனக்கே ஆபத்தினையும் உண்டாக்கலாம். இக்கருத்துக்களை

கடும் பசியுடன்/நான் அருந்தவிருந்த உணவில்
மிதந்து நெளிகிறது புழு/அதனை விலக்கிச்
சாப்பிடப் பழகினாலும்/தினமும் ஊர்ந்து வருகிறது என்னை நோக்கி
தன் சாதுவான தோற்றத்துடன்/இன்று நான் அதனைச் சகிக்கக்
கற்றுக்கொண்டிருக்கிறேன்/பிறகு வந்த காலங்களில்
அது வளர்ந்து உருமாறி/அட்டைப் பூச்சியாய்
என் மீதேறி ஊர்ந்து கொண்டிருக்கிறது/தன் உணவை என் உடலிலிருந்தே
உறிஞ்சியபடி/என் குரல்வளையைப் பற்றும்/சாத்தியங்களுடன்

என்னை அச்சுறுத்தியபடி/என்ற (ப.44) கவிதையடிகளில் கவிஞர் குறிப்பிடுகின்றார். சாதுவான தோற்றத்தில் நெளியும் புழு ஆணாதிக்கத்தைக் குறிக்கும் குறியீடு, சாதாரண புழு, அட்டையாக மாறி குரல்வளையை பெண்ணை நெருக்குதலுக்கு உள்ளாக்குகிறது. ஆணாதிக்கச் சிந்தனையை அதன் தோற்றத்தை வைத்து எளிமையான ஒன்றென ஒதுக்கிவிடக்கூடாது. அஃது நாளடைவில் ஆளையே பெண்ணையே தாக்கும் கூராயுதமாகிவிடும் என்ற செய்தியினை கவிதைப்பகுதி தாங்கி நிற்கின்றது.பெண்ணின் விருப்பம் அறியாமல் தனது ஆளுகைக்குக்குள் உட்படுத்துகிற ஆணாதிக்கம் பெண்ணையும் அவளது உணர்வுகளையும் மதிப்பதில்லை. இதனால் துன்பத்தில் ஆழ்வது பெண் மட்டுமே இதனை,

பிசுபிசுக்கிற இரவை/உலர்த்தி மடிக்கிறது சுவாசம்/பாதி இரவில் ஒரு மிருகமென
என்னை அடித்து வீழ்த்திக்கொண்டிருக்கிறது/உனக்கான இந்தக்காமம்/பிறகது
ஒரு புகைச்சதித்திரமாய்/இருளின் வர்ணங்களில் கூடி/நிரம்புகிறது
நிலவொளி/நனைத்துக்கொண்டிருக்கிறது/பிறகு பெய்த மழையையும்

எனது காதலையும்/என்ற (ப.62) கவிதையடிகள் சுட்டியுரைக்கின்றன. உணர்வுகளை மதிக்காத ஆணாதிக்கத்தின் வீச்சு சுட்டப்படுவதுடன் இஃது விலக்கப்பட வேண்டும் என்பதைக் கவிதை உணர்த்துகின்றது.

### வரையறைக்குள் அடக்குதல்

பெண்ணை ஒரு குறிப்பிட்ட வரையறைக்குள் அடக்கி வைத்திருத்தலை ஆணாதிக்கம் சரியாகச் செய்கிறது. ஆணிற்கென எந்த வித சட்டதிட்டங்களும் கிடையா. அனைத்தும் பெண்ணிற்கே. அது சரியாக இருந்தாலும் இல்லாவிட்டாலும் அதைப்பற்றிக் கவலை கொள்வதில்லை இதனை,

எனக்கென/நீண்ட காலமாக/வடிவமைத்தாய்
அவ்வுடையை/எனது அசௌகரியத்தை/ஒப்புக்கொள்ளவே
உனக்கு முடிவதில்லை/வெகுசிரமத்துடன்
நான் அணிந்திருந்த நேரம்போக/எஞ்சிய நேரங்களில்

நீயே பத்திரப்படுத்துகிறாய்/என்ற (ப.42) கவிதையடிகள் எடுத்தியம்புகின்றன. பெண்ணிற்குப் பொருந்துமா, பொருந்தாதா என்பது பற்றிக் கருத்தில் கொள்ளாது, விதிக்கப்பட்ட விதியினைப் பின்பற்றியே ஆக வேண்டுமென வற்புறுத்துவதும், அதனைக் காப்பதும் ஆணாதிக்கச் சிந்தனையின் வெளிப்பாடே ஆகும்.

### இருத்தலும் இல்லாத்திருத்தலும்

பெண்விடுதலை, பெண்ணுரிமை குறித்துப் பேசப்படும்போதெல்லாம் ஆணாதிக்கம் பற்றியும் அதன் செயல்பாடுகள் பற்றியும் பேசியே தீரவேண்டும். இது தவிர்க்க இயலாத ஒன்று ஆதிக்க மனோபாவத்தின் இருப்பைக் சுட்டாமல் பெண்விடுதலை பேச முடியாது. மறுக்கவும் மறைக்கவும் முடியாத இவ்வுண்மையினைக் கவிஞர்,

என் நினைவுகளில்/உன்னைப் பற்றிய வரிகளை

நீக்கிவிடச் சொல்லி மன்றாடுகிறாய்/உனக்குப் புரிவதில்லை

உன்னைப் பற்றிச் சொல்லாமல்/வலியைப் பற்றி மட்டுமே பேசுமென்

சாத்தியமின்னைகளை/என்று (ப.24) உரைக்கின்றார். பெண்ணின் இடர்பாடுகளையும் துன்பங்களையும் மட்டுமே கூறிவிட்டு அதற்கான காரணி குறித்துப் பேசாதிருக்க முடியாது. காலமாற்றங்களுக்கு ஏற்ப அறிவின் பன்மடங்கு வளர்ச்சிக்கு ஏற்ப மனிதனின் சிந்தனைகளும் மாறிக்கொண்டே இருக்கின்றன. குட்டக் குட்டக் குனிந்தால் குட்டுபவருக்கே பயன் உண்டு. குனிபவர் நிமிர்ந்து நின்றால்தான் தாக்குதலிலிருந்து விடுபடமுடியும். நிமிர்ந்து நிற்பவர் நேரம் பார்த்து எதிர்த்து நின்றால் வெல்ல முடியும். நீறு பூத்த நெருப்பாய் பாயும் புலி பதுங்குவது போல் அமையும் நிலையினை

பழகிய மௌனத்திலிருந்து/துருவேறிய கேட்கச் சகிக்காத மொழியை

இன்னும்/இம்மறைவிடத்திலிருந்தே/மேடையை

சுவீகரிப்பவளாய் இருக்கிறேன்/இருளில்/இருப்பதென்பது

வெறுமனே/இருளோடிருப்பதாய் மட்டுமில்லை/என்று (ப.47) கவிஞர் எடுத்துக்காட்டுகின்றார். கால மாற்றத்திற்கே மாறிய புதுப்பெண்ணின் நிலையினைச் சுட்டுவதாகக்கவிதை அமைகின்றது.

## பெண்ணிய மொழி

கவிஞர்களில் ஆண்,பெண் எனத்தனித்து அடையாளம் சுட்டப்படவேண்டாமென்ற குரல் எழுந்தாலும் பெண்ணிய மொழி சார்ந்த கவிதையே பெண் கவிஞரை அடையாளங் காட்டுவதாக அமையும். பெண்ணிய மொழி பேசும் கவிதைகள் பச்சை தேவதைத் தொகுப்பில் பரவலாக இடம்பெறுகின்றன. அடையாளப்படுத்தலுக்கு மட்டுமே பெண்ணிய மொழி சான்றாக அமைவதில்லை. பொது நிலையில் கவிஞர்களால் சுட்டப்படாத ஆனால் சொல்லவேண்டிய செய்திகளைத் துல்லியம் தவறாது நம்பகத்தன்மையுடன் உரைப்பதற்கு உறுதுணையாகின்றது. தனித்து விடப்படும் பெண்ணின் நிலை குறித்த உணர்வுகளை பகிர்ந்து கொள்ளும் வகையில் கவிஞரின் என் பூர்வீக வீடு 1,2 கவிதைகள் அமைகின்றன. முதல் கவிதை பால்யத்துடனான தொடர்பு குறித்தும் இரண்டாம் கவிதை, வளர்ந்து முதுமை அடையத் தொடங்கும் காலம் குறித்துப் பேசுகின்றன. கருப்பை நீக்கப்பட்ட காலத்துத் தோன்றும் பெண்ணின் மன உணர்வுகளைக் கவிஞர்,

உலர்ந்த திராட்சையென/சுருங்கிய சருமத்தோடு/நினைவு தப்பிச் சரிந்திருந்த

அவளிடமிருந்து கருப்பையயை/மருத்துவர்கள் பிரித்தெடுக்கின்றனர்./சலனமற்ற கவனத்துடன்

./எத்தனை மறை/உயிர் சுமந்திருந்தாலென்ன/கழிப்பறையில் உருவாகித்

தகிக்கும் வெப்பமெனச்/சபிக்கப்பட்டதாகத்தானே இருந்திருக்கும்

அவ்வுறுப்பு அவளுக்கும்/தொடர்ச்சியான வேட்டையாடலுக்குப்பின்

சக்கையாய் மாறிய அதன் ஆன்மா/இனியேனும் அமைதி பெறக்கூடும்

என்று (ப.59) வெளிப்படுத்துகின்றார். முதல் தீட்டில் பயந்து போன பெண்ணின் மன உணர்வுகளையும் கருப்பை நீக்கப்பட்ட பிறகு பெண்ணின் இழப்புணர்வையும் மிகச்சரியாகப் புலப்படுத்த பெண்ணிய மொழி உதவுகின்றது. இதே போல் துன்பந்தரும் மாலைப்பொழுதினை விளக்குவதற்குப் பெண்ணிய மொழிய கவிஞருக்கு மிகச் சிறந்த உத்தியாக அமைகிறது.

வேறெந்தப் பொழுதுகளையும் விடச்/சுமக்கவே இயலாதபடிக்கு/எப்படி இவ்வளவு கனத்து விடுகிறது

இந்த மாலை/மாதவிடாய் ஈரம் நிரம்பிக்/கனக்கிற பஞ்சைப்போல/என்பது(ப.67) கவிதைப்பகுதி மாலைநேரத்தின் சுமையினைப் பெண்சார்ந்த பொழியிலான உவமை மூலம் கவிதையில் சுட்டியுரைக்கப்பட்டுள்ளது.

## முடிவுரை.

முதல் கவிதைத் தொகுப்பில் பெற்ற பரவலான கவனிப்பைக்கவிஞர் தம் இரண்டாவது தொகுப்பிலும் பெறக்கூடிய வகையில் கவிதைகள் அமைந்திருக்கின்றன. பெண் தன்நிலையினைத் தானே அறியாதவளாய் இருத்தலை ஆணாதிக்கச் சமுதாயம் விரும்புகிறது. தன்னையறிதல் பெண்ணிற்கு மிக இன்றியமையாத பண்பாகக் கவிஞர் கருதுகிறார். ஆணாதிக்கத்தின் தாக்குதல் பெண்ணை மூர்க்கமாகத் தாக்குவதாக அமைகிறது. மிக எளிமையான ஒன்று என ஒதுக்கிவிடக்கூடாது. அங்ஙனம் ஒதுக்கிவிட்டால் அஃது உயிரைப்பறிக்கக் கூடியதாய் அமைந்துவிடும். குறிப்பிட்ட எல்லைக்குள் பெண்ணை அடக்குவதும் பெண்ணை இழிவுபடுத்தும் தன்மையது. ஆணின் அடக்குமுறைகளைப் பேசாது பெண்ணின் துயரங்களை மட்டுமே உரைக்கவியலாது. புதுமைப்பெண், அடிபணிந்து நிற்பது அடிமையாக இருத்தலுக்கன்று. அதற்கும் அப்பால் வேறொரு கோணத்தில் செயல்படுவதற்கு எனக்கவிதைகள் சுட்டுகின்றன. பெண்ணிய மொழி கவிஞரைத் தனித்து அடையாளங் காட்டுவதற்கு மட்டுமின்றி பெண்ணின் தனித்த மன உணர்வுகளைச் சுட்டுவதற்கும் பயன்படும் என்பதைக் கவிஞரின் கவிதைகள் உணர்த்துகின்றன.

# "தமிழ்ப் புதுக்கவிதைகளில் படிமம்"

*கவிஞர் க. கிருஷ்ணமூர்த்தி,* எம்.ஏ., எம்.ஃபில்., டி.ஜி.டி.,
முதுநிலை விரிவுரையாளர்- தமிழ்த்துறை, அ.ப.க.ப. கல்லூரி, நாட்டுநலத்திட்ட அதிகாரி, பழனி.

இன்றைய உலகம் ஆய்வு உலகம். தமிழ் மொழியில் இன்று இலக்கியத்திறனாய்வு பற்பல நிலைகளில் கிளைத்து நன்கு செழித்து வளர்ந்து வருகின்றது. மொழியின் அழகிற்கும் இலக்கியப் பயன்பாட்டிற்கும் உவமை, உருவகம், குறியீடு, படிமம் என்ற உத்திகள் பெரிதும் துணைபுரிகின்றன. மகாகவி பாரதியின் காலம் தொடங்கி, இன்று வரை தமிழ்ப்புதுக் கவிதையானது உருவகத்திலும் , உள்ளடக்கத்திலும் வெளியீட்டுத் தன்மையிலும் எத்தனையோ புதிய மாற்றங்களையும், பரிணாமங்களையும் பெற்றுத் திகழ்கின்றன. "படிமம்" தமிழ்ப் புதுக்கவிதையில் இன்று அதிகமாக இடம் பெற்றுள்ளது. இதனையே இக்கட்டுரை ஆராய்கிறது.

## படிமம் - விளக்கம்

"படிமம்" என்பது ஒன்றற்கு மாற்றாக அமைவது. ஒன்றைச் சொல்லி அதையே அழுத்தமாய் உணர்த்துவது ஆகும். "படிமம்" என்பது ஒரு படைப்பின் மையக் கருத்தைம எளிய முறையில் ஆழமாகப் பற்றிக் கொள்ளவும், ஐம்பொறிகளைத் துடிக்கச் செய்யவும் பயன்படுத்தப்பெறும் முறை, "இமேஜ்" என்ற ஆங்கிலச் சொல்லின் தமிழாக்கமே "படிமம்". மனித "உள்ளத்தில்" பூத்த கருத்தானது வேர்விட்டு நிலைத்த தன்மை பெற்று எழுந்து நடக்கும் தன்மையில் அமைவது படிமம். தமிழ் இலக்கிய வகைகளில் புதுக்கவிதையானது பலமாக நம் மனத்தை அசைக்க வல்லது. சரியான கவிதை என்பது படிமத்தைப் பொறுத்தே அமையும். படிமமே புதுக்கவிதைக்கு மணிமகுடம் எனலாம். படிமத்தை எளிமையாகக் கூறினால், "மனக்குகை ஓவியங்கள்" என்று குறிப்பிடலாம். ஏராளமான கவிதைகளைப் படைத்துவிட சிறந்தது தன் வாழ்நாளில் ஒரு படிமத்தைப் படைப்பதாகும். என்று எஸ்ராபவுண்ட குறிப்பிடுகின்றார். படிமம் உணர்ச்சியுடைய சொற்சித்திரம் என்கிறார் சி. டேலுயிஸ். "உணச்சியால் மட்டும் படிமம் அமைவதில்லை, ஒப்பீட்டில் உள்ள ஒப்புமையே சிறந்தது என்கிறார் பாகல். இன்று படிமம் என்பதற்கு, உருக்காட்சி, உருவம், பூமி, உருமாதிரி, ஒத்தவடிவம், கருத்துரு, படி, கற்படி, முகத்தலளவை, வேடம், வகை, முறைமை, பிரதி, உருவம், கண்ணாடியில் தோன்றும் பிம்பம், உவமை, உருவகம், குறியீடு எனக் குறிக்கப்பட்டு வழங்கப்படுகின்றது.

## படிமத்தின் வகைகள்

புதுக்கவிதையில் இன்று பயன்படுத்தப்படும் படிமத்தினை கீழக்கண்டவாறு பகுத்து வகைப்படுத்தலாம்.

1. அழகியல் படிமம், 2. அங்கதப் படிமம், 3. நிகழ்ச்சிப் படிமம், 4. தொன்மையியல் படிமம், 5. கொள்கை விளக்கப் படிமம், 6. காண்பொருட் படிமமம், 7. தத்துவப் படிமம், 8. முரண்பொருட் படிமம், 9. புதுமையியல் படிமம், 10. மிகை நவிற்சிப் படிமம், 11. இனிவரல் படிமம், 12. மனப் படிமம், 13. நினைவுப் படிமம், 14. கூட்டுப் படிமம், 15.புலன் உணர்வுப்படிமம், 16. மூழ்கிய படிமம், 17. பகட்டுப் படிமம், 18. வேர்ப்படிமம், 19. ஆழந்த படிமம், 20. பரந்த படிமம், 21. அலங்காரப் படிமம், 22. வரலாற்றுப் படிமம், 23. அறிவியல் படிமம், 24. ஓசைப்படிமம், 25. சமயம் சார்ந்த படிமம், 26. மூல உருப்படிமம்,27. இயற்கைப் படிமம், 28. மன இயல்புப் படிமம், 29. சொல் படிமம், 30. சுவைப்படிமம், 31. தொடு உணர்வுப் படிமம். என்று நுணுக்கமாய் பகுத்துப் படிமத்தை அறியலாம். "படிமத்தை மூன்று தன்மைகளில் பிரித்து" மேலும், ஆய்வு செய்யலாம்.

அ. காட்சிப் படிமம்

ஆ. கருத்துப் படிமம்

இ. புலனுணர்வுப் படிமம் - என்பனவாகும்.

படைப்பாளிகள் தங்கள் படைப்புகளில் கருத்துக்களைப் புலப்படுத்தும் பயன்படுத்தும் உத்தியில் முதன்மையானது படிமம் என்பதாகும். படைப்பாளியின் படிமங்கள் மூலம் அவர்களது மன எண்ணங்கள், கனவுகள், கற்பனைகள், இலக்கியப் புலமை இவற்றை வாசகர்கள் அறிய முடிகிறது. இதனால் இலக்கிய இன்பம்

பெற முடிகின்றது.

### புதுக்கவிதைகளில் படிமம்

தமிழ்ப் புதுக்கவிதைகளில் பல்வேறு தன்மைகளில் படிமங்கள் இடம் பெற்றுள்ளன. கவிஞர் கல்யாண்ஜியின் பின்வரும் புதுக்கவிதையில் "நிகழ்ச்சிப் படிமம்" சிற்ப்பாக இடம் பெற்றுள்ளது.

"பென்சில் சீவிக் கொண்டிருக்கிறேன்.

எங்கோ தூரத்தில்
மொர மொரவென
மரங்கள் சரியும் சப்தம்" - இக்கவிதையில் இயற்கை அழிக்கப்படுகின்ற யதார்த்தக் காட்சியை , "பென்சில் சீவுதல்" என்ற நிகழ்ச்சிப் படிவத்தின் வழி உணர்த்தப்பட்டுள்ளது.

கவிஞர் நா. காமராசன் எழுதிய "புல்" என்ற புதுக்கவிதையில்

"வால் முளைத்த மண்ணே !
வசந்தத்தின் பச்சை முத்திரையே
உடல் மெலிந்த தாவரமே
உன்னைப் பனித்துளியின் படுக்கை அறை"
என்ற இப்புதுக்கவிதையில் "அழகியல் படிமம்"சிறப்பாக அமைந்துள்ளது.

"அமுத சுரப்பியைத்தான்
நீ தந்து சென்றாய்
இப்போது
எங்கள் கைகளில் இருப்பதோ
பிச்சைப் பாத்திரம் - கவிஞர் மு. மேத்தாவின் இக்கவிதையில் தேசத்தின் துன்ப முகவரி படிமமாய் நிற்கிறது. கவிஞர் சிற்பியின் புதுக்கவிதைகளில் ஏராளமான படிமங்கள் கொட்டிக்கிடக்கின்றன.

"கொள்ளை நெருப்பில்
காடு பற்றி எரிகையில்
புள்ளி மான்களுக்கு
ஏது விமோசனம்" - என்று எய்ட்ஸ் நோய் என்கிற நுண்பொருளை "கொள்ளை நெருப்பு" எனப் படிமமம் ஆக்கிக் காட்டுகிறார் சிற்பி.

"இடைப் பிழிந்து
எடுத்து வைத்தது போல
படுத்திருந்து ஆட்டுக்குட்டி
பாதையோரம்
காலை நேரம் - ஆட்டுக் குட்டியின் நிறம் கருப்பு என்று விளக்க வந்த கவிஞர் படிக்கின்றவரின் உள்ளத்தைப் புரட்டிக் காட்டுகிறார்.

"கதவைத்திறந்ததும்
காத்துக் கொண்டிருந்த
முரடனைப்போல்
குளிர்
என் கன்னத்தில் அறைந்தது" - என்ற சிற்பியின் புதுக்கவிதையில் தொடு உணர்வுப் படிமம் சிறந்துள்ளது.

"தயிர் சாதத்தில்
ஊன்றி வைத்த
ஊறுகாய் போல்
இந்த வாழ்க்கை
ருசி நிறைந்து வருகிறது" - என்ற வைரமுத்துவின் புதுக்கவிதையில் சுவைப்படலம் மேலோங்கி

உள்ளதைக் காணமுடிகின்றது.

"அடித்துத் துவைத்துப்

பிழிந்து கந்தலாய்

நாளும் நாளும்

நைந்து கொண்டிருந்தேன்" - என்ற சிற்பியின் படைப்பில் உடல் இயக்கப் படிமம் அமைந்துள்ளது.

"எந்த ஊரிலும்

இரை எடுக்காமல்

இளைத்து இளைத்து

எங்கோ போகிற

ஒற்றையடிப் பாதை" - என்ற றஅபியின் புதுக்கவிதையில் மூழ்கிய படிமம் மின்னுகிறது.

"பூமித்தோலில் அழகுத் தேமல்

பரிதி புணர்ந்து படரும் விந்து

கதிர்கள் கமழ்ந்து விரியும் பூ

இருளின் சிறகைத் தின்னும் கிருமி

வெளிச்சச் சிறகில் மிதக்கும் குருவி" - தருமு சிவராமின் "விடிவு" என்ற இப்புதுக்கவிதையில் மிகைநவிற்சிப் படிமம் அமைந்துள்ளது. படிப்பவர் மனதில் ஆர்வத்தை ஏற்படுத்தும் தன்மையில் படிமம் இங்கு படைக்கப்பட்டுள்ளது.

"வெளியே

ஆத்திரத்தில் குமுறி அடங்கும்

பைத்தியகாரனின்

வசைச் சொற்கள் போல

தேய்ந்து தீனக்குரலில்

ஓய்ந்து கொண்டிருக்கும்

மழை" - என்ற சிற்பியின் புதுக்கவிதையில் அழகாக, அற்புதமாக ஓசைப்படிமம் வெளிப்படுத்தப்பட்டுள்ளது.

"சளியூறுப் பெருகியதால் நாசியெங்கும்

நிறைந்தது போல் மூச்சில் புலனழியும் - என்ற சி. மணியின் புதுக்கவிதையில் உயிர் இயக்க உணர்வுப் படிமம் அமைந்துள்ளதைக் காண முடிகின்றது.

தமிழ்ப் புதுக்கவிதைக்குப் படிமம் என்ற அணியைச் சூட்டி மகிழ்ந்த கவிஞர்கள் ஏராளம். குறிப்பாக பிரமிள், அப்துல் ரகுமான், தருமு, சிவராமு, சிற்பி, தமிழன்பன், அபி ஆகியோர்கள் குறிப்பிடத்தக்கவர்கள். படிமம் கோட்பாடு என்பது உள்ளத்தில் நினைத்த காட்சியை வரைபடமாக வரைந்து தரும் ஓவியமாகும். வாசகன் மனத்திரையில் பளீரென ஓர் ஒளிச்சித்திரத்தை வரைந்து போகிற நவீன மாய ஓவியத்தூரிகையேபடிமம். இன்று தமிழில் எழுதப்படுகின்ற புதுக்கவிதைகளில் "படிமம்" மிகுந்துள்ளது. தமிழ் இலக்கிய வளர்ச்சிப் போக்கில் "படிமம்" புதுக்கவிதை உலகில் புது மறுமலர்ச்சியை ஏற்படுத்தியுள்ளது. படிமம் புதுக்கவிதை படைப்போருக்குக் கிடைத்த அரிய இலக்கிய உத்தி ஆகும்.

## துணை நின்ற நூல்கள்


வெ. இரா. சத்தியமூர்த்தி, இலக்கியத்தில் படிமம்.

மு. சுதந்திரமுத்து, கவிதைப்படிமம்

ந. முருகேசன், புதுக்கவிதையில் படிமங்கள்

நா. காமராசன், கறுப்பு மலர்கள்

சி.இ. மறைமலை, புதுக்கவிதை - முப்பெரும் உத்திகள்.

# பெண் எழுத்தாளர் சிறுகதைகள் - 2000 பெண்ணியம்

முனைவர் *ர. கீதா* தமிழ்த்துறை,
மீனாட்சி மகளிர் கல்லூரி, சென்னை - 24.

பெண்களின் தாழ்நிலையை ஆராய்ந்து, அதை மாற்ற மேற்கொள்ளப்படும் வழிமுறைகளே பெண்ணியமாகும். மக்கள் என்பது ஆண், பெண் இருவரையும் குறிப்பது. தற்காலத்தில் பெண்கள் மாறுபட்ட குணங்களைப்பெற்று இருப்பதற்கு அவர்கள் வளர்க்கப்பட்ட சூழ்நிலையே காரணமாகும். பெண்ணியம் என்பது பெண்களுக்கு மட்டும் சமத்துவம் வேண்டும் என்று கேட்கவில்லை. சமத்துவம் உள்ள சமுதாயம் உருவாக வேண்டும் என்பதே பெண்ணியத்தின் அணுகுமுறை. அதில் ஆணும் பெண்ணும் பாலினப் பாகுபாடுகள் இன்றி மனிதர்களாக மதிக்கப்படவேண்டும் என்பதே அதன் கோரிக்கை. இதனால் மனித மேம்பாடே பெண்ணியத்தின் நோக்கம் என்று முத்துச் சிதம்பரம் பெண்ணியம் தோற்றமும் வளர்ச்சியும் என்ற நூலில் கூறுகிறார்.

பெண்ணியவாதிகள் என்றால் அடக்கமற்றவர்கள், மனம் போனபடி திரிபவர்கள் என்ற கருத்துக்கள் நிலவுகின்றன. இது தவறான கருத்தாகும், இன்றைய பெண்கள் வேலை செய்து கணவனுக்கு இணையாக அல்லது அதிகமாக சம்பாதித்தாலும், அவளது அன்றாடக் கடமையில் அவர்கள் கணவர்கள் பங்கெடுப்பதில்லை.

வெளியில் உழைக்கும் பெண் உடற்களைப்புடன் வந்தபின் குழந்தைகள், தாய், தகப்பன், மாமி, மாமனார், கணவர் என்போரின் அகநலத்திற்குப் பொறுப்பாக இருக்கிறாள். சமையல், துவையல், வீட்டுச்சுத்தம் என்பவற்றைக் கண்காணிப்பதன் பொறுப்பு எல்லாக் கலாச்சாரத்திலும் பெண்களின் தலையிற்றான் போடப்பட்டிருக்கிறது. எவ்வளவுதான் விஞ்ஞானம் வளர்ச்சியடைந்தாலும் இன்று பலபாகங்களிலும் பூதாகரமாக வளரும் சமயவெறிகள், பழம் கொள்கைகளுக்கும் பத்தாம்பசலிக் கொள்கைகளுக்கும் தங்கமுலாம் பூசிக் கௌரவிக்கிறது. இன்று மிகப்பெரிய மூலதனம் பெண்ணின் உடம்பு. அவளின் உடம்பு குடும்ப அமைப்பில் வேலை செய்யும் இயந்திரமாக, வெளியில் உழைக்கும் தேவைப்பொருளாகப் பயன்படுத்தப்படுகின்றது என்று இராஜேஸ்வரி அவர்கள், காற்றாய்... புயலாய்... எனும் புத்தகத்தின் முன்னுரையில் எழுதியுள்ளார்.

பெண் எழுத்தாளர் சிறுகதைகள் - 2000 (தொகுப்பு ஞானி) என்னும் இந்நூலில் பதினைந்து பெண் எழுத்தாளர்கள் பதினைந்து தலைப்பில் சிறுகதை இயற்றியுள்ளனர். இதில் சிறப்பானதாகக் கருதப்பட்ட

1. காற்றாய் புயலாய் சூறாவளியாய் - வள்ளி
2. ஐந்து பவுனும் அரைப்பவுனும் - ஜுலியட்ராஜ்
3. அவள் அவன் அது - இரா. கயல்விழி

ஆகிய மூன்று சிறுகதைகளில் பெண்ணியம் பெறுமிடத்தைக்கூறுவதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

காற்றாய் புயலாய் சூறாவளியாய் - வள்ளி

ஜானகி - நடராஜன் கணவன் மனைவி. நடராஜனுக்கு ஜானகியின்மேல் வெறுப்பு. வீட்டில் அமைதி இல்லை. அவனுடன் போராட முடியவில்லை. ஆனால் நடராஜன் அவளை விட்டு நீங்கி கீதாவை மணப்பதற்காக ஜானகியை விவாகரத்து செய்ய முடிவு செய்கிறான்.

ஜானு! ஜானு! உனக்கு ஒரு வக்கீல் நோட்டீஸ் எதிர்பார்த்ததுதான். ஆனால் நோட்டீஸ் தந்த செய்தி அதிர்ச்சியாய் இருந்தது. You are a divorced woman சப்கோர்ட்டில் எக்ஸ் பார்ட்டி (expartie) டைவர்ஸ் வாங்கியாகிவிட்டது என்றது நம்பவே முடியவில்லை என்று ஜானகி கூறுகிறாள்.

இந்தக் கடிதத்தைக் கண்டு ஜானகி தன் அண்ணனிடம் நான் இல்லாமல் எனக்குத் தெரியாமல் டைவர்ஸ் வாங்க முடியுமா? எனக் கேட்கிறாள். நடராஜன் செய்த செயலை ஊகித்த, (தவறான விலாசத்திற்கு (வேண்டுமென்றே) வக்கீல் நோட்டீஸ் அனுப்பி, திரும்பி வந்துவிட்டது என்று (expartie) தீர்ப்பு வழங்கியது) ஜானகியின் அண்ணன்

முறுவிசாரணைக்கு மனுப்போடும்படி கூறுகிறான். மனுப்போட்டு இரண்டு ஆண்டுகள் கழித்து இன்றைக்குத்தான் நீதிமன்றத்திற்கு வரும்படி உத்தரவு வந்துள்ளது.

ஜானகியும் அவள் தந்தையும் நீதிமன்றத்திற்கு வருகிறார்கள். நீதிபதி ஜானகி நடராஜனை அழைத்து விசாரணை நடத்துகிறார். நீதிபதியின் கேள்விகளுக்கெல்லாம் நடராஜன் அளித்த பதில் எல்லாம் பொய் என்று ஜானகி கூறுகிறாள். கடைசியில்,

இல்லே... அவ நடத்தை சரியில்லே என்று நடராசன் கூறியவுடன்,

மனம் அதிர்ந்தது. அதிர்ந்து நின்று கண்ணும் காதும் குத்திட்டுக் கவனிக்கும் கூட்டத்தின் முன் நிர்வாணமாய் நிற்பதாய் பட்டது. உடம்பு குறுகியது. காலங்காலமாய் பெண்களைப் போராட விடாமல், நீதிகேட்க விடாமல் மழுங்க அடிக்கும் பிரயோகம், அஞ்சி ஒடுக்கவைக்கும் உத்தி என்று தனக்குள் சொல்லிக்கொள்கிறாள்.

நடராசனின் வக்கீல் ஏதாவது செட்டில்மெண்ட், காம்ப்ரமைஸ்னு வழக்கை முடிச்சிடலாமா? பொம்பள வேற...

நீதிபதியின் முகம் ஜானகியை நோக்கும்போது, வழக்கை நடத்தப்போறேன் தொடர்ந்து... காற்றாய், புயலாய், அவனைச் சாய்க்க, சாதிக்க மீண்டும் வருவாள்.

கொடுமைகளைப் பொறுமையாய் சகித்தல் வாழ்க்கையில்லை. நிகழும் வேதனைகளைத் தாங்கி, ரகசியமாய் காத்து, மனதில் சிதைத்தல், சிதறுதலில் அர்த்தமில்லை. போராட வேண்டும். தன் தவறு புரியும்வரை தன் குரூரம் உணரும் வரை பீனிக்ஸ் பறவையாய் உயிர்த்தெழும் உத்வேகம் இருக்கவேண்டும்.

இக்கதையில், தன் மனைவியின் மீது எக்குற்றமும் சுமத்த முடியாததால், பெண் என்றாலே பெரும்பாலான ஆண்கள் சொல்லக்கூடிய நடத்தை கெட்டவள் என்பதைக் கணவன் கூறுகின்றான். பெண் நீதிமன்றம் வரை வரமாட்டாள், பெண் நீதிமன்றம் செல்லுதல் என்பது இன்றளவும் நல்லநோக்குடன் பார்க்கப்படுவதில்லை. ஆனால் தன்மேல் இல்லாத பழியைச் சுமத்தும்போது பழிக்குப்பழி வாங்க நீதிமன்றமும் செல்லப் பெண்கள் தயங்குவதில்லை என்பதை இக்கதையில் அறியலாம்.

### ஐந்து பவுனும் அரைப்பவுனும் - ஜூலியட்ராஜ்

ரேவதியின் வீட்டில் திருமணத்திற்காக ஐந்து பவுன் நகை போடுவதாக பேச்சு. இயலாமையால் நகைபோடவில்லை. ரேவதியின் கணவன் குடிகாரக் கணவன். தாய்ப்பேச்சைக் கேட்பவன். போதை இருக்கும்போது ஒருமாதிரியாக, போதை நீங்கியபின் ஒரு மாதிரியாக நிமிடத்திற்கு நிமிடம் மனம்மாறும் கணவனை விட்டுப்பிரிந்து தாய்வீடு செல்கிறாள் ரேவதி.

அன்புடைக் கணவன் அழிதக செய்யினும்
பெண்பிறந்தோர்க்கு பொறையே பெருமை

என்ற தமிழ் மரபுப்படி அவனை விட்டிருக்க மனமின்றி திரும்பி வருகிறாள். அவன் கொட்டும் விஷச் சொற்களால் மனம் வெறுத்து, பாரதி எண்ணிய பெண் வடிவமாய், ஐந்து பவுன் நம்மைப் பிரிக்கும்பொழுது இந்த அரைப்பவுனா நம்மைச் சந்தோஷப்படுத்தும் என்று கூறி அரைப்பவுன் தாலியை அவிழ்த்து அவனிடமே அளித்துவிட்டு வெளியேறுவது பெண்களுக்கு ஏற்பட்டுள்ள விழிப்புணர்வைக் காட்டுகிறது.

ரேவதி கணவனிடம், என்னை மனைவியா மதிக்கவேண்டாம், ஒரு மனுஷியா மதிச்சீங்கன்னா... தாலி கட்டிட்டா அடிமையில்லேங்க... தாலி பாதுகாப்புன்னு நினைக்கிறோம்... அது வேலியாய் இருந்து பாதுகாக்கனுமே ஒழிய சிறையாயிருக்கக் கூடாது. அந்தத் தாலிக்குக்கூட விலைபேசி, கேலியாக்குறீங்க என்று ரேவதி பேச, கணவன் மேலும் கோபம் கொள்கிறான்.

அப்ப நீ கட்டும்போது இருந்த சந்தோஷத்தைவிட கழட்டும்போது இன்னும் சந்தோஷமாயிருக்கு. இந்த அரைப்பவுன் தாலி நம்மைச் சேர்த்துவைக்குமா? எப்படி? ஐந்து பவுன் நம்மைப் பிரிக்கும்போது இந்த அரைப்பவுன் நம்மைச் சந்தோஷப்படுத்தும்னு நம்ப முடியவில்லை. இந்தா நீயே வச்சிக்க என்று ரேவதி கூறிவிட்டு பெட்டியோடு வெளியே வருகிறாள்.

காலமெல்லாம் அடிமையாவதற்கே பிறந்தவர்கள் போல நடத்தப்படுபவர்கள் பெண்கள் என்ற நிலையிலிருந்து மாறி, பிணிப்பின் இறுக்கம் அதிகரிக்கும்போது பெண்ணுக்குத் தன்காலில் நிற்கும் தன்னம்பிக்கை அளிப்பதை இக்கதை உணர்த்துகிறது. படித்தப் பெண்களிடம் இது இயல்பாய் இருக்கலாம். ஆனால் ஒரு படிக்காத பெண் உணர்ச்சியுடன் எழுவதே சிறப்பு என்பதை இக்கதையால் அறியலாம்.

## அவள், அவன், அது – இரா. கயல்விழி

விஸ்வம் – சுதாவுக்கு பிறந்தவன் ரெங்கு. ஆணுமில்லை, பெண்ணுமில்லை – அலி. வளரவளரத்தான் தெரிகிறது விஸ்வத்திற்கு வெறுப்பு. அதனால் ரெங்குவை ஆசிரமத்தில் விட முடிவு செய்கிறான். பெற்ற பாசம் காக்கைக்கு தன் குஞ்சு பொன் குஞ்சு சுதா மறுக்கிறாள்.

ரெங்குவை என் பிள்ளைன்னு என்னால வெளியில சொல்லிக்க முடியல. புதுசா என்னப் பார்க்கிறவங்க, உங்களுக்கு என்ன குழந்தைன்னு கேட்டா – நான் ஆணுன்னு சொல்றதா? இல்ல பொண்ணுன்னு சொல்றதா? இந்த சமூகத்தில் எனக்குன்னு ஒரு தனி மரியாத, மதிப்பு இதெல்லாம் இருக்கு. அது ரெங்குவால குறையறத நான் விரும்பல – விஸ்வம்.

முதலையும் மூர்க்கனும் கொண்டது விடாது என்பதுபோல விஸ்வம் ரெங்குவை ஆசிரமத்தில் சேர்க்கச் சுதாவைக் கேட்காமல் எல்லா ஏற்பாடுகளையும் செய்துவிடுகிறான். சுதாவிற்கு என்ன முடிவு எடுப்பது என்றே தெரியவில்லை. சிந்திக்கின்றாள். விஸ்வத்திற்கு ஒரு கடிதத்தை எழுதிவைத்துதுவிட்டு ரெங்குவை அழைத்துக்கொண்டு வெளியேறிவிடுகிறாள்.

கடிதத்தில் என்னைப்பற்றி முழுவதும் தெரிந்தும் எனக்குள் இருக்கும் திறமையை வெளிப்படுத்தவோ, அதை வளர்த்துக்கொள்ளவோ ஒரு வாய்ப்புக்கூட கொடுக்காதவர் நீங்கள் வீட்டையும் பார்த்துக்கிட்டு அவசர அவசரமாக நீ போறதப் பார்த்தா எனக்குக் கஷ்டமா இருக்குன்னு சொன்னப்போ, என்மேல எவ்வளோ அக்கறைன்னு கர்வப்பட்டு வேலயவிட்டேன். ஆனா, அதுவும் ஒரு சுயநலம்தானுன்னு இப்போதுதான் புரியுது. இதுவரை உங்கள் வீட்டில் ஒரு ஷோகேஸ் பொம்மை என்று எழுதிவிட்டு, இறுதியில் நம்பிக்கையும் வாழ்க்கைச் சுழற்சியில் நிச்சயம் மறுபடியம் நான் உங்களைச் சந்திப்பேன். உங்களின் மனைவியாக அல்ல. ரெங்குவின் அம்மாவாக என்று கடிதத்தை முடிக்கிறாள்.

பல குடும்பங்களில் எந்த ஒரு பிரச்சினைக்கும் முடிவு எடுப்பது ஆண்தான். அந்த முடிவுக்குப் பின்னால் ஒரு பெண்ணின் மன உணர்வுகள், எண்ணங்கள், சிந்தனைகள், திறமைகள் சிதைக்கப்பட்டாலும் அதைப்பற்றி அந்த ஆணுக்கு அக்கறையில்லை. இப்படி ஓர் ஆணின் சுயநலச் சூழலில் சிக்கி மாண்டுவிடாமல் மீண்டு வந்த ஒரு பெண்ணின் கதைதான் அவள், அவன், அது .

ஆணவம் நிறைந்த ஆண் தந்தையாக, அண்ணனாக, கணவனாக, ஏன் சக ஊழியனாகக்கூட இருக்கலாம். இப்படிப்பட்ட ஆண்கள், பெண்களைத் தங்களுக்காகப் படைக்கப்பட்ட ஓர் உயிர் என்று நினைக்கிறார்களே தவிர, அவளுக்குள்ளும் இருக்கும் உணர்வுகளைப் புரிந்துகொள்ள முயற்சி செய்வதில்லை.

பெண் இன்று எல்லாத் துறைகளிலும் மிகச் சிறப்பாக முன்னேறிக்கொண்டிருக்கிறாள் என்று பெருமிதம் கொள்ளும் அதே வேளையில் இன்றும் ஆண்களின் ஆணவப் பிடியில் சிக்கிப் பல பெண்கள் அவமானப்படுவதையும், வேதனையில் வெதும்புவதையும் காணமுடிகிறது.

முதல் கதையில் ஜானகியை நடராஜன் கோர்ட் படி ஏறவைத்து அவமானப்படுத்துவதும்,

இரண்டாம் கதையில், வரதட்சணையாக ஐந்து பவுன் நகை வாங்கி வராததால் கொடுமைப்படுத்தப் படுவதையும்,

மூன்றாவது கதையில் மரபியல் காரணங்களால் அலியாய்ப் பிறந்த குழந்தையை மனைவியை கேட்காமல் ஆசிரமத்தில் சேர்க்க முயல்வதையும் அறியலாம்.

ஆனாலும், இம்மூன்று பெண்களும் ஆண் ஆதிக்கத்திற்கு உட்படாமல் நம்பிக்கையுடன் தன்னால் தனித்து வாழ முடியும் என்ற நிலைக்கு வந்து பெண்ணியத்தை நிலை நாட்டுவதை அறியலாம்.

# புரட்சிக் கவிஞர் பாடல்களில் பெண்ணியம்

சு. குணசேகரன் எம்.ஏ.,எம்.ஃபில்., ஆசிரிய உதவியாளர்,
தமிழ்த்துறை அ.ப.க.ப கல்லூரி, பழனி.

"பெண்ணடிமை தீருமட்டும் பேசுந்திருநாட்டு
மண்ணடிமை தீர்ந்து வருதல் முயற்கொம்பே" - பாரதிதாசன்

பெண்ணியம் என்ற சொல் தற்பொழுது பெருவழக்காகியுள்ளது. இச்சொல் பெமினிசம் என்ற ஆங்கிலச் சொல்லின் தமிழாக்கமாகும். இச்சொல் வழக்கிற்கு வரும்முன் பெண்மை, பெண்ணியல்பு என்ற சொற்கள் வழக்கத்தில் இருந்தன. பெண்ணியம் பெண்மை, பெண்ணியல்பு என்ற இரண்டையும் ஆழந்து நோக்கின் மிக நுண்ணிய வேறுபாடு தோன்றும். பெண்மை, பெண்ணியல்பு என்பவை பண்பு-செயல் ஆகியவற்றின் அடிப்படையில் எழுந்த சொற்களாகும். ஆனால் பெண்ணியம் என்பது கோட்பாடு என்ற அடிப்படையில் உருவான சொல்லாகும். இப்பெண்ணியம் புதிய சமூகச் சூழ்நிலையில் பெண்களைப் பற்றிய புதிய பார்வையின் அடிப்படையில் எழுந்துள்ள கோட்பாட்டினைக் குறிக்கும் சொல்லாக் நிற்கிறது என்பர். (முனைவர் கோ.சரோஜா பெண்படைப்பாளர்களின் புதினங்களில் பெண்ணியப்பார்வை ப.30)

சமூக அரசியல் பொருளாதார சமய அடிப்படையில் பெண்கள் விடுதலை பெறவேண்டும் என்றும், அவர்களைச் சமூகம் மதிக்க வேண்டும். உயர்த்த வேண்டும் என்றும் பாரதிதாசன் விரும்பினார். காலங்காலமாகப் பெண்கள் மீது சமூகம் விதித்து வந்த அடிமைத் தளையிலிருந்து விடுபட்டு பெண்கள் புதிய சமுதாயம் படைக்கக் குரல் கொடுத்தவர் பாரதிதாசன். தன் புதிய பெண்ணியப்பார்வை மூலம் பெண்களை வீறுகொண்டு எழச்செய்தார். அத்தகைய புரட்சிக் கவிஞரின் பாடல்களில் காணலாகும் பெண்ணியக் கொள்கைகளைக் காண்பதே இக்கட்டுரையின் நோக்கமாகும். இந்தியச் சமுதாயமும், தமிழ்ச்சமுதாயமும் காலங்காலமாக பெண்கள் மீது பல்வேறு தடைகளை விதித்து அவர்களின் வளர்ச்சிக்கு முட்டுக் கட்டையாக இருந்திருக்கின்றன என்பது உள்ளங்கை நெல்லிக்கனி. குழந்தைப் பருவத்திலிருந்து தன் முதுமைக் காலம் வரை பெண் ஆணைச் சார்ந்தே வாழவேண்டிய கட்டாயத்திற்கு உந்தப்படுகிறாள்.

பெண் குழந்தைப் பருவத்தில் தந்தைக்கும் மங்கைப் பருவத்தில் கணவனுக்கும், கணவனை இழந்த பின்னர் மகனுக்கும் அடிமை எந்த நேரத்திலும் பெண் சுதந்திரமாக வாழக் கூடாது என்பது மனுவின் கட்டளை என்பர். (டாக்டர் ச.சு. இளங்கோ. பாரதிதாசன் படைப்புக்கலை ப.297) மேலும்,

கணவனே கண் கண்ட தெய்வம், கணவனே எல்லாம், பெண்ணுக்குத் தனியாக வாழ்வு ஏதுமில்லை அறம், பொருள் இன்பம் ஆகிய மூன்றிலும் பெண் கணவனுக்குத் துணை செய்பவளாகவே கருதப்பட்டாள். புகுந்த வீட்டினரையும், விருந்தினரையும் குறிப்பாக மாமன், மாமியாரை மதித்து நடக்க வேண்டியது பெண்ணின் கட்டாயக் கடமையாக்கப்பட்டது, என்ற கருத்தும் ஈண்டு எண்ணத்தக்கது. (டாக்டர். ச.சு.இளங்கோ, பாரதிதாசன் படைப்புகலை ப.298)

குழந்தை மணம், கைம்மை நோன்பு, உடன்கட்டை ஏறுதல், பலதார மணம், சொத்துரிமையின்மை, கல்வி மறுப்பு, வரதட்சணைக் கொடுமை, பொருந்தாமணம், பேச்சுரிமை, ஆணுக்குப் பெண் அடிமை எனப் பல்வேறு தடைகளைப் பெண்களுக்கு நம் சமுதாயம் விதித்திருந்தது. இத்தகைய பெண்ணடிமைக்கோட்பாடுகளிலிருந்து பெண்கள் விடுதலை பெற வேண்டும் எண்ணமே பெண்ணியக் கோட்பாடாக உருப்பெற்றது எனலாம்.

## பெண் கல்வி

பெண்கள் தங்களையும் தம் குடும்பத்தையும் காத்து, அறியாமையை நீக்கி, அடிமைத் தளையிலிருந்து விடுபட வேண்டுமானால் கல்வியறிவு பெறவேண்டும் என்கிறார் பாவேந்தர் எனவே தான் பெண் குழந்தைகளைப் பெற்ற பெற்றோரைப் பார்த்து.

பெற்ற நல் தந்தைதாய் மாரே - நும்/பெண்களைக் கற்க வைப்பீரே
இந்நை நாள் பெண் கல்வியாலே - முன்/னேற வேண்டும் வைய மேலே" (இசையமுது.ப28)

என்று அறிவுறுத்துகிறார். மேலும் குழந்தைகள், அறிவுள்ளவர்களாகவும் ஒழுக்கமுள்ளவர்களாகவும் வளர்வதற்குப் பெண் கல்வி அவசியம் என்பதை உணர்ந்த பாரதிதாசன் சமுதாயமோ, பெண்களோ இதை

எண்ணிப்பார்க்கவில்லை என்கிறார். ஆதலால்,

கல்வியில்லா பெண்கள்/களர்நிலம் அந் நிலத்தில்

புல்விளைந்திடலாம் நல்ல/புதல்வர்கள் விளைதல் இல்லை(குடும்ப விளக்கு இரண்டாம் பாகம், ப.69)

எனச் சமுதாயத்தை நோக்கி பெண்கல்வியின் முக்கியத்துவத்தை வலியுறுத்துகிறார். குழந்தை பெறுவதும், சமைப்பதும், குடும்பத்தைப் பேணுவதுமே பெண்களின் வேலை. அதற்குக் கல்வி தேவையில்லை என்ற கருத்து சமுதாயத்தில் நிலவியது இக்கருத்துக்கு எதிர்க் குரல் கொடுத்தவர் பாரதிதாசன். இதை,

பெண்கட்குக் கல்வி வேண்டும்/குடித்தனம் பேணுதற்கே

பெண்கட்குக் கல்வி வேண்டும்/மக்களைப் பேணுதற்கே

பெண்கட்குக் கல்வி வேண்டும்/உலகினைப் பேணுதற்கே

பெண்கட்டுக் கல்வி வேண்டும்/கல்வியைப் பேணுதற்கே (குடும்பவிளக்கு இரண்டாம் பாகம், ப.69)

என்ற பாடல் மூலம் பெண் கல்வி எதற்கெல்லாம் பயன்படுகிறது எனப் பட்டியலிட்டு பெண் சமுதாயத்திற்குக் கல்வியின் மேன்மையைப் புலப்படுத்துகிறார். கல்வி கற்ற பெண்ணால் வீட்டையும், நாட்டையும் திறம்பட நிர்வகிக்க முடியும் என்ற கருத்தை,

"மகளிரெலாம் கல்வியறிவு ஒழுக்கமுள ராயின்/மருத்துவமே வேண்டாவாம் பிணி மூப்புவாரா

மகளிரெலாம் அரசியலைக் கைப்பற்றி ஆண்டால்/மாநிலத்தில் போரில்லை சாக்காடும் இல்லை

(குடும்பவிளக்கு, ஐந்தாம் பாகம், ப. 200)

என்கிறார்.

பட்டங்கள் ஆள்வதும் சட்டங்கள் செய்வதும்

பாரினில் பெண்கள் நடத்த வந்தோம் (பெண்கள் விடுதலைக்கும்மி, பாரதியார் கவிதைகள், ப.463)

எனத் தன் குருநாதர் பாரதி கண்ட கனவைத் தானும் கண்டவர். அது இன்று நனவாக்கப்பட்டுள்ளது.

### பெண்ணின் பெருமை :

தமிழ்ச் சமுதாயம் பன்னெடுங்காலமாக ஆணாதிக்கச் சமுதாயமாகக் கோளோட்சி வந்துள்ளதை அறிய முடிகிறது. அத்தகைய சமுதாயம் பெண்கள் கூட்டத்தை ஒரு வலிமையற்ற பகுதியாகவே கருதி வந்துள்ளது. இதை

"ஆடை அணிகலன் ஆசைக்கு வாசமலர்/தேடுவதும் ஆடவர்க்குக் சேவித் திருப்பதுவும்

அஞ்சுவதும் நாணுவதும் ஆமைபோல் வாழுவதும்/கெஞ்சுவதுமாகக் கிடக்கும் மகளிர் குலம்

மானிடர் கூட்டத்தில் வலிவற்ற ஓர் பகுதி/(வீரத்தாய், கவிதைத் தொகுப்பு -1)

என வீரத்தாயில் சேனாபதி வாயிலாக உரைத்து பின்னர்,

மானுஷிகம் மேல் என்பார் வன்மை உடையதென்பார்/ஆன அதனை அளித்ததெது? மீனக்

கடைக்கண்ணால் இந்தக் கடலுலகம் தன்னை/நடக்கும் வகை செய்வதெது? நல்லதொரு சக்தி

வடிவமெது? மாமகளிர் கூட்டமன்றோ" (வீரத்தாய், கவிதைத் தொகுதி -1)

என மந்திரி வாயிலாக பெண்ணின் பெருமையை நிலைநாட்டுகிறார் பாவேந்தர். பெண்ணைப் போற்றுகின்ற நாடு தான் எல்லா நலமும் வளமும் பெற்று விளங்கும். குறிப்பாக பெண்ணுக்குப் பேச்சுரிமை வழங்காமல் நாட்டின் முன்னேற்றம், உரிமைவாழ்வு இவற்றை எண்ணி முனைப்புடன் செயல்பட்டாலும் எவ்விதப் பயனும் இல்லை என்கிறார். இதை,

"பெண்ணுக்குப் பேச்சுரிமை வேண்டாம் என்கின்றீரோ?/மண்ணுக்கும் கேடாய் மதித்தீரோ பெண்ணினத்தை?/பெண்ணடிமை தீருமட்டும் பேசுந்திரு நாட்டு/மண்ணடிமை தீர்ந்து வருதல் முயற்கொம்பே" (சஞ்சீவிபர்வதத்தின் சாரல், கவிதைத் தொகுதி - I)

என்கிறார். பெண்ணுக்குப் பெருமை சேர்த்து உரிமை கொடுக்காமல் அடிமைப்படுத்தினால் அவள் பெற்றெடுக்கும் ஆண்களும் அடிமைகளாகத் தான்1 இருப்பார்கள் என்பதை,

"ஊமை என்று பெண்ணை உரைக்கு மட்டும்

உள்ளடங்கும் ஆமை நிலைதான் ஆடவர்க்கும் உண்டு" (சஞ்சீவிபர்வதத்தின் சாரல், கவிதைத் தொகுதி-1)

என ஆண் சமுதாயத்திற்கு எச்சரிக்கை விடுக்கிறார்.

### கைம்மை மறுமணம் :

கைம்பெண் மறுமணத்தை நினைத்துப்பார்க்காத ஏற்றுக் கொள்ளாத காலகட்டத்தில் கைம்பெண்

மறுமணத்தின் அவசியத்தையும், அதனால் ஒழுக்கக் கேடுகள் குறையும் என்ற கருத்தையும் வலியுறுத்தியவர் பாவேந்தர் இதை,

“மறுமணம் புரிவதால் வராதொரு கேடும்
மறுமணமில்லாத பெண் கெடுவதும் கூடம்
குறைபாட்டைத் திரைபோட்டு மறைந்திட வேண்டாம்
கூறினேன் நீ இதை எண்ணிட வேண்டும்” (தேனருவி ப.23).

என்கிறார். ஆண்பிள்ளை என்றால் அப்படித்தான் இருப்பாள் என்ற ஆமோதிப்பும், பெண்பிள்ளை என்றால் இப்படித்தான் இருக்க வேண்டும் என்ற கட்டுப்பாடும் சமுதாயத்தின் இயல்பாகிவிட்டது. இப்படி ஆணுக்கொரு நீதியும் பெண்ணுக்கொரு நீதியும் வழங்கும் சமுதாயம் மாறிட வேண்டும் என்கிறார்.

“பெண்ணுக்குகொரு நீதி கண்டீர்
பேதமேனும் மதுலையுண்டீர்
கண்ணிலொன்றைப் பழுது செய்தால் கான்றுமிழாதோ
கான்றுமிழாதோ? புவி தான் பழியாதோ?” (கைம்மைத்துயர், பாரதிதாசன் கவிதைத் தொகுதி-1)

என்ற கேள்வியைத் தொடுத்து , புவியிலுள்ளோர் அனைவரும் கைம்பெண் மறுமணத்தை ஆதரிக்க வேண்டுமென்கிறார். இதை,

“துணைவி இறந்தபின் வேறு துணைவியைத்
தேடுமோர் ஆடவன்போல் பெண்ணும்
துணைவன் இறந்தபின் வேறு துணை தேடச்
சொல்லிடு வோம்புவி மேல்” (கைம்மைப்பழி, பாரதிதாசன் கவிதைத் தொகுதி-1)

என்கிறார். கைம்பெண்களை ஆண் சமுதாயம் விரும்பி முன்வந்து ஏற்றுக் கொள்ள வேண்டும் என்கிறார். இதை,

“கோரிக்கை அற்றுக் கிடக்குதண்னே - இங்கு
வேரிற் பழுத்த பலா - மிக்க
கொடியதென் றெண்ணிடப் பட்டதண்ணே குளிர்
வடிகின்ற வட்ட நிலா !” (கைம்மைப்பழி, பாரதிதாசன் கவிதைத் தொகுதி-1)

எனப் படிப்பவர் மனத்தில் கைம்பெண்களின் மீது ஒரு வித இரக்கத்தை ஏற்படுத்திவிடுகிறார்.

### பொருந்தா மணம் :

மனைவி இறந்தால் மறுமணம் செய்து கொள்ள ஆண்களுக்குச் சமுதாயத்தில் எவ்விதத் தடையும் இல்லை. தன்னைப் போல் வாழ்விழந்த பெண்ணைத் திருமணம் செய்தால் பரவாயில்லை அதை விடுத்து வயதான ஆண்கள் இளைய பெண்களைத் திருமணம் செய்வதைப் பொருந்தா மணம் என எதிர்த்துக் குரல் கொடுத்தவர் பாவேந்தர். தன் உள்ளக் குமுறலை,

“மண்ணாய்ப் போக மண்ணாய்ப் போக
மனம் பொருந்தா மனம் மண்ணாய்ப் போக” (மூடத்திருணம், பாரதிதாசன் கவிதைத் தொகுதி-1)

என வெளிப்படுத்துகிறார்.

### வரதட்சணை :

இன்று பல பெண்கள் முதிர்கன்னிகள் என்ற பட்டம் பெறக் காரணமாக அமைவது வரதட்சணை என்ற புற்றுநோய், வரதட்சணையை வேரறுக்கப் பெண்கள் கூட்டம் யாருக்கும் அஞ்சாமல் தைரியமாக எதிர்க்க வேண்டும் என்கிறார்.

“வல்லமை பேசியுன் வீட்டில் - பெண்
வாங்கவே வந்திரு வார்கள் சில பேர்கள்
நல்ல விலை பேசுவார் உன்னை
நாளும் நலிந்து சுமந்து பெற்றோர்கள்
கல்லென உன்னை மதிப்பார் - கண்ணில்
கல்யாண மாப்பிள்ளை தன்மையுங் காட்டார்
வல்லி உனக்கொது நீதி - இந்த

வஞ்சகத் தரகருக்கு நீ அஞ்ச வேண்டாம்" (பெண்ணுக்கு நீதி பாரதிதாசன் கவிதைத் தொகுதி-1)
எனக் கரும்பு தின்னக் கூலி கேட்கும் ஆண்களை எதிர்த்துப் போரட தன்புதிய பெண்ணியப் பார்வை மூலம் அறைகூவல் விடுக்கிறார். மேலும் இதில் ஆண்கள் தன் துணையைத் தேர்ந்தெடுக்க உரிமையுண்டு என்றும் பெண்களுக்குத் தன் வாழ்க்கைத் துணையைத் தேர்ந்தெடுக்கும் உரிமையைத் தன் பெற்றோரே வழங்குவதில்லை என்ற நிலையையும் படம்பிடித்துக் காட்டுகிறார். இந்நிலை மாற வேண்டும் என்பதே பாவேந்தரின் விருப்பம்.

**குழந்தை மணம் :**

பெண் குழந்தை மணத்தை வன்மையாகவே பாரதிதாசன் கண்டிக்கிறார். ஏழுவயதே நிரம்பிய ஒரு பெண் கணவனை இழந்து தன் தந்தை வீட்டில் இருப்பதை.

"கூவத் தெரியாக் குயிலின் குஞ்சு
தாவாச் சிறுமான் மேவா அரும்பு
தாலியறுத்துத் தந்தையின் வீட்டில்
இந்தச் சிறுமி இருந்திடுகின்றாள்" (குழந்தை மணத்தின் கொடுமை, கவிதை் தொகுதி-1)

எனக் குழந்தை மண அவலத்தை வெளிப்படுத்துகிறார். இன்று இது சமுதாயத்திலிருந்து விரட்டப்பட்டிருப்பது பாவேந்தர் கண்ட கனவு நனவாகியிருப்பதையே சுட்டுகிறது.

**கலப்பு மணம் :**

சாதி, மத ஏற்றத் தாழ்வுக்கும் பெண் விடுதலைக்கும் கலப்பு மணம் அவசியம் தேவை என்கிறார் பாவேந்தர். கலப்பு மணம் வாழ்க என்ற பாடலில்,

"அப்பா உண்மையில் அவரும் என்போல்/மனிதச்சாதி மந்தி அல்லர்
காக்கை அல்லர்" (காதல் பாடல்கள்)

எனச் சாதிவெறி பிடித்த தந்தையின் சித்தத்தை ஒரு பெண் தெளியவைக்க முயல்வதைக் காட்டுகிறார். மேலும் அப்பெண்,

"சாதி சற்றும் என் நினைவில் இல்லை
மாது நான் தமிழனின் மகளாத லாலே" (காதல் பாடல்கள்)

என்று தன் தந்தையிடம் மன்றாடித் திருமணத்திற்கு ஒப்புதல் பெறுவதாகப் படைத்துள்ளார் பாவேந்தர். இதன் மூலம் பெண்கள் தன் உரிமையை நிலை நாட்டப் போராடி, வாதாடி வெற்றி பெற வேண்டும் என்கிறார்.

**சொத்துரிமை :**

பெண்களுக்குச் சொத்துரிமை மறுக்கப்பட்ட காலத்தில், பெண் சொத்துரிமைக்காகக் குரல் கொடுத்தவர் பாவேந்தர், பிறந்த வீட்டிலும், புகுந்த வீட்டிலும் பெண்களுக்குச் சொத்துரிமை வழங்கப்பட வேண்டும் என வலியுறுத்தினார். தற்போது இது சட்டமாக்கப்படடிருப்பது குறிப்பிடத்தக்கது. குடும்ப விளக்கில் மகளின் காதலை ஏற்று மகிழ்ந்து மணநாள் குறிக்க ஏற்பாடு செய்யும் பொழுது தந்தை மகளைப் பார்த்து,

"பெண்ணுக்குச் சொத்துரிமை
இல்லையென்பார் நான் தருவேன்" (குடும்விளக்கு மூன்றாம்பகுதி)

எனச் சொல்வதன் மூலம் பெண்கள் சொத்துரிமை பெற வேண்டும் எனப் பாவேந்தார் விரும்பியது புலனாகிறது. மேலும் குயில் பாடலில் கணவனின் சொத்தில் பாதிச் சொத்துக்கு உரிமையுடையவள் மனைவி என்கின்ற கருத்தைக் காணமுடிகிறது.

"பெண்டாட்டி என்ற பெயரடைந்த நாள் முதலே
ஒண்டொடிக்கும் சொத்தில் ஒரு பாதி உண்டுரிமை" (குயில் பாடல்கள் ப. 157)

என்கிறார். இவ்வாறு பாரதிதாசன் பெண்களுக்கு எதிராக இழைக்கப்பட்ட கொடுமைகளைக் கண்டு வெகுண்டழுந்து உரிமைக்குரல் கொடுத்தார். பெண் விடுதலை பெறவும் தன் உரிமையை நிலை நாட்டவும், சமய, அரசியல், பொருளாதர மேம்பாடு அமையவும் முற்போக்குக் கருத்துக்களைத் தம் பாடலின் வாயிலாகப் புலப்படுத்தி பெண்ணியக் கோட்பாட்டை மிளிரச் செய்துள்ளார்.

# தலித்திய, பெண்ணிய நோக்கில் தகனம் (குறுநாவல்)

*அ.கோபிநாத்*, எம்.ஏ.,எம்.பில்.,பி.எட்., விரிவுரையாளர், தமிழ்த்துறை,
சிதம்பரம் பிள்ளை மகளிர் கல்லூரி, மண்ணச்சநல்லூர்.

**முன்னுரை:**

மக்களிடையே செல்வாக்கு பெற்ற இலக்கிய வகைகளுள் நாவல் இலக்கியம் சிறப்பு வாய்ந்தது எனில் அது மிகையாகாது. குறிப்பாக வட்டார வழக்குச் சொற்களில் யதார்த்தப் படைப்பாக ஒரு நாவல் அமையும்பொழுது மக்களுக்கு உணர்வுகள் எளிதில் சென்று சேர்கிறது. அந்தக் குறிப்பிட்ட நாவல் ஒரு சிலரிடம் நல்ல மனமாற்றத்தை ஏற்படுத்தினாலும் அது படைப்பாளியின் வெற்றிக்கு ஏதுவாகின்றது.

மேற்சொன்ன அத்துனை கருத்துக்களுக்கும் பொருத்தப்பாடுடையது ஆண்டாள் பிரியதர்சினியின் *தகனம்* , கவனிப்பாரில்லாத காட்டுப்பூ மனிதர்களின் கதை இது [1] என்கிறார் ஆசிரியர். அணிந்துரையில் கி. ராஜநாராயணன் அவர்கள், மயானபூமி வாழ் மக்களைப் பற்றிய விஸ்தாரமான முகாரி ராக ஆலாபனம் [2] என்கிறார்.

**கதைச்சுருக்கம்:**

பிணமெரிக்கும் புனிதத் தொழிலைச் செய்யும் இரு குடும்பங்களில் உள்ள நிகழ்வுகள், சுகதுக்கங்கள், உறவுமுறைகள், ஜனனம், மரணம் இவையே தகனம் நாவலின் கதை என இரு வரிகளில் அடக்கிவிடலாம். ஆனால் சேரி மக்களின் அவல வாழ்வினை நம் கண்முன் நிறுத்துகிறார் ஆசிரியர். நாவலைப் படித்து முடிக்கும்பொழுது நாமும் அந்த இடுகாட்டில் சின்னப்பொண்ணு கூடவே தங்கியிருக்கும் உணர்வை ஏற்படுத்துகிறார் ஆசிரியர்.

**கதை மாந்தர்கள் :**

இருசப்பன், முனியம்மா, சின்னராசு, சின்னப்பொண்ணு, மாரியம்மா, சம்பத்து, சுரேசு, ராணி, எம்.எல்.ஏ., கோவிந்தம்மாள், தாத்தா இவர்கள் கதை மாந்தர்களாக உலாவருகின்றனர். வெட்டியான் தொழிலின் அவலம் தான் தலைமை பாத்திரம்என்றாலும் சின்னப்பொண்ணு - கதை பாத்திரம் நம் மனதில் நீங்காத இடம் பெற்றுவிடுகிறது.

**சமுதாயச் செய்திகள் :**

பிணமெரிக்கும் வெட்டியான் தொழிலில் ஈடுபட்டுள்ள தொழிலாளரின் கல்வியறிவற்ற தன்மை, கூலிக்காக மானமிழந்து வாடும் அவலம், பெண்ணடிமைத்தனம், சுகாதாரமான வாழ்வு பற்றிய விழிப்புணர்வு இல்லாமை, அரசியல் எதேச்சதிகாரம் முதலானவை இந்நாவலில் சமுதாயச் செய்திகளாக மிளிர்கின்றன.

**தாழ்த்தப்பட்டோர் அவலம் :**

சடுகுடுவென் றேநெய்வீர் கந்தை யில்லை
தார்வேந்தன் கட்டுவது சரிகை வேட்டி
கடல் நடுவில் முத்தெடுப்பீர் கஞ்சி யில்லை

என்று தொழிலாளர் நிலையைப் புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் நன்கு சுட்டுகிறார். பிறர் நலனுக்காகவே பாடுபடுகின்ற தொழிலாளர்கள் நிலையில் ஒரு சிறிதும் ஏற்றம் இல்லை என்பதனை தகனம் நாவலில் இருசப்பன் என்ற கதை மாந்தனின் கூற்று விளக்குகிறது.

... ஏலேய் சின்ராசு. உடம்பு பலமிருந்தால்
போதும் இந்தச் சோலிய சுளுவாய்ப்
பண்ணலான்னு நினைக்காத, மனசு பலம்தான்
வேணும், தொழிலு சுத்தம் வேணும்... [4]

இப்படி பிறருக்காக பாடுபடுகின்ற வியர்வை சிந்துகின்ற அத்துனை மக்களும் தாழ்த்தப்பட்டவர்களாக, ஒடுக்கப்பட்டவர்களாக, ஒதுக்கப்பட்டவர்களாக சமுதாயத்தில பிறரால் புறக்கணிக்கப்படுகின்றனர். பிணம் எரிக்கும்போது உடலில் வெளிப்படும் திரவத்தின் துர்நாற்றம், புகையால் வரும் மூச்சிரைப்பு நோய், வாழும் சூழலில் ஓர் இறுக்கம் இவைவே நிலையான சொத்துக்களாக கீழ்த்தட்டு மக்களுக்குக் கிடைக்கின்றன என்ற உண்மையை வெளிச்சம் போட்டுக் காட்டுகிறார் ஆசிரியர்.

நாவலின் 2-வது அத்தியாயத்தில் வெட்டியான்கள், துப்புரவுத் தொழிலாளர்கள் வாழக்கூடிய குப்பம் பகுதியைப் பின்வருமாறு வருணனை செய்கிறார் ஆசிரியர்.

தாழாங்குப்பம் வழக்கமான குப்பம் போலத்தான் இருந்தது. நாற்றமடிக்கும் கூவத்தின் தொடர்ச்சி டிராயர், சட்டை எதுவுமில்லாமல் மூக்கொழுகிற மண்ணில் ஓடி விளையாடும் சிறுவர்கள் மூலைக்கடை சாராய வாசனை. வீட்டில் சாப்பாட்டு வாசனை... [5]

மேற்கண்ட கூற்றின் மூலம் தாழ்த்தப்பட்டோரின் வாழ்க்கைத் தரம் எப்படியெல்லாம் இருக்கிறது என்பதை நம்மால் உணர்ந்து கொள்ள முடிகின்றது. தற்காலத்தில் தமிழகத்தைப் பொறுத்தவரை எல்லா இடுகாடுகளும் மின்சார மயமாகி விட்டதால் காலம் காலமாக அவர்கள் செய்துவந்த வெட்டியான் தொழில் தவிர வேறொன்றும் அறியாத மக்களுக்கு அரசு கல்வி, வேறு வேலை வாய்ப்பு முதலியவற்றை உருவாக்கித் தந்தால் அவர்களின் வாழ்வில் விடியல் வரும். என்றாலும் இன்றையச் சூழலில் அரசோ பிற தன்னார்வ அமைப்புகளோ எவ்வளவோ கல்வி, வேலைவாய்ப்பு, சுகாதார வாழ்க்கை முதலியவற்றைச் சலுகைகள் மூலம் பெற்றுத்தந்தாலும், மக்களும் அதை முறையாகப் பயன்படுத்தி விழிப்புணர்வு பெற்றுவிட்டால் நாட்டில் தாழ்த்தப்பட்டோருக்கு இழைக்கப்படும் கொடுமைகள் அறவே நீங்கும்.

### பெண்ணியச் சிந்தனைகள் :

இலக்கியங்களில் பெண் என்பவள் ஒரு காலகட்டம் வரையில் ஆடவனைச் சார்ந்தவளாக, இயற்கை பொருட்களோடு ஒப்பிடப்படுவளாக மட்டும் சித்தரிக்கப்பட்டாள். இன்றைய சமூகத்தில் பெண்கள் பல துறைகளில் ஆண்களுக்கு நிகராக செயல்பட்டாலும் ஒரு சில குறுக்கீடுகளால் வரதட்சணைக் கொடுமை, பாலியல் சிக்கல்கள் போன்றவை பெண்களுக்கு நிகழ்ந்து கொண்டேதான் இருக்கின்றன. இதற்கெல்லாம் ஒட்டுமொத்தமாக ஆண்களை மட்டுமே குறை கூற இயலாது. பெண்ணிற்கும் பெண்ணே செய்யும் கொடுமைகளும் நிறைய உள்ளன.

தகனம் நாவலில் வரும் முனியம்மா, ராணி, சின்னப்பொண்ணு ஆகிய கதை மாந்தர்களின் வாயிலாக பெண்ணியச் சிந்தனைகளை நன்கு உணர்த்துகிறார் ஆண்டாள் பிரியதர்சினி.

முனியம்மாவின் கதை பாத்திரம் சராசரியாக ஒரு குடும்பத் தலைவியின் உருவகமாக உள்ளது. வேறு எந்தச் சிந்தனையும் இல்லாமல் அடுப்படி, குடும்பம் என்று அல்லல்படுகிறாள் முனியம்மா.

முனியம்மாவின் மகள் ராணி, குமரப் பருவத்திற்கே உரிய பொறுப்பின்மையால், கல்வியில் நாட்டமின்றி, காதல் என்ற உணர்வில் சிக்கித் தவிக்கும் பெண்.

### சின்னப்பொண்ணு :

பெண் என்பவள் எச்சூழலையும் சகித்துக்கொண்டு, தடைகளை வென்று வாழமுடியும் என்பதை உணர்த்த சின்னப்பொண்ணு என்ற கதை மாந்தரை உருவாக்கி உள்ளார் ஆசிரியர். கல்வியறிவு இல்லாவிட்டாலும் விழிப்புணர்வு உடையவளாய் இருக்கிறாள் சின்னப்பொண்ணு. அவருடைய பேச்சு நமக்கு நன்கு உணர்த்துகின்றது.

நீயாச்சும் வேற வேலைக்கு போவ கூடாதா சம்பத்து?
சாம்பல் அடிச்சு கண்ணு போன தாத்தா,
ரௌடிங்க அடிச்சு போட்ட அப்பன்
புத்தி பேதலிச்சு சுரேசு.
இத்தனி பேரையும் காவு வாங்கிகிச்சு [6] என்கிறாள்.

தான் செய்கின்ற பணியில் நேர்மை மிக்கவளாக, துணிவுடன் இருக்கிறாள் சின்னப்பொண்ணு.

அட இன்னா சார் நீங்க, இந்த நாத்தம் தான் சோறுபோடுது எங்களுக்கு. கொலைக்குத்தம், திருட்டு, அவுசாரி இதெல்லாம் தான் நாறத்தொழிலு. இது புண்ணியத் தொழிலு [7].

என்கிறாள். பாரதி கண்ட புதுமைப் பெண்ணாகவே இவள் காட்சியளிக்கிறாள்.

### முடிவுரை :

பெண்ணிய, தலித்திய நோக்கில் இந்நாவலைப் படைத்ததன் நோக்கத்தினை நன்கு விளக்கி உள்ளார் ஆசிரியர். இதன் வாயிலாக நாம் சமுதாயத்தில் ஒடுக்கப்பட்டோரின் உணர்வுகளை நன்கு புரிந்து கொள்ள முடிகிறது. நாம் இவர்களை நேரில் பார்த்தால் பரிதாபம் மட்டும் படாமல், நம்மால் இயன்ற உதவிகளைச் செய்து வாழ்வில் முன்னேற்றம் பெற ஒத்துழைப்பு நல்க வேண்டும். அப்போதுதான் பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும் என்ற குறளின் வரி மெய்ப்படும்.

### அடிக்குறிப்பு

1. தகனம் - ஆண்டாள் பிரியதர்சினி ஹிளீயகஷி வெளியீடு - ப.IX
2. மேலது - அணிந்துரை
3. பாரதிதாசன் கவிதைகள் - மணிவாசகர் பதிப்பகம் - ப.295
4. தகனம் - ஆண்டாள் பிரியதர்சினி ஹிளீயகஷி வெளியீடு - ப.3
5. தகனம் - ஆண்டாள் பிரியதர்சினி ஹிளீயகஷி வெளியீடு - ப.21
6. மேலது - ப.133
7. மேலது - ப.84

## பாத்திமுத்து சித்தீக்கின் இடி மின்னல் மழை சிறுகதைத் தொகுப்பில் பெண்ணியச் சிந்தனை :

பேராசிரியர் பொன். *கௌது மீரான்,*
தமிழ் முதுகலை மற்றும் ஆய்வுத்துறை புதுக்கல்லூரி, சென்னை - 14.

இசுலாமியத் தமிழ்ப்பெண் எழுத்தாளர்களில் முன்னோடியாகத் திகழ்பவர்களில் பாத்திமுத்து சித்தீக்கும் ஒருவர். இவர் சிறுகதை, புதினம் புதுக்கவிதை மற்றும் பயணக்கட்டுரையென்று பல்துறைகளிலும் தன்னுடைய படைப்பாற்றலால் சிறந்து விளங்குபவர். இவருடைய நடை எளிதாகவும் ஆற்றொழுக்காகவும் அதே சமயம் புதிய படைப்பு உத்திகளைக் கொண்டுள்ளதாகவும் அமைந்திருக்கின்றது.

இவருடைய படைப்பில் வரும் கதாபாத்திரங்கள் எதார்த்தமாகவும், கற்பனை இல்லாத நாம் நாள்தோறும் சந்திக்கக்கூடியவர்களாகவும் படைத்திருப்பது, இவருடைய படைப்பின் வெற்றிக்கு ஒரு முக்கியக் காரணம் என்றே கருதலாம். இவர் தன் கதைகளில் பெண் கதாபாத்திரங்களைத்தியாக உணர்வோடும் பொறுப்புணர்வோடும் படைத்திருப்பது பெண்சமூகத்தின் மீது இவர் வைத்திருக்கும் உயர்வான எண்ணத்தையே காட்டுகிறது.

ஆசிரியர் பாத்திமுத்து சித்தீக் பெண்களைப் பற்றி உயர்வான எண்ணம் கொண்டிருந்தாலும் இவர் கதைகளில் வரும் பெண்பாத்திரப் படைப்புகள் சமூகத்தில் ஒழுக்கம், கட்டுப்பாடு, அடக்கம் தியாகம் என்ற நிலையில், வற்புறுத்தல்களுக்கு உள்ளாக்கப்பட்டு ஒடுக்கப்பட்டுள்ள இந்நிலையில் அப்பெண் பாத்திரங்கள் சமுதாயத்தில் இழந்துள்ள பெண்ணுரிமையை எடுத்தியம்புவதே, இக்கட்டுரையின் முதன்மையான நோக்கமாக அமைகிறது. பாத்திமுத்து சித்தீக் பல சிறுகதைத் தொகுப்புகளைப் படைத்திருக்கிறார். அவருடைய படைப்புகளுள் ஒன்றான இடிமின்னல் மழை எனும் சிறுகதைத் தொகுப்பில் இடம்பெற்றுள்ள

1. இடி மின்னல் மழை 2. ஆயிரத்தில் ஒருத்தி 3. நாங்கள் கொடுத்த சொத்து 4. கடைசி ஆசை
5. தாய்ப்பறவை 6. சூழ்நிலை அனாதை 7. கண்மணியே கண்ணுறங்கு நெஞ்சமே நீயுறங்கு
8. வீண் போகாத பிரார்த்தனை, ஆகிய 8 சிறுகதைகளில் காணப்படும் பெண்ணியச் சிந்தனை பற்றிய கருத்துகள் மட்டும் ஆய்வு செய்யப்படுகின்றன.

**பெண் ஆண் :**

பெரும்பான்மையான கதைகளில் - கட்டுரைகளில் ஆண் பெண் என்ற வார்த்தைகள் இடம் பெற்றிருந்தாலும் இக்கட்டுரையில் ஆய்வாளர் பெண் ஆண் என்றே குறிபிட்டுள்ளார். இதற்குக் காரணம் ஒவ்வொரு ஆணும் பெண்ணால் பிறப்பிக்கப்பட்டவன் என்ற உண்மைக்கருத்தை உணர்த்தவும் உலகில் பெண் என்பவள் எப்படிப்பட்ட முதல்நிலையில் இருக்கிறாள் என்பதை அறிவுறுத்தவுமே ஆகும். இதற்குத்தர்க்கவாதிகள், ஆண் இல்லாமலா? என்ற வினாவை எழுப்புவார்களேயானால் அவர்கள் உண்மையை ஏற்க மறுப்பவர்கள், பெண்ணின் பெருமையை அறியாத உள்ளம் கொண்டவர்கள் இவர்களைத்தான் திரு. வி. க அவர்கள் “பெண்ணை மதிக்காதவன் கீழ்மகன்” என்று குறிப்பிட்டு இருப்பது இவ்விடத்தில் உற்று நோக்கத்தக்கது.

பெண்ணே அனைத்திற்கும் மூலமானவள் என்ற நிலை இருந்தாலும், சமுதாயத்தின் பார்வையில் பெண் எப்படி மதிக்கப்படுகிறாள் என்று பார்க்கும் போது, பெண் சிசுக்கொலை பெண்ணைப் போகப் பொருளாகப்பார்த்தல், அவளுடைய அழகையும், மென்மைத்தன்மையும் சொல்லி அவள் அறிவை மழுங்கச் செய்தல் அவளது ஆற்றலை அவளே அறியாத வண்ணம் வைத்திருத்தல். திருமணப்பந்தலில் அவள் இணைய வேண்டுமானால் வரதட்சணை கொடுத்தல் என்ற இந்நிலையில், அவள் மறுமணத்தைப்பற்றிச் சிந்திக்கக்கூட முடியாத அவலநிலைக்குத் தள்ளப்படுதல், சமூகத்தில் சமநிலை மறுப்பு, கல்வி கற்றிருந்தாலும் அவளுடைய உணர்வுகளுக்கும் உரிமைகளுக்கும் மதிப்பளிக்காத ஆதிக்கநிலை போன்ற “பெண்ணியச்சிந்தனை” பற்றிய கருத்துகள் எழுந்து இன்று உலகில் எங்கும் பெண்ணிய சிந்தனைவாதிகளின் குரல்கள் ஓங்கி ஒலிக்கக்காண்கிறோம். மேற்கூறப்பட்ட கருத்துகளின் அடிப்படையில் பாத்திமுத்து சித்தீக் கதைகளில் அமைந்துள்ள கதாபாத்திரங்களின் தன்மைகளை இங்குக்காண்போம் இடி மின்னல் மழை சிறுகதையில் மனைவியை இழந்த கணவன் சபூர் அலி, அவன் மகள் இர்ஷாத் பானு, அவன் தாயார் மைமூனா ஆகியோருடைய கதாப்பாத்திரங்களில், மைமூனா, சபூர் அலியின் உரையாடலில் மைமூனா, மகன் சபூர் அலியை மறுமணம் செய்து கொள் என்று சொல்கிறாள். அதற்குச்சபூர் அலி மறுக்கிறான். அந்த நேரத்தில் மைமூனா மகனிடத்தில், “ஏழையோ பாழையோ எவளையோ ஒருத்தியெ கட்டியாந்து வச்சா..... இந்தப் பொம்பளைப்புள்ளைக்கு காவலா ...... ஒரு துணையாப்போகும், சிறிசு பெரிசாகிக் கிட்டுருக்குது நாளைக்குகல்யாணம்காட்சி பிள்ளைப்பேறுன்னு

ஆயிரம் இருக்குது" என்று தன்னுடைய பேத்தியின் எதிர் கால வாழ்க்கையைப் பற்றிக் குறிப்பிடுகின்றாள். இக்கூற்றின் வாயிலாக பெண் என்பவள், ஆண்கள் திருமணம் செய்து கொள்வதற்கும், அவனுடைய வாரிசுகளைப் பெற்றுத்தருவதற்கும். சமைத்துப்போடுவதற்கு மட்டுமே படைக்கப்பட்டு இருக்கிறாள் என்பதை உணர முடிகிறது. மைமூனா கூற்றில் பெண்ணின் உரிமையும், உணர்வும், கல்வியும் மறைமுகமாக மறுக்கப்பட்டிருக்கின்றது. இக்கருத்தை வெளிப்படுத்தும் வகையில் தந்தை பெரியார் அவர்கள் சமுதாயத்தில் பெண்கள் எதற்குப் பயன்படுத்தப்படுகிறார்கள் என்பதை "ஒரு ஆணுக்கு ஒரு சமையல்காரி, ஒரு ஆணின்வீட்டிற்கு ஒரு வீட்டுக்காரி, ஒரு ஆணின் குடும்பப் பெருக்கிற்கு ஒரு பிள்ளை விளைவிக்கும் பண்ணை, 1. என்று கூறியிருப்பது உற்று நோக்கத்தக்கது.

**தன்னலம் மேலோங்கிய ஆணின் சிந்தனை :**

"ஆயிரத்தில் ஒருத்தி" கதையில் வரும் கணவன் அபூநவாஸ், அவன் மனைவி பஷீரா, அவனுடன் அலுவலகத்தில் பணியாற்றும் தெற்கத்தியப் பெண் வஹிதா கதாப்பாத்திரங்களில், ஆதரவற்ற நிலையில் சென்னைக்கு வந்த திருமணமாகாத பெண் வஹிதாவிடம் அவளுடைய மேலதிகாரியான அபூநவாஸ் நெருங்கிப் பழகுகிறான். அவளை இரண்டாந்தாரமாகத் திருமணம் செய்துகொள்ளலாம் என்றும் நினைக்கின்றான். இதனை அறிந்த அவன் மனைவி பஷீரா. கணவன் அபுநவாஸ் மூலமாக வஹிதாவை ஹஜ் பெருநாளுக்கு வீட்டிற்கு அழைத்து விருந்து வைக்கிறாள். அப்போது அவள் வஹிதாவிடம் தன்னுடைய கணவனின் அன்பையும் தன் பிள்ளைகளிடம் தான் வைத்திருக்கும் கனிவையும் எடுத்துக் கூறுகின்றாள். இவற்றையெல்லாம் புரிந்து கொண்ட வஹிதா இவர்கள் குடும்பம் நம்மால் சிதறிவிடக்கூடாது என்று எண்ணி வேலையைவிட்டுவிட்டு திருமணம் செய்து கொள்ளாமல் ஒரு பள்ளியின் விடுதிக்காப்பாளராகப் பணியாற்றுவதாக "ஆயிரத்தில் ஒருத்தி" யாகக் கதாபாத்திரத்தில் காட்டப்பட்டிருக்கிறாள். இருப்பினும் ஒரு குடும்பப்பெண் பஷீராவின் வாழ்க்கையை ஓர் ஆண் சீரழிக்க முனைவதையும், வஹிதா என்ற இளம்பெண்ணைப் போகப்பொருளாக நினைக்கின்ற போக்கையும் இக்கதையில் அறியமுடிகிறது. இக்கதையில் வஹிதாவுடன், அபூநவாஸ், நண்பனாகவோ ஒரு வழிகாட்டியாகவோ அல்லது ஒரு சகோதரனாகவோ பழகுவதாகக் காட்டியிருந்தால் பரவாயில்லை! ஆனால் அபூநவாஸோ வேலையை விட்டுச் சென்ற வஹிதாவைப்பற்றி தனக்குத்தானே நினைத்துக் கொள்ளும்போது இந்த வஹிதா பிசாசு இப்படி மோசம் பண்ணும்னு கனவுலேயும் நா நினைக்கலே ..... ஏதோ இல்லாத வூட்டுப்பொண்ணு அன்புக்கும் ஆதரவிற்கும் ஏங்கி நிற்கிறா..... எனக்கு இருக்கிற வசதிக்கு ரெண்டாந்தாரமாகக் கூட கல்யாணம் பண்ணிக்கிடலாமனு உள்ளூர நினைப்பு வச்சுத்தான் நெருங்கிப் பழகினேன் என்று சொல்லிக் கொள்ளும் பொழுது பொதுவாக ஆண்கள், பெண் என்பவள் ஆணின் ஆசைக்கும் விருப்பத்திற்கு மட்டுமே படைக்கப் பட்டிருக்கிறாள் என்ற எண்ணம் உடையவர்கள் தான் என்பது அபூநவாஸின் பாத்திரம் மூலம் உணர முடிகிறது.

இக்கதையில் வஹிதா அபூநவாஸுடன் பழகும் போது அவன் திருமணம் ஆனவனா? ஆகாதவனா? என்று தெரிந்து பழகினாளா? தெரியாமல் பழகினாளா என்பதைச் சொல்லாமல் விட்டுச் சென்றிருப்பது ஆசிரியர், வஹிதா என்ற பெண்ணின் சிந்தனையையும் உணர்வையும், வாழ்க்கையையும் முடமாக்கியிருக்கிறார் என்றே சொல்லத்தோன்றுகிறது. "நாங்கள் கொடுத்த சொத்து" சிறுகதையில் மரபியல் விஞ்ஞானி புரபஸர் அப்துல் முனீருக்குப் பெண்பார்த்து விட்ட வந்த அவன் தாயார் பின்வருமாறு பெண்ணைப்பற்றி முனீரிடம் "நல்ல வசதியுள்ள இடம் மூக்கும் முழியுமா இன்னிக்கெல்லாம் பார்த்துக் கொண்டேயிருக்கிற மாதிரி இருக்குது ..... பார்க்க ஒழுங்குள்ளதுன்னு அந்தத் தெருவே சொல்லுது. ...... நாலோ அஞ்சோதான் படிச்சிருக்குதுபோல அமைதியான குணமாகத்தெரியுது ... வூட்ல வேலை பொங்க பொரிக்கன்னு நல்லாச் செய்யுமாம் ...... என்று சொல்ல அதற்கு மறுமொழியாக தன் தாயிடம் முனீர்,

"உங்களுக்கு பிடித்திருந்தா எனக்குப் பிடிச்ச மாதிரிதாம்மா வேளாவேளைக்கு வாய்க்கு ருசியா சமைச்சுப்போட்டு உங்களையும் பிள்ளை குட்டிகளையும், வீடு வாசன்னு அடங்கியிருந்து பார்த்துக்கொன்ற சாமர்த்தியம் இருந்தா அதுக்குமேல் என்னம்மா வேணும்" ... என்று சொல்லவது பெண் சமுதாயத்தையே இழிவு படுத்துவதாக அமைந்திருக்கின்றது. முனீர் போன்ற படித்தவர்களே பெண்கள் அடங்கியிருக்க வேண்டும் என்று நினைப்பார்களேயானால் பெண்சமுதாயம் எப்படியெல்லாம் அடிமைப்படுத்தப்படுகிறது என்பது இக்கதாபாத்திரத்தின் மூலம் உணர முடிகிறது. இதே கருத்தை கீ. வீரமணி "தந்தை பெரியாரின் பெண்ணுரிமைச் சிந்தனை" எனும் தொகுப்பில்,

"மனைவியே
நிரந்தரமான எனது வேலைக்காரியே !
விலையையும் பெற்று நான் கொணர்ந்த மீளா அடிமையே !
பதிவிரதை யாக உன்னைப் பாருலகம் பார்க்க
நீதான் எத்தனை மாரத்தான் ஓட்டப்பந்தயம் ஓட

வேண்டியுள்ளது !
நல்ல சமையற்காரியே,
எனது போதை மாத்திரையே, பிள்ளைப் பண்ணை
வயலே !
உன்னை நான் இராமனைப் போல தீயில்குளிக்கவா
சொன்னேன்? இல்லை காட்டுக்கா அனுப்பினேன்?
அர்ச்சுனனைப் போல் கூட்டுறவு ஸ்டோராகவா
ஆக்கினேன்.
கோவலனைப்போல் காக்கவா வைத்தேன்?
என் கற்புக்கரசியே உனது இடம் அதோ "சொர்க்கத்தில்"
வீட்டில் கட்டிய மாட்டுக்குக்கூட தீனிபோட்டுதான்
நான் பால் கறக்கிறேன் நீயோ என் காமதேனு !
தனக்கென்று தனிமுகவரிகூட தேடாத என் அடிமையே" !
என்று காட்டியிருப்பது, பெண்ணியம்பற்றி ஆழமாகச் சிந்திக்க வைக்கிறது.

## பெண்ணுக்கு பெண்ணே எதிரி :

இன்றைய அறிவியல் உலகில் விண்ணுக்கு மேலேயும் மண்ணுக்குக் கீழேயும், கடலுக்கு அடியிலும் கால்பதித்து ஆய்வு செய்கின்ற நாட்களில், திருமணம் முடிந்த ஒரு தம்பதியர்க்கு ஓராண்டு அல்லது ஈராண்டுகளில் அவர்களுக்குப் பிள்ளைப்பேறு இல்லாதிருந்தால் அந்தத்தம்பதியரில் பெண்ணுக்கு மட்டும் "மலடி" என்ற "பட்டம்" கொடுத்து அந்தப் பெண்ணின் கணவனிடம் இருந்து அவளைப்பிரித்து அவள் வாழ்க்கையைச் சிதைத்து விடுகின்றனர். வசந்தத்தை அழித்து விடுகின்றனர். இதற்குக் காரணம் அந்தப் பெண்ணின் மாமியாராகவோ .... அல்லது அவளின் நாத்தனாராகவோ தான் (கணவரின் சகோதரி) இருக்கிறார்கள். பிள்ளைப் பிறப்பு இல்லாவிட்டால் பெண்தான் முழுக்காரணம் என்று சொல்கின்ற இச்சமூகம் ஆணுக்கு மட்டும் "மலடன்" என்ற பட்டம் கொடுக்க மறுப்பது ஏன்? என்பது சிந்தனைக்குரியது.

மேலே கூறப்பட்ட கருத்தின் அடிப்படையில் ஆசிரியரின் "தாய்ப்பறவை" எனும் சிறுகதையில் கதாபாத்திரங்கள் அமைந்துள்ளன. உஸ்மான், அவன் தாயார் மைதீன் பாத்து, அவன் மனைவி கரீமா ஆகிய கதாபாத்திரங்களின் போக்கை நோக்கும்போது உஸ்மானுக்கும், கரீமாவிற்கும் திருமணம் முடிந்து ஐந்து வருடங்களாகக்குழந்தை பிறக்கவில்லை. இதற்குக் காரணம் கரீமாதான் என்று சொல்லி மாமியார் மைதீன்பாத்து "கல்யாணம் பண்ணி அஞ்சு வருசமாச்சு....... புள்ளையையுங் காணோம், குட்டியையுங்காணோம் ... சரியான மலட்டு வம்சம் அவளை வார்த்தை (தலாக்) சொல்லி விட்டு வேறே பொண்ணு பார்க்க வேண்டியதுதான்" என்று கூறுகிறாள். இக்கதையில் ஒரு பெண்ணே மற்றொரு பெண்ணை இழிவுபடுத்துவதாகக் காட்டியிருப்பது பெண்களே நீங்களும் உங்கள் இனத்தைப் பற்றிச் சிந்தியுங்கள் என்று அறிவுறுத்தி இருப்பது போல் தோன்றுகிறது. மேற்கூறிய கருத்துக்களை உற்றுநோக்குமிடத்து ஆசிரியர் பாத்திமுத்து சித்தீக் தனது "இடி மின்னல் மழை" சிறுகதைத் தொகுப்பில் பெண் பாத்திரங்களைப் பெருமையுடைவர்களாகவும் தியாக உள்ளம் கொண்டவர்களாகவும் படைத்திருப்பது ஆசிரியர் பெண்கள் மீது வைத்திருக்கும், மதிப்பையும் அன்பையும் காட்டுகின்றது. அதே வேளையில் அப்பெண் கதாபாத்திரங்களுக்குக் கல்வியும், தன்னம்பிக்கையும் பேச்சுரிமையும் சமுதாயத்தில் மறுக்கப்பட்டிருக்கிறது என்பதையும் உணர்த்தியிருக்கிறார். பெண் சமுதாயம் இப்படிப்பட்ட சிக்கல்களிலிருந்து வெளிவரவேண்டும். அதற்காகக் கல்வியில் வேலை வாய்ப்பில், நிர்வாகத்தில் பெண்கள் முழுக்கவனத்தையும் செலுத்த வேண்டும் என்று தூண்டியிருக்கிறார். ஆண் சமுதாயத்திற்குப் பெண்ணினத்தை எப்படி மதிக்க வேண்டும் என்பதையும் உணர்த்தி அவர்களையும் பெண்களைப் பற்றி சிந்திக்க வைத்திருக்கிறார். இவ்வாய்வின் மூலம் ஆண்களுக்குள்ள அத்தனை உரிமைகளையும் பெண்களும் பெற வேண்டும் என்பதே ஆசிரியர் பாத்திமுத்து சித்தீக்கின் நோக்கமாக அமைந்திருக்கிறது. என்பதை அறிய முடிகிறது.

## பார்வை நூல்கள் :

1. தந்தை பெரியாரின் பெண்ணுரிமைச் சிந்தனை
தொகுப்பு கி. வீரமணி முதற்பதிப்பு (2001)

## அடிக்குறிப்பு

1. தந்தை பெரியாரின் பெண்ணுரிமைச் சிந்தனை (பக் - 5)
2. தந்தை பெரியாரின் பெண்ணுரிமைச் சிந்தனை (பக. 29)

## சொற் பொருள் :

1) தலாக் (மணமுறிவு)

## உமாமகேசுவரி : "மாறாத தினங்கள்"
## விசும்பிடும் ஒளிர்தலில் வெந்திடும் பெண் குரல்

*முனைவர். இரா. சந்திரசேகரன்,* எம்.ஏ., எம்.ஏ., எம்.ஏ., எம்.ஏ., எம்.ஏ., பி.எச்.டி., பி.எச்.டி.,
தமிழ்த்துறைத் தலைவர், பாரதியார் பல்கலைக்கழகம், கோயம்புத்தூர் - 641 046.

நவீன தமிழ்க் கவிதையின் கருத்தெல்லைகளும் உணர்தல் வெளிகளும் உணர்விப்புச் சூழல்களும் மிகப் புதிய அலைவுகளால் வெப்பமாக அசைவிக்கப்படுகின்றன. கவிதையின் உள்ளீட்டுப் பரிமாணங்களிலும் கருத்தாக்கத் தளங்களிலும் புதிய புதிய முறைகள் வெடிப்புறலாக எழுகின்றன. பெண்ணின் குரல், சுயமான குரலாகத் தன்னை அடையாளப் படுத்திக் கொள்வதற்கான உயிர்த்தல் ஆவேசமாக நிகழ்கிறது. காலங்காலமாக விதிக்கப்பட்டு, கிறுக்கப்பட்டுள்ள எல்லைகளுக்குள் சுயமிழந்து - சுயமழிக்கப்பட்டு - பதஞ் செய்யப்பட்டிருந்த கற்பிதங்களைத் தகர்த்தபடி, தன்னைத் தன் சுயத்தை, அடையாளங் காண்பதற்கான தகர்த்தபடி, தன்சுயத்தைத் தானே மீண்டும் அடைவதற்கான பெண்ணியக்குரல் அது. அந்தக்குரலுக்குத் தமிழ்க்கவிதை தன்னை விரித்துக்கொடுத்திருக்கிறது. தனக்குள் உற்சாகமாய் ஏந்தி அசைய விட்டிருக்கின்றது. அத்தகையவர்களில் கவிஞர்உமாமகேசுவரி குறிப்பிடத்தக்கவர்.

"தான் கனவுறும் விதமாக அமையாத, தன்னால் தர்க்க பூர்வமாகப் புரிந்து கொள்ளவோ, விரும்பும் விதமாக கட்டுப்படுத்தவோ, இயலாத வாழ்க்கையை அதன் முழுத் தீவிரத்துடனும் உணர்வுபூர்வமாக அர்த்தப்படுத்திக் கொள்ள விழைவதாகவே உமாமகேசுவரியின் கவிதைகள் இருக்கின்றன. தனது பால் அடையாளம் சார்ந்து தன்னைச் சுற்றிலும் எழும்பி விட்ட கண்ணிற்குத் தெரியாத வேலிகள் சுபாவமாகத் தான் இயங்க அனுமதிக்கப்பட்ட முறுகலான எல்லைகள் - இவை பற்றிய வலி மிகுந்த பிரக்ஞையும் அதன் காரணமாக மனம் உணரும் அந்தரங்கமான தனிமை கலந்து உருவாகும் விலக்க முடியாத இருளின் நடுவில் சொற்களின் நடுங்கும் சுடர் கொண்டு தன் சுயம் வகிர்ந்தெடுக்க முற்படுகின்றன. இவர் கவிதைகள் என்று மிகச் சரியாகக் கூறுகிறார் மோகனரங்கன். "எழுதாமலிருக்க முடியாததால் தான் எழுதிக்கொண்டிருக்கின்றேன்.... வெளியுலகோடான உறவு பெண்களுக்கு நிர்த்தாட்சண்யமாக மறுக்கப்பட்ட வீடுகளிலேயே நான் பிறந்து வாழ்ந்து வருகின்றேன். சிறுவயதில் அவ்வப்போது நலிவுறும் உடலும், அதனால் விளையாட்டில் நாட்டமின்மையும் தனிமைக்கானதனிமைக்கான பிரியமாகத் திரண்டன. என்னோடேயான அந்தரங்க உரையாடல்களாகவே எழுதத் தொடங்கினேன்.....எனக்கேயான சுதந்திரம் மிகுந்த தனியுலகை எழுத்தில் அமைக்க முடிந்தது" என்று கூறும் கூற்றிலிருந்து உமாமகேஸ்வரியின் படைப்புப் பின்புலத்தை நாம் உணரமுடியும் "வெறும் பொழுது" என்னும் தொகுப்பில் உள்ள "மாறாத தினங்கள்" என்னும் கவிதையில் ஒரு பெண்ணின் சுயம் உணர்ந்த அவத்தை எவ்வாறு உமாமகேஸ்வரியால் கொதிக்கக் கொதிக்க அனுபவப்படுகிறது என்பதை உணர்வதும் உணர்விப்பதும் இக்கட்டுரையின் நோக்கம்.

"நட்சத்திரங்கள் கோர்த்த /மேகத்தின் ஒளிர்வுடன்
அஞ்சறைப் பெட்டி வட்டத்தில் /என் வயதை இசைத்துக்
கொண்டிருந்தன பொழுதுகள்"வானம் தழுவி, மேகம் தழுவி, விரிகின்ற ஆசைகளின் உலகம், இப்போதய அஞ்சறைப் பெட்டிதான் அவள் உலகம், நட்சத்திரங்கள் கோர்த்த மேகத்தின் ஒளிர்வு அஞ்சறைப் பெட்டிக்குத் தெரிவதற்கு நியாயமில்லை. நட்சத்திரங்கள் என்பவை மின்னி மின்னி மறையும் வெறும் ஒளிப்புள்ளிகள் அல்ல, கணந்தோறும் கணந்தோறும் நான் உயிர்த்தெழுவேன் என்றும் துள்ளல்கள் என்னை அழிக்க முடியாது, மீண்டும் எழுவேன் என்பதற்கான அற்புதம்.

இந்தப் பெண்ணின் வாழ்க்கை. பொரியல் கிளறும்போது, இவள் தன் வாழ்க்கையைக்

கிளறிக்கொண்டிருக்கிறாள்; பால் காய்ச்சக்காய்ச்ச இவள் தன்னையே காய்ச்சிக் கொண்டிருக்கிறாள்.

"இரண்டே கோடுகளிருந்தன/என் சித்திரத்தில்
கிளறிய பொரியல்கள்/காய்ச்சிய பால்"/என்கிறார் உமாமகேசுவரி. மிக இயல்பான சொற்கள்தாம். ஆனால் இந்தச் சொற்களுக்குள் கிளறிக் கிளறிக் கருகிப் போன உயிரின் வாசனை குமட்டக் குமட்ட வருகிறது; காய்ச்சக் காய்ச்சக் கதறிக் கதறிக் கரையும் குரலின் அவலம் தெரிகிறது. சமையல் அறைக்குள் கதறும் குரலின் உள்ளுயிர் ஓசை எப்படித்தான் வெளியே தெரியும்? அறுசுவை உணவின் நறுமண வாசனையில், நாக்கின் சுவையில் அது ஒடுக்கப்பட்டு விட்டதே! காலங்காலமாகப் பெண்ணின் குணமாய் அலங்காரப்படுத்தப்பட்ட கற்பிதங்களுக்குள் அது புதைக்கப்பட்டு விட்டதே! ஆனால் அது அழிக்கப்பட்டு விட முடியுமோ? மெல்லிய விசும்பலில் அது தன்னைத் தக்கவைத்துக் கொண்டு, உயிர்ப்பின் தருணத்திற்காகக் காத்துக்கொண்டிருக்கிறது வலிகளை அனுபவித்தபடி.

"அநாதரவான தெருமுனைப் பைத்தியம் போல்
விசும்பிய குருவியைக்
குறித்து ஒன்றும் கூறவில்லை."

வலிகளைச் சொல்லவும் கூட முடியாதபடியான அலங்காரப் புன்னகை முகங்கள் முகமூடிகளாக் கவிழ்க்கப்பட்டுள்ளன. அஞ்சறைப்பெட்டிக்குள் வழிந்து கிடக்கிறது பெண்ணின் விசும்பல்.

இந்த விசும்பலில் கண்ணீர் இல்லை; கண்ணீரை வழிய விடுவதற்கும் கூட அனுமதி இல்லை; ஆனாலும் விசும்பலில் வழியும் கண்ணீரை அறையின் சுவர்கள் உள்வாங்கி உள் வாங்கி ஈரமாகியிருக்கிறது. "பனித்த சுவர்" என்கிறார். சிறையின் சுவர்களுக்குக் கூட தெரிகிறது, விசும்பலின் கண்ணீர். விளக்குகளும் கூட சொல்லத்தெரியாமல் விக்கி விக்கி மினமினுக்கிறது.

"பனித்த சுவர்களோடு
விளக்குகள் விக்கி மினுங்க"

என்று அழுத்தமாகக் கூறுகிறார் உமாமகேசுவரி. விக்குகின்றன விளக்குகள்; வேறென்ன செய்யமுடியும் அதனால்? அறைக்கெல்லாம் வெளிச்சம் தரமுடிந்தாலும் மூலைமுடுக்கெல்லாம் வெளிச்சம் தர முடிந்தாலும் அந்தப் பெண்ணுக்குள் வெளிச்சம் தர முடியவில்லையே!

வாழ்தல் அல்லாத ஒரு வாழ்தலைத் தருவதற்காக, வீடு இப்போது அழகாக அமைந்திருக்கின்றது. நல்ல உணவு, நல்ல உறக்கம், இன்னும் இன்னபிற ஜீவித்தல் நகர்தல்புள்ளிகளுக்கான சகல விசயங்களோடும் வாழ்தல் நகர்கின்றது. வாழ்தலின் நிஜமான அர்த்தங்கள் உரைக்கப்படாமலேயே

சுவர்களுக்கும் தெரிந்துதான் இருக்கின்றது. வெளியே கதறமுடியாமல் உள்ளுக்குள்ளே விசும்பிக்கொண்டிருக்கும் அவலத்தின் சோகம். பனித்தசுவர்களாகக் காவல் காத்துக் கொண்டிருப்பதைத்தவிர வேறு எதுவும் செய்ய முடியாது. ஏனெனில் இந்தச் சுவர்கள் வெறும் செங்கற்களாலும், கல்லாலும் அல்லது மண்ணாலும் அல்லது வேறு பிற பொருட்களாலும் கட்டப்பட்டவை மட்டுமல்ல, உள்ளே கண்ணுக்குத் தெரியாத இன்னுமொரு வலுவான சுவர் மிக கனமாக அழிக்க முடியாதபடி நூறு நூறு ஆண்டுகளாக மீண்டும் மீண்டும் செறிவாகி உறுதியாக்கப்பட்டது. ஆண்களால் அவர்கள் அறியாமலேயே கூடப் பல வேளைக்ளில் - உருவாக்கப்பட்ட சுவர் இது. தவறு யாருடையது. எங்கே நிகழ்ந்தது? தெரியாது. சுவர்களை எழுப்பியவர்கள் தவறா? அப்படியே பாதுகாத்துக் கொண்டிருக்கிறர்களே அவர்கள் தவறா? சுவர்களை ஒப்புக்கொண்டிருக்கிறார்களே அவர்கள் தவறா? தவறுகள் மேல் தவறுகள்.

"இந்தவீடு என்னை அணைக்கிறது தவறுகளின் சேற்றை அஞ்சுகிறேன்"

தவறுகள் சேறு போல அடர்ந்து கிடக்கிறது. எவ்வளவு ஆழம்? தெரியாது. சரி செய்ய உள்ளே கை வைத்தால் உள்ளே இழுத்துப் புதைத்துக் கொள்வோமோ? மீளவே முடியாமல் உள்ளே அழுத்திப் புதைத்து விடுமோ?கனவு வெளிகளுக்குள் காதல் என்பது எவ்வளவு பரவசமானது. சாதி, மதம், பணம், தரம், செல்வாக்கு செல்வம் என்றென்ன வெல்லாமாகவோ முளைத்தெழும் தடைகள் எல்லாம் இங்கே இல்லை. காதலுக்கான உணர்தல்தான் அதன் உயிர்பெல்லை. கனவுகளாய் மானுட பரவசவெளிகள் சுத்தமாகவும் சுதந்திரமாகவும் இருந்தன. துள்ளித்துள்ளி முகிழ்த்தெழும் குழந்தமையின் உற்சாகம் இருந்தது. ஆனால் இப்போது புழுதி அடர்கிறது. கனவு வெளிகளில் காதல் வெளிகளில் புழுதி அடர்கிறது. புழுதி என்பது உயிர்த்தல் இல்லாத சக்கை. மிதித்து மிதித்து பொடியாக்கப்பட்ட நிலையில் கனவுகள் ஏது? காதல் ஏது? "புழுதி அடர்கிறது" என்று அற்புதமாகக் கூறுகிறார் கவிஞர் உமாதேவி. "அடர்தல்" என்பது, பொருளடர்த்தி மிக்க, உணர்ச்சி அடர்தல் மிக்க, அற்புதமான சொல்லாட்சி. அடர்தல் என்பது மீண்டும் மீண்டும் செறிதல், அழிக்க அழிக்க துடைக்கத் துடைக்கச் செறிதல், துடைத்துவிட்டுச் சுத்தமாக்கிவிட்டு மேலே செல்லமுடியாதபடியான அடர்தல் இனி தூதுதான் அங்கே அடர்த்தியாக நிறைந்திருக்குமே தவிர வழிகளின் புலப்பாடு இல்லை. கனவுகளும் காதலும் இல்லை. அதனால் ஆசைகளின் வெளிப்பாடு இல்லை. உயிர்ப்பு சுரக்கும் துள்ளல் இல்லை. ஜீவித நுகர்தல் இல்லை. இல்லை என்று நினைக்கின்ற போதே நினைவுகள் தடுமாறுகின்றன.

"அச்சுப் பிசகாத ஆண்களின் நிழல்கள்/நீள்கிற சுவர்களுக்குள்

நின்று கொண்டிருக்கிறேன்"/ஆண்களில் வேறுபாடு உண்டோ? தோற்றத்தில் கொஞ்சம் கொஞ்சம் வேறுபாடுகள் இருக்கலாம். ஆனால் உள்ளுக்குள்ளே - பெண்ணின் மீதான வினைப்பாடுகளில் எல்லோருக்கும் ஒரே முகம்தான், ஒரே குரல் தான், வேண்டுமானால் முகங்களில் சில ஒப்பனை வேறுபாடுகள் இருக்கலாம். குரல்களில் சில ஏற்ற இறக்கங்களும் தாளநயங்களும் மாறுபடலாம், ஆனால் இலக்கு என்னவோ ஒன்றோ ஒன்றுதான். அது பெண்ணை ஒடுக்குவது. பெண்ணை ஒடுக்கி அவளுடைய சுயத்தை அழிப்பது. அவள் சுயத்தை அழிப்பதன் மூலமாகவே தன் சுயத்தை காப்பாற்ற முடியும் என்பதான கற்பிதம் அவனுக்குள் இருப்பதால் விளையும் இழிந்த இலக்கு இது. இந்த இலக்கினை நோக்கியே எல்லா ஆண்களும் ஏதாவது ஒரு வகையில் இயங்கிக்கொண்டிருக்கின்றார்கள். அவர்கள் வெளியே வேறெங்கும் இருந்தாலும், அவர்களின் நிழல்கள் வீட்டிற்குள் சுவர்களைத் தாண்டி, எல்லா இடங்களிலும் ஆக்கரமிப்பு செய்யும் தோரணையுடன் நிறைந்திருக்கின்றன. எல்லா வீடுகளிலும் தான் - குடிசையானாலும் மாளிகையானாலும் நிழல்களாலேயே இயக்கப்படுகின்றனர்.

கவிதை என்பது பொழுது போக்கான, கிளுகிளுக்க வைக்கிற ஒரு புனைவு மட்டுமல்ல, கரைகிறபோது தன்னை நிலைநிறுத்திக் கொள்கின்ற கரைகிறபோது தன்னை இணைவித்துக் கொள்கின்ற, அழிகிற போது தன்னை உயிர்ப்பித்துக்கொள்கின்ற, எரிகிறபோது தன்னை குளிர்வித்துக் கொள்கின்ற, இலக்குத் தெரியாத வெளிகளில் தன்னைத் தானே தேடிக்கொள்கின்ற....இவையெல்லாவற்றிற்கும் களம் தருகிற ஓர் அற்புதம். அஞ்சறைப்பெட்டிக்குள் ஒடுக்கப்படுகின்ற ஒரு பெண்ணின் கனமான தீவிரமான ஆனால் வெளித்தெரியாத அவத்தையை உமாமகேசுவரியின் இக்கவிதை வெகு திரட்சியாகப் பதிவு செய்கிறது."குடும்பமும் சமூகமும் பெண் மீது நிலைநாட்டுகின்ற ஒடுக்கு முறைகள் விலக்க முடியாத தனிமை, வெவ்வேறு கட்டங்களில் தொடர்கிற வேதனையின் நிழல் எல்லாமும் எழுதுவதற்கான தேவையை ஏற்படுத்துகின்றன" என்கிறார் உமாமகேசுவரி. இந்தக்கவிதையும் அப்படித்தான். இலக்குகள் எங்கோ இருக்கிற உண்வோடும், இலக்குகளை நோக்கி நகரவும் அடையவுமான ஆற்றலும் தன்னிலும் இருக்கிறது என்ற உணர்வோடும் ஆனால் இலக்குகளைக் காண முடியாமலும், அதற்கான சிறு வாய்ப்புக்கூட முடியாமல் - அந்த அசைதல் அமைவதற்கான சிறுவாய்ப்பு கூட வரும் என்ற நம்பிக்கையில்லாமல் - விசும்பிக் கொண்டிருக்கும் விசும்பலின் அவலம், கவிதைக்குள் ஒவ்வொரு சொல்லிலும் மோதி மோதி எதிரொலித்துக் கொண்டிருக்கிறது.

## "தீயில் எதுவும் வேகும்" சிறுகதையில் பெண்ணியம்

திருமதி. *ஜெ. சந்திரகலா,* எம்.ஏ., எம்.ஃபில்., விரிவுரையாளர்,
தமிழ்த்துறை, பொன்னையா ராமஜெயம் கல்லூரி, தஞ்சாவூர்.

பிரதீபா ராஜகோபாலன் அவர்கள் கோவை அருகில் உப்பிலியப்பாளையத்தில் பிறந்தவர். இவர் 250-க்கும் மேற்பட்ட சிறுகதைகளும், 12 நாவல்களும் சில நாடகங்களும் எழுதிக் குவித்திருக்கிறார். இவருடைய படைப்புகளுக்குப் பல பரிசுகள் கிடைத்துள்ளன. இவருடைய படைப்புகளுள் ஒன்றான "தீயில் எதுவும் வேகும்" என்ற சிறுகதையில் பெண்ணியச் சிந்தனைகள் வெளிப்படுகின்றன.

பெண்ணுள்ளம் பெரிதும் அகநோக்குச் சிந்தனை உடையது. உள்ளத்து உணர்வுகளோடும், உறவுகளோடும் தொடர்புடையது. ஆனால் இச்சிறுகதையில் வரும் பொன்னுத்தாயி, புற உலகத்தின் விதிகளுக்கும், சட்டங்களுக்கும் அப்பாற்பட்ட நிலையில் ஆண்வாழ்க்கையைவிட பெண் வாழ்க்கையே போராட்டம் மிக்கதாய் விளங்குகிறது என்பதை எடுத்துக்காட்டும் வகையில் படைக்கப் பட்டிருக்கிறாள். இச்சிறுகதையில் காணலாகும் பெண்மையைப்பற்றியும், அவர்களின் உள்ளம்,உரிமை, பண்பு போன்றன பற்றியும் ஆராய்வதே இக்கட்டுரையின் நோக்கம் ஆகும்.

**கதைச் சுருக்கம் :**

இடையார் பாளையத்து மக்கள் கையில் பணத்துடனும், பசியோடும் கைக்குழந்தைகளை வைத்துக்கொண்டு காலையிலிருந்து கால்கடுக்க ரேஷன்கடை வாசலில் நிற்கிறார்கள். மக்களின் பசியையும், துன்பத்தையும் பற்றிப் புரிந்துகொள்ளாமல் காலம் தாழ்த்திக் கடையைத் திறந்த ரேஷன் கடைகாரன் பகல் 12 மணி வரைக்கும் தான் ரேஷன் போடுவோம் மீதி 3 மணிக்குதான் என்று இரக்கமே இல்லாமல் பேசுகிறான். அப்போது விடியற்காலையிலிருந்து பல்கூட விளக்காமல் அரிசிக்காக நீண்ட வரிசையில் காத்துக்கிடக்கும் பெண்கள் அதிர்ச்சிக்குள்ளாகிறார்கள். அரிசிக்காக எதிர்பார்த்து நிற்கும் பெண்களின் சார்பில் பொன்னுத்தாயி என்பவள் ஒரு வாரமாக ரேஷன் கடையை திறக்காததை சுட்டிக்காட்டியும், அதனால் தங்களுக்கு ஏற்பட்ட துன்பத்தையும் விளக்கி, இன்றுவிட்டால் இனி என்றைக்கு அரிசி கிடைக்குமோ என்ற அச்சத்தில் ரேஷன் கடைகாரனின் கூற்றுக்கு எதிராகக் குரல் கொடுக்கிறாள். இருவருக்குமிடையே வாக்குவாதம் ஏற்படுகிறது. வாக்குவாதம் முற்ற ரேஷன் கடைகாரன் நேரம் முடிவதற்கு முன்னதாகவே கடையை மூடுகிறான். பொன்னுத்தாயி மூடவிடாமல் தடுக்கிறாள். கைகலப்பு ஏற்படுகிறது. கடைக்காரன் பொன்னுத்தாயைக் கோபமாகக் கீழே தள்ளிவிடுகிறான். கீழே விழுந்து இரத்தம் வெளிவருவதைப் பார்த்தவுடன் இரண்டுநாளாய், பசியின் வெறியில், குழந்தைகளின் அலறில், புருஷர்களின் இயலாமையை மீறிய கோபங்களால், வெம்பிப்போன பெண்கள், ரேஷன் கடையில் கருவாடாய்க் காய்ந்து காத்திருக்கப்போய், அங்கு எதிர்கொண்ட அவமானத்திலும், வார்த்தைகளின் பரிமாற்றத்திலும் சின்னப்பொறியாய்ப் பற்றிக்கொண்ட பசிநெருப்பினால், ரேஷன் கடையைச் சூறையாடிவிட்டார்கள்.

**பெண்ணியப் பார்வைகள் :**

பாரதியார் பாடல்களில் காணலாகும் பெண்ணியச் சிந்தனைகளான,

"ஆணும் பெண்ணும் நிகரெனக் கொள்வதால்
அறிவில் ஓங்கி இவ்வையகம் தழைக்குமாம்"

என்ற வரிக்கு ஏற்ப, இக்தையாசிரியரின் நோக்கம் அமைந்துள்ளது. இக்கதையின் தலைவி பொன்னுத்தாயி தனக்கு ரேஷன்கடையில் பொருள் கிடைக்காதபோது, தன்னுடைய உரிமையை நிலைநாட்டும் தன்மையும், அப்பிரச்சினைகளுக்கு முடிவுகாண ஆவேசமாகப் பேசுகின்ற ஆளுமைத்தன்மையும் பொறுப்பற்ற முறையில் நடந்துகொள்ளும் ரேஷன்கடைக்காரர் போன்ற ஆணினத்தையும் வெளிச்சத்திற்கு கொண்டுவருகின்ற வகையில் பெண்ணிய வெளிப்பாடு இச்சிறுகதையின் அடிநாதமாக இழையோடுவதை அறியமுடிகிறது.

மென்மை, பெண்மையின் அணிகலனாக இருக்க வேண்டும் என்ற மரபுவழிச் சிந்தனை இக்கதையில் உடைத்தெறியப்படுகிறது. இக்காலப் பெண்கள் தங்களக்குச் சோதனை ஏற்படும்போது அவற்றை எதிர்த்து நின்று வெற்றி பெறக்கூடிய போர்க்குணத்தையும், ஆளுமைப் பண்புகளையும் இச்சிறுகதை படம்பிடித்துக்காட்டுகிறது. பெண்கள் பலர் தங்களுக்குரிய உரிமைகளைப் பெற முயற்சிசெய்யும்போது அது போராட்டமாக வெடிக்கிறது. தங்களை இகழ்ச்சியாகப் பேசிய நிலையில் அழுதுகொண்டு மூலையில் அடைந்துகிடக்காமல், அதனை எதிர்நின்று வெற்றிபெறும் பெண்ணினத்தை இச்சிறுகதை சிறப்பாக எடுத்துரைக்கிறது. மனித சமுதாயத்தை உருவாக்கும் பெண்மையை மனிதகுலம் மதிக்க வேண்டும் என்ற உயர்ந்த சிந்தனைகளையும் இச்சிறுகதையின் வாயிலாக ஆசிரியர் வலியுறுத்தியுள்ளார்.

### அன்பு உள்ளம் :

இக்கதையின் தலைமைமாந்தரான பொன்னுத்தாயி ரேஷன்கடைக்காரனை எதிர்க்கும் புரட்சிப் பெண்ணாகவும், கோபம் மிக்கவளாக வெளிப்பட்டாலும் இயல்பில் அன்பு உள்ளம் உடையவளாகவே காணப்படுகிறாள். ரேஷன் கடையில் கடுமையான வெயிலில் நிற்கும்போது குழந்தை பசி தாங்காமல் கத்துகிறது. உடனே குழந்தையின் அலறலைப் புரிந்துகொள்ள இயலாத ஒரு தாய் தன் பிள்ளையை அடிக்கிறாள். அப்போது,

"ஏம்மா அறிவிருக்கா ........... அது பசிக்கு அழுவுதோ வெயில்
தாங்கமாட்டா அழுவுதோ ............... அதோ, அந்தப்புங்க மரத்துக்குக் கீழே
உக்காந்து பாலைக்குடு ................ உண்ற வரிசை வந்தா கூப்பிடறேன்.......

என்ற கூற்றிலிருந்து அவளின் அன்புள்ளம் வெளிப்படுகிறது. மேலும் ரேஷன்கடையை சூறையாடியக் குற்றத்திற்காக போலீஸ்காரர்கள் அவளைக் கைதுசெய்ய வந்தநிலையில் தன்னுடைய பிள்ளைகளின் நிலையைச் சொல்லி "நான் இல்லைன்னா கதறி அழுதே செத்திடுங்க" என்ற கூற்று அவளின் அன்புள்ளத்தையும், படிக்கும் வாசகர்களுக்கு ஒருவித நெகிழ்ச்சியையும் தோற்றுவிக்கிறது.

### உரிமை வேட்கை :

இன்றைய சமூகத்தில் எல்லா நிலைகளிலும் பெண்களுக்கு சமஉரிமை உண்டு. தங்களுக்குரிய உரிமைகள் மறுக்கப்படும்போதோ, அல்லது தட்டிப்பறிக்கும்போதோ அதனைப் பெற முயற்சிக்கும் உரிமை வேட்கையுடைய பெண்ணினத்தை பொன்னுத்தாயி பாத்திரம் வழி படைத்துள்ளார் ஆசிரியர். 12 மணி வரைக்கும் தான் ரேஷன் போடுவோம். இன்னும் அரைமணிநேரந்தான் இருக்கு, ஆறெழு பேருக்குத்தான் போட முடியும், மீதியெல்லாம் 3 மணிக்கு வந்துடுங்க என்று ரேஷன் கடைகாரன் சொல்ல, வரிசையில் நின்ற எல்லாப் பெண்களும் "என்னது என்னது ....." என்று எல்லோரும் கதறினார்கள். அவர்களில் சிலர் நமக்கு அரிசி கிடைக்குமோ? கிடைக்காதோ? என்று பயந்து நின்றார்கள். புங்கமரத்தடியில் பால்கொடுத்துக் கொண்டிருந்தவர்கள்கூட ஓடிவந்து வரிசையில் தன் இடத்தில் நின்று கொண்டார்கள். இவர்களுக்கு மத்தியில் தங்களக்குரிய உரிமையைப் பெறும் வேட்கைக்கொண்ட பொன்னுத்தாயி,

"ஏண்டா மாகாளில போறவனே ............. வெடியாலை பல்லுகூட
வெளக்காம ............ கைக்கொழந்தையை வச்சுட்டு நிக்கறோம். ஒரு
வாரமாகக் கடைக்கு அரிசியை கொண்டு வரல ......... யானைமேல
வந்தாப்பல இன்னைக்கிக் கொண்டுவந்தே இன்னைக்கி உட்டா
வருதோன்று வயித்தக் காயவச்சுட்டு நிக்கறோம். மத்தியானம்
வாங்கன்னு சுளுவாச் சொல்லிட்டே........... மரியாதையா எல்லோர்க்கும்போடு"

என்று ஆவேசத்தோடு கூறுவது அவளின் உரிமை வேட்கையையும், தவறைச் சுட்டும் தன்மையும் வெளிப்படுகின்றன.

### பேச்சுரிமை :

இச்சிறுகதை பெண்ணின் பேச்சுரிமை போற்றப்படும் வகையில் அமைந்துள்ளது. ரேஷன் கடைகாரன் "உங்க பிச்சைக்காசுல ரேஷன் அளந்துபோட்டு பொழைக்கணும்னு எங்கப்பன் பெத்து உடலெ" என்று கூறும்போது, அவன் கூற்றுக்கு எதிர்கூற்றாக "ஏய்யா நாங்க தர்றது பிச்சைக்காசா உனக்குத் தோணுதா? எங்களுக்கு மட்டுமென்ன உன்னைக் கெஞ்சிக் கூத்தாடி அரிசி வாங்கிட்டுப் போயி சோறுதிங்கணும்னு யாரும் பெத்து உடலே......." என்று பொன்னுத்தாயி கூறுவதும், "திமிர் அதிகமாப்போச்சு" என்று கடைக்காரன் சொல்ல, "என்னடா திமிர் திமிர்னு கட்டுன புருஷன் மாதிரி பேசிட்டு ......" என்ற கூற்றும், ஆண்களுக்கு நிகராக பேசும் துணிவும், வீரமும் மிக்கவர்களாகப் பெண்கள் விளங்குவதை அறியமுடிகிறது. மேலும்,

இன்றைய ஆணாதிக்கச் சமுதாயத்தில் பெண்ணுக்கு எதிரான சில ஆபாச வார்த்தைகளைப் பேசி பெண்ணினத்தை இழிவுச் செய்யும்போக்கு இன்று வெளிப்பட காண்கிறோம். இவ்வகையில் இச்சிறுகதையில் கடைக்காரனின் "அரிசி போட்டா, மூடிட்டு இருந்து வாங்கிட்டுப் போவியா..." என்ற ஆபாச வார்த்தைக்கு எதிராக, "மூடிட்டு இரு, மூடிட்டு இருன்று வாய் கூசாம அடக்கற... உன்னைத் தருப்பி மூடிட்டு இருன்னு சொல்றதுக்கு எத்தனை நேரம் ஆகும்" என்ற அவளின் கூற்று பெண்களின் பேச்சுரிமையை எடுத்துக்காட்டும் வகையில் சிறப்புப் பெற்றுள்ளதை அறிய முடிகிறது.

### பெண்ணின் பெருமை

பெண்ணின் பெருமையைப் போற்றும் வகையில் இச்சிறுகதைத் தலைவி படைக்கப்பட்டிருக்கிறாள். சிறுகதையின்இறுதியில் ரேஷன்கடைகாரனின் புகாரின்படி போலீஸ் விசாரணையில் பொன்னுத்தாயி அய்யிய்யோ, நானில்லை, அவதான், இவதான்னு இன்னொருத்தரைக் காட்டிக் கொடுக்காத உயர்பண்பு மிக்கவளாக விளங்குகிறாள்.

கதையாசிரியர் பெண்ணின் சிறப்புகளைப் படைக்க விரும்பி அதனை மிகத் தெளிவாக நிறைவேற்றி உள்ளார். ஏழ்மையிலும், வறுமையிலும், பெண்ணின் வீரம், உரிமை, துணிவு போன்ற சமூக மதிப்புகள் போற்றப்படுவதை இச்சிறுகதை தெளிவுறுத்துகின்றன.

## கல்மரம் - புதினத்தில் பெண்ணியம்

*அ. சகாயமேரி,* தமிழ் இலக்கியம் -முதுகலை நிறைவாண்டு,
அ.ப.ம. கலைக் கல்லூரி, பழனி.

### முன்னுரை

தற்கால இலக்கியங்களில் புதிய போக்குகள் காணப்படுகின்றன. அவற்றுள் பெண்ணியம், தலித்தியம், அமைப்பியல், நடப்பியல், நவீனத்துவம் போன்றவை குறிப்பிடத்தக்கன. இப்போக்குகளில் புதின ஆசிரியர் திலகவதி பெண்ணிய நோக்கில் கல்மரம் என்ற புதினத்தைப் படைத்துள்ளார். புதினத்தில் பதிந்துள்ள பெண்ணியக் கருத்துக்களை ஆராய்வதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

### கல்மரம் - விளக்கம்.

மரம் என்பது நிழல் தருவது, கனிகள் தருவது, மலரை தருவது, இளைப்பாறுதலுக்கு இடம் தருவது. கல்மரம் என்பது சமுதாயத்திற்குப் பயன்படாமல் இருக்கும் மரமாகும். அதைப்போன்றே இப்புதினம் தொழிலாளர்களுடைய உழைப்பைச் சுரண்டும் முதலாளி ஆர்.ஆர். எம். என்பவரது செயலை மையமாகவைத்து அமைந்துள்ளது.

சமுதாயத்தின் மேல் மட்டத்தில் இருப்பவர்கள் மனிதத்தன்மையை இழந்து பணத்தையே குறிக்கோளாகக் கொண்டு தொழிலாளர்களைத் துன்புறுத்துவதைக் கூறுகின்றது. சமூகப் பொருளாதாரம், பண்பாடு ஆகிய நிலைகளில் ஆடவர்களால்தான் மதிப்பைத் தேடித்தர முடியும் என்ற நிலையை மாற்றி பெண்களாலும் சமுதாயத்தில் ஆடவருக்கு நிகரான நிலையை அடையமுடியும் என்பதையும், உழைப்பால் குடும்பத்தை உயர்த்த முடியும் என்பதையும் இந்தப் புதினம் உணர்த்துகின்றது.

### பெண்ணிய விளக்கம்

பெண்ணியலாளர்கள் பெண்ணுரிமையைப்பற்றிய கருத்துக்களை வெளிப்படுத்தியுள்ளனர்.

"பெண்ணியம் என்பது சமூக அக்கறையின் வெளிப்பாடு. சமூகத்தின் சரிபாதியான பெண் இனத்தின் இருத்தலைப் பேசுவது, ஆணாதிக்கப்பிடியிலிருக்கும் நிகழ்வாழ்வின் இயல்பினை விண்டுரைப்பது, மகளிரின் பிரச்சனைகளைக் கண்டறிந்து தீர்க்க முயல்வது, மரபு என்ற சமூக மதிப்பீட்டைக் கேள்விக்குள்ளாக்குவது"1. என்பர். கோட்பாடு நிலையின் பெண்ணிய விளக்கத்தை அறிவதும் புரிந்து கொள்வதும் இன்றியமையாததாகும்.

"கார்டன் என்பவர் பெண்களின் தாழ்நிலையை ஆராய்ந்து அதைமாற்ற மேற்கொள்ளப்படும் வழிமுறைகள் பெண்ணியம்"2. என்கிறார். "புட்சர் என்பவர் பெண்ணியம் என்பது பெண்கள் பாலினப் பாகுபாட்டால் அனுபவிக்கும் தனிப்பட்ட பொருளாதாரத் துன்பங்களை எதிர்த்து மேற்கொள்ளும் இயக்கமே"3. என்கிறார். பெண்ணியம் என்பது பெண்களுக்கான உரிமைகளைப் பெற்றுத்தருவது மட்டுமல்ல, சமூகத்தையே மாற்றியமைக்க முயல்வதாகும்"4 என்கிறார் சார்லட்பன்ச்

### ஆணுக்கு நிகரான பெண்ணின் உழைப்பு

கணவனை இழந்த ஆதிலட்சுமி தன்னம்பிக்கையுடன் கட்டிட வேலை செய்து தன் பிள்ளைகளை ஒரு நல்ல நிலைக்குக் கொண்டுவர வேண்டும் என நினைக்கிறாள். தன் கணவன் கட்டிட விபத்தில் இறந்ததால் தன் மகனுக்கும் இந்த நிலை ஏற்பட்டுவிடுமோ என்ற பயத்தினால் கட்டிட வேலைக்குச் செல்ல அனுமதிக்க மறுக்கிறாள். ஆடவர்கள் செய்யும் கட்டிட வேலைகளைப் பெண்களாலும் செய்யமுடியும் என்று குடும்பத்தைத் தூணாக நின்று காப்பாற்றுகின்றாள். தன் குடும்பம் வறுமையுற்ற நிலையிலும் யாரிடமும் கையேந்தி நிற்காமல் தன் சொந்த உழைப்பாலும், தன்னம்பிக்கையாலும் வாழ்கிறாள். ஆண் இல்லை என்றால் பெண்களால் ஒன்றும் செய்ய முடியாது என்று நினைக்கின்ற சமுதாயத்தில் பெண்கள் தன் சொந்த உழைப்பால் முன்னேற முடியும் என்ற பெண்ணிய கருத்தாக்கத்தினை ஆதிலட்சுமி மூலம் உணரமுடிகின்றது.

### மருமகளுக்கு இழைக்கப்படும் கொடுமைகள்

மருமகளுக்கு இழைக்கப்படும் கொடுமை என்பது காலங்காலமாக தொடர்ந்து வரும் ஒன்று ஆகும். இது பெண்ணியக் கருத்தாக்கங்களில் குறிப்பிடத்தக்க ஒன்று. ஒரே வீட்டில் மருமகளும், மகளும் கர்ப்பமாக இருந்தால் அவர்கள் ஒருவருக்கொருவர் பார்த்துக் கொள்ளக் கூடாது என்ற நம்பிக்கை இருந்து வந்துள்ளது.

"நாத்தனா புள்ளத்தாய்ச்சியா வூட்டுக்கு வந்துட்டா ரெண்டு பேரும் தலைச்சன் புள்ளக்காரிங்க ஒருத்தரு மூஞ்சில ஒருத்தரு முழிக்கக்கூடாதாம். அதுக்குன்னு என்னைப் பின்னால உட்காரச் சொல்லி நாள் பூரா வெளியேக்கூடாதுன்னு ஓலைப்படலை வச்சி மூடிட்டாங்க. சோறு திங்காம இருக்கலாம். தண்ணி குடிக்காம

இருக்கலாம், கக்கூசுக்குப் போவாம எப்படி இருக்கிறது"5 என்கிறாள். இவ்வாறு மருமகளைத் துன்பப்படுத்துகிறார்கள் மாமியார். ஒரு காலத்தில் தானும் மருமகளாக இருந்து அனுபவித்த துன்பங்களை மறந்து மாமியார் நிலைக்கு வந்ததும் மருமகளுக்குக் கொடுமைகளைச் செய்கின்றாள். மருமகளும் தன்னைப்போல் ஒரு பெண் என்பதை மறந்து, தன்மகன் நன்றாக இருக்க வேண்டும் என்பதற்காக சிறைத்தண்டனையை விட அதிகமான கொடுமைகளைச் செய்கின்றாள். மருமகள் என்பவள் தொன்றுதொட்டு இதுவரை உழைப்பவர்களாகவே சமுதாயத்தில் காயப்படுகின்றாள். பெண்களைத்துன்புறுத்தும் ஆடவர்கள் ஒரு பக்கம் இருக்க மருமகளுக்குத் தாங்கொண்ணா இன்னல்களை ஏற்படுத்தி மாமியாரும் ஆணாதிக்கவாதியாக திகழ்கிறாள்.

## சமுதாயச் சீர்திருத்தத்தில் பெண்கள்

பெண்ணியம் என்ற சொல் இன்று எல்லாஇடங்களிலும் பேசப்பட்டு வந்தாலும் சமூகத்திலும், குடும்பத்திலும், உழைப்பாலும் பெண்களின் ஒடுக்குமுறை நிகழ்ந்து கொண்டு தான் இருக்கின்றது. எனவே பெண் ஆணுக்கு இணையாகவே மதிக்கப்பட வேண்டும் என்பதைப் புதின ஆசிரியர்களின் கூற்றால் அறியலாம். சம உரிமையைப் பெண்கள் பெற வேண்டும் என்பதற்காகப் படித்தவள் என்ற கர்வம் சிறிதும் இல்லாமல் மக்களோடு மக்களாகக் கலந்து அவர்களின் பிரச்சனையைத்தீர்க்க சேவை மனப்பான்மையில் சுசீலா மனைகிறாள். சுசீலா பட்டப்படிப்பு முடித்தவள். பின்பு டாக்டர் பட்டத்திற்காக ஆய்வுக்குத் தயாரானவள் அதற்கான தலைப்பைத் தேர்ந்தெடுத்தாள். "பெண்களை வேலை வாங்க வேண்டுமானால் இனிதாகப் பேசி வேலைவாங்குகின்ற மனித நேயமே இல்லாமல் நடந்து கொள்ளும் முதலாளிகளிடம் நாம் ஏன் அடங்கிப் போக வேண்டும். ஆணின் துணையில்லாமல் பெண்களாலும் தனித்துவாழ முடியும்"6. என்று கூறுகிறாள் சுசீலா.

## பெண்ணுக்கு கல்வி அறிவு தேவை

பெண்கல்வியை அனைத்து பெண்ணிய வாதிகளும் வலியுறுத்துகின்றனர். காவேரி, சுசீலாவுடன் சேர்ந்து தானும் படித்து முன்னேற்றம் அடைய வேண்டும். அறிவை வளர்த்துக்கொள்ள வேண்டும் என்று நினைக்கிறாள். "கல்வியில் ஆணுக்கும் பெண்ணுக்கும் வேறுபாடு கூடாது. ஆணுக்குச் சமமாகக் கல்வி கற்று பெண்கள் வேலைக்குச செல்லுதல் வேண்டும்"7. என்கிறார் பெரியார். கல்வியின் மதிப்பை அறிந்த கவேரியும் சுசீலாவும் முதலாளிகள் பெண்களின் உழைப்பைச் சுரண்டுவதை அனுமதிக்க கூடாது. உரிமையைப் போராடியாவது பெற வேண்டும். தொழிலாளர்கள் ஒன்று சேர்ந்து உழைக்கும் வர்க்கமே உலகில் பலமானது என்பதை அறியச் செய்யவேண்டும் என்று கூறுகின்றனர். சுதந்திரம் கிடைத்ததும் அதைமுழுமையாக நாம் பயன்படுத்திக் கொள்வதே இல்லை. இன்னும் நம் நாட்டில் முதலாளித்துவமே மேலோங்கி இருக்கிறது. அதனால் தொழிலாளி வர்க்கத்தில் ஆண்களைவிடப் பெண்களே அடிமைப்பட்டு இருக்கிறார்கள். பெண்களுக்கு கிடைக்க வேண்டிய உரிமைகளைக் கேட்டு வாங்குவது நமது கடமை என்பது பெண்களுக்கு விழிப்புணர்வைத் தூண்ட வேண்டும் என்பதைப் புதின ஆசிரியர் திலகவதி இவ்விரு பெண்களின் மூலம் கூறுகிறார். "சங்கம் சேர்வதன் மூலம் கட்டிடத்தொழில் செய்யும் பெண்களுக்குப் பல நன்மைகள் கிடைக்கின்றது. கொத்தனார் வேலை செய்வதற்கு டிரெய்னிங்கொடுக்கிறார். பின்பு கொத்தனார் ஆகிவிடலாம்"8. என்று கூறுவதிலிருந்து பெண்கள் தனியாக நின்று உழைத்து தங்கள் தேவைகளுக்குத் தாமே பூர்த்தி செய்துகொள்ள முடியும் என்பதைக் குறிக்கோள் நிலையில் படைக்கப்பட்ட சுசீலா, காவேரி என்ற பெண்களின் மூலம் உணரமுடிகிறது.

## தொகுப்புரை

கல்மரம் என்ற புதினம் மற்றவர்க்கு நிழல்தரும் மரமாக மட்டும் இன்றி பயனுள்ள மரமாகவும் திகழ்கின்றது. பெண்களின் தன்னம்பிக்கையையும், முதலாளிகளின் உழைப்பைச் சுரண்டலையும் அதனை உடைத்தெறியும் தொழிலாளர்களின் ஒற்றுமையையும் பற்றி அறிய முடிகின்றது. கல்மரம் என்ற புதினம் பெண்களின் விழிப்புணர்ச்சிகளையும் பெண்ணியச் சிந்தனைகளையும் வெளிப்படுத்துவதாய் அமைந்து இக்காலப் பெண்களுக்கு ஒரு வழிகாட்டியாகய் அமைந்துள்ளது.

## அடிக்குறிப்புகள்

1. பிரேமா - பெண்ணியம் - ப. 14
2. சி.என்.இ குமாரசாமி, பெண்ணிய நோக்கில் பாரதி - ப. 9
3. முத்துச் சிதம்பரம் - பெண்ணிய தோற்றமும் வளர்ச்சியும் - ப. 11
4. பிரேமா - பெண்ணியம் - ப. 14
5. திலகவதி - கல்மரம் - ப.. 70
6. மேலது - ப. 80
7. முத்துச் சிதம்பரம் - பெண்ணின் தோற்றமும் வளர்சசியும் - ப. 65
8. திகவதி - கல்மரம் - ப. 85.

# "ஆற்றைக் கடத்தல்" - நாடகத்தில் பெண்ணியம்

*பொ. சகுந்தலா,* முதுகலை - தமிழ் இலக்கியம் நிறைவாண்டு,
அ.ப.ம. கல்லூரி, சின்னக்கலையம்புத்தூர்.

## முன்னுரை

இன்றைய தமிழ் இலக்கிய உலகில் எண்ணற்ற புதிய படைப்புகள் தோன்றி வளர்ந்து வருகின்றன. இவை புதிய போக்குகளில் படைக்கப்பட்டு வருகின்றன. அவற்றுள் பெண்ணியம் என்ற போக்கு முன்னணி வகிக்கின்றது. பல புனைகதைகள் பெண்ணிய நோக்கில் படைக்கப்பட்டுள்ளன. ஜெயகாந்தன், ராஜம் கிருஷ்ணன் போன்ற பெண்ணிய எழுத்தாளர்களின் வரிசையில் வரும் "அம்பை" என்பவர் எழுதிய "ஆற்றைக் கடத்தல்" என்ற நாடகத்தில் கூறப்பட்டுள்ள பெண்ணியக் கருத்துக்களை எடுத்துக் கூறுவதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

## படைப்பிலக்கிய உலகில் அம்பை

அம்பை என்பவர் ஒரு பெண் எழுத்தாளர். இவரது இயற்பெயர் சி.எஸ். இலட்சுமி என்பதாகும். இவர் புனைக்கதைகளைப் படைத்தளித்து வருகிறார். இவரது படைப்புக்களில் பெண்ணியச் சிந்தனைகள் இழையோடக் காணலாம். "இவர்தம் சிந்தனைகளை முத்திரைகளாகப் படைப்பவர். தமிழ், ஆங்கிலம், இந்தி, மலையாளம் ஆகிய மொழிகளில் கட்டுரைகளும், நூல் விமர்சனங்களும் எழுதியுள்ளார். "ஸ்பேரோ" என்ற மும்பைப் பெண்கள் ஆய்வு ஆணையத்தின் இயக்குநராக இருக்கிறார். இவர் தான் கொண்ட கருத்தை நிறுவுவதில் பிடிவாதம் உள்ளவர். இவருடைய கதைகள் பன்னிரண்டு ஆண்டுகள் வெளியிடப்படாமல் இருந்தன. இவரது நூல்கள்,

1. சிறகுகள் முறியும்
2. வீட்டின் மூலையில் ஓர் சமயலறை.
3. காட்டில் ஒரு மான்

என்ற மூன்று தொகுப்புக்களாக வெளியிடப்பட்டுள்ளன. இவரது எழுத்துக்கள், பெண்களுக்கு எது தேவையோ? அதை உணர்த்துவதாக அமையும்.1. என அறிஞர்கள் கருத்துரைப்பர். இவர் எழுதியதே "ஆற்றைக்கடத்தல்" என்ற நாடகமாகும்.

## பெண்ணியம் - விளக்கம்

பெண்ணியம் என்பது அடக்கப்பட்ட, ஒடுக்கப்பட்ட பெண்கள் எழுச்சி பெற்று மீள்வதற்கான ஒரு இயக்கமாகும். இதனையே "சமுதாயத்தின் சகல படிநிலைகளிலும் பெண் விடுதலையைக் கோருவதே *பெண்ணியத்தின் அடிப்படை*"2. என்று அறிஞர் விளக்குவர். பெண்ணிய ஆய்வானது பெண் பற்றிய ஆய்வு, பெண் நிலை ஆய்வு என இருவகைகளாக அமைகிறது. "பெண் பற்றிய ஆய்வு என்பது, இலக்கியத்தில் பெண்கள் எவ்வாறு படைக்கப்பட்டுள்ளனர் என்பது பற்றிய பொதுநிலை ஆய்வாக அமையும். பெண் நிலை ஆய்வு என்பது ஆணாதிக்க உலகில் ஒடுக்கப்பட்ட பெண்களின் சமூக இருப்பு, வாழ்வியல் சிக்கல் இவற்றை ஆராய்வதுடன், சமூகம், பண்பாடு, மதம், தொழில், அரசியல் தளங்களில் பெண்களின் இரண்டாம் தர நிலையையும், அதன் மதிப்புக்களையும் எடுத்துரைப்பனவாக அமையும்".3. இவ்விளக்கத்தின் அடிப்படையில் அம்பையின் நாடகம் இங்கு ஆய்வுக்கு உட்படுகிறது.

## நாடகத்தின் கதைச் சுருக்கம்

ஒரு வெற்று மேடையில், கருப்பு உடை அணிந்த பெண் ஒருத்தி இருக்கிறாள். இவள் பல கோணங்களில் தோன்றிப் பேசுகிறாள். பல குரல்கள் அவளைக் கேள்விகள் கேட்கின்றன. ஆண் குரல்கள், பெண் குரல்கள், "நீ யார்?" எனக் கேட்டதற்கு, "நான் சீதை" எனப் பதில் கூறுகிறாள். மேலும் அக்குரல்கள், "நீ எந்தச் சீதை", "உண்மையாகவே நீ யார்?" எனப் பல கேள்விகளை எழுப்புகின்றனர். அதற்கு அப்பெண், "நான் ஆண், நான் பெண், நான் ஜடப்பொருள்"4. எனப் பதிலளிப்பதுடன், "கல்லாகிப் போன உயிர்" என்றும் கூறுகிறாள். அக்குரல்கள்,

"நீ சோர்ந்து விட்டாய்
வலிவு உண்டா
உன்னிடம்

ஆற்றைக் கடக்க?"5.

எனக் கேட்கின்றனர். அதற்கு அப்பெண் இன்னும் சக்தி இருப்பதாகவும், இன்னொரு உலகம் காண்பதற்காக ஆற்றைக் கடப்பதாகவும் கூறி முக மலர்ச்சியடைந்து உயர்த்திய தலையுடன் எதிரே பார்க்கிறாள்.

### நாடகத்தின் கதை

நாடகத்திற்கு, இன்றியமையாத ஒரு உறுப்பாக அமையும் கதாபாத்திரங்களின் செயல்பாடே உயிர் தருகிறது. அம்பையின் நாடகத்தில் ஒரு பெண்ணும், சில ஆண், பெண் குரல்களுமே கதாபாத்திரங்களாகவே அமைகின்றன. நாடகத்தின் நடை, கவிதை நடையிலும், குறியீட்டு உத்தியிலும் அமைந்து படிப்போரைச் சிந்திக்கத் தூண்டுவதாக அமைகிறது. ஆறு என்பது காலத்தின் குறியீடாக அமைகிறது. நாடகத்தில் வரும் பெண் என்ற பாத்திரம், காலங்காலமாக வாழ்ந்த, வாழ்கிற, வாழப் போகின்ற பெண்ணின் ஒட்டு மொத்தக் குறியீடாகப் படைக்கப்பட்டிருக்கின்றது.

### ஆறுகளும் பெண்களும்

நாடகத்தின் தொடக்கத்தில் குனிந்த தலையுடன் காணப்டும் பெண் ஆற்றைப் பற்றிப் பேசுகிறாள். ஆறானது, தன்னுள்ளே படகுத் துடுப்புகளின் கீறல்கள், பிரேதத்தைத் தொட்ட மலர்கள், மரம், செடி, வீடு, உயிர்கள், சீற்றத்துடன் பொங்கி அழிக்கும் கோபம் இவற்றையெல்லாம் ஒளித்துக் கொண்டு, அடி மணலைக் காட்டும் தெளிவுடன் இருப்பதாகக் கூறுகிறாள். இவ்வாற்றின் பெயர்களாகப் பெண்ணின் பெயர்களே கூறப்படுகின்றன. எனவே இவ்வாறுகள் போன்ற பெண்களும், பல்வேறு துன்பங்களை அனுபவித்தாலும், அவற்றையெல்லாம் தாங்கிக் கொண்டு அமைதியாகவே இருக்கின்றனர் என்பதை உணர்த்துகின்றன. மேலும் அப்பெண் சிரித்து-சிந்தித்து, சிதைந்து நெடுந்தூரம் வந்தாகக் கூறுவதால், பெண்கள் காலத்தை எவ்வாறு கடந்து வந்தனர் என்பதை உணரமுடிகிறது.

### சமுதாயத்தில் பெண்களின் நிலை

ஆண் குரல்களும், பெண் குரல்களும் கலந்து அப்பெண்ணை "யார் நீ?" எனக் கேட்பதுடன், கண்களில் சோகமும், உடலில் தோய்வும், பேச்சில் சலிப்பும், குரலில் சோர்வும் கொண்டிருக்கும் அப்பெண்ணை யார்? எனக் கேட்பதோடு, ரவிவர்மாவின் ஓவியத்திலோ, கோவிலில் ஒரு சிலையிலோ, குழந்தையை ஏந்தி நிற்கும் மாதாவின் முகத்திலோ அப்பெண்ணைப் பார்த்தாகக் கூறுகின்றன. இதிலிருந்து பெண்களை ஓவியமாகவும், குழந்தையைப் பேணும் தாயாகவுமே சமுதாயம் பார்த்து வந்திருக்கிறது என்பதை உணர முடிகிறது. அப்பெண் குரலை உயர்த்தி முழக்கமிடுவது போல்,

> "நான் சீதை / நான் சீதை / அன்புக்காக / மோகத்துக்காக/ அரசியலுக்காக/ காட்டில் புகுந்து காட்டில் அடைபட்டு / காட்டில் அலையும் சீதை/ பகடைக்காய் சீதை / ஏமாந்த சீதை / ஏதுமில்லா சீதை" 6.

என்று கூறுகிறாள். இதனால் பெண்ணை அன்புக்காகவும், அரசியலுக்காகவும், மோகத்துக்காகவும், காட்டில் அனுப்பிப் பகடைக் காயாகப் பயன்படுத்திய நிலையை பற்றிக் கூறப்படுகிறது.

### கட்டுப்படுத்தப்பட்ட பெண்கள்

அதிகாரம் உருவாக்கிய, அரசு படைத்த சீதை என்பதும்,

> "இப்படி இரு / இப்படி நில் / இப்படி உட்கார் / இப்படிப் படு / இப்படி சிந்தி
> ராமனிருக்கும் இடம் அயோத்தி / புனிதத்தின் தீர்ப்பு நெருப்பில் / ஆண் குழந்தைகளைப் பெறுபவள்
> சீதை / என்று வளர்க்கப்பட்ட ஒரு சீதை / அடக்கப்பட்ட ஒரு சீதை / ஏதோ ஒரு சீதை நான் ...." 7.

என்ற வரிகளும், பெண்களைப் பல கட்டுப்பாடுகள் கூறி அடக்கி வைத்திருந்ததையும், ஆண் குழந்தைகளையே பெற வேண்டும் என்ற நிலையே இருந்ததையும், புனிதமானவள் என்பதை நிரூபிக்க நெருப்பில் இறங்கும் கொடுமையையும் உணர்த்துகின்றன. பல காலங்களில், பல இடங்களில் வசிக்கும் இன்னொரு சீதை என்பதால், மகளிர் சமுதாயத்தின் மொத்த உருவமாக அமைந்த ஒரு பெண்ணே இங்கு குறியீடாகக் காட்டப்படுகிறாள்.

### பெண்ணின் சிறுமை

பின் குரல்கள், அப்பெண்ணிற்கு "வேறு பெயர்கள் உண்டா?" என அவ்விடம் கேட்டதற்கு, தான் ஒரு தாடகை எனவும், ராமன் என்ற அதிகாரம், ஆணவம், அகந்தை, அரசியல், தன்னைச் சிறுமைப் படுத்தியதாகவும் கூறுகிறாள். இங்கு ராமன் என்ற ஆண் வர்க்கத்தால் பெண்கள் அடையும் சிறுமை எடுத்துக் கூறப்படுகிறது.

## பெண்ணின் பல்வேறு நிலைப்பாடுகள்

குரல்கள், நீ ஆணா? பெண்ணா? மனிதப் பிறவியா? எனக் கேட்டதற்கு, அவள், தான் ஆண், பெண், ஜடப் பொருள் என்றும்,

"ஆள்பவர்கள் சொல்லி எடுக்கும்
புரட்டிப் போடும்
ஒதுக்கி வைக்கும்
நசுக்கப் பார்க்கும்
ஒன்று" 8. எனவும் கூறுவதைக் காணலாம்.

மேலும், போரிடும் இராவணன், வதைபடும் சம்புகன், யாகத்தில் தள்ளப்பட்ட குதிரை, ராமன் அம்பு துளைத்த தவளை, அன்பு நிறைந்த ராச்சியம் என்ற மாலையில் சிக்குண்ட ஒன்று, அதில் வீழ்த்தப்பட்ட மரம், குறுக்கப்பட்ட ஆறு, பிறந்தவுடன் விஷம் உண்ட பெண் குழந்தை, நெருப்பில் மாண்ட மனைவி, உடைந்த கல், கையற்ற காலற்ற வாயற்ற கல், மீண்டும் ராமராச்சியம் என்ற புனைக்கதையில் புரண்ட கல், கல்லாகிப் போன உயிர் எனவும் பல்வேறு நிலைப்பாடுகளைக் கூறுகிறாள். இதில் பெண் குழந்தைக்குப் பிறந்தவுடன் விஷம் கொடுக்கும் கொடுமையும், வரதட்சணை என்ற கொடிய நெருப்பில் மனைவிகள் மாளும் இரக்கமற்ற நிலையும், ராம ராச்சியத்தில் தவறைச் சரியாக ஆராயமலே சபித்துக் கல்லாக மாற்றும் கொடுமையும் எனப் பெண்கள் அனுபவித்த இன்னல்கள் கூறப்பட்டுள்ளன.

## பெண்களின் விழிப்புணர்வு

குரல்கள், சோர்ந்துவிட்ட அவளால் ஆற்றைக் கடக்க முடியுமா? அதற்கு வலிமை உண்டா? எனக் கேட்கின்றன. அவள், தலையை உயர்த்தி, இன்னும் சக்தி இருப்பதாகவும், இன்னொரு உலகைக் காண்பதற்காக, இன்னொரு உருவம் பூணுவதற்காக ஆற்றைக் கடப்பதாகவும் கூறுகிறாள். எனவே பெண் தனக்கு இழைக்கப்பட்ட கொடுமைகளைக் கண்டு சோர்வடைந்திருந்தாலும், சமுதாயத்தில் வாழக்கூடிய சக்தி தனக்கு இருப்பதாகவும், பல நிலைப்பாடுகளில் சிக்குண்ட தான் புதிய உருவம் பூண்டு இன்னொரு ராம ராச்சியம் அமைக்கப் போவதாகவும் கூறுகிறாள். எனவே தாங்கள் உரிமைகளுக்காகப் போராடி, வெற்றி பெறுவோம் என விழிப்படைவது போல், முகம் மலர்ந்து, உயர்த்திய தலையுடன் எதிரே பார்த்தவாறு நிற்கிறாள்.

## முடிவுரை

தமிழில் தோன்றிய அனைத்து இலக்கியங்களிலும் பெண்கள் இடம் பெற்று இருந்தனர். அவர்கள், "பெண்மைக்குரிய அன்பு, நாண், ஒப்புரவு, கற்பு ஆகிய நற்பண்புகள் வாய்க்கப் பெற்ற மகளிர் பெண்டிர் ஆவர்"9. என்ற விளக்கத்திற்கு உட்பட்டே அமைந்திருந்தனர், ஆனால் அம்பையின் பெண் பாத்திரம், பெயரற்று, விரக்தியடைந்த நிலையில், தன் கடந்த கால நிலையைக் குறியீடுகளாக எடுத்துச் சொல்வதாகவும், தன் உரிமையை எதிர்ப்பதாகவும் படைக்கப்பட்டிருக்கிறது. எனவே இவரது படைப்பில், சமுதாய விழிப்புணர்வும், பெண்ணியச் சிந்தனையும் ஊடாடிக் கிடப்பதை உணரலாம்.

## குறிப்புகள்


1. படைப்பிலக்கியக் கருத்தரங்கு, 17.09.2003, எம். வி. எம். கல்லூரி, திண்டுக்கல்.
2. பிரேமா. இரா. பெண்ணியம் அணுகுமுறைகள், ப. 19.
3. பிரேமா. இரா. பெண் - மரபிலும் இலக்கியத்திலும், ப. 109.
4. நாடகத் தொகுப்பு, இளநிலைப் பட்டப்படிப்பு (பருவமுறை) பகுதி -3 - பிரிவு -12 - தமிழ், ப. 49.
5. மேலது, ப. 50
6. மேலது, ப. 45-46
7. மேலது, ப. 47
8. மேலது, ப. 49
9. காந்தி, தமிழர் எண்ணங்கள், ப. 228.

# பெண்மைப் புனைவும் புனைவனவும்

– டாக்டர் சரோஜினி– தமிழ் இணைப் பேராசிரியர்– எம்.வி.எம். கல்லூரி

மனிதனுக்கு உரியனவாகப் பண்பாட்டால் ஏற்றுக்கொள்ளப்பட்ட தேவைகளை முதன்மைத் தேவைகள், இரண்டாம் நிலைத் தேவைகள் என்று பகுப்பர். முதன்மைத் தேவைகளை உயிரியல் தேவைகள், உளவியல் தேவைகள், சமுதாயத் தேவைகள் என்று மூன்று பிரிவாக மானிடவியலார் பகுக்கின்றனர். இந்த மூன்று வகையான தேவைகளுமே ஆணைப் பொறுத்த வரையில் 'ஆணின் நலன்' என்ற அடிப்படையிலேயே நிர்ணயிக்கப்பட்டுள்ளன.

பால் ரீதியான பெண்ணின் பிறப்பைச் சமுதாயம் பாலின ரீதியான வேறுபாடாக்கி நிலை நிறுத்தியதால் ஆணும் பெண்ணும் சரிசமமாக இணைந்ததுதான் 'மனிதம்' என்பது மறக்கப்பட்டுவிட்டது. ஆணை விடவும் பெண் தாழ்ந்தவள் என்ற கற்பித்தல் பரப்பப்பட்டுள்ளது. பெண்ணுக்கு உரியன அனைத்தையும் ஆணே கட்டமைத்துக் கொடுத்தான். 'பெண்மைப் புனைவு' ஆணால் செய்யப்பட்டது. பெண்மைப் புனைவின் அடிப்படை அம்சங்களாக அழகும் அறியாமையும் அமைந்தன. பெண்ணின் உறுப்புக்கள் எல்லாமே ஆணின் பார்வைக்கு இன்பம் தருவனவாகவும் ஆணுக்காகவே படைக்கப்பட்டன போன்றும் உருவேற்றப்பட்டன. கலைகளிலும் இலக்கியங்களிலும் பெண்ணின் உறுப்புக்கள் உருப்பெருக்கிக் காட்டப்பட்டன. இன்று வரை இந்த நிலை தொடர்கின்றது. இவ்வாறான காட்சிப்படுத்துதல் சமுதாயத்தின் இன்றைய வேகமான வளர்ச்சியில் முழுமையாகப் பெண்கள் பங்கேற்கத் தடையாக அமைகிறது.பெண்ணின் உருவ அமைப்பையும் உளவியல் பண்புகளையும் பாலினப் பாகுபாட்டோடு இணைத்துவிட்ட சமுதாயம், அவளுக்கு வகுத்துக் கொடுத்த 'புனைவன' எல்லாம் பெண்மை என்னும் இரண்டாம் நிலையை அடையாளப்படுத்துவனவாக அர்த்தப்படுத்தப்பட்டுள்ளன. அதனால்தான் தனது ஆளுமை குறைவுபடுத்தப்படுவதாக ஆண்கள் கருதும் சூழல்களில் 'நான் ஒன்றும் வளையல் போடவில்லை', 'சும்மா பூ சுத்தாதே' என்பன போன்ற உரையாடல்களைக் கேட்க முடிகிறது. இந்த வகையான 'புனைவன' வற்றுள் பெண்ணை உளவியல் ரீதியாக முடக்கும் ஆயுதங்களுள் ஒன்றாக அமைந்தது அவளுக்கு வடிவமைத்துக் கொடுக்கப்பட்ட ஆடை. இது இரண்டு வகையில் ஆணை மகிழ்ச்சிப்படுத்தியது. ஒரு வகையில் பெண்ணை முழுமையாகப் போர்த்திப் பாதுகாத்து ஆணை திருப்திப்படுத்துவதாக இருந்தது. மற்றொரு வகையில் அரை குறையாக அமைந்து ஆணைக் கிளர்ச்சியடையச் செய்தது. எப்படி அமைந்தாலும் அது பெண்ணின் வளர்ச்சியைக் கட்டுப்படுத்தியது. இதைப் பற்றிய சிந்தனை பெண்களிடம் தோன்றாமலே இருந்தது.

அதனால் வீட்டிற்குள்ளும் ஆடைக்குள்ளும் முடங்கிக் கிடந்த பெண்கள் சமுதாயத்தின் புறப் பரப்பில் நடமாடவே தயங்கினர். 'தான் ஒரு பெண்' என்ற 'தன் நினைப்பு' அவர்கள் கொண்டிருந்த 'சமுதாய நினைப்பு'டன் முரண்பட்டுள்ளது. அதனால் வீட்டிற்கு வெளியே, குடும்பத்திற்கு அப்பால், கணவன் என்ற வரையறையையும் தாண்டி செயல்பட வேண்டிய சூழல்கள் ஏற்படும்போது மாற்றுரு எடுத்துள்ளனர்; அல்லது மாற்றுடை தரித்துள்ளனர். காரைக்காலம்மையாரின் பக்தியின் ஆழத்தைக் கண்டு மிரண்டு போன அவரது கணவன் கையால் தொழுது அவரை விட்டு நீங்க நினைத்தான். ஒரு பெண்ணின் இயல்பான மனநிலையால் இதை ஏற்றுக் கொள்ள இயலாத காரைக்காலம்மையார் நடுங்கினார். கணவனுக்குப் பயன்படாத அழகு கெட்டுப் போகட்டும் என்று நினைத்தார்; பேய் வடிவைக் கேட்டுப் பெற்றார் என்று கூறப்படுகிறது. ஆனால் 'வனப்பு நின்ற தசைப்பொதி கழிய வேண்டும்' என்றும் 'ஆங்கு நின்று ஆள்கள் போற்றும் பேய்வடிவம் வேண்டும்' என்றும் அவர் இறைவனிடம் வேண்டியதற்கு வேறு காரணம் உண்டு. பெண்ணின் தோற்றப் பொலிவோடு ஆன்மீக நெறியில் நின்றால் 'ஆள்கள்' போற்ற மாட்டார்கள் என்பது சமுதாய நிலை. அதனால் தான் இப்படி கேட்டுள்ளார். பேய் வடிவத்தைப் 'பெருமை சேர் வடிவமா'கச் சேக்கிழாரால் காணவும் முடிந்துள்ளது.

உருவத்தை மறைத்தது ஒருபுறம் என்றால் உடைக்குள் தங்களை மறைத்துக் கொண்டு உயர் சாதனை புரிந்த பெண்களை வரலாறும் இலக்கியங்களும் காட்டுகின்றன. ஆண்களின் ஆடை வடிவமைப்பு அவர்கள் எங்கும் எளிதாகச் செல்லவும் எந்தச் செயலையும் எடுத்துச் செய்யவும் வசதியாக உள்ளது. ஆனால் பெண்ணின் உள்ளாற்றல்களை மழுங்கச் செய்வதாகவே பெண்களின் உடை அமைப்பு இருந்தது.

அதனால் தான் ஈ.வெ.ரா. பெரியார் ஆண்களைப் போன்று ஆடையணியவும் தலை முடியைக் குட்டையாகக் கத்தரித்துக் கொள்ளவும் அறிவுரைத்தார்.

வரலாற்றின் சுவடுகள் உலகம் முழுவதுமே பெண்கள் ஆளுமை நிறைந்தவர்களாக இருந்ததைக் காட்டுகின்றன. ஆங்கிலப் படையின் தாக்குதலிலிருந்து பிரான் நாட்டைக் காப்பதற்காகப் பிரெஞ்சுப் படைக்குத் தலைமை தாங்கிச் சென்றார் ஜோன் ஆஃப் ஆர்க். தான் ஒரு பெண் என்பதை மறைக்க வேண்டிய கட்டாயம் அவருக்கு ஏற்பட்டுள்ளது. ஆணுடை வசதியானது என்பதனாலோ அல்லது பெண் என்ற உருவம் வெளியில் தெரிந்தால் தனக்குப் பல வகையிலும் துன்பம் நேரும் என்று நினைத்தோ உடையை மாற்றியிருக்கலாம். ஆணுடைக்குள் இருந்த ஒரு பெண்ணின் ஆற்றல் பிரான் நாட்டைக் காப்பாற்றியது.

இந்திய விடுதலைப் போரில் தங்களை ஈடுபடுத்திக் கொண்ட பெண்கள் பலர். அவர்களுள் துர்காபாய் ஒருவர். அவர் தான் ஒரு பெண் என்பதை மறைத்துக் கொண்டு தனது இறுதி மூச்சு வரை வெள்ளை ஏகாதிபத்தியத்தை எதிர்த்து நின்றார். இது போன்று இன்னும் பலரை வரலாற்றுப் பதிவுகள் காட்டுகின்றன.

அரசியல் காரியங்களில் ஈடுபடுவதற்குப் பெண்களுக்கு உரிமை இல்லை என்ற கருத்து வலுப்பெற்றிருந்த காலச் சூழலில் பெண்கள் ஆணுடைக்குள் அடைக்கலமாகி தங்கள் ஆற்றலால் வெற்றி பெற்றுள்ளனர். இலக்கிய ஆசிரியர்கள் தங்கள் பெண் பாத்திரங்களை ஆற்றல் உள்ளவர்களாகப் படைக்கும் போது ஆண் உடைக்குள் புகுந்து சாதனை படைக்க வைத்துள்ளனர். சான்றுகள் பல உண்டு.

பெண்கள் ஆட்சியதிகாரங்களில் ஈடுபடும்போது அல்லது சமூகத்தில் அரிய காரியங்கள் செய்யும் போது 'பெண்' என்னும் உருவத்தை மறைத்துக் கொண்டுதான் செய்ய முடியும் என்பது போன்ற மனநிலை சமூகச் சீர்திருத்தவாதிகளிடமும் இருந்துள்ளது. 'பெண்ணால் முடியும்' என்று நினைத்தவர்களே பெண்ணுக்குரிய 'புனைவன'வற்றுக்குள் அது சாத்தியமாகாது என்று உணர்ந்துள்ளனர். இதற்கான இலக்கியச் சான்றுகளைக் காப்பிய காலம் முதல் இன்று வரை காணமுடிகிறது.
திருத்தக்கதேவர் பெண்களால் வீரதீரச் செயல்கள் புரிய முடியும் என்பதை உணர்த்துகிறார். ஆனால் பெண்கள் தம் உருவத்தை மறைத்து ஆணுடை அணிந்து கொண்டு தங்கள் ஆற்றலை வெளிப்படுத்தியதாக

'வம்பு வீக்கி வருமுலை யுட்கரந்
தம்பி னொய்யவ ராணுடைத் தானையர்
பைம் பொற் கேடகம் வாளொடு பற்றுபு
செம்பொற் பாவையைச் சேவித்து முன்னினார்'
(சீவகசிந்தாமணி–காந்தரு. 633)

என்கிறார்.

இலக்கிய ஆசிரியர்கள் பெண்ணை ஆணுடைக்குள் புகுந்து கொண்டு சாதனை புரிய வைத்ததற்கு பிரதாப முதலியார் சரித்திரம் நாவலில் சான்றுகள் சில உண்டு.

பிரதாப முதலியாரைத் தேடிக்கொண்டு மலையுச்சிக்கு வந்து சேர்ந்த ஞானம்பாள் பெண் உருவில் பயணம் செய்வது ஆபத்தை விளைவிக்கும் என நம்புகிறாள். ஆண் வேடம் பூண்டு ஒரு பட்டணத்தை வந்தடைகிறாள். அப்போது யானையொன்று துதிக்கையிலுள்ள மாலையை அணிவிக்க அந்நாட்டு மக்கள் அவளை அரசனாக்குகிறார்கள். ஆண் வேடத்திலேயே அந்நாட்டைத் திறமையாக ஞானாம்பாள் ஆட்சி செய்கிறாள்.

பேசுகிற பறவையும் பாடுகிற மரமும் தங்கத் தண்ணீரும் ஒரு மலைச் சிகரத்தில் இருப்பதை அறிந்து, அவற்றைப் பெற்று வருமாறு தனது தமையன்மாரை அனுப்பினாள் ராஜகுமாரத்தி ஒருத்தி. அண்ணன்மார் திரும்பி வராதபோது ஆண்வேடம் பூண்டு அவர்களைத் தேடிப் போகிறாள். தனக்கு வேண்டிய பொருட்களையும் எடுத்துக் கொண்டு கல்லாய் மாறியிருந்த சகோதரர்களையும் எழுப்பி அழைத்து வருகிறாள்.

ஒரு பெண் தனது புத்திசாலித்தனத்தால் கணவனுடைய ஆடைகளை அணிந்து கொண்டு உருவம் மாறி கணவனையும் செல்வத்தையும் பாதுகாத்துக் கொண்டாள்.

# தீவிரப் பெண்ணியத்தில் சல்மாவின் பச்சை தேவதை

முனைவர். *மு. சாதிக் பாட்சா*, முதுநிலை விரிவுரையாளர்,
முதுகலை & தமிழாய்வுத்துறை, ஜமால் முகமது கல்லூரி, திருச்சிராப்பள்ளி - 620 020.

## பெண்ணியம்

ஏறக்குறைய உலகின் சரிபாதியாகப் பெண்கள் இருக்கின்றனர். இச்சரிபாதி என்பது உலகில் நடந்திருக்கும், நடந்து கொண்டிருக்கும், நடைபெறப் போகும் செயல்கள் அனைத்திலும் இருக்க வேண்டும் என்பது தான் நியதி என வாதாடுகிறார்கள் பெண்ணியவாதிகள். ஆனால் நேற்றைக்கும் இன்றைக்கும் இவ்வுலகில் இந்நிலை இருப்பதாகத் தெரியவில்லை. இந்நிலையை அடைவதற்குப் பெண்கள் தற்போது முயற்சித்துக் கொண்டிருக்கிறார்கள். ஆணாதிக்கம் கோலாச்சிக் கொண்டிருப்பதாக எண்ணப்படுவதின் விளைவு, பெண்கள் போராட்டம் செய்கிறார்கள். இந்தப் போராட்டமே பெண்ணியம் எனப்படுகிறது. மொத்தத்தில் பெண்ணியம் எனப்து பெண்களின் நிலைமாற்றத்திற்காகக் குரல் கொடுப்பவர் அல்லது பாடுபடுபவர் என்பதும் ஆகும்.-1

இந்நிலையில் தாம் அறிந்தவரையில் *மிதவாதம், மார்கசீயம், தீவிரம்,* சோசலிசம், பழமைவாதம், தாராளம், சமதர்மம், ஆன்மீகம், கிறித்துவம், கலாச்சாரம், மனை அல்லது இல்லறம், தலைமைத்துவம், கருப்பு, சூழல், முற்போக்கு, சமூகம், தலித், பயங்கரம், புரட்சி, இந்தியம், பண்பாடு, மனிதவளமேம்பாடு, புதிய, திருப்பு, உளப்பகுப்பாய்வு, கரு உற்பத்தி மைய நோக்கு, சீர்திருத்தம் அல்லது விடுதலை, ஏகாதி பற்றிய நோக்கு, மனித இன வளர்ச்சி, மீட்டுருவாக்கம் என முப்பத்தி மூன்று வகையான பெண்ணிய வகைகளைக் கண்டறிந்துள்ளனர். முப்பத்தி மூன்று வகைகள் கண்டறியப்பட்டாலும், "பெண்ணியங்களில் பலவகைகள் என்பது தவிர்க்க இயலாதது. இவற்றில் உண்மையான பெண்ணியத்தைத் தேடுவதென்பது கேலிக்குரியது"-2 என்பதையும் நாம் கவனத்தில் கொள்ள வேண்டியுள்ளது.இக்கட்டுரையானது "தீவிரப் பெண்ணியம்" என்ற பெண்ணியவகை கவிஞர் சல்மாவின் பச்சை தேவதை என்ற கவிதை தொகுப்பில் இடம் பெற்றுள்ளமை குறித்து ஆய்கிறது.

## தீவிரப் பெண்ணியம்

இப்பெண்ணியம் "ஆண் நாயகத் தன்மையை நிரூபிக்கும் குடும்பம், பலதார மணம் புரிந்து கொள்ளும் பாலியல் வழியிலான ஆணின் உறவு, இதன் வழி, பெண்கள் ஏன் ஆண் நாயகத்தால் கொடுமைப்படுத்தும் பழக்கம் தோன்றியது? போன்றவைகளை ஆராய்தல் ஆகும்"-3 என்ற கோட்பாடுடையதாகும். கவிஞர் சல்மா-வின் பச்சை தேவதையை ஆய்தல் பொருட்டு மேற்கண்ட பெண்ணியத் *தாக்கமே மிகப்பெரும்பான்மை கவிதைகளில் காணக்கிடக்கிறது.*

## சல்மாவின் தீவிரப் பெண்ணியக் கவிதைகள்

முதல் கவிதையே கணவனின் உறவால் வந்த கருவை வெறுப்பது அல்லது இக்கருவிற்கு தந்தை இவன்தான் எனச் சொல்லும்படி ஆகிவிட்டதே என்ற எண்ணம் தொக்கி நிற்கிறது.

> ஓட்டு விளிம்பில்/திரும்பிச் சரிகிற வயிற்றோடு/தலைசொறிகிற குரங்கிற்கு/ஒரு சலனமுமில்லை,தன் உணவைத்/தானே தேடுவது குறித்து,
> /தன் அடிவயிற்றுக் கனத்தின்/பாதுகாப்புக் குறித்து/மேலும் யாருடைய கரு இதுவெனவும்/.
> *என வைத்து நிறைவு செய்கிறார்.*

கூறை வீட்டில் ஒரு குரங்கு. அதன் அடிவயிற்றில் ஒரு குழந்தை (கனம்). அதற்கு ஒரு பயமுமில்லை (ச்லனம்)அல்லது வேறு சிந்தனை இல்லை, குரங்கிற்கு என்ன சிந்தனைகள்....... உணவு தேடுவது. உணவு தேடுகின்ற போது அதற்கு வயிற்றில் உள்ள குழந்தைப்பற்றி (கரு)க் கவலையில்லை காரணம், அக்கரு உண்டாவதற்குக் காரணமானவன் யாரெனத் தெரியவில்லை. எனவே குரங்கிற்குப் பயமில்லை. எனவே அது எச்சலனமுமின்றி தன்னுடைய உணவு தேடுவதற்கு எவருடைய கீழ்படிதலின்றி புறப்படுகிறது.

இங்கு பெண் தான் குரங்கு. பெண்ணிற்குப் பயமென்பது வயிற்றுள்ள கரு. கரு ஒருவனின் சேர்க்கையில் உண்டாவதால் பெண்ணால் தன் விருப்பத்திற்கு இயங்க இயலவில்லை என்பதை வருத்தத்துடன் இக்கவிதை தெரிவிக்கிறது. இங்கு கருவை வெறுப்பதென்பது கணவன் வேண்டாமென்று சொல்வதாகும்.மேலும் கவிதைத் தலைப்பு விடுபடல் எனக் கொடுக்கப்பட்டுள்ளது எனவே கவிதை கணவன் என்ற தலைமைப்பீடம் வேண்டாமென ஒதுக்குகிறது.

அடுத்த கவிதைக்கு *மரணக் குறிப்பு* எனத் தலைப்புக் கொடுக்கப்பட்டுள்ளது. கணவன் இறந்து விடுகின்றான். சிலர் பலருக்கு உணவு சமைக்கின்றனர் என்பதாகக் கவிதைப் பொருண்மை தொடங்குகிறது. ஆனால் அதில் மற்றவர்களைவிட மனைவிக்குத் தான் இப்பாதிப்பகம் என்ற கருத்து இழையோடுகிறது.

> யாரிடமும்/வலுவாகப் பதியாத இழப்பு/...
> ஊருக்குப் போய்விட்டுத்/ திரும்புவானென்கிற / எளிய நம்பிக்கை போதும் / குழந்தைக்கு /.......

ஆனால் மனைவிக்கு.......
/விடியும் முன் / எஞ்சிய ஓலமும் / மழைநீரெனக் காய்ந்து / வீடு விறைப்புற்று விடுமென்பதைச் சலசலக்கிற குரல்கள் / உறுதிப்படுத்துகையில்.
/அவனது மரணம் / என்னிடத்தில் இன்னொரு முறை நிகழ்கிறது / என வேதனையும் விரக்தியும் கவிதையில் தொக்கி நிற்கிறது.

ஒரு மனிதன் பிறப்பதற்கு பெற்றோர் இன்றியமையாதவர். உடன் பிறப்புக்கள் வேண்டாம் என்று சொல்ல அந்த ஒரு மனிதனுக்கு உரிமையில்லை. மேலும் அவ்வாறு ஓர் உறவை தவிர்ப்பது எளிமை (இயற்கை மீறல் தான் ).

உறவுகளின்றி வாழ்வது எளிமை என்று சொல்லலாம். ஆனால் சேர்ந்த உறவுகள் பிரிவதென்பது துன்பம். அந்த நிலையில் "கணவரைத் தவிர்த்திருந்திருக்கலாம். திருமணம் செய்து இப்படி இழந்து, அவன் நம்மைக் கைவிட்டு விட்டானே என்ற வெறுமை கவிதையில் காணப்படுகின்றது. ஏன்? திருமணம் செய்தோம் என்ற எண்ணமே இங்கு பெண்ணியமாகத் தோற்றம் பெற்று நிற்கின்றது.

அடுத்து "நிலை" என்ற கவிதைத் தலைப்பு என்னை அடைத்து வைத்துள்ளாயே என்ற ஏக்கம் கலந்த வெறுப்புத்தட்டுகிறது. அவ்வாறு அடைத்து வைத்துள்ளதால் எனக்கென்று ஏதும் இல்லையே என்ற தொனி நிற்கிறது.

நீ/ கொண்டுவந்த பூச்செடிகள்/தொட்டியில் நடப்பட்டு / நீருற்றிய பின்னும் / தலை சாய்த்துக் கொண்டிருக்கின்றன./
/எப்பொழுதும் அது/ தன் தோட்டத்து வெளியே விட்டு/ வருவதில்லை / தன்னை இங்கு / ஊன்றிக் கொள்கிற ஒரு வேரை/ வெளிப்படுத்துவதுமில்லை.
கணவரிடமிருந்து தனக்கு எது கிடைத்தாலும் அவளுக்கென்று ஓர் அடித்தளம் கேட்கிறது இக்கவிதை.
அடுத்த கவிதை கணவனை விஷநாகம், பைத்தியகாரன் என வசைப்பாடுகிறது.
/விஷநாகம் ஒன்று/ என்மீதேறி இழைக்கையில் / நிலத்தில் கசிந்திருந்து / கதிரவனின் ஒரு துளி/
/ஒரு பைத்தியகாரன் / தாளிட்டிருந்த என் நினைவு கரைத்துத் / .. இரவின் அகாலத்தினைத் / தன் பாட்டுக்குக் கடக்கும் / குடுகுடுப்பைக்காரனின் குரல் மட்டும் / மனத்தில் நிறைகிறது / அமானுஷ்யத்தை / இருளின் துணையோடு /

இரவு கணவனுடன் உடலுறவு கொள்கிறாள். (விஷநாகம் என் மீது இழைத்தது). அடுத்த மாற்றம் பகல் வரை நீள்கிறது. (ஒரு பைத்தியகாரன் என் கணவன் சாடப்படுவதால் விப்பமின்றி இரவை அவள் கழித்ததாக எண்ணலாம்) ஆனால் அவளுக்கு குடுகுடுப்பைக்காரனின் குரல் மட்டும் மனத்தில் நிற்கிறது. அதுவும் கணவரின் துணையோடு அல்ல. (கவிதையை இருளின் துணையோடு என நிறைவு செய்கிறார்).எனவே விருப்பமின்றி நடந்த உறவை வெறுக்கிறார். கணவன் கட்டாயமாக்கிய இரவை, இவர் காலை வந்தவுடன் தூக்கி எறிகிறார். உறவை மட்டுமல்ல. விஷப்பாம்பையும் பைத்தியகாரனையும். கணவனின் ஆதிக்க எல்லை மனைவியோடு மட்டும் நிற்பதில்லை. அது அடுத்த தலைமுறையாகத் தன் குழந்தைகளுக்கும் பரவுவதாகச் சொல்கிறது. அடுத்த கவிதை, கணவனின் கற்பனைகளை வசைபாடும் இக்கவிதையில் அவனின் அசிங்கமான பக்கங்களையும் வெளிக்கொணர்கிறது.

/விபசாரியின் மறைவிடங்களில்/ பதுங்கித் திரிபவளென்கிற / உன் கற்பனைகளைக் கேட்டபடி/ இங்கே தானிருந்து கொண்டிருக்கிறேன்.
/என் நண்பனொருவனின் அடையாளம் சொல்லி/ இவன் உங்கள் தகப்பனெனவும் / தன் குழந்தைகளைக் கொன்ற தாய்க்கு என் சாயல்கள் அதிகமெனவும் / தம் குழந்தைகளுக்கு நீ சொல்கையில் / பிடிபடுகிறது/ உன் ஆதிக்க எல்லை/ என்னோடு மட்டும் முடிவதில்லை/

என எல்லை என்ற கவிதையின் உள்ளே காணப்படுகின்றது.

சில கணவன்மார்கள் பெண்களைத் தன் கட்டுப்பாட்டுக்குக் கொண்டு வருவதற்கு மனைவியின் கற்பை பணயம் வைக்கின்றனர். தம் குழந்தைகளைப் பார்த்து, திருட்டுப்பயபுள்ள, அசிங்கம்புடிச்ச பயபுள்ள எனக் கோபத்தில் திட்டுவர். ஆனால் கவிஞர் கணவனின் நிச்சயமான குரலைச் சொல்கிறார். இக்கவிதையும் கணவன் என்ற பிம்பத்திலிருந்து தன்னை மட்டுமல்ல தன்னுடைய வாரிசுகளையும் வெளியே கொண்டுவர பெண் முயல்கிறாள்.

உள்ளமட்டுமல்ல உடலும் உன்னை மீறிப்போகும் என எச்சரிக்கைத் தொனி இருக்கிறது. " உன் நம்பிக்கைகளின் திசைமீறி" என்ற கவிதைத் தலைப்பில்.நீ என்னை உடல், உள்ளம் எதிலும் கட்டுப்படுத்த முடியாது, என் சுதந்திரம் தடைபடுமாயின் எல்லாத் தளங்களிலும் உன்னை மீறுவேன் என்கிறாள் பெண்.கணவன் மனைவி சேர்ந்த படுக்கையறை என்பது உன் விருப்பம் மட்டுமல்ல என் விருப்பமும் கூடத்தான். நீ விரும்பும்போது மட்டுமல்ல உறவு நான் விரும்பும் போதும் தான் என்கிறாள் பெண்.

/காற்றிலைந்து நீண்டு / உனதுடல் தொடும் என் கரங்களைத்-/ தட்டுவிடுகிற உன் செய்கையில் விரிகிறது/ எட்டியிருக்கச் சொல்கிற கட்டளையும் / எனதுடலின் வரம்புகள் சட்டும் திமிரும் /.... துணை வேண்டும் இரவொன்றில் / அடி பணிந்துன்மீது படிவேனென்கிற/ கர்வத்துடன் / மர்மம்

பூணும் உன் புன்னகை / கனவுகளின் ஆழத்தில் புதைகிற எனதுடல் / உன் நம்பிக்கைகளின் / திசைமீறிப் போகும் / ஒரு பொழுதில்/ என்கிறார்.

கணவன் மீது மனைவி படர நினைக்கிறாள். ஆனால் கணவன் அதற்கு உனக்கு உரிமை இல்லை. எனக்குத்தான் உரிமை என்கிறான். இச் செயல்பார்த்து மனைவி பொங்குகிறாள். உன் திமிர் எனக்குப் புரிகிறது. தொடருமாயின் ஒரு நாள் நீ என்மீது வைத்துள்ள நான் உன் சொற்படி நடப்பேன் என்ற உன் நம்பிக்கையை நான் மீறி வேண்டியதிருக்கும் என எச்சரிக்கிறார். கணவனின் தலைமை மீறல் இங்கு தென்படுகிறது.

அடுத்த கவிதை கணவன் இல்லாதபோது வீடு இயல்பு வாழ்க்கைக்குத் திரும்புகிறது. என்கிறார் பெண். /மௌனித்திருக்கும் வீட்டில் / எதிர் கொள்கிறேன் / நீ மறதியால் விட்டுச் சென்ற வாசனை திரவிய டப்பியிலிருந்து / உதிர்ந்து கொண்டிருக்கிற உன் பிரியங்களை./

கணவன் பிரியமானவன் எதன்மீது? வாசனை திரவிய டப்பி மீது. அப்பிரியம் கணவன் வீட்டைவிட்டு வெளியேறிய பிறகு மனைவிக்குக் கிடைக்கிறதாம். டப்பிக்கு கிடைப்பது தனக்குக் கிடைக்கவில்லை என்கிறார்.

குழந்தைகளின் விளையாட்டில் கலையத் தொடங்குகிறது வீடு/திரைமறைவிலிருந்து/ களிப்போடு இயல்பு மீள்கிறது/ இந்த வாழ்க்கை.

கணவன் இருந்தவரை தான்மட்டுமல்ல குழந்தைகளும் அடக்கி வைக்கப்பட்டிருப்பதாக உணர்கிறாள். மனைவி, மறைந்து கொண்டிருந்த இயல்பு நிலை கணவனின் வெளியேற்றலுக்குப் பிறகு வெளியே வந்ததாம்.

மேலும் அடுத்த அடியில் நேற்று, அலமாரிக்குள்ளிருந்தும் விசும்புகிறதாம்.

/நேற்றைக்கு மட்டும் / நடமாடித் திரிந்த பளிங்கிப் பீங்கான்களும் / என் ஓயாத பேச்சும்,/ அலமாரிக் கதவுக்குள்ளிருந்தெழும் / விசும்பலில் கசிகிறது/ என்கிறார்.

கவிதை கணவனை மனைவியிடமிருந்து வெளியேறச் சொல்கிறது.

கணவனின் இருப்பால் வீடே அடிமைப்பட்டுக்கிடக்கிறதாம். இயல்பு வாழ்க்கைஇல்லையாம். அஃறிணையில் வைத்திருக்கும் அன்பும் பாசமும் குடும்பத்தின் மீது இல்லையாம். கவிதையில் வருகிற பெண், அதாவது மனைவி கணவனைத் துரத்தியடிக்கிறாள்.

ஒரு சிகரத்தை நோக்கி என்ற கவிதை படித்து முடித்த போது நெஞ்சம் பதரச் செய்கிறது. கட்டுரையாளன் பொருண்மை சரியோ, தவறோ எனத் தெரியவில்லை. ஆனால் குறியீட்டுக் கவிதையில் ஏதோ ஒன்று உடைவதாகப் படுகிறது.

இருள் மிதக்கும் நெடுஞ்சாலையில் / பாய்ந்தோடும் என் வாகனத்தின் உளிதேங்கி விலகுகிற / சதைத் துணுக்குகளின் மீது / நான் வரைய முயலும் / வேறொரு சித்திரத்தையோ / வினைய விரும்புகிற / ஏதேனும் ஓர் உருவத்தையோ, அனுமதிப்பதேயில்லை / என் பயணங்களில் எதிர்பட்டு சாலையைக் கடந்து கொண்டேயிருக்கும் / ஒரு மன நோயாளி.

இங்கு கணவன் மனநோயாளியாகிறான் என்றே படுகிறது. கவிதை வாகனத்தை சதைப்பிண்டம் என்றால் அதில் சொல்வதற்கு ஒன்றுமில்லை. ஆனால் வாகனம் என்பது உடல் என்றால் இது வரைய நினைக்கிற ஓவியங்களையோ அனுமதிப்பதில்லை. யார் அனுமதிக்காதவன் என்றால் .... அவன் எதிர்பட்டுக்கொண்டிருக்கும் ஒரு மனிதன், அம்மனிதன் கணவன், கணவன் எதை அனுமதிக்க மறுக்கிறான் பிற உருவத்தை, ஓவியத்தை என்கிறார் கவிஞர். கவிஞர் குடும்பம் உதற நினைக்கிறார். கவிதைகளின் தலைப்பு சித்திரத்தை நோக்கி.

**கணவனை வெறுத்து ஒதுக்கிய கவிதைகள்,**

சமூகத்தில் ஆணின் தவறான சிந்தனைகளை, மோசமான நடத்தைகளையும் வெளிக்கொணர்கிறது.பல பெண்களுக்குப் பேருந்துப் பயணம் என்பது நரகம். ஆண்கள் வெறுக்கும் அளவுக்கு நடக்கும் செயல்கள் அதை மறைக்காமல் வெளிக்கொணர்கிறார். இக்கட்டுரையாளன் என்னும் முறையில் இக்கவிதைக்காக கவிஞரைப் பாராட்டியே ஆக வேண்டும்.

வஞ்சம் படர்ந்த / நகரத்தின் தெருக்களில் / வெப்பம் மிதந்தலையும் / பேருந்தில் வியர்த்து வழியும் கடல்களினூடே / எங்கோ துளிர்த்துப் பெருகிய வன்மமென / என்மீது நீளும் / ஓர் ஆண்குறி. என வன்மம் என்ற தலைப்பில் தருகிறார்.

அடுத்து பெண்ணை ஏரியுடன் ஒப்புமை செய்கிறார். ஏரி எல்லா அசுத்தங்களையும் தன்னுள் தாங்கிக் கொள்கிறது. பிறகு அதையே அருந்தவும் செய்கின்றனர். பெண்ணையும் அவ்வாறே ஆண்கள் எண்ணுவதாகக் கவிதை படைக்கிறார்.

/ஏங்கிக் கருமையுள்ள முகத்தோடு / ஏரி சலனமற்றிருக்கிறது /
எனத்துவங்கி, ஆணைப் பார்த்து,
உன்னிடமிருந்து ஏரி, விட்டெறிந்த மதுக்கோப்பைகளை, புகைத்த சாம்பலை, எச்சிலை எனக் கூறுகிற கவிதை,

நிறைவாக

/உன் கசிவுகளைக் கொட்டி / என்னைச் சுத்தப்படுத்துகின்றாய் / இன்று இதில் எதையும் /

நினைவுறுத்தாது / உன் தாகம் தணிக்காத தயாராகிறாய் /
எனக் கொண்டு செல்கிறார். கடைசியாக,
/உன் அசுத்தங்களை / அடித்துக் கொண்டு போக / இது நதியில்லை / ஏரி
/சலமற்றுத் தேங்கிய நீர் / பத்திரமாய்ப் பாதுகாக்கும் /ஏதொன்றும் தொலைந்து போகாமல் / என முடிக்கிறார்.
பெண் ஏரி. அந்த ஏரியில் எத்துனை அசுத்தங்கள் தூவினாலும் அது பொருத்துக்கொள்ளும். ஆனால் ஏரி என்ற பெண்ணாகிய மனைவு அசுத்தம் படுத்திவிட்டு அவளுடனே உறவு கொள்ளக் கூடியது அபத்தம்.
அசுத்தப்படுத்திய அவள் எதையும் மறைக்க மாட்டாள், எனவே அசுத்தப்படுத்திய ஏரியில் தாகம் தீர்க்க எண்ணுவதும், அசுத்தப் படுத்திய மனைவியிடம் உறவு கொள்ள நினைப்பதும் தவறு என கண்டிக்கிறாள் பெண்.
/பத்திரமாய் பாதுகாக்கும்/ ஏதொன்றும் தொலைந்து போகாமல்/
என்பது தாம்பத்திய உறவு நிலையில் கணவன் நாடாமல் பாதுகாப்பது, கணவன் தன்மேல் முன்னரே சுமத்திய குற்றச்சாட்டுகளின் நினைவுகள் இவைகளில் எதைவேண்டுமானாலும் பெண் அல்லது மனைவி பாதுகாப்பதாய் நாம் கொள்ளலாம்.

அடுத்த கவிதை கணவனை அல்லது ஆணை புழு என்கிறது.

மிதமான புழு உடலுடன் வந்தவன் அட்டைப் பூச்சியாய் நின்றுவிடுவானாம்.

/தன் உணவை என் உடலிலிருந்தே / உறிஞ்சியபடி / என் குரல்வளைப் பற்றும் / சாத்தியங்களுடன் / என்னை அச்சுறுத்தியபடி / என்கிறார் கவிஞர்.
கணவனாக மெதுவாக அவளுள்ளே நுழைகின்றவன், புழு மாதிரி உள்ளான். ஆனால் நாட்கள் செல்லச் செல்ல மனைவியை எல்லா வகையிலும் உறிஞ்சும் அட்டைப்பூச்சியாய் மாறிவிடுவதாகக் கவிஞர் கூறுகிறார்.

கணவனின் ஆண்மைத் தன்மையற்ற உறவு என அடுத்த கவிதையின் சாடல்.

/உன்னை நிறுவிடவியலாத / உன் வருடலில் கிளர்சியுறாத / இவ்வுடலின் மீது / பெரும் விருட்சமெனப்படுவதே துவேசம்.

எனக் கடுமை காட்டுகிறார். ஆண்மையற்ற ஆண் எனத் தன் ஆடவனைக் கூறுவது கணவன் மீதுள்ள வெறுப்புதான் காரணம் என அறியலாம். விடியும் பொழுதில் என்னும் தலைப்பிடுகிறார். படிமம் என்ற தலைப்பில் இரவு கணவனுடன் நடந்த உறவையே கவிதைப் பொருண்மை ஆக்குகிறார்.

/இருளில் / மதிப்பிட்டு நசுங்கிக் / கூழாகிய கரப்பானின் தசையை / இரவெல்லாம் உருவிய எறும்புகள் / விட்டுச் சென்றிருக்கின்றன/
மேலெழவியலாத சிறகுகளையும் / வேண்டாயிராத குச்சிக் கால்களையும் / வெகு நூதனமாய் / என்னை உனக்குக் காட்டியவன்.
இங்கு கணவன் எறும்பாகச் சித்தரிக்கப்படுகின்றான்.
இரவெல்லாம் கரப்பான் பூச்சியின் தசையை உறிஞ்சி குச்சிக்கால்களையும், மேல் எழவியலாத சிறகுகளையும் தான் விட்டிருக்கின்றன எறும்புகள் என்கிறார். பெண்ணின் விருப்பமற்ற தாம்பத்ய வாழ்க்கைக்கு என்ன காரணம்..... அவளைச் சுதந்திரமாக இயங்க விடாதது தான் என்கிறார். ஒரு பூ மலர என்ற தலைப்பில் இதைச் சொல்கிறார்.

முன்பு/ ஒரே ஒரு முறை/ சந்தித்திருப்பின் / மொத்த வாழ்வையும் கூடப் / பயணம் / வைக்காதிருந்திருக்கலாம்.
கண நேரம் பொறுமை / இந்த மோசமான வார்த்தையை விழுங்கிக் செறிந்திருக்கும் / உரிய கவனமோ அக்கறையோ / இருந்திருந்தால் / சிதறியிருக்காது/இந்த நட்பு / சுவையற்ற நீண்ட காலம் / ஸ்தம்பித்திருக்காது / கண நேர அவகாசங்களில் / இப்பூமலர / ஒரு கணம் அனுமதித்திருந்தால் இப்படிக் கணன்று கொண்டிருக்காது இல்லையா?
எனக் கேட்கிறார்.
இவ்வாறு கவிதைத் தொகுப்பு முழுவதும் கணவன் மீதான நம்பிக்கையின்மையும், வெறுப்பும் கலந்து கவிதைள் விதைக்கப்பட்டிருக்கிறது. மொத்தத்தில் கணவன் தவிர்த்த வாழ்க்கை நன்று என்ற பொருண்மையுடன் கொண்டு செல்கிறார். எனவே ஆய்வாளர்கள் கண்டறிந்த வகையில் இக்கவிதைகளில் பல தீவிரவாதப் பெண்ணிய வகையாகக் காணக்கிடக்கின்றன.

## பயன்பட்ட நூல்கள்.


1. முனைவர். இரா. பிரேமா, பெண்ணியம், ப. 15.
2. தலித் பெண்ணியம், (தொகுப்பு) ப. 30.
3. டாக்டர். முத்துச் சிதம்பரம், பெண்ணியம் தோற்றமும் வளர்சியும், ப. 78.

# பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரம் பாடல்களின் பெண்ணியம்

*மா. சிவகாமி,* நிறைவாண்டு முதுகலை தமிழ் இலக்கியம்,
அருள்மிகு பழனியாண்டவர் மகளிர் கலைக் கல்லூரி, சின்னக்கலையம்புத்தூர், பழனி.

**முன்னுரை :**

எத்தனையோ காலங்கள் மாறினாலும், எத்தனையோ பல ஆய்வு நூல்கள் வெளிவந்தாலும் பெண் அடிமை நிலை இன்னும் மாறாமல் இருக்கின்றது. தற்கால இலக்கியங்களான கவிதை, நாடகம், புதினம், கட்டுரை, சிறுகதைகள் ஆகியவற்றில் பெண்ணியக் கோட்பாடுகள் கூறப்படுகின்றன. மேலும், பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரம் பாடல்களில் பெண்ணிய கருத்துக்களை ஆராய்வது இக்கட்டுரையின் நோக்கமாகும்.

**மக்கள் கவிஞர் பட்டுக்கோட்டை கல்யாண சுந்தரம் அவர்கள் :**

தமிழருக்கும், தமிழ் வாழ்வியலுக்கும் உணர்வும், உரமும் ஊட்டிய கவிஞர்கள் பலர். அவற்றுள் பட்டுக்கோட்டை கல்யாண சுந்தரமும் ஒரு சிறந்த கவிஞர் ஆவார். இவர் தஞ்சை மாவட்டம், பட்டுக்கோட்டை வட்டம், செங்கப்படுத்தான்காடு எனும் கிராமத்தில் தந்தை திரு. அருணாசலம் பிள்ளை, தாயர் விசாலாட்சி அம்மையார் ஆகியோருக்கு 13.04.1930 ஆம் ஆண்டில் மகனாகப் பிறந்தார். இவரின் துணைவியார் கௌரவாம்பாள் ஆவார். இவர் எளிய வாழ்வினர். மக்கள் பற்றுக் கொண்டவர். 1951 ஆம் ஆண்டு "படித்த பெண்" எனும் திரைப்படத்திற்கு முதன் முதலாகப் பாடலை இயற்றித் திரைப்பட உலகில் நுழைவு பெற்றார்.

திரைப்பட உலகில் இவரது பாடல்களுக்குத் தனிப்புகழ் ஏற்பட்டு, குறுகிய காலத்திலேயே நாடெங்கிலும் பரவத் தொடங்கின. இவரின் பாடல் வரிகள் பட்டி, தொட்டியெல்லாம் பரவி மக்களின் இதயத்தில் நீங்கா இடம் பெற்றவைகளாகும். இவர் பாடல்களில் பெண்ணியக் கருத்துக்களை கீழ்க்காணும் கட்டுரையில் காணலாம்.

**பெண்ணியம் :**

"பெண்ணியம் என்பது காலம் காலமாக அடிமைப்பட்டு பெண்களை அடிமைத் தனத்திலிருந்து மீட்டி, அவர்களுக்குக் கல்வியின் மூலம் விழிப்புணர்வு ஊட்டி சமூகத்தில் ஆண்களுக்கு இணையான மதிப்பினைப் பெற்றுத் தருவது பெண்ணியமாகும்."இனி பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரம் அவர்களின் பாடல்களில் பெண்ணிய கருத்துக்களைக் காணலாம். பெண்மையைப் பாடும்போது தாய்மை நிலையையும், கைம்பெண் அவலங்களும், பெண்ணின் மறுமணம் பற்றியும், பெண் அடிமைத் தனம் பற்றியும் கூறப்படுகிறது.

**பெண் அடிமைத் தனத்தை உணர்த்தும் பாடல் :**

"அடங்கிக் கிடக்கிறதும் பணிஞ்சு நடக்கிறதும்/ஆக்கறதும் காக்கறதும் நாங்க - உண்
டாக்கறதும் காக்கறதும் நாங்க - அதை/அடிச்சிப் பறிக்கிறதும், அடுத்துக் கொடுக்கிறதும்
அட்டகாசம் பண்ணுறதும் நீங்க./ஆணுக்குப் பெண்ணை அடிமைகள் என்று
யாரோ எழுதி வைச்சாங்க - அன்று/யாரோ எழுதி வைச்சாங்க - அதை
அமுக்கிப் பிடிச்கிட்டு விடமாட்டேன்னு/ஆண்கள் ஒசந்து கிட்டாங்க - பெண்கள்
ஆமை போல ஒடுங்கிப் போனாங்க"/இல்லறத்தில் பெண்கள் அனைத்து வேலைகளைச் செய்தாலும் ஆண்கள் பெண்களை அடித்துத் துன்புறுத்துவதும், பெண்கள் அடிமை நிலைக்குத் தள்ளப்பட்டு அல்லல் படுவதும் மாறவில்லை என்பது இங்குப் புலப்படுத்தப்படுகின்றது.

அழகும் அறிவும் அமைந்த பெண்கள்/அதிசயமாய்ப் பிறந்தாலும்,
குறுகும் மனம் கொண்டவர்கள்/குலைக்காமல் விடுவதில்லை"3

பெண்கள் படித்து முன்னேற்ற நிலையில் வேலைக்குச் சென்றாலும் அவர்களின் திறமைகளை வெளிப்படுத்த சுதந்திரமாக அவர்களை ஆண்கள் விடுவதில்லை. பெண்களை எப்படியும் அவர்கள் குலைக்காமல் விடுவதில்லை இவ்வின்னல்களிலிருந்து அவர்கள் மீண்டு வருகின்றார்கள்.

### கைம்பெண் நிலையின் அவலமும், மறுமணமும் :

"மனைவி இறந்த பின் வயதான தாத்தாவும்/மறுமணம் பண்ணிக்கிட உரிமையுண்டு - இளம்
மங்கையை முடிப்பதுண்டு, மண்டை வரண்டு தன்/கணவனை இழந்தவள் கட்டழகியானாலும்
கடைசியில் சாக மட்டும் உரிமையுண்டு - இதில்/கதைகளும் கட்டிடும் ஊர் திரண்டு."4

மனைவி இறந்தவுடன் வயதான தாத்தாவாக இருந்தாலும் இந்தச் சமுதாயத்தில் மறுமணம் செய்து கொள்வார்கள். வயதான கிழவனுக்கு இளம்பெண்ணைத் திருமணம் செய்து வைத்தால் அந்த வயதான கிழவன் இறந்தாலும் இந்த இளம்பெண் மறுமணம் செய்ய உரிமை இல்லை. விதவையாய் வாழுங் காலத்தில் பலருடைய பழிச்சொற்களுக்கும் ஆளாகும் நிலையும் உருவாகின்றது. இதில் பெண்ணின் உணர்ச்சி நசுக்கப்பட்டு இருப்பதைக் காணலாம். இந்நிலை மாறப் போராடுவது பெண்ணியமாகும்.

### பெண்ணின் வீரத்தைக் கூறும் பாடல் :

கோழைக்கும் வீரத்தைக்/கொடுப்பவள் மங்கை
கொய்யாக் கனியாய்/இருப்பவள் மங்கை
வாழ்வில் மோகத்தை/வளர்ப்பவள் மங்கை - ஆண்
மனத்தில் வீடுகட்டி/வசிப்பவள் மங்கை"

ஒரு பெண் நினைத்தால் கோழைத்தனமான ஆணை நல்ல மாவீரனாக மாற்றவும் முடியும் என்றும், ஆண் மனதில் காதலை வளர்த்து, அன்பையும், பாசத்தையும் காட்டி ஆண் இதயத்தில் அப்பெண்ணே குடியிருக்கும் இடமாக மாற்றவும் முடியும் என்றும் இப்பாடலில் கூறுகின்றார். பெண்ணால் என்ன முடியும் என என்னுவோர்க்குச் சிறந்த பதிலாக இவ்வரிகள் அமைகின்றன.

### பெண்ணின் மன வலிமையைக் கூறும் பாடல் :

"கண்ணகி போல் நாளைக்/கழிக்கவும் தெரியும்
காதலை மாதவி போல்/ரசிக்கவும் தெரியும்
மன்னைச் சகுந்தலை போல/மறக்கவும் முடியும்
மணிமேகலை போல/வெறுக்கவும் முடியும்"

ஒரு பெண் கண்ணகிபோல் மன வலிமையுடன் வாழவும் முடியும் என்றும், மாதவிபோல் தன் காதலனுடன் அன்பாக இருக்கவும் முடியும் என்றும், மன்னனைச் சகுந்தலை மறந்ததுபோல் மறக்கவும் முடியும் என்றும், மணிமேகலையைப் போல் ஆண் துணை இல்லாமல் துறவியாகவே வாழ முடியும் என்றும் கூறப்படுகிறது.இவ்வாறு ஒரு பெண் நினைத்தால் பல்வேறு பெருமைகளுக்கும் சாதனைகளுக்கும் உரியவளாக வாழ்ந்து காட்ட முடியும் என்பதை இக்கவிதையால் கவிஞர் உணர்த்துகின்றார்.

"நான் வந்து சேர்ந்த இடம்/நல்லயிடந்தான் - இதை
நம்பவைக்கும் பொறுப்பு/அன்பினிடந்தான்
அருமையுடன் வளர்த்து/அறிவுள்ள பெண்ணாக
ஆக்கித்தரும் பொறுப்பு அன்னையிடந்தான் - குலப்
பெருமைதனைக் காத்து/பெற்றவர் மனம் நாடும்
பேரைப் பெறும் பொறுப்பு பெண்ணிடந்தான்.

ஒரு பெண் நல்ல அறிவுள்ள, குணமுள்ள பெண்ணாக திகழ்வது அன்னை வளர்ப்பினிலே. இவ்வாறு

ஒரு பெண்ணை அன்னை வளர்த்துத் திருமணம் செய்து வைக்கிறாள். அவள் வந்து சேர்ந்த இடமும் நல்ல இடமாக அவளுக்குத் திகழ அப்பெண் சிறந்த இல்லாளாக குடும்பம் நடத்தியும், அன்பாக நடந்தும் பெற்றவர்களுக்கு நல்லபேரை வாங்கி தரும் பொறுப்பு அப்பெண்ணிடம்தான் இருக்கின்றது எனக் கூறலாம். வன்மையும் மென்மையும் கலந்து படைக்கப்பட்டவர்களே பெண்கள் என்பதைக் கவிஞரின் பெரும்பான்மையான கவிதைகள் புலப்படுத்துகின்றன.

மனிதன்/ஆரம்பமாவது பெண்ணுக்குள்ளே - அவன்
ஆடி அடங்குவது மண்ணுக்குள்ளே/ஆராய்ந்து பார் மனக் கண்ணுக்குள்ளே
ஆத்திரங் கொள்ளாதே நெஞ்சுக்குள்ளே/அன்பைக் கெடுத்து - நல்
ஆசையைக் கொன்றவன்/அஞ்சி நடப்பானோ ஞானப்பெண்ணே
துன்பத்தைக் கட்டிச்/சுமக்கத் துணிந்தவன்
சொன்னாலும் கேட்பானோ ஞானப் பெண்ணே?/தவறுக்கும் தவறான
தவறைப் புரிந்து விட்டு/தனிப்பட்டு போனவன் ஞானப்பெண்ணே
பதறிப் பதறி நின்று/கதறிப் புலம்பினாலும்
பயன்பட்டு வருவானோ ஞானப்பெண்ணே.

தன் மனைவியின் வார்த்தையைக் கேட்காமல் கணவன் பரத்தையிடம் செல்கின்றான். அந்த ஆடவனை மணந்த பெண்ணோ எந்தவித ஆசையும் நிறைவேறாமல் மனக் கொந்தளிப்புடன் வாழ்கின்றாள். அப்பொழுது கூட தன் கணவனை எதிர்த்து எந்த கேள்வியும் கேட்காமல் பயந்துபோய் அடிமையாக வாழ்கிறாள். இன்னும் எத்தனையோ ஆண்கள் இவ்வாறுதான் தங்களைத் திருத்திக் கொள்ளாமல் இச்சமுதாயத்தில் வாழ்கின்றனர். இந்நிலையில் கவிஞரின் பாடல் வரிகளில் தவறு செய்த அந்த ஆடவன் திருந்தி வந்து தன் மனைவியிடம் மன்னிப்புக்கேட்டு மிகவும்வருந்துகிறான். இனிமேல் இப்படி ஒரு தவறை இனிமேல் எப்பொழுதும் செய்ய மாட்டேன் என்று கதறிக், தகறி அழுது தான் செய்த தவறுக்கு மன்னிப்பே வேண்டாம் என்றுதன் மனைவியிடம் அழுகிறான். இத்திருந்தும் நிலை பெண்களால்தான் ஏற்பட்டது.

## முடிவுரை :

இவ்வாறு இக்கட்டுரையில் , விதவைப் பெண்ணிற்கு மறுமணம் செய்துகொள்ளும் உரிமை, அடிமைபட்டுக் கிடக்கும் பெண்ணிற்குக் கல்வி, அடிமைத்தனத்தினை அகற்றி பெண்ணிற்க்குச் சுதந்திரம் ஆகியவற்றைப்பெரும் உரிமை வேண்டும் என்பதை வலியுறுத்தப்படுகின்றது.

## அடிக் குறிப்புகள் :

1. டாக்டர் பிரேமா, பெண்ணியம், பக். 3.
2. பி.இ. பாலகிருஷ்ணன், பட்டுக்கோட்டை கல்யாண சுந்தரம் பாடல்கள், பக். 148.
3. பி.இ. பாலகிருஷ்ணன், பட்டுக்கோட்டை கல்யாண சுந்தரம் பாடல்கள், பக். 133.
4. மேலது, பக். 148
5. மேலது, பக். 310.
6. மேலது, பக். 178.
7. மேலது, பக். 82, 83.
8. மேலது, பக். 179.
9. மேலது, பக். 215.
10. மேலது, பக். 122, 123.

# பாரதியின் பெண்ணியம் ஒரு பார்வை

*க.சு. சிவகாமசுந்தரி,* விரிவுரையாளர்,

தமிழ்த்துறை, கற்பகம் கலை அறிவியல் கல்லூரி, கோவை – 21.

மங்கையராகப் பிறப்பதற்கே நல்ல மாதவம் செய்திடல் வேண்டுமம்மா என்று கவிமணி பெண்குலத்திற்குப் பெருமை சேர்க்க விரும்பினார். வரலாற்றுக் காலம் தொட்டு அச்சம், மடம், நாணம், பயிர்ப்பு என்ற நான்கையும் அணிகலனாகக் கொண்டு அடக்கப்பட்டும், ஒடுக்கப்பட்டும் கிடந்த பெண்ணினத்திற்கு ஆறுதல் தர ஒருவேளை இக்கவிதை வரிகள் படைக்கப்பட்டிருக்கலாம். வழிவழியாகப் பெண்ணினத்தைத் தாழ்த்தி நசுக்கியதால், தானும் நசிந்து போன இந்தியச் சமுதாயத்தில் பெண்ணினத்திற்கான எழுச்சிக்காக சீர்திருத்தவாதிகளும், நியாய உணர்வு படைத்த சான்றோர்களும் அவ்வப்போது குரல் கொடுத்தே வந்திருக்கின்றனர். ஆனால் கவிஞர்கள் என்ற வகையில் இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் உணர்வுபூர்வமாக முதன்முதலாகக் குரல் கொடுத்தவர் மகாகவி பாரதியே ஆவார். ஆண்களோடு பெண்களும் சரிநிகர் சமானமாக வாழ்வம் இந்த நாட்டிலே என்று புதுமைப் பெண்ணை வரவேற்றார் பாரதியார். கவிதை மட்டுமல்லாமல் தாம் அவ்வப்போது எழுதிவந்த கட்டுரைகளிலும் பெண்விடுதலைக்காகக் குரல் கொடுத்தவர் அவர்.

## பெண்மைக்கு ஏற்பட்ட அவலங்கள்

காட்டில் கந்தர்வ மணம் புரிந்த சகுந்தலையை துஷ்யந்தன் எளிதில் மறந்து துறந்து விடுகிறான். பாரதத்தில் வரும் பாஞ்சாலி அரசர் கூடிய பேரவையில் அவமானப்படுத்தப்படுகிறாள். சீதை இராவணனால் கவர்ந்து செல்லப்படுகிறாள். நடுக்காட்டில் நள்ளிரவில் நளன் தமயந்தியைத் தனியே தவிக்கவிட்டுச் சென்று விடுகிறான். தான் அறியாது செய்த பிழைக்காக கௌதம முனிவனால் அகலிகை கல்லாகுமாறு சபிக்கப்படுகிறாள். கண்ணகிபட்ட கடுந்துயரம் அனைவரும் அறிந்ததே.

எழுத்தில் காணப்பட்ட இந்த அவலங்கள் நடைமுறை வாழ்க்கையிலும் வீடுதோறும் நாடுதோறும் நிகழ்ந்தவைதாம். கணவன் இறந்தவுடன் மனைவியும் உடன்கட்டை ஏறி எறிந்து போகும் அல்லது எரிக்கப்படும் கொடுமை கண்டு இராஜாராம் மோகன்ராய் போன்ற பெருமக்கள் அக்கொடுமையை நிறுத்த அரும்பாடுபட்டனர். கணவனை இழந்த கைம்பெண்கள் சமுதாயத்தால் ஒதுக்கப்படும் நிலை இன்றும் பரவலாகத் தொடர்கிறது. பாரதியும், பாரதிதாசனும் தமிழ்க்கவிதை வழியாகப் பெண்களுக்காகக் குரல் கொடுத்தனர். கவிதை என்று காண்கிறபோது பெண்விடுதலை பற்றி ஆவேசமாகப் பாடியவர் என்ற பெருமையை முதன்முதலில் மகாகவி பாரதியாரே பெற்றார். கவிதை மட்டுமல்லாமல் உரைநடை வடிவத்திலும் பெண் விடுதலை பற்றித் தீவிரமாக எழுதியவர் அவர்.

## பாரதியின் பெண்ணியப் பார்வை

அகநோக்கு (பெண் எப்படி மாற வேண்டும்), புறநோக்கு (அவளுக்குச் சமுதாயம் என்ன செய்ய வேண்டும்) என்ற வகையில் பாரதியின் பெண்ணியப் பார்வை நோக்கப்படுகிறது.

## பெண் விடுதலை – நாட்டு விடுதலை

பாரதியின் கருத்துப்படி, பெண்கள் விடுதலைபெறாமல் ஒரு நாடு விடுதலை பெறுவதும் அசாத்தியமேயாகும். தமது ஐந்தாவது வயதிலேயே தாயை இழந்துவிட்ட பாரதி, தாம் காண்கிற ஒவ்வொரு மாதரிடத்திலும் பராசக்தியின் வடிவத்தையே காண்கிறார்.

உயிரைக் காக்கும், உயிரினைச் சேர்த்திடும் உயிரினுக் குயிராய் இன்ப மாகிடும்

உயிரினும் இந்தப் பெண்மை இனிதடா. ஊது கொம்புகள் ஆடுகளி கொண்டே

என்ற பாரதியின் வரிகள் அவரது சிந்தனைத் தெளிவைக் காட்டிநிற்கின்றன.

நாட்டுவிடுதலை என்ற அளவில் பாரதியின் போர்ச்சிந்தனைகள் நின்று விடாமல், சமுதாயத்தின் அநீதிகளான பெண்ணடிமை, சாதிப்பிரிவினை, மூடப்பழக்கவழக்கங்கள் என்பனவற்றையும் பாரதி தீவிரமாகச் சிந்தித்தவர். அதனால் விளைந்த பாக்கள்தான் பெண் விடுதலை, பெண்கள் விடுதலைக்கும்மி, புதுமைப்பெண், பெண்மை, முரசு, பாஞ்சாலி சபதம் ஆகியவையாகும்.

பெண்களை நாயினும் கேடாக நினைக்கும் இச்சமுதாய எண்ணத்தை அவர் ஒத்துக் கொள்ளவில்லை. அது தொடக்கத்தில் இருந்த எண்ணமன்று. இடையில் வந்த கேடு என்பதை,

"உடையவள் சக்தி ஆண்பெண் இரண்டும் ஒருநிகர் செய்துரிமை சமைத்தாள்

இடையிலே பட்ட கீழ்மை கண்ணீர் இதற்கு நாமொருப் பட்டிருப் போமோ?"

என்னும் பாடலில் புலப்படுத்துகிறார்.

## பெண் விடுதலை மேலை நாடுகளில்

பாரதி, மேலை நாடுகளில் பெண்கள் ஆண்களோடு சமமான நிலைமை பெற்று வருவதை மான்ஜெஸ்டர் கார்டியன் இதழை மேற்கோள் காட்டி எழுதுகிறார். பெண்களுக்கு விடுதலை தாங்கள் வேறு பல ஜாதியரைக் காட்டிலும் அதிகமாகக் கொடுத்திருப்பதே தாம் நாகரிகத்தில் உயர்ந்தவர்கள் என்பதற்கு முக்கியமான அடையாளங்களில் ஒன்றாம் என்று ஐரோப்பியர்கள் சொல்லுகிறார்கள். அந்த வகையிலே பார்த்தால் ஐரோப்பாவின் இதர பகுதிகளைக் காட்டிலும் நவீன ருஷ்யா, உயர்ந்த நாகரிகம் பெற்றுள்ளது என்பது பிரத்தியட்சமாகத் தெரிகிறது. இப்போதுள்ள சட்டப்படி ஸ்திரீகளுக்கும் புருஷர்களுக்கும் எவ்விதத்திலும் வேற்றுமை கிடையாது. இருபாலோரும் சமானமாகவே கருதப்படுவர் என்று கருத்துத் தெரிவித்துள்ளார்.

மேலும் தென்னாப்பிரிக்காவில் பெண்கள் விடுதலை பெற்றது பற்றி அன்னிபெசன்ட் அம்மையாரின் பத்திரிகையை மேற்கோள் காட்டி, அங்கு 1910-இல் பெண்கள் விடுதலைச் சங்கம் ஏற்பட்டுள்ளது பற்றியும், அச்சங்கத்தின் நடவடிக்கைகள் பற்றியும் பாரதி எழுதுகிறார். ஒருமுறை காந்தியடிகள் தம் நவஜீவன் இதழில் குழந்தைத் திருமணத்தினால் இந்தியாவில் கைம்பெண்களின் தொகை கூடியுள்ளது பற்றி விவரங்கள் தந்திருந்தார். அவ்விவரங்களின் நோக்கும் போக்கும் பற்றி காந்தியடிகளுடன் கருத்து மாறுபாடு கொண்டு துணிச்சலாகப் பாரதியார் எழுதினார்.

மேலும் பாரதியார் தமிழ்ப் பெண்களை முன்னிலைப்படுத்திப் பேசுவார்போல், தமிழ்நாட்டு மாதராகிய என் அன்புக்கும் வணக்கத்திற்குமுரிய சகோதரிகளே, இத்தனை பெருமை வாய்ந்த தமிழ் நாகரிகத்தின் எதிர்கால வாழ்வு உங்களுடைய பயிற்சிகளையும் முயற்சிகளையும் பொருத்திருக்கிறது. பூமண்டலத்தில் நிகரில்லாத அருஞ்செல்வமுடைய சேமநிதி ஒன்றுக்குக் கடவுள் உங்களைக் காவலாக நியமித்திருக்கிறான். மனித உலகமோ இந்த நேரத்தில் பிரமாண்டமான சண்டமாருதங்களாலும், கிளர்ச்சிகளாலும், புரட்சிகளாலும், கொந்தளிப்புற்ற கடலிடைப்பட்டதொரு சிறுதோணிபோல் அலைப்புண்டும், மோதுண்டும், எற்றுண்டும், சுழற்றுண்டும் தத்தளிக்கிறது. இந்த மஹா பிரளய காலத்தில் தமிழ் நாகரிகம் சிதறிப் போகாதிருக்கும்படி கடவுள் அருள்புரிவாராகுக. என்றும் தகுந்த கல்விப் பெருமையாலும், ஒபக்க மேன்மையாலும் விடுதலையின் சக்திகளாலும் அதைக் காப்பாற்றக் கூடிய திறமை பெண்களுக்கு வர இறையருளை வேண்டுகிறார்.

இதிலிருந்து தமிழ்ச்சமுதாயத்தின் வாழ்க்கையும் வளர்ச்சியும் பண்பாடும் தமிழ்ப்பெண்களை நம்பியே உள்ளன என்பதைப் பாரதியார் திடமாக நம்புகிறார் என்பது தெளிவாகிறது.

வீரமிக்க நியூசின் என்னும் சீனப்பெண்ணின் கதையைப் பாரதியார் தம் கட்டுரையில் குறிப்பிட்டதோடு அவளுடைய பேச்சின் சில பகுதிகளையும் அப்படியே எழுதுகிறார். அக்காலத்தில் சீனப்பெண்ணின் பாதங்களைக் கட்டிப்போட்டு அவளை வீட்டுப் பதுமையாக்கும் முயற்சி சீனாவிலிருந்தது. நியூசின் சொல்லுகிறாள்.. பாதங்களைக்

கட்டும் நீச வழக்கத்தை உடனே களைந்து எறிந்துவிட வேண்டும்... இங்கு மட்டுமே இக்கொடிய வழக்கம் இருந்தது. ஆண்மக்களுக்கு இனி அடிமைகளாக வாழ மாட்டோம் தைரியத்துடன் எழுந்து நின்று தொழில் செய்து நம்முடைய சுதந்திரத்தை நிலைநிறுத்திக் கொள்வோம் என்ற செய்தியைப் பாரதியார் தம் கட்டுரையில் முதன்மைப்படுத்தியுள்ளார்.

### அகநோக்கு மதிப்பீட்டில் பெண்மை

வழிவழியாக அடக்கி வைக்கப்பட்டதனாலும், உருவ அளவில் பலம் இல்லாதவள் என்றும், சமுதாய வாழ்வின் புறக்கூறுபாட்டை அறிந்து கொள்ள வாய்ப்பில்லாததாலும், கல்வி மறுக்கப்பட்டதாலும் பெண் தன்னைத் தானே தாழ்வாக மதிப்பிட்டுக் கொண்டாள். உண்மையில் பெண் விடுதலை பற்றிய போதிய தெளிவு பெண்களுக்கு இன்மையாலும் தானே தன்னைப் பற்றிய மதிப்பீட்டைப் பெண் குறைத்துக் கொண்டாள் என்பதும் உண்மை. பெண்ணடிமைத்தனம் என்பது அவள் குருதியின் இயல்பாகிவிட்டது. எல்லாவற்றிலும் பெண் விட்டுக் கொடுப்பவளாகவும், அவச்சொல் தாங்குபவளாகவுமே இருக்கின்ற நிலைக்கு இரங்கி, என்று தணியும் எங்கள் அடிமையின் மோகம் என்றும், அச்சமும் பேடிமையும் அடிமைச்சிறு மதியும் உச்சத்தில் கொண்டாரடி கிளியே ஊமைச்சனங்களடி என்றும் பாரதி பெண்ணுரிமை குறித்து வருந்துகிறார்.

ஆண்களைவிடத் தாங்கள் எந்த வகையிலும் எந்த வகையிலும் உயர்ந்தவர்களல்ல என்ற எண்ணம் பெண்ணினத்தில் ஊடுருவி உள்ளது. பெண்களுக்காக இன்று நடத்தப்படும் பத்திரிகைகளிலும் கூட சமையல் குறிப்பும், அழகுக் குறிப்புமே முதன்மையும் முக்கியத்துவமும் பெறுகிறது.

### புறநோக்கு மதிப்பீட்டில் பெண்மை

இவ்வாறு அகநோக்கு மதிப்பீட்டிலும், பெண் தாழ்ந்திருக்கிறாள். இந்த அகநோக்கை மாற்றிப் புதிய புறநோக்கை உண்டாக்குவதற்குப் பாரதி முயலும் முயற்சி, "சாதம் படைக்கவும் செய்திடுவோம் தெய்வச் சாதிகள் படைக்கவும் செய்திடுவோம்" என்பதாகப் பாரதியில் அடையாளம் கொள்கிறது. இந்த வீறு கொண்ட நிலையில் பட்டக்கள் ஆள்வதும் சட்டங்கள் செய்வதும் பாரினில் பெண்கள் நடத்த வந்தோம் என்பதாகப் பொங்கியெழுகிறது. அதுவே மாதர் தம்மை இழிவு செய்யும் மடமையைக் கொழுத்துவோம்.... ஆண்களோடு பெண்களும் சரிநிகர் சமானமாக வாழ்வம் இந்த நாட்டிலே என்பதாகக் கனன்றது.

இப்புற நோக்கு மேலும் விரிந்து எல்லாவற்றையும் தாய்வடிவமாகப் பராசக்தியாகக் காணும்படியான புதியபோக்கு பாரதி நடையில் காணப்படுகிறது. புதிய ருஷ்யாவில் புரட்சி ஏற்பட்ட போது "மாகாளி பராசக்தி கடைக்கண் வைத்தாள்" என்றும் அம்மை மனம் கணிந்திட்டாள் என்றும் பாரதியின் பாட்டு முழங்குகின்றது. தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற தாயென்று கும்பிட வேண்டும் என்று பாப்பாவிடம் கூறுவார். "சேதமில்லாத இந்துஸ்தானம் இதைத் தெய்வம்" என்று கும்பிடடி பாப்பா என்று அடுத்துப் பாடுவார்.

சகோதரி நிவேதிதாவின் ஆசியில் பாரதியின் பெண்ணியக் கருத்துக்கள் மேலும் செம்மை பெற்றது. இவ்வகையில் பாரதக் கவிஞர்களில் பாரதி பெண்ணின் விடுதலையை விரும்பி முழக்கிய கவிதை முரசாகக் காட்சியளிக்கிறான். பாஞ்சாலி சபதமாயினும், குயில் பாட்டாயினும் அங்கு பெண்மை கமழக் கவிதை முகிழ்க்கிறது. பாப்பா பாடலாயினும், தேசிய கீதங்களாயினும், முப்பெருங்காவியங்களாயினும் பாரதி பெண்மைக்காக பெண்மையின் சார்பில் குரல் கொடுத்துக் கொண்டே இருப்பான்.

கடமை செய்வீர் நந்தேசத்து வீரக்
காரிகைக் கணத்தீர் துணிவுற்றே.

# (அ) ஹிம்சை சிறுகதைத் தொகுப்பில் பெண் மாந்தர் படைப்புக்கள்

*இரா. சிவக்குமார்,*
டாக்டர். எம்.ஜி.ஆர். சொக்கலிங்கம் கலைக்கல்லூரி,திருவண்ணாமலை மாவட்டம்.

## முன்னுரை

இதழ்களின் போக்கானது எழுபதுகளில் முற்பகுதி வரை பெரும்பாலும் ஆணை மையப்படுத்தியும், ஆணுக்கானதாகவும், ஆணாதிக்க முடையதாகவும், ஆண் நோக்கு நிலை உடையதாகவும் அமைந்திருந்தன. மகளிருக்காக வெளிவந்த சில இதழ்களும் மேல் குறிப்பிட்ட அமைப்பிலேயே வெளிவந்தன. இவ்வமைப்பை மாற்ற வேண்டும் என்ற நோக்கோடு யுனஸ்கோ நிறுவனம் 1975ஆம் ஆண்டை அனைத்துலகப் பெண்கள் ஆண்டாகவும், 1975 முதல் 1985 வரையிலான பத்தாண்டுகளை அனைத்துலகப் பெண்கள் ஆண்டாகவும் அறிவித்தது. அதன் பிறகு பெண்ணியப் புரிதலுடன் கூடிய பெண் பற்றியப் பார்வை இதழ்களில் இடம் பெறலாயிற்று. பின்பு படிப்பிலேயே வளர்ச்சிப் பெற்று பெண்களுக்கென தனி இதழ் தொடங்கும் அளவிற்கு வளர்ந்துள்ளது.

## இலக்கியச் சிந்தனையில் பெண்கள்

பல்வேறு இதழ்களில் வெளிவந்துள்ள சிறந்த சிறுகதையைத் தொகுத்து இலக்கியச் சிந்தனையானது ஆண்டு தோறும் வெளியிட்டு வருகிறது. இவ்வகையில் வெள்ளிவிழாத் (25) தொகுப்பாக வெளிவந்த தொகுப்பு (அ) ஹிம்சை ஆகும். இச்சிறுகதைத் தொகுப்பில் மாறுதடம் (பாரதிபாலன்) பஞ்சு மனசு (ப்ரியா கல்யாணராமன்) நைந்த ஆடையும் நாற்சந்தியும் (காவேரி) நீருக்கு நிறமில்லை (கே.பி. நீலமணி) தேடித் தேடி (வண்ண நிலவன்) வடக்கந்தரையில் அம்மாவின் பரம்பரை வீடு (ஷாராஜ்) பறவைகள் பறந்தன (சிவகாமி) உக்ரம் (பிரபஞ்சம்) எல்லைகளின் விளிம்பில் (ஜானகி ராமன்) உயிர்த் தெழுதல் (விமலாதித்த மாமல்லன்) ஒரு நொடியும் ஒரு யுகமும் (சத்யராஜ் குமார்) (அ)ஹிம்சை (சோ.தர்மன்)என்ற 12 சிறுகதைகள் காணப்படுகின்றன. இவற்றில் பறவைகள் பறந்தன, உயிர்தெழுதல் என்ற இரண்டு சிறுகதைகளைத் தவிர பத்துச் சிறுகதைகளில் பெண் மாந்தர்கள் காணப்படுகிறார்கள். இவர்களை தாய், மகள், சகோதரி, மனைவி, மருமகள், மூன்றாம் நபர் என்ற சமூக உறவுகளின் அடிப்படையில் ஆராயப்படுகின்றன.

## தாய்

தாய் மாந்தர் படைப்பாக வடக்கந்தரையில் அம்மாவின் பரம்பரை வீடு என்ற ஒரு சிறுகதை மட்டுமே காணப்படுகிறது. இக்கதையில் வரும் தாய் வயதானவராக சித்தரிக்கப்படுகின்றாள். இவள் தான் இறப்பதற்கு முன் மகன், மகள்களைப் பார்த்துவிட வேண்டும் என்ற ஆவலில் அனைவரையும் வரவழைக்கின்றாள். வந்தவர்கள் அனைவரும் தாயின் நலனில் அக்கரையில்லாமல், தாயின் பெயரில் இருக்கும் வீட்டின் மீது கவனத்தைச் செலுத்துகிறார்கள். தாய் பிள்ளைகளைப் பார்க்க வேண்டும் என்றதும் அனைவரும் புறப்பட்டு வந்தது, தாய் மேல் இருக்கும் பாசத்தினால் அல்ல, தாய் பெயரில் இருக்கும் வீட்டிற்காகவே வந்தார்கள் என்பது புலப்படுகிறது. வயதான காலத்தில் பிள்ளைகள் தங்களை கொஞ்சமாவது மதிக்க வேண்டுமென்றால் தன் பெயரில் சொத்துக்கள் இருக்க வேண்டும் என்பதை உறுதிப்படுத்தும் தாயாகத் திகழ்கிறாள்.

## மகள்

வடக்கந்தரையில் அம்மாவின் பரம்பரை வீடும், ஒரு வினாடியும் ஒரு யுகமும் என்ற இரு கதைகளிலும் மகள் (மாந்தர்) உறவு காணப்படுகிறது. முதல் கதையில் அம்மாவைப் பார்ப்பதற்காக ஊரில் இருந்து வருகிறாள் மகள் வந்ததும் "திருவேணி கல்யாணம் வரைக்கும் பாட்டி இருக்கும் தான் தோணுது" என்று மகளைப் பார்த்து கூறுகிறாள். மேலும்

"வீடு பாகம் பிரிக்கும் போது நாலாப் பிரிக்கணும்னு நான் சாமிநாதன்கிட்ட

சொல்லியிருக்கிறேன். பத்தே ஆயிரமோ கையில் கொடுத்து சகோதரிகயோட கணக்கத் தீர்க்கலாமன்னு அவன் நெனச்சிறக் கூடாதில்லையா? வடகனூர் பெரியம்மாவுக்கும் கூட இதபத்தி எழுதணும்"என்று மற்றவரின் எண்ணங்களைப் போலவே மகளும் தாய் பெயரில் உள்ள வீட்டைப் பற்றியே எண்ணம் கொண்டுள்ளாள். தாய் பெயரில் இருக்கும் சொத்தில் மகனைப் போலவே, மகளுக்கும் உரிமை

உண்டு என்ற நடப்பியல் அறிந்த பெண்ணாக இருப்பது குறிப்பிடத்தக்கதாகும். அதே சமயத்தில் தாய் என்றாலும், வயதாகிவிட்டதால் உதாசினப் படுத்தும் போக்கு கொண்டவளாகக் காணப்படுகிறாள். இரண்டாவது கதையில் கணவனை எதிர்த்து வாழ்க்கை நடத்தும் புதிய போக்குள்ள பெண்ணாக ஜெயந்தி காணப்படுகிறாள். இப்புதிய போக்கு மகளிடம் காணப்பட வேண்டும் என்பதற்காக "நிவேதா" என்று பெயரிட்டுள்ளாள். இப்பெயர் பாரதி படைத்த புதுமைப்பெண்ணான நிவேதிதா தேவியை நினைவு படுத்துவதாகவே உள்ளது. கதையில் இரண்டு இடங்களில் மட்டுமே அப்பாவைக் கேட்கும் மகளாக இருக்கிறாள். ஒரு நாள் ஜெயந்தி கணவருடன் பேசுவதை தூரத்தில் பார்த்த மகள்

"யாருமா அந்த மாமா? உன்கிட்டே என்ன கேட்டார்? அவருக்கு வழி

தெரியாதாம், என்கிட்ட வழி கேட்டார் எப்படிப் போகணும்னுநான் அவருக்கு வழிசொன்னேன்"

என்று கூறுகிறாள். கணவரை எதிர்த்து வாழும் வாழ்க்கையில் எவ்வித மாற்றமும் இல்லை என்பதை எடுத்துக் கூறுவதற்காகவே மகள் உறவு படைக்கப்பட்டுள்ளது.

### சகோதரி

பஞ்சு மனசு மூன்று சகோதரிகளுடன் பிறந்த ஆணை மையமிட்ட கதையாகும். மகள்களை புறக்கணித்து ஆணை மட்டும் படிக்க வைப்பது, அதற்காக இருக்கின்ற கொஞ்ச நிலத்தையும் தந்தை தவிற்கிறார். இங்கு ஆணுக்குக் கொடுக்கப்படும் முக்கியத்துவம் பெண்ணுக்குக் கொடுப்பதில்லை. மேலும் ஆண் படிக்க வேண்டும் என்பதற்காக சகோதரிகளுக்கு கல்வி மறுக்கப்படுகிறது. ஒரு குடும்பத்தில் ஆண் வேற்று ஜாதி பெண்ணைக் காதலித்து திருமணம் செய்து கொண்டால், அக்குடும்பத்தில் உள்ள சகோதரிகளுக்கு திருமணம் பாதிக்கும் என்றும், அப்படியே திருமணம் நடைபெற்றாலும் "மாப்பிள்ளை நல்ல இடமாத் தெரியறார். வயசுதான் கொஞ்சம் கூட" என்று ஏதாவது ஒரு குறையை கொண்டே நடைபெறும் என்ற சமுதாயப் போக்கு காணப்படுகிறது.

### மனைவி

மாறுதடம், நீருக்கு நிறமில்லை, தேடித்தேடி, உக்ரம், எல்லைகளின் விளிம்பில், ஒரு வினாடியும் ஒரு யுகமும், (அ)ஹிம்சை என்ற ஏழு சிறுகதைகளில் ஆண் பெண் என்ற பால் பேதத்தின் அடிப்படையில் மனைவியை (பெண்) அடக்கி ஒடுக்கப்படும் அவல போக்கு காணப்படுகிறது. ஒவ்வொரு கதையிலும் ஏதாவது ஒரு வகையில் ஆணாதிக்கம் செயல்படுகின்றது. மாயுரம் வேதநாயகம் பிள்ளை "கணவர் அழகில் ஆயிரம் அம்மாவாசைக்கு சமமானவர்களாக இருந்தாலும் அவனை அதீரூப சௌந்தர்யம் உள்ளவனாகப் பாவிப்பாள்" என்று பெண்ணின் குணத்தைக் குறிப்பிடுகிறார். காரணம் திருமணத்தில் ஆண்களுக்கு கொடுக்கப்படும் சுதந்திரம் பெண்களுக்கு கொடுப்பதில்லை இவற்றை விளக்குவதாகவே மாறுதடம் கதையில்,

"கதவு திறந்தது கருப்பாய் குட்டையாய் உடம்பெல்லாம் ரோமம் பூத்த ஒருவர் இருகி
கட்டிய கையிலிக்கு வெளியே பிதுங்கி கொண்டிருந்தார்"

என்ற அழகற்ற ஆணுக்கு,

"நான் எழுந்ததும் உன் அறைக்குள் இருந்து ஒரு உருவம், அழகான
உருவம், செந்தாழம்பூ நிறமும், நீலமான செதுக்கிய மூக்கும், தலைமயிர்
அடர்த்தியுமாய் அழகாக இருந்தாள்"

என்று அழகுள்ள மனைவி காணப்படுகிறாள்.

நீருக்கு நிறமில்லை என்ற சிறுகதையில் மாணிக்கத்தின் முதலாளியும், நண்பருமான காண்ட்ராக்டர் கருணாகரன் மாணிக்கத்தின் மனைவி சந்திரிகா மீது ஆசைப்படுகிறான் கருணாகரன் பணம், ஆள்பலம், அரசியல் செல்வாக்கு என அனைத்தையும் கொண்டவன். இவனை எதிர்த்து வாழ்க்கை நடத்த முடியாத காரணத்தினால் மனைவியை விட்டுக்கொடுத்து விட்டு, கடிதம் எழுதி வைத்து சென்று விடுகிறான். சந்திரிகா கணவருக்கு மதிய உணவு கொடுத்துவிட்டு திரும்பும் போது கேட் சூப்பர்வைசர் "ஏன் சந்திரிகா உன் சாப்பாடு உன் கணவருக்கு மட்டும்தான் கிடைக்கும் போல" என்று இரண்டு மூன்று நாட்கள் கேட்டுள்ளான். ஒருநாள் பளார் பளார் என அறைந்து விடுகிறாள். சூப்பர்வைசர் மூலம் ஏற்பட இருந்த பாலியல் சுரண்டலை எதிர்த்து கேட்கிறாள். ஆனால் கணவரின் வேண்டுகோளுக்கிணங்க கருணாகரனுடன் இணைந்து வாழ்க்கை

நடத்துகிறாள். கணவர் சொல்லை மட்டுமே நம்பி, சுயமாய் சிந்தித்து வாழ்க்கை நடத்த முடியாத பெண்ணாகக் காணப்படுகிறாள். இவள் மீது இரண்டு விதமான ஆணாதிக்கம் செயல்பட்டுள்ளன. ஒன்று கருணாகரனை எதிர்த்து வாழ முடியாத மாணிக்கம் தன் மனைவியையும் அவனிடம் அடங்கி போகும்படி கூறும் அதிகாரப் போக்கும். இரண்டு நண்பனின் மனைவி என்றும் பாராமல் அவளிடம் பாலியல் வன்முறைக்கு இணங்கச் செய்த கருணாகரனின் ஆணாதிக்க அதிகாரப் போக்குமாகும். தன்னுடைய கணவருடன் இன்பமான வாழ்க்கை அமையாத சூழலில் தன்னால் முடிந்த உதவிகளைப் பிறருக்குச் செய்யும் பெண்ணாகத் திகழ்கிறாள்.

தேடித்தேடி கதையில் வரும் சாலாட்சியின் கணவர் எழுத்தாளரும் அலுவலகத்தில் பணிபுரியவரும் ஆவார். இவர் திருமணத்திற்கு முன்பு இருந்தே யாரிடமும் சொல்லாமல் இரண்டு, மூன்று நாட்கள் வெளியில் தங்கிவிட்டு பிறகு மீண்டும் வீட்டிற்கு வந்துவிடுவார். தன்னுடைய எண்ணப்போக்கிற்கு ஏற்பவே வாழ்ந்து வருபவர். சாலாட்சி சொல்லாமல் சென்ற கணவரைத் தேடிக் கொண்டும், கணவரின் எண்ணங்களைப் புரிந்து கொள்ள முடியாத மனைவியாகவும் காணப்படுகிறாள். கணவர் தினமும் இரவு பத்து மணிக்கு மேல் வருவாள், வாங்குகிற சம்பளத்தில் பாதியை புத்தகம், கருத்தரங்கம், ஊர் பிரயாணம் போன்றவற்றிற்கே செலவு செய்வதுமாகவே காணப்படுகிறார். மனைவி ஏன் என்று கேட்டாள் "இதெல்லாம் உனக்குப் புரியாது" என்று அடக்கி ஆளும் ஆணாதிக்கம் கொண்டவராகவே விளங்குகிறார். மனைவிக்குப் புரியாததை புரிய வைக்கும் சமதர்மக் கொள்கை இல்லாதவராகவும், மனைவி தன்னை நம்பியே இருக்க வேண்டுமென்ற அடிமைக் குணம் கொண்டவராகவும் காணப்படுகிறார். உக்ரம் கதையில் வரும் மனைவி "கனகம்" இசை ஞானம் உடையவள். கணவர் சாமிநாது புகழ்ப் பெற்ற இசைக் கலைஞராவார். இவரின் சிஷ்யன் இராஜகோபாலன் இசைத்த இசையை தன் கணவர் தான் இசைக்கிறார் என்ற எண்ணத்தில் சிறிதுநேரம் கேட்டு ரசித்து விடுகிறாள். பின்பு இசைத்தது கணவன் அல்ல என்பதையும் தெரிந்து கொள்கிறாள். தன்னுடைய கணவரின் திறத்திற்கேற்ப மற்றொருவர் இசைப்பதை ஏற்றுக் கொள்ள முடியாத நிலையில். கணவரிடம் "இனி நீங்கள் யாருக்கும் இசையை கற்றுக் கொடுக்கக் கூடாது" என்று சத்தியம் வாங்கிக் கொள்கிறாள். சத்தியம் வாங்கிக் கொள்வதற்குக் காரணம், தன்னுடைய கணவரைப் போலவே பிறரும் இசையைக் கற்றுக் கொண்டால் தன் கணவருக்கு தற்போது இருக்கும் புகழ், செல்வாக்கு குறைந்து விடுமோ என்ற அச்சமேயாகும். இதிலிருந்து கணவர் தான் எல்லாமென்று இருக்கின்ற சராசரிப் பெண்ணாகவே திகழ்கிறாள் என்பது குறிப்பிடத்தக்கதாகும். எல்லைகளின் விளிம்பில் என்ற கதையில் ஒரு வியாபாரியின் மனைவியாக கல்பனா திகழ்கிறாள். இவள் அக்குடியில் வசிக்கும் திருமணம் ஆகாத இளைஞர்களிடம் நெருங்கிப் பழகுகிறாள். ஒரு நாள் இருட்டில் தனிமையில் இருவரும் இருக்கும் போது, தன் சுண்டு விரலையும், அவன் சுண்டு விரலையும் நன்றாக இணைத்து சுகம் காணும் பெண்ணாகத் திகழ்கிறாள். இதற்குக் காரணம் கணவன், மனைவி இருவரிடமும் மனம் ஒத்த புரிதல் இல்லாமையே ஆகும், ஒருவர் தொடுவதினால் பெண்கள் எல்லை மீறமாட்டார்கள் என்ற கருத்தை நிலைநாட்டும் பெண்ணாகத் திகழ்கிறாள்.

ஒருவினாடியும் ஒரு யுகமும் கதையில் வரும் மனைவி ஜெயந்தியைப் பார்த்து இந்த பூவும், பொட்டும் உனக்கு நான் போட்ட பிச்சை என்று கணவர் கூறுகிறார். இதற்குப் பதிலாக நீ கொடுத்த பிச்சை எதுவும் எனக்கு வேண்டாமென்று அனைத்தையும் நீக்கிவிட்டு தன் குழந்தையுடன் தனித்து வாழ்க்கை நடத்துகிறாள். குடும்பத் தலைவர் இருந்த போது செய்த குடும்ப நிர்வாகத்தைவிட பெண் ஏற்று நடத்தும் போது சிறப்பாக இருக்கும் என்பதை பரமசிவம் மூலம் நிரூபிக்கப்படுகிறது. மேலும் சமுதாயத்தில் ஒரு பெண் ஆண் துணை இல்லாமல் வாழ்க்கை நடத்துவதோடு மட்டும் இல்லாமல் மற்றொரு பெண்ணிற்கு ஊதியம் தரக்கூடிய அளவிற்கு அறிவாற்றலும் திறமையும் உண்டு என்பதை ஜெயந்தி மூலம் சித்தரிக்கப்படுகிறது. மனைவியைப் போகப் பொருளாக மட்டுமே நினைக்கும் கணவனை எதிர்த்து வாழ்ந்தாலும், இவள் விதவைக் கோலத்திலேயே வாழ்க்கை நடத்துகிறாள். கணவனை எதிர்த்து வாழ்க்கை நடத்த வேண்டும் என்ற எண்ணங்களைக்கொண்ட பெண்ணாகவே காணப்படுகிறாளே தவிர சமூகத்தில் ஒரு இயல்பான பெண்ணாகக் காணப்பட வேண்டும் என்ற நோக்குடன் செயல்படவில்லை என்பது குறிப்பிடத்தக்கதாகும். கணவன் என்ற எல்லையினை மீறி, மீண்டும் விதவை என்ற எல்லைக்குள்ளேயே முடக்கிக் கிடக்கும் பெண்ணாகவே திகழ்கிறாள். (அ)ஹிம்சை சிறுகதையில் தொடக்க காலத்தில் ஆடு, மாடு, கோழி போன்ற உயிர்களைத் துன்புறுத்தி அதில் மகிழ்ச்சி கொண்டு, பின்பு உயிரினங்களின் மீது மிகுந்த பற்றுள்ளம் கொண்டவராக மாறியவரின் மனைவியாக மாரியம்மா திகழ்கிறாள்.

இக்கதையில் கணவன், மனைவி இருவரும் நேரடியாகப் பேசிக் கொண்டதேயில்லை. இருப்பினும் கணவரின் எண்ணங்களுக்கு ஏற்ப வாழ்க்கை நடத்துபவளாகக் காணப்படுகிறாள். கணவருக்கு ஏற்படும் துன்பத்தை தன் துன்பம் போல் நினைத்து வருந்தும் மனைவியாகவும் திகழ்கிறாள்.

### மருமகள்

பஞ்சு மனசு, நைந்த ஆடையும், நாற்சந்தியும் என்ற இரு கதைகளும் மருமகளை மையப்படுத்திய கதையாகும். முதல் கதையில் மருமகளாக விளங்குபவள் ராமலிங்கத்தை (மகன்) காதலித்து திருமணம் செய்து கொண்டவள். வேறு சாதியைச் சேர்நதவள் என்பதால் மாமனார் ஏற்றுக்கொள்ளவில்லை. இருப்பினும் மாமனார் தங்கள் வீட்டிற்கு வரும் போது தக்க மரியாதைகளுடன் நடத்துகிறாள். கணவருக்கும் மாமனாருக்கும் கடுமையான பேச்சு நடைபெறும் போதும் அமைதியானப் பெண்ணாகவே இருக்கிறாள். இருப்பினும் இவளை

"நல்ல வேளை இந்தளவிலாவது எதிரில் வந்து முணுமுணுக்காமல்
இருக்கிறாளே எல்லாம் இவள் வந்த பின் தான் காதலாம் காதல் ஜாதி
தெரியாத பெட்டை" என்று சாடுகிறார்.

இரண்டாவது கதையில் வேலாயுதம், தன் மகனுக்கு அனைத்துப் பொருத்தங்களும் பார்த்து திருமணம் நடத்தி வைக்கிறார். பிறகு மகன், மருமகளுடன் அயல் நாடு செல்கிறார் அங்கு

"குழந்தைப் பருவமாக பேத்தி அமுதவல்லியையும், பேரன் சண்முகத்தையும்
வீட்டில் பார்த்துக் கொள்ள முடிந்தது. வனஜா ஸ்கூலிலிருந்து வீடு திரும்பும்வரை
குழந்தைகளுக்குப் பால்காய்ச்சித் தருவேன். சாப்பாட்டை சூடாக்கி
ஊட்டுவேன், அவர்களுக்கு கதை சொல்லி படுக்க வைப்பேன்"

என்பது போன்ற சிறு சிறு வேலைகளைச் செய்தாலும் இடைஞ்சல் தருவதாகவே கருதுகிறாள்.

முதல் கதையில் வேற்று ஜாதியைக் கொண்ட மருமகள், மாமனாரை மரியாதையுடன் நடத்துகிறாள்.

இரண்டாவது கதையில் தான் பார்த்து வந்த மருமகள் தன்னையே உதாசீனப்படுத்துவதாகத் திகழ்கிறாள். இரண்டு மருமகளும் மாறுபட்ட எண்ணங்களைக் கொண்டவளாகக் காணப்படுகிறார்கள்.

### மூன்றாம் நபர்

நீருக்கு நிறமில்லை என்ற கதையில் கணவர், பிள்ளைகள், உறவினர்கள் என்று யாரும் இல்லாத மூதாட்டியாகத் தாயம்மாள் திகழ்கிறாள். இருப்பினும் வீட்டுவேலை செய்து தன் வாழ்க்கையை போக்குகிறாள். ஒரு பெண் சமூகத்தில் தனியாக வாழ மடியாது என்பதால் சந்திரிகாவை தவறான உறவு முறையாக இருப்பினும் கருணாகரத்துடன் வாழ்க்கை நடத்துமாறு வழிகாட்டியவன். வயதான நிலையிலும் தன் வாழ்க்கையை அர்த்தப்படுத்திக் கொள்வதற்காக "பொட்டல் மைதானத்தில்" உள்ள மாடுகளுக்கு தினமும் தண்ணீர் ஊற்றுகிறாள். இவள் இற்நத பிறகு அங்கு குடியிருக்கும் மக்களோடு மாடுகளும் வருந்துவதாகக் காணப்படுகிறாள்.

### நிறைவுரை

(அ)ஹிம்சை சிறுகதைத் தொகுப்பில் இடம் பெற்றுள்ள பெண் மாந்தர்களை ஆராயும் போது சமூகத்தில் பெண்களுக்கு ஏற்படும் இன்னல்களை எடுத்துக் கூறுவதாகவே திகழ்கிறார்கள். வயதாகி விட்டால், மரியாதைக் குறைவாகவே நடத்துவதும், மனைவியை அடிமையாக போகப்பொருளாக, எதிர்த்துப்பேசும் திறம் இல்லாதவளாக, சுயமாக சிந்திக்கம் ஆற்றல் இல்லாதவளாக, பாலியல் வன்முறைக்கு ஆட்படுபவளாகவே காணப்படுகிறார்கள். கணவனை எதிர்த்து வாழும் பெண்ணும் குறிப்பிட்ட எல்லைக்குள்ளேயே அடங்கிக் காணப்படுகிறாள். கதையிலும் பெண்களைப் பெண்களாக நடத்துவதில்லை என்ற கருத்தே மேலோங்கிக் காணப்படுகிறது.

### கருவி நூல்கள்


1. இலக்கியச் சிந்தனை (அ)ஹிம்சை, முதற்பதிப்பு 1995. வானதி பதிப்பகம், சென்னை 17.
2. வேதநாயகமும் பெண்மையும், முதற்பதிப்பு 1985. சென்னை 18.
3. பெண்ணியம் அணுகுமுறைகள், முதற்பதிப்பு 1998-தமிழ்ப்புத்தகலாயம் சென்னை 17.

# பெண்ணியம் - சிறு அலசல்

*ம. சுந்தரமூர்த்தி*, தமிழ் விரிவுரையாளர்,
கோபி கலை அறிவியல் கல்லூரி, கோபி.

மாற்றம் மனித இனத்தின் அடிப்படை என்றாலும் அவை காலத்திற்கு காலம் வேறுபடுகின்றன. அறிவியல் நாகரிக வளர்ச்சிகளுக்கேற்ப மனிதனின் வாழ்விலும் பல்வேறு வகையான இலக்கியங்களும் தோற்றம் பெற்றுச் சிறப்பிடம் பெறுகின்றன. அத்தகைய இலக்கியங்கள் எல்லாம் மனித வாழ்வோடு இரண்டறக் கலந்தவைகளாக உள்ளன. மனிதனைப் பண்படுத்துவது அத்தகைய இலக்கியங்களின் செயல்களாகும். "பழையன கழிதலும் புதியன புகுதலும்" என்ற வாக்கிற்கேற்ப இலக்கியமானது காலத்திற்குக் காலம் தன்னுடைய தோற்றத்தையும், வெளிப்பாட்டினையும் மாற்றிக் கொள்கின்றது. அத்தகைய இலக்கியப் படைப்பில் சமுதாய மக்கள் பலரும் இடம்பெற்றாலும் ஆண்களை விடப் பெண்களை மிகுதியாகச் சிறப்பிடம் பெறுகின்றனர். இலக்கியங்கள் மட்டுமல்லாமலும் மனித வாழ்க்கையிலும் பெண்கள் மேலிடம் பெறுகின்றனர். இன்றைய சமுதாயத்தில் மனிதனை அர்த்தமுள்ளவனாக, மாமனிதனாக உயர்த்துவது பெண்களின் செயல்பாடுகளே எனலாம். இன்றைய நிலையில் பெண்களைப் பற்றியும், பெண்களை மையமாக வைத்தும், நடைமுறையில் உள்ள பெண்களின் சிக்கல்களைப் பற்றியும் பல்வேறு விதமாக, இலக்கியங்கள் வெளிப்படுத்துகின்றன. அவைகளைப் பற்றிச் சிறு அலசலாக இக்கட்டுரை அமைகின்றது.

பெண்கள் பிறப்பு முதல் இறப்பு வரை தங்களது வாழ்வில் அனுபவிக்கும், எதிர்கொள்ளும் வேதனைகள் ஏராளம். அடுப்பூதும் பெண்ணுக்கு கல்வி எதற்கு என்ற காலம் மலையேறி ஆண்களுக்கு நிகராகச் சரிசமமாக உயரக் கூடிய அளவிற்கு பெண்களின் வாழ்க்கைநிலை உளர்ந்துள்ளதையும் நாம் பார்த்து வருகின்றோம். சமூகத்தின் ஆணிவேர்களாகப் பெண்கள் திகழ்கின்றனர். சமூகத்தில் ஒரு சில பெண்களின் வாழ்க்கைத் தரம் உயர்ந்து காணப்பட்டாலும் பெரும்பாலான பெண்களின் வாழ்க்கை நிலை கொடூரமான வேதனைகளை அனுபவிக்க வேண்டியதாக அமைந்து விடுகின்றது. ஆண்களுக்கு சரி நிகர் என்று பெண்கள் கூறப்பட்டாலும் பெரும்பாலான பெண்களின் நிலை ஆண்களுக்கு அடங்கிக் கிடக்க வேண்டிய சூழலாகத்தான் இருக்கின்றது.

கவிதை, கதை, நாவல் போன்ற இலக்கிங்களின் அங்கங்களெல்லாம் பெண்களின் அக உணர்வுகளையே கடம்பிடித்துக் காட்டுபவைகளாக அமைகின்றன. அறிவியல் வளர்ச்சிகளும், நாகரிக வளர்ச்சிகளும் மனிதனைத் தொடரத் தொடர பெண் சிக்கல்களும் பல்வேறு சிதமாக உருமாறிப் பெண்களை வந்தடைகின்றன. சில நேரங்களில் பொறுத்துப் பொறுத்து பொறுமை இழந்து விஸ்வரூபம் எடுக்கும் சம்பவங்களும் ஆங்காங்கு நிகழ்வதைக் காணலாம். அச்சம், மடம், நாணம், பயிர்ப்பு என்று பெண்களுக்குரிய குணங்களைப் பற்றி இலக்கியங்களும், மக்களும் பேசினாலும் ஆண்களின் முரட்டுக் குணங்களைப் பற்றிச் சாடுவது மிகக் குறைவு. எந்த ஒரு சூழ்நிலையிலும் ஆண் அடக்குபவனாகவும், பெண் அடங்குபவளாகவும் தான் உள்ள நிலை நீடிக்கின்றது. மனிதன் எந்த ஒரு சூழ்நிலையிலும் பெண்களின் உணர்வுகளை மதிக்கவும் கவனிக்கவும் தவிர்த்து விடுகின்றான். ஆண்களின் தேவைகளைப் பூர்த்தி செய்யும் இயந்திரமாக, சதைப் பிண்டங்களாக மட்டுமே பெண்கள் அமைந்து விடுகின்றனர்.

சிறுகதை, நாவல், கவிதை, கட்டுரை போன்ற இக்கால இலக்கிய வகைகள் தோற்றம் பெற்றது முதல் இன்று வரை படிப்படியான வளர்ச்சியினை அடைந்து வருகின்றன.இவ்விலக்கியங்கள் அனைத்தும் பெண் இயல்புகளைப் பற்றியும், நடைமுறையில் அவர்கள் அகுபவிக்கும் வேதனைகளைப் பற்றியும், நல்வழி நடத்தும் வழிகாட்டிகளாகவும், அறிவுரை கூறும் அறிவாளிகளாகவும் பெண்கள் விளங்குவதை இன்றைய இலக்கியங்கள் சுட்டுகின்றன. அசோகமித்திரனின் தண்ணீர் நாவலில் ஜமுனா, சாயா, பீச்சரம்மா போன்ற கதாப்பாத்திரங்களின் வழியாக பெண்களின் அன்றாடச் சிக்கல்களையும், வேதனைகளையும் விளக்குகின்றார். ஜமுனா தண்ணீருக்காக அலையும் அலைச்சல் ஏராளம். திருமணமாகாத நிலையில் பருவத்திற்கேற்ப வரும் உணர்ச்சிகளை எல்லாம் அடக்கிக் கொண்டு கனவுகளோடு வாழ வேண்டிய வாழ்க்கையாக ஜமுனாவின்

வாழ்க்கை அமைந்துவிடுகின்றது. பருவ உணர்வுகளை அடக்க முடியாதவளாய் தன் காதலுடன் (பாஸ்கரராவ்) கள்ளத்தனமாக வாழ்க்கை வாழும்போது சமுதாயத்தின் ஏச்சுக்கள் பலவாறாக ஜமுனாவை வந்தடைகின்றன. உடன் பிறந்தாருக்காக தன் உணர்வுகளை, செயல்களை மாற்றிக் கொள்ள வேண்டிய கட்டாயச் சூழ்நிலை ஏற்படுகின்றது. ஜமுனா தன் வாழ்வில் பல வேதனைகளை அனபவித்து இறுதியில் கண்களில் "தண்ணீர்" நிரம்ப வாழ்வின் அர்த்தத்தைப் புரிய முடியாமல் கண்ணீர் வடிக்கின்றாள். டீச்சரம்மாவின் வாழ்க்கையும் திகைப்பூட்டும் விதமாகவே அமைந்து விடுகின்றது. பொதுவாகப் பெண்கள் தங்கள் வாழ்வில் வடிக்கும் கண்ணீரை "தண்ணீர்" நாவல் வெளிப்படுத்துகின்றது.

கா. அரங்கராமனின் நிதுக்காரய்யன் நாவல் கொங்கு மக்களின் தலைமுறைகள், பண்பாடுகள், நாகரிக வளர்ச்சி, கொங்கு நாட்டுப் பெண்களின் நிலைகளை எல்லாம் படம்பிடிப்பதாக அமைகின்றது. இந்நாவலில் இடம்பெறும் அருமைக்கார ஆத்தா, நிதுக்காரய்யனின் இரு மனைவிகள் ஆகிய பெண் கதாப்பாத்திரங்கள் வழியாக பெண்களின் உணர்வுகளையும் சிக்கல்களையும் நாம் தெரிந்து கொள்ளலாம். நிதுக்காரய்யனின் முதல் மனைவி நல்லம்மாள், பயந்த குணம் பெற்று நிதுக்காரய்யனைக் கண்டு பயந்து கிணற்றில் விழுந்து உயிரை மாய்த்துக் கொள்ளும் கோழை மனதுடையவளாக படைக்கப்பட்டாள். நிதுக்காரய்யனின் இரண்டாவது மனைவி பழனியம்மாள், அவள் உயிர்த்தோழி மாராயி. மாராயிக்குத் திருமணம் முடிந்த ஒரு ஆண்டிலேயே கணவன் இறந்து விதவையாகின்றாள். திருமணம் நடந்தும் கேள்விக்குறியான தன்னுடைய (மாராயி) வாழ்க்கை பழனியம்மாளுக்கு அச்சத்தை ஏற்படுத்திய செயல் வாழ்க்கை பற்றிய அர்த்தத்தைத் தோண்டுகிறது. தண்ணீர் நாவல் மட்டுமல்ல, நிதுக்காரய்யன் நாவல் மட்டுமல்ல, வெளியாகின்ற அனைத்து சிறுகதைகள் மட்டுமல்ல, இக்கால இலக்கியங்களில் மிகுதியாகவே பெண்களின் அனைத்து நிலைகளையும் வெளிப்படுத்துகின்றன.

**ஊடகங்களில்**

கவிதை, கதை என்று இலக்கிங்கள் மட்டும் அல்லாமல் இன்றைய ஊடகங்களும் பெண்களின் வாழ்வை, அவர்களின் சிக்கல்களை எல்லாம் பிரதிபலிப்பவைகளாக அமைகின்றன. மக்களது மத்தியில் பெரும்பரபரப்பை, ஒரு திருப்பத்தை ஏற்படுத்துவது இன்றைய ஊடகங்களாகும். தொலைக்காட்சி, வானொலி, திரைப்படம், இதழ்கள் போன்ற ஊடகங்களில் பெண்கள் போதைப்பொருளாக, ஏமாளிகளாக அமையக்கூடிய அவல நிலையினை நாம் காணமுடிகின்றது. வானொலியில் வெளியாகின்ற நாடகங்கள், கதைகள் போன்ற செய்திகள் பெண்கள் வாழ்வில் அனுபவிக்கும் அவலங்களை சுட்டிக் காட்டுவதாக அமைகின்றதை நாம் காணுகின்றோம். தொலைக்காட்சிகளில் தொடர்ந்து வெளியாகின்ற தொடர்கள் நமது சிந்தனையைத் தகிக்கும் விதமாக அமைகின்றன. தொலைக்காட்சிகளில் வெளியாகும் கதைகள் எல்லாம் பெண்களின் அக உணர்வுகளையும், வேதனைகளையும், விம்மல்களையும் வெளிப்படுத்துகின்றன.

தினந்தோறும் நாம் காணுகின்ற தொலைக்காட்சித் தொடர்கள், வானொலி நிகழ்ச்சிகள், இதழ் செய்திகள் ஆகியவற்றின் மூலமாக பெண்களின் வாழ்க்கை நிலையினை நாம் தெரிந்து கொள்வதுண்டு. ஊடகங்கள் வெளிப்படுத்துகின்ற செய்திகள் மக்களது மத்தியில் பெரும்பரபரப்பை, பாதிப்பை ஏற்படுத்தி மக்களோடு மக்களாக இருந்து சில நேரங்களில் சிந்தனையைத் தூண்டுபவைகளாகவும் அமைகின்றன. சமுதாய மாற்றத்திற்கு திரைப்படங்கள் மூல காரணமாக அமைவதுண்டு. திரைப்பட கருத்துகள், கதைகள் பாடல்கள் போன்ற தன்மைகளும் பெண்களின் இயல்புகளை வெளிக்காட்டுவதாகவே அமைகின்றன.

இன்றைய இலக்கிங்கள், தகவல் தொடர்பு சாதனங்கள், போன்றவற்றின் மூலமாகப் பெண்களின் வாழ்க்கைத் தரம், வாழ்க்கையில் உள்ள அவல நிலை குடும்பச் சிக்கல்கள், நிறைவேறா ஆசைகள், கனவுகள் கற்பனைகள் போன்ற வேதனைகளாகக் காட்சி தரும் உணர்வுகளை நாம் காணுவதுண்டு. பெண்கள் வாழ்க்கைத் தரம் உயர, வாழ்க்கை நிலை உயர மக்களது (ஆண்களின்) கருத்துக் கொள்கைகளில் மாற்றங்கள் நிகழ்ந்தே ஆக வேண்டும். மாற்றங்கள் விரைவாக நிகழும்போது பெண்கள் சமுதாயத்தில் உயர்வு ஏற்படும் என்பதில் எள்ளளவும் ஐயமில்லை.

# எஸ்.வி.வி. காட்டும் மகளிர் கல்வியினால் எழும் சிக்கல்

முனைவர். *இரா. சுப்பையா,* இணைப் பேராசிரியர்,
உயராய்வு மையம், தமிழ்த்துறை, யாதவர் கல்லூரி, திருப்பாலை, மதுரை - 625 014.

1933 ஆம் ஆண்டு எஸ்.வி.வி (எஸ்.வி. விஜய ராகவாச்சாரியார்)யின் முதல் தமிழ்க்கதை "தாட்சாயிணியின் ஆனந்தம்" ஆனந்த விகடனில் வெளியானது. அன்றுமுதல், விகடனால் எஸ்.வி.வி வளர்ந்தாரா, அவரால் விகடன் வளர்ந்ததா என்று கூறமுடியாத அளவிற்கு இருவரும் வளர்ந்தார்கள். எஸ்.வி.வி யின் தமிழ்க்கதைகள் அனைத்துமே ஆனந்த விகடன் வாசகர்களுக்காகவே எழுதப்பட்டவை. அன்றாட வாழ்வின் பிரச்சனைகள் வாசகர்களுக்கு அலுப்புத்தட்டாத வகையில் எழுதப்பட்டவை. மகளிர் சார்ந்த கருத்துக்களை மாமியார் நாட்டுப்பெண் சிக்கல், இளம் தம்பதிகளின் ஊடல், சம்பளத் தட்டுப்பாடு, வீடு கிடைக்காத திண்டாட்டம் போன்ற கதைகளில் மகளிர் அடையும் சிக்கல்களை எழுதுகிறார். இதுபோன்ற சிக்கல்களில் மகளிர் அடையும் கல்வியிலும் உண்டாகும் சிக்கல்கள்ளை எஸ்.வி.வி தாம் படைத்த படைப்புகளில், படைத்திருப்பதோடு அச்சிக்கல்களுக்குத் தீர்வு கூற கதை மாந்தர்களின் வழியில் மகளிர் வாழ்க்கையின் முன்னேற்றச் சிந்தனைகளைப் படைத்துள்ளார் என்பது இங்கு பாராட்டத்தக்கதாகும்.

## மகளிர் கல்வியினால் எழும் சிக்கல்

கணவன் - மனைவி உறவில் மனம் என்பது முக்கிய இடத்தைப் பெற்றாலும் சில செயல்கள் இன்றியமையாத இடத்தைப் பிடித்து விடுகின்றன. மனம் என்பது மேலோட்டமாகவும், அங்கு நிகழும் சில செயல்கள் ஆழமாகவும் தோன்றி இணைந்து வாழ்க்கையில் பிணைக்கப்பட்டுள்ளன. கணவன்-மனைவி பிரிவுக்கு முக்கிய காரணங்களில் ஒன்றாய்த் திகழ்வது கல்வியுமாகும். அதனால் குழந்தைகளின் கல்வியும் முக்கிய பங்கினைப் பெறுகின்றது. அக்கல்வியால் சிக்கல் ஏற்பட்டபோதும் கணவன்-மனைவி உறவினை முறிவுக்குக் கொண்டுவராமல், அதாவது உணர்வின் வழிச் செல்லாமல் அதைத் தடுத்து நிறுத்தி அடக்கி ஆள்வது குடும்பக் கட்டுக்கோப்புக் குலையாமல் நிலைத்து நிற்க உதவுகிறது. "சௌந்தரம்மாள்" எனும் புதினத்தில் வரும் தலைமை மாந்தரான சௌந்தரம்மாள் - பாஷ்யம் ஐயங்கார் இதற்குச் சான்றாகின்றனர்.

"சௌந்தரம்மாள்" புதினத்தில் குழந்தைகளுக்கு முக்கியமாகப் பெண்களுக்கு ஆங்கிலக் கல்வி கூடாது என்று சௌந்தரம்மாள், கருதுவது சிக்கலுக்குக் காரணமாகின்றது. தனது மகன் சீனாவின் பொறியியல் படிப்புத் தொடர்பாகக், கணவன்-மனைவிக்குள் சிக்கல் உருவாகின்றது. இவ்ஆங்கிலக் கல்வியானது அவ் இருவருக்குள்ளும் பூதாகாரமான சிக்கலினை ஏற்படுத்துகின்றது. இதே சிக்கலானது, எஸ்.வி.வி யின் படைப்பான கோபாலன் ஐ.ஸி.எஸ்.சினாலும் உண்டாகின்றன. "கோபால் ஐ.ஸி.எஸ்".-ல் ஒரு வித்தியாசமான விவாதமே சிக்கலுக்குக் கரரணமாகின்றது. இப்புதினத்தில் துணைமாந்தராக வருபவர் அத்தியூர் ஜமீன்தார் வெங்கடாசல ரெட்டியார் ஆவார். அவரின் மாமா பத்ராசல ரெட்டியார். அவர் வயது முதிர்ந்தவர். பழைய கால நாகரிகமும் மனப் போக்கும் நடைமுறையும் கொண்டவர். அவரும் ஆங்கிலக் கல்வியினை வெறுப்பதை ஆசிரியர் காட்டுகிறார். பிள்ளைகளை அவர் இங்கிலீஷ் படிப்புக்கு விடவில்லை. "நமக்கு எதற்கடா இங்கிலீஷ் படிப்பு? காலையிலும் சாயந்திரத்திலும் வயல்களைச் சுற்றி வந்தால் பூமி பொன்னாய் விளைகிறது. ரெட்டிமார்களுக்கு ஜாதித் தொழில் குலாச்சாரம் எல்லாம் வேளாண்மை. லாபமில்லாத தொழில். இங்கிலீஷ் படித்து ஆகவேண்டியதென்ன" என்பார். கோபாலன் சீமைக்குச் சென்று படித்து வரட்டும். அவனின் தந்தை யாக்கியவராகாவாசாரிய ஸ்வாமிக்கிருக்கும் மதிப்பும் கௌரவமும், அவரிடத்தில் காட்டும் பக்தியும், கோபாலனுக்குப் பதினாயிரத்தில் ஒன்று கிடைக்குமா? என்று மேலும் ஆங்கிலக் கல்வி கற்கப் போகிறவனைப்

பார்த்துக் கூறுகிறார். அவர் மேலும், இங்கிலீஷ்காரன் எத்தனை வருஷங்கள் ராஜ்யம் ஆண்டாலும் பரவாயில்லை ஸ்வாமி. இந்த இங்கிலீஷ் படிப்பு ஒன்றை மாத்திரம் புகுத்தாமல் இருந்தால் ராஜ்யம் ஒருநாளும் இவ்வளவு கெட்டிராது. மஹம்மதியர் காலத்தில் நம் வாழ்க்கை முறைகள் கெட்டனவா? யாரோ ராஜ்யத்தை ஆண்டுகொண்டு வந்தான். நம் வேலையை நாம் தடங்கலில்லாமல் நடத்திக்கொண்டு வந்தோம். நம்மவர்களிடத்தில் இங்கிலீஷ் படிப்பு குறைந்து இருந்த காலத்தில் இந்த விபரீதங்களெல்லாம் அதிகமாகத் தலைப்பட்டிருந்ததா பாருங்களேன். அப்பவும் படித்து உத்தியோகம் செய்தான். உத்தியோகத்திற்காக எப்படி எப்படி இருக்க வேண்டுமோ அப்படி இருந்தான். வீட்டுக்கு வந்தால் அவன் அநாதிப் பழக்கங்களை விடவில்லை. உடம்பில் கொஞ்சம் அச்சம் இருந்து வந்தது. அந்தப் படிப்பு பரவப் பரவ அச்சம் விட்டுப்போய்விட்டது. எல்லா விவஸ்தைகளும் அற்றுப் போய்விட்டன. இங்கிலீஷ் படித்த நம்மவன் வெள்ளைக்காரனுக்கும் மேலேயல்லவா பேசுகிறான்? நாகரிகம் கொண்டாடுகிறான்" என பத்ராசல ரெட்டியார் கோபாலன் ஐ.ஸி.எஸ். குறும்புதினத்தில் கூறும் கருத்து, இங்கு எழும் சிக்கலுக்கு எடுத்துக் காட்டத்தக்கதாகும்.

பிள்ளைகளின் ஆங்கிலப் படிப்பு தொடர்பாக சௌந்திரம்மாளுக்கும், பாஷ்யம் ஐயங்காருக்கும் கருத்து மாறுபாடு உண்டாகின்றன. அதனால் சிக்கல் தலைதூக்குகிறது. சௌந்திரம்மாள் தம் கணவருடன் வாழ்ந்த இருபத்தைந்து வருஷங்களுக்குள் , அவரின் குணங்களும் நடவடிக்கைகளும் எவ்வளவோ மாறுதல்கள் அடைந்துள்ளன என்பதைக் கணக்கிட்டுச் சொல்ல முடியாது என்கிறாள். இன்றைக்கு இருந்த புத்தி நாளைக்குக் கிடையாது என்றும், நாளைக்கு இருந்தது நாளன்றைக்கு இல்லை என்றும், எதுவும் நாலுநாள் சேர்ந்தாற்போல் நினைத்து நின்றதில்லை என்றும் தனது மனதில் தோன்றுவதற்கு ஏற்பத் தன் கணவன் செயல்படுவார் என்றும் அதன்மீது ஒரு தீவிரம் காட்டுவார் என்றும் கூறுகிறாள்.தன் பிள்ளைகளுக்கு ஆங்கிலப் படிப்பு தேவை என்று தனது மனைவியிடம் தனக்குத் திடீரெனத் தோன்றும் குணத்தினைக் காட்டுகிறார். பாஷ்யம் ஐயங்காரின் குணமோ கொஞ்சம் நாட்கள் ஒரே வெள்ளைக்கார மோகத்தில் இருக்கும். அதுமாறி கொஞ்சநாட்கள் பழுத்த "ஸ்னாதனி" ஆவார். அதற்குப் பிறகு மகாத்மா காந்தி இயக்கத்தில் ஈடுபாடு கொள்வார். அவரின் அத்தனை செயல்களையும் சௌந்தரம்மாள் கண்டு கொள்வதேயில்லை. அவரின் நடவடிக்கைகளில் தலையிடுகின்ற பொழுது சிக்கல்கள் பெருகும். கருத்து வேறுபாடுகள் உண்டாகும் என்பதைச் சௌந்தரம்மாள் நன்குணர்ந்திருந்தாள்.

சௌந்தரம்மாளுக்கும் ஆங்கிலம் கற்றுக்கொடுக்க வேண்டுமென்று அவளின் கணவர் ஒரு ஆசிரியரை ஏற்படுத்தத் தொடங்கினார். சௌந்தரம்மாள் அதற்கு ஒத்துவரவில்லை. "போய்வாருங்கள்! அந்தக் கதை நம்மிடம் பலிக்காது. வாத்தியாச்சி வேண்டுமானால் வந்துவிட்டுப் போகலாம்.

நான் கற்றுக்கொள்ளப் போவதில்லை. எதுக்காக இப்போது நான் இங்கிலீஷ் கற்றுக்கொள்வது? எங்கே நான் உத்தியோகத்துக்குப் போக வேண்டும்?" என்றேன்.

"படித்தால் புத்தி விசாலமாகும், நாகரிகம் ஏற்படும்" என்றார்.

"அது இங்கிலீஷ் படித்தால்தானோ?"

"ஆமாம், அது இல்லாத படிப்பு என்ன படிப்பு?"

"நீங்கள் இங்கிலீஷ் படித்ததனால் ஏற்பட்டிருக்கும் நாகரிகத்தைத்தான் பார்த்துக் கொண்டிருக்கிறேனே; நீங்கள் ஒருத்தர் படித்திருக்கிறது இரண்டு பேருக்குமே போதும். ஒரு காசுக்குப் பத்துகாசு செலவு; குடுமி போச்சு; நாமம் போச்சு; தெய்வம் தேவாதி போச்சு, பாழாய்போன படிப்பு. வருகிற வினையெல்லாம் அதனால்தானே? அந்தப் படிப்பு உங்களோடு இருக்கட்டும் என்றேன். இந்த விஷயத்தில் அவர் பாச்சா என்னிடத்தில் பலிக்கவில்லை. அவர் எப்படிப் போனாலும் நான் மாத்திரம் எப்பொழுதும் போலவே இருந்து வந்தேன்" என்று சௌந்தரம்மாள், பெண்கள் படிக்க வேண்டும் என்பதற்குத், தன் எண்ணத்தினைக் கூறிவிட்டுச், சிக்கலைத்

தவிர்க்கிறாள்.குழந்தைகளை வளர்க்கும் முறையிலும் கணவன்-மனைவிக்குச் சிக்கல்கள் ஏற்பட்டன. அதற்கும் பாஷ்யம் ஐயங்கார் பெண்களுக்கு ஆங்கிலக் கல்வி வேண்டுமென்றார். அவ்வேளையிலும் சிக்கல் தோன்றியது.

"குழந்தைகள் வளர்க்கும் விஷயமாக எங்கள் அகத்துக்காரருக்குத் தெரியாதது ஒன்றுமே இல்லை".

"அந்தப் புஸ்தகங்களெல்லாம் இங்கிலீஷில் இருந்தன".

"நீ இங்கிலீஷ் படித்திருந்தால் இவைகளை எல்லாம் நீயே தெரிந்து கொள்ளலாமோ இல்லையோ?" என்று விசனப்பட்டார்.

"என்ன விஷயங்களை?"

"குழந்தைகளை எப்படி வளர்க்கவேண்டும் என்பவைகளை".

"அதற்குப் புஸ்தகம் என்ன? இப்போது அதைப்பற்றி ஒருத்தருக்கும் ஒன்றும் தெரியாதோ? புஸ்தகம் படித்துதான் தெரிந்துகொள்ள வேண்டுமோ?" என்றேன் என்று சௌந்தரம்மாள் கூறினாள். அவர்களின் மகள் சரோஜாவை "கான்வெண்ட" பள்ளிக்கு அனுப்ப வேண்டுமென்று அவளின் கணவர் ஒருகாலில் நின்றார். இதுவும் சிக்கலுக்குக் காரணமாயிற்று. சௌந்தரம்மாள் தன் கணவனிடம் ஆங்கிலமொழியின் முக்கியத்துவத்தினை அறிந்து கொள்ள

"என்ன அந்த ஸ்கூலில் அவ்வளவு விசேஷமோ?" என்று கேட்டேன்.

"அங்கே சிறுகுழந்தைகளாக இருக்கும்பொழுதே நன்றாக இங்கிலீஷ் பேசக் கற்றுக்கொடுத்து விடுகிறார்கள். அங்கே படிக்கிற குழந்தைகள் எட்டு, ஒன்பது வயசிலேயே என்ன சுத்தமாகவும், பளபளவென்றும் இங்கிலீஷ் பேசுகிறார்கள் தெரியுமா?"

"அங்கே மாத்திரம் எப்படி வந்துவிடுகிறது?"

"தெலுங்கு தேசத்தில் போயிருந்தால் பழக்கத்திலேயே குழந்தைகளுக்குக் கூடத் தெலுங்கு வந்துவிடுகிற மாதிரி, அந்த ஸ்கூலுக்குள் நுழைந்துவிட்டால் இங்கிலீஷ் தவிர வேறு ஒன்றையும் பேசமுடியாது. ஆகையினால் தன்னாலே பேச வந்துவிடுகிறது" எனப் பெண்கள் ஆங்கிலக் கல்வி கற்க வேண்டும் என்கிற நிலையில் கணவன் மனைவி இருவருக்குமிடையே சிக்கல் உண்டாகிறது. இச்சிக்கலினை அவளின் பாலிய கால சிநேகிதி பொம்மி என்பவள், சிக்கலினைத் தீர்த்துவைத்தும், வரும் காலங்களில் பெண்களின் நிலைகளானது எப்படியிருக்கும் எனவும், அதனால் குழந்தைகளை எப்படி வளர்க்க வேண்டும் என்பதையும் பொம்மியின் வாயிலாகக் கூறி சிக்கல் தீர்க்கப்படுகிறது. "காலத்துக்குத் தகுந்தபடி நடந்துகொள்ள வேண்டாமாடி, அசடே? உன் பெண்ணைப் பழங்காலத்து முறையிலேயே வளர்த்து வந்தாயானால், பெண்ணை நீ அகத்திலேயே வைத்துக் கொண்டிருக்க வேண்டியதுதான். எவன் வந்து கல்யாணம் பண்ணிக்கொண்டு போவான்? இந்தக்காலத்தில் கல்யாணத்துக்காகப் பெண்ணைப் பார்க்க வருகிறவர்களெல்லாம், பெண் என்ன படித்திருக்கிறாள்? பாடுவாளா, ஆடுவாளா, எம்ப்ராய்டெரி தெரியுமா? என்று கேட்கிறார்கள். அதற்கு என்ன பதில் சொல்லுவாய்? என் பெண்ணுக்குத் திருப்பல்லாண்டு தெரியும். அடுப்பு மெழுகுவாள், கோலம் இடுவாள் என்பாயோ? அந்த யோக்கிதைக்கு மேல் இல்லாமலிருந்த உனக்கு எம்.ஏ., அகமுடையான் அகப்பட்டுவிட்டானே, அந்தமாதிரி உன் பெண்ணுக்கும் அகப்பட்டுவிடும் என்று எண்ணுகிறாயோ? கனவில் கூட நினைக்காதே. அந்தக் காலம் இதைவிட வேறே... என்று வேறு உபதேசம் செய்தாள்". கடைசியில் சௌந்தரம்மாள் அதற்கு ஒப்புக்கொண்டு பெண்ணான சரோஜாவை கான்வெண்டில் சேர்க்கத் தயாராகிறாள்.

மகளின் கல்வியால் கணவனுக்கும் மனைவிக்கும் எழுந்த சிக்கல்களானது அதிகமான முரண்பாடுகளின்றியே செல்வதால் கணவன் மனைவி உறவில் பிளவின்மை ஏற்படுகிறது. சௌந்தரம்மாளின் மனமானது அத்தன்மையான கூறுகளுக்கு ஏற்றதாக இருந்ததே காரணமாகும்.

# தமிழ்க் கவிதை வெளியில் பெண் மொழி

முனைவர் *எம்.ஏ.சுசீலா,* இணைப்பேராசிரியர்,
தமிழ்த்துறை, பாத்திமா கல்லூரி, மதுரை – 18.

இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு மேலான நீண்ட பாரம்பரியம் கொண்ட தமிழ்க்கவிதை வெளியில் பெண்ணும், பெண் சார்ந்த கருத்துக்களும் பரவலாக இடம்பெற்று வந்தபோதும் பெண்மொழியைப் பேச அவை எந்த அளவுக்கு முயன்றுள்ளன என்பதே இன்றைய நவீன கருத்தியல் தாக்கங்கள், நமக்குள் எழுப்பும் கேள்வி.

### *பெண் மொழி – ஒரு விளக்கம்:*

கருத்துப் பரிமாற்றத்திற்குக் கருவியாக மட்டுமே உள்ள மொழியில் பால் பாகுபாட்டிற்கு இடமில்லை என்றபோதும், பொதுவாக மொழியைக் கையாளும் அதிகாரம் எவர் வசம் உள்ளதோ, அவரது கண்ணோட்டத்தை ஒட்டியே மொழியும் வடிவமைக்கப்படுவதைக் காண முடிகிறது. தாய்வழிச் சமூக அமைப்பு, தந்தை வழிப்பட்டதாக மாறிய பின், பொருளாதாரம், அரசியல், சட்டம், சமயம் எனப் பல துறைகளிலும் ஆண்களே ஆதிக்கம் செலுத்தியதால் மொழி, ஆண்வயப்பட்டதாக மாறிற்று. பெண்ணின் அடையாளங்கள், மதிப்பீடுகள், பங்குநிலைகள் என அனைத்தும் ஆண்மொழியாலேயே வகுக்கப்பட்டன.

பெருமையும் உரனும் ஆடூஉ மேன
அச்சமும் நாணும் மடனும் முந்துறுத்த
நிச்சமும் பெண்பாற் குரிய என்ப

போன்ற இரட்டை நிலைப் போக்குகள் *கிளைக்க ஆண்மொழியே அடிப்படை அமைத்தது.*

மேற்குறித்த நிலைப்பாட்டிலிருந்து மாற்றம் காணும் முயற்சியாகப் பெண்மொழி குறித்த சிந்தனைகள், பெண்ணியப் படைப்புத் தளத்திலும், திறனாய்வுத் தளத்திலும் வலுப்பெற்று வருகின்றன. பெண்மொழி என்பது, ஆணாதிக்கச் சிந்தனைகளுக்கு எதிரான ஒரு மாற்று அரசியலாக – கலகக் குரலாகக் கருதப்படுகிறது.

பெண்மொழி என்பது அரசியல். பெண் இருப்பைப் பற்றியும், பெண் உடலைப் பற்றியும் மொழி மற்றும் சமூக, குடும்ப, நிறுவன வெளிகளில் உருவாக்கப்பட்டுள்ள அவளுக்கெதிரான கருத்தாக்கங்களையும், மதிப்பீடுகளையும் சிதைப்பதும் – அவற்றின் வன்முறைக்கு எதிராகக் குரலெழுப்புவதும்தான் பெண்ணின் மாற்று அரசியல் என்று இன்றைய முன்னணிப் பெண் கவிஞர்களுள் ஒருவரான மாலதி மைத்ரி குறிப்பிடுகிறார்.

இலக்கியங்களில் பெண்மொழி பதிவாகும் நிலையிலேதான், பண்பாட்டு அடிப்படையிலும், சமூக மரபுகள் சார்ந்தும், ஆழ் மனம் சார்ந்தும் பெண் என்பவள், காலந்தோறும் எவ்வாறான ஒடுக்குமுறைகளுக்கெல்லாம் ஆளாகியிருக்கிறாள் என்பது வெளிப்படும். அத்தகைய ஒடுக்குதல்களுக்கு எதிரான கேள்விகளை எழுப்பி, சிந்தனையைத் தூண்டுவதும் பெண்மொழி யினாலேயே சாத்தியமாகும்.

### சங்கக் கவிதை வெளியும், பக்திக் கவிதை வெளியும் :

*சங்கக் கவிதை வெளியில் – ஆணாதிக்கச் சொல்லாடல்களை அடியொற்றி – அன்றைய சமூக நிறுவனம்* ஏற்படுத்தியிருந்த மரபு நெறிகளுக்குள் எந்த முரண்பாடும் இன்றிப் பொருந்திப் போனதாக, ஈன்று புறந்தருதல் என் தலைக் கடனே என்று உடன்படும் போக்கிலேயே பெரும்பாலும் பெண்குரல் ஒலிக்கிறது. சமய மரபுகளால் பெண் மீது சுமத்தப்பட்ட விதவை நிலைக் கொடுமைகளைப் புறநானூற்றுப் பெண் கவிஞர்கள் பதிவு செய்துள்ளபோதும், அவை, தன்னிரக்க வெளிப்பாடுகளாக உள்ளனவேயன்றி, அத்தீமைகள் எதிர்க்கப்பட வேண்டியவை என்ற சிந்தனை அவற்றில் இல்லை. தன்னுறு வேட்கையை வெளிப்படுத்தும் உரிமை பெண்ணுக்கில்லை என்ற தொல்காப்பிய மரபை மீறிப் பெண்ணின் காதல் உணர்வை வெளிப்படையாகப் பதிவு செய்துள்ள சில பெண் கவிதைகள், மிக அரிதான விதி விலக்குகளாகச் சங்கக் களத்தில் தலை காட்டுவதைக் காண முடிகிறது.

காமம் பெரிது களை ஞரோ இலரே
வருத்தி வான்தோய் வற்றே காமம்

*சங்க காலத்தை அடுத்து,* நீண்ட இடைவெளிக்குப் பின் சமயப் பின்புலத்தைச் சார்ந்தவர்களாய்த் தமிழிலக்கியத்தில் முகம் காட்டும் காரைக்கால் அம்மையும், ஆண்டாளும் மரபுகளின் தாக்கத்தால் தங்களுக்கு நேர்ந்த பாதிப்புக்களை, மனக் காயங்களைத் தங்கள் எழுத்துக்களில் இறக்கி வைத்திருப்பதைக் காண முடிகிறது. இவ்விருவருள் உடலையும், பாலியலையும் மறுப்பதன் வழி தன் எதிர்ப்பைக் காட்டுபவர் காரைக்காலம்மை. ஆண்டாளோ பாலின பேதங்களால் இதுவரை பெண்ணுக்கு விதிக்கப்பட்டிருந்த கலாச்சாரக் கட்டுமானங்களைத்

தகர்த்தெறிந்து தனது எதிர்ப்பைப் பதிவு செய்திருப்பவர். தமிழிலக்கியப் பரப்பில் பெண்மொழி குறித்த சிந்தனைக்குத் தாங்கள் அறியாமலேயே அடித்தளம் அமைத்து விட்டவர்கள் என இவ்விரு பெண்கவிகளையும் கூறமுடிகிறது.

### சமகாலக் கவிதை வெளி:

இருபதாம் நூற்றாண்டின் சமுதாயச் சூழலில் இளமை மணம், சதி வழக்கங்களின் ஒழிப்பு, கைம்மை மறுமணச் சட்டம், பெண்கல்விப் பெருக்கம் ஆகிய பெண் சார்ந்த புறநிலை மாற்றங்கள் நிகழ்ந்தன. பெண்ணியக் கோட்பாட்டின் சித்தாந்தரீதியான வளர்ச்சியால் ஏற்பட்ட சிந்தனை மாற்றங்களும் பெண் நிலையில் வரவேற்கத்தக்க பல வளர்ச்சிகளுக்கு அடிகோலின. பெண்மை பற்றி ஆண்நோக்கு நிலை நிறுவியுள்ள அழகியற் கோட்பாடுகளையே பெண் எழுத்தாளர்களும் வார்த்தெடுத்துச் செல்கின்றனர் என்று பெண் படைப்பாளிகள் மீது பொதுவாகச் சுமத்தப்படும் குறைபாடுகளை உடைத்துத் தனித்துவமுள்ள மொழியாகத் தங்கள் எழுத்துக்களை வெளிப்படுத்திக் கொள்ளும் பெண் கவிஞர்கள் பலரும் 20-ஆம் நூற்றாண்டின் இறுதியில் தங்கள் முத்திரைகளை அழுத்தமாகப் பதிக்கத் தொடங்கியுள்ளனர். இரா.மீனாட்சி, திலகவதி, கனிமொழி, உமாமஹேஸ்வரி, சல்மா, இளம்பிறை, வெண்ணிலா, க்ருஷாங்கினி, வத்சலா, சுகந்தி சுப்ரமணியன், மாலதி மைத்ரி, குட்டி ரேவதி, சே.பிருந்தா, ஆண்டாள் பிரியதர்ஷினி என நீண்டு செல்லும் இப்பட்டியலில் செல்வி சிவரமணி, அவ்வை சங்கரி முதலிய ஈழப் படைப்பாளிகளும் சிறப்பிடம் பெறுகின்றனர்.

நவீனப் பெண் கவிதைகளில் பெண்மொழி அமைந்துள்ள தன்மையினை மூன்று வகைப் போக்குகளாகப் பகுத்துக் காண முடிகிறது.

1. மரபு சார்ந்த தளைகளின் நெருக்குதல் தாங்க முடியாமலிருப்பதை ஆற்றாமையாய், வலியாய் - சில வேளைகளில் விமரிசனமாய் வெளிப்படுத்தல்.
2. மரபுச் சிறைக்குள்ளிருந்து வெளிவர வேண்டுமென்ற விழைவைப் புலப்படுத்தல்.
3. பெண்மொழியை உடல்மொழியாக்கி, அதன் வழி எழுப்பும் கலகக்குரல்.

### மரபுத் தளைகளின் நெருக்கடி :

பாரதி தொடங்கி இன்றைய அறிவுமதி வரையிலான ஆண் கவிஞர்கள் பலரும் பெண் விடுதலைக்கான தேவையை வலியுறுத்தியுள்ள போதும், உடல், மனம் சார்ந்த தனது அக, புறத் தடைகளைப் பாதிப்புற்ற தன் கண்ணோட்டத்திலிருந்து பெண்ணே முன்வைக்கத் துணிகையில் பெண்ணியச் சிக்கல்களின் பலவகைப் பரிமாணங்களை விரிவாக இனங்காட்ட வாய்ப்புக் கிடைக்கிறது.

அநாதைக்குத்தான் தெரியும் - அன்பின் தேவை
வறிஞனுக்குத்தான் இருக்கும் - செல்வத்தின் மோகம்
அடிமைக்குத்தான் இருக்கும் - சுதந்திர தாகம்
பெண்ணுக்குத்தான் புரியும் - விடுதலையின் அருமை.

என்று இக்கருத்தை முன்வைக்கும் திலகவதி, அந்த விடுதலைக்கான பாதையில் வரும் இடையூறுகளை,

ஆறுமணிக்குள் - அவசரமாய் முடிக்க வேண்டும்
பெண் விடுதலை பற்றிய பேச்சை
ஐந்து நிமிடம் தாமதமாய்ப் போனாலும்
அறைவிழும் அவரிடம்

என்ற கவிதையில் நுட்பமாகச் சுட்டுகிறார்.

சட்டாம் பிள்ளையாய் - அம்மா
சிறைக் காவலராய் - அப்பா
அறிவுச் சலவைக்கு - படிப்பு
கைதட்டிச் சிரித்து அடக்கி வைக்க - சுற்றம்

என்று கனிமொழியும்,

வரையறுக்கப்பட்ட எல்லையில் விரிகிறது என் சிந்தனை
நிமிர்ந்தால் தலைதட்டி அமர்த்தும் என் வானம்

என்று சே.பிருந்தாவும், பெண்ணின் சுதந்திரமான சிந்தனை மீது வன்முறையாகத் திணிக்கப்படும் வரையறைகளை வரிசைப்படுத்துகின்றனர். பெண்ணுக்கு மனம் என்ற ஒன்று இருப்பதே கருத்தில் கொள்ளப்படாமல், அவளை வெறும் உடலாகவும், வீட்டு வேலைக்கான கருவியாகவும் மட்டுமே கருதும் சமூக மனப்போக்கை,

எனக்கு

முகம் இல்லை... இதயம் இல்லை... ஆத்மாவும் இல்லை
அவர்களின் பார்வையில்
இரண்டு மார்புகள்... நீண்ட கூந்தல்
சிறிய இடை.... பருத்த தொடை
இவைகளே உள்ளன
சமையல் செய்தல், படுக்கையை விரித்தல்
குழந்தையைப்பெறுதல் பணிந்து நடத்தல்
இவையே எனது கடமைகள் ஆகும்

என்று துணிச்சலுடன் திறனாய்வு செய்கிறது சங்கரியின் கவிதை. இல்லம் சார்ந்த பங்குநிலை மட்டுமே பெண்ணுக்கு முதன்மைப்படுத்தப்படுகையில் தனிப்பட்ட சிறுசிறு விருப்பங்களை நிறைவேற்றிக் கொள்வதும் கூடப் பெண்ணுக்குக் கடினமாக உள்ளதை மெல்லிதான சோகத்துடன்,

எனது டைரி எனக்கானதாய் இல்லை
எனக்கான முகவரியை எனது டைரியில் காணோம்

என்று வெளிப்படுத்துகிறார் சுகந்தி சுப்பிரமணியன்.

**சிறைமீட்சிக்கான எழுச்சி:**

பெண்ணின் சுதந்திரமான இயக்கத்தை முடக்கும் காரணிகளை எடுத்துரைப்பதோடு, அவற்றிலிருந்து விடுபட்டுத் தனித்துவமுள்ள மனிதப் பிறவிகளாக அவர்கள் தம்மைத் தாமே உணர வேண்டுமெனவும், சமூகமும் அவ்வாறான அங்கீகாரத்தை அவர்களுக்கு அளிக்க வேண்டுமெனவும் எடுத்துரைக்கும் பெண் கவிதைகளும் இன்றைய கவிதைப் பரப்பில் குறிப்பிடத்தக்கவை.

பிறரைச் சார்ந்தவர்களாகவும், பிறரைக் களிப்பூட்டும் அழகுப் பொருட்களாகவும் மட்டுமே வாழ்ந்த காலம் மாறி வருவதை முழுமையாக உணர்ந்து விட்ட பெண்கள், அத்தகைய உணர்வு பெறாதோர்க்கு விழிப்பூட்டுவதாக அமைகிறது பின்வரும் சன்மார்க்காவின் கவிதை.

சேலைகளைச் சரிப்படுத்தி வேளைகள் வீணாகின்றன
வேண்டாம் தோழிகளே வேண்டாம்
ஆடையின் மடிப்புகள் அழகாக இல்லை என்பதற்காகக்
கண்ணீர் விட்ட நாட்களை மறப்போம்
வெட்கம் கெட்ட அந்த நாட்களை மறந்தே விடுவோம்

சுயமுள்ள ஓர் உயிராகப் பெண் தன்னை உணரத் தலைப்பட்டு விட்ட மாற்றத்தை,

எனக்குள்ளேயா இந்தச் சக்தி...
எனக்கா இத்தனை பயமின்மை
என் கால்களா ஊன்றிக் கொண்டன
எனக்கா இந்தச் சிறகுகள்?

என்று விரித்துக் கொண்டே செல்கிறார் கவிஞர் வத்ஸலா.

பெண்ணியக் கோட்பாட்டை இயக்க ரீதியாக வளர்த்தெடுப்பதில் ஆர்வம் கொண்ட சுபத்ரா போன்ற கவிஞர்களின் படைப்புகள், ஆண்-பெண் ஆகிய இருவரின் கண்ணோட்டங்களிலும் நேர வேண்டிய ஒட்டுமொத்தமான மாற்றத்தை வேண்டி நிற்கின்றன.

அழும் குழந்தை என்னுடையது மட்டுமல்ல – நம்முடையதும் தான்
அடுப்புச் சோறு – அதுவும் கூட நமக்காகத் தான்
களைப்பும் சோர்வும் கணவனுக்குத் தானா? மனைவிக்கும் தான்

என்று தோழமை உணர்வுடன் சமத்துவ நோக்கை வெளிப்படுத்தும் சுபத்ராவின் கவிதை.

பழைய அழுக்குகள் – அது
உன் மூளையிலும் என் மூளையிலும் ஏராளம்
துடைத்தெறிந்து விட்டுப் புறப்படுவோம் வா

என்று எந்தன் தோழனாய் ஆணை முன்னிறுத்திப் பெண்ணியப் போர்க்களத்தில் அவனையும் ஓர் அங்கமாக்குகிறது.

**கலகக்குரல்:**

பெண் மொழி என்பது. பால் சார்ந்த தனி அடையாளங்களை உடையது என்றும், பெண் உடல், பெண்

பாலியல் உறவு, தாய்மை இவைகளை வெளிப்படுத்தும் மொழி பெண் மொழி என்றும் கூறப்படும் அண்மைக்காலச் சிந்தனைப் போக்குகளின் எதிரொலிகளையும் பெண் கவிதைகளில் இன்று காணமுடிகிறது.

உடற்கூற்று அடிப்படையில் பெண் படும் அவதிகளையும், அதை ஒட்டி அவளுக்குள் விளையும் உளவியல் தாக்கங்களையும் தயக்கமின்றி வெளிப்படையாகக் கூறப் பெண்கள் முன்வந்திருப்பதே மாறுதலான ஒரு போக்கு எனலாம்.

வா வலியே வருக
வந்தென்னை ஆட்கொண்டு
அணைத்து பகிர்ந்து அம்மா வென்றாக்கு

என்று உமாமஹேஸ்வரியும்

பேற்றின் வலியோடு அலறும் குரலில்
இணைந்தே ஒலிக்கிறது என் நிர்வாணத்திற்கான அழுகையும்

என்று வெண்ணிலாவும் பிள்ளைப் பேற்றில் பெண்படும் நுட்பமான துன்பங்களை மனத்தடைகளின்றிப் பதிவு செய்கின்றனர். கைக்குழந்தையை வீட்டில் விட்டு வந்த தாய் அலுவல் களத்தில் படும் உடல்ரீதியான துன்பம்,

ஆடைக்குள்ளிருந்து
சொட்டுச் சொட்டாய்
கோப்புகளில் இறங்கும்
தாயின் வாசம்.
அவசரமாய்
அலுவலகக் கழிப்பறையில்
பீச்சி விடப்படும்
பாலில் தெறிக்கிறது
பசியைத் தின்றலறும்
குழந்தையின் அழுகுரல்

என்ற வெண்ணிலாவின் கவிதையில் வெளிப்பாடு கொள்கிறது.

ஒரு பெண் எழுத்தாளர் தன் பேனாவில் வெள்ளை மை (தாய்ப்பால்) அடைத்துக் கொண்டு எழுத வேண்டும்... எந்த விதமான தணிக்கை உணர்விற்கும் செவிசாய்க்காமல் தன் உடம்பின் அதிர்வுகளுக்கு உண்மையானவர்களாக இருந்து பெண்படைப்பாளிகள் செயல்பட வேண்டும் என்று மேலைப் பெண்ணியத் திறனாய்வாளர்கள் குறிப்பிடும் போக்குகள், தமிழ்க் கவிதை வெளியிலும் பரவலாகத் தொடங்கியுள்ளன. அதிகாரத்தின் குறியீடாகிய ஆணுடலின் மீது கொள்ளும் அச்சம், அதன் மீதான சலிப்பு, விரும்பாத உறவில் நாட்டமில்லாத தன்மை ஆகியவற்றையும் கூடப் பெண் கவிஞர்கள் எழுத முற்பட்டிருக்கும் நிலையைக் காண முடிகிறது. இரண்டாம் ஜாமத்துக் கதை என்ற தனது கவிதையில் இதனை விரிவாகச் சித்தரிக்கும் சல்மா,

பெரும்பாலும்
தனக்குள்ளாகவே வசிக்க
நேரும் நானும் என் மொழியும்
சற்று
கடுமையாகவே வெளிப்படக் கூடும்
என்றைக்கேனும்

என்று பிறிதொரு கவிதையில் எச்சரிக்கை விடுக்கிறார்.

அதிர்ச்சி ஊட்டுவதற்காகவும், பிரமிப்பை ஏற்படுத்துவதற்காகவும் மட்டுமே பாலியல் வெளிப்பாடுகள் கவிதைகளில் கையாளப்படுகையில் பெண்ணியக் கோட்பாட்டின் அடிப்படையாக நோக்கம் நீர்த்துப் போய் விடுவதையும், கவிதைகளில் இடம்பெறும் பிற செய்திகள் மட்டுமே மலிவான இரசனையுடன் சமூகத்தால் கொச்சையாக எதிர்கொள்ளப்படுவதையும் பெண் கவிஞர்கள் நினைவிற் கொள்ள வேண்டும். உடல் மொழியாகக் கட்டமைப்பதால் மட்டுமே பெண்மொழி உருவாகி விடாது. பெண் பற்றிய சமூகக் கருத்து நிலைகளுக்கு எதிரானதாகப் பெண்மொழியைக் கட்டமைப்பதே படைப்பாளிகளின் பொறுப்பாக இருத்தல் வேண்டும் என்பதே பெண்ணிய நடுநிலையாளர்களின் எதிர்பார்ப்பாகும்.

# நவீனச் சிறுகதைகளில் பெண்ணியச் சிந்தனைகள்

*மீ. சுதா,* முனைவர் பட்ட ஆய்வாளர், பாத்திமா கல்லூரி, மதுரை – 18.

ஆணிற்கு இணையாகவும், துணையாகவும் இவ்வுலகில் படைக்கப்பட்டவள் பெண். மனிதத்திற்கு அப்பாற்பட்ட பிறவியல்ல பெண். மனிதத்தின் ஒரு பகுதி பெண். உலகம் முழுவதிலும் வரலாறு நெடுகிலும் காலங்காலமாய்ச் சமத்துவம் பேணப்படவில்லை. பெண் என்றால் தாழ்வு: ஆண் என்றால் உயர்வு: என்ற கருத்து மக்களின் ஆழ்மனதில் பசுமரத்து ஆணிபோல ஆழமாகப் பதிந்து உள்ளது. இந்த ஏற்றத்தாழ்வினால் ஏற்படும் சமூக விளைவுகள் குறித்துத் சிந்தித்து ஆண், பெண் இருபாலரிடையே சமத்துவத்தை வேண்டுவதே பெண்ணியமாகும்.

சமூகத்திலும், பணியிடங்களிலும், குடும்பத்திலும் நிலவும் பெண் ஒடுக்குமுறை மற்றும் சுரண்டல் பற்றிய பெண்களின் உணர்வு நிலைகளையும், இந்நிலைகளை மாற்றுவதற்குப் பெண்களும் ஆண்களும் எடுக்கும் உணர்வுப்பூர்வமான நடவடிக்கைகளையும் பெண்ணியம் என்று கொள்ளலாம். மேலும் பெண்ணடிமைத்தனம் என்பது பெண்களின் தனிப்பட்ட பிரச்சினை அன்று. அது மனிதப்பிரச்சினை. இவ்வடிமைத்தனத்தை வேரறுக்க வேண்டியது பெண்களின் கடமை மட்டும் அன்று அது ஆண்களின் கடமையுமாகும்.

பெண்ணிற்கு ஏற்படும் பிரச்சினைகளில் பாதிக்கப்படுபவர்கள் பெண்கள் மட்டுமல்ல ஆண்களும்தான். எனவே, ஆண்களும் பெண்களோடு இணைந்து பெண்ணடிமை தீரப் போராட வேண்டும். இத்தகைய பெண்ணியச் சிந்தனை 20ஆம் நூற்றாண்டின் நவீனச் சிறுகதைகளில் வெளிப்படும் முறையை அறிவதற்கு பாவண்ணன் (2) ஜெயமோகன் (1) உமா மகேஸ்வரி (1) போன்ற தற்கால எழுத்தாளர்களின் நான்கு சிறுகதைகள் இக்கட்டுரைக்காகத் தேர்ந்து எடுக்கப்பட்டுள்ளன.

## சமூக மறு உற்பத்தியும் பெண்ணின் உரிமையும்

பெண்ணே மனித இன இறு உற்பத்திக்கு அடிப்படையானவள். குழந்தை பெற்றுத் தருவதே பெண்ணின் வாழ்வியற் கடமையாக சமூகம் கருதுகின்றது. இலக்கியங்களும் பெண்ணிற்குப் பெருமை குழந்தைப் பேறு என்று கூறுகிறது. பெண்ணை விளிக்குமிடத்து புதல்வன் தாய் என்றும் அவளின் கடமையைக் கூறுமிடத்து ஈன்று புறந்தருதல் என் தலைக் கடனே என்றும் கூறி அவளை வெறும் நடமாடும் கருப்பையாக சமூக மதிப்பீடு மாற்றி விடுகின்றது.

கருப்பை மட்டும் அவள் வசத்தில் இருந்தால் போதாது. எந்த குழந்தையை எப்போது பெற்றுக்கொள்ள வேண்டும் என்ற உரிமையும் அவள் வசத்தில் இருக்க வேண்டும். உமா மகேஸ்வரி எழுதிய கரு என்ற சிறுகதையில், லதா என்ற பெண் இல்லறக் கடமைகளுக்கிடையே கதை எழுதுகிறாள். அக்கதையில் திருமணமான பெண் ஒரு குழந்தைக்காகப் பல்வேறு மருத்துவமனைகளில் பரிசோதனை செய்துகொள்கிறாள். இதனால் அப்பெண் தன்னை வெறும் கருப்பையாக மட்டும் பிறர் பார்ப்பதாக வருந்தும் நிலை ஏற்படுகிறது. ஒரு பிள்ளையை அதுவும் ஆணாகப் (எத்துனைப் பெற்றாலும் மலடியாம் பெண்களைப் பெற்றவள்) பெறவில்லையென்றால் `நீசும்மா` என்று குத்தும் சொற்கள் (க.ப.41)

`ஆண் குழந்தையைப் பெற்றவளே தாய்மை அடைந்தவள்` என்று கருதப்படுவதால் பெண்ணின் தாம்பத்யம் என்பது வெறும் குழந்தை பெறும் ஆய்வுக்கூடமாக மாறுவதை இக்கதையின் வாயிலாக அறியலாம்.

குழந்தையைப் பெறுவதே பெண்ணின் கடமையாகச் சமூகம் வலியுறுத்துவதை சிறுகதையாசிரியர் பாவண்ணன் தான் எழுதிய `ஏவாளின் இரண்டாவது முடிவு` என்ற சிறுகதையில் பெண் தனக்கு விருப்பமான சூழ்நிலையில், விரும்பும் பொழுது, விரும்பிய குழந்தையைப் பெற நினைத்தால் சமூகத்தின் நிலை என்னவாகும்

என்பதை அற்புத நவிற்சியுடன் கூறிக் கதையை நகர்த்திச்செல்கிறார். இக்கதையில் காட்டுவாசிப் பெண்கள் காற்றில் மிதக்கவிட்ட மந்திரச் சொல்லால் அந்நாட்டிலுள்ள திருமணமான பெண்களுக்குக் குழந்தை பிறக்கவில்லை அதனால் அந்நாட்டில் ஏற்படுகின்ற மாற்றங்களை அக்கதையில் அவர் சித்தரிக்கிறார். காட்டுப் பெண்கள் தமக்கு விருப்பமில்லாத கருக்களைச் சுமக்க விருப்பமில்லாத போது அச்சொல்லாலேயே கலைத்தார்கள் அல்லது பேறு காலத்தைத் தாமதப்படுத்தினார்கள் . (ஏ.இ.மு.ப.63)

விரும்பிய குழந்தையைப் பெறும் உரிமை பெணுக்கு மட்டுமல்லாமல் ஆணுக்கும் இருக்கவேண்டும். பிறக்கும் குழந்தையிடம் பால் வேறுபாடு பார்க்கக் கூடாது. இத்தகைய மாற்றங்கள் ஏற்படாத சூழலில் பெண்கள் தாய்மையைத் துறக்கவும் துணிந்ததை இக்கதை ஓர் எச்சரிக்கை போல எடுத்துக் காட்டுகிறது.

## கற்புக் கோட்பாடும், பெண்ணும்

ஓர் உறவுக்கு உண்மையாயிருத்தல் தான் கற்பு. கற்பு எனப்படும் விதியைப் பெண் மட்டுமே கடைப்பிடிக்க வேண்டும் என்று இச்சமூகம் அதனை அவள்மீது திணிக்கிறது. சூழ்நிலை காரணமாகப் பெண் தவறிழைத்தால் கூட அவளது கற்பு போய்விட்டதாகக் கூறி அவளுக்கு மரணத்தைத் தண்டனையாகத் தருகிறது ஆண் சமூகம்.

பாவண்ணன் எழுதிய `காற்றில் கரைந்து வரும் குரல்` என்ற சிறுகதையில், பத்தினிப் பட்டம் பறிபோனதால், தான் வெட்டப்பட்டு அம்மனாகிய பிறகும் அதையே நினைத்துக் கொண்டிருக்கிறது ஒரு பெண் தெய்வம். ஒரு பூக்காரப் பெண்ணின் துணையோடு தனக்கு நிம்மதி கிடைக்க உலா, பஞ்சாயத்து, இசைக்கச்சேரி போன்ற இடங்களுக்கு அது செல்கிறது. அங்கு ஓர் ஆடவனின் கிண்டலுக்கு ஆளாகையில் தன்னுடைய கணவனின் குரலில் இருந்த அதே கடுமையைக் கண்ட அம்மன் ஓடத் துவங்குவதாகக் கதை முடிகிறது. `மந்திரத்தால் வாளை வரவழைத்து ஓங்கி வெட்டிவிடலாமா என்று தோன்றியது. சிரமப்பட்டுக் கோபத்தைக் கட்டுப்படுத்த வேண்டியதாயிற்று என்ன மரபோ? வேறென்ன முடியும்` (கா.க.வ.கு.ப.43) சமூகம் பெண்ணைக் கற்பு நோக்கிலேயே பார்க்கின்ற காரணத்தால் தனக்குத் துன்பம் நேருகின்ற நிலையிலும் இயல்பாக எழுகின்ற எதிர்ப்புணர்வை ஆணிடம் காட்டத் தயங்குவதை இக்கதை சுட்டுகிறது.

## பெண்ணின் தனிப்பட்ட உரிமையை மறுத்தல்

பெண்ணுக்கென்று தனிப்பட்ட விருப்பு வெறுப்புகளோ, சிந்தனைகளோ, செயல்களோ இருக்கக்கூடாது என்று சமூகம் பெண்ணைக் கட்டுப்படுத்துகிறது. இச்சமூகக் கட்டுப்பாடுகளை மீறிப் பெண் சுயமாக ஏதேனும் ஒரு செயலைச் செய்தால் அவளைக் குடும்பத்தை விட்டு விலக்கி வைக்கவும் அவளது குடும்ப உறுப்பினர்கள் தயங்குவதில்லை.

பெண்ணைப் பற்றிய கருத்துருவங்கள் பெண்ணின் ஆழ்மனதில் செயற்கையாக உட்புகுத்தப்படுகின்ற காரணத்தினால் பெண் தனது நியாயமான செயலுக்குக் கூடப் பிறரிடத்து அனுமதி பெறவேண்டும் என்று வற்புறுத்தப்படுகிறாள்.

ஜெயமோகன் எழுதிய `தேவகிச் சித்தியின் டைரி` என்ற சிறுகதையில் தேவகி என்பவள் டைரி எழுதும் பழக்கம் உடையவள். இதையறிந்த அவளது கணவன் மற்றும் குடும்பத்தினர்கள் அந்த டைரியில் எழுதியிருப்பதை அனைவரின் முன்னிலையிலும் படித்துக் காட்டும்படி கூறுகின்றனர். தேவசி டைரியைப் படித்துக் காட்டாமல் எரித்து விடுகிறாள். இதனால் அவளது கணவன் தேவசியை விவாகரத்து செய்துவிட்டு வேறு திருமணம் செய்துகொள்கிறான்.

"அது என் டைரி. அதை வேறு யாரும் படிக்கக் கூடாது... அந்த டைரியில் தப்பாக ஒன்றும் இல்லை என்னை நம்புங்கள் என்றாள்". (தே.சி.டை.ப.39)

அன்றாடம் நடக்கும் நிகழ்வுகளை டைரியில் எழுதுவது என்பது இயல்பான செயல். இயல்பான ஒரு

செயலைப் பெண் செய்யும்பொழுது எதிர் மறையான செயலாக சமூகத்தால் மாற்றப்படுவதும், அச்செயல் செய்ததற்காக அவள் தண்டிக்கப்படுவதும் சமூகத்தில் பெண்ணின் சுய விருப்பு வெறுப்புக்கு வாய்ப்பில்லை என்பதை உணர்த்துகின்றன. சுதந்திரமாய்த் தான் விரும்பியதை மேற்கொள்ளும் உரிமை மனித உரிமையே என இருபாலரும் புரிந்து கொள்ளும்பொழுது தான் பெண்ணடிமை தீரும்.

## முடிவுகள்

1. பெண்ணின் கடமைகளுள் ஒன்று வாரிசைப் பெற்றுத் தருதலாகும். குழந்தை பெறுதல் பெண் படைப்பின் நோக்கமாகக் கருதப்படுவதால் பெண் நடமாடும் கருப்பை உடையவளாக மட்டுமே புற உலகில் சித்தரிக்கப்படுவதைக் `கரு' என்ற சிறுகதையின் மூலம் அறியலாம்.

2. பெண் படைக்கும் சக்தியாக இருக்கிறாள். அச்சக்தியைப் பயன்படுத்தும உரிமை கூட அவளுடையதாக இல்லாத நிலையில் அதனை அழிக்கவும் துணிந்து விடுவதை `ஏவாளின் இரண்டாவது முடிவு` என்ற சிறுகதை காட்டுகின்றது.

3. பெண் தெய்வமாக்கப்பட்ட போதும் கற்புக் கோட்பாடு குறித்த சிந்தனை அவளை மனதளவில் துரத்துவதுடன் மிரட்சிக்குள்ளாக்குவதைக் `காற்றில் கரைந்து வரும் குரல்` என்ற சிறுகதையின் வாயிலாகத் தெளியலாம்.

4. பெண்ணுக்கென்று சுய சிந்தனை தனிப்பட்ட அந்தரங்கம் இருப்பதைக் கூடச் சமூகம் ஏற்க மறுத்து மணமுறிவைத் தண்டனையாகத் தருவதை `தேவகிச் சித்தியின் டைரி` என்ற சிறுகதையின் மூலம் அறியலாம்.

| | மூல நூல்கள் | | சிறுகதைத் தொகுப்புகள் |
|---|---|---|---|
| 1. | பாவண்ணன் | - | ஏவாளின் இரண்டாவது முடிவு |
| 2. | உமா மகேஸ்வரி | - | மரப்பாச்சி |
| 3. | ஜெயமோகன் | - | ஆயிரம் கால் மண்டபம் |

## சுருக்கக் குறியீடு விளக்கம்

| | | |
|---|---|---|
| ப | - | பக்கம் |
| க | - | கரு |
| ஏ.இ.மு. | - | ஏவாளின் இரண்டாவது முடிவு |
| கா.க.வ.கு | - | காற்றில் கரைந்து வரும் குரல் |
| தே.சி.டை | - | தேவகிச் சித்தியின் டைரி |

# பாரதிதாசனின் - ஆனந்தசாகரம் நாடகத்தில் பெண்ணியம்

*டி. ஜெயந்தி* முதுகலை-தமிழ் இலக்கியம் - நிறைவாண்டு,
அருள்மிகு பழனியாண்டவர் மகளிர் கல்லூரி, சின்னக்கலையம்புத்தூர், பழனி.

## முன்னுரை:

ஆண் - பெண் சமம் என்று உதட்டளவில் பேசினாலும் கூட, ஆண்களின் செயல்களுக்கு கட்டுப்பட்டு பெண்கள் வாழ வேண்டும் என்று எண்ணுகிறார்கள். ஆனந்தசாகரம் என்னும் இந்நாடகத்தின் மூலம், பெண்கல்வி, விடுதலை, மறுமணவுரிமை, சொத்துரிமை பெறுவது பெண்களுக்கு அவசியமான ஒன்று என்றாலும், ஆண்களின் சுயநலப் போக்கினால், பெண்களின், உரிமைகள், எங்ஙனம் மறுக்கப்படுகின்றன என்பதை இக்கட்டுரை ஆராய முற்படுகின்றது.

## பெண்ணியம் சொற்பொருள் விளக்கம்

பெண்ணியம் என்ற சொல் இன்று உலக அளவில் பேசப்பட்டு வருகின்றது. பெண்ணியம் என்பது ஆண்களை எதிர்ப்பது அன்று. ஆண்களுக்கு நிகரான உரிமைகளைப் பெறவேண்டும் என்பதுவாகும்.

Feminism என்ற ஆங்கிலச் சொல் ய்ளதுஷ்ஜழி என்ற இலத்தீன் மொழியில் இருந்து பிறந்ததாகும். இச்சொல் முதலில் பெண்களின் பாலியல் பண்புகளை குறித்துள்ளது. பின்பே பெண்களின் உரிமைகளைப் பேச முன் வந்திருக்கின்றது. [1]

1889 வரை Womanism என்ற சொல் பெண்களின் உரிமைப் போராட்டங்களை குறித்துள்ளது. 1890-ஆம் வருடத்திற்குப் பின்புதான் Womanism என்ற சொல்லின் இடத்தை ய்ளதுஷ்ஜஷ்விது என்ற சொல் பெற்றது.

*பெண்ணியம் என்பது பெண்களுக்கான உரிமைகளைப் பெற்றுத் தருவது மட்டுமல்ல. சமூகத்தையே மாற்றியமைக்க முயல்வதாகும்* [2] என்று பெண்கள் உரிமை பெறுவதைக் குறித்து சார்லட் பன்ச் கூறுகிறார்.

## பழமையில் மாறாதவர்கள் ஆண்கள்

பெண் ஒருத்தி தனியாக வெளியிடங்களுக்குச் செல்ல நினைத்தாலும்கூட, சமுதாயம் அவளைப் பலவாறாக பேசும் என்ற கருத்து இன்றுவரையிலும் இருந்து வருகின்றது. ஆனந்த சாகரம் என்னும் இந்நாடகத்தில் வரும் புனிதா மாமாவிடம் சென்னைக்குப் போய் வருகின்றேன் என்று கூறும்போது, தனியாகவா உலகம் என்ன சொல்லும் எனக்கூற அறிவுல்கம் எதுவும் சொல்லாது, மூடவுலகம் எது வேண்டுமானாலும் பேசும் [3] என்று கூறுகின்றாள்.

ஆணும்-பெண்ணும் சமம் என்று மதித்து வாழும் அறிவுலகம் எதுவும் கூறாது. பெண் என்ற தனிப்பட்ட காரணத்தைக் காட்டி அவளை வெளியுலகோடு தொடர்பு கொள்ளாமல் வாழச் செய்யும் மூடவுலகமாகிய சமுதாயம் எதை வேண்டும் என்றாலும் பேசும். புனிதாவின் மாமா இத்தகைய போக்கில் இருந்து மாறவில்லை என்பதையே மேற்கண்ட கூற்று பிரதிபலிக்கின்றது.

## போகப் பொருளாக பெண்ணைப் பார்த்தல்

சமுதாயத்தில் ஆண்களின் துணையுடன் செல்லும் பெண்ணுக்கு மட்டுமே பாதுகாப்பு என்று எண்ணுகிறார்கள். தனியாகச் செல்லும் பெண் என்றால் கேலி, கிண்டல் என எதுவும் செய்யலாம் என்று பல ஆண்கள் கருதுகின்றனர்.

புனிதா காரில் தனியாக இருக்கின்றாள் என்று அறிந்தே டிரைவர் சொக்கலிங்கத்தின் நண்பன் கண்ணன் `சும்மா தொட்டுப் பாரேன்` என்று கூற நான் ஆரம்பிக்கலாகாது. நீ தொட்டுப் பார் நான் இங்கே இருக்கிறேன்[4] என்று கூறுவதும், காதலன் சாரங்கம் புனிதாவிடம் என் கன்னம் சிவக்க முத்தம்கொடு இல்லையென்றால் பலாத்காரம் செய்துவிடுவேன் எனக் கூறுவதெல்லாம், ஆண்கள் எப்போதும் பெண்களை போகப்பொருளாகவும், விளையாட்டுப் பதுமையாகவும் கருதுகின்றனர் என்பதைப் புரிய வைக்கின்றது.

## தனக்குத் தானே பாதுகாப்பு

பெண் என்றால் முதலில் அவளுக்கு அவள்தான் பாதுகாப்பு. புனிதா தன் இடையில் கத்தியைச் சொருகி வைத்துக் கொள்ளுவதைப் பாதுகாப்பு எனக் கருதுகின்றாள்.

இதனால் இவளைத் தொட்டுப் பார்க்க முயற்சிக்கும் கண்ணன் அவளிடம் கத்தி இருப்பதைக் கண்டு அஞ்சி ஓடுகின்றான். பெண்கள் தங்களுடைய பாதுகாப்பிற்காகப் புனிதாவைப்போல் எப்போதும் கத்தியை வைத்திருக்க வேண்டுமா என்று பலரும், வினவலாம். கத்தி என்பதைப் பெண்களின் விழிப்புணர்வாக நாம் கூறலாம். இவ்விழிப்புணர்வே பெண்களை பெரும்பான்மையான சிக்கல்களிலிருந்து பாதுகாக்கின்றது.

## ஆணாதிக்கப் போக்கு

ஆணுக்குப் பெண் அடங்கி இருக்க வேண்டும். அப்போதுதான் பெண்களின் மீது தனது அதிகாரத்தை காட்ட முடியும் எனப் பல ஆண்கள் கருதுகின்றனர்.

சென்னையில் வாலிபர் கூட்டத்தில் பேசும் வேணு, பெண்களுக்கு விடுதலை வேண்டும் என்றும் ஆடவர்களைப் போலவே எல்லாத்துறைகளிலும் பிரவேசிக்க வேண்டும் என்றும் சொல்லப்படுகின்றது. எந்தப் பெண் விடுதலை கேட்கிறாள் என்பதுதான் தெரியவில்லை [5] என்று இளைஞர்கள் மத்தியில் பேசுவது பெண்களுக்கு விடுதலையை கொடுக்காமல் கேலிக்கு ஆளாக்கும் நோக்கமுடையது. ஆனாலும் சுதந்திரம் கொடுக்காமல் பெரியோர்கள் விதித்த இல்லறக் கட்டுப்பாட்டிலே இருக்க வேண்டும் என்று சொல்வதும் விதவைகள் மறுமணம் செய்துகொள்ள ஆசைப்படுவதில்லை என்று கூறுவதும், மறுமணம் செய்துகொள்ளும் முன்னுரிமையை ஆண்கள் மட்டும் எடுத்துக் கொண்டு அவ்வுரிமையைப் பெண்களுக்கு கொடுக்க மறுப்பதுமாகிய அனைத்துக் கருத்துகளும் ஆண்களின் ஆதிக்கத்தை அம்பலப்படுத்துகின்றது.

## விதவைகளுக்கும் காதல் உண்டு

விதவை சமுதாயத்தில் வெறுத்து ஒதுக்கப்பட வேண்டியவள் அல்ல. அவளுக்குத் தன் மனதில் உள்ள எண்ணங்களை வெளிப்படுத்தும் உரிமை வேண்டும். இதைக்கீழ்வரும் புனிதாவின் கூற்றால் நாம் அறியலாம்.

வாலிபர் கூட்டத்தில் வேணு பெண்களைப் பற்றி பேசுவதைக் கேட்டுக் கொண்டிருந்த புனிதா எழுந்து,

பெண்கள் விடுதலை வேண்டும் என்று ஆண்களைப் போய் கெஞ்சவில்லை. ஏமாந்த பெண்களை இழிவுபடுத்தித் திரிய வேண்டாம் என்றும், விதவைப் பெண்களுக்கு காதல் தன் கணவனுடன் போய் விடுகின்றது என்றும் ஆண்கள் பெண்களை பற்றி குறை கூறுவதை எதிர்த்து ஆவேசமாகப் புனிதா பேசுகின்றாள்.

விதவைகள் மறுமணம் செய்துகொள்வதை நான் பார்த்ததேயில்லை. கணவன் இறந்ததுமே காதலும் போய்விடுகின்றது என்று பெண்ணைக் குறித்து இழிவாக வேணு பேசுவதைக் கேட்டு பொறுக்கமுடியாமல் புனிதா எழுந்து நான் விதவை, ஆனால் காதல் உண்டு என்று தன் மனதில் உள்ள எண்ணத்தை வெளிப்படையாகப் பேசுகின்றாள், மறுமணம் செய்யும் உரிமையைக் கூட ஆண்களிடம் இருந்தே பெண்கள் பெற வேண்டும் என்ற கருத்து சமுதாயத்தில் நிலவுகின்றது. இதனால்தான் பெரியார் கூட,

பெண் விடுதலைக்கு ஆண்மை அழிய வேண்டும், ஆண்மை நிற்கும் வரையிலும் பெண்கள் அடிமைத்தனம் வளர்ந்தே வரும். பெண்களால் ஆண்மை என்ற தத்துவம் அழிக்கப்படலல்லது. பெண்களுக்கு விடுதலை இல்லை [7] என்று கூறியுள்ளார்.

## சொத்துக்காக மணம் செய்தல்

சொத்துக்கு ஆசைப்பட்டு மணம் செய்துகொள்ள முன்வரும் ஆண்கள் பலர் உள்ளனர். இத்தகையோரிடம் உண்மையான அன்பை எதிர்பார்க்க இயலாது. இதைப் புனிதாவின் வாழ்வினால் உணரமுடிகின்றது. என் பெற்றோரின் பூர்வீக சொத்தை தேடித் தருபவரையே மணம் செய்து கொள்வேன் என்று தன்னை விரும்பிய சாரங்கத்திடம் உறுதியாகக் கூறுகின்றாள். ஆனால் சொத்து இருக்கும்போது உன்னையே மணப்பேன் என்று கூறிய சாரங்கம் அவளின் சொத்துக்கள் திருட்டுப் போயின என்பதை அறிந்ததுமே, மிகுதியான கோபம் கொண்டு,

பொருள் இல்லாவிட்டால் உன்னை எவன் மணப்பான் நீ தாலியறுத்தவள்தானே [8] என்று தன் சுயருபத்தைக் காட்டுகிறான்.

திருமணம் செய்த ஆண் மனைவியை இழந்தபோதிலும் சமுதாயம் அவனை பட்டப்பெயர் வைத்து அழைப்பதில்லை. பெண் பால்ய விவாகம் செய்து கணவனை இழந்தபோதிலும் கூட, அவளைத் தாலியறுத்தவள் , விதவை என்று சொல்லி இழிவுபடுத்துகின்றனர். இத்தகைய இழிநிலை மாற வேண்டும். விவரமறிந்த பெண்கள் தங்களுடைய தெளிந்த சிந்தனையால் பாதுகாப்பைத் தேடிக் கொள்வார்கள். ஆனால் பால்ய வயதில் இருப்பவர்களுக்கு இது சாத்தியமாகாது. இது சமுதாயம் அக்குழந்தைகளுக்கு இழைக்கும் கொடுமையாகும். அவர்களைக் காக்க வேண்டிய பெரியோர் சிந்தித்துப் பார்த்து திருந்த வேண்டும். அப்பொழுதுதான் இத்தகைய சிக்கல்கள் எளிமையாகத் தீரும்.

## பெண் படும் இன்னல்கள்

பணம் பத்தும் செய்யும் என்பது பழமொழி. இன்றைய சமுதாயத்தில் பணத்துக்காக ஆசைப்பட்டு கொலை செய்யும் நிலை அன்றாட வழக்கமாகிவிட்டது. கொள்ளைக்கூட்டத் தலைவன் ரங்கு புனிதா–சொத்துக்காக கடத்திச் சென்று அவளைத் துன்புறுத்துவது அவள் இருக்கும் குடிசைப்பகுதிக்கு தீ வைப்பது போன்றன ஆண்களின் மனிதநேயமற்ற செயலையே இந்நாடகத்தில் காணமுடிகின்றது.

இப்படி பல இன்னல்களை அனுபவித்த போதிலும் ரங்குவிடம் புனிதா நான் சாரங்கத்தை மணம் செய்துகொள்ள மாட்டேன் என்று தைரியமாகக் கூறுகின்றாள். இதனைக் கேட்ட ரங்கு தான் சொல்வதை இவள் கேட்கவில்லையே என்ற ஆத்திரத்தினால் குத்திக் கொலை செய்து விடுகின்றான்.

ஆணின் கையில் பெண் ஒரு கருவி மட்டுமேயாவாள். அவள் முழுமையாக அடங்கி நடக்க வேண்டும். இல்லையென்றால் அவளுடைய மரணம் வரையிலும் இது நீடிக்கும் [9] என்பதை மேற்கண்ட கூற்றும் உறுதிப்படுத்துகின்றது.

## முடிவுரை

பெண் என்றால் அவளை ஒரு போகப் பொருளாகவே நினைக்கின்றனர். மறுமணம் புரியும் உரிமை ஆண்களுக்கு மட்டுமே உண்டு. இவ்வுரிமை பெண்களுக்கு இல்லையென்று கூறுவது ஆண்களின் தன்னலப் போக்கினைக் காட்டுகின்றது. சமவுரிமை பெறுவதற்கு பெண்கள் தகுதியானவர்கள் அல்ல. எப்போதும் அடிமையாகவே வாழவேண்டும் என்று எண்ணுகிறார்கள். சொத்து இருக்கும்போது உயர்வாகப் பேசும் ஆண்கள் இல்லையென்றால், பெண்களை இழிவாகப் பேசி கொலை செய்யவும் தயங்குவதில்லை என்பதையே பெண்படும் இன்னல்களாக பாரதிதாசனின் இந்நாடகம் கூறுகின்றது.

## அடிக்குறிப்புகள்

1. டாக்டர். இரா.பிரேமா, பெண்ணியம், ப.11.
2. மேலது. ப.14.
3. பாரதிதாசன் , போர்க்காதல், ப.126.
4. மேலது, ப.128.
5. மேலது, ப.130.
6. மேலது, ப.130.
7. சித்து மா.சாலமன், பெண்ணியம் போட்ட பதியங்கள், ப.208.
8. மு.நூல், ப.157.
9. உலக வரலாற்றில் பெண்கள் ப.145.

# அவள் வேதாந்தம் - புதினத்தில் மிதவாதப் பெண்ணியம்

*ச. ஜெயந்திமாலா,* விரிவுரையாளர் - வரலாற்றுத்துறை, அ.ப.ம. கல்லூரி, பழனி.

## முகவுரை

பெண்ணியம் என்ற இயக்கமானது, பெண்கள் தாமாக முடிவெடுத்து அவர்களின் விருப்பப்படி வாழ்க்கையை நடத்திச் செல்லும் ஒரு சமூகத்தை உருவாக்குவதாகும். இதற்குத் தகுந்தபடிதான் இக்கதையின் நாயகி சின்ன ரங்கத்தின் பாத்திரப்படைப்பு படைக்கப்பட்டுள்ளது. இவளது பண்பும் செயலும் முடிவெடுக்கும் தன்மையும் மிதவாதத் தன்மையை பிரதிபலிக்கிறது. இலட்சுமி அவர்களின் "அவள் வேதாந்தம்" என்ற புதினத்தில் இக்கோட்பாடு எடுத்தியம்பப்படுகின்றது.

கதையின் ஆரம்பத்திலேயே சின்ன ரங்கம் கூறும் ஒரு சொல்லிலிருந்து ஆணாதிக்கத்தை உடைக்கிறார்.

சின்ன ரங்கத்தின் எஜமானி அவளிடம்,

"சின்ன ரங்கம் நீ எப்பவாவது அழுதிருக்கியா?

ஏனம்மா அப்படி கேக்கறீங்க? என்று அவள் வெள்ளைப்பல் வரிசை காட்டினாள். (இங்கும் அவள் தன்னம்பிக்கை காட்டப்படுகின்றது) இல்லை எப்போ பார்த்தாலும் சிரித்த மகமாகவே இருக்காயே கவலையே தோணவில்லையா அதுதான் எனக்கு ஆச்சரியமாய் இருக்கு"

என்னம்மா அப்படிச் சொல்கிறீர்கள்? கவலையும், குறையும் இல்லாத மனுசாள் உலகத்திலேயே இருக்காங்களா? நிசத்தைச் சொல்லப்போனா என் புருசன் என்னைத் திரும்பிப் பார்க்காமே கூட போய்ட்டாரு அதுக்காக நான் இடிஞ்சு போயிடலே அம்மா" என்றபோதுதான் அவளின் மிதவாதப் பெண்ணியம் தெரிகிறது.

மிதவாதப் பெண்ணியம் "பெண்ணை வீட்டைவிட்டு வெளியே வா" என்று கூறவில்லை. மாறாக ஆண் பெண் உறவாகும் குடும்ப அமைப்பை இவர்கள் வரவேற்கிறார்கள். ஆனால் குடும்ப அமைப்பில் பெண்ணை "அடிமையாக இராதே, சம அந்தஸ்தைப் பெறு, சுயசிந்தனை, சுய முடிவெடுப்பு, சுய தேர்வு இவற்றைப்பெற்று பரஸ்பர மரியாதையுடன் தனித்துவம் உடையவளாகப் பெண் செயல்பட வலியுறுத்துகிறது.

இக்கதையின் நாயகி சின்னரங்கம் இந்த சுயசிந்தனை, சுய முடிவெடுப்பு, சுயதேர்வு இவற்றையே கொண்டுள்ளார். இக்கதையில் இவள் எப்படி முடிவெடுத்தாள். இந்த மூன்று கொள்கைகளையும் அவள் வாழ்வில் எப்படி பிரதிபலிக்கிறது என்பது இக்கதையை அறிந்தால் தெரியும்.

## சின்னரங்கத்தின் வாழ்க்கை

சின்னரங்கத்தின் கணவன் ஆறுமுகம் சிறுவயதில் இருந்தே எதிர் எதிர் வீட்டில் வசிந்து வந்தனர். இருவரும் ஒருவரை ஒருவர் சிறுவயதில் இருந்தே நேசித்தனர். ஆறுமுகம் எதையும் பேச்சாவே சிறுவயதில் இருந்தே பேசமாட்டான். ஏதாவது கூத்துப் பாட்டுக்களையே பாடிக்கொண்டிருப்பான். எப்போதும் அவன்வாயில் பாட்டுத்தான். காலம் அவர்களை கணவன் மனைவியாக்கியது. ஆறுமுகத்தின் தந்தையின் மறைவுக்குப்பின் குடும்பச் சுமையை சுமக்கப் பிடிக்காமல் கட்டியவளையும், பெத்தவளையும் விட்டு நாடகக் கம்பெனியில் சேர்கிறான். வாரம் ஒருமுறை வந்தவன், மாதம் ஒருமுறை என்று இப்போது இரண்டு வருடங்களாகிவிட்டது.

இந்த இரண்ட வருடங்களில் வீட்டுவேலைசெய்து தனது ஏழு வயது மகனை கஷ்டப்பட்டு படிக்க வைத்தாள். அவன் தகப்பனை விஞ்சிய தனையனாகிவிட்டான். இப்போது தந்தை ஆறுமுகம் பிரபல

கதாநாயகனாகிவிட்டான். பக்கத்து நகரிலுள்ள சினிமா கொட்டகைக்குத் தனது அபிமான ரசிகர்களுக்கு காட்சி தர வருகிறான் என்ற செய்திகேட்டு ஆறுமுகமா அல்லது வேறு யாரோ என மனம் தடுமாறினாள் சின்னரங்கம். தன் கணவனைக்கண்டவுடன் ஆர்வ மிகுதியில் அருகில் சென்றாள். ஆனால் அவனோ பிச்சைக்காரி என ஒதுக்கினான். சொன்னவன் காரில் சென்றுவிட்டான்.

மறுநாள் வேறு ஒரு பெண்ணுடன் மனைவியை சந்திக்க வீட்டிற்கு வருகிறான். இந்தப் பெண் என்னுடன் பல படங்களில் கதாநாயகியாக நடித்தவள். நடிக்க சௌரியம் என்று இவளைப் பதிவுத் திருமணம் செய்து கொண்டேன். நேற்று நீ என்னைச் சந்தித்திருக்காமல் பிறகு சந்தித்திருக்கலாம் என்றான். பின்னர் மகனை அனுப்பி வை. என்னைப் போலவே நடிகனாக ஆக்குகிறேன். உனக்குப் பணம் தருகிறேன் என்றான். இதனைச் செவியுற்ற சின்னரங்கம் போதும்,போதும், என் ஒரே மகனையும் என்கிட்டே இருந்து பிரிக்க வேண்டாம். உன் பணமும் எனக்கு வேண்டாம் போ என்று கூக்குரலிட்டாள் இங்கு தான் அவளுடைய சுயமுடிவு வெளிப்படுகிறது.

ஆனால் மகனை அவன் அவளுக்குத் தெரியாமல் அழைத்துப் போய்விட்டான். மகனின் அன்பின்மை தெரிந்து, இருவரும் வேணாம். தமது தேவைக்கு உழைத்து சாப்பிட்டுத் தனியாளாக இருப்போம். யாரையும் தேடிச் செல்லவேண்டாம் என்று முடிவு எடுத்தாள்.

### சின்ன ரங்கத்தின் முடிவு

சுயமுடிவெடுப்பு, சுயதேர்வு இவற்றைப் பெற்று பரஸ்பர மரியாதையுடன் தனித்துவம் உடையவளாகச் செயல்படுகிறாள் ஆதனால்தான் பெத்த பிள்ளையும், கட்டிய கணவனும் விட்டுச் சென்றாலும் ஆண்வர்க்கம் இல்லையென்றால் பெண்ணால் வாழ முடியாதா? என்ற கேள்விக்கு விடையளிக்கும் வகையில் தனித்து, சுயமரியாதையோடு எப்போதும் இன்முகத்துடன் இருக்கின்றாள்.

இலட்சுமி அவர்கள் தனது கதையில் படிப்பறிவில்லாத சின்னரங்கம் என்ற பாத்திரப்படைப்பு மூலம் பெண்ணியத்தை மிக நயத்தோடு சொல்லியுள்ளார். அப்படியென்றால் படித்த பெண்களிடம் இத்தகைய சிந்தனை இல்லையா என்ற வினா எழலாம். அவர்கள் இதைவிட ஒருபடி அதிகமாகச் சிந்தித்துத் தெளிந்த முடிவெடுப்பார் என்பதே இக்கட்டுரையாளரின் எதிர்பார்ப்பு.

### தொகுப்புரை

இக்கதையின் நாயகி சின்னரங்கம் ஒரு ஆணின் மீது கொண்ட அன்பினால்தான் தன் சிறுகுழந்தையுடன் கஷ்டப்பட்டு பொருள் சேர்த்து தம்மை வந்து தன் கணவன் அழைத்துச் சென்றான் என்ற அவளது நம்பிக்கை பெண் இனத்தின் இருத்தலை வெளிப்படுத்துகிறது.

"பெண்ணியம் ஆணாதிக்கப் பிடியிலிருந்து நிகழ்வாழ்வின் இயல்பினை விண்டுரைப்பது" என்னும் கூற்று இவண் பொருந்துகிறது.

இங்கு அவன் வேறு ஒரு பெண்ணுடன் வந்து நான் இவளை மணந்து கொண்டேன் என்று சொல்கின்றபோது நான் எத்தனை திருமணம் வேண்டுமானாலும் செய்வேன் என்று ஆண் ஆதிக்கம் செலுத்துவதை எடுத்துரைக்கின்றது.

பெண்ணியம் என்பது மகளிரின் பிரச்சனைகளைக் கண்டறிந்து தீர்க்க முயல்வது மரபு என்ற சமூக மதிப்பீட்டைக்கூட கேள்விக்குறியாக்குவது.

# இல்லம் தோறும் இதயங்கள் நாவலில் பெண்ணியம்

*ஜெ. ஜெயசாந்தி,* விரிவுரையாளர்,
மகளிர் கிறிஸ்தவக் கல்லூரி,சென்னை - 6.

தமிழில் நாவல்கள் தாம் உருவான காலத்திலிருந்தே சமூகப் பார்வை உடையவையாகப் படைக்கப்பட்டுள்ளன. குடும்பத்திலும் சமுதாயத்திலும் பெண்களுக்கு ஏற்படும் வாழ்க்கைச் சிக்கல்களையும் தெளிவாக எடுத்துக்காட்டியுள்ளன. "பெண்ணியம் என்பது சமூகத்திலும் வேலைத்தளத்திலும், குடும்பத்திலும் நிலவும் பெண் ஒடுக்கு முறை மற்றும் சுரண்டல் பற்றிய பெண்மையின் உணர்வு நிலைகளும், இந்நிலையை மாற்றுவதற்குப் பெண்களும், ஆண்களும் எடுக்கும் உணர்வு பூர்வமான நடவடிக்கையாகும்" என்கிறார் தேவதத்தா. பெண் அடக்கு முறைக்கான காரணங்களைக் கண்டறிந்து நடைமுறையில் அடக்குமுறையற்ற அமைப்பு உருவாகப் பாடுபடுவோர் பெண்ணியவாதி. அவர்கள் ஆணாகவும் இருக்கலாம் பெண்ணாகவும் இருக்கலாம்.

இன்றைய படைப்பாளர்கள் சிலர் பெண்ணினத்தின் மனநிலை பற்றி எழுதுவது, அவர்கள் பிரச்சனைகளைக் கண்டறிந்து தீர்வு காண்பது, அவர்களுக்குத் தன்னம்பிக்கை ஊட்டல் என்பனவற்றை நோக்கமாகக் கொண்டுள்ளனர். இத்தகைய பெண்ணியக் கோட்பாட்டை மையமாகக் கொண்டு சு. சமுத்திரம் அவர்கள் "இல்லம் தோறும் இதயங்கள்" என்ற நாவலைப் படைத்துள்ளார். இதில் கதைத் தலைவி தான் பிறந்த வீட்டிலும் புகுந்த வீட்டிலும் கணவராலும் பாராட்டப்பட்டவர். நோயால் பாதிக்கப்பட்ட நிலையில் குடும்பத்தினரால் எவ்வாறெல்லாம் சீரழிக்கப்படுகின்றாள் என்பதையும் அந்நிலையில் அவள் எவ்வாறு செயல்படுகிறாா் என்பதைக் காண்பதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

## கதைச் சுருக்கம்.

தூத்துக்குடி மிராசுதாரர் அருணாசலத்தின் மகள் மணிமேகலை. அரக்கோணத்தில் உள்ள என்ஜினியர் ஜெயராஜூக்குத் திருமணம் செய்து கொடுக்கப்பட்டாள். கூட்டுக் குடும்பத்தில் வாழ்கிறாள். ஒரு ஆண் குழந்தையும் உள்ளது. அவள் காதோரத்தில் ஒரு புள்ளி இருப்பதைக் கண்டு, தொழுநோய் என பரிசோதனையில் அறிந்து, மருத்துவம் செய்து குணமானவள், ஆயினும் குடும்பத்தினரால் கைவிடப்பட்ட நிலையில் தொழுநோய் இல்லத்தில் சேர்கிறாள். தன் சொத்துக்களை வாதாடிப் பெற்றுக்கொண்டு, தன்னைப் போன்ற பலரையும் ஆதரிக்கின்ற நிலைக்கு உயர்கிறாள்.

## காதலைத் துறத்தல்

மணிமேகலையைப் பெண் பார்ப்பதற்காக வெங்கடேசனின் அப்பா வந்தார், "நான் படிக்காதவன்னு குமரேச மாமா.... அவரு பொண்ண எனக்குக் கேட்ட போது சாக்குப் போக்கு சொல்லி விட்டார். இப்போ நான் மட்டும் என் தங்கச்சிய அவரு மவனுக்கு எப்படி கொடுப்பேன்" என்று அண்ணன் சொன்னதும், தொடர்ந்து அண்ணி அண்ணனைத் திட்டியதையும் கேட்டாள் மணிமேகலை "மனதார விரும்பிய பெண் கிடைக்காவிட்டால் விரும்பிய மனம் என்ன பாடுபடும் என்பதை அவனே அனுபவித்து வரும் போது, வெந்தப்புண் வேல் போல் தான் காதலித்தவெங்கடேசனை மணந்து அண்ணனைச் சிறுமைப்படுத்த விரும்பாதவள் மணிமேகலை. அவளுக்குத் தான் காதலைவிட அண்ணனின் மனமே பெரிதாகத் தெரிந்தது. இதனால் தன் காதலையே துறந்த மணிமேகலை, திருநெல்வேலியிலிருந்து அரக்கோணத்திற்குப் பிழைக்கச் சென்று சின்ன தொழிற்சாலை, கார், பங்களா என்று வசதியாக உள்ள என்ஜினியர் ஜெயராஜூக்குக் கழுத்தை நீட்டி கூட்டுக் குடும்ப வாழ்க்கையை ஏற்றாள்.

## சொத்துரிமை பற்றி பேசுதல்

தந்தைக்கு சீரியஸ் என்று தம்பி சந்திரனின் தந்தி கிடைத்து தூத்துக்குடிக்குச் சென்றிருந்தாள் மணிமேகலை. அந்நேரத்தில் பெரிய மைத்துனர் சங்கரன், மாமனார் ராமபத்திரனின் தூண்டுதலால் பாகத்தைப் பிரித்துக் கேட்டான். இந்த விவகாரம் "செட்டில்மெண்ட" வரைக்கும் வந்துவிட்டது. தந்தி கொடுத்து வரவழைக்கப்பட்டாள் மணிமேகலை. "இது ஆம்புள விவகாரம், நீ ஒன் வேலையப் பாத்துக்கிட்டுப் போ" என்ற ராமபத்திரனின் பேச்சைக் கேட்ட மணிமேகலை, இது ஆம்புள விவகாரம், இதுல பேச எனக்கு மட்டுமல்ல, அந்தப் பெண்ணுங்களுக்கும் உரிமை உண்டு என்று சொத்துரிமையை நிலைநாட்டி, அதைப் பிரிக்காதபடி தடுத்து நிறுத்தினாள்.

## குடும்பத்தால் தனிமைப்படுத்தப்படுதல்

ஜெயராஜும் சங்கரனும் "பெட்ரோல் பங்க்" வைக்கிறதுக்கு, ஆயில் கார்ப்பரேஷன் பெர்மிஷன் கொடுத்திட்டு." என்றனர். இதைக் கேட்ட குடும்பத்தினர் இந்த மகிழ்ச்சியைக் கொண்டாட சுற்றுலா பொருட்காட்சிக்குப் புறப்பட்டனர். அங்கு வாலண்டரி ஹெல்த் அஸோஸியேஷன் என்ற ஸ்டாலுக்கு வந்த போது,

சீதா தலைசுற்றல் என்று உள்ளே பரிசோதிக்கச் சென்றாள். அவளைத் தேடிச் சென்றாள் மணிமேகலை. அவளின் காதருகே மங்கலாக இருந்த ஒரு வட்டமான புள்ளியைப் பார்த்து, "இந்த பேட்ச் இருக்கே, ஒரு வகையான ஸ்கின் டிஸ்ஸீஸ். நான் பார்த்ததுல் குஷ்டரோகத்துக்கான லேசான அறிகுறி மாதிரி தெரியுது. ஜெனரல் மருத்துவமனையில் செக்கப் பண்றது நல்லது என்கிறார். டாக்டர் செக்கப் முடிந்தது. நோயின் தொடக்கம் தான் *மாத்திரைகள் சாப்பிட்டால் சரியாகிவிடும் என்றனர் டாக்டர்கள்.சில நாட்கள் தான் சென்றன. சங்கரனின் மனைவி* லட்சுமி, கண்ணாடியில் பார்த்துக் கொண்டிருந்தாள், "ஒனக்கு இருக்குது மாதிரியே தான் வந்திருக்குது, எல்லாம் எதிர்பார்த்தது தான்" என்று சொன்னாள். தன் மாமியாரின் காதைப் பிடித்துக் கொண்டு "ஓங்களுக்கும் லேசா தெரியுது அத்த" என்றாள். புள்ளி இருக்கோ இல்லையோ புள்ளி போட்டனர். " இனிமே நீ எங்களுக்கு உழச்சது போதும், நாங்கதான் ஒனக்கு உழைக்கனுமுன்னு சொல்லித் தனிமைப்படுத்திவிட்டனர்.

## கணவனால் புறக்கணிக்கப்படுதல்

நோய் ஒரு பக்கம்; குடும்பத்தினர் நடத்தும் முறை ஒரு பக்கம்; இதனால் மணிமேகலை கணவரிடம் சொத்து பிரியாமல், தனியாக இருக்க யோசனை சொல்ல சென்றாள். ஆனால் கணவனோ முக்கிய விவகாரத்துக்குப் போகிறவன் போல புறப்பட்டவன், தன் மாமன் மகள் வசந்தியுடன் பேசிக் கொண்டிருந்தான். மணிமேகலையுடன் அறையில் படுக்காமல், ஒரே புழுக்கமாக இருக்கிறது, வராந்தாவுல படுக்கப் போகிறேன் என்று தனியாகப் படுத்துக் கொண்டான். அடுத்த நாட்களில் குழந்தையை வசந்தியிடம் கொடுத்து மூவரும் ஒரே அறையில் படுத்துக்கொண்டனர். தன் குழந்தையைத் தூக்குவதற்கு மணிமேகலைக்கு கையுறைகளைக் கொடுத்தான்; முத்தம் கொடுக்காதெ என்று தடுத்தான்.

இப்படி தனிமைப்படுத்தப்பட்ட மணிமேகலையை புரிந்து கொண்ட மாமனார், அவன் கையால் தான் சாப்பிடுவேன் என்று அடம்பிடித்தார். அப்போதைக்கு மட்டும் உணவு கொடுத்துவிட்டு, இந்த நிலையில் தான் இருப்பது நல்லதல்ல என்று எண்ணினார். "எனக்கும் ஒரு சேன்ஜ் வேணும். ஊருக்கு போய் ஒரு மாசம் இருந்துட்டு வராலாமுன்னு நினைக்கேன்" என்றாள். அவளிடம் கையில் 50 ரூபாயை மட்டுமே கொடுத்தனுப்பினான். அவள் திரும்பி வரக்கூடாது என்று எண்ணினானோ என்னவோ? அவள் திரும்பி வருவதற்குள் வசந்தியை மணம் செய்து கொண்டான்.

## அதிர்ச்சியை ஏற்றல்

மணிமேகலை தனக்கு ஏற்பட்ட இந்த நோய் பிறந்த ஊரில் யாருக்கும் தெரியாது என்று நினைத்துச் சென்றாள். ஆனால் ராமபரத்திரன் ஊர் முழுவதும் இந்தச் செய்தியைப் பரப்பி விட்டார். இந்நிலையில் அப்பாவும் ஒரு கை, கால் செயல்படாத நிலையில் இருந்தார். இதைக் கண்டு வேதனையில் துடித்தாள். இதனால் மற்றவர்களை, அண்ணன், அண்ணியயைக்கூட முழுமையாக மறந்தே போனாள் என்றே சொல்ல வேண்டும்.

"ஆயிரம் கஷ்டம் வரட்டும் தொளாயிரம் நோய் இருக்கட்டும். அதுக்காகவா இப்படியா குளுவச்சி மாதிரி நடந்து வாரது? ஒரு கார்ல வர்றது. எந்தப் பயலாவது என்ன மதிப்பானா? இப்படியா கூறு கெட்டுப் போவணும் என்று அண்ணன் ராமலிங்கம் கேட்டான்; அவள் என்ன செய்வாள் பாவம், பணமில்லையே!

தொட்டிலில் இருந்த குழந்தையைத் தூக்கினாள் மணிமேகலை. அண்ணி வலுக்கட்டாயமாக அவளிடமிருந்து வாங்கி, தூக்கத்தைக் கலைக்காதே என்று தொட்டிலிலேயே போட்டுவிட்டாள். அப்பாவுக்கு கொடுத்த மாத்திரையை நிறுத்திவிட்டனர் என்பதைக் கேள்விப்பட்ட மணிமேகலை, அம்மாத்திரை விவரத்தை அறிந்து வாங்கிவர, ரத்தினம் அண்ணன் வீட்டிற்குச் சென்றாள். சில மணி நேரத்திற்குள் உணர்வு பெற்ற தந்தை எழுந்து அமர்ந்தார். மணிமேகலை மகிழ்ச்சி அடைந்தாள்.

## பிறந்தகத்தின் கணைகளால் தாக்கப்படுதல்

மணிமேகலை தன் குழந்தையைப் பிரிந்து வந்த துயரத்தை அண்ணியிடம் சொன்னாள். அண்ணியோ உன் பிள்ளை பிறந்த பிறகு தான் இப்படியெல்லாம் நடக்கிறது என்று சொல்லம்புகளால் உள்ளத்தைத் தைத்துவிட்டாள். ரத்தினம் வீட்டிற்குச் சென்று திரும்பிய மணிமேகலையிடம் அண்ணி, "நேத்து கூத்து கோவிந்தன் கூட கூத்தடிச்சா, மத்தியானம் ரத்தினங்கிட்ட போயிட்டு வாராள்..... நாளைக்கு எவன் கூடப் போகப் போறாளோ! கலியாணம் ஆவுமுன்ன தான் வெங்கடேசன்கிட்ட சிரிச்சா இன்னுமா இப்படி. அங்கேயும் ஏடா கோடமா நடந்திருப்பாள். அதனால் தான் அவங்க துரத்திடட்டாவ, ஊர மூட உலமூடியா" என்றாள். இதைக் கேட்டு அப்படியே உறைந்து போன மணிமேகலை அடிச்சாலும் உதைச்சாலும் அரக்கோணம் தான் அவளது வீடு என்று உடனடியாகப் புறப்பட்டாள்.

## தன் போக்கத்கைத் தீர்மானித்தல்

இரயில் ஏறி அரக்கோணம் வந்து சேர்ந்தாள். வீடு பூட்டியிருந்தது. ஜெயராஜூக்கு வசந்தியைக் கன்னிகா தானம் செய்ய போயிருப்பதாகக் கம்பவுண்டர் மணி மூலம் மணிமேகலை அறிந்தாள். இந்நிலையில் அவர்கள் வரும் வரை அங்கேயே இருப்பதா? திரும்ப ஊருக்குச் செல்வதா? எங்கு செல்வது என்று தெரியாமல்

திகைத்தாள். தன் நோக்கையும் போக்கையும் தீர்மானித்துக் கொண்டாள்.

ரத்தினம் சொன்ன வார்த்தைகள் நினைவுக்கு வந்தன. "எப்போ புருஷன் ஒன்னைத் தள்ளி வைக்கிறானோ அப்பவே நீயும் அவனைத் தள்ளி வச்சிடனும், சொத்துல பங்கு கேட்டிருக்கனும், எப்போ ஒன் அண்ணன் தம்பிங்க அப்பாவை பார்க்கலியே, நீ அப்பவே வேங்க முகத்துக்கு எதுருலேயே "என் சொத்தை பிரிச்சுக் கொடுங்கடா எனக்கும் சொத்துல உரிம இருக்குன்னு" அடிச்சிப் பேசியிருக்கனும் இந்தக் காலத்துல நல்லவளா மட்டும் இருந்தா பத்தாது. வல்லவளாயும் இருக்கனும். "இவ்வார்த்தைகளைத் திரும்ப திரும்ப சிந்தித்தாள்".அரக்கோணத்திலிருந்து சென்னைக்குப் புறப்பட்டள் மணிமேகலை. கம்பௌண்டர் மணி உடன் வந்தான். விடுதியில் சேர்க்க சொன்னால், லாட்ஜில் அன்று இரவு தங்க அறை எடுத்தான். அவன் பேச்சில் ஏற்பட்ட மாற்றத்தை உணர்ந்து வெளியேறிய மணிமேகலை அவனிடம் " வேண்டிய கணவருக்கு விரும்பாதவளாக போகும்போது தன் வழியில் எப்போ நடக்கத் துணிஞ்சேனோ அப்பவே எந்த ஆணையும் தூசாய் நினைக்கத் தேவையானால் துடைப்பத்த வைத்து அடிக்கவும் துணிந்து தான் வந்தேன்" என்றாள்

அன்று இரவுப் பொழுதைச் சீரணி அரங்கில் நடந்த கிறிஸ்தவ முழு இரவு ஜெபக் கூட்டத்தில் கழித்தாள். காலையில் நடந்து தேனாம்பேட்டை வரைச் சென்றாள். அங்கு கோவிந்தனைச் சந்தித்து ஹிஸ்டிரியா பேஷண்ட் வீட்டில் வேலைக்குச் சேர்ந்தாள். பல துன்பங்களை அனுபவித்தாள். ஒரு நாள் தன் காதோரம் புள்ளி இருப்பதைப் பார்த்து அங்கிருந்து புறப்பட முடிவு செய்தாள்.

### தொண்டாற்ற தொடங்குதல்

செங்கல்பட்டில் டாக்டர் முத்துலெட்சுமியால் தொடங்கப்பட்ட அவ்வை இல்லத்தில் வெங்கடேசனால் சேர்க்கப்பட்டாள் மணிமேகலை. இந்த இல்லம் சமூகத்திலிருந்து ஒதுங்கியவர்களுக்கென்று கட்டப்பட்டது. இதை வெளிநாட்டிலிருந்து வந்த மார்க்கரெட் என்ற பெண்மணி நடத்தி வந்தார். அவளைப் பார்க்க தந்தையின் இறப்புக்கு முன் எழுதப்பட்ட உயிலுடன் ரத்தினம் வந்தார். உயிலைக் கொடுத்தார். பின் தன்னிடமே இருக்கட்டும் என்றார்.

மணிமேகலை மார்க்கரெட் அம்மையாரிடம் நன்மதிப்பை பெற்றிருந்தாள். அந்த மூதாட்டி தன் சொந்த ஊருக்குப் போனவர்கள் திரும்பவில்லை, இறந்து போனார்கள். இதனால் பொருளுதவி செய்த வெளிநாட்டு நிறுவனம் அதை நிறுத்திக் கொண்டது. அப்போது அங்கு வந்த வெங்கடேசன், "இனிமேல் வெளிநாட்டில் கையேந்தாமல் இதை நடத்துவதற்காக நீ பெருமைப்பட வேண்டும்" என்று சொன்ன போது அவள் மகிழ்ந்தாள்.அரிசி தீர்ந்துவிட்டது. கடன் கொடுத்தவர்கள் இப்பொழுது கடன் கொடுக்கத் தயாராக இல்லை. நோயாளிகளுக்கும் மாத்திரைகள் தீர்ந்துவிட்டன. டாக்டர்களுக்குச் சம்பளம் கொடுக்க வேண்டும். செய்வதறியாது திகைத்த மணிமேகலை தன் ஏழு பவுன் தங்கத்தாலியைக் கட்டியவனே தனக்கு இல்லாமல் போனபோது ஏழு பவுன் தாலிக்காக அவனிடம் விட்டு வைத்திருந்த 60 பவுன் நகை ஏன் இருக்க வேண்டும்? அதோட அவனிடம் ஜவனாம்சம் ஏன் கேட்கக்கூடாது? சகோதரர்கள் அனுப்விக்கும் நிலத்தை ஏன் பிரிக்கக்கூடாது? எதற்காக விட்டப் போன உறவை ஒரேயடியாக விட்டுவிடக்கூடாது? என எண்ணினாள். எண்ணத்தை செயலில் கொண்டு வந்தாள். அன்னை மார்க்கரெட் அருளில்லம் என்ற புதிய பெயர் பலகை, அவர்தம் படத்துடன் மாட்டப்பட்டது. தன் நகைகளை விற்று, கணவன் வீட்டில் கிடைத்த பணத்துடன் சேர்த்து சகோதரர்களிடம் போராடிக் கிடைத்த கிராமத்துச் சொத்தையும் இதனுடன் கூட்டு எல்லாவற்றையும் இந்த இல்லத்தின் பெயருக்கே எழுதிவைத்துவிட்டாள். மணிமேகலை பற்றாற்ற யோகியாகி விட்டாள் என்று சொல்ல முடியாது. பலரும் அம்மா என்றழைத்தாலும், தன் மகனிடமிருந்து இந்த வார்த்தையை கேட்க முடியாமல் கலங்கினாள். சர்வதேச ஆண்டை முன்னிட்டு வெளியிடப்பட்ட ஒரு காலண்டர் எதிரே கண்ணில் பட்டது. கை, கால் ஊனமுற்ற யாருமே இல்லாத பரிதாபக் குழந்தைகள் அவர்கள். அதுபோன்ற குழந்தைகளை நினைத்துப் பார்க்கிறாள். தன் குழந்தையை கவனிக்க ஆட்கள் இருக்கிறார்கள். இந்த குழந்தைகளுக்காக ஒரு கட்டடத்தைத் தன் மனதில் கட்டி, அந்தக் காம்ப்பவுண்ட்டுக்குள் ஒலுரு வெற்றிடத்தைப் பார்க்கிறாள். குழந்தைகள் குவிந்து விட்டனர். இவை பரந்து விரிய விரிய அவளது சொந்த தாபம் குறைந்து குறைந்து ஒரு அணுவாக மாறுகிறது.

### முடிவுரை

ஆண்களுக்கு மட்டுமல்ல, பெண்களுக்கும் சொத்தில் உரிமை உண்டு என்பதை நிலைநாட்டி தனக்குரியதைப் பெறுகிறதைப் பெண்ணியச் சிந்தனை காட்டுகிறது. நோய் வந்து குணமடைந்த பின்பும் குடும்பத்தினரால், கணவனால், புறக்கணிக்கப்பட்ட பெண் அவர்களையே நினைக்காமல் கணவனிடமிருந்து விடுதலை பெற்று தனித்து வாழ முடியும்; ஒரு பெண், தன்னைப் போல சமுதாயத்தால் புறக்கணிக்கப்பட்ட நோயாளிகளுக்கும் குழந்தைகளுக்கும் புகலிடம் கொடுக்க முடியும்; ஒரு பெண் நினைத்தால் தனியாக எதையும் சாதிக்க முடியும்; மொத்தத்தில் பெண்ணியம் தன்னல நோக்கில் அல்ல; பரந்த மனப்பான்மையோடு பிறர் நலத்தைக் கருத்தில் கொண்டு செயல்படுகிறது என்பதை இக்கட்டுரை காட்டுகிறது.

# சிறுகதைகளில் மரபு வழிப்பட்ட பெண்ணியச் சிந்தனைகள்

முனைவர். *சு. செயராம்*,தமிழ் இணைப் பேராசிரியர்,
வி.இ.நா. செந்தில்குமார நாடார் கல்லூரி, விருதுநகர்.

முன்னுரை :-

இலக்கியம் வெறும் பொழுது போக்கிற்கு மட்டும் பயன்படக்கூடியதன்று, அதற்கப்பாற்பட்ட நோக்குகளும் அதற்குண்டு. சமூகத்திற்குத் தேவையான கருத்துக்களையும், செய்திகளையும் சுவையுடன் வெளிப்படுத்தும் கருவியே இலக்கியம். இந்த அடிப்படையைப் புரிந்து கொள்ளும் படைப்பாளர்கள் மனிதனை, மனித வாழ்வை - சமூகத்தை - சமூகக் கோட்பாடுகளை, சமூகப் போராட்டங்களை, சமூக சிக்கல்களை எழுத்தாளர்கள் தங்கள் படைப்புகளில் வடித்துக்காட்டுகின்றனர். இந்த வகையில் கல்கி தீபாவளி மலர்களில் வெளியான சிறுகதைகளில் மரபு வழிபட்ட பெண்ணியச் சிந்தனைகளை ஆராய்வது இக்கட்டுரையின் நோக்கமாகும்.

சமூக அமைப்பில் பெண் விடுதலை

இருபதாம் நூற்றாண்டில் பெண் விடுதலை இயக்கத்தின் தாக்கத்தினால் பெண் விடுதலை பற்றிய புதிய சிந்தனைகள் தோன்றி வளர்ந்தாலும் மரபு வழிப்பட்ட தமிழ்ச் சமூகத்தில் பெண் விடுதலைக்கான சாத்தியக் கூறுகள் இல்லை; ஆண்கள் தங்கள் ஆதிக்க மனப்பான்மையை விட்டுக்கொள்ளத் தயாராக இல்லை. இதனை அனுபவம் வாய்ந்த மகளிர் புரிந்துகொண்டுள்ளனர். விமலாரமணியின் "அக்கினிக்குளியல்" என்னும் சிறுகதை, மரபு வழிப்பட்ட தமிழ்ச் சமூக அமைப்பில் பெண் விடுதலையின் சாத்தியக்கூறுகள் பற்றியதாகும். இந்தச் சிறுகதையில் வரும் பிருந்தாவை அவளுடைய தந்தை பாரதி கண்ட புதுமைப் பெண்ணாக வளர்க்கின்றார். அவள் வரதட்சணையெதிர்ப்பு, பெண்கள் முன்னேற்றங்களுக்காக மேடைகளில் பேசுகின்றாள். பிருந்தாவின் அண்ணன் தீபன்.

"பெண் விடுதலை பெண் விடுதலைன்னு இப்படி மேடை மேடையாய்ப் பேசறீங்களே.... இந்த இருபதாம் நூற்றாண்டிலே யார் பெண்களைக் கொத்தடிமையா நடத்தறாங்க? சரிநிகர் சமானம்னு பெண்களும் பெல்பாட்டம், ஜீன்ஸ் போட்டுக்கறீங்க. ஆண்களுக்குச் சரியா வேலைக்குப் போறீங்க. இன்னும் என்ன வேணும். ஏன் ஏதாவது "சின்னவீடு" சமாச்சாரம் மாதிரி உங்களுக்கும் ஆசையா?" (- 1) என்று பிருந்தாவிடம் கேட்கின்றான். பிருந்தா எரிமலையாக வெடித்து ஆண்களுக்கும் கற்பு வேண்டும் என்னும் பாரதியார் கருத்தைப் பின்வருமாறு எடுத்துப் பேசுகின்றாள். "கற்பு நிலையை இரு கட்சிக்கும் பொதுவாக வைக்க வேண்டும் என்று பாரதி சொன்னது பெண்கள் சின்ன வீடு வைத்துக் கொள்ள அல்ல. ஆண்களும் நல்லவர்களாக நாணயமுள்ளவர்களாக இருக்க" (-2) என்கிறாள் பிருந்தா.பெண்ணுரிமை இயக்கத்தைச் சேர்ந்த சாரதாம்பாள் பிருந்தாவுக்கு, "பிருந்தா.... நாம் எல்லாம் இன்னும் பழமையிலிருந்து அந்தப் படியிலிருந்து மீளவில்லை. நமது பண்பாடுகளை உடைத்துக்கொண்டு நிச்சயமாய்ப் புரட்சி பண்ணமுடியாது. இந்த அளவுக்குப் பெண் சமூகம் முன்னேறியிருப்பதும் ஒரு விழிப்புணர்ச்சி ஏற்பட்டிருப்பதும் ஒரு பெரிய காரியம்" (3) என்று மரபு வழிப்பட்ட தமிழ்ச் சமுதாயத்தின் மதிப்புக்களை - நடைமுறை யதார்த்தங்களைத் தெளிவு படுத்துகின்றாள். உண்மைதான் பிருந்தாவின் தாய் இந்த மரபுப் பிடியிலிருந்து இன்னும் மீண்டு வரவில்லை. மீண்டு வரவும் முடியாது. பிருந்தாவின் தந்தை மற்றொரு பெண்ணோடு தொடர்பு வைத்திருப்பதைப் பிருந்தாவே நேரில் காணுகிறாள். தன்னோட வாழ்க்கைப் பாதுகாப்பிற்காகப் பிருந்தாவின் தாய் இழந்த விலை அவளுக்கே தெரியாது. பிருந்தா தன் தாயின் நிம்மதியைக் கெடுக்க விரும்பவில்லை.

"அம்மாவுக்குத் தெரியாது! இவள் அக்கினிக் குளியலில் குளித்துவிட்டு, எரிந்துபோய் சாம்பலாகி வந்திருக்கின்ற உண்மை அம்மாவுக்குத் தெரியாது" (4) இவ்வாறு இந்தச் சிறுகதை மரபுவழிப்பட்ட தமிழ்ச் சமுதாயத்தில் பெண் விடுதலை சாத்தியமில்லை என்பதை எடுததுரைக்கின்றது. இந்தச் சிறுகதையில் பெண்ணுரிமையின் பிரதிநிதியாக வருகின்ற பிருந்தா, பெண்கள் பழைய பண்பாட்டு மரபுகளை உடைத்துக் கொண்டு வெளியே வரமுடியாது என்பதைப் புரிந்து கொள்கிறாள். ராஜேஸ்குமாரின் "நஞ்சு" என்னும் சிறுகதையும் பெண்ணியச் சிந்தனைகளையே பேசுகின்றது. இந்தச் சிறுகதையில் வரும் பாக்கியம் இருபது வயது நிரம்பிய இளம் பெண்; அவள் ஐம்பது வயதைத் தாண்டிய குடிகாரன் ஒருவனுக்கு இரண்டாம் தாரமாக வாழ்க்கைப்படுகிறாள். நடு இரவில் அவனுக்கு மூச்சிரைப்பு நோய் ஏற்படுகின்றது. அவனுக்கு மருந்து

வாங்குவதற்காக கிணத்துக்கடவிலிருந்து லாரியில் சென்று கோயமுத்தூரில் மருந்து வாங்கிக் கொண்டு வருகின்றாள். லாரி டிரைவர் அவளுக்கு மனிதநேயத்துடன் உதவி, அவளை வீடுவரை பாதுகாப்பாகக் கொண்டு வந்து விட்டுச் செல்கின்றான். அவள் வருவதற்குள் அவன் மீண்டும் சாராயம் குடிக்கச் சென்றுவிடுகிறான். அப்பொழுது குடிபோதையில் வந்த அவள் கணவன்,

"யாரடி அவன்?/......ஓ...ஹோ.....ஹோ! அவனோட லாரியில/ஒன்ணா போழ்னியா?/அப்ப சரி ..... அவன்கூட நீ படுத்திருப்பே!"/"நீ திமிரெடுத்துப்போய் ஊர்மேய்ஞ்சுட்டடு வர்றியா?" (5) இவ்வாறு குடிகாரனின் மதுப்பழக்கம், தன் கற்பின் மீது சந்தேகப்படும் அவனை எதிர்த்துப் போராடும் ஆற்றலின்மை காரணமாகப் பாக்கியம் தற்கொலை செய்து கொள்கிறாள்; இந்தச் சிறுகதையில் இவ்வாறு மரபுவழிப்பட்ட சிந்தனைகள் பேசப்படுகின்றன. மரபு வழிப்பட்ட சிந்தனைகளைப் போற்றுபவர்களாகவும், அவற்றை அழியாமல் பாதுகாப்பவர்களாகவும் இன்றைய சமூகத்தில் ஆண்களும், பெண்கள் பலரும் உள்ளனர். கல்கியின் வாசகர்களும் மரபுவழிப்பட்ட கதைகளையே விரும்புவதால் படைப்பாளிகளும் வாசகர்களை மனங்கொண்டு அத்தகைய சிறுகதைப் படைப்புக்களையே தருகின்றனர்.

## பெண்கள் இரண்டாம் தாரத்தவர்களாக வாழ்க்கைப்படுதல்

வறுமையும், வயிற்றுப் பசியும், மணமகன் கையூட்டும் பெண்களை இரண்டாம் தாரத்தவர்களாக வாழ்க்கைப்படும்படி செய்கின்றன. பெண்கள் ஆண்களுக்கு இரண்டாம் தாரத்தவர்களாக வாழ்க்கைப்படுவதும் மரபுவழிப்பட்ட பெண்ணியச் சிந்தனையின் பிரதிபலிப்பே ஆகும். லட்சுமி ராஜரத்தினம் எழுதிய "வேண்டும் வேண்டும் உந்தன் உறவு" என்னும் சிறுகதை, பெண்கள் ஆடவர்களுக்கு இரண்டாம் தாரத்தவர்களாக வாழ்க்கைப்படுவதைப் பற்றியதாகும். இந்தச் சிறுகதையில் வரும் திவ்யா ஒரு கல்லூரி மாணவி; வேலை தேடி அலைந்துகொண்டிருக்கும் தீபக் என்ற இளைஞனும் அவளும் காதலர்கள்; திவ்யாவின் தந்தைக்குத் தொழில் பங்குதாரர் பண்டரிநாதன் தனக்குத் திவ்யாவைத் திருமணம் செய்து தரும்படி அவள் தந்தையைக் கட்டாயப்படுத்துகின்றான். அவள் தந்தையும் ஒப்புக்கொள்கின்றார். பண்டரிநாதனுக்கு வயது நாற்பது; முதல் மனைவியை இழந்தவன்; கையில் மூன்று வயது பெண் குழந்தை வேறு; இதனைக் கேள்விப்பட்ட திவ்யா தாய் சாரதாவிடம் அத்திருமணம் தனக்கு வேண்டாம் என மறுக்கிறாள்; தீபக்-திவ்யா கல்யாணத்தை கோயிலில் நடத்தி வைக்கின்றாள். காரணம் சாரதாவும் திவ்யாவின் தந்தைக்கு இரண்டாம் தாரமாக வாழ்க்கைப்பட்டவளே; திவ்யா சாரதாவின் வளர்ப்பு மகள்; பெற்ற மகள் இல்லை. ஏனெனில் சாரதாவைத் திருமணம் செய்து கொள்ளும்போது திவ்யாவின் தந்தை குடும்பக் கட்டுப்பாடு செய்து கொண்டிருந்தார். சாரதா அந்தத் துன்பங்களிலிருந்து தன் வளர்ப்பு மகள் திவ்யாவைக் காப்பாற்றுகின்றாள்.

இவ்வாறு இந்த சிறுகதையில் பெண்கள் ஆண்களுக்கு இரண்டாம் தாரத்தவர்களாக வாழ்க்கைப்படுவதும் தான் பெற்ற துன்பத்தை தன் வளர்ப்பு மகள் திவ்யா அனுபவிக்கக்கூடாது என்ற தாய்மை உணர்வினால் காப்பாற்றப்படுகின்றாள் என்பதையும் விளக்குகின்றது.

## மதிப்பீடு

சமூகத்தின் அடித்தளமாக விளங்குகின்ற குடும்பத்தைப் பொறுப்புடன் பேணுவதும், குழந்தைகளைப் பண்பாடுமிக்கவர்களாக வளர்ப்பதும், தாய்மை உணர்வின் வெளிப்பாடாகும் பெண்களுக்குப் பெருமை தருவனவாகக் கருதுவது மரபு வழிப்பட்ட சமுதாயப் பண்பாட்டுத் தாக்கமாகும். பெண்ணுரிமையைப் பற்றிப் பேசும் இன்றைய பிருந்தா போன்ற பெண்களால் கூட மரபுவழிப்பட்ட பெண்ணியச் சிந்தனைகளிலிருந்து விடுபட்டுவர முடியாத நிலையினை "விமலாரமணி"யின் "அக்கினிக் குளியல்" என்ற கதை சுட்டுகின்றது.
பெண்களின் கற்பின் மீது சந்தேகப்படுவது ஆடவரின் தனியுரிமை என்ற கருத்தினைப் படைப்பாளர் "நஞ்சு" என்ற கதையில் இடித்துரைக்கின்றார்.

## குறிப்புகள்

1. விமலாரமணி, "அக்கினிக் குளியல்", கல்கி தீபாவளி மலர் (1987) ப. 150.
2. மேலது, ப. 150.
3. மேலது, ப. 151.
4. மேலது, ப. 152.
5. ராஜேஸ்குமார், "நஞ்சு", கல்கி தீபாவளி மலர் (1982), ப. 174.

# ராஜம் கிருஷ்ணனின் "மாறிமாறிப் பின்னும்" நாவலில் பெண்ணியம்

*முனைவர். க. சேகர்,* *எம்.ஏ., எம்.ஃபில்., பிஎச்.டி.,* முதுநிலை விரிவுரையாளர், தமிழ்த்துறை,
தருமபுரம் ஆதினம் கலைக் கல்லூரி, தருமபுரம், மயிலாடுதுறை

**முன்னுரை :**

திருமதி இராஜம் கிருஷ்ணன் அவர்கள் தமிழ் நாவல் இலக்கியத்தில் தனித்துவமான இடத்தினைப் பெற்றவர்கள். இவர் வேருக்கு நீர், கரிப்புமணிகள், சேற்றில் மனிதர்கள், சுழலில் மிதக்கும் தீபங்கள்எனும் மிகச் சிறந்த நாவல்களைப் படைத்து, அதன்வழி அரிய விருதுகளையும் பெற்ற பெருமைக்குரியவர். இவர், தம் நாவல்களை எங்கோ ஓரிடத்தில் இருந்துகொண்டு எழுதிவிடுபவரல்ல. நாவலின் காலத்திற்கே சென்று அங்கேயே பல மாதங்கள் தங்கி, மக்களின் வாழ்வை நேரில் கண்டுணர்ந்து எழுதும் திறன்மிக்கவர். இவருடைய நாவல்கள் பலவும் சமூகப் பிரச்சனைகளை மையமாக வைத்து உருவாக்கப்பட்டவை. இவர் பெண்களின் உரிமைக்காகவும், உயர்வுக்காகவும் குரல் கொடுக்கும் பெண்ணியக் கோட்பாடு உடையவர்.

**நாவல் அறிமுகம் :**

இந்நாவல் 1996 -ல் முதற்பதிப்பாக வெளிவந்துள்ளது. இதனைத் தாகம் பதிப்பகத்தார் வெளியிட்டுள்ளனர். இதன் விலை ரூ. 80/- இந்நாவல் 264 பக்கங்களைக் கொண்டது. இது ஒரு பெண் தன்வாழ்வில் அனுபவிக்கும் பல்வேறு நிலைகளைப் பெண்ணிய நோக்கோடு கண்டுணர்ந்து படைக்கப்பட்டுள்ளது. இந்நாவலைப்பற்றி ஆசிரியர் கூறும் போது தன்னைச்சுற்றி நடக்கும் நிகழ்ச்சிகளின் தூண்டுதலிலே உருவானதாகும், உண்மையான நிகழ்ச்சிகளின் அடிப்படையில் எழுதப்பெற்றதாகவும் இந்நாவலைத் திறனாய்வாளர்கள் குப்பை என ஒதுக்கினாலும் பெண்ணுக்காக ஒலிக்கும் உரிமைக்குரலை நிறுத்தமுடியாது என்றும் கூறுகிறார். மேலும், பெண் மூலாதாரசக்தி, அவளுக்கு அழிவென்றால் உலகம் அழியும் எனவும் குறிப்பிடுகிறார். இதனால் காலத்தின் தேவையாக, நசுக்கப்படும் சமுதாயத்தின் குரலாக, எதிர்காலம் சந்திக்கவேண்டிய பிரச்சனையாக, ஆணின் ஒரு கூறாக் விளங்கும் பெண்களின் உணர்வாகப் பிரதிபலிக்கும் இந்நாவல் சிந்திக்கப்படவேண்டிய ஒன்றாகும். இதன் வழி இன்றைய பெண்ணினத்தின் உள்ளத்தை, அதன் உயிரொளியை, ஆத்மார்த்தமான அவளின் தேடல்களை, தேவையைச் சக்தியைப் புரிந்து கொள்ளவும், அப்புரிதலின் வழி நிகர்சமானம் எனும் சொல்லளவின்றி செயலளவில் சமூகம் உருவாக இந்நாவல் துணை புரியும்.

**நாவலின் கதைச் சுருக்கம்**

ரேவு என்கிற ரேவதி தான் நாவலின் நாயகி. இவள் பதினான்கு வயதிலேயே மல்லிநாதன் என்பவருக்கு மனைவியாகிறாள். ராஜ், பரத் என்கிற இரண்டு பிள்ளைகள். கணவன் கொஞ்சமும் அன்பில்லாத இரக்கமற்ற கொடுமைக்காரன். ஆபிஸ் ஸ்டெனோவையும் உறவாக்கிக் கொண்டவன். மனைவியைச் சமைத்துப்போடும் இயந்திரமாக, உடல் இச்சையைத் தாங்கும் விலைமாதாக, தன் ஆணைகளை ஏற்று நடக்கவேண்டிய அடிமையாக எண்ணி வாழ்பவன். மேலும், அவளின் அன்னையையும் குடும்பத்தையும் இழிவாக இரக்கமற்றுப் பேசி காயப்படுத்துபவான். பக்கத்து வீட்டு சுஜாதான் இவளுக்கு முழு ஆதரவு.

ரேவதி கணவனின் கொடுமை தாங்காமல் தம்பி வீட்டுக்கு ஒரு வாரம் செல்கிறாள்..அதற்குள் மகனை அடித்து துன்புறுத்துகிறான். பெரிய மகனாகிய ராஜீவும் அப்பாவைப்போல வளர்கிறான். சின்னவன் போதை மருந்துக்கு அடிமையாகிறான். இச்செயல்கள் பிடிக்காமல் நிரந்தரமாகத் தம்பி வீட்டுக்கே சென்றுவிடுகிறாள். அங்கேயும் கஷ்டம் வேறு வழியின்றிசுதா அறிமுகப்படுத்திய கே.ஆர். சார் எனும் பெரியவர் வீட்டில் பல மாதங்கள் அடைக்கலமாகின்றாள். அங்கு தான் அவளுக்கு அன்பும், ஆதரவும், புது தெம்பும் கிடைக்கிறது. அவரைத் தந்தையாகப் போற்றுகிறாள். அவருக்கு உடல் நலமின்றி போனபோது அவரது உறவினர் இவளின் கற்பைச் சூறையாடிகடற்கரையில் போட்டு விடுகின்றனர்.

இவள் அனாதையாக மருத்துவமனையில் இருந்தபோது சுதா வருகிறாள். சுதாவிடம் கூறிவிட்டு கே.ஆர். சாரின் சிஷ்யர் பெண்ணான ஜோதி வீட்டுக்குத் தனி ஒரு ஜீவனாகச் செல்கிறாள். அங்கே சீண்டும் வெறியனைப் பிணமாக்கி அப்பகுதி மக்களுக்கு மகாகாளியாய்த் தோன்றுகிறாள். ஜோதியின் வீட்டில் ஒரு வேலைக்காரியாக,தாயாக அன்புக்காகவும், அனுசரணைக்காகவும் பழைய உறவுகளை வீசி எறிந்து ஒரு புதுப்பிறவியாக வாழ்வைத் துவங்குகிறாள்.

**ரேவதியின்த கணவன் மல்லிநாதனின் ஆணாதிக்கம் :**

காலையிலிருந்து இரவு வரை கணவனுக்காகவும், பிள்ளைகளுக்காகவும் ஓடி ஓடி உழைக்கிறவளை எவரும் மதிப்பதில்லை. மல்லிநாதன், "எங்கோ தறிகெட்ட குடும்பத்திலிருந்து உன்னைக் கொண்டு வந்து என் கழுத்தில் கட்டிவிட்டார்கள்" என்று குத்தலாகப் பேசுவான்.

அவளின் அம்மாவை அப்பாவும் புரிந்துகொள்ளவில்லை. அவளின் இளமைப் பருவத்தில் தந்தையார் அவளை அடித்து உள்ளே தள்ளி "உன் அம்மா செத்துப்போயிட்டா தேடிண்டு போனே, உன்னை வெட்டிப் புதைத்து விடுவேன்" என்று கூறியது ரேவதியின் உள்ளத்தில் ஆழப்புதைந்த ஆணாதிக்கத்தின் வடுவாகிறது.

**அறியாத வயதில் கொடூரம் :**

ரேவதி தனக்கு நேர்ந்த கொடுமையை எனக்குத் திருமணமாகி ஆளாகக் கூட இல்லை. இங்கே கூட்டிண்டு வந்தா, உங்கிட்ட இன்னிக்குச் சொல்றேன்; ஆத்துல எல்லாரும் வேற இடத்துக்கு விசேஷத்துக்குப் போனப்ப, ஆளாகாத பெண்ணை இழுத்து மிருகமா நடந்துகொண்டான் என்று தன் கணவனின் செயலைச் சுதாவிடம் கூறுவதிலிருந்து அவளின் மனதில் அவனைப் பற்றிய மதிப்பீட்டை உணரலாம்.

ஒரு பெண்ணை அவளது சம்மதம் இல்லாமல் கணவனாகவே இருந்தாலும் பலவந்தம் செய்தால் கற்பழிப்பு என்கிற விதி பொய்யாகி தினம் தினம் வதையாகும் வாழ்க்கை அவளுக்கு வாய்த்துவிடுகிறது.

**பொய்ப்பலி :**

ரேவதியின் தம்பி வந்து சில நாட்கள் தங்கிவிட்டுச் செல்கிறான். வீட்டிலிருந்து சந்தனப்பேலா காணாமல் போகிறது. மகனைக் கண்டிக்கிறாள். அவன்தந்தையிடம் கூற, அதற்கு அவன் ஏண்டி உன் வீடே திருட்டுக் கும்பல்; நீ பெட்டிவீடு எதையும் பூட்டாமல் விட்டுட்டு வெளியே போயிருப்ப, வெட்டிண்டு போயிருப்பான். என் பையனைப் போட்டு அடிக்கிறாயா? பஜாரி என்று கூறி பெல்ட்டால் அவளை அடித்து துன்புறுத்துகிறான். இது போன்ற தொடர் நிகழ்வுகள் புரிதலைத் தவிர்த்து மனித தன்மையற்ற சூழலை உருவாக்குகிறது.

**சந்தேகச் சாடல் :**

ரேவதி தன் தம்பியின் நிலையை நினைத்துக்கொண்டு கவலையுடன் தன் கணவனுக்கு உணவிடுகிறாள். அப்போது, அவன் ஏய், புத்தி எங்கே ஊர்மேயப் போயிடுச்சு போலிருக்கு. நெய்யைக் கொண்டுவராத தன் தவறினை உணர்ந்து மறதியை நினைத்து சிரிக்கிறாள். என்னடி இளிப்பு இப்ப? எவனை நினைச்சிட்டு இளிப்பு? இந்த பக்கத்து குடித்தனத்தைத் தூக்கி எறிஞ்சாத்தான் நீ வழிக்கு வருவே! நானும் பையன்களும் பகல் முழுவதும் இருக்கிறதில்லை. நீ என்ன செய்றியோ, எங்கே போறியோ யார் கண்டா? எனச் சாட்டையடியாய் அவனது பேச்சுக்கள். அவளுக்கு மேலும், மேலும் துன்பத்தைக் தருகின்றன. இவை அவள்கணவன் மேல் கொண்ட அன்பை, எண்ணத்தைச் சிதைக்கின்றனவாக அமைகின்றன.

**அரக்க குணம் :**

ரேவதி தன் கொடுமையான வீட்டிலிருந்து தன் தம்பி வீட்டிற்கு வந்து தங்குகிறாள். ஒரு நாள் தன் மகன் பரத் ஓடி வருகிறான். உடல் எல்லாம் காயங்கள். ஏம்மா, எங்களை விட்டுட்டு வந்திட்ட என்னை அப்பா பெல்ட்டால் அடிச்சிட்டாரும்மா என அழுகிறான்.இதனால் இவள் மனம் துன்புறுகிறது. தாயும் தந்தையும் இல்லாத காரணத்தால் மகன் ராஜு போதைக்கு அடிமையானதை நினைத்து ரேவதி அழுகிறாள். இத்தகு வாழ்க்கைச் சூழலில் அவள் மனம் உலகியலையே வெறுக்கிறது.

ரேவதி தன் கணவனிடம் மன்னிப்புக் கேட்டு தஞ்சம் புக எண்ணுகிறாள். தன் தோழி சுதாவை வீட்டைக் காலி செய்யும்படி கூறியதற்கு ஏன் என்று கேட்கிறாள். புடவையை இழுத்துப்போட்டு இம்சிக்கிறான். நீ மிருகம் கூட இல்லை. பேய் கேடு கெட்ட பேய் எனக் கோபத்தால் ஏசுகிறான். மல்லிநாதன் அவளை அடித்து துன்புறுத்தி வெளியில் விரட்டுகிறான்.

**மனித நேயம் :**

ரேவதி தம்பி வீட்டுக்குச் செல்கிறாள். அங்கும் அவனுக்கிருந்த பற்றுக்கோடான பாயம்மா இறக்க, வறுமையில் வாடுகிறான். அவனுக்குச் சுமையாய் இருக்க விரும்பாமல் கே.ஆர். சார் என்னும் பெரியவர் வீட்டிற்கு வருகிறாள். அவர் ஒரு தந்தையாக நின்று அவளைத் தேற்றுகிறார். அவளது மகிழ்ச்சியை மீட்டெடுக்கிறார். உலகம் என்ன சொல்லுமோ எனத் தயங்குகிற போதெல்லாம், அவர் அதுக்கு யார் எதைச் சொல்வது? நீ ஒரு மனுஷி. கஷ்டப்படும் மனசோட வந்த. அதை நான் மாத்தனும். நான் மனுஷன்; இதுல யார் என்ன சொன்னாலும் நாம ஏன் பயப்படணும் என்று அவளைத் தேற்றி பாதுகாக்கிறார்.

அவள் உலகம் புதிதானது. ஆனாலும் உள்ளத்தில் பழைய நினைவுகளும் கணவன் குழந்தைகள் தம்மைத் தேடி வர மாட்டார்களா என்ற தேடலும், ஊர் என்ன சொல்லுமோ எனும் அச்சமும் அவளுள் மாறி மாறி வந்து கொண்டே இருந்தன.

கே.ஆர். அவளை அழைத்துக்கொண்டு நாகர்கோவிலில் நிகழும் எழுத்துப்பட்டறைக்குச் சென்றுவிட்டு, சுற்றுலா சென்று வரும் போது விபத்தில் தலையடிபட்டு மருத்துவமனையில் சேர்க்கப்படுகிறார். இதைக் கேள்வியுற்ற அவரது உறவினன் மாருதி ரேவதியை மிகக் கடுமையாகத் திட்டி வீட்டை விட்டு வெளியேற்றுகிறான்.

**சமூக அமைப்பின் ஆறுதல் கரம் :**

துளசி தேவி என்கிற மருத்துவர். இவள் ஒரு சோஷியல் வொர்க்கர். அவள்தான், கற்பழிக்கப்பட்ட கடலோரத்தில் கிடந்த ரேவதியைக் காப்பாற்றி, நம்பிக்கையூட்டுகிறாள். போலீஸில் ரிப்போர்ட் செய்ய இதற்குக் காரணமானவர்கள் யார் என ரேவதியை விசாரிக்கிறாள். ரேவதி கோர்ட்டார் கேட்கும் கேள்விகளுக்கு அஞ்சி, சொல்ல மறுத்ததோடு எவருக்கும் தெரியாமல் தன் பயணத்தைத் தொடர்கிறாள்.

புதிய ஊர், புதிய மனிதர்கள், புதிய உறவு - புதிய வாழ்க்கை என ஜோதியின் வீட்டில் தஞ்சமாகிறாள்.

### ஆசிரியர் பார்வையில் பெண் :

பெண் மக்களின் அவல நிலையாகிய ஓட்டைகளை வைத்துக்கொண்டு இச்சமுதாயம் எப்படி முன்னேற முடியும். மனித உரிமைகள் என்ற எல்லைக்குள் நினைக்கப்பட்டு, சமுதாயப் பூர்வமாக ஒப்புக் கொள்ளப்படாத இனம் பெண் இனம் என்றால் தவறில்லை. பெண் எங்கே போற்றப்படுகிறாளோ அந்த மண்ணே செழிக்கும். அவள் பூமி; அவள் ஜனனி; அவள் நதி; அவள் இயற்கை என்று அறிவுறுத்தப்பட்டவை எங்கே போயின?

பெண் வெறும் உடலில் இல்லை. அவள் மகாசக்தி. ஒவ்வொரு பெண்ணிலும் அந்த உயிர்சக்தி இயங்கி கொண்டிருக்கிறது.

பெண் என்பவள் மூலாதார சக்தி; அது இயற்கையின் மாற்றங்களில் உயிர்த்துக்கொண்டே இருக்கிறது எனும் ஆசிரியரின் கூற்று பெண்மையின் உண்மையை உணர்த்தும் தன்மை மிக்கவை.

### பெண்ணும் சமூகமும் :

எல்லாப் பெண்களும் அம்பாள் சொரூபம். தாயாரின் தத்துவம் பேசறவா உண்மையாக இருந்தால் புருஷன் போயிட்டான்னா அவனைப் பூச்சிக்கும் கேவலமா நசுக்கலாமா?

மொட்டையடிச்சிட்டாத்தான் பார்க்கலாம்னு சொல்றப்ப, அவா அந்த அம்பாளையே கேவலப்படுத்தலியா? புருஷன் முகம் தெரியாத வயசுல எங்க் பாட்டி ஒருத்தி, அப்படியாயிட்டா அவா மாதிரி ஒருத்தரை அம்பாள் சொரூபம்னு ஏன் பூஜை பண்ணக்கூடாது. அவ தவசி இல்லையா? சொல்லப்போனால் புருஷனின் வதையை உள்ளூற அனுபவிச்சிட்டு வெளில சுமங்கலின்னு குங்குமத்தை அப்பிட்டு அழுக்குச் சரடில் மஞ்சளைப் பூசிண்டு அவாகாலில் விழுந்து கும்பிடணும் சொல்லப்போனா இவாளெல்லாம் பரபுருஷங்கதானா? இவங்களுக்கு எல்லா உயிரிலும் எல்லாப் பெண்களிலும் அந்த ஈஸ்வர சொரூபம் தெரியலன்னா? இவா அவளுக்குப்பர புருஷன்தான? சீ ..! சமம்னு சொல்றதெல்லாம் வெறும் வேஷம், எனும் ரேவதியின் வேகமான வார்த்தை வீச்சுக்குள் சமூகத்தைத் தோலுரித்துக்காட்டும் பான்மை மிக்கவை.

மேலும், ஆணை ஆதிக்க வர்க்கமாகக் காட்டி தங்களின் சுயநலன்களை நியாயம் பண்ண சாஸ்திரங்கள், தரும நீதிகள் எழுதிவச்சுட்டாங்க; அதை ஏன்னு கேட்க இடமில்லாமலே தங்கள் ஆதிக்கத்தை இழைவிடாமல் அமுல்படுத்தினார்கள். மனுஷி தர்மத்தை இப்பவும் காணமுடியல. பெண்களைச் சுற்றியுள்ள மெலிட்டீகங்கள் எதுவும் போகல என்று ரேவதி பேசுவதாக ஆசிரியர் குறிப்பிட்டிருப்பது சமூகமும் எண்ணத்தக்கவை என்பது மறுப்பதற்கில்லை.

### நாவலின் பெண்ணிய முடிவு :

பெண்கள் சுயச்சார்பினைப் பெறவேண்டும். அப்போதுதான் மரியாதையும் விடுதலையும் வரும் என்ற கொள்கையின் வார்ப்பாக ரேவதி பாத்திரம் அமைகின்றது. ரேவதி பழைய வாழ்வை அதன் அடையாளங்களை முற்றிலும் துறந்து, புதிய வாழ்வை மேற்கொண்டு புதிய மனிதர்களின் அன்புப் பிடிக்குள் ஆனந்த வாழ்வைத் துவங்குகிறாள்.

அங்கு ஆனந்த ரூபினியாக மகிழ்கிறாள். பெண் என்பவள் உயிரைச் சுமப்பவள்! உயிர்களைப் பேணுபவள்! உயிர்களைக் காப்பவள்! ஒவ்வொரு பெண்ணுடலிலும் மகா விந்துவாக அவள் திகழ்கின்றாள். அந்தச் சக்தியை ஒழிப்பதாக எண்ணிபதர்கள் அந்த உடலை மாசுபடுத்துகிறார்கள். ஆனால் அழிக்க மடியுமோ? அந்த உயிர் மூலாதார சக்தி. மாற்றங்களில் உயிர்த்துக்கொண்டே இருக்கிறது என ஆசிரியர் பெண்ணின் அழிவற்ற அற்புத சக்தியைப் படைத்துக்காட்டுகிறார்.

“போக்குவரவெய்தும் புதுமையெலாந்தானாவாள்
மாறி மாறிப் பின்னும் மாறி மாறிப் பின்னும்
மாறி மாறிப்போம் வழக்கமே தானாவாள்”

எனப் பாரதியின் முடிவோடு நாவல் நிறைவடைகின்றது. ஆம். பெண்ணின் சக்தியின் மாற்றுருவம் உயிர்களைத் தாங்கும் கருணை வடிவம். அன்பும், இரக்கமும், தயவும், தியாகமும் கொண்ட தெய்வவடிவம் என உணர்ந்தால் உலகமும் இல்லறமும் உறவும் உன்னதாகும். அந்தநாளை வரும் காலம் வளமாய்க்காட்டும் என்பதே ஆசிரியரின் முடிவாகி நாவலைச் சிறக்கச் செய்கிறது.

# கொடிப்பூக்கள் புதினத்தில் - பெண்கள்

*ஜ. சைராபானு,* தமிழ் விரிவுரையாளர்,
ஸ்ரீ சரஸ்வதி தியாகராஜா கல்லூரி, பொள்ளாச்சி.

"மங்யைராகப் பிறப்பதற்கே நல்ல
மதாவம் செய்திட வேண்டும் அம்மா" - கவிமணி இலக்கு நோக்கி செல்வது இலக்கியம். இவ்விலக்கியம் வாழ்க்கையிலிருந்து முகிழ்ப்பதுதான் என்றால் மிகையில்லை. நமக்கு முன் இருந்தோரின் வாழ்க்கையைப் புலப்படுத்துவது இலக்கியமே. அவற்றில் ஒன்று புதினம். புதினங்கள் உயிர்த்துடிப்போடு கூடிய வாழ்க்கையைப் படிப்பவருக்கு உணர்த்துகிறது. ஆசிரியரின் ஆற்றலைப் பொறுத்து புதினக்கலை, வாழ்வின் எல்லாத் தத்துவங்களையும், நுட்பங்களையும் மையப் பொருளாக்கிக் கொள்ள இடமளிக்கின்றது. புதினம் வெறும் கலை வடிவம் என எந்த ஒரு இலக்கியப் படைப்பாளனும் ஒத்துக்கொள்வதில்லை. புதினம் வெறும் பொழுது போக்கும் கலை அன்று. இலக்கியச் சிறப்பு, புதிய கருத்து, புதிய நோக்கு, புதிய மொழிவளம் ஆகியன அனைத்தையும் சமுதாய நலனையும் குறிக்கோளாக்குகின்றன. அவ்வகையில் அனுராதா ரமணினின் கொடிப்பூக்கள் புதினத்தில் உள்ள பெண்கள் நிலை பற்றி பதிவு செய்கிறது இக்கட்டுரை.

## புதினத்தின் நோக்கு :

"பெண்கள் நாட்டின் கண்கள் என்றும்"
பெண்கள் போற்றுதலுக்குரியவர்கள்" என்றும் சங்ககாலம் தொடங்கி இன்று வரை நாம் சொல்லி வருகின்றோம் என்ற போதிலும், பெண்களின் நிலை போற்றுதலுக்கும், பாராட்டுதலுக்கும் உரியதாக அமைந்து விடுவதில்லை. சமூகத்தில் பெண்களின் நிலை எப்படி உள்ளது என்றும், அவர்கள் படும் அவலங்கள் என்னென்ன என்பது பற்றியும் இப்புதினத்தின் வாயிலாகப் புலப்படுத்துகிறார். இப்புதின ஆசிரியர், நாடறிந்த புகழ்பெற்ற அனுராதா ரமணன். ஆணாதிக்க சமுதாயத்தில் மூழ்கிக் கிடக்கும் பெண்களும் - ஆணாதிக்க கடலில் மூழ்கித் தத்தளித்து கரையேற எண்ணும் பெண்களுமாக இப்புதினத்தில் நிறைய பெண்களைப் பூத்துக் குலுங்கவிட்டிருக்கிறார்.

## பெண்ணியம் :

மனித இனத்தின் சரிநிகர் மதிப்பைப் பெற வேண்டிய பெண்ணியம், சமுதாயத்தில் அசைக்க முடியாத உருவாகிப் போன ஆணாதிக்கச் சிந்தனைப் போக்குகளால் காலங்காலமாகப் பல சித்திரவதைக்கும், சீரழிவுகளுக்கும் ஆளாக நேர்ந்தது என்பது மறுக்கவும், மறைக்கவும் இயலாத வரலாற்று உண்மையாகும். இதனில் "பெண்களுக்குச் சமூகத்தில் உரிய இடம் மறுக்கப்பட்டதை வெளிப்படுத்தி விழிப்புணர்ச்சியை ஏற்படுத்தியது பெண்ணியச் சிந்தனை." "பெண் அடிமை தீராத வரை மண் அடிமை தீராது" என்பதில் யாருக்கும் எள்ளளவும் சந்தேகமில்லை. காலந்தோறும் பெண்ணின் நிலையில் படிப்படியாக மாற்றம் நிகழ்ந்து வந்திருக்கிறது என்பதையும் நாம் மறுக்க இயலாது. எனவே, "சமூகத்தின் சரிபாதியான பெண்ணின் சிந்தனை மேலோங்கியவாய் தென்படுகிறார் என்பதற்கு கொடிப்பூக்கள் புதினம் எடுத்துக்காட்டு.

## புதினத்தில் - பெண்களின் வகைமை :

1. ஆணாதிக்கத்தின் பிடியில் சிக்கித் தவிக்கும் பெண்கள்
2. கணவனால் கைவிடப்பட்ட பெண்கள்
3. கணவனைக் கைவிட்டுதன்னிச்சையாகச் செயல்படும் பெண் - புஜ்ஜி.
4. சுதந்திரம் என்ற பெயரில் நாகரீக மோகம் கொண்ட பெண்.
5. தான் ஏமாற்றப்பட்டாலும் மற்ற பெண்களைக் காக்கும் உன்னத நிலையில் ஒரு பெண் உமா.

என கதாபாத்திரங்களை வகைமைப் படுத்தலாம். எந்த ஒரு இலக்கியமும் ஒரு பாடத்தை சமூகத்திற்கும், மக்களுக்கும் கற்றுக் கொடுக்கத் தவறுவதில்லை. அவ்வரிசையில் இப்புதினத்தையும் இணைத்துக் கொள்ளலாம்.

## ஆணாதிக்கப் போக்கு :

"இம்மை மாறி மறுமையாயினும்

நியாகியரெங் கணவனை

யானாகியர் நின் நெஞ்சு நேர்பவளே"                    - (குறுந் - 49)

என்கிறது ஒரு குறுந்தொகைப் பாடால். இப்புதினத்தில் உள்ள சகுந்தலாவும் அப்படியே வாழ்கிறாள். ஆனால், கணவன் பணப்பேயாகத் திகழ்கின்றான். குடும்பச் செலவுக்குக்கூடப் பற்றாக்குறையாகப் பணம் தருவதும், வேறு வழியில்லாமல் குழந்தைகளின் நலனுக்காக, கல்விக்காக அவள் எத்தனையோ துயருற்று பணம் சம்பாதித்தாலும் துயரம் தொலைந்ததாய் இல்லை. இப்புதினத்தில் சகுந்தலாவின் நிலை படிப்பவரின் உள்ளத்தை உருவாக்குவனவாக அமைந்துள்ளது. நான்கு குழந்தைகள் பிறந்ததற்கு மனைவி மட்டுமே காரணம் என்பதாய் கணவன் மூர்த்தி ஏவும் சொல்லம்புகளைத் தாங்க இயலாத சகுந்தலா வீடு வாடகைக்குப் பிடித்துத் தருதல், மாவு அரைத்துக் கொடுத்தல் - துணிவியாபாரம் செய்தல் - என ஏராளமான வேலை செய்து குடும்பம் நடத்துகின்றார். குழந்தைகளுக்கு நல்ல உணவு கொடுக்கும் பொழுது கணவன் பாடும் வசைக்கு அளவே இல்லை.

"பெரியராயல் பேமிலியில் இருந்து வந்தவ இவ குழந்தைகளுக்கு பாலும், பழமும் கொடுத்துதான் வளர்க்கறா...

பத்துருபாதான்றியே... பத்து ரூபாங்கறது அவ்வளவு சல்லிசாப் போச்சோ அம்மாவுக்கு? பத்து ரூபாய்லே... ரெண்டு நாளைக்கு காய்கறி வாங்கலாம்... தெரியுமா?

எல்லாம் திமிர்... நாலுகாசு தன்னாலும் சம்பாதிக்க முடியும்கிற திமிர்...

என்னும் பொழுது கூனிக் குறுகிப் போகிற குழந்தைகள் மற்றும் தாயின் நிலை அவலத்துக்கு உரிய ஒன்று.

**கணவனால் கைவிடப்பட்ட பெண் :**

"பட்டங்கள் ஆள்வதும் சட்டங்கள் செய்வதும்

பாரினில் பெண்கள் நடத்த வந்தோம்"

என்பான் கவிஞன். இதற்கேற்றார் போல இப்புதினத்தில் வசுமதி கதாப்பாத்திரம் அமைந்துள்ளது. கணவன் பல பெண்களுடன் தொடர்புடையவன் என்பது தெரிந்ததும் அவள் படும்பாடு சொல்லில் சொல்ல இயலாதது. ஆண் எப்படி வேண்டுமானாலும் இருப்பான். பெண்தான் பொறுத்துப் போக வேண்டும் என்ற ரீதியில் வசுமதியின் தந்தையும் மாமனாரும் உபதேசிப்பது நெஞ்சில் கனலை மூட்டக் கூடியதாக அமைகிறது.

"ஆமாம்மா... யாருதான் தப்பு செய்யலே? கோவலன் செய்யாத தப்பா? மாதவிய வெறுத்து கண்ணகி கிட்ட அவன் திரும்ப வந்தப்ப அவ ஏத்துகிட்டாளே... அதனாலேதான் சிலப்பதிகாரமே தோணிச்சு... ஒரு பொண்ணு நினைச்சா - புருசனையும் திருத்த முடியும்! மதுரையையும் எரிக்க முடியும்கறதுக்கு இதைவிட என்ன உதாரணம் வேணும்" பக். 65. என்று எடுத்துச் சொல்லும் பாங்கு இன்று பெரும்பான்மையாக எல்லா இடங்களிலும் நடப்பதையே இப்புதின ஆசிரியர் முன் வைக்கிறார். ஆனால், வசுமதி கணவனை விட்டு பிரிந்து வந்து உயர்கல்வி கற்று ஒரு வங்கியில் பணிபுரியும் அளவிற்குத் தன்னை உயர்த்துவதோடு தன் பிள்ளையை கணவன் போல் சீரழிந்து போகாமல் நல்லவனாய் கணவனாய் வளர்க்கின்றாள். பெண்களுக்குப் பணிந்து போதலும், மரியாதை கொடுத்தலுமாகிய பண்பு அணி என்றாலும் அடிமையாகப் போய் வீழ்தலும் கூடாது என்பதற்கு சான்றாய் வாழ்கிறாள்.

**நாகரீக மோகம் :**

மேல்நாட்டு நாகரீக மோகம் இன்றைய தலைமுறையைச் சார்ந்த பெண்களைப் பாடாய் படுத்துகிறது. அதனோடு சேர்ந்து வெளிநாட்டு வேலை என்கிற மோகம் இணைந்து விட்டால் எதிர்கால வாழ்வைப்பற்றி எதையும் சிந்திக்காமல், உதவ முன் வருகின்றவர்கள் நல்லவர்களா? அல்லது தீயவர்களா? என்பது பற்றியும் கவலைப்படாமல் தாங்கள் செய்வது சரியென எண்ணத் தோன்றுகிறது. அப்படித்தான் ரம்யா போன்ற பெண்கள் ஆடம்பர வாழ்கையையும் மற்றும் நாகரீகம் என்ற பெயரில் சீரழியும் வாழ்க்கையும் தெரிவு செய்து விடுகிறார்கள்.

புஜ்ஜி என்ற புவனேசுவரி தவறான வாழ்க்கை முறையில் ஈடுபாடு கொண்டவள். அவளுடைய நயமான, நயவஞ்சகமான பேச்சுகளில் தங்களை சுயம் இழக்கச் செய்து கொண்டவர்களில் ரம்யாவும் ஒருத்தி. ஆடை ஆபரணங்களில் மனதை மயக்கி தன் வயபடுத்தி வெளிநாட்டுவேலை என்ற மாய வலையில் சிக்க வைத்து பெண்களை விற்றுவிடும் கொடுந்தொழில் புரிகிறாள். இவளுடைய வஞ்சத்தில் ரம்யா வீழ்ந்து விடுகிறாள். கஸ்தூரி சமார்த்தியமாய் தப்பித்துக் கொள்கிறாள் என்ற போதும் ரம்யாவின் தாய் போல்

எத்தனையோ தாய்மார்கள் உள்ளார்கள். பெண் குழந்தைகளுக்கு சுதந்திரம் வழங்குகின்றேன் என்ற பெயரில் அவர்களது நடவடிக்கைகளை கவனிக்காமல் விட்டுவிட்டு அவதியுறுகின்றனர் ரம்யாவின் தாய் சந்தியா. "பள்ளி ஆசிரியையாக இருந்தும் சந்திரா பிள்ளையின் மீது கொண்ட பாசத்தின் விளைவால், அவளை அவளது நடவடிக்கையை கவனிக்காது விட்டு விடுகின்றாள். "கண்டிப்பும், கறாரும் மிகுந்த ஆசிரியை எனப்பெயர் வாங்கியவள் அவள். ஆனால் பெற்ற பாசத்தின் முன் மட்டும் எப்படியோ தோற்று போனாள்." பக் - 69.

எனும் பொழுதும் சந்திரா கணவன் இல்லாமல் பெண் பிள்ளையை சுய உழைப்பில் வளர்க்கும் பொழுதும் உலக நடப்பும் வாழும் வழிமுறையும் சொல்லி கொடுத்தல்லவா? வளர்க்க வேண்டியுள்ளது. எத்தனையோ பள்ளிக் குழந்தைகளை வல்லவர்களாக மாற்றிய சந்திரா தன் பிள்ளையின் வளர்ப்பில் கோட்டை விடுவது சரியா?

எந்த குழந்தையும் நல்ல குழந்தைதான்
மண்ணில் பிறக்கையிலே அவன்
நல்லவனாவதும் தீயவன் ஆவதும்
அன்னை வளர்ப்பினிலே" என்பான் ஒரு கவி இக்கூற்றுக்கு இலக்காவிடுகின்றாள் சந்திரா. பெண் சுதந்திரம் அவசியம் ஆனால் பொருள் புரிதலோடு அறிதலும் அதைவிட அவசியமாகிறது.

### தியாக மனப்பான்மை :

"உலகத்தில் வாழ்ந்த பெரியார்களின் தன்னலமற்ற தியாகத்தினால் மக்கள் இயக்கம் அறுகுபோல் தழைத்து ஆல் விழுது விட்டிருக்கின்றது" என்பது மாஜினி கூற்று

இப்புதினத்தில் இடம் பெறும் பெண்களும் தியாகச் சிற்பிகளாய் வலம் வருகின்றனர். அவர்களது வாழ்வு மட்டும் பெரிதெனக் கொள்ளாது பிறர் நலம் பேணும் பெருந்தகைமை கொண்டவளாக உமா கதாபாத்திரம் விளங்கிறது. உமாவும் புஜ்ஜியால் ஏமாற்றப்பட்டு மும்பையில் விலை பேசப்படுகின்றாள். குடும்ப வறுமை காரணமாக சிங்கப்பூரில் வேலை வாங்கித் தருவதாக கூறும் புஜ்ஜியை நம்பிச் சென்று, தன்னை இழந்ததோடு தனக்கான வாழ்க்கையும் இழந்து தவிக்கும் உமா, அதன் பின் அபலைப் பெண்களைக் காப்பாற்றும் பணியில் தன்னை ஈடுபடுத்திக்கொண்டு. மும்பைக்கு கடத்தப்பட்ட ரம்யாவை காப்பாற்றப்படுவதோடு அக்கூட்டத்தைக் காவல் துறையில் ஒப்படைக்கின்றாள்.

"நல்லவேளை...இதே கும்பல் கிட்ட ஏற்கனவே சிக்கி சீரழிஞ்ச பொண்ணு ஒருத்தி போலீசுக்கு தகவல் கொடுக்கிறவளா மாறிட்டா அவதான் இவளை பிடிச்சு பத்திரமா போலீஸ்கிட்ட ஒப்படைச்சதும் இல்லாம இது முக்கியப் புள்ளி ஒருத்தரையும் பிடிச்சிருக்கா..." எனக் கமிஷ்னர் குறிப்பிடும் பொழுது, உமாவின் தியாகம் தெள்ளெனத் தெரிகிறது. அப்புதினக் கதை மாந்தர்களில் சகுந்தலா குடும்பத்திற்காக, பிள்ளைகளுக்காக, தியாக மனப்பான்மையோடு செயல்படுவது வசுமதி சகுந்தலாவின், வறுமை நிலை புரிந்து உதவுவதும் என செம்மைமாந்தர்களாய் வலம் வருகின்றனர்.

### நிறைவுரை :

நிமிர்ந்த நன்னடையும் நேர்கொண்ட பார்வையும்/நிலத்தில் யார்க்கும் அஞ்சாத நெறிகளும்/திமிர்ந்த ஞானச் செருக்கும் இருப்பதால் /செம்மை மாதர் திறம்புதில்லையாம்" என்பான் பாரதி/பாரதியின் புதுமைப் பெண்களாய் பெண்கள் வலம் வர வேண்டும் என்றால், ஆய்ந்து நோக்கும் அறிவும் பெண்கள் பெற்றிருப்பது அவசியம். செல்லும் வழியெங்கும் மேடு பள்ளங்கள் நிறைந்து காணப்படுகிறது என்றாலும விழிப்புணர்வோடு பயணிக்கும் பொழுதுதான் இடறி விழாமல் வாழ இயலும்.

பெண் என்பவள் பிரபஞ்சத்தின் உயிர் நாடி ; வாழ உலகம் தழைக்க வைக்கவரும் ஜீவ ஊற்று என்பதை நினைவிற் கொள்ளுதல் அவசியமே!

நான் ஒரு பெண் என்னையே நான் /பெற்றெடுக்கிறேன்
நாங்கள் பெண்கள் எங்களையே /ஈன்றெடுக்கின்றோம்" - ஹெல்லி இக்லி ஹார்ட்

### பார்வை நூல்கள்:

அனுராதா ரமணன் - கொடிப்பூக்கள்
பாரதியார் - கவிதைகள்
குறுந்தொகைப்பாடல்

# இதழ்கள் பேசும் பெண்ணியம்

*நா. சோதீஸ்வரன்,* தேர்வு நிலை விரிவுரையாளர்,
அ.ப.க.ப. கல்லூரி, பழனி.

உரிமை என்பது சமூகத்தில் ஆண் - பெண் இருபாலருக்கும் பொதுவானது என்றும், ஆண் என்பதால் ஆடவருக்குக் கிடைக்கும் உரிமைகள், பெண் என்பதால் மகளிருக்குக் கிடைத்து விடுவதில்லை என்பர். இதனைப்,

"பெண்ணென்று பூமிதனில் பிறந்து விட்டால் - மிகப்
பீழையிருக்குதடி தங்கமே தங்கம்"
என்றவரிகள், இப்புவியில் பெண்களுக்கு நேரும் இன்னல்களைக் குறிப்பதாக அமைந்துள்ளன.

"குடியாட்சியின் இரத்த நாளங்கள் என்று போற்றப்படும் இதழ்கள் அறிவினைத்தூண்டி, அறியாமை எனும் சாபக்கேட்டினை அகற்றுகின்றன" என்பர். இதழ்களோ பரந்துபட்ட மக்களின் தொடர்பு சாதனமாக விளங்குபவை. எனவே, மகளிருக்கென்றே வெளிவரும் பெண்மணி, அவள் விகடன் ஆகிய தமிழ் இதழ்கள் மகளிரின் உரிமை மற்றும் உணர்வுகளைதத் தட்டியெழுப்புவதில் எந்த அளவு செயல்படுகின்றன? என ஆய்வதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

## மகளிருக்கென்றே வெளிவந்த இதழ்கள் :

1860-ஆம் ஆண்டு மகளிர் நலன்நாடும் முதல் இதழாக அமிழ்தவானி வெளிவந்தது. பத்து ஆண்டுகளுக்குப் பின்னர் 1870-ல் ஜன வினோதினியும் 1877ல் "விவேக போதினி", மாதர் மித்ரி" என்ற இதழ்களும் தோன்றின. 1891ல் "விநோத மஞ்சரியும்" "பெண்மதி போதினி"யும், 1893 ல் "சுகுண போதினி"யும் 1899ல் மாதர் மனோரஞ்சனியும், 1905ல் சக்கர வர்த்தினியும், 1906ல் தமிழ்மாது என்ற இதழ்களும் தோன்றின.

1911ல் மாதர்போதினியும், 1912ல் பெண்கல்வியும், 1924ல் சிந்தாமணி எனும் இதழும், 1928ல் தமிழ் மகள் எனும் இதழும், 1936ல் "மாதர் மறுமணம்" என்றும் புரடச்சிக்கரப் பத்திரிக்கையும், 1961ல் கிரக லட்சுமி எனும் இதழும், 1965ல் மண்மகள் இதழும், பின்னர் காதம்பரி, மங்கை, மங்கையர் மலர், சுமங்கலி, மருதாணி, ராணி, அவள் விகடன், பெண்மணி போன்றவை மகளிர் இதழ்களாக வெளிவந்தன.

மண்மகள் இதழ்வரை வெளிவந்த மகளிர் இதழ்கள் அனைத்துமே.

"ஒற்றைக் குடும்பத்தினிலே
பொருள் ஓங்க வளர்ப்பவன் தந்தை
மற்றைக் கருமங்கள் செய்தே
மனை வாழ்ந்திடச் செய்பவள் அன்னை" எனும் கூற்றுக்கிணங்க,குடும்பம் காப்பது பெண்களின் கடமையாகப் போற்றப்பட்டது. குழந்தை வளர்பபது எப்படி?, வீட்டைப் பேணுவது எப்படி? கணவனுக்குப் பணிவிடை செய்வது எப்படி? போன்ற செய்திகளோடு, அலங்காரப் பொருட்கள், மகளிரின் கற்புநிலை, புகுந்த வீட்டில் நடந்துகொள் வேண்டிய முறைகள் போன்ற மகளிரின் கடமைகள் பற்றிய செய்திகளை மட்டுமே கூறும் இதழ்களாக இருந்தன.

"அச்சமும், மடமும் நாணும் முந்துறத்த
நிச்சமம் பெண்பாற்குரிய வென்ப" - தொல்பெருள் - 96.
எனும் சொல்லுக்கேற்ப, அச்சம், மடம், நாணம் போன்றவற்றில் ஏதேனும் சிறிது கூடக் குறையக் கூடாது என்பதையே பெரும்பாலும் வலியுறுத்தி வந்தன.தற்காலத்தில் வெளிவருகின்ற மகளிர் இதழ்கள்,

"பெண்ணும் பகுத்தறிவுள்ள, சிந்தனை சக்தியுள்ள மனித ஜீவன்தான் என்பதை ஒப்புக்கொள்ளும் எவரும் இம்மூன்றையும் நடுவு நிலைமை உடையவர் வாக்கென்றோ, உண்மையை ஆராய்ந்த அறிவுடையோர் வாக்னெறோ ஒப்புக் கொள்ளமுடியாது" என்ற பெரியாரின் கருத்தைச் சுட்டிக்காட்டி அச்சமும், நாணமும் தேவையான இடங்களில் மட்டுமே தோன்ற வேண்டும். உரிமை வேண்டும் இடங்களில் துணிவு வேண்டும் என மகளிருக்கு எடுத்துரைக்கின்றன. உரிமைகளைத் துணிச்சலோடு நிலை நாட்டுங்கள். அப்போதுதான் நீங்கள் மனிதராக மதிக்கப்படுவீர்கள் என்ற கருத்தினை வலியுறுததுகின்றன.

## மூடநம்பிக்கை :

"மூட நம்பிக்கை மனித அமைப்பில் ஓர் அம்சம். அதனை நாம் ஓட்டி விட்டோமென்று மனக்கோட்டை கட்டும்போது, அது நம் மனதில் ஓர் மூலையில் பதுங்கியிருக்கும். தனக்கு அபாயம் வராது என்ற நிலை ஏற்பட்டால் திடீரென்று வெளிப்படும்" என்பர். எனவே, பெண்ணியம் பேசும் பெண்களும், உரிமைகோரும் பெண்களும், ஆண்களுக்குச் சாதகமான சாத்திரங்களை உடைக்கவும், புதுமை படைக்கவும் முயன்றுள்ளமை

பெண்களின் முன்னேற்றத்திற்கு முதற்படிக்கட்டாக அமைகிறது என்று மகளிர் அமைப்புகளின் செயல்களை இதழ்கள் பாராட்டி, ஊக்கப்படுத்துகின்றன.பெண் குலத்தை மூடப் பழக்கவழக்கங்கள் அழிக்கும் என்ற நிலையை மாற்றி, அவற்றைப் பகுத்தறிவது என்ற உயர்நிலைக்கு இதழ்கள் இட்டுச் செல்கின்றன எனலாம்.

**சாதி :**

கல்லில் சிற்பி வெட்டி எறிகிற முதல் துண்டு மாதிரி நாம் கடவுளாக நம்மைச் செதுக்க, வெட்ட வேண்டிய முதல் துண்டு சாதித் தீயும், ஆணவ அரக்கனும் தான். இதனால் நம் ஆன்மா புனிதமடையும் எனச் சாதீயத்திற்கு முற்றுப்புள்ளி வைக்கின்றன.நகர்ப்புறப் பெண்களின் சாதனைகளுக்கு ஈடு கொடுக்கும் வகையில் கிராமப்புற மகளிரும் முன்னேறி வருகின்றனர்". சாதிப்பதற்கு வாழும் சூழல் ஒரு காரணமல்ல என்பதையும் மகளிருக்கு உணர்த்துகின்றன.கிராமப்புற மகளிர் அரசின் உதவிகளைப் பெற இதழ்கள் துணை புரிகின்றன. மேலும் சிக்கல்களை எதிர்கொள்ளும் துணிவும் மகளிருக்கு வளர வேண்டும் எனச் சுட்டுகின்றன.சமையல் கலை பற்றிய அறிவு பெண்களுக்குத் தேவை என்று வலியுறுத்துகின்றன. கைப்பழக்கமே சமைக்கவும், கணவனைப் பேனவும் போதுமானது என்று எண்ணும் மகளிரைக் கண்டிக்கின்றன.மகளிர் வேலைக்குச் சென்று ஈட்டிவரும் வருவாயை மகிழ்ச்சியுடன் வாங்கிக் கொள்பவர்கள் மகளிர். அனுபவிக்கும் மனத்துன்பங்கள் மற்றும் பொது இடங்களில் சந்திக்க நேரும் துன்பங்களை முழுமையாக உணர்ந்து கொள்வதில்லை என்பதைச் சுட்டிக்காட்டி, ஆணினம் பெண்ணைப் பேணும் பாங்கு இன்னும் போதுமானதாக இல்லை என்பதை வலியுறுத்துகின்றன.

**சட்டத்தின் துணை :**

கல்வி கற்ற பெண்கள் வாழ்கைத் துன்பத்தை வெளியில் சொல்வதை அவமானமாகக் கருதுகின்றனர். இந்நிலையைப் போக்க மாவட்டம் தோறும் மகளிர் ஆலோசனைக் குழுக்களை அரசு அமைக்க வேண்டும் எனக் கோரிக்கை வைக்கின்றன. இந்திய அரசியல் சட்டம் பற்றிய செய்திகளைப் பொது மக்கள் அறிந்து கொள்ள இதழ்கள் துணை நிற்கின்றன. எண்ணம், தனிப்பட்ட வழக்குகளுக்கு ஆலோசனைகளும், மகளிருக்கு உதவும் சட்ட அறிவுரைகளும் இன்னும் தேவை என்பதை இதழ்கள் வலியுறுத்துகின்றன. சட்டத்தின் மூலம் சில உரிமைகளையும், சமுதாய விழிப்புணர்ச்சிகள் மூலம் சில வசதிகளையும் பெற்றுள்ள இன்றைய மகளிர் முன்பை விடஅதிகப் பொறுப்புக்களை முணுமுணுக்காமல் சுமக்கின்றனர். கடமைகளும் பொறுப்புகளும் அதிகரிக்கும் அளவிற்கு உரிமைகள் அதிகமாவது இல்லை. அல்லது உரிமைகளை அவள் பெற்று அனுபவிக்கவில்லை என்பதை மகளிருக்கு உணர்த்துகின்றன.

சட்டம் பெண்ணின் மனித உரிமையை மதிக்கும்போது கூட சமூகம் அதனை நிராகரிக்கிறது. இதற்குக் காரணமே, சட்டத்தை உரிய முறையில் பயன்படுத்தாததும், மகளிர் தமக்குள்ள உரிமைகளை அறிந்து கொள்ளாததுமேயாகும் என்று மகளிரின் அறியாமையைச் சாடுகின்றன.

> "நான்பெண்ணாக பிறந்திருந்தால் பெண்களெல்லாம்
> தம் கைப்பாவைகள் என்று ஆண்களிடையே நிலவும்
> கட்டுக்கதையை எதிர்த்துப் புரட்சி செய்வேன்"

என்னும் காந்தியடிகளின் கூற்றை இதழ்கள் நனவாக்குகின்றன.

இன்றைய காலத்தில் மனிதனுக்குரிய அனைத்து உரிமைகளும் முழுமையாகப் பெண்ணிற்கு அளிக்கப்படவில்லை. பெண்களின் உரிமைப் பறிப்பானது வளர்ச்சி எனும் முலாம் பூசப்பட்டு, புதிய வடிவங்களில் உலா வந்து கொண்டிருக்கிறது. சமூக வாழ்க்கையின் அனைத்துத் துறைகளும் தீவிர வணிக மயமாகிக் கொண்டு வருவதால் பெண்களுக்கு இழைக்கப்படும் அநீதிகள் ஆங்காங்கே தொடர்ந்து கொண்டுதான் உள்ளன. எனினும், பெண்ணுக்குரிய சமூக மதிப்பு ஆணைச் சார்ந்தே வருகிறது என்ற நிலை மாறிப் பெணங்களங தமக்குள்ள உரிமையைப் பெறவும், கடமையைச் செய்யவும் சாதனை படைக்கவும், தனித்தன்மையுடன் புகழ்பெறவும் முடியும் என்பதனையும் இதழ்கள் எடுத்துக்காட்டுகின்றன.பெண்ணுரிமை என்பது முழுமையாகக் கிடைக்காதபோது, உரிமையைப் பெற மாதர் அமைப்புகள் தங்களுடைய செயல்பாட்டைத் தீவிரப்படுத்தி வருவதைப் பாராட்டுகின்றன.மகளிர் அமைப்புக்களும், சாதனை புரிந்த மகளிரும் பெண்ணுரிமையை வளர்க்கப் போராடினாலும், மகளிர் அனைவரும் விழிப்புணர்வு பெற்று வீரநடை பயின்றால் மகளிர் மதிப்புப் பெற்று விளங்குவர். இன்றளவில் மகளிருக்கென்றே வெளிவரம் இதழ்கள், பெண்களுக்கான உரிமைகள், சட்டங்கள் பெண்மைச் சித்தரிப்பு, பெண்கள் முன்னேற வழிவகைகள், நடைமுறைச் சிக்கல்களின் தீர்வுகள் ஆகியவற்றை எடுத்தியம்புகின்றன எனலாம்.

**பயன்பட்ட நூல்கள் :**

1. அவள் விகடன், பெண்மணி இதழ்கள், 2. சமூகத்தில் பெண்கள்
3. பாரதியார் கவிதைகள் 4. பாரத நோக்கில் பெண்மை
5. பொன்மொழிப் புதையல்.

## "வேரில் பழுத்த பலா" என்னும் நாவலில் பெண்ணியம்

முனைவர். *சு. ஞானசௌந்தரி,* இணைப் பேராசிரியர், ஜே.கே.கே. நடராஜா கலை & அறிவியல் கல்லூரி, குமாரபாளையம் - 638 183.

### முன்னுரை :

பெண்ணும். தலித்தும் ஒரு வகையில் ஒற்றுமையுடையவர்களே. பிறப்பைக் காரணம்காட்டி இருவரும் அடிமையாக்கப்பட்டவர்கள். பெண்ணாகப் பிறந்த காரணத்தினாலேயே ஒரு மனிதப் பிறவி இரண்டாம் தர வாழ்க்கை நிலையை மேற்கொள்ளுமாறு கட்டாயப் படுத்தப்படுகிறது. இவை ஒவ்வொரு பெண்ணின் மனத்திலும், ஒவ்வொரு தலித்தின் சிந்தனையிலும் என்றைக்கும் ஆறாத காயத்தை ஏற்படுத்தியுள்ளன. இக்கதையில் வரும் அன்னத்தின் நிலையும் இதே நிலைதான். இவ்வன்னத்தின் விடுதலை சரவணனால் கிடைக்கிறது.

### வசந்தா:

சரவணனின் தங்கை வசந்தா. நாவலையும், கிசுகிசுவையும் படிக்கும் வயது. அண்ணன் சரவணன் வருவதைப் பார்த்து, நாற்காலியையும், டீப்பாயையும் துடைப்பதைப்போல் ஒரு நடிப்பு. வசந்தாவிற்கு வேலை வாங்கித் தரும்படி அம்மா முத்தம்மா மகன் சரவணனிடம் சுபாரிசு செய்வது பெண்கள் உத்தியோகம் பார்த்து தன் சொந்தக் காலில் நிற்கவேண்டும் என்பதையே காட்டுகிறது. வசந்தாவுக்கு சர்வீஸ் கமிசன் பரீட்சை எழுத விருப்பமில்லாமையும், இன்டர்வியூவிற்கு போனவிடத்தில் கேட்ட கேள்விகளுக்குப் பதிலளிக்க முடியாமையும் வசந்தாவின் மெத்தனப் போக்கையே காட்டுகிறது. வழிகாட்டியாக அண்ணன் இருந்தும் அதைப் பயன்படுத்தத் தெரியாத பெண்மையையே காணமுடிகிறது. வசந்தா ஜன்னல் வழியாக எதிர்வீட்டு ஜன்னலைப் பார்க்க ஆரம்பித்தாள். இதை வசந்தாவின் வயதுக் கோளாறு என்றுதான் கூறவேண்டும். முதலில் இதைப் பார்த்த அண்ணன் சரவணன் கூட, தன் தங்கையை தப்பாக நினைக்கவில்லை. இது சரவணனுக்குத் தன் தங்கை மீதுள்ள நம்பிக்கையைக் காட்டுகிறது. வசந்தாவின் பார்வை, சைகை எல்லாம் எதிர்வீட்டு ஜன்னலையே நோக்கியது.அண்ணனைப் பார்த்ததும் வசந்தா ஆடிப்போய் விடுகிறாள். நடுங்கினாள். ஒரு அண்ணனுக்குத் தங்கை அடங்கியே நடக்க வேண்டும் என்ற விதியைக்காட்டுகிறது. அண்ணன் சீறினான். தங்கையை சீக்கிரம் புறப்படு உன்னை எதிர்த்தவீட்டுப் பொறுக்கியிடம் ஒப்படைத்துவிட்டு வருகிறேன் என்றான். தங்கையால் தங்கள் கௌரவம் கெட்டுவிடும் என எண்ணினான். ஒரு குடும்பத்தின் கௌரவம் பாதிக்கப்படுவதும், அழிந்து போவதும் பெண்கள் கையில்தான் உள்ளது என்பதை இது காட்டுகிறது. அண்ணனின் தலையீட்டால் வசந்தா அண்ணனின் கோபத்திலிருந்து தப்பினாள். நீ காதலிக்கணுமுன்னே அவனைப் பார்த்தாய். ஆனால் அவன் கற்பழிக்கனும்முன்னு உன்னைப் பார்க்கிறான் என்று சரவணன் வசந்தாவிடம் கூறுவதிலிருந்து பெண்கள் யோசிக்காமல் காதல் வயப்பட்டு கற்பிழந்து நிறகும் அவலநிலையைக் காட்டுகிறது.

தாய் முத்தம்மா, மகள் வசந்தாவின் குறைகளை ஒப்புக்கொள்ளாதது வருந்தத்தக்க விசயம். கண்மூடித்தனமாக மகளை அரவணைப்பது மகளின் வாழ்வு கெட்டுவிட வழிவகுக்கிறது. இறுதியில் வசந்தா தவற்றை உணர்ந்தாள். அண்ணன் பார்த்த ஐ.பி.எஸ். அதிகாரியைத் திருமணம் செய்ய முன்வந்தாள். பெண்கள் தங்கள் சபல புத்தியை அடக்கிக்கொண்டால் வாழ்வு வளம்பெறும் என்பதையே வசந்தா வாழ்வு காட்டுகிறது.

### முத்தம்மா :

முத்தம்மா கணவனை இழந்தவள். சரவணனின் தாய். மகன் சரவணன் அபீஸிக்குச் செல்லும்போது வெளியே வந்தவள் அபசகுணம் எனக்கருதி பின்வாங்கினாள். இது இன்றும் மக்களிடையேயுள்ள மூட நம்பிக்கையையும், மூடப்பழக்க வழக்கத்தையும் காட்டுகிறது. பெண்களே முன்வந்து இந்த அவநம்பிக்கையை அகற்றினால் ஒழிய இது சமுதாயத்தை விட்டு நீங்காது. மகனிடம் எதையோ சொல்ல நினைக்கும் முத்தம்மா சொல்லாமல் தயங்குவது மகனுக்கு அடங்கி பயந்து நிற்கும் நிலையைக் காட்டுகிறது. ஒரு பெண் முதலில் தகப்பனுக்கும், பின்னர் கணவனுக்கும், அதன் பின்னர் மகனுக்கும் அடங்கியே வாழவேண்டும் என்பதை முத்தம்மாவின் நிலை உறுதிப்படுத்துகிறது. தன் மகளுக்கு வேலை வாங்கித் தரும்படி தன் மகனிடம் சிபாரிசு செய்வது தன் மக்ள் பிறர் கையை எதிர்பார்த்து நிற்கக்கூடாது என்னும் உண்மையைப் புலப்படுத்துகிறது. சரவணன் ஆபீஸ் செல்லும் போது வாசலுக்குள் நுழையப் போன அண்ணி தங்கம்மா ஒதுங்கிக்கொண்டாள். இவளும் கணவனை இழந்தவள். ஆனால் கறுப்புச் சேலை அணிந்திருந்தாள். அம்மா வெள்ளைச் சேலை, அண்ணி கறுப்புச் சேலை. இது சமுதாயம் சிறிது மாறியிருப்பதைக் காட்டுகிறது. ஆனாலும் மூட நம்பிக்கை மாறவில்லை. தாய் முத்தம்மா மகனிடம் கொஞ்சநேரம் இருந்துவிட்டு தண்ணீர் குடித்துவிட்டுப் போ என்று கூறுவது, அண்ணி தங்கமாவை மட்டுமல்ல சரவணனையும் வேதனைப்படுத்தியது. தான் ஒரு விதவையாக இருந்தும் விதவையான மருமகளை வேதனைப்படுத்துவது பெண்களே பெண்களுக்கு எதிரி என்பதை வெளிக்காட்டுகிறது. நம்மஊர் ஆளுங்க நம்மைப் பார்க்க வந்தால் இப்படியா விரட்டுறது என்று மகன் சரவணனுக்கு முத்தம்மா கூறுவது புத்தி சொல்வது போல் இருந்தாலும் பின்னால் ஏதோ ஒன்று ஒளிந்து

கொண்டிருப்பதைக் காட்டுகிறது. நீ பெரிய அதிகாரியாம். உன்னைவிடச் சிறிய ஆபிஸர் வீட்டு முன்னால் கார் வந்து நிற்கின்றது. அங்கே இங்கே என்று போகிறார்கள். ஏய்! வசந்தா உன் அண்ணன்கிட்டே இதையெல்லாம் சொல்லக்கூடாதா என்று கூறுவதிலிருந்து முத்தம்மாவின் அடிமனதிலுள்ள லஞ்ச, லாவண்யம் தெரிகிறது. பெண்களும், ஆண்கள் லஞ்சம் வாங்குவதற்கு ஒரு கருவியாக அமைகின்றனர் என்பதையும் உறுதிப்படுத்துகிறது. மகள் வசந்தா தவறு செய்கிறாள் எனத் தெரிந்திருந்தும் அவளைக் கண்டிக்கும் அண்ணனைத் திட்டுகிறாள் முத்தம்மா. அதோடு மருமகள் தங்கம்மாவையும் திட்டுகிறாள். தன் மகனைப் பார்த்து நீயும், உன் அண்ணியும் சேர்ந்துதான் இவளை இல்லாததையெல்லாம் சொல்லித் திட்டுகிறீர்கள் என மருமகள் மீது பழியைப் போடுகிறாள். இது காலம் காலமாக நம் சமூகத்தில் ஊறிப்போன மாமியார் - மருமகள் கொடுமையை விளக்குகின்றது.

**அண்ணி தங்கம்மா :**

*சரவணனின் அண்ணி தங்கம்மா கணவனை இழந்து* கறுப்புச் சேலையில் இருப்பவள். சரவணனுக்குப் பெற்ற தாயைப் போன்றவள். வசந்தாவுக்கு வெறுப்பான அண்ணி இவள். மாமியாரின் குத்தலுக்கும் வசைச்சொல்லும் ஆளான மருமகள் தங்கம்மா. சரவணன் வெளியில் செல்லும் பொழுது தங்கம்மா எதிரில் வந்துவிட்டாள் அதை அபசகுணமாக நினைத்தாள் மாமியார். தங்கம்மா படும் வேதனை, கணவனை இழந்த பெண்கள் சமுதாயத்தில் படும் வேதனையை காட்டுகிறது. வீட்டில் வேலைக்காரியாகவும் நடத்தப்படுகின்றாள். அம்மாவால் அண்ணி படும் வேதனையைச் சரவணனால் கூடத் தாங்கிக் கொள்ள முடியவில்லை. கணவனை இழந்தது விதியின் குற்றமா? அல்லது பெண்ணின் குற்றமா? என நினைக்கத் தோன்றுகிறது. திருமணம் ஆன புதிதில் அம்மா, அப்பா எவ்வளவோ தூண்டிப் பார்த்தும் தனிக்குடித்தனத்திற்கு இணங்காதவள். அதற்காகத் தாய் வீட்டிற்குப் போவதையே குறைத்துக் கொண்டாள். சரவணன் படிப்பிற்காகத் தன் நகைகளைக் கழற்றிக் கொடுத்தவள். வசந்தாவை பள்ளிக்கு அனுப்பிவிட்டு வயல் வேலைகளை கவனித்தவள். தங்கள் நிலத்தை ஆக்கிரமிக்க சில வீராதிவீரர்கள் வந்தபோது அவர்களிடம் வாதாடி நிலத்தை மீட்டவள். தன்னுடைய கணவரைப் போலவே சரவணனும் கிம்பளம் வாங்காமல் நேர்மையாக இருக்க அறிவுறுத்தியவள்.

சரவணன் தன்தங்கையிடம் கோபித்துக் கொள்ளும் போது, அவளை அடிக்க முற்படும் போது தங்கையை அடிப்பது அநாகரிகம் எனச் சுட்டிக்காட்டியவள் தங்கம்மா. சரவணன் தவறு செய்த தங்கையைக் கடுமையாகப் பேசவே, மாமியாரே மருமகளைப் பார்த்து தங்கம்மா நீ வந்தால்தான் இது தீரும் என்று அழைக்கின்றாள். இறுதியில் வசந்தாவும் அண்ணி உங்களுடைய பேச்சைக் கேட்காதது தப்புத்தான் என்று கெஞ்சுகிறாள். ஒரு வீட்டிற்கு மருமகளாக வந்து அவர்களுடைய இன்ப துன்பத்தில் பங்கேற்று, கணவனின் தம்பியையும், தங்கையையும் நன்கு படிக்க வைத்து, கணவனை இழந்து அதனால் மாமியாரால் வேலைக்காரியாக நடத்தப்பட்டு, சரவணனின் மரியாதைக்குரிய அண்ணியாகச் செயல்பட்டு இறுதிவரை குடும்ப மானத்தைக் காப்பாற்றும் ஒரு பெண்ணே தங்கம்மா.

**அன்னம் :**

*அலுவலகத்தில் "டெஸ்பாட்ச்" செக்ஷன் தலைமை கிளார்க் பத்மாவும், ராமச்சந்திரனும், சரவணனின்* முதுகிற்குப் பின்னால் சிரிப்பதை அன்னம் பார்த்தாள். வேதனைப்பட்டாள். அதன்பின் நாம் ஏன் வேதனைப்பட வேண்டும். இந்த ஆபீஸில் யார், யார் எப்படின்னு தெரியாமல் எனக்கு "மெமோ" கொடுத்தவர்தானே. இந்த "மெமோ" வால் என்னுடைய வேலை எவ்வளவு பாதிக்கப்பட்டிருக்கும் என நினைத்தாரா? இவருக்குப் பின்னால் புறம் பேசாதது நான் ஒருத்திதான். எனக்கு "மெமோ" மற்றவர்களுக்கு இன்கிரிமென்ட் சிபாரிசு என்று கூறுவதிலிருந்து நல்லவர்களுக்கு காலமில்லை என்பதை அறிய முடிகிறது. சரவணனைக் கண்டு பயந்து நடுங்கினாள். மீண்டும் "மெமோ" வந்து வேலை போய்விடக்கூடாது எனப் பயந்தாள். வேலைக்குச் செல்லும் பெண்கள் அலுவலகத்தில் படும்பாட்டினை இது காட்டுகிறது. உமா போன்ற குலுக்கலான பெண்கள் அலுவலகத்தில் இருக்கும் வரை அமைதியான, அடக்கமான அன்னம் போன்றவர்களுக்கு மெமோதான்.

"சௌநா" மார்ட் கம்பெனிக்கு அனுப்பவேண்டிய லெட்டரை ரிஜிஸ்டர் போஸ்டில் அனுப்பச் சொன்னேன். நான்கு தடவையும் அனுப்பலியே ஏன்? என்று கேட்டான் சரவணன். அன்னம் பதில் சொல்லமுடியாமல் திணறினாள். பின்னணியைச் சொல்ல பயந்தாள். பின்னர் ஹெட்கிளார்க் அம்மாதான் ரிஜிஸ்டர்ல அனுப்ப வேண்டாம்முன்னு சொன்னாங்க என்று திணறும் போது அலுவலகத்தில் வேலை பார்க்கும் பெண்கள் இப்படி இரு அதிகாரிகளுக்கிடையே சிக்கித் தவிக்கும் நிலையைக் காணமுடிகிறது. யூ.டி.ஸி. யாய் சேர்ந்த அன்னம் இந்த அலுவலகத்தில் டெஸ்பாச் கியார்க்காக உள்ளாள். கோட்டாவிலே வந்த காரணத்திற்காக அவளை டெஸ்பாச்சில் போட்டுவிட்டார்கள். கேட்டால் பதில் இல்லை என்றாள். கோட்டாவில் வந்ததினால் எவ்வளவு கீழ்மட்டத்திற்கு தள்ளப்பட்டாள் என்பதைக் காணலாம். சௌரிராஜனிடம் யூ.டி.ஸியில் வந்த அன்னத்திற்கு எதற்கு டெஸ்பாச் என்று சரவணன் கேட்ட பொழுது "முயலை பிடிக்கிற நாயை மூஞ்சைப் பார்த்தாலே தெரியுமே" என்று அவள் தலித் என்பதையே சுட்டிக் காட்டுகிறான். தலித் என்பதனால் அவள் எவ்வளவு இழிவாக பேசப்படுகிறாள் என்பதும் சமுதாயம் தலித்தை நடத்தும் விதத்தையும் காணமுடிகிறது.

கோபமடைந்த சரவணன் அன்னம் ஒரு கிராஜூவேட். அவள் கோட்டாவில் வந்ததால் டெஸ்பாச்சில் போட்டு, எஸ்.எஸ்.எல்.சி. படித்த சந்தானத்தை அக்கௌண்டென்டாக போட்டது எந்த வகையில் நியாயம்? ஹரிஜன பெண்ணுன்னால், ஒன்னுந் தெரியாதுன்னு நினைக்கிறது சட்ட விரோத சமூக விரோத சிந்தனை என்று சரவணன் கூற்றிலிருந்து தலித் பெண்ணினம் எவ்வாறு புறக்கணிக்கப்படுகின்றது என்பதை அறியலாம். சௌரிராஜன் அன்னத்தை "திமிர்பிடித்த சேரிக்கழுதை" என்கிறான். சேரிப்பெண் என்றால் அவள் எவ்வளவு படித்திருந்தாலும் சமுதாயம் அவர்களை இழிவாகப் பேசுவதையே காட்டுகிறது. சரவணன் அன்னத்திற்கு ஆறுதலாக இருந்தான். ஆபீஸில் நாளை மாலை ஏழுமணிவரை இருக்கும் படி சரவணன் அன்னத்தைக் கேட்டுக்கொண்டான். முதலில் பயந்த அன்னம் பின்னர் உலகத்தில் நல்லவர்களே இருக்கமாட்டார்களா எனத் தனக்கு சமாதானம் தேடிக்கொண்டாள். ஒரு வகையில் அன்னத்திற்கு சரவணனிடம் பயம் கலந்த அன்பு இருந்தது. எல்லோராலேயும் வெறுத்து ஒதுக்கப்பட்டால் தன்னை ஆதரிக்கும் ஒருவர் மீது அன்பு செலுத்தும் பெண்மைக்கே உரிய தன்மை வெளிப்படுகிறது.

அலுவலகத்தில் சௌரிராஜன், உமா, பத்மா ஆகிய மூவரின் கடுஞ்சொல்லுக்கு அன்னம் ஆட்பட்டாலும், சரவணனின் அன்பு அந்தப் புண்ணுக்கு மருந்தாகியது. அன்னம் உடம்பில் நல்ல ரத்தம் ஓடுகிறது. ஆபீஸ் சகாக்களைப்பற்றி அப்பாவித்தனமாய் சொல்லலாம். ஆனால் அடாவடியாய் சொல்ல மாட்டாள் என்று சரவணன் கூறும் பொழுது எந்தச் சாதியாக இருந்தாலும் எல்லோருடைய உடம்பிலும் ஓடுவது ஒரே இரத்தம்தான் என்பதை உணர வைக்கிறது. அன்னம் கணக்கு பிரிவிற்கு மாற்றப்பட்டாள். இதைக்கண்ட உமாவுக்குச் சூடேறியது. என்னைவிட அன்னம் உசத்தியா? என்று கேட்கும் பொழுது பெண்களுக்கே உரிய பொறாமைக் குணம் வெளிப்படுகின்றது. அலுவலகத்தில் சரவணன் மீது வேண்டுமென்றே சக ஊழியர்கள் லஞ்ச ஊழலைப் புகுத்தியள போது சரவணனுக்கு உறுதுணையாக இருந்தாள் அன்னம். இந்த நியாயப் போராட்டத்தில் தனக்கும் பங்கு உண்டு என்று எண்ணினாள். இதைக்கண்ட சரவணனுக்குப் பெருமிதம். சேரி, காலனி, கோட்டாவிலே வந்தவள் என்றெல்லாம் ஒதுக்கினார்களே இவளிடம் இவ்வளவு திறமையுள்ளதா என வியந்தான். சாதியை வைத்துக்கொண்டு ஒரு பெண்ணை அறிவிலி என ஒதுக்கும் சமுதாயத்தின் பேதமையை இது பிரதிபலிக்கிறது. இரவு எட்டு மணிக்கு அலுவலகத்திலிருந்து சரவணனும் அன்னமும் கிளம்பினர். சரவணன் அன்னத்தை ஸ்கூட்டரில் ஏறச் சொன்னான். ஏறிய அன்னம் சரவணனைக் கெட்டியாக பிடித்துக்கொண்டாள். சரவணன் மீது ஏற்பட்ட குற்றச்சாட்டைக் கண்டு அன்னம் கொதித்தாள். ஸார், ஸார் இதை இப்படியே விடக்கூடாது என்றாள். சரவணன் ரிசிக்னேசன் கொடுக்க முற்பட்டான். அன்னம் அதைத் தடுத்தாள். அந்த லெட்டரை டைப் செய்ய மறுத்தாள். கண்ணீர் சொட்டு சொட்டாக விழுந்தது. சரவணன் அவள் கைகளைப் பற்றி இருக்கையில் அமர்த்தினான். அன்னம் காட்டிய பாசம் அவனை உலுக்கியது. இந்த அக்கிரமத்தை மேல் அதிகாரிகளுக்குத் தெரியப்படுத்தலாமே என்கிறாள் அன்னம். டிபார்ட்மென்ட்டை எதிர்த்து நிற்கிற ஆள் பலமோ, பணபலமோ என்னிடம் இல்லை என்றான் சரவணன். அன்னத்தின் கண்களில் ஒரு ஒளி. அவனை நேருக்கு நேராகப் பார்த்தாள். தீர்கத்தோடு தீர்மானமாகப் பேசினாள்.

உங்களையும் உங்க குடும்பத்தையும் நான் காப்பாற்றுகிறேன் சார். என் கல்யாணத்திற்கு சேர்த்து வைத்திருக்கின்ற பத்தாயிரம் ரூபாயை உங்களுடைய தன்மானப் போராட்டத்திற்குத் தருகிறேன் சார். உங்களுடை தன்மானப் போராட்டத்தைவிட என்னுடைய கல்யாணம் முக்கியமல்ல எனக் கூறும்பொழுது பாரதியின் புதுமைப் பெண்ணாக காட்சியளிக்கின்றாள் அன்னம். நான் இந்த உதவியை உங்களிடம் வாங்கினால் ஊர் என்ன பேசும் என்று கேட்ட சரவணனுக்கு, ஊருக்குப் பயப்பட்டால் என்னை உறவாக்குங்க. என் கழுத்தில் மஞ்சள் கயிறைப் போடலாம் என்று கூறும் பொழுது பாரதியின் புதுமைப் பெண்ணாக காட்சியளிக்கின்றாள். சரவணன் அன்னத்தை உற்றுப் பார்த்தான். அவன் கண்களுக்கு அன்னம் "வேரில் பழுத்த பலா"வாகக் காட்சியளித்தாள். கட்டி அணைத்தான். அன்னத்தின் கைகளை ஆறுதலாகவும், ஆறுதல் தேடியும் பற்றிக்கொண்டான். ஒரு ஆணின் முன்னேற்றத்திற்குப் பின்னால் ஒரு பெண் இருப்பாள் என்பதைப் போல சரவணனின் நியாயப் போராட்டத்திற்குப் பின்னால் அன்னம் இருந்தாள். போராடத் துணிந்தான். போராட்டத்திற்கு வெற்றித் திலகமிட்டாள் அன்னம்.

## முடிவுரை :

இந்நாவலில் மூன்று விதமான பெண்களைக் காணலாம். தான் ஒரு விதவை என்பதை மறந்து விதவைக் கோலத்தில் இருக்கும் மருமகள் தங்கம்மாவைக் கொடுமைப்படுத்தும் மாமியார் முத்தம்மா. இறுதியில் தன் தவற்றை உணர்கிறாள். காதல் வயப்பட்டு அண்ணனின் கடுஞ்சொல்லுக்கு ஆளாகி. அவமரியாதை செய்த அண்ணனிடமே அடைக்கலம் புகும் வசந்தா. அலுவலகத்தில் சேரிப் பெண்ணென அனைவராலும் ஒதுக்கப்பட்ட அன்னம். சேற்றில் முளைத்த செந்தாமரையாகி அஸிஸ்டென்ட் டைரக்டர் சரவணனுக்கு ஆறுதலாகி நியாயப் போராட்டம் நடத்த உறுதுணையாக நின்ற வீராங்கனை. இவ்வாறு ஒவ்வொரு பெண்களும் தங்களது கடமையை உணர்ந்து செயல்பட்டால் அலுவலகம் என்ன, வீடு என்ன, நாடே சிறப்படையும். இத்தகைய பெண்ணியத்தைப் பேணிக்காப்பது சமுதாயத்தின் கடமையாகும்.

# வைரமுத்து கவிதைகளில் பெண்ணியம்

*த.தங்கமயில்*, முதுகலை தமிழ் இலக்கியம் நிறைவாண்டு,
அருள்மிகு பழனியாண்டவர் மகளிர் கலை கல்லூரி, பழனி.

## முன்னுரை:

இலக்கியம் காலத்தின் கண்ணாடி என்பாரின் கூற்றுப் பொருள் பொதிந்தது ஆகும். அக்காலத்தின் மாறுபாடுகளும், சமூக மாற்றங்களும் அவ்விலக்கியங்களில் பிரதிபலித்தே தீரும். நவீனத்துவம், பின் நவீனத்துவம் என்றெல்லாம் வகைப்படுத்தப்பட்ட தற்கால இலக்கியக் காலகட்டங்களில் மிகவும் அதிகமாகவும், அழுத்தமாகவும் பேசப்படுவது தலித்தியமும், பெண்ணியமுமே!. அத்தகைய பெண்ணியத்தை இன்றைய புதுக்கவிஞர்களில் ஒருவரான வைரமுத்துவின் கவிதைகளை கொண்டு ஆராய்வதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

## பெண்ணியம்: சொற்பொருள் – விளக்கம்:

Feminism என்ற ஆங்கிலச் சொல் பெண்ணியம் என்ற தமிழ்ச்சொல்லை விளக்கும் சொல்லாகும். 'Femina' என்ற லத்தீன் மொழி சொல்லின் திரிபுதான் 'Feminism' என்பது 1889 வரை 'womanism'என்ற சொல் பெண்களின் உரிமைப் பிரச்சினையையும், அதன் அடிப்படையிலான போராட்டத்தையும் உணர்த்தியது. பெண்ணியம் என்ற சொல்லுக்கு பல விளக்கவுரைகள் வந்தாலும் இறுதியில் Feminism என்ற சொல்லே நிலைபெற்று வந்தது.[1]

பெண்ணியம் என்பது பெண்களுக்கான உரிமைகளைப் பெற்றுத் தருவது மட்டுமல்ல; சமூகத்தையே மாற்றியமைக்க முயல்வதாகும். என்று சார்லட் பன்ச்[2] என்பவரும், பெண்ணோ, ஆணோ – சமுதாயத்தில் பெண்களின் நிலையை மாற்றப் போராடுவதோடு, வகுப்பு வேறுபாடின்றி எல்லா நிலைகளிலும் பெண்களின் உயர்வுக்கு உழைப்பவராக இருக்க வேண்டும் என்று சைமன்-டி-பெவாயர்[3] என்பவரும் விளக்கம் தருகின்றனர்.

## வைரமுத்து கவிதை உணர்த்தும் பெண்ணியம்:

ஒரு நல்ல கவிதை என்பது புரிவதற்கு முன்பே உணர்த்தி விடும் என்ற எலியட்டின் கூற்றுப்படி, வைரமுத்துவின் கவிதைகள் அமையும். வைரமுத்து உணர்த்தும் பெண்ணிய நோக்கல் கவிதைகள் யாவும், பெண் அடிமை நிலையையும், பெண்ணியச் சீரழிவையும், சீற்றத்தையும் உணர்த்தும் விதமாய் அமைகின்றன. பெண்ணுக்கு நாம் எத்தனை கொடுமைகள் செய்தாலும் அவள் பொறுத்துகொள்ளும் தன்மை கொண்டவள் என்றும், எவ்வளவுதான் பெண்களை படிக்க வைத்தாலும் அவளுக்கு திருமணம் என்று வரும்போது வரதட்சணை என்ற பெரிய விலங்கு காத்திருக்கிறது என்பது புரியும் வண்ணமாய் கவிதைகள் அமையும். வைரமுத்துவின் கவிதைகளை கொண்டு மரபுசார்ந்த பெண்களின் நிலையையும், இன்னமும் தீராத சிக்கலாக இருக்கும் முதிர்கன்னியின் நிலையையும் காணலாம்.

## மரபு சார்ந்த பெண்களின் நிலை:

சங்ககாலம் தொடங்கி 20-ம் நூற்றாண்டு வரை இலக்கியங்களில் பெண்களின் சித்தரிப்பு என்பது பற்றி ஆய்வு நூல்கள் பலவும் வெளிவந்துள்ளன. மரபுப் பெண்கள் பற்றிய கருத்தினை எடுத்தியம்பும் நூல்கள் பல வெளிவந்தாலும், அவை யாவும் பெண் அடிமைகளை மட்டுமே சுட்டுகின்றனவே தவிர, அவற்றைக் களைய மாற்றுவழி எதுவும் கூறவில்லை.

வைரமுத்து தன் கவிதையில் சிலம்பின் கதாநாயகியான கண்ணகியை மிகுந்த கோபக்கனல் கொண்டு சாடுகிறார். கோவலன், மாதவியை தேடிச்செல்லும்போதே கண்ணகியானவள் அவனைத் தடுத்திருக்க வேண்டும். அதைத் தடுக்காமல் தவறவிட்டதுதான் பெண்ணே நீ செய்த முதல் குற்றம் என்கிறார் வைரமுத்து.

> கட்டில் சுகங்காணக் காளையவன் செலும்போதே
> தட்டிக் கேட்டிருந்தால் தவறியிருப்பானா?
> பெட்டிப் பாம்பாகப் பேசாதிருந்ததுதான்
> கட்டழகே நீ செய்த கடுங்குற்றம் முதற்குற்றம்[4].

என்று கூறும்போது பெண் என்பவள் ஆண் தவறுசெய்யும்போது அதைத் தட்டி எதிர்த்துப் பேசவேண்டும் என்பதை வைரமுத்து தன் கவிதைவரிகள் மூலம் எடுத்துக் கூறுகிறார். இதைத் தவிர கோவலன் இறந்தவுடன்

கண்ணகியானவள், மதுரை நகரத்திற்கு சென்று அந்நகரைத் தீயால் எரித்தது இதே கண்ணகிதானா? என்று வைரமுத்துவே வியந்துநோக்கும் அளவிற்கு கவிதை அமைந்துள்ளது.

அறம்பாடி மதுரை அரசன் புகழ்சாடித்
திறம்பாடும் பூநகரைத் தீயால் எரித்தாயே
அத்திறத்தை சோணாட்டில் அணுவளவு காட்டிநின்றால்
சத்தியமாய் வாழ்வில் தளிர்த்துச் செழித்திருப்பாய்[5]

என்று மதுரையை எரித்த அத்திறமையை கோவலன், மதுரைக்கு எழுக எனச் சொல்லும்போது சோழநாட்டில் அத்திறத்தை காட்டி இருந்தால் கண்ணகியின் வாழ்வு இனிமையாய் இருந்திருக்கும் என்று வைரமுத்து தன் கவிதையில் குறிப்பிடுகின்றார்.

இதும்மட்டும் அல்லாமல், கண்ணகியை போல் இருக்கும் அகலிகையைம், சாடுகிறார் கவிஞர். அகலிகையை தவறாக நினைத்த கௌதம முனியின் தவறை சுட்டிக்காட்டாமல் தான் அறியாமல் செய்த தவறின் காரணமாய் அன்று கல்லாய் மாறினாள் அகலிகை. ஆனால், கவிஞர் வைரமுத்தோ, தன் கவிதையில்,

ஏடி அகலிகை / எப்போதடி பெண்ணாவாய்?
கானகத்தில் /அன்று கதைக்கல்லாய்க்
கிடந்த நீ/சமூக சந்தியில்
இன்று/சதைக்கல்லாய் கிடக்கிறாய்.[6]

என்று கூறும்போது, அந்தத் திருட்டு இந்திரனின் வாரிசுகள் அவளை இரவு மட்டுமே பெண் என எண்ணி அவளிடம் சுகம் தேடுகின்றனர். பகலில் மனம் கல்லாய் அவள் உணர்வுகள் கல்லாய் உறைந்து போயிருக்கிறாள் என்பதை கவிதை வரிகள் சுட்டிக்காட்டுகின்றன.

## முதிர்கன்னியின் அவலநிலை

வைரமுத்து, தனது கவிதைகளில் மரபுப் பெண்ணியம் மட்டும் அல்லாமல், வரதட்சணைக் கொடுமையால் வயதாகியும் திருமணம் ஆகாமல் இருக்கும் முதிர்கன்னியின் அவல நிலையினையும் சுட்டிக்காட்டியுள்ளார். பெண் தனது திருமணத்தை நினைத்துக்கொண்டே இருக்கிறாள். ஆனால், திருமணம் ஆகவில்லை என்பதை,

ஏக்கம் வரும் நெஞ்சில் / வீக்கம் வரும்....
..........
கரைந்தது கன்னத்து மச்சம் – நான்
கன்னியாய் இருப்பதே மிச்சம்.[7]

இக் கவிதை வரிகள் கல்யாண ஆசைகளை எல்லாம் நெஞ்சில் அடக்கி கொண்டு, கல்யாணத்தை எண்ணிக்கொண்டே இருப்பதால் தூக்கமும் நின்று விட்டது என்பதைக் கூறுகின்றன. இத்துடன் அமையாது, தனக்கு வயதாகிக் கொண்டே போகிறது. தன் திருமணத்தை நிச்சயித்த நாளில் நடத்த முடியவில்லை என்று பெண் ஒருத்தி புலம்பும் விதமாய் கவிதைகள் அமைகின்றன.

வைகாசி வந்தால் / முப்பத்து மூன்று
முடிகிறது அவளுக்கு / அவள் திருமணத்தை
நிச்சயிக்க நினைத்த / நாளில் மட்டும்
சொர்க்கத்திற்கு / விடுமுறை போலும்.[8]

இக் கவிதை வரிகளில், முதிர்கன்னியின் அவல நிலைகளை மிக அழகாக எடுத்துக்கூறுகிறார் கவிஞர்.

## சமுதாய மகளிரின் நிலை:

வைரமுத்து தன் கவிதைகளில் சுட்டாத கருப்பொருளே கிடையாது. அப்படிப்பட்ட கவிதையில் சமுதாய மகளிரின் நிலையும் கூட கூறப்படுகிறது. தண்ணீருக்காகப் போராடும் ஓர் பெண்ணின் அவலத்தை கூறும் வண்ணமாய் வைரமுத்து தன் கவிதை ஒன்றில்,

தண்ணீர் லாரியின் / சப்தம் கேட்டால்

உயிரில் பாதி இற்றுவிடும்/.......

உயிரைப் பிதுக்கும்/கூட்டம் அவளை

ஒதுக்கித் தள்ளுது வீதியிலே.[9]

என்று கூறும்போது சமுதாயத்தில் பெண்கள் படும் அவலநிலையும், பெண்ணுக்கு விளையும் துன்பங்களும் அழகாய்ச் சுட்டிக்காட்டப்படுகிறது. மேலும், வேலைக்குச் செல்லும் பெண் ஒருத்தி தன் குழந்தையின் அழுகையை பொருட்படுத்தாமல் அவசரமாய் வேலைக்கு செல்வதால், பாடும் தாலாட்டில் கூட தன் வேதனையை சொல்லி குழந்தையை தூங்கவைப்பதாய் வைரமுத்து தன் கவிதை வரிகளில் குறிப்பிடுகின்றார்.

வாரநாட்கள் முழுதும், தான் வேலைக்கு செல்வதால் தன்னால் ஞாயிற்றுக்கிழமை மட்டுமே உன்னை கவனிக்க முடியும் என்பதை,

இருபதாம் நூற்றாண்டில்

என்கருவில் வந்தவளே

இதுதான் கதியென்று

இன்னமுதே கண்ணுறங்கு

தாயென்று காட்டுதற்கும்

தழுவி எடுப்பதற்கும்

ஞாயிற்றுக் கிழமைவரும்

நல்லவளே கண்ணுறங்கு[10]

என்னும் கவிதை வரிகளின் மூலம் சமுதாயத்தில் வேலைக்குச் செல்லும் பெண்களின் அவல நிலையைக் காணலாம்.

## முடிவுரை:

இக்கட்டுரையின் மூலம் பெண்ணியம்,அதன் சிக்கல், தீர்வுகள் இன்னமும் முழுவதுமாய் பேசப்படாததாய்த், தீர்க்கப்படாததாய் உள்ள இக்கால கட்டத்தில் வைரமுத்து போன்றோர் ஆங்காங்கே குரல் கொடுக்க வேண்டியிருப்பது இக்காலத்தின் கட்டாயம் எனலாம். அந்தக் குரலில் சொல்லப்பட்ட கருத்துக்களில் சில பெண்ணியக் கூறுகள் மட்டுமே இக்கட்டுரையில் கூறப்பட்டுள்ளது.

## குறிப்புகள்:

1. முனைவர். இரா.பிரேமா, பெண்ணியம், ப.11.
2. மேலது, ப.14.
3. மேலது, ப.15.
4. வைரமுத்து கவிதைகள் - வைரமுத்து, கருப்புநிலா, ப.54.
5. மேலது, ப.55.
6. மேலது, அது ஒரு கல்வெட்டு, ப.164.
7. மேலது, ராத்திரி விழிக்கட்டும், ப.182.
8. மேலது, ராமர்களுக்கு இன்று ரத்தமில்லை, ப.227.
9. மேலது, அவசரத்தாலாட்டு, பக். 378-379.
10. மேலது, தண்ணீர்ப்பிச்சை, ப.352.

# வரலாற்று நாவல்களில் பெண்கள்

*திருமதி. அ. தத்தை பழனி* விரிவுரையாளர், தமிழியற்புலம்,
புதுவைப் பலக்கலைக் கழகம், புதுச்சேரி -14.

எந்த ஒரு படைப்பும் சமூகத்தை அடிப்படையாக வைத்து உருவாக்கப்பட வேண்டும். அனைத்து வகை நாவல்களுக்கும் இது பொருந்தும். வரலாற்று நாவல்கள் குறிப்பிட்ட காலச் சமுதாயத்தை வெளிப்படுத்துவனவாகவே படைக்கப்படும். புதுச்சேரியைப் பிரெஞ்சியர்கள் ஆண்ட காலத்தை அடிப்படையாக வைத்துப் பிரபஞ்சன் "வானம் வசப்படும்" என்ற நாவலைப் படைத்துள்ளார்.இந்தியச் சமூக அமைப்பில், ஐரோப்பியர்களின் வருகைக்குப் பிறகுதான் பெண்களின் நிலை பல முன்னேற்றங்களைக் கண்டது. இதேபோன்று, பிரெஞ்சு ஆட்சிக்குட்பட்ட பிறகுதான் புதுச்சேரி பல மாறுபாடுகளைச் சந்தித்தது.

"வானம் வசப்படும்" நாவலின் மூலம் 18 ஆம் நூற்றாண்டில் பெண்களுக்கானச் சமூக மதிப்பை ஓரளவுக்குக் கணிக்க இயலும். திருமணம் ஆகும் வரை பெற்றோர்களுக்கும், மணம் முடித்த பின் கணவனுக்கும், பின்னர் பிள்ளைகளுக்கும் பணிந்தவளாகவே பெண் வாழ்ந்து வந்துள்ளாள்.

வானம் வசப்படும் நாவலில் பல வகைப்பட்ட பெண்களைக் காண முடிகின்றது.

**பெண்கள்**

தமிழ்ப் பெண்கள் ஐரோப்பியப் பெண்கள்

குடும்பப்பெண் தாசிப்பெண் 1. மதாம் தூய்ப்ளெக்ஸ் 2. மதாமின் மகள்

கணவனை உடையோர், 1. பானுகிரஹீ

கணவனையிழந்தோர், 2. பொன்னி.

தமிழ்ப் பெண்கள், ஐரோப்பியப் பெண்கள் என்று பெரிய மாற்றம் இல்லையென்றாலும், அவர்களையும் விடப் பல படிநிலைகள் கீழேதான் தமிழ்ப் பெண்கள் நடத்தப்பட்டுள்ளனர்.

**குடும்பப் பெண்கள் :**

குடும்பப் பணியில் மட்டும் ஈடுபட்டிருந்த பெண்கள் இங்கு குடும்பப் பெண்கள் என்ற விளக்கத்தினைப் பெறுகின்றனர். நாவலில் கணவனையுடைய குடும்பப் பெண்ணாக ஆனந்தரங்கரின் மனைவியும், கணவனையிழந்த பெண்ணாக முதலியாரின் மனைவியும் காட்டப்படுகின்றனர். பெண்களுக்குக் குடும்பத் தலைவி என்ற அந்தஸ்து இருந்த போதிலும், ஆண்களே தலைமைப் பங்காற்றியுள்ளனர். கணவன், மனைவியிடயே பேசுவதற்குக் கூட மனைவி அனுமதி பெற வேண்டும் என்ற சூழல் இருந்துள்ளது.

"இவ்விடத்தி ஒன்று சொல்லனும்"....
"பேசலாமா".....
போன்ற வசனங்கள் அன்றைய பெண்களின்நிலையைத் தெளிவாக விளக்குகின்றன.

கிறித்துவராக மாறிய இந்துக்கள், தமிழ்ப் பண்பாட்டைப் புறக்கணிக்கவில்லை. கணவனை இழந்த கிறித்துவப் பெண்கள் மிக அடிமட்ட நிலமைக்குத் தள்ளப்பட்டுள்ளனர். முதலியாரின் மனைவிக்கு முதலியார் இறந்த பிறகு அவரது சொத்தில் மிகக் குறைந்த அளவு பணமே தரப்பட்டது. வாழ வீடு இன்றி, கிடங்கில் இடமளிக்கப்பட்டு அல்லல்பட்டுள்ளார்.

"பெண் வலிமையற்ற மனம் உடையவள். கணவனின் நிழலாகவே வாழ்பவள். கணவனும், மனைவியும் இணைந்த நிலையில்தான் மனைவி வாழ இயலும். ஒரு குறிப்பிட்ட வயதிற்குள் பெண்ணை மணம் முடித்து வைக்காவிட்டால், அப்பெண்ணின் பெற்றோர் மனவளர்ச்சியற்றோர் (Amajures) என்று இகழப்பட்டனர்.

பெண்களின் தவறான செய்கையினால் காரியங்கள் கெட்டுப்போகிறது என்று பல இழி சொற்களால் ஆனந்தரங்கரே பெண்களைக் குறிப்பிடுகின்றார். முக்கியப் பணியின் போது தடை ஏற்படுமேயானால் இகழ்வதில் தவறில்லை. ஆனால், எல்லாப் பெண்களையும், எல்லா இடங்களிலுமே இழிவாகப் பேசுவது ஏற்பதற்கில்லை.

செல்வம் அதிகம் படைத்த பெண்களும் கூட வாழ்க்கை வசதிகளைப் பெருக்கிக் கொண்டனரே தவிர பெண்களுக்கான உரிமைகளைப் பேசவில்லை. அலங்காரம் செய்துகொள்வது கூட அனுமதிக்கப்படவில்லை.

ஒழுக்கம், பண்பாடு இவற்றில் வழுவாது பெண்கள் எவ்வகை இன்னல்கள் வந்தாலும் இவற்றைக் கடைப் பிடித்தல் வேண்டும் என்ற கட்டுப்பாடுடைய இறுகிய சமூக அமைப்பாக 18 ஆம் நூற்றாண்டுஇருந்திருக்கின்றது.

## தாசிப் பெண்கள் :

சமுதாயத்தில் பெண்ணைப் போகப் பொருளாகக் கொண்டிருத்தல் தொன்றுதொட்டு வந்துள்ளது. மகளிர் பொதுவாக அடிமைகளாக நடத்தப்பட, தாசிகள்இன்னும் கேவலமாக நடத்தப்பட்டனர். "அடிமைத்தனம்" என்று வரும்போது கடைசிப் படிக்கட்டில் இருப்பவர்கள் தாசிகள். இயல்பாக, யார் வேண்டுமானாலும் அதிகாரம் செய்யலாம், ஒடுக்கப்படலாம், துன்பப்படுத்தலாம் என்ற நிலை தாசிகளுக்கு இருந்தது. "தாசிகள் ஏழு வகையாகப் பாகுபடுத்தி இலக்கியங்களில் கூறப்பட்டுளதாக நாவலாசிரியர் குறிப்பிடுகின்றார். பணமாகவோ, பொருளாகவோ, "கூலி" பெற்றுக்கொண்டு உடலுறவில் ஈடுபடுவது பரத்தமை என கூறலாம்.

இசையிலும், நாடகத்திலும் வல்லுநரான பெண்கள் பலர் கோயில் பணிகளில் ஈடுபட்டிருந்தனர். பலர் கோயில் பணிகளில் ஈடுபட்டிருந்தனர். இவர்கள் "தேவரடியார்" என்று அழைக்கப்பட்னர். இவர்கள் கோயில்களுக்கென்றே வழங்கப்பட்டனர். கோயிலில் திருவிளக்கிடுதலும், மலர் தொடுத்தலும், திருமெழுக்கிடுதலும் இவர்கள் மேற்கொண்டிருந்த திருத்ததொண்டுகளில் சில. இவர்களுக்குத் தனி மரியாதை இருந்தது. கோயிலின் அருகிலேயே இவர்களுக்குத் தனி வீதியே அமைக்கப்பட்டிருந்தது.ஏறக்குறைய எல்லாக் கோயில்களிலும் சோழர்காலம் முதல் சமூகத்தில் மதிப்பு வாய்ந்தவர்களாக இருந்துள்ளனர். ஆனால், 18 ஆம் நூற்றாண்டைப் பிரதிபலிக்கும் வா.வ நாவலில் மேற்கூறிய, "பரத்தை, தேவரடியார்" ஆகிய இரண்டு நிலையும் கலந்த "தாசி" என்ற சொல்லாட்சியைக் காண முடிகின்றது. இவர்களைத் "தேவடியாள்" என்றும் அழைத்துள்ளனர்.

நாவலில் இடம்பெறும்மிக முக்கியமான தாசி "பானுகிரஹி". தனிச்சிறப்பு வாய்ந்த பாத்திரம் இவள். ஆசிரியர் இவளை, "அன்று வாழ்ந்த தாசிப் பெண்கள், பலரது குணங்கள், பண்புகள், வாழ்க்கை முறை, இவற்றை ஒன்று திரட்டி ஒரே பாத்திரமாகப் படைத்துள்ளதாகக் குறிப்பிடுகின்றார்.

தாசிகள் ஆடல், பாடல், பேச்சு போன்றவற்றில் மிகத் திறமை வாய்ந்தவர்களாகக் காட்டப்பட்டுள்ளனர். இவர்களது ஆட்டம் இல்லாத விழாவே இல்லை எனலாம்.

1. கவர்னரின் வரவேற்பு விழா
2. சீர்கொண்டு செல்லும் நிகழ்ச்சி
3. நவாபுப் பட்டச் சிறப்பு விழா
4. போர் வெற்றி விழா
5. பிள்ளை, தன் மகனைக் காணச் செல்லும் நிகழ்ச்சி
6. கோயில் விழாக்கள்
7. நாடகம்

எனப் பலவகைப்பட்ட விழாக்களிலும் பங்கு பெறும் ஒரே குழு இந்தத் தாசிகள் குழுவே ஆகும். தாசிகள் நல்ல குணம் படைத்தவர்களாக இந்நாவலில் காட்டப்பட்டுள்ளனர்.

## ஐரோப்பியப் பெண்கள் :

ஐரோப்பியப் பெண்கள் என இரண்டு பெண்களை மட்டும்தான் நாவலில் காண முடிகின்றது. இவர்கள் தமிழ்ப் பெண்களைப் போலில்லாமல் தைரியசாலிகளாக இருந்துள்ளனர்.

1. மதாம் தூய்ப்ளெக்ஸ்,
2. மதாம் தூய்ப்ளெக்ஸின் மகள்

என்ற இரு பெண்களை மட்டுமே நாவல் சுட்டியுள்ளது.

பெண்களை அடிமைப் பொருளாகப் பார்ப்பதில், ஐரோப்பியப் பெண்கள், இந்தியப் பெண்கள் என்ற வேறுபாடு இல்லை. ஒரு சிலவற்றுள் இந்தியப் பெண்களை விட ஐரோப்பியப் பெண்கள் சுதந்திரமாக இருந்துள்ளனர். இருந்தும், அங்கும் பெண்களின் அரசியல் தலையீடுகளை யாரும் விரும்பியதாகத் தெரியவில்லை.

இலக்கியங்களிலிருந்து அவ்விலக்கியம் படைக்கப்பட்டக் காலச் சமூகத்தில் பெண்களின் நிலையை வருவிக்கத்தான் இயலும். ஆனால் வரலாற்று நாவல் என்பது முற்றிலும் வேறானது. உண்மை வரலாற்றை அடிப்படையாக வைத்துத்தான் வரலாற்று நாவல்கள் படைக்கப்படுகின்றன. எனவே, குறிப்பிட்ட வரலாற்றுக் காலச் சமூகத்தைக் கண்டறியலாம். அவ்வகையில், "வானம் வசப்படும்" நாவலின் மூலம் புதுச்சேரியைப் பிரெஞ்சுக்காரர்கள்ஆண்ட காலச் சமூகத்தினை அறியலாம். மாற்றம் என்பதுதான் மாறாத ஒன்று என்பர். இம்மாற்றம் பண்பாட்டுக் கலப்பிலும் நிகழ்ந்துள்ளது. பெண்களிடத்திலான பண்பாட்டுக் கலப்பு எல்லா நிலைகளிலும் ஏற்றுக்கொள்ளப்படுவதில்லை. ப்ரெஞ்சுக்காரர்களின் ஆட்சிக்காலமும் இதையே தான் எதிரொலிக்கின்றது.

# புதுக்கவிதைகளில் பெண்களின் உளவியல் சிக்கல்கள்

*மா. தனலட்சுமி,* எம்.ஏ., எம்.ஃபில்., முனைவர் பட்ட ஆய்வாளர்,
அய்ய நாடார் ஜானகி அம்மாள் கல்லூரி (தன்னாட்சி),சிவகாசி.

உளவியல் என்பது மனிதனின் மனநிலையை வெளிப்படுத்துவதாகும். பெண் கவிஞர்களின் புதுக்கவிதைகள் வழி பெண்களின் சிக்கல்களை உளவியல் நோக்கில் ஆராய்வதே இக்கட்டுரை விளங்குகின்றது.

## உளவியல் பற்றி அறிஞர்கள் கருத்து

"மனிதர்களைப் பற்றிய உண்மையை விளக்கும் அறிவியல் துறைகளுள் ஒன்றே உளவியல்" என்று ஜான்டியூபி என்ற அறிஞர் குறிப்பிடுகின்றார்.

"சமூக வாழ்வில் மனித உறவுகளைப் பற்றி அறிந்து கொள்வதற்கு அறிவியல் அறிவு துணையாக அமைகிறது" என்று உட்வொர்த் குறிப்பிடுகிறார்

"மனிதனின் ஒவ்வொரு நடத்தையும் ஏதாவதொரு குறிக்கோளோடு அமைகிறது என்றும், மனிதனின் எல்லாவித நடத்தைகளையும் இயல்புகளே ஆக்குகின்றன" என்று வில்லியம் மக்டுகல் விளக்கம் தருகின்றார்.

## உளவியல்

உளவியலின் தந்தை என்று அழைக்கப்படுபவர் "சிகமண்ட் ஃ பிராய்ட்" ஆவார். இவர் மனிதனின் நனவிலி மனத்தின் உண்மைகளைப் பற்றி எடுத்து கூறிய பெருமை இவரைச்சாரும். உளவியலின் கொள்கைப்படி மனம் இருவகைப்படும். அவை 1. நனவு மனம், 2. நனவிலி மனம் ஆகும்.

ஃபிராய்டு மனத்தின் செய்முறைகளை மூன்று பெரும் பிரிவுகளாகப் பிரித்துள்ளார்.

1. ஈட் என்னும் தூண்டல்
2. ஈகோ என்னும் தன்முனைப்பு
3. சூப்பர் ஈகோ என்னும் விஞ்சிய தன்முனைப்பு என்பனவாகும்.

## பெண்ணின் மனக்குமுறல்

இன்றைய சமுதாயத்தில் பெண்ணுரிமைப் பற்றி வாயளவில் பேசிக் கொள்கிறோமே தவிர நடைமுறையில் காணப்படுவதில்லை. ஒரு பெண் எவ்வளவு தான் படித்து பட்டம் பெற்றாலும் திருமணத்திற்குப் பின் அவளுடைய சுதந்திரம் பறிக்கப்படுகின்றது. தன்னை வளர்த்து ஆளாக்கிய பெற்றோரைக் காக்க உரிமை நிலை மறுக்கப்படுவதைக்கண்டு அப்பெண் மனம் வருந்திக் கூறும் குமுறல்களை கவிஞர் தம் கவிதை வழி சுட்டியுள்ளார்.

"கொத்தடிமையாய்க் கட்டியவனுக்குத்
தொண்டு செய்ய வேண்டுமாம்.

.............................................

பட்டம் படிக்க வைத்த தந்தை, தாய்க்கு
"டாட்டா" காட்ட வேண்டுமாம்
அட பெற்றோரைக் காக்கப் பெண்ணுக்குரிமையில்லா?"

என்ற கவிதை வரிகள் பெண்ணுரிமையின் அவல நிலையைக் கூறுவதாக அமைந்துள்ளது.

## இளம் விதவைப் பெண்ணின் நிலை

இன்றைய சமுதாயத்தில் பெண்கள் இளம் வயதிலேயே கணவனை இழந்து துன்புற்று வாழும் அவல நிலையை பெண் கவிஞர்கள் தம் கவிதைப் படைப்புகளின் வழி வலியுறுத்தியுள்ளனர். விதவைப் பெண்கள் மறுமணம் செய்து கொள்ள சமுதாயம் தடை விதிப்பதுடன், அவர்களை ஒதுக்கப்பட்டவர்களாகவே கருதுகின்றனர்.

"மல்லிகா" எழுதிய "கடல்ஓசை" எனும் கவிதைத் தொகுப்பில் பெண்ணின் விதவை நிலையை உணர்த்துவதாக் கவிதை வரிகள் அமைந்துள்ளன.

"தந்தையின் குடிப்பழக்கம்
தாரை வார்க்கச் செய்தது
பருவ மங்கையான என்னை
பாழும் கிழம் கட்டியது
எட்டுக் குழந்தைக்கு தாய்
எனக்கோ வயது பதினெட்டு
கனவுகளுடன் இருந்த எனக்கு
கண்ணீர் தான் மிஞ்சியது
இருபது வயதில் பாட்டி
இருபத்தேழு வயதில் விதவை" (ச. மல்லிகா, கடல்ஓசை, ப. 156)

"குடி குடியைக் கெடுக்கும்" என்ற பழமொழிக்கேற்ப தந்தை குடிப்பழக்கத்திற்கு ஆட்கொண்டதனால் தன் இளம் வயது பெண்ணை வயது முதிர்ந்த கிழவனுக்குத் திருமணம் செய்து கொடுக்கும் நிலை ஏற்பட்டது. இதனால் இப்பெண்ணின் மனதிற்குள் இருந்த கனவு நசுக்கப்பட்டது. பதினெட்டுடு வயதில் எட்டுக் குழந்தைக்குத் தாயாவதுடன் ; இருபது வயதில் பாட்டியாவதுடன் இருபத்தேழு வயதில் விதவை நிலை அடைந்த போது கண்ணீர் தான் மிஞ்சியது என்ற விதவையான பெண்ணின் மனநிலையை கவிஞர் படம் பிடித்துக் காட்டுகிறார்.

## மாமியாரின் கொடுமை

குடும்பத்தில் மாமியாரே தலைமையிடம் வகிக்கின்றாள். "மாமியார் மெச்சிய மருமகள் இல்லை. மருமகள் மெச்சிய மாமியாரும் இல்லை" என்ற பழமொழி மாமியார் மருமகளுக்கிடையேயுள்ள உறவு நிலையின் மன இறுக்கத்தை வெளிப்படுத்துகிறது. புதுக்கவிதையில் மாமியார் கொடுமைக்காரியாக சுட்டப்படுகிறாள்.

"அவளும் ஒரு நாள்
மருமகளாய் இருந்தவள்
என்பதை மறந்து
மருமகளைப் படுத்தும் பாடு
என்ன ? என்ன ?
எண்ணில் அடங்கா !
..................................
..................................
மாரியார் பற்ற
வைக்கும் போது
வெடிக்காத ஸ்டவ்
மருமகள் பற்ற
வைக்கும் போது
மட்டும் வெடிக்கின்றது" (ச. மல்லிகா, கடல்ஓசை, ப. 140)

மாமியார் வீட்டிற்கு வந்த மருமகளை தன் மகளாக எண்ணாமல் பணத்திற்காக அவளை கொடுமைப்படுத்துகின்றாள். பின் அவளுடைய மரணத்திற்கு இவளே காரணமாக விளங்குகின்றாள். பெண்ணே பெண்ணுக்கு எதிரியாக இருக்கின்ற இழிவான நிலையை கவிஞர் சுட்டிக்காட்டியுள்ளார்.

## ஒப்பாரி பாடலில் பெண்களின் மனநிலை

ஒரு பெண் தன் கணவன் போரில் இறந்து விடுகின்றான். அவரின் குணநலன்களைச் சுட்டி அவலச் சுவை மீதுறப் அப்பெண் பாடப்படும் பாடல்கள் ஒப்பாரி பாடல்கள் எனப்படும். இறப்பு என்பது இயல்பானது தான் என்பதை அறிவு ஏற்றுக்கொண்டாலும், மனம் ஏற்றுக் கொள்வதில்லை. இறப்பினை எண்ணி அவலம் ஏற்படுகின்றது. அவ் உணர்வின் வெளிப்பாடாக ஒப்பாரி பாடல்கள் எழுகின்றன. நாட்டுப்புறச் சாயலைப் போன்று புதுக்கவிதையிலும் ஒப்பாரி பாடலின் வடிவத்தைக் காண இயலுகின்றது.

"பட்டாளம் போனா

பட்டாளத்துக்காரன் என்று
பதவிசாய் வாழலாம் ........
பத்து வருசம் பட்டாளத்தில் இருந்தா
மீதிக் காலம் பட்டாளத்துப் "பென்ஷன்ல"
"கொத்தா" வாழலாம்னு
"டிப்டாப்பா" போனியே மாமா!
இன்னிக்கு பட்டாளத்துப்போன
பத்து மாசத்துல,
கட்டி வச்ச பொட்டலமா வந்து
எம்பொட்ட வலைச்சுட்டியே"
(விஜயலட்சுமி, எண்ணங்களே கவிதைகளாய், ப. 19)
என்ற கவிதை வரிகள் மனைவி புலம்புவதாக அமைகிறது.

## தாயின் கனவு நிலை

ஒரு தாய் தன் மகன் பிற்காலத்தில் படித்து பதவி உயர்வு பெற்று பிறந்த ஊராகிய குப்பத்திற்கு வரவேண்டும் என்றும், அவ்வூரில் மாடாய் உழைத்து களைத்துப் போன பெண்களுக்கு உதவி செய்ய வேண்டும். அதனால் நான் உன்னைக் கண்டு பெருமைப்பட வேண்டும் என்று தாய் கனவு காண்பதாக காட்சி தருகின்றன.

"கனவுகள் நனவிலி உள்ளத்தினின்றும் எழுகின்றன நனவிலி உள்ளத்தில் அடைபட்டிருக்கும் எண்ணங்களாகிய எதிர்பார்ப்பு நிலையைக் குறிப்பதாக அமைகிறது.

"அஞ்சு வயசு ஆனா
பள்ளிக்கூடம் போகனும் நீ
காலேசுல படிச்சுப் புட்டு
கலெக்டரு ஆகனும் நீ
.......................................
.......................................
பெரிய மனுஷனாகி குப்பத்துக்கு வரனும் நீ
.......................................
அடிபட்டு தொல்லப்படும் பொம்பள சனத்துக்கு
ஒழெச்சு களச்சுப் போன பொம்பள சனத்துக்கு
எதனாச்சும் வழி நீயும் நிச்சயமா செய்யோனும்"
(வத்ஸலா, சுயம், ப. 57)
என்ற கவிதை வரிகள் தாயின் கனவு நிலையை உணர்த்துவதாக அமைகின்றது.

## முடிவுரை

இக்கட்டுரையின் வாயிலாகப் பெண் கவிஞர்களின் "புதுக்கவிதைகளில் பெண்களின் உளவியல்" பிரச்சனைகளான, பெண்ணின் மனக் குமுறல், இளம் பெண் அடைந்துள்ள விதவை நிலை பற்றி கூறப்பட்டுள்ளது. போரில் தன் கணவன் இறந்த செய்தியைக் கேட்ட அப்பெண் ஒப்பாரி பாடல் மூலம் தன் உணர்வை வெளிக்காட்டுவது பற்றி அறிய முடிகின்றது. தாயின் கனவு நிலைப் போன்றவை புதைந்துள்ளமை புலப்படுத்தப்பட்டுள்ளது.

# "நாமக்கல்லார் பார்வையில் பெண்மை"

*ந. தமிழ்த்தெய்வம்*, தமிழ்த்துறை, எம்.வி.எம்.
அரசு மகளிர் கலைக்கல்லூரி, திண்டுக்கல்.

கவிஞராக - சிந்தனையாளராக - ஓவியராக திகழ்ந்த நாமக்கல்லார் பெண்மையின் சிறப்பினைப் புதுமை நோக்கில் படைத்துள்ளார். காவியமாக்கியுள்ளார் பாரதி. பாரதிதாசன் பார்வையிலிருந்து சிறிது விலகி, திரு.வி.க.வின் பாதையில் சற்று ஒத்துச் செல்கிறார். அவர்வழி சில சிந்தனைச் சிதறல்களைப் பாடுவோம்.

## நாடே - தாய்மை :

"தமிழ்த்தேன் மலர்" என்ற பகுதியில் "பத்தினி சாபம் பலித்து விடும்" என்பதைப் பாரில் தமிழ்மொழி மூலம் ஒலிக்க வேண்டும் என்று "சிலப்பதிகாரமதைச் செய்தவன் துறவுடை ஓராசான், என மொழி வளர்ச்சிக்கு நூல் எழுச்சிக்குப் பெண்ணின் சாபம் - பத்தினிப் பெண்ணின் சாபமே ஒரு காப்பிய இலக்காயிற்று என்பார். தமிழகத்தைத் தாய்மையாக்கி உருவசித்துப் பார்ப்பது எல்லாக் கவிஞருக்கும் உரிய மரபுதான். சொல்லும் மொழி நடையில் வேறுபாடு உண்டு. பாரதிதாசன் பாடல்களில் எழுச்சி உண்டு. கவிஞர் பாடல்களிலோ தாகமும் உண்டு. தவிப்பும் உண்டு.

"இந்தியத் தாய்மனம் நொந்து கிடக்கையில்
இளமுறை பேசுகின்றார்; இது இழிவே" எனச் சாடுகிறார்.
இந்திய மக்களுக்கே மூத்தவள் என்ற கருத்தில்,
"அந்தப் பெரியவளின் அடிமை விலங்கறுத்துன்
அன்பை நிலைநிறுத்து. தமிழா! அகிலமெல்லாம் நிலை நிறுத்து" என ஓலமிடுகின்றார்.

தமிழ்நாட்டில் மட்டுமல்ல. வட நாட்டில் நடந்த நவகாளி வன்முறைகளுக்குக் குரல் கொடுத்து பாடும்போது

"பிறிதொரு மதமெனப் பெண்மையைக் கெடுப்பதும்
பிள்ளையை மடிப்பதும் பேய் செயுமோ? செய்யாது.
இது வெறிமிகும் மக்கள் செயல். "அடி இதுவோ?"

என சாடி நாட்டை - பெண்மையாக்கி பெண்மையினை இழிவு படுத்துதல் கேடு விளையும் - நாட்டிற்கே கேடு விளையும் செயல் என்கின்றார்.

## தமிழே - பெண்மை :

தமிழ்ப் பணியை - தெய்வப்பணியாக்கி தமிழைப் பெண்மையாக உருவகிக்கின்றார்.

"இன்ப கலைகள் யாவையுமே
ஈன்று வளர்த்திடும் தேவியவள்"

"சமரசம் உரைப்பவள் தமிழ்த் தாயே!
சக்தி கொடுப்பவள் தமிழ்த்தாயே!
தன்மை அளித்திடும் இலக்கியத்தாள்!
தரணி புகழ்ந்திடும் இலக்கணத்தாள்!

என்றும்,

"மக்களுக்கு ஒரு நியாத்தாளென
அறிஞர்கள் தலைவணங்கும் தருமம்
வளர்ப்பவள் தமிழணங்கே! என்றும்

அற்பத்தனங்களை அவள் வெறுத்து, நன்னயம் மிகுத்தவள் - தமிழ் மாதா நகரத்தின் தமிழ் தூது என்பார்.

"பற்பல மொழிகளைப் பகுத்தறிந்து
பாருள்ள மொழிகளைப் - அறிவினைத் தொகுத்துரைப்பாள்!

தன்னலம் துறந்திடும் தகவுடையாள், தவநெறி வாழ்க்கையில் புகழுடையாள். அத்தகு மொழியன்னையை "அனைத்துப் பண்புகளின் உறைவிடமாக்கி பெண்மைக்குச் சிறப்புச் செய்கிறார்.

பிறமொழி பேணித் திரிகின்ற மூடரைப் பார்த்து என் தாய் மொழியை என்னுடைய தமிழ்ப் பெண்ணை உன் தாய்மொழியை உம்முடைய தமிழைச் சிறு வயதில் இருந்து தொட்டிலிலிட்டு, கட்டிலில் வைத்துத் தோளிலும் மார்பிலும் தூக்கித் திரிந்து,

பாலூட்டி வளர்த்த பாவையாம் தமிழை
தாலாட்டி வளர்த்த தாயாம் தமிழை
தேவியாம் தமிழை தெய்வ நற்றமிழை
ஆசையாய் தமிழை

என பல்வேறு நிலைகளில் வளர்த்து - பெண்மையினை ஒவ்வொரு வளர்ச்சிப் படிநிலைகளாக்கிக் காட்டுகின்றார். எனவே வேசையாம் மாற்று மொழியை விரும்பும் வெறியர்கள் ஆகாதீர்கள் என விண்டுரைக்கின்றார்.

## இந்தியத்தாய்ப் புலம்பல் பெண்மை உணர்வு :

இந்தியத் தாய்ப் புலம்பலில் இந்திய நாட்டைத் தாயாக்கி - தாயின் மன உணர்வினைக் காட்டுகின்றார். அடிமைத்தளையில் கட்டுண்டு விட்டேன் கைவிரித்துப் புலம்புகின்றேன். அளவிறந்த மக்கள் பெற்றும் ஞாலத்தில் என்னைப் போல் நலிந்தவள் இல்லை. என்போல் ஒருத்தி உண்டா? என்று வினவித் தனக்கு ஏற்பட்ட இழிவைக் கூறுகிறார்.

மெத்தப் பகட்டுடையான் மேற்கத்திப் பெண்ணொருத்தி "அத்தை" யெனக் கூவியென்றன் ஆசார விதியிலே தத்தித் தடுமாறித் தலைவணங்கி நின்றிருந்தாள். அவளிடத்தே புத்தம் புதுப் பெண்ணே ! வந்த குறை என்ன? சொல்லு? என்று கூறி சித்தம் கலங்காதே ! சின்னவளே ! என்று சித்தம் கலங்கி விட்டேன். அவளோ வெள்ளைக் துகிலுடுத்தி கள்ளக்குறி சிறிதுமில்லா முகத்துடன், பிள்ளைமொழிபோல சொற்பேசி தலைகுனிந்தாள். எங்கிருந்து இங்கு வந்தாய்? என்ன குறை பெண்மணியே! சஞ்சலத்தால் வந்தாயோ? என்னுடைய மக்களுடன் பங்கிருந்து கொள்வாய் நீ ! எனத் தாயின் கருணையால் கூறிவிட்டேன்.

இங்கிதமாய் நான் செல்ல, அவளோ, சிந்தை மிக நொந்தவளாய் "உன்னுடன் பிறந்தேன். ஊரை விட்டு ஆரியருடன் முன்னம் உனைபிரிந்து மேல்நாடு மேவினவன். அன்னவன் புத்திரி நான். அத்தை நீ சித்தம் என்னருள்,

நெஞ்சம் கலங்காதே நீ எதற்கும் அஞ்சாதே

தஞ்சம் உனக்கிருப்பேன் - வஞ்சியே வந்துபசியாறு என்றேன். சற்று நிமிர்ந்த அவள் சுற்றி அயல் பார்த்து, குளிர்ந்த மனம் உள்ளவள் போல் முன்கட்டில் வந்து, நின்று, மேலே நடந்து உள்ளே வர தயங்கியவள் போல் நின்றாள். நானோ, மகளே நீ தாராளமாய் உள்ளே வரலாம் என்றேன். வா என்று சொன்னவுடன் அயலிருந்த என் குழந்தைமார் அவளருகே கூடிவிட்டனர். வந்தவளோ என்னிடத்தே மீன் உணவும், ஊன் உணவும் மெத்த உண்டு எம் நாட்டில் என்றுரைத்து தேன் கனி காய் கொஞ்சம் எனக் கூறி முகம் சுளித்தாள்.

தாய் மனமாம் என் மனத்தில் இரக்கம் அதிகமுற, சோகம் மாற்றியவளைக் கொல்லைச் சிறு வீட்டில் சென்றிருத்தி, ஆயாசம் தீரப் பேணிக் காத்திருந்தேன். என்னுடைய மக்கள், தாதியர், பணியாட்கள் எல்லோரும் பக்தியுடன் நீராட்டி, ஆடைதந்து, ஒய்யாரம் செய்து பேணினர். அதற்கவளும் அஞ்சி அடக்கமுடன் அத்தையென்ற பக்தியுடன் குஞ்சு குழந்தையுடன் கொஞ்சி விளையாடி இனிதேஇருந்து வந்தாள்.இருந்து வந்த நாள்தனில் ஒரு நாள் என்னருகே தான்வந்து "எந்தனுடை ஊரின் மேல் ஏக்கமின்று வந்தது. உங்களுடைய உத்தரவில் ஓலைவிட ஆசை" என்றாள் என்ன தடை இதற்கு? எழுதுவாய் என்றேன். கன்னியவள் நான் சொன்னவுடன் என்றனக்குத் தோன்றா மொழிகளிலே எழுதிவிட்டாள் காகிதத்தில். விட்ட மறுகணமே அண்ணன்மார், தம்பிமார், தன்னினத்தார் என்று சொல்லி அநேகர் வந்துவிட்டார். நான் ஏதும் சந்தேகமின்றி இருந்துவிட்டேன். அன்னவர்கள் மின்னுகின்ற கண்ணாடி, மினுக்குகின்ற பொம்மைகளும் கொண்டுவந்து என்னுடைய மக்களுக்கே எடுத்துக் கொடுத்தவராய்க் கன்னி சிரிக்க - என் மக்கள் களித்து விட்டார். நாளுக்கு நாள் என் வீடு நலிந்து பாலுக்கும் காவலொடு பூனைக்கும் தோழன், என்ற சொல்லின் படி என்னைக் குலைத்து விட்டாய் என ஏங்கும் ஒரு தாய் மனத்தின் ஆதங்கப் பெருமூச்சினை - வெளிப்பாட்டினைக் கொஞ்சம் கொஞ்சமாக ஒவ்வொரு மன உணர்வாக்கிக் காட்டுகின்றார். மேலும், கூறுவார்.

என்ன உரைத்தாளோ? ஏது மருந்திட்டாளோ? நான் பெற்ற மக்கள் என்னை ஏறெடுத்துப் பார்ப்பது இல்லை "தூ" என்றும் "போ" என்றும் கன்னியவள் மோகத்தால் காலால் எனை உதைத்தாள். கொண்ட சமயம் விட்டு குலதெய்வ பூசனை பக்திதனைவிட்டு, கண்டபடி களித்து அவள் மயக்கில் - பெற்ற எனை இகழ்ந்து தவங்கிடந்த மக்களெல்லாம் மாறிவிட்டார். அடிமையான இந்தியத் தாயின் - தாய்மன உளைச்சலை - தாயின்இரக்கம் தயை, ஏக்கம் அன்பு, கனிவு, ஏமாற்றம், ஆதங்கம் என்ற அனைத்தையும் பெண்மையின் பெண் மனமாக்கிக் காட்டுகின்றார்.

## தாய்மைக்கு மரியாதை

"கர்ப்பிணிக்குப் பூமுடித்தல்" என்ற பகுதியில் சடங்கு கலாச்சாரமாக இருந்தாலும் பெண்ணிற்கு

அறிவுரைகள் கூறும் பகுதியாக அது அமைகின்றது. நாதன் உன்தனைக் காக்கவே, நல்ல வெள்ளை உள்ளத்துடன் வாழவேண்டி வாழ்த்திப் பூ முடித்தனர்" எனும் பகுதியில் பெண்மையினை வாழ்த்துவதோடு இச்சடங்குதான் தாய்மை பெண்ணிற்குச் செய்யும் முதல் மரியாதை - முதல் காப்பீடு என்பதை உணர்த்துவதாக அமைகிறது. பெண்மையினைப் போற்றுதல் என இப்பகுதியினை உரைக்கலாம்.

### பெண்மனம் :

நம் நாட்டில் புண்ணியம், தானம், தருமம், விரதம், பூசனை இவற்றை ஆடவர் மறப்பினும் பெண்களே இன்னமும் பெரிதும் காப்பவர். அதற்குப் பிச்சை இரப்பவர்கள் - வேண்டுபவர்கள்" அம்மா, தாயே, ஆத்தா, ஆச்சி" என்று விளிப்பதே சாட்சி. இதுவே அன்பின் கருணையின் செயல். ஒரு பிடி அன்னமோ, உப்பிட்ட கஞ்சியோ நல்கி ஐயமிட்டு உண்பதே அருந்தமிழ்ப் பெண்மை. அதனால்தான் தமிழன் இல்லறம் தனிச்சிறப்பு உடையதாய்; வறுமையும், அடிமையும் வருத்திடும் நாளிலும் கொடுமைகள் குறைந்து குலவிடச் செய்கிறது என்று பெண் மனத்தை உயர்த்துகின்றார்.

### பெண்மை - கவிஞர் தம் விளக்கம் :

அன்பும், ஆர்வமும், அடக்கமும், சேர்ந்து; உண்மைத்தன்மையும், உறுதியும் மிகுந்து; தன்னலமறுப்பும் சகிப்புத் தன்மையும் இயல்பாய் அமைந்து; இன்ப வடிவமாய், தாய் நின்று, தரணியைத் தாங்கி தாரமாய் நின்று தளர்வைப் போக்கி, உடன் பிறப்பாகி உறுதுணை புரிந்து, மகளாய்ப் பிறந்து சேவையில் மகிழ்ந்து, அயலார் தமக்கும் அன்பே செய்து, நாணம் கெடாது நட்புக் கொண்டு, சிநேகமின்றி சிரித்துப் பேசி, காமமில்லாது கொஞ்சிக் களித்து, பெருமைமிக்க பெண்மையின் இயல்பாய் இருப்பதே பெண் என்கிறார்.

### பெண்மை இகழ்வார்தம்மைச் சாடுதல் :

இதனை அறியா ஆடவரோ அன்புப் பேச்சை ஆசையென்று அயர்த்து; சிரித்து விட்டதில் சிற்றின்பம் என்றெண்ணி, களிப்பைக் காமமாய்க் கற்பனை செய்தே அவமதிப்பு செய்வது அடிக்கடி உண்டு. இப்படிப் பலபேர் ஏசி நிற்பதால் பெண் மனம் என்பதைப் பிழைப்படபேசி "புதிர்" என்றும் சொல்வதுபுரியாத்தனமே. "வஞ்சனை" என்போர் வஞ்சம் உடையோர் என ஆடவர் நினைப்பினைச் சாடி இகழ்கின்றார் எங்கள் நாட்டுப் பெண்ணுக்கு என்றும் சிறப்புண்டு. ஏனென்றால்,

"சின்னக் குழந்தைக்குத் தாலிகட்டி - வெகு/சீக்கிரம் தாலி அறுத்தாலும் - வண்ணம்
கெடுத்தவன் வாழ்வைக் குலைத்திடும் வண்ட/வழக்கங்கள் நாங்கள் கண்டதில்லை" - என

பால்ய விவாகம், பால்ய விதவைத் தனங்கள் தமிழ் வழக்கில் இல்லை. வடநாட்டில் அன்று வழக்கிலிருந்த இவ்வழக்கங்களை வெறுக்கின்றார்.

பேயென்றும் மாயை என்றும்/பெண்களை இகழந்து பேசும்
பெருந்துறவடைந்த பேரும் குறையுடையாரே/என்றும் கூறி
தாயென்றும் துணைவியென்றும் தன்னுடை நோக்கம் காக்கும் சகதர்ம சக்தி பேணும் தீரர்கள்

வாழ்ந்த நாட்டில் பெண்மையினை இகழ்ந்து பேசல் புண்பாடல்ல என்கிறார்.

ஒழுக்கம் பற்றிக் கூறுகையில்
கூச்சமில்லை என்றால் - பெண்மை
குறைவு பட்டதன்றோ?
நீச்சமற்ற மீன்போல் - சமூகம்
நிலைக்குலைந்து போகும்
என்று பெண்மையினை இகழும் சமூகத்தை எதிர்க்கின்றார். சபிக்கின்றார்.
அடிமை என்ற சொல்லும்அவளைவிட்டு ஓடுமே
ஆணும் பெண்ணும் சமம் என்ற அறிவுவந்து
கூடுமே" எனச் சரிநிகர் சமானமான

வாழ்வுக்கு வித்திடுகின்றார்.

### பெண்மையின் மரபு மீறல் :

தாலாட்டுப் பகுதியில் - படகோட்டி - மனைவியின் தாலாட்டுப் பகுதியில் அறிவு சார்ந்த பெண்மையாக, வீரமிக்க பெண்மையாகப் பாடலை அமைத்துள்ளார். இதனைப் பெண்ணின் வாயால் அதுவும் அறியாமையில் மூழ்கி இருந்த பெண்மை வாயால் பாட வைக்கின்றார்.

நாளைக் கணக் கெண்ணி/நல்ல நல்ல சம்பளத்தில்
ஆளை மிரட்டுகின்ற அதிகாரமில்லை/கூழைக் குடித்துறங்கும்
குடித்தனந்தான் என்றாலும்/கோழைகள் அல்ல, அம்மா குறைச்சல் ஏதுமில்லை.

என்பார்.

"அதிகாரம் செய்து அநியாயம் செய்தறியோம்/துதிபாடிப் பொய்பேசி, சுகித்திருக்கும் சூதறியோம்
வாது வழக்கறியோம், வம்புதும்பு செய்தறியோம்;/வேலையின்றி கூலிகொள்ளும் வித்தைகளைக் கற்றறியோம்;/தேடிப் புதைத்து வயிறார உண்ணாமல் வாடி பசித்து
வந்தவை நிந்தை சொல்லி ஓடி ஒளிந்து கொள்ளும்

உலுத்தரல்ல நாங்கள் என்று செய்யத்தகுவன செய்யத் தகாதன இவை என ஓர்ந்து செயல்படும் வன்னை, மென்மையினை உணர்ந்து செயல்படும் நிலைகளைப் பெண்மையின் வாயால் பேச வைப்பது புது யுக்தியாகின்றது.

அடிமை நீங்கிய சுதந்திரத் தாய்/தன் மக்களைப் பார்த்து வாழ்த்தும் பகுதியில்
தரும முணர்ந்தனை - கரும மறிந்தனை/தாய் என நீ நினைததாய் - என்
அச்சம் அகற்றினை - ஆண்மை பெருக்கினை/ஆனந்தம பொங்குதடா!
தீயவை விட்டனை, தூயவை தொட்டனை/தெளிவு அடைந்தாய் மகனே" என்றும் கூறி

போயின போயின என்னுடைய மனக்குறையாவும் புத்தொளி பூண்டு விட்டேன் என மனநிறைவு கொள்ளும் பெண்மையின் எக்களிப்பைக் காட்டுகிறார்.

"அவள்" என்ற பகுதியில்/"மான் என்று அவளைச் சொன்னால்
மறுளுதல் அவருக்கில்லை/குயில் எனும் குரலாள் என்றால்
ஏழிசைக் குயிலுக்கில்லை/"சாத்திர வதனம் என்றால் சந்திரன்மறுநாள் தேய்வான்
"கூந்தலை மேகம் என்றால் மேகத்தில்/கருமை கொஞ்சம்
சுரமதைக் கமலம் என்றால்/மாலையில் கமலம் கூம்பும்"

என்று பலபல உவமை சொல்லி பெண்மையினைப் புகழ்வதை அவர் விரும்பவில்லை.

இயற்கையின் நலமும் நல்லோர்/இணைப்பினில் நேர்ந்த பண்பும்
மயக்கிலா அறிவும் - எவரும் கண்டு/விருப்புற வணங்கி நிற்கும் தன்மை வேண்டும்;
அதிர்ந்தொரு வார்த்தை பேசும் அகந்தை/அறியாதவளாய், பள்ளியில் பல்கலைக் கழகம்

தன்னில் முன்னிய மறையில் கற்று உயர்தரப்பட்டம் பெறும் பெண்மையினையே விரும்புவராக மரபினை மாற்றத் துடிக்கும் காவலராகக் காணப்படுகின்றார்.

இவ்வாறு புதுயுக வீரப்பெண்ணாக, அறப்பெண்ணாக மரபு மீறி நவயுகச் சிற்பியாகப் பெண்மை திகழ வேண்டும். மனம் சொல், செயல் அனைத்தும் ஒன்றாகத் திகழும் பெண்மையே சிந்தனைப் பெண்மை அறிவு சார் பெண்மை என்பது அவர்தம் உள்ளக் கிடக்கை.

# பெண்களின் கவிதைகள் காட்டும் புதிய தளங்கள்

முனைவர் *ப.தமிழரசி,* விரிவுரையாளர், *தமிழ்த்துறை,*
கற்பகம் கலை அறிவியல் கல்லூரி, ஈச்சநாரி, கோவை – 21.

**முன்னுரை**

கவிதை என்பது தன்னுடைய உள்ளத்து உணர்வுகளைக் கொட்டி வெளிப்படுத்தும ஓர் உன்னதக் கருவியாகும். அந்தக் கருவி பல்லாண்டுகளாக ஆண்களின் வெளியீட்டுக் கலனாகவே இருந்து வந்திருக்கிறது. ஆதிகாலம் தொட்டு இன்றுவரை பெண் பெரும்பாலும் பாடுபொருளாக மட்டுமே இருந்து வந்திருக்கிறாள். பாடுபவளாக இருந்த சிலரும் அந்தக்காலகட்ட வாழ்க்கையை மட்டுமே பாடிச் சென்றிருக்கின்றனர். 1970–களுக்குக் பின்னர் புதுக்கவிதை உலகில் ஏற்பட்ட பெரும் மாற்றங்களே பெண்களை இத்துறையில் அதிகம் ஈடுபட வைத்தது. பெண்களின் சுதந்திரம், எழுத்து எல்லைகள், வெளிப்பாடுகள், பாடுபொருள்கள் குறித்துத் தீர்மானிக்கப்பட அதற்கும் 20 ஆண்டுகள் தேவைப்பட்டன. 90–களில் வெளிவந்த கவிதைகள்தான் பெரும்பாலும் பெண்கவிஞர்க*ளின் புதிய* தளங்கள் குறித்து முன்வைத்தன அவை குறித்து இக்கட்டுரை சுருக்கமாக விவரிக்கிறது.

ஆணின் படைப்புத்தலங்களே பெண்ணிற்குமானதாக இத்தனை ஆண்டுகளாய் ஏற்றுக் கொள்ளப்பட்டிருப்பதை இந்த நூற்றாண்டுப் பெண்களே முதலில் மறுதலித்தனர். உலகெங்கும் வாழ்ந்து வந்த பெண்களைப் பற்றிய மதிப்பீடுகளை சிந்தனைகளை முன்வைத்தவர்கள் பெரும்பாலும் காலம்காலமாக எழுதி வந்த ஆண்கள் என்பதனால் நியாயங்கள் பெரும்பாலும் ஆண் சார்ந்ததாகவே அமைந்திருந்தன. காலங்கடந்து விழித்தெழுந்த பெண்கள் தங்களுக்கென ஓர் உரிமை இயக்கத்தை ஆரம்பித்தனர். *உரிமைகளை வென்றெடுக்க* முன்வந்தனர். பக்தியிலும் காதலிலும் அழியாப் புகழ் பெற்ற பெண்கவிஞர்கள் தமிழிலும் இருந்திருக்கிறார்கள். ஆயினும் தங்களுக்கென ஒரு மொழியும், தளமும் உண்டு என்பதை நிலைநாட்ட வீறு கொண்டு பெண்கள் எழுந்து வந்தது இந்தத் தொன்னூறுகளில் தான். தமிழ்க்கவிதை வரிசையில் *பெண்கவிஞர்களில் மூத்தவரும், எழுத்து காலம்* தொடங்கி இன்றுவரை எழுதி வருபவரும், பெண்ணின் படைப்புத் தளங்கள் தனி என்பதிற்கான முதல் முன்னோடியுமான கவிஞர் மீனாட்சி தொடங்கி இன்று அதிகளவில் பெண்ணின் தளங்களைப் பற்றிச் சொல்லிச் *செல்லும் வெண்ணிலா, உமாமகேஸ்வரி, ஆழியாள், இளம்பிறை, கனிமொழி, மாலதி மைத்ரி, தாமரை,* ஆண்களின் உள்ளத்தில் பெண் கவிதை குறித்த அதிர்வலைகளை ஏற்படுத்திவரும் சல்மா, குட்டிரேவதி போன்றோரின் படைப்புத் தளங்கள் மாற்ற சராசரி பெண்கவிஞர்களிடமிருந்து முற்றிலும் வேறுபட்டுக் காணப்படுகின்றன. அந்தத் தளங்களாகப் பெண்ணியம், பெண்மொழி, பெண் உடல்மொழி போன்றவை அமைகின்றன என்பதில் மிகையெதுமில்லை.

காலம்காலமாகப் பெண்களை பாடுபொருளாகக் கொண்ட கவிதைகளை மட்டுமே ஆண்கள் இயற்றி வந்திருக்கின்றனர். ஆண்களின் மொழியாகப் பெண் இருந்திருக்கிறாள். அவளை வர்ணித்து மட்டுமே ஆண்களால் கவிதை பாட முடிந்திருக்கிறது. பெண்ணின் வேதனையை, உள்ளார்ந்த அவளின் மனதை, அவளின் ஆன்மராகங்களைச் சொல்ல எந்தக் கவிஞனும் முன்வரவில்லை. அப்படியே எழுதவந்தவர்களும் அவளின் தோற்றத்தை, சதையைப் பற்றிப் பேசிவிட்டு அவள் குறித்து சொல்லிச் சென்றனர். ஆதி ஆண்டாள் தொட்டு இன்றைய ஆழியாள் வரை தன்னுடைய வலியை வேதனையைப் பதிவு செய்திருக்கும் விதம் நம்மை ஏக்கம் கொள்ள வைக்கிறது. பெண்ணிற்குள் இத்தனை உலகங்கள் உண்டா என்ற எண்ணம் எழுகிறது. ஆண்டாள் தான் தமிழின் முதல் பெண் மொழி பேசிய கவிஞர். தன்னுடைய உடல், உள்ள வேட்கைகள் குறித்து வெளிப்படையாகக் கள்ளங்கபடமின்றி எடுத்துரைத்து தன் உணர்வுகளை வெளிப்படுத்தல் பெண்ணிற்கு அழகல்ல என்று காலங்காலமாகக் கடைபிடிக்கப்பட்டு வரும் மரபார்ந்த பிம்பத்தை கட்டுடைத்தவர்.

தன்னுணர்வும் சுதந்திர ஆர்வமும் உள்ள பெண்களுக்கு நம் சமூகத்தில் வாழ்க்கை என்பது ஓர் நிரந்தரமான போராட்டமே. தனது கருத்துக்களையும், ஆர்வங்களையும் உயிர்ப்புடன் வைத்துக்கொள்ள முனைபவர்களை விட்டுக்கொடு, சமரசம் செய் என்று வினாடிக்கு வினாடி சமூகம் எச்சரித்துக் கொண்டே இருக்கிறது. இவை அனைத்தையும் எதிர்க்கக் கவிதை அவர்களுக்கு ஒரு அற்புதமான ஆயுதமாகப் பயன்படுகிறது.

விலங்குகளும் சிறைகளும்
உடைக்கப்படுகின்றன
புது உலகம் எம்மை நோக்கி
பரந்து விரிகிறது
அந்தப் புதிய உலகம்
தன் கரங்களை நீட்டியுள்ளது
குருதி சொரியும் மனிதரை நோக்கி
அது வரவேற்புக் கூறுகிறது.

என்ற புதிய மாதவியின் கவிதையைப் படிக்க நேரிடும்போது அவர்களை இந்தச் சமூகம் எவ்வாறெல்லாம் வேதனை படுத்தியிருப்பின் இப்படி மகோன்னத வாழ்வை விழையும் பேரார்வம் அந்தப் பெண்களிடம் காணப்படுகிறது என்பதை உணரமுடியும்.

இயற்கையைப் படைப்பு ரீதியாகத் தள்ளி நின்று இரசிக்கும்மனம் படைப்பின் அற்புதம் புரிந்தவர்களுக்கு மட்டுமே கைவரக்கூடியது. அது பெண்களிடம் அதிகம் காணப்படுகிறது காரணம் அவர்கள் படைப்பாளர்களாக இருப்பதே. கவிஞர் தேன்மொழி அந்த இரசிக்கும் மனத்தை இயல்பாகவே பெற்றிருக்கிறார். பெயர் தெரியாத காட்டுப்பூவுக்குக் காஞ்சனி என்று அவர் பெயரிட்டதாகச் சொல்லிச் செல்லும் அழகும் பொதுவாகவே பெண் படைப்பாளியாக இருப்பதன் காரணமாக இரக்க சிந்தனையுடயவள் என்பதனை அவரின் கவிதை வரிகள் சொல்லிச் செல்லும்.

பட்டாம் பூச்சி/பிடித்துக் கொண்டுதான்
இருந்தேன்/அதன் வாழ்வு காலம்

தெரியும் வரை/என்ற கவிதை பெண்களின் புதிய படைப்புத்தளமான இயற்கையியலை எடுத்தோதுகின்றது எனலாம்.

பெண் என்றாலே அழகு, சுகம், அற்புதம் என்ற கருத்தியலே காலங்காலமாக ஆண்களின் படைப்புகள் வாயிலாக அறியப்பட்டு வரும் வேளையில் அவளின் உடல் ரீதியான நிகழ்வுகளை குறித்த சிந்தனைகளை எந்த ஆண்கவிஞனும் பாடவில்லை. பெண்ணின் உடல் துன்பங்கள் மறைக்கப்பட்டே வந்திருக்கின்றன பெண்ணிற்குள் உள்ள வேதனைகளும், வலிகளும் யாராலும் அறியப்படவில்லை. இதனை இன்று பெண்கள் தங்கள் கவிதைகளில் முன்வைக்கின்றனர்.

கொஞ்சம் பூக்களின் வாசம்/புளியமரத்தின் வெறுமை
முப்பது நாட்களின் உற்சாகத்தை/மூன்று நாட்களின்
குருதிப் புனலாக்கி/தளர்ந்து போன கால்களோடு
பேருந்துப் பயணத்திற்குக் கூட/துவண்டு போகும் உடம்போடு

தங்களின் வலி வேதனைகளை மறைத்துக் கொண்டு ஆண்களின் கண்ணுக்கு அழகுப் பதுமையாகக் காட்சியளிக்கும் பெண்களின் வேதனைகளை கவிஞர் வெண்ணிலாவின் வரிகள் வெளிப்படுத்தி நிற்கின்றன. சந்தன மணமும் தாழம்பூ நிறமும் மட்டுமே படித்துப் பழக்கப்பட்ட வாசகனுக்குப் பூக்களின் வாசனையும், புளியம்பூ வெறுமையும் கொண்ட கவிதைத்தளம் புதியது என்பதில் வியப்பேதுமில்லை.

பெண் என்றால் திருமணம், வரதட்சணை, பெண்சிசுக் கொலை, ஆண் ஆதிக்கம் என்பன போன்ற செய்திகள் மட்டுமே கவிதைக் கருவாக எடுத்துக் கொள்ளப்படும் என்ற பிம்பங்களையும், பெண்களின் கவிதைகள் வெறும் சுயபுலம்பல்கள் என்ற கருத்தியலையும் இன்றைய பெண்கள் தகர்த்து எறிகின்றனர். தங்களுடைய வாழ்க்கை என்பது தங்களின் கையில் உள்ளது என்றும் அதனை தாங்களே நிர்ணயித்துக் கொள்ளவும் முடியும் என்பதிலும் உறுதியாக இருக்கின்றனர் என்பதனைச் சொல்லிவரும் அதே வேளையில் திருமணம் என்ற மரபார்ந்த சிந்தனைத் தளத்தையும் இழந்துவிடப் பெண்கள் இன்னும் தயாராகவில்லை. புகழ்பெற வேண்டும் என்ற ஆசைக்குத் திருமணம் ஒரு தடைக்கல் என்ற எண்ணம் பலரது கவிதைகளில் காணக்கிடைக்கிறது.

சனியன்/இந்தப் பேச்சாசையும்

விட்டுத் தொலையவில்லை

என்ற கவிதை வரிகளைப் படிக்க நேரிடும்போது மற்றவர்களுடைய திருமணம், குழந்தை போன்ற நிகழ்வுகளைப் பார்க்க நேரிடின் தன்னுடைய திருமணம் என்ற எண்ணம், ஏக்கம் சராசரியாக வருவதையும் தவிர்க்க இயலாத நிலையில் ஏறத்தாழ திரிசங்கு சொர்க்க நிலையில் பெண்கள் தவிப்பதையும் மேற்காணும் வரிகள் உணர்த்தி நிற்கின்றன. பெண்களின் உலகம் பரந்துபட்டது. அவளுக்கு என்று தனிப்பட்ட ஆசைகள் விருப்பங்கள் இருக்கலாம் என்பது பலராலும் இன்றுவரை ஏற்றுக்கொள்ளப் படாததாகவே உள்ளது. அவள் தாய், மனைவி, மகள் என்ற இடத்தில் மட்டுமே இன்று வரை வைத்துப் பார்க்கப்படுகிறாள். அவளின் கனவுகள் எல்லாம் பெற்றோரின் ஆசைக்கு முன் பலியாகிப் போய்விடும் அவலம் பலருக்கும் பல இடங்களில் நேரிடுவதை

எட்டாம் வகுப்புப் படிக்கையிலேயே

சுமதிக்கு கல்யாணம் நடந்திருச்சு

என்ற கவிதை வரிகள் சொல்லும். தொடர்ந்து சொல்லும் கவிஞர் பலருக்கும் தங்களுடைய நிறைவேறாத எண்ணங்கள் மற்றும் ஆசைகளின் வடிகாலாகக் குழந்தைகள் அமைந்து விடுகின்றனர் என்பதனை

அடுத்த சந்திப்பில்/அவரவர் முகங்களை

அவரவர் குழந்தைகளில்/தேடிக்கொண்டிருப்போம்

என்று சொல்வதன் மூலம் உணர்த்திச் செல்கிறார். நம்முடைய வாழ்க்கை முறைகள் பெண்ணின் கனவுகளை, ஆசைகளை எவ்வாறெல்லாம் சிதைத்தெறிகிறது என்பதனை உணர்த்தும் கவிதை அது. அத்தோடு கல்பனாசாவ்லா-வாக மாற நினைக்கும் பெண் குழந்தை வெறும் கல்பனா என்ற பெண்ணிற்குத் தாயாய் மாறிப்போகும் அவலம் அதனுள் பொதிந்து கிடப்பதை படிப்பவர் உணரமுடியும். ஆண்களைப் பொறுத்தவரை காதல் ஓர் உன்னதம், வாழ்வின் அற்புதங்களின் காதலும் ஒன்று. காதல் அதையும் தாண்டிப் புனிதமானது. அது எது என்பது குறித்த கவலை ஆண்களுக்கு இல்லை. உலகம் போற்றும் காதலின் உன்னதச் சின்னமான தாஜ்மஹால் கவிஞர் தாமரையின் கண்களுக்கு எலும்பும் தோலுமாய்ச் சிதைந்து சின்னாபின்னப்பட்டுப்போன ஒரு பெண்ணின் கல்லறையாகத் தோற்றம் தருகிறது. தாஜ்மஹால் குறித்த தன்னுடைய எண்ணம் என்ற கவிதையில் தாமரை சொல்லும் பொழுது

மனைவியின் முதல் பிரசவத்தை/பார்க்க நேரிட்ட எந்தக் கணவனும்

இரண்டாவது குழந்தைக்கு/ஆசைப்பட மாட்டான்

மும்தாஜுக்கு 16 குழந்தைகள்/என்று சொல்வதன் மூலம் உலகம் போற்றும் ஓர் உன்னதச் சின்னமான தாஜ்மஹால் நம்முன் சிதைந்து போகிறது.

இவ்வாறாகப் பெண் படைப்பாளிகளின் படைப்புகளில் காணப்படும் தனித்தன்மைகள், படிமங்கள், பெண் உடலமைப்பின் தனித்தன்மையுடன் தொடர்புடையவை. உடலின் செயற்பாடுகள் பற்றிய புனைவுகள், உவமைகள், உருவகங்களில் உடல் உறுப்புகள் பெறும் இடம் என உடலின் அனுபவத்தை மொழி வாயிலாக வெளிப்படுத்துவது முதன்மைப்படுத்தப்படுகிறது. ஆணிலிருந்து வேறுபட்ட பெண் உடலின் தனித்தன்மைகளான மார்பு, பெண்குறி, கருவயிறு போன்றவையும் அவற்றின் மூலமாக நிகழும் பூப்பு, மாதவிலக்கு, சூல், குழந்தைப் பேறு, தாய் – சேய் உறவு போன்ற உள்ளார்ந்த தனித்த அனுபவ உணர்வுகளைப் பெண் மொழியால் பதிவு செய்வதே பெண் நிலைப் படைப்பாகும். அதாவது பெண் உடலை அல்லது பாலியலைப் பதிவு செய்துவிட்டால் பெண் விடுதலை சாத்தியமாகிவிடுமா என்ற கேள்வி எழும்புகின்றது. பெண் உடலின் விடுதலையே பெண் விடுதலை என்ற சிந்தனைத் தளத்திற்கான அடிப்படைப் பின்புலம்

முலைகள்/சதுப்புநிலக்/குமிழ்கள்

என்பன போன்ற கவிஞர் குட்டிரேவதியின் கவிதைகள் ஆண்கவிதை உலகில் பெரும் அதிர்வுகளை ஏற்படுத்தி உள்ளது. பெண்ணின் உறுப்புகளை வர்ணித்து எழுதிப் பழக்கப்பட்டுவிட்ட ஆண்களுக்கு பெண்கள் அவ்வாறு எழுதுவது என்பது நம்முடைய பண்பாடுகளின் சிதைவாகத் தோன்றுகிறது என்கின்றனர் இதனை ஏற்றுக் கொள்ளப் பெண்கள் தயாராக இல்லை.

# புதுக்கவிதைகளில் பெண்ணியம்

*முனைவர். ஆ. திலகம்,* தேர்வுநிலை விரிவுரையாளர்,
அருள்மிகு பழனியாண்டவர் கலை & பண்பாட்டுக் கல்லூரி, பழனி - 624 601.

இன்றைய இலக்கியங்களான நாவல், சிறுகதை, புதுக்கவிதை ஆகியன பெண்ணியச் சிந்தனைகளுக்கு முதன்மை தருகின்றன. புதுக்கவிதைகளில் இடம்பெறும் பெண்ணியச் சிக்கல்கள் சில இங்கு எடுத்துக்காட்டப்படுகின்றன. இன்றைய சமுதாயத்தில் விஞ்ஞானவளர்ச்சியில் பல்வேறு மாற்றங்கள் ஏற்பட்டாலும் பெண்களைக் கீழ்த்தரமாகச் சித்தரிக்கும் போக்கு தொடர்ந்து கொண்டே இருக்கிறது. எடுத்துக்காட்டாக, பல்வேறு தமிழ்ப் பத்திரிக்கைகளில் வரும் அட்டைப்படங்களும் சரி, திரைப்படம், தொலைக்காட்சியில் வரும் விளம்பரங்களும் சரி பெண்களை இழிவுப்படுத்துவதாகவே அமைந்துள்ளன. இதற்கு எதிராகக் குரல் கொடுக்கும் சில பெண் கவிஞர்களின் கருத்துக்கள் இங்கே பதிவு செய்யப்படுகின்றன.

இன்றைய சமுதாயத்தில் பெண் ஒரு போகப் பொருளாகக் கருதப்படுவதாலே அனைத்திலும் அவளது படங்கள் போடப்படுகின்றன. அவள் இன்றி ஒரணுவும் இவ் இயந்திர உலகில் அசைவதில்லை என்பதை,

"இன்று/ பெண்ணில்லா இடமில்லை
சினிமாத் தட்டிகளில்/சிரித்தபடி யிருப்பாள்
விளம்பரப் படங்களில்/இவளன்றி
ஓரணுவும் அசையாது/அட்டைப் படமாக
இவளிருந்தால் தானே/சட்டை செய்கிறார்கள்
சமூகத்துப் பேர்வழிகள்" பொ.வை.க, ப.11/என்னும் கவிதை வரிகள் மூலம் கூறுகிறார் கவிஞர் பொன்மணி வைரமுத்து.கவிஞர் பத்மாவதி தாயுமானவர், பெண்களை இவ்வாறு இழிவாக நடத்துவதைக் கண்டு வேதனைப்படுகிறார். பாவம் பெண்கள் என்று அவர்களுக்காக இரக்கப்படுகிறார்.இதனை,

"படம் போடுங்கள்/பார்த்து ரசிக்கலாம்
புடம் போடாதீர்கள்/பாவம் பூக்கள்" ம.ப. 36/என்று கூறுகிறார்.

இன்று அரசாங்கம் பரத்தமைத் தொழிலை ஒழுக்கமின்மை, நோய் முதலிய காரணங்களைக் கூறி அழிக்க முயன்றாலும் இத்தொழில் தொடர்ந்து நடைபெற்றுக் கொண்டுதான் இருக்கிறது. இதற்குச் சமுதாயமே காரணம் என்பது மறுக்க முடியாத உண்மை ஆகும்.கவிஞர் மித்ரா, இன்று நடைபெறும் பரத்தமைத் தொழிலுக்கு அடிப்படைக் காரணம் பொருளாதாரம் என்கிறார். இக்கருத்தை,

"எங்கள் நாட்டில்/ஏழைப் பாட்டாளி வர்க்க
இளம் பெண்டிர்/வாழை இலை கிழிசல் போலும்/ஆடைகளால் உடல் மறைத்து
ஆசைகளை மறைக்க முடியாமல்/வியர்வைக் கங்கையில் குளித்துக்
காட்டரளிகளையும் மல்லிகைகளையும்/களிப்போடு சூட்டி
ஒட்டிய வயிற்றோடு/உற்சவ தேவதைகளாய்
நாளும் உலவ வருகிறார்கள்" தா.த.வா. ப.43/எனக் கூறுகிறார்.

மேலும், பரத்தமை ஒழுக்கத்திற்குப் பொருளாதாரம் மட்டுமல்ல, ஆண்களின் தவறான போக்கும் காரணம் என்று சாடுகிறார். இதனை, கண்ணகியின் நிலையோடும், திரௌபதையின் நிலையோடும், அகலிகையின் நிலையோடும் ஒப்பிட்டுக் கூறுகிறார். மற்றும் இத்தொழில் ஒழிய ஆண்வர்க்கம் திருந்த வேண்டும் என்கிறார். இக்கருத்துக்களை,

"இந்நாளில்/பெண்குலத்துப் பெருமையெல்லாம்
பேதலிக்கச் செய்துவிட்டு/கற்பனை விலைபேசிக்
கண்கெட்ட குருடர் போல்/கண்டவழிச் செல்லுகையில்
கண்ணகியே!/உனக்குச் சிலை வைத்துக்
களிப்பதிலே என்ன இன்பம்?" தா.தீ.வா. பா.50/ என்றும்,
"இன்றைய நலிந்த
துரௌபதைகட்கு/மானம் காக்கக்
கண்ண பரமாத்மாக்கள் வேண்டாம்/வெறும்
மானிடரே போதுமன்றோ/மானத்துடன்

மண்ணகத்தில் வாழ்வதற்கு !" தா.தீ.வா, ப.87/என்றும்,

"இன்று/கல்லெல்லாம் பெண்ணாகக்
கருதுகின்ற காம இந்திரர்கள்/கணக்கற்றுப் போய்விட்டனர்
இந்தக்/காம இந்திரர்கள்
கட்டாயம் மாறிவிட்டால்/அகலிகைகள் அவலநிலை
அடியோடு மாறிவிடும்" தா.தீ.வா. ப.89/என்று கூறுகிறார்.

பரத்தமைக்குப் பொருளாதாரம் காரணம் என்று கூறி, அதற்குப் பொதுவுடைமைத் தத்துவத்தையும்; ஆண் வர்க்கம் காரணம் என்று கூறி அவர்கள் திருந்த வேண்டும் எனவும் தீர்ப்பு கூறுகிறார் கவிஞர் மித்ரா.

கவிஞர் இரா. ஆனந்தி "தனது சேவை" என்னும் கவிதைகளில் பரத்தையரின் நிலைக்கு இரங்கி அதனை அப்பட்டமாக வெளிப்படுத்துகிறார். இக்கருத்து அரசியல் தலைவர்களுக்கும் பொருந்துவதாக அமைகிறது.

"தேடி வருபவர்/எவராயின் என்ன?
காணிக்கை/கையிலேந்தி வந்தால்
கவனிப்பு உண்டு/மக்களின் பிரதிநிதி இவர்
தொண்டு புரிவதே சேவை" உ.ஒ.பூ, ப.100

என்பன இவரது கவிதை வரிகள். இதனை உற்று நோக்குகையில் இன்றைய அரசியல் தலைவர்களின் செயல்களையும் பரந்தமைச் செயலுடன் இணைத்து கவிஞர் நோக்குவதைக் காணமுடிகிறது.

கவிஞர் பொன்மணிவைரமுத்தும், கவிஞர் பத்மாவதி தாயுமானவரும் பெண்களை விளம்பரங்களில் போகப் பொருளாகப் பயன்படுத்துவதை விமர்சித்துக் கூறுகின்றார். பரத்தமைக்கு எதிராகக் கவிஞர் மித்ராவும், கவிஞர் இரா. ஆனந்தியும் குரல் கொடுக்கின்றனர்.

காலங்காலமாகப் பெண் மற்றவர்களை மகிழ்விக்கும் போகப் பொருளாகவே விளங்கியுள்ளாள். இதற்கு, சங்க இலக்கியத்தில் இடம் பெறும் "பரத்தையர் பிரிவு" என்னும் நிகழ்ச்சியைச் சான்றாகக் கொள்ளலாம். இப்பரத்தையரைத் தொல்காப்பியர், "காமக்கிழத்தியர்" என்றும், வள்ளுவர் "வரைவின் மகளிர்" என்றும் குறிப்பிடுகின்றனர். இப்பரத்தமைத் தொழில் இன்றளவும் நிலவி வருவது வருந்தத்தக்கதாகும்.

எனவேதான், இப்பெண்கவிஞர்கள், தங்களுடைய கவிதைகளில் பெண், பாலியல் முறையில் ஒரு போகப்பொருளாகக் கருதப்பட்ட நிலையைச் சாடி பெண் சமுதாய விழிப்புணர்வுக்கு வழிகாட்டுகின்றனர்.

**இடம் பெற்றுள்ள புதுக்கவிதைகள் :**

1) பொன்மணி வைரமுத்து கவிதைகள் -- பொன்மணி வைரமுத்து
2) தாகம் தீரா வானம்பாடிகள் -- மித்ரா
3) உலகை ஒரு பூவாக்கி -- இரா. ஆனந்தி
4) மறுபடியும் -- பத்மாவதி தாயுமானவர்

# பாரதியின் பார்வையில் பெண்ணியம்

முனைவர் (திருமதி) *ல.திலகவதி* திருமதி.*பா.தமிழ்ச்செல்வி* எம்.ஏ., எம்.பில்., பி.எட்.,
தேர்நிலை விரிவுரையாளர், அ.ப.ம.கல்லூரி, பழனி.

இருபதாம் நூற்றாண்டில் இணையற்ற கவிஞரான பாரதியார், பாரத்தாய் பெற்றெடுத்த நல்முத்தாவார். முண்டாசுக் கவிஞனின் சிந்தனையில் சிறகடித்த ஆயிரமாயிரம் எண்ண அலைகளின் வெளிப்பாட்டின் ஒரு முக்கியப் படைப்பு பெண்ணியம் பற்றிய அவரது கருத்துக்களாகும். அரிது அரிது மானிடராயப் பிறப்பது அரிது. அதிலும் மாதராய்ப் பிறப்பதற்கு நல்ல மாதவம் செய்திடல் வேண்டும். பெண்கள் சிறகொடிந்த பறவைகளாக சமையலறக்குள் அடைபட்டுக் கிடக்காமல் விடுதலை பெற்று, சகல உரிமைகளுடன் ஆணுக்குச் சமமாக வாழ வேண்டும் என்று வலியுறுத்தியவர்.

பத்தொன்பதாம் நூற்றாண்டில் விளைந்த அரசியல், சமுதாய முன்னேற்ற இயக்கங்களுள் பெண்ணுரிமை இயக்கமும் ஒன்று. இவ்வியக்கம், அரசியலில், சமுதாயக் களங்களில் பெண்கள் சமவுரிமை பெறுவதை இலக்காகக் கொண்டது. சமுதாய நிலையில் குடும்பம், தொழில், பொருளாதாரம் ஆகியவற்றில் ஓரளவு சமத்துவம் பெற்றதும், கலை, இலக்கியங்களிலும் சமவுரிமைப் பார்வையைச் செலுத்தத் தொடங்கியது, கலைகளில் சிறப்பாக இலக்கியத்தில் பெண்கள் எவ்வாறு படைக்கப் பட்டுளளனர் என்பதை நோக்கத் தலைப்பட்டது.

பெண்கள் தமக்கெனத் தனித்த ஆளுமை உடையவர்கள் ஆண்களின் பின்னிணைப்புகள் அல்ல. தம்முடைய உடலியற்கை வாழ்க்கை அனுபவம், சமுதாய, பொருளாதார வாழ்க்கையில் தமக்கென உரியநேர்பாங்கினைப் பெறுதல் என்னும் கூறுகளை உடைய ஒரு தனியாளுமையே பெண் என்பதனை பெண்ணிய அணுகுமுறைக் கோட்பாடு எனலாம். இக்கட்டுரையின் நோக்கம், பாரதியை ஒட்டு மொத்தமாகப் பார்க்காமல் பெண் தொடர்பான பாரதி சிந்தனைகளை மட்டும் ஆராய்வது ஆகும்.

பாரதியின் பாடல்களிலும் புனை கதைகளிலும் கட்டுரைகளிலும் பெண் அடிமைத்தனத்தில் இருந்து வெளிப்பட்டு இலட்சிய ஒளியாக எழும்பும் சக்தியாகவே விளங்குகின்றாள். அவருடைய புதுமைப் பெண் தேசியமென்ற பார்வையில், முப்பது கோடி மக்களை ஈன்ற தாயாக, செப்பு மொழி பதினெட்டுடையாளாகவும், சிந்தனை ஒன்றுடைய பாரத மாதாவாகத் திகழ்ந்தாள். அவளே தாய், அவளே இயக்கம், அவளே ஆற்றல், தெளிவு, அவளே அமுததாரை, அவளே மனைத் தலைவி.

அறிவு கொண்ட மனித உயிர்களை அடிமையாக்குபவர் பித்தராம், நாணமும் அச்சமும் நாய்கட்கு வேண்டுமாம், சிறிய தொண்டுகள் தீர்த்தடிமைச் சுருள் தீயிலிட்டுப் பொசுக்கிட வேண்டுமாம் என்ற வரிகளில் கவியின் ஆத்திரம் வெளிப்படுகிறது. இந்தக் குத்தல்களை நயமாக, அவள் சொல்வது போல் வியப்பின் வெளிப்பாடாக அறிவுறுத்துகிறார்.

பெண் அடிமைத்தனத்திற்கான காரணம் யாது எனச் சிந்தித்த பாரதி

“பெண்டாட்டி தனையடிமைப் படுத்த வேண்டிப்
பெண்குலத்தை முழுதடிமைப் படுத்தலாமோ”?

மனைவியை அடிமைப் படுத்த முயன்ற கணவன்மார்களால் தோன்றிய பெண் அடிமைத்தனம், பின் மற்ற உறவு நிலைகளும் விரிந்தது என்று கூகின்றார். பெண்ணடிமைத் தனத்திற்கான காரணங்களைச் சமூகத் தளத்திலிருந்து எண்ணிப்பார்க்காமல், குடும்பத்தளத்திலிருந்து பார்த்த பாரதி இத்தகைய கருத்தினைப் பெறுகிறார். எனவே தான் மனைவியைமதிக்கும் மனநிலை ஆண்களுக்கு அமைந்தால், பெண் அடிமைத்தனம் ஒழிந்து விடும் என்று கூறுகின்றார். மேலும் பெண்ணைத் தெய்வமாகப் போற்றி, தொன்மக் கருத்தியலின் தொடர்ச்சியாக, புதுமைப் பெண்ணை இவ்வாறு படைத்துக் காட்டுகிறார். அவரின் புதுமைப் பெண்ணே அன்னை பராசக்தியின் அவதாரம் என்று பின் வரும் பாடலில் கூறுகின்றார்.

“மாற்றி வையம் புதுமையுறச் செய்து
மனிதர் தம்மை...
தேற்றி உண்மைகள் கூறிட வந்திட்டாள்”

புதிய கருத்துக்களைத் தெய்வ அவதாரத்துடன் இணைத்தால் சமூகம் ஏற்கும் என்ற இந்து மரபியலின் விளைவு இது. நற்குலப் பெண்கள் எச்சூழலிலும் கற்பைக் காத்துக் கொள்ளுவார்கள் என்றும், பெண்களின் கற்பைக் காக்க வேண்டும் என்பதற்காக அவர்கள் அறிவு பெறும் உரிமையைப் பறித்தல் கொடுமை என்றும்

உணர்த்துகிறார். பெண்கள் அறிவுபெற்றால் ஆண்களை மதிப்பார்களா? அச்சம், நாணம் எல்லாம் அகன்று விடாதா? என அஞ்சும் ஆண் மன நிலையை உணர்ந்து

"நிமிர்ந்து நன்னடை நேர்கொண்ட பார்வையும்

...

செம்மை மாதர் திறம்புவ தில்லையாம்" என்று ஆண்களுக்கு உத்தரவாதம் அளிக்கிறார். அச்சம், நாணம் போன்ற பெண்ணுக்கென வகுத்த பழங்கருத்துக்களைப் புறம் தள்ளிவிட்டு, பெண் கல்வியின் தன்மையை விளக்குகிறார்.

"நிலத்தின் தன்மை பயிர்க்குள தாகுமாம்

...

சாலவே யரிதாவதோர் செய்தியாம்" என்று

அறிவுள்ள பிள்ளைகள் பிறந்திட பெண் கல்வி வழிவகுக்கும் என்று கூறியதோடு, பெண் கல்வி பெறுவதால் ஆண்களை எதிர்த்திட மாட்டாள், வீட்டிற்கும், நாட்டிற்கும் நலங்களைத் தந்து ஆண்கள் போற்றும்படி வளர்வான் என்கிறார்.

"சாத்திரங்கள் பலபல கற்பவராம்

....

ஏத்தி ஆண்மக்கள் போற்றிட வாழ்வராம்"

மேலும்"பெண்கள் அறிவை வளர்த்தால் வையம்

பேதமை அகற்றிடம் காணீர் என்று கூறும் பாரதியார்

பெண்களும், ஆண்களைப் போலவே உயர்தரக் கல்வி பெறவேண்டும் என்றும், ஆணுக்குச் சமமான கல்வித் திறமை பெண்களுக்கு ஏற்படும் வரை, ஆவண்கள் பெண்களை தக்கபடி மதிக்க மாட்டார்கள், தாழ்வாகவே நடத்தவார்கள் என்று கூறுகிறார்.

பாரதியார் தம் கட்டுரைகளில் வங்கப் பெண் கவிஞர்கள் திருமதி.காமினிராய், திருமதி.மனக்குமாரி தேவி, திருமதி.அரங்க மோகினிதேவி போன்றோர்களைச் சுட்டிக்காட்டி, இவர்களின் கவிதைகள் ஆங்கில மொழியில் மொழிபெயர்க்கப்பட்டு அமெரிக்க நாட்டில் போற்றப்படுவதைச் சுட்டிக் காட்டியுள்ளார். இவ்வாறு பாரதி, பெண்கள் கல்வியில் சிறந்தவர்களாகவும், அதனால் வாழ்க்கையில் உயர்ந்தோங்கியவர்களாக விளங்க வேண்டும் என்று கூறியுள்ளார்.

ஆணும் பெண்ணும் சரிநிகர் சமானம் என்ற கொள்கை பாரதியின் கொள்கை யாவற்றிலும் உயர்ந்த கொள்கையாகும். " ஆணுக்குப் பெண் இளப்பில்லையென்றும், பூரண சமத்துவம் இல்லாத இடத்தில் நாம் ஆண்மக்களுடன் வாழ மாட்டோமென உறுதிகொள்ள வேண்டுமென கூறுகிறார், மேலும் ஆண் பெண் சமத்துவத்தை

"பாயுமொளி நீ யெனக்கு .... என்று தொடங்கி

வீரமடி நீ எனக்கு, வெற்றியடி நானுனக்கு என்பது போல பலநிலைகளில் ஆணும் பெண்ணும் ஒருவரையொருவர் சார்ந்து நிற்கும் சமநிலைகளாகப் பாவித்து எழுதியுள்ளார்.

மேலும் பாரதி பெண்களுக்குச் சில சமூக உரிமைகள் வேண்டும் என்று கூறியுள்ளார்.

1. பால்யமணம் கூடாது, பெண்கள் "ருது" ஆன பின்பே மணம் முடிக்க வேண்டும்.

2. பெண்களுக்கு கட்டாயத் திருமணம் கூடாது. தாங்கள் விரும்பிய வரை மணம் செய்து கொள்ளும் உரிமை வேண்டும்.

3. திருமணத்திற்குப் பிறகு கணவன் பிடிக்காத போது அவரை விட்டு விலகும் உரிமை பெற்றிருக்க வேண்டும். மேலும் கணவன் செய்யும் கொடுமைகளையெல்லாம் சகித்துக்கொண்டு வாழ வேண்டும் என வற்புறுத்தக்கூடாது.

4. பெண்களுக்கு சொத்துரிமை வேண்டும், பெண் பெறும் பொருளாதாரச் சுதந்திரம், அவளை இல்லத்திற்குள் சரிநிகர் சமானமாக்கும்.

5. கணவனை இழந்த பெண்கள் மறுமணம் செய்து கொள்ளும் உரிமை வேண்டும். அந்த விடுதலை அவர்களுக்கிருந்தால் பிற விடுதலைகளும் தானே வந்து சேர்ந்து விடும்.

6. மறுமணம் செய்து கொள்ள விரும்பாத பெண்கள் தனியே தொழில் செய்து சுயமாக

வாழ்வதற்கு உரிமை பெற்றிருக்க வேண்டும்.

7. பெண்கள் தம் கணவரைத் தவிர அந்நிய ஆண்களுடன் பேசக் கூடாது, பழகக் கூடாது என்று கட்டுப்பாடுகள் ஒழிந்து பெண் சுதந்திரமாக யாருடனும் பழகவும், பேசவும் இடம் தர வேண்டும்.

8. பெண்களுக்கு அரசியலில் ஈடுபடும் உரிமை வேண்டும். சட்டரீதியாக அதை அவர்கள் பெறுவது நலம் என்று கூறியுள்ளார்.

பாரதி காலம் பெண்ணடிமை மிகுந்தகாலம் பெண்ணடிமைத் தனம் சமுதாயத்தின் அனைத்துத் தரப்பினராலும் குறிப்பாக பெண்களே தாங்கள் அடிமைப்பட்டிருக்கிறோம் என்பதை உணராதகாலம். நாட்டில் ஆங்காங்கே தோன்றிய சீர்திருத்தவாதிகள் சிலரே, பெண்ணடிமைத்தனத்தை உணர்ந்து, அதை வேரோடு பிடுங்க முற்பட்டிருந்த காலம். இத்தகைய கால கட்டத்தில் பாரதியார் தம் படைப்புகளின் மூலமாக பெண்ணடிமையை நீக்க முற்பட்டார். பெண்கள் இப்படித்தான் இருக்க வேண்டும் என்று சமூகம் விதித்திருந்த கட்டுப்பாடுகள் எங்கும் பரவியிருக்க, இப்படியும் பெண்கள் இருக்க வேண்டும் என்று பாரதி தம்படைப்புகள் மூலம் கூறியதோடு பெண்விடுதலை என்பது பெண்களாலேயே முயற்சிக்கப் படவேண்டும். அப்பொழுது தான் அதற்கு சக்தி அதிகம் என்பதைப் புரிந்து கொண்டு விடுதலையுணர்வுடைய பெண்களின் மூலம் அவ்வுணர்வை ஊட்டுகிறார், இதை

“பெண்ணுக்கு விடுதலை நீரில்லை என்றால்
பின்னிருந்த உலகினிலே வாழ்க்கை இல்லை” என்ற
கவிதையின் மூலம் எளிமையாக உணரவைக்கின்றார்.

பாரதியின் விடுதலைப் பெண்கள் பாரதியின் கற்பனை பெண்கள் அல்லர். நடப்பியல் அவர் கண்ட பெண்கள்தான். சீனப்பெண் சியுசின் சகோதரி நிவேதிதா, திருமதி.அன்னிபெசண்ட், சரோஜினி நாயுடு, வேதவல்லி அம்மையார், போன்ற பலரும் அவர்கண்ட விடுதலைப் பெண்கள்.

இவ்வாறு பாரதி, அவர் காலத்து வேரூன்றிக் கிடந்த ஆண் ஆதிக்க கருத்தியலுக்கு எதிரான மாற்றுக் கருத்தியலை முன் வைத்து பெண்ணடிமையை வன்மையாகச் சாடுவதில் முதன்மையாக நின்றவர். மேலும் பெண்கள் சாத்வீகமாகப் போராட வேண்டும் என்றும், புரட்சி என்ற ஆயுதத்தைக் கையில் எடுக்கக் கூடாது என்று கூறுகின்றார். ஆடவரிடத்தும் தம் உரிமையை வெளிப்படையாகப் பேசி உணரவைக்க வேண்டும் என்கிறார். எனவே பெண்ணுக்கு ஆணின் கொடுமைகளை எதிர்த்து வெளிவரும் உரிமை உண்டு என்றாலும், அவள் அதைக் கடைசி ஆயுதமாகப் பயன்படுத்திக் கொள்ள வேண்டும் கருத்தினைக் கொண்டுள்ளார். பதிவிரதை, கற்பு, பத்தினி என்ற கொள்கையில் அவருக்குப் பிடிமானம் உண்டு. ஆணிடத்துக் கற்பை வற்புறுத்தினாலும், பெண் கற்பு பேணப்படவேண்டும் என்பதை பல இடங்களில் சுட்டிக்காட்டியுள்ளார். அதே சமயம் “பெண் வேண்டும்” என்று கேட்காமல், பத்தினிப் பெண் வேண்டும் என்ற அவரின் ஆணாதிக்க நிலைப்பாட்டைச் சுட்டிக் காட்டாமல் இருக்க முடியாது.

கற்பைப் போலவே காதலைப் பேசும் போதும் ஆணின் உணர்வுடன் அதிகம் பேசியுள்ளார்.
பாதி நடுக் கல்வியிலே காதல் பேசிப்
....................
இட்டு உனைச் சேர்ந்திட வைத்தேன் என்றும் பாடலில் பெண்களை ஆணின் போகப் பொருளாகப் படைத்துக் காட்டியுள்ளார். மேலும்

கொஞ்சு மாதரும் கூட்டு மண்ணும் கள்ளும் இவற்றின் இன்பம் வெறொன்றும் உண்டோ? என்ற வரிகளின் மூலம் பெண்ணை அறிவை மயக்கும் கள்ளுடன் ஒப்பிட்டுப் பேசி பெண்ணின்பத்தை விட நல்லின்பம் வேறு உண்டா எனக் கூறியுள்ளார். இவ்வாறு பாரதியின் பெண்ணியம் பற்றிய கருத்துக்கள் பெண்களின் முன்னேற்றத்திற்கும், அதற்காகப் பாடுபடும் மற்ற சீர்திருத்த வாதிகளுக்கும், பெண்ணியக்கோட்பாடு வளர்த்தவருக்கும் வழிவகுத்தது என்றால் மிகையாகாது.

# புலவர் புலமைப்பித்தன் பார்வையில் பெண்ணியம்

முனைவர். *சாமி, திருமாவளவன்*, எம்.ஏ.,எம்ஃபில்.,பிஎச்.டி.,பிஜிடிஜேஎம்சி.,
இணைப்பேராசிரியர், தமிழாய்வு மையம் தேசியக் கல்லூரி, திருச்சிராப்பள்ளி -1.

கவிஞர் கண்ணதாசன் அவர்கள் தமிழ்த்திரையுலகில் கோலோச்சிய காலகட்டங்களில் அவருக்கு இணையாக வளாந்த கவிஞர்களில், சிறப்பிடம் பெறுபவர்களில் குறிப்பிடத்தக்கவர் புலவர் புலமைப்பித்தன். இலக்கியச் செழுமையுடன், சந்த நயத்துடன், தாள நயத்துடனன் கவிபாடுவதில் வல்லவர். ஏராளமான கவிதைகள், திரையிசைப் பாடல்கள் பாடிய புலமைப்பித்தன் அவர்கள் சிலகாலம் அரசவைக் கவிஞராகவும் பணியாற்றியிருக்கின்றார். "ஆயிரம் நிலவே வா" என்ற பாடல் அவரைப் பெரிதும் விளம்பரப்படுத்தியது. அவரது பார்வையில் திரையிசைப் பாடல்களில் பெண்ணியம் எவ்வாறு உள்ளது என்பதை இவ்வியல் கூற விழைகிறது.

இன்று வளர்ந்து வரும் துறைகளில் தலித்தியம், பெண்ணியம் ஆகியவை சிறப்பிடம் பெறுகின்றன. இச்சொல்லானது "பெண்ணியம் என்று அழைக்கப்படுகின்ற 189 லிருந்து பாலின சமத்துவக் கோட்பாடுகளையும், பெண்ணுரிமைகளைப் பெறச் செயற்படும் இயக்கங்களையும் குறித்துப் பயன்பட்டு வருகின்றது. எனினும் 20ஆம் நூற்றாண்டிலேயே இச்சொல் பெரு வழக்கில் வந்தது.-1."பெண்ணியம்" என்னும் இச்சொல்லை ஆங்கிலத்தில் ஷஊங்ம்ண்ய்ண்ள்ம்ஷ என்று அழைக்கின்றனர். இந்த ஆங்கிலச் சொல் பெண்ணைக் குறிக்கும் ஷஊங்ம்ண்ய்ஹஷ என்ற இலத்தீன் மொழிச் சொல்லிலிருந்து தோன்றியது. - 2பெண்ணுரிமை ஏற்பு, பெண்நிலை வாதம், பெண்ணியல் கோட்பாடு என்ற சொற்களை "பெண்ணியம்" என்ற சொல்லிற்கு இணையாகக் கூறலாம். பெண்ணியக் கருத்துக்களை உள்ளடக்கிய கலைச்சொற்கள் தமிழில் இன்னும் முழுமையாகத் தோன்றவில்லை. ஜெயின் " பெண்கள் ஒருவரோடு ஒருவர் இணைந்து ஒரு ஆற்றலை உருவாக்கி, பெண்மை அதன் தன்மையில் ஆண்களோடு மாறுபட்டிருப்பினும், அது ஆண்மைக்கு நிகரானது என்பதை ஏற்றுக்கொள்ள வைப்பது" -3. என்கிறார்.

"பெண்உரிமை ஏற்புக் கோட்பாடு", "பெண்ணுரிமை ஆதரவு"- 4.

"பெண்களின் தேவையை நிறைவேற்ற அவர்களின் சார்பாக வாதாடுவது, போராடுவது" - 5

"பெண்களின் உரிமையை வற்புறுத்தும் ஓர் இயக்கம்"-6. என்று "பெண்ணியம்" என்பதற்கு அகராதிகள் விளக்கம் கூறுகின்றன. கவியரசர் கண்ணதாசன் அவர்கள், நாங்கள் எல்லாம் புலமைப்பித்தனிடம் நிரம்பக் கற்றுக்கொள்ள வேண்டும். அவர்தான் முழுமையாகவும், முறையாகவும் தமிழ் படித்தவர்"-7. என்றார்.

புலவர் புதுமைப்பித்தனின் திரைப்பாடல்கள் பன்முகப்பார்வை கொண்டதாகும்.

"தாய்மை" என்பது புனிதமானது, பலரால் போற்றப்பெறுவது. மகிழ்சியைத்தருவது. புலமைப்பித்தன் அவர்கள் தமது பாடல்களில் தாய்மையைப் பலவாறு பாராட்டுகின்றார்.

"வாழைப்பூக் கைகளுக்கு /வைரவளை காப்பம்மா/வைரவளை ஓசையிலே
வாழ்த்துப்பா கேளம்மா"-8

என்கிறார். தாய் என்பவள் மென்மையான உள்ளம் கொண்டவள்,

நீலக் கருவிழியில்/ஓலை கொண்டு மையெழதி/ஏலக் கருங்குழலில்/இதமாக நெய்தடவி/வாரித் தலைசீவி/வகிடெடுத்துப் பின்னலிட்டு /வாரி அணைக்கவரும்/நான் தாயடியோ"-9

எனப் பாடுகின்றார். மேலும் அன்னை என்பவளே அனைத்திற்கும் மூல முதற்பொருள் என்கிறார்.

அன்னை என்பது மானுடம் அல்ல/அதுதான் உலகத்தின் தெய்வீகம்/அன்றவள் சொன்னது தாலாட்டல்ல/ஆன்மா பாடிய சங்கீதம்" -10./எனப் பாடிய புலமைப்பித்தன் அவர்கள், தாய்மொழி வார்த்தைகளே வேதம் எனவும், சொர்க்கம் என்பது அன்னையின் மலர்பாதம் என்கிறார்.

ஒரு மனிதன் நல்லவனாகவும், தீயவனாகவும் மாறக் காரணம் அவனது அன்னை வளர்க்கும் விதத்தைப் பொறுத்தே அமையும் என்கிறார் கவிஞர்,

எந்தக் குழந்தையும் /நல்ல குழந்தைதான் /மண்ணில் பிறக்கையிலே - பின்/நல்லவர் ஆவதும் தீயவர் ஆவதும் அன்னை வளர்ப்பதிலே" -11/என்பது அவரது பாடல். இப்பாடல் மூலம் தாயானவள் நற்பண்புகளைக் கொண்டிருத்தல் வேண்டும், அவளால் தான் ஒருவனை நல்லவனாக வளர்க்க இயலும் என்கிறார்.

"பெண்ணியம்" என்னும் இச்சொல் பாலியல் பண்புகளைக் குறிக்கவே பயன்பட்டு வந்தது -12. என்றாலும் கூட

பெண்ணிற்குத் தேவையான பண்புகளைக் கூறும் விதமாக அமைந்திருப்பதைக் காணலாம். தலைவியின் வருகை தலைவனுக்கு இன்பத்தை தரவேண்டும் என்கிறார்.

பாவை நீ மல்லிகை
பால்நிலா புன்னகை
மான்களில் ஓர்வகை
மங்கையே என்னிடம் ஓர் வகை -13.

என்பது புலமைப்பித்தனின் பாடலாகும். பாவை என்பவள் மல்லிகை மலர்போல, அது எங்கும் மணம் வீசுதல் போல பெண்ணானவள் அனைவருக்கும் பயனுள்ளவளாய் இருக்க வேண்டும். இன்பத்திலும் துன்பத்திலும் புன்னனை மாறாமல் இருக்க வேண்டும். மானத்தில் கவரி மான் போல் இருக்க வேண்டும்.

ஒரு பெண்ணுக்கு திருமணம் என்பது முழுமையைத் தருகின்றது. அது இறைவன் கொடுத்த வரம். காலகாலமாய் அவளை முழுமையாய் வாழ வைக்கிறது.

"கல்யாணம் என்னும்
தெய்வீக பந்தம்
காலங்கள் தோறும்
வாழ்கின்ற சொந்தம்
மணல்வீடு அல்ல
விதியென்னும் காற்றில்
பறிபோவதல்ல" -14

என்கிறார் புலமைப்பித்தன். பெண் என்பவள் தெய்வம் போலிருக்க வேண்டும் என்கிறார் கவிஞர்.

"தேவையெல்லாம் தெய்வம் போலப் பெண்ணுங்கு
தும்பைப் பூப்போல
துளசி செடிபோல
பெண்ணைப் பாருங்க" -15

என்பது பாடல். "பெண்ணின் வரலாறு தொலைந்து போன அல்லது இருட்டடிப்பு செய்யப்பட்ட ஒன்றாகவே உள்ளது. காரணம் அவள் அவனுள் அடங்கியவள், அவளைச் சார்ந்து அவனுக்காகவே வாழ்பவள்"-16.

புலவர் புலமைப்பித்தனின் பார்வையில் பெண் என்பவள் அனைத்து குணங்களும் கொண்டவளாக, நல்லவளாகவே படுகிறாள். அதையே அவர் தமது படைப்புக்கள் வழி காட்டியுள்ளார்.

## குறிப்புக்கள்


1. முத்துச் சிதம்பரம் -பெண்ணியம் தோற்றமும் வளர்சியும். ப. 9.
2. இரா. பிரேமா - பெண்ணியம் - ப. 7
3. Jain Devaki - Advance in Feminist Theory. p. 10.
4. A.L. Mudaliyar - English English - Tamil - Dictionary - p. 379
5. Oxford Dictionary- p.
6. Delux Dictionary- p.
7. புலவர் புதுமைப்பித்தன் - திரையிசைப் பாடல்கள் - ப. 5
8. மேலது - ப. 202.
9. மேலது - ப. 205.
10. மேலது - ப. 209.
11. மேலது - ப. 222.
12. சி.எண். குமாரசாமி - பெண்ணிய நோக்கில் பாரதி - ப. 7
13. புலவர் புதுமைப்பித்தன் - திரையிசைப் பாடல்கள் - ப. 34
14. மேலது - ப. 47.
15. மேலது - ப. 63.
16. மைதிலி சிவராமன் - பெண்ணுரிமை சில பார்வைகள் - ப. 6.

# அண்ணாவின் படைப்புகளில் பெண்ணியம்

*செ. தேவராஜு* எம்.ஏ.எம்.பில்., தமிழ் விரிவுரையாளர்,
கோபி கலை அறிவியல் கல்லூரி, கோபிசெட்டிபாளையம் - 638 453.

பெண்ணியம் என்னும் கொள்கை மேலைநாட்டு சிந்தனையின் தாக்கமாகும். 18ம் நூற்றாண்டு வரை மேலை நாடுகளில் வழக்கிலிருந்த சமூக மதிப்புகள் யாவும், சமயச் சார்புடையன. 18ம் நூற்றாண்டில் ஐரோப்பிய சமூகத்தில் பல மாற்றங்கள் ஏற்படத் தொடங்கின. எதையும் காரண காரியத்தோடு பகுத்தறிந்து உண்மையெனத் தெரிந்தவையே ஏற்கப்பட்டன. சமூகத்தில் வழிவழியாக வந்த ஏற்றத்தாழ்வுகள், சமூக மதிப்புக்கள் போன்றவை விவாதத்திற்குள்ளாயின. இத்தகு நிலையில் அங்கு தோன்றிய பெண்ணியம், மனித சுதந்திரம், விடுதலை, சமத்துவம், அரசியல், தன்னாட்சி ஆகியவற்றை அடிப்டையாகக் கொண்டமைந்தது. 19ம் நூற்றாண்டில் இந்தியாவில் கால் கொள்ளத் தொடங்கிய பெண்ணியக் கொள்கை, இந்திய விடுதலை போராட்ட வரலாற்றோடு பின்னிப் பிணைந்ததாகும். பெண்ணியத்தின் தோற்றம் மேனாடுகளில் பகுத்தறிவின் அடிப்படையில் அமைய, இந்தியாவின் சமூக சீர்திருத்தத்தின் அடிப்படையில் அமைந்தது.

பெண்ணியம் பற்றிய சிந்தனைகள் தமிழ்ப் படைப்புகளில் வெளியாயின. தொடக்ககாலம் மற்றும் தற்காகாலத் தமிழ் நாவல்களில் பெண்விடுதலை, பெண்கல்வி, விதவை மணம், ஆணாதிக்கத்தால் பெண்கள் அடையும் இன்னல்கள், மரபுத் தளைகளால் பிணைப்புண்டு அவதிப்படும் நிலை, பாலியல் சமத்துவம், வரதட்சணை, குழந்தை மணத் தடை, தொழில் உரிமை ஆகியவை பெண்ணியக் கருத்துக்ளாக வெளிடப்பட்டுள்ளன. அம்முறையில் அண்ணாவின் புதினங்கள் மற்றும் நாடகங்களில் பெண்ணிய கருத்துக்கள் இடம் பெற்றுள்ளன.

## பெண்ணியம் - விளக்கம்.

"ஆங்கிலத்தில் `Feminism` என்று வழங்கும் சொல்லுக்கு ஈடாகத் தமிழில் பெண்ணியம், பெண்நிலை வாதம் என்ற சொற்கள் பயன்படுத்தப்படுகின்றன. `Feminism` என்ற ஆங்கிலச் சொல் `Femina` என்ற சொல்லுக்குப் பெண்ணின் குணாதிசயங்களைக் கொண்டுள்ளன (Having the qualities of females) என்பது பொருளாகும். இச்சொல் முதலில் பெண்களின் பாலியல் குணாதிசயங்களைக் குறிப்பிடவே வழங்கப்பட்டது. பின்பே பெண்களின் உரிமைகளைப் பேசுவதற்காக எடுத்தாளப்பட்டது. -1

பெண்ணியம் என்பது பெண்கள் ஆண்களுக்கு இணையாகச் சம அந்தஸ்து பெறுதல், தங்களின் வாழ்க்கை முறைகளையும் எதிர்காலத்தையும் தாங்களே சுதந்திரத்துடன் நிர்ணயித்துக்கொள்ளுதல் ஆகியவற்றில் ஆண்களுக்கு இணையாகச் சமஉரிமை கோரிவரும் சமுதாய இலக்கியமாகும். -2. இது பெண்களின் அடிமை நிலையை மாற்ற முற்படும் கோட்பாடு. -3. பெண்ணியம் என்ற சொல் 1890லிருந்து பாலின சமத்துவக் கோட்பாடுகளையும், பெண்ணுரிமைகளைப்பெறச் செயற்படும் இயக்கங்களையும் குறிக்கப் பயன்பட்டு வருகிறது. -4. சமுதாயத்திலும் வேலைத்தளத்திலும், குடும்பத்திலும் நிலவும் பெண் ஒடுக்குமுறை மற்றும் சுரண்டல் பற்றிய பெண்மையின் உணர்வு நிலைகளும் இந்நிலையை மாற்றுவதற்குப் பெண்களும் ஆண்களும் எடுக்கும் உணர்வுபூர்வமான நடவடிக்கையுமாகும் என்பார் தேவத்தார். - 5.

## பெண்ணியச் சிந்தனைகள்

பெண் விடுதலையில் ஆர்வம் கொண்டு தமிழகத்தில் பங்காற்றிய பெரியவர்களில் தனக்கெனத் தனியிடம் பெற்றவர் அண்ணா. இவர்தம் படைப்புகளுக்கு குமாஸ்தாவின் பெண், குமரிக் கோட்டம், பார்வதி பி.ஏ., வேலைக்காரி, பாவையின் பயணம், கோமளத்தின் கோபம், ரங்கோன் ராதா எனப் பெண்களின் பெயரைச் சூட்டியதிலிருந்தே இது புலனாகும். இவர்தம் புதினங்கள் மற்றும் நாடகங்களில் இடம்பெற்றுள்ள மாந்தர்களின் வாயிலாகப் பெண்ணியச் சிந்தனைகளைப் பல கோணங்களில் வெளிப்படுத்துகிறார்.

## பார்வதி பி.ஏ.,

இப்புதினத்தின் தலைவியாகிய பார்வதியை அண்ணா அவர்கள் அனாதையாகப் படைத்து அறிவாற்றல் மிக்கவளாகக் காட்டுகிறார். தன்னைக் காதலித்த பார்திபனை இனங்கண்டு, அவனுடைய போலிச் செயலை அறிந்து சாடத்துணிபவளாகவும், தன் சிந்தனைகளோடு ஒத்து செல்கின்ற குமாரை விரும்பி மணம் செய்து கொள்பவளானவும், பார்வதியைப் படைத்துள்ளார்.

இப்புதினத்தின் துணை நாயகியாகத் திகழபவள் லலிதகுமாரி. கல்லூரியில் படிக்கும் போதே கயவன் ஒருவனால் கற்பிழந்து, குடும்பத்தினரால் வெறுக்கப்பட்டுப் பின் பெங்களூரில் மருத்துவராகப் பணியாற்றுகிறாள் லலிதகுமாரி. நரசிம்மனால் ஏமாற்றப்பட்ட பார்வதியின் தோழியான உத்தமி தன் வயிற்றில் வளரும் குழந்தையை ஊரறியப் பெற்றெடுக்க இயலாதவளாய், மறைமுகமாகச் செய்ய பெங்களூர் சென்று மருத்துவர் லலிதகுமாரியைத் தேடுகிறாள்.

நரசிம்மனின் மனைவியான குமுதினி, தன் கணவரின் கயமையை உணர்ந்து, அவனிடம் ஏமாந்த உத்தமியின் நலன் கருதி, தனக்கு வேண்டிய லலிதகுமாரியிடம் உத்தமியை அனுப்புகிறாள். லலிதகுமாரியின் ஆறுதலும் அடைக்கலமும் உத்தமிக்குத் திருப்புமுனையாகின்றன. லலிதகுமாரி தன்னிடம் வரும் நோயாளியின் வாழ்க்கைப் போக்கைக் கூறி, அவளை உலகியல் தெளிவு பெறச் செய்கிறாள். சமூகத்தில் நடைபெறும் இளமைத் திருமணத்தாலும், பொருந்தா மணத்தாலும் பெண்களுக்கு ஏற்படும் விதவை நிலைமைக்குக் காரணமாக இருக்கின்ற சமூகத்திற்கு மருந்திட வேண்டுமென மருத்துவர் லலிதகுமாரியின் மூலம் அண்ணா வெளிப்படுத்துகிறார். "இப்போது வந்து சென்றாளே ஒரு அழகிய பெண், அவளைப் பீடித்திருக்கும் நோய் எனக்குத் தெரியும். பருவம் பாழாக்கப்படுவதால் படரும் பாழான நோய், அதற்கு நான் என்ன செய்ய முடியும்? உண்பதும் உறங்குவதும் உயிர் வாழப் போதும். ஆனால் உள்ளம் மகிழ்ச்சியை அல்லவா உணவாகக் கேட்கிறது.! பால்ய விதவையான அந்தப் பெண்ணுக்குச் சந்தோஷம் எப்படி இருக்க முடியும்? விசித்திரமான நிலைமை இது.... அந்தப் பெண்ணின் நோய் போக வேண்டுமானால், அவளுக்கு நான் மருந்து கொடுத்துப் பிரயோஜனமில்லை. சமூகத்தில் உள்ள பித்தம் தெளிய மருந்திட வேண்டும். அப்போது தான் அபலைகளை அலைக்கழிக்கும் அந்த கொடிய நோய் ஒழியும்" (ப.112) எனக் குறிப்பிடுவார்.

### ரங்கோன் ராதா

சமுதாயத்தில் ஆண்களின் சிந்தனையில் ஏற்படுகிற அவலப் போக்கினால் சீரழியும் பெண்களின் நிலையை அண்ணா அவர்கள் இப்புதினத்தில் ரங்கத்தின் மூலமாக உணர்த்துகிறார். இப்புதினத்தின் தலைவியாக இருக்கும் ரங்கம், கணவனின் கயமையை அறிந்து பெரிதும் வேதனையடைகிறாள். தன் தங்கையான தங்கத்தையும் மணக்க வேண்டும் என்ற கணவனின் பேராசையினால், தன்னைப் பலதுன்பங்கட்கு ஆளாக்குவதை உணர்ந்து வருந்துகிறாள். தன் கணவனின் ஏற்பாட்டின் படி தனக்குப் பேய் பிடித்திருப்பதாகக்கூறி, பேயோட்டியை வரவழைத்து, பேயோட்டும் கயவனால் கற்பிழந்தவளாகவும் கருதிக்கொள்ளும் தன் கணவனை ரங்கம் பழிவாங்கும் எண்ணம் கொள்கிறாள். ஆண்களின் கயமையைப் போக்கப் பெண்களே முன்னின்று எதிர்த்து போராடிக் களைய வேண்டும் என்பதை ரங்கத்தின் மூலமாக அண்ணா வெளிப்படுத்துகிறார். ஆணாதிக்கத்தின் காரணமாக, ஆணகள் கற்பை ஒரு பொருட்டாக மதிக்காமல் கண்டபடி அலைந்து திரிந்து பெண்களின் கற்பை அழிக்க முற்படுகின்றனர். ஆனால் அவர்கள் தங்கள் வீட்டுப் பெண்களிடம் கற்பை எதிர்பார்க்கிறார்கள். ஆண்கள் ஒழுக்கமாய் இருந்தாலொழியப் பெண்களின் கற்பு நிலைப்பது கேள்விக்குறி. இதனால்தான்,

"கற்பு நிலையென்று சொல்லவந் தாரிரு/கட்சிக்கு மஃது பொதுவில் வைப்போம்"

என்பார் கவிஞர். குடும்ப ஒழுக்கத்தை குலைக்கும் வகையில் ஆண்கள் கண்டபடி ஒழுகுகின்ற பான்மையினால் ஏற்படுகின்ற கொடிய விளைவுகள் பற்றி மருத்துவர் லலிதாகுமாரியின் மூலம் வெளிப்படுத்துகின்றார் அண்ணா.

"பார் உத்தமி, அந்த அம்மாளுக்கு கடுமையான மேக வியாதி. அவள் புருஷன் எவளெவளிடமோ சம்பந்தம் வைத்துக்கொண்டு, இவளுக்கு இந்நோய் வரும்படி செய்து விட்டான். இவள் பாவம் வெளியே சொல்ல வெட்கப்பட்டுக்கொண்டே இருந்திருக்கின்றாள். நோய் முற்றிவிட்டது. இப்போது இன்ஜெக்ஷன் செய்யும்படியான நிலைமை ஏற்பட்டது. இப்படி புருஷர்கள் அலைந்து அழிந்து, தமது குடும்பத்தை கெடுக்கிறார்கள். இந்த நோய், இவளுக்கு இன்ஜெக்ஷன் கொடுத்துவிட்டால் போய்விடுமோ? கற்பின் மீது கவலை பிறக்கும்படி ஆடவர் யாவருக்குமே அறிவு இன்ஜெக்ஷன் கொடுக்க வேண்டும்" (ப. 114) என ஒட்டு மொத்தமாக ஆண்களின் மேலாண்மைப் போக்கைச் சுட்டிகாட்டுகிறார் அண்ணா.

### காதல் ஜோதி

இந்நாடகத்தின் தலைமை நாயகியாகத் திகழ்பவள் சுகுணா, சந்திரசேகர் ஐயரின் மகளான இவள் இளம் வயதில் விதவையாகி அத்துயரைப் போக்க, மருத்துவராகிச் சென்னையில் பணிபுரிகிறாள். போர்ப்படை வீரராகப் பணியாற்றும் ஏழை உழைப்பாளியின் மகனான தங்கவேலுவைக் காதலித்துப் பல

எதிர்ப்புகளுக்கிடையில் மறுமணம் புரிகிறாள்.சமுதாயத்தில் விதவைப் பெண்கள் அடையும் வேதனைகளை அண்ணா அவர்கள் சுகுணாவின் மூலம் வெளிப்படுத்துகிறார். இதை

"அறியாப்பருவத்திலே விதவையானேன் - அரும்பு....ஜாதி ஆச்சாரம் அரும்பைக் கசக்கி குப்பையிலே வீசிவிட முனைந்தது - துணிந்து போராடினேன் - டாக்டரானேன் - அரும்பு மலராயிற்று. ஆனால் மணமற்ற மலர், காகிதப்பூவாக இருந்தேன்..........எத்தனையோ இரவு கண்ணீர் வடித்திருக்கின்றேன், விம்மி இருக்கின்றேன் - என் மனமோ என் வசம் இருக்க மறுத்துவிட்டது - ஜாதியோ முரட்டு பிடிவாதம் கொண்டது - குருட்டுத் தனமான கொள்கைகளைக் கூறும் வேலை செய்யும் ஜாதி, அதையும் உருட்டி மிரட்டித்தான் பேசும் - விதவைக்கு மறுமணம் என்றால், பேயாட்டமல்லவா ஆடும்.... ஆனாலும் அப்பா சீறினாலும், ஆகமத்தை காட்டினாலும், அண்ணன் கோபித்தாலும், அக்ரகாரம் கொதித்தாலும், சுகுணா பயப்படப்போவதில்லை" (ப. 174 -175) என்று கூறிய சுகுணா, தன் சாதியை - சமுதாயத்தை எதிர்த்துக் காதலில் - கலப்பு மணத்தில் - விதவை மணத்தில் வெற்றியடைவளாகப் படைத்துப் புரட்சி செய்தார் அண்ணா.

### பாவையின் பயணம்

அண்ணாவின் இந்நாடகத்தில் தலைவியாக இருப்பவள் வனசா. இவள் தன் கணவன் தேவன் மருத்துவப் பணிப்பெண் நிம்மி என்பவளுடன் ஒழுங்கீனமாக நடந்து கொண்டான் என்ற குற்றச்சாட்டைக்கூறி வழக்குமன்ற நடுவரிடம் முறையிட்டு திருமண விடுதலையாகிறாள்.சமுதாயத்தில் காலந்தோறும் பெண்களுக்கு ஆண்களால் இழைக்கப்பட்ட கொடுமைகளை அண்ணா அவர்கள் சில நிகழ்வுகளின் மூலம் சுட்டிக் காட்டுகிறார். இது அன்றைய கால கட்டச் சமூக அமைப்பையும் நிலையையும் புலப்படுத்துகிறது.

"இக்காலத்தில், பொருந்தாத் திருமணம், காதலுற்ற கூட்டுறவு இவைகளாலும் ஆடவரின் கொடுமைக்கு ஆளாவதாலும், விபச்சாரமும் விபரீதக் கொலைகளும் மலிந்து விட்டன... ஆடவருக்கும் ஆரணங்குக்கும் வாழ்வில் பொருத்தம் அமையவில்லை. ஒருவரை ஒருவர் வஞ்சிக்கிறார்கள், ஆதிக்க வெறி கொண்டு கொடுமைப்படுத்துகிறார்கள். துரோகம் இழைக்கிறார்கள் என்றால் பாவை போலப் பரிதாப மரணமடையத் தேவையில்லை. சந்திரபாலா போல சண்டாளியாகத் தேவையில்லை. சட்டப்பூர்வமான பரிகாரம் தேடிக்கொள்ளும் சதி - பதி, உறவு இருத்தல் கூடாது என்பதை எடுத்துக்காட்டும் எச்சரிக்கை. தேவன் திருத்தப்படவேண்டுமென்பது மட்டுமல்ல, எந்த ஆடவனும் தேவனாகக் கூடாது - முடிவாக விடுதலைக்குத் தாங்கள் உத்திரவிடுவதன் மூலம் ஆடவர் உலகிற்கு ஒரு அரிய பாடம் - எச்சரிக்கை தந்தவாராவீர்!" என வழக்கு மன்ற நடுவரிடம் வனசா முறையிடுவதை அண்ணா குறிப்பிடுகிறார்.

### முடிவுரை

மேற்கூறிய செய்திகளிலிருந்து அடுப்பூதும் பெண்களுக்கு கல்வி எதற்கு? என்ற கயமையை அண்ணா அவர்கள், பார்வதி பி.ஏ., எனப் புதினத்திற்குக் கல்விப் பட்டத்தை கொடுத்துக் களைவதையும், பார்வதியின் மூலும் பெண்கல்வியை வலியுறுத்துவதையும், அறியலாம். ஆணாதிக்கத்தால் பெண்கள் சமூகத்தில் துன்பமடைவதை ரங்கத்தின் மூலமும், ஆண்களால் பெண்கள் ஏமாற்றப்படுவதை லலிதகுமாரி, உத்தமி, ஆகியோரின் மூலமும் வெளிப்படுத்தி இத்தகு அவலநிலை சமூகத்தில் நீங்க வேண்டும் எனக் கருதுகிறார். இளமை மணத்தாலும், பொருந்தா மணத்தாலும், பெண்கள் அடையும் விதவை நிலையைச் சுட்டிக் காட்டும் அண்ணா அவர்கள் சுகுணாவின் மூலம் அதற்குரிய மாற்றத்தை வெளிப்படுத்தி பெண்ணியச் சிந்தனைக்கு வித்திடுகிறார். பெண் விடுதலைக்குக் குரல் கொடுக்கும் இலட்சியப் பெண்ணாக வனசாவைப் படைத்து அவளை விடுதலை நாயகியாக்குவதோடு, குமாரும் பார்வதியும் ஒருவரை ஒருவர் புரிந்து கொண்டு மணப்பதாகக் காட்டி பெண்ணியத்தை வெளிப்படுத்துவதையும் அறியலாம்.

### சான்றொண் விளக்கம்

1. இரா. பிரேமா, பெண்ணியம் - அணுகுமுறைகள், ப. -1
2. பட்ங சங்ஜ் உய்ரீஹ்ஐரீப்ர்ல்ங்ஹக்ண்ஹ ஆழ்ண்ற்ஹய்ண்ரீஹ, ட. 735
3. இரா. பிரேமா, பெண்ணியம் - அணுகுமுறைகள், ப. -4
4. முத்துச் சிதம்பரம், பெண்ணியம் தோற்றமும் வளர்ச்சியும், ப. -9
5. சண்முகசுந்தரம் (தொகு), பெண்ணியமும் கலை இலகக்கியப் பிரதிகளும், ப. 13
6. பாரதியார் பாடல்கள், ப. 578

# பெண் கவிஞர்களின் கவிதைப் போக்குகள்

*அ.நந்தினி,* முனைவர் பட்ட ஆய்வாளர், தமிழ்த் துறை,
கிராமியப் பல்கலைக்கழகம், காந்திகிராமம்.

இன்றைய கவிதையுலகு பெண்கவிஞர்களின் உலகாக உள்ளது. நவீன சிந்தனைகளை உள்வாங்கி வெளியிடும் தன்மையில் பெண்கவிஞர்கள் முன்னுக்கு நிற்கின்றனர். பெண்களுக்குத் தொடர்ந்த காலங்காலமான அடக்குமுறைகள் இப்பொழுது சற்று மாறி வருகின்றன. அனைத்துத் துறைகளிலும் பெண்களின் பங்களிப்பு முக்கியத்துவம் நிறைந்ததாக மாறி வருகிறது. இந்நிலையில் பெண்கள் ஆண்களைச் சார்ந்து வாழும் அடிமை வாழ்வு நிராகரிக்கப்பட்டு ஆணும் பெண்ணும் சமம் என்ற சமத்துவ உலகு இப்பொழுது சாத்தியப்பட்டுள்ளது. இந்நிலையில் பெண்ணை அடிமைப்படுத்தி வைத்திருந்த கட்டுமானங்களைக் கலைத்துப் போடவேண்டிய அவசியம் பெண்ணுக்கு ஏற்படுகிறது. அவ்வகையில்தான் இன்று மரபுரீதியான அடிமைப்படுத்தும் கருத்துக்களையும், பழக்கங்களையும் கவிஞர்கள் மறுவாசிப்புக்கு உட்படுத்தி வருகின்றனர். பெண்கவிஞர்களின் கவிதைப் போக்கு என்பது அவரவர் சார்ந்துள்ள வாழ்க்கை, இணைந்துள்ள அமைப்பு என்ற தன்மையில் வித்தியாசப்படுகின்ற நிலையையும் காணமுடிகிறது. அவ்வகையில் பெண் கவிஞர்களின் கவிதைப் போக்குகள் குறித்து ஆராய்வது இக்கட்டுரையின் நோக்கமாகிறது.

எழுபதுகளில் எழுதத் தொடங்கிய திரிசடை, இரா.மீனாட்சிக்குப் பிறகு பெண்ணிய வீச்சோடு பெண் படைப்பாளிகள் அதிகமாய் கவிதையுலகில் அடியெடுத்து வைத்திருப்பது தொண்ணூறுகளின் இறுதியிலும் இருபதாம் நூற்றாண்டிலும்தான் எனலாம். அவ்வகையில் குறிப்பிடத்தக்க பெண் கவிஞர்களாக இளம்பிறை, சல்மா, அ.வெண்ணிலா, கனிமொழி, திலகவதி, திலகபாமா, மாலதிமைத்ரி, குட்டிரேவதி, கிருஷாங்கினி, சுகிர்தராணி... போன்றோரைக் கூறலாம்.

பெண்ணியம் ஒரு கோட்பாடாகத் தோற்றம் பெற்ற பிறகு இலக்கியங்களில் பெண்ணியச் சிந்தனைகள் வலுப்பெறலாயின. அதன் விளைவாக படைப்பாளிகள் தமக்கான உரிமைக்குரலை உரத்து முழங்கத் தொடங்கினர். குடும்பத்தில், சமூகத்தில் தான்படும் அவஸ்தைகளை, துயரங்களை, சந்திக்கும் பிரச்சனைகளை பதிவு செய்யத் தொடங்கினர். அடங்கிக்கிடந்த பெண்களின் மன உணர்வுகள் கவிதைகளாயின. பெண் சமூகம் வரையறுத்த எல்லைக்குள் வாழவேண்டிய நிர்பந்தத்திற்குத் தள்ளப்பட்ட தன்மையிலிருந்து விடுபடவும் தலைப்பட்டாள். இவ்வெதிர்ப்புணர்வுகள் எழும்பத் தொடங்கிய பிறகு எழுதத்துணிந்த பெண் கவிஞர்களின் கவிதைப் பாடுபொருளும் மாறுபட்டன. மரபு ரீதியான கட்டுப்பாடுகளை மீறவேண்டிய அவசியம் உணரப்பட்டதன் விளைவாகத் தன் மன உணர்வுகளை விடுதலையை, உரிமையை முன்வைக்க பயன்படுத்தப்பட்ட மொழியும் ஆணின் மொழியாக அமைந்ததால் பெண் தனக்கான மொழியை உருவாக்கும் அவசியம் உணரப்பட்டது. இதனை அமுக்கப்பட்ட பெண் தனக்கான மொழியை உருவாக்கிக் கொள்ள கவிதை வடிவே சிறந்த சாதனம் என்கிறார் கோராகப்லான் என்ற பெண்ணியவாதி (க.பஞ்சாங்கம், பெண்–மொழி–புனைவு, ப.73).

மொழியின் மாற்றுக் கட்டுமான அவசியத்தை உணர்ந்துள்ள நிலையில், கவிஞர் கனிமொழி, என்னை வெளிப்படுத்திக் கொள்ள இதைவிட எளிதாய் ஒரு வழி தெரியாததால் கவிதை என்ற ஒரு வடிவத்தைத் தேர்ந்தெடுத்தேன் என்கிறார். சுய அடையாளத்தைத் தேடும் இவரது கவிதைகளில், பெண்கள், சமூகம் வரையறுத்த மரபுக்குள் வாழ நேர்ந்ததின் அவலத்தையும், மீறி வெளிவந்த தன்மையையும் காணமுடிகிறது. இதனை,

> எமக்கு என்று/சொற்கள் இல்லை
> மொழி எம்மைஆகியவற்றின் தோற்றம்இணைத்துக் கொள்வதுமில்லை.
> உமது கவிதைகளில்/ஆகியவற்றின் தோற்றம்யாம் இல்லை.
> எனக்கென்று சரித்திரமில்லை./நீங்கள் கற்றுத் தந்ததே நான்,
> வார்த்துத் தந்ததே நிஜம்/எனக்கென்று கண்களோ
> செவிகளோ, கால்களோ/இல்லை,
> அவ்வப்போது நீ இரவலாய்/தருவதைத் தவிர (கருவறை வாசனை, ப.15)

என்ற வரிகள் மூலம் பெண் சம்பந்தப்பட்ட எல்லா விசயங்களுமே சமூகத்தால் தீர்மானிக்கப்பட்டதையும், சுயமாய் இயங்க முடியாதவாறு கட்டமைக்கப்பட்ட சமூக மரபையும் சுட்டிக்காட்டுகிறார். இத்தகைய மரபுரீதியான

கட்டுப்பாடுகளைக் களையும் நோக்கோடு இவரது கவிதைப் போக்கு அமைகிறதைக் காணமுடிகிறது.

ஆணுலகு, பெண் மனதில் அகலிகை, கண்ணகி, சீதை, நளாயினி, சாவித்திரி போன்ற தொல்படிமங்கள் மூலம் பெண்ணடிமைத் தனத்தை கருத்தியல் ரீதியாக புகுத்தியது. இதனை உள்வாங்கிக் கொண்டு, அத்தொல்படிமங்களை மீட்டுருவாக்கம் செய்வதாக, பெண்ணின் மன அழுத்தத்தைத் தெரிவிப்பதாக அமைகிறது. கவிஞர் திலகபாமாவின் கவிதைகள். இதனை,

அசத்திய இந்திரனுக்கும்/அச்சம் தந்த முனிக்குமிடையில்
இறுகிப்போன உணர்வு தன்னோடு/இரும்புக் கடலை அவிழ்த்து
கரும்பாக்கிப் போடும்/காதல் மனம் எனக்கு (சூரியாள், ப.19)

என்று இந்திரனை விரும்பும் அகலியைக் காட்டுகிறார். மேலும்

மதுரை எரித்த கண்ணகியின்/மார் அக்கினியின் எச்சம்
எடுத்து வைத்தேன்/மாதவி நாடிப் போகும்
கோவலன்களை எரிக்க (மேலது. ப.33)

என்று முறைதவறி வாழும் கோவலன்களை எரிக்கிறார் கவிஞர். இங்கு கற்பு என்பது பொதுவில் வைக்கப்பட்ட தன்மையையும், மரபுகளும், மாண்புகளும் மனிதர்க்குப் பொதுவே என்ற தன்மை கொண்டதாகவும், இவரது கவிதையின் போக்கு உள்ளதை அறிய முடிகிறது.

எதார்த்த வாழ்வில் பெண் சந்திக்கும் பல்வேறு பிரச்சனைகளே பாரதி கண்ணம்மாவின் கவிதைகளாகின்றன. தன் வாழ்வில் சந்தித்த துயரங்களே இவரது கவிதைகளின் கருப்பொருளாக அமைந்துள்ளன. துன்பமே வாழ்வாகிப்போன நிலையில் துயரத்தின் வடிகாலாய் இவர் கவிதையைத் தேர்ந்தெடுத்திருக்கிறார். இதனை,

கிறுக்க முயன்ற போதெல்லாம்/பேனாவோடு சேர்த்து
விரல்களையும் நொறுக்கிய/வேதனைகள் (பாரதி கண்ணம்மா கவிதைகள், ப.58)

என்று தன் எழுத்துக்களுக்கு ஏற்பட்ட சோதனையைக் கூறும் கவிஞர், பெண்ணை அடக்கியாள ஆண் கையாளும் வழிமுறையாக தாய்மை நிலை உள்ளது என்கிறார். இதனை,

பெண்ணை / சரியாக நடத்தாதே
சரித்துப்போடு – அவளை / அறிவாளியாக அனுமதிக்காதே
அவமதித்து அடக்கு / கடைசியில் அவளை
அடக்கியாள்வதற்கு / வயிற்றை நிரப்பு

என்ற வரிகளால் அறியமுடிகிறது. பெண்களின் பிரச்சனைகளை வெளிச்சமிட்டுக் காட்டும் இவர், அதிலிருந்து மீளும் வழிமுறைகளையும் கூறத்தவறவில்லை. ஆணின் தேவையைத் தீர்க்க வந்த போகப்பொருள் மட்டுமல்ல பெண் என எதிர்க்கும் தன்மைகொண்ட கவிதைகளைத் தனது களமாகக் கையாண்டுள்ளார்.

ஒரு பெண் இயல்பாய் இருப்பதால் எதிர்கொள்ளும் பிரச்சனைகளை கவிதையாக்குகிறார் கவிஞர் இளம்பிறை. இயல்பான எளிமையான மொழிநடையில் இவரது கவிதைகள் உள்ளன. இளம் வயதில் தம் உணர்வுகளோடு இரண்டறக் கலந்துவிட்ட கிராம வாழ்க்கை பற்றியும், மனதோடு ஒட்டாமல் போய்விட்ட நகரவாழ்க்கை பற்றியும் இவரது கவிதைகள் பேசுகின்றன. தமிழச்சியின் கவிதைகளிலும் இத்தகைய கிராமிய வாழ்க்கையோடு இயைந்த போக்கையே காணமுடிகிறது.

இறந்த வீட்டில் / ஒப்பாரி ஓய்ந்தபொழுது,
அமர்ந்திருந்த என்னருகே / விசும்பலாய்க் கேட்டது
என் வீட்டுச் செங்கல் ஒலி! (எஞ்சோட்டுப் பெண், ப.134)

கிராம வாசனையுடன் கூடிய கவிதையின்மூலம் உறவுகளின் உன்னதத்தையும் உயிர்போன பின்பு ஏற்படும் உறவின் வெறுமையையும் எடுத்துக் காட்டுகிறார் தமிழச்சி. இவரின் கவிதைகளில் இழந்துபோன உறவுகளைப் பற்றிய ஏக்கம் அதிகமாக இருப்பதைக் காணமுடிகிறது.

தான் வாழும் சமுகச் சூழலும், அது ஏற்படுத்திக் கொடுத்த தனிமையும், குடும்ப உறவுகளின் அதிக எதிர்பார்ப்பும், அதனால் விளைந்த ஏமாற்றமும் சல்மாவின் கவிதைகளாகின்றன. பெண்மொழி இவரது கவிதைகளில்

நுட்பமாக வெளிப்படுகின்றன. இதனை,

> எண்ணற்ற ஜடப்பொருட்களுடனும் / ஒரு மனிதனோடும்
> தொடரவியலா வாழ்க்கை /தொடர்கிறது அதே அறையில்

என்ற வரிகளில் காணமுடிகிறது. இங்கு பெண்ணின் ஆசைகள் அமுக்கப்பட்ட தன்மையை எடுத்துரைக்கிறார். இவரின் கவிதைப் போக்கு என்பது கூட வெட்டிவிட முடியாத ஆணின் துணையுடனேயே தொடர்கிறது. பெண்ணுக்கான சுதந்திரத்தைத் தேடி என்றும் கூறலாம்.

தினசரி பெண் எதிர்கொள்ளும் இன்ப, துன்ப உணர்வுகளும், சங்கடங்களுமே வெண்ணிலாவின் கவிதைகளாகின்றன. அலுவல் மகளிரின் சிக்கல்களை மிக நுட்பமாக வெளிப்படுத்துகிறார். இவரது கவிதைகள் காட்டும் அவலம் ஆழமான துயரத்தை வெளிப்படுத்தவும் செய்கிறது.

> மணமிக்க பூச்சூடிக் கொள்கிறேன்
> கூடுதலாய் முகப்பவுடரும்
> புடவைகளுக்குக் கூட
> வாசனைதிரவியம் பூசி வைத்துள்ளேன்
> வியர்வையைக் கழுவிக் கழுவி
> சுத்தமாய் வைத்திருப்பதாய்
> நினைத்துக் கொள்கிறேன் என்னை,
> அத்தனையையும் மீறி ஆடைக்குள்ளிருந்து
> தாயின் வாசம் சொட்டு சொட்டாய்
> கோப்புகளில் இறங்குகிறது.
> அவசரமாய்
> அலுவலக கழிப்பறையில் நுழைந்து
> பீச்சிவிடப்படும் பாலில் தெறிக்கிறது
> பசியைத் தின்று அலறும்
> குழந்தையின் அழுகுரல்

என்ற கவிதையின் மூலம், பெண்ணின் இயற்கைத் தன்மைகள் கூட எவ்வாறு நெருக்கடியான இக்காலச் சூழலில் துன்பத்தைக் கொடுக்கிறது எனத் தெரிவிக்கிறார். இங்கு பெண்ணின் உடல் மீதான மறுவரைவு அவசியப்படுவதையும் நுண்மையாகக் காணவேண்டியுள்ளது.

தனக்கான இருப்பை பதிவு செய்திருக்கிறார் லீனா மணிமேகலை. இவர்கள் மட்டுமின்றி திலகவதி, குட்டிரேவதி, மாலதி மைத்ரி, ஆழியாள் போன்ற கவிஞர்கள் நவீன பெண்ணியச் சிந்தனைகளை உள்வாங்கி எழுதிக் கொண்டிருப்பவர்களில் குறிப்பிடத்தக்கவர்கள்.

இதன்மூலம் நவீனப் பெண்கவிஞர்களின் கவிதைகள் பல்வேறு தளங்களில் இயங்குவதைக் காணமுடிகிறது. மரபு சார்ந்த கருத்துக்களை மீட்டுருவாக்கம் செய்வதாகவும் தொன்மங்கள் விசாரணைக்கு உட்படுத்தப்படுவதாகவும் உள்ளன. மேலும் சில கவிதைகள் தனிப்பட்ட உணர்வுகளின் வெளிப்பாடாய் அமைந்துள்ள போக்கையும் காணமுடிகிறது. பெண்களின் உணர்வுகளுக்கு ஆண்களும் மதிப்புக் கொடுக்க வேண்டும். அப்பொழுதுதான் பெண்ணின் வாழ்வும், கவிதைக்களமும் சமத்துவம் மிக்கதாக மாறமுடியும். அதற்கு அடித்தளம் இடுவதாகத் தற்பொழுது பெண் கவிஞர்களின் கவிதைப் போக்குகள் பன்முகத்தன்மை கொண்டாக அமைந்துள்ளதைக் காணமுடிகிறது.

# ஆண்டாள் பிரியதர்ஷினியின் கவிதை வெளிப்பாடு

முனைவர். *சு. நயினார்,* தமிழ் விரிவுரையாளர் (மு.நி),
அ. ஜானகியம்மாள் கல்லூரி, (த) சிவகாசி.

இருபதாம் நூற்றாண்டு கவிஞர்களுள் பாதியார், பாரதிதாசன், ஜீவானந்தம், பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரம் போன்றோர் பொதுவுடைமைச் சிந்தனையைக் காண எண்ணி ஏங்கியவர்களாவர். அவர்களுள் பாரதி வெகுமுன்னேற்றம் கண்டவர். இந்நூற்றாண்டில் பொதுவுடைமை, பெண்ணியம், தலித்தியம் காண விழையும் நோக்கத்தைக் கவிஞர்களிடையே பரவலாகக் காணலாம். அவ்வகையில் ஆண்டாள் பிரியதர்ஷினியின் சிந்தனை வெளிப்பாடு கவிதைகளில் சிறந்து நிற்கிறது எனலாம். இவரெழுதிய "தோகையெல்லாம் துப்பாக்கிகள், புதிய திருப்பாவை, சுயம்பேசும்கிளி, முத்தங்கள் தீர்ந்துவிட்டன" போன்ற கவிதைத் தொகுப்புகள் குறிப்பிடத்தக்கன. இவரது கவிதைகள், காதல் - அன்பு, வீரம், விரக்தி, வெறுப்பு, வேதனை வெளிப்பாடு, பெண்ணியம், தலித்திய விடுதலை போல்வனவற்றை உள்ளடக்கமாகக் கொண்டிலங்குகின்றன. அந்த வகையில் ஆண்டாள் பிரியதர்ஷினியின் கவிதை வெளிப்பாட்டினை "முத்தங்கள் தீர்ந்துவிட்டன" வழி ஆய்வதாக இக்கட்டுரை அமைகிறது.

சமூகப் பொறுப்புணர்ந்து பாடும் ஆண்டாள் பிரியதர்ஷினி. ஒரு பெண் காதல்-அன்பு-அரவணைப்பு எல்லாவற்றையும்

"போகத்துக்கும் மோகத்துக்கும்/சோகத்துக்கும் தாய்மைக்கும்"/முத்தங்களாகக் கொடுத்துவிட்டு அப்பெண் எதையும் பதிலாகப் பெறுவதில்லை எனப்பாடுகிறார்.

"முத்தக் கடையின் கதவு/திறக்க முயலுகையில்தான்/முத்தங்கள் தீர்ந்துவிட்டன"

என்பதை அவள் உணர்வதாக கவிஞர் உணர்த்துகிறார். இவர் பெண்ணைக் காயப்படுத்தும் நிலையை எண்ணி,

"கரப்பான் தின்றும்/எலிகரம்பியும் வெம்பியும்/கமறலும் குமுறலுமாகிய சமூகத்தை" - சலிப்பைக் காட்டுகிறார்.

நாட்டுநலனை வீட்டிலிருந்தே வளர்க்க விரும்பும் கவிஞர், தாய்மைக்கும் - பிள்ளைக்கும் இடையே உள்ள தொப்புள் கொடி உறவை முன்வைக்கிறார். பிறக்கும்வரை பிரச்சனையில்லாத பிள்ளை தொப்புள் கொடி துண்டிப்பு நேர்ந்ததும்.

"சாத்தானின் சகவாசம்/அதன் பின் சகல நாசம்" போக்கைத் தடுக்க/"ரத்தக் கொடி பறக்கவிடாமல்/காது கொடுக்கட்டும்" என்ற வழிமுறைகளைத் தொப்புள் கொடியிலிருந்தே தொடங்கி சமூக மேன்மை வளரப் பாடுபடகிறார். நகர வாழ்க்கை, சிக்கலாக மாறிவரும் இன்றையச் சூழலில் கிராமங்களும் மாற்றமடைந்து வருவதை நினைத்து இவர் மனம் வெதும்புகிறார்.

"சுரைக்காய்க் கூரையில்"/ஆண்டெனா காய்ப்பு" எனக்கூறி தொலைக்காட்சியைச் "சதுக்கப் பூதம்" என்று உருவகப்படுத்துகின்றார்.

"கவலையின்றி /நரபலி தருகிறது/நாணச் சுவர்களை /நொறுக்கிவிட்டதும்
விளையாட்டு மைதானத்துக்கு//ஈக்களை அனுப்பி விட்டுக்/குழந்தைக்கறி தின்கிறது"

என்று தொலைக்காட்சியைப் பற்றிப்பாடுவது இவர் ஒரு சமூகப் பொறுப்பாளி என்பதை உணர்த்துவதாக உள்ளன.

ஐந்தறிவு படைத்த உயிர்களிடத்துக் காணலாகும் ஒற்றுமை மனிதனிடத்தில்லாததை

"சுவர் இல்லாமல்
மிருகம் இருக்கிறதே
மினதனை விடவும் மனிதமாய்? எனக் கேட்பது எல்லோரையும் சிந்திக்கத் தூண்டுவதாகும். அத்துடன் மனிதன் போட்டி, பொறாமையின்றி அமைதியாக வாழ விரும்பும் கவிஞர்
"சுவர் உடைபடும் சமயந்தான்/துப்பாக்கி/துருப்பிடிக்கும் நேரம்" என்பதை உலகுய்ய வழி கூறுகிறார். அமைதியை நாடும் இவரது கவிதையில்,

" குழந்தைகள்/மணல்வீடு கட்டும்போது /கையில் கிடைக்கும்

துண்டு துண்டாய்/கண்ணாமூச்சு ஆட்டத்தில்/துப்பாக்கியே /தொடுமுனை களாகவும்

பூக்களைப் பறிக்யையில் /தோட்டா மொட்டு /விதையாய் கிடைக்கும்"/என வன்முறைக் கொடுமைகளைக் குறிப்பிடும் கவிதைகளுள் அவல உணர்ச்சி ததும்புவதைக் காணலாம்.

பெண்ணைப் பிரித்துப் பார்க்கும் பெற்றோர்கள் பெண்ணின் மனசால் ஆனதை அறிவார்களா? எனக் கேட்கிறார் கவிஞர். ஆண்கள் பெண்களை ஊனப்படுத்தி, அவர்களது மனநிலை தேயும்படி செய்வதை,

"அமில எதிர்ப்பால்/மூச்சடைந்து போனாள் அவள்"

என தமது கவிதைகளில் வழி வேதனையைப் புலப்படுத்துகிறார். ஆணுக்கு அம்லெட்டும் பெண்ணுக்கு ஆஃபாயிலும் வழங்கும் நிலை கூடாதெனும் கருத்தை,

"ஸ்நேகதாகத்தில்/தகித்திருந்த /அவளின் நாவுக்குக்

கிடைத்தன அமிலத்துளிகள்"/என்று பெண்ணிற்கு இழைக்கப்படும் கொடுமைகளை இவர் சுட்டுகிறார்.

பெண் உரிமையில் பெண்களுக்கு மறுக்கப்படும் நிலையைப் பார்க்கும் கவிஞர் பெண்ணும் சிந்தித்துச் செயல்படக்கூடியவள். அவளை அடிமையாக்கக் கூடாதென்கிறார். ஆயினும் ஆண் அவளை அடிமையாக நடத்தும் போது,

"பெண்ணுக்குத் தேவையாயிருக்கிறது /வெற்றிடம்/குண்டுசி முனையாவது

திரிசங்கு மாதிரி/இடமில்லா இடமாவது"

என அப்பெண் வேறிடம் தேடும் முயற்சிக்கு இவர் குரல் கொடுக்கின்றார். மேலும் அவளை,

"விதைக்கும் வெற்றிடம் தேடி/ஜென்மாந்திரக் கனவு சுமந்து/ஒற்றைக் கரையுடன் /பாயும் ஆறெனத் திரியும்"/பெண் ஓரிடத்தை தேர்வு செய்ய ஒற்றைக் கரையுடன் செல்வதாக நினைத்து இவர் வேதனையடைகிறார். பெண் தனிமையாக - தன்னந்தனியாக - ஆக்கப்படுவதையும், அவளது சிறகுகள் ஒடிக்கப்படுவதையும் இவர் தமது கவிதைகளில் சுட்டுகிறார். மீன் தொட்டி இல்லாமல் உள்ளங்கை நீச்சலுக்கா மீன்? என விளிக்கும் கவிஞர். எழுதப்படாத சட்டங்களால் பெண்கள் சிறைபட்டிருப்பதைக் காட்டத் தவறினாரில்லை.

பெண்ணுக்குப் பேச்சுரிமை மறுக்கப்படுவதையும் ஆண் பெண்ணை உயிர்வதை செய்வதையும் முறையே, "வார்த்தைச் சடலம் தூக்கில் தொங்குகிறது!" "வார்த்தைக்கத்தி கூர்மையாய்த் தொங்குகிறது" எனக் கவிஞர் ஒப்பீடு செய்கிறார்.

"அனல்பதன அறையில்
அக்னியில் அவிகின்றன
பெண் சதைகள்"

எனும் வரிகள் பணிபுரியும் மகளிர் சிக்கலைச் சுட்டுவதாக உள்ளன. "இறுக்கிய நாடாவின் யுகாந்திரத் தழும்பு, தளும்புகிறது அவளுக்குள்" எனப் பாலியல் பாலாத்காரக் கொடுமைக்குள்ளாகும் பெண்களையும், பெண்ணுக்காக நீலிக்கண்ணீர் வடிக்கும் மானுடர்களையும் இவர் அடையாளம் காட்டத் தவறினாரில்லை.

ஆணாதிக்கப் பிடியிலிருந்து பெண் விடுபட "அராஜக உயிலைத் தகர்த்தெரிக்க வேண்டுகிறார். பெண்ணைப் பிணைத்துக் கட்டியிருக்கும் கட்டுத்தளைகளை வெட்டியெறிந்து பெண்கள் விழிப்புணர்வு பெற வழிவகுக்கிறார். "எனது சிறகைச் சிறைபடுத்திச் சிறுமையும் செய்கிறது. கொத்தடிமையாக்கி முளையில் கட்டித் துரத்துகிற பெண்களின் அவலநிலையைக் கண்டு இவர் மனம் வெதும்புகிறார். பெண்ணின் மேல் படியும் பனித்துளி, பாறையாகாமல் உடைத்தெறிந்து "முள் முறித்துப் பறக்க வேண்டுமெனத் தமது எண்ணக் குரலை ஒலிக்கச் செய்கிறார்.

ஆண்டாள் பிரியதர்ஷினி மானுட வாழ்வின் சிக்கலுக்குத் தீர்வுகாண, கவிதையைக் கையிலெடுத்துக் கொண்டு உரத்த சிந்தனையுடன் வலம் வருகிறார். பெண்ணியத்தின் கொள்கைகளால் தாக்கமும் பாதிப்பும் பெறுபவராகத் திகழ்கிறார் எனலாம். விதியினை நோவாமல் வெளிவரத்துடிக்கும் இயல்பினை சமூகப் பொறுப்புணர்ந்து பாடும் இவர் பெண்ணியக் கவிஞர்களுள் நிலைத்த இடத்தைப் பெற்றுத் திகழ்வது பாராட்டுக்குரியது. இவர்தம் பிற படைப்பிலக்கியங்களை விரிவாக ஆராய்ந்தால் இவரது ஆளுமைப்பண்புகள் முழுமையாக வெளிவரக்கூடும்.

# பெண்கவிஞர்களின் பார்வையில் பெண்ணியம்

*இரா. நாகவேணி*, எம்.ஏ. எம்.ஃபில்.,
அறிஞர் அண்ணா அரசினர் மகளிர் கலைக்கல்லூரி, வாலாசாபேட்டை.

தமிழ்க் கவிதைப் படைப்பில் அன்றுதொட்டு இன்றுவரை ஆண்களின் பங்களிப்பை விட, பெண்களின் பங்கு மிகக் குறைவானதாகவே உள்ளது. பெண்ணின் நிலைபற்றிய விழிப்புணர்வு மிகுதியாக பரவிக் கொண்டிருக்கின்ற இக்கால கட்டத்தில், பெண்ணின் படைப்பு முயற்சி பின்தங்கிய நிலையில் உள்ளது.

பெண் கவிஞர்களின் படைப்புகளை அடிப்படையாகக் கொண்டு அவர்களை மூன்று வகையினராக அதாவது, மரபுக்கவிஞர்கள், வடிவக்கவிஞர்கள், பெண்ணியக் கவிஞர்கள் என்று பிரித்துவிடலாம். இதில் முதல் வகையினரின் கவிதைகள் வடிவத்திலும் பாடுபொருளிலும் மரபு வழிபட்டதாக இருக்கும். இரண்டாம் வகையினரின் கவிதைகள் புதுக்கவிதை வடிவத்தில் இருக்கும் ஆனால் பாடுபொருள் முதல்வகையினரை போன்றே அமைந்திருக்கும் மூன்றாம் வகையினரின் கவிதைகள் இந்த இரண்டு தன்மையிலிருந்தும் மாறுபட்டு பெண்ணிய நோக்கு, உலகமயமாதலின் விளைவுகள் ஆகியவை பற்றிய சிந்தனைகளின் வெளிப்பாடாக அமைந்திருக்கும்

அவ்வகையில் பெண்ணிய நோக்குடன் எழுதிய பெண்கவிஞர்களாக திலகபாமா, மாலதிமைத்ரி, சல்மா, சுகந்தி சுப்ரமணியன், இளம்பிறை, வெண்ணிலா, சுபத்ரா, வத்ஸலா, குட்டிரேவதி, கனிமொழி, உமா-மகேஸ்வரி, சங்கரி, சிவரமணி, ரங்கா, சன்மார்ககா, தாமரை, செல்வி முதலானோரைக் குறிப்பிடலாம். இவ்வகையினரைப் பொறுத்தவரை பாடுபொருள் முதன்மை பெறுகிறது. பாடுபொருளின் வழியாக வடிவம் தீர்மானிக்கப்படுகிறது.

## பெண்ணிய கவிதைகளின் போக்கு

பெண்கள் தம் கவிதைகளில் அவர்கள் சமூகரீதியாகச் சந்திக்கும் இன்னல்கள், உடலாலும், உணர்வாலும் அடையும் துன்பங்கள், சமூகத்தில் அவர்களின் மதிப்பு முதலானவைகளைப் பாடுபொருளாக வைத்து அமைத்துள்ளனர்.

பெண் தான் உணர்வதை, அனுபவிப்பதை, ஆண் படைப்பாளியை விடத் துல்லியமாக வெளிப்படுத்த முடியும். பெண்களின் கவிதைத் தொகுப்பான பறத்தல் அதன் சுதந்திரம் என்ற நூலைப் படித்த ஜெயமோகன் "மிகப் பெரும்பாலான கவிதைகளை அந்தரங்கமான டைரிக்குறிப்புகள் என்று மட்டுமே கூறமுடியும் என்று கூறியிருப்பது" இங்கு குறிப்பிடப்படவேண்டிய ஒன்றாகும் (காலச்சுவடு மே-ஜூன் 2003 பக்-33 இராஜமார்த்தாண்டன், தமிழ்ப்பெண்கவிஞர்கள்) இவ்வகைக் கவிதைகள் எதிர்ப்பு நிலைக் கவிதைகள் எனும் பாகுபாட்டிற்குள் அடங்குவனவாக உள்ளன.

## இருப்புநிலை

முதலில் பெண் தன்னுடைய இருப்பை உணர்வது என்பது விழிப்புணர்விற்கான, அடிப்படையாகும் அவ்வகையில் இது சமூகரீதியான இருப்புநிலை, அகரீதியான இருப்புநலை என்று வகைபடுத்தப் பெறும்.

## சமூகரீதியான இருப்புநிலை

சமூகத்தில் தான்படும் இன்னல்களைப் பெண்கள் தாங்களே தங்கள் படைப்புகளில் கூறமுன் வரும்போது அந்தப்படைப்பு உண்மை என்ற கூறோடு சேர்ந்து உருவாகிறது. பெண் பூப்பெய்தியவுடன் அவள் வீடே அவளுக்குச் சிறையாகி, அவளைக் கட்டுப்படுத்தி வைத்திருப்பதை,

"... ... .... ஓர் மாஸ்லைப்பெழுதில்
அம்மா என்னை அறைக்குள் இருத்தினாள்
... ... ...
வான வெளிக்கும் அதற்கப்பாலும்
நீண்டு நீண்டு விரிந்த என் கனவுகள்
அன்றே ஒடுங்கின
ஜன்னல் கம்பியும் வீட்டு மதிலும்
எனது இருப்பை வரையறை செய்தன" (செல்விசிவரமணி கவிதைகள் பக்.36-37)

என்று காட்டுகிறார் செல்வி எனும் கவிஞர். மேலும்,

"தாவணி போட்டது என்
கலைகளுக்குத் தடை
கால்களுக்குத் தடை
விரல்களுக்குத் தடை
எண்ணங்களுக்குத் தடை
படிப்புக்குத் தடை..." (சிறகுகளோடு அக்கினி பூக்களாய், பக்.54)

என்ற திலகபாமாவின் கவிதையும் இந்நிலையை விளக்குகிறது.

ஒரு பெண் சமுதாயத்தில் ஆண்களால் எவ்வாறெல்லாம் நோக்கப்படுகிறாள் என்பதைச் சங்கரி,

"எனக்கும்/முகம் இல்லை
இதயம் இல்லை/ஆத்மாவும் இல்லை
அவர்கள் பார்வையில்/இரண்டு மார்புகள்
நீண்ட கூந்தல்/சிறிய இடை
பருத்த தொடை/இவைகளே உள்ளன
.......
அவர்கள்/எப்போதும் எனது உடலையே
நோக்குவர்/கணவன் தொடக்கம்
கடைக்காரன் வரைக்கும்/இதுவே வழக்கம்" (சொல்லாத சேதிகள், பக்9-10)

என்ற கவிதையில் கூறியுள்ளார். பெண் என்றாலே பெண்ணுடல் என்ற கருத்தும், பார்வையும் நிலை பெற்றுவிட்ட சமூகச்சூழல் இங்கு காட்டப்படுகிறது. அவளும் ஒரு உயிர் என்றோ. அவளுக்கும் இதயம், அறிவு எல்லாம் உண்டு என்பதையோ யாரும் நினைத்துப் பார்க்காத நிலையும் இங்கு சுட்டப்பட்டுள்ளது. பெண்ணின் விருப்பு வெறுப்புகளுக்கு எப்போதும் மதிப்பளிக்காத சமூகத்தை வனிதா,

"அழைத்தார்கள்/ மணமேடைக்கு
ஏறினேன்/ தூக்கு மேடையாய்
கட்டினார் தாலிகயிற்றை/ ஏற்றுக்கொண்டேன்
தூக்குக்கயிராய்/ வீட்டிற்குள் வா என்றனர்
மருமகளாய்/ புகுந்தேன் பிணமாய்
சாகும் வரை/ யாரும் கேட்கவில்லை
என் கடைசி ஆசையை/ (குடும்பமலர் 12 நவம் 2000 பக் 23)

இவ்வாறு கூறியிருப்பதிலிருந்து தூக்குத் தண்டனைக் கைதியின் கடைசி ஆசையும் கேட்கப்பட்டு நிறைவேற்றி வைக்கப்படும். ஆனால் வாழ்க்கை முழுவதும் தூக்குத்தண்டனை போன்று இன்னலை அனுபவித்து வரும் பெண்ணின் ஆசைகள் மட்டும் யாராலும் கேட்கப்படுவதில்லை என்பதும் பெண்ணின் இயக்கம் ஒரு நடைப்பிணத்தைப் போன்றது என்பதும் இக்கவிதை வழி அறியப் பெறுகின்றன.

அலுவலகத்திற்குச் செல்லும் பெண் வீட்டிலும், வெளியிலும் தொடர்ந்து துன்பத்தை அனுபவித்து வரும் நிலையினை ராணி எனும் கவிஞர்,

"அதிகாலை நான்கு மணி
அலாரமிசைக்கின்ற சுப்ரபாதம்
பாவம் இவளின் பள்ளியெழுச்சி
காயரியும் அவசரித்தில் கையரிந்து
சீறுகின்ற குக்கருக்கும் கீழ்ப்படிந்து
பட்டனில்லையென புயலாய் ஆடிய புருஷன்பின்
பூனையாய் ஒடி உடன் தைத்து"

இவ்வாறு வீட்டு வேலைகளையெல்லாம் செய்து விட்டு, தன் வீட்டுப் பொருளாதார நெருக்கடியைச் சரிசெய்ய தானும் வேலைக்குச் செல்லும்போது தன் கணவனாலும் அலுவலகத்தில் அதிகாரியாலும் அடையும் இன்னலை,

மிக அவசரமாய் அலங்கரித்து
கிளம்புகிறவள் மேல்

கணவன் சீசுகிற விஷச்சாட்டை
யாரை மயக்க?

..

ஓ அழ அவகாசமில்லை
தாமதமாய்ப் போனால்
மேனேஜர் பல்காட்டும்
நேரமாகிறது (ஞானவிடியல் பக் 34)

என்ற கவிதை வரிகளில் கூறியிருப்பதை அறியலாம். பெண் காலையில் எழுந்து வீட்டு வேலைகளையெல்லாம் அவசரமாய் முடித்துவிட்டு அலுவலகம் கிளம்பினால், அவள் கணவனின் சந்தேகப் பார்வைக்கும் அலுவலகத்திற்கு நேரம் தாழ்த்திச் சென்றதால் அதிகாரியின் அசட்டுப் பார்வைக்கும் ஆளாகி, அல்லலுறும் பெண்ணின் அவலநிலையைப் படம் பிடித்துக் காட்டுவதாய் உள்ளது இக்கவிதை.

### அகரீதியான இருப்பு நிலை

சமூகரீதியான பெண் அடையும் இன்னல் இவ்வாறிக்க மாதவிலக்கு, பிள்ளைப்பேறு முதலான காலங்களில் அவள் அடையும் அல்லது பிறரால் உண்டாகும் இன்னல்கள் அவளுள் மனப் போராட்டத்தினை ஏற்படுத்த, அச்சமயங்களில் சில கவிதைகள் உருப்பெறுகின்றன. அதில் திலகபாமாவின்,

"அப்பாவின் மேசையில்/அடுத்த நாள் வீட்டுக்கென
மதுரையில் வாங்க வேண்டிய/மனைச்சரக்குப் பட்டியல்
எனக்கானது ஏதாவது/எழுதியிருக்குமா என

...

எட்டி நான் பார்க்கையில்/பச்சை பாவாடை தாவணியென்
உச்சியில் எழுதியிருக்கு/வெட்கத்தில்
தலை குனிந்து தரைபார்க்க/மாராப்பிட்டு மறைக்க வேண்டிய
நிர்ப்பந்தம் நெஞ்சுக்கு ஏற்பட்டது/நெருடலா? நெகிழ்ச்சியா புரியாது
அடிவயிற்றுள் அலைமோத " (சிறகுகளோடு அக்கினிபூக்களாய், பக் 48,49)

என்ற கவிதை சிறுமியென்ற பருவம் தாண்டும்போது நேரும் மனநிலையை வெளிப்படுத்தும் பாங்கில் அமைந்திருப்பது உணரத்தக்கது. பல சமயங்களில் பெண் தன் நிலையிலிருந்து விரும்பியோ, விரும்பாமலோ ஒதுக்கி வைக்கப்படுகிறாள் என்பதை சுகந்தி சுப்பிரமணியன்,

"பெண்ணே உனக்கென்று/தனியிடம் உருவானது இங்கே
நீ புதிதாய் வயதுக்கு வந்ததற்கு,/அல்லது
மாதந்திர இம்சைகளுக்கு/ அல்லது
குழந்தை பெற்றதற்கு/அல்லது
புதிய நோய் ஒன்றை எதிர்கொண்டதற்கு/மூன்றோ ஐந்தோ என இம்சைப்படும்
தினங்களில்/நகர்ந்து விடாதோ
உன் தனியிடம் தவிர/வேறொரு மூலைக்குக்கூட (புதையுண்ட வாழ்க்கை, பக் 1112)

என்ற வரிகளில் கூறியிருப்பதை அறியலாம். இவ்வாறெல்லாம் அவள் ஒதுக்கி வைக்கப் பட்டிருந்தாலும் சமையல் முதலான அனைத்து வீட்டு வேலைகளையும் தன் வேதனையை வெளிக்காட்டாமல் செய்ய வேண்டிய நிர்பந்தத்தை உண்டாக்கி வைத்துள்ளது சமூகம்.

பெண்ணின் இருப்பானது எப்போதுமே மௌனத்தினாலானது என்பதையும், அவளின் பேசவோ எதிர்க்கவோ உரிமையில்லாத நிலையினையும் இளம்பிறையின் கவிதைகள் இயம்புகின்றன. இதேபோல் எங்கும் எப்போதும் ஒரு பெண்ணுக்கு அழகு மட்டுமே அங்கீகரிக்கப்படுகிறது என்பதை மாலதி மைத்ரியன் நினைத்த பொழுதெல்லாம் வரும் மழை என்ற கவிதையின் மூலம் உணர முடிகிறது.

பெண் கவிஞர்கள் பலரின் படைப்புகளில் இத்தகைய இருப்புநிலை வெளிப்பாட்டுக் கவிதைகளை மிகுதியாகக் காண இயலுகிறது. இந்த வெளிப்பாட்டு நிலையை பண்பாட்டை மீறிய பெண்ணின் வெளி என்று சுட்டுகிறார் அரங்க. மல்லிகா. (பெண்ணியகுரலதிர்வும் தலித்பெண்ணிய உடல் மொழியும் பக்37)

இந்த இருப்பு நிலை கவிதைகளின் இதுவரை படைப்புகளில் விலக்கப்பட்ட பயன்படுத்தப்படாத

மொழி பயன்பாடுகளைக் காணமுடிகிறது. இது பெண்ணுக்கான மொழியைஉருவாக்கல் என்ற பெண்ணியப் பார்வையில் அடங்குவதாகக் கூறலாம்.

## தேடல்

தங்கள் இருப்பைப் பற்றிய விழிப்புணர்வு பெற்ற பெண்கள் தங்களுக்கான உலகம், தங்களுக்கான வாழ்க்கை, தங்களுக்கான மொழி, தங்கைளப்பற்றிய புனைவு என்பன பற்றிச் சிந்தக்கத் தொடங்கியுள்ளனர்.

"நிர்ப்பந்தங்களை நிர்க்கதியாக்கி/விழியால் இராவணனை விரட்டும் சீதையும்
இலட்சுமணக் கோடு கிழிக்கும் கண்ணகியும்/இந்திரனைக் கல்லாக்கிப் போடும்
அகலிகைக்குமான/புனைவு முகங்கள் இனி நாங்கள்
வனைவோம்/மனிதம் உயிர்க்க வைக்கும்/மானுடமுகம் சுமப்போம் (சூரியாய் பக் 9)

என்ற வரிகளில் இதுவரை இருந்த பெண்கட்கான புனைவுகளைச் சிதைத்துப் புதிய படிவங்களைக் காட்டிப் பெண்ணுக்கான வழக்கமான தொன்மப் பயன்பாட்டை எதிர்மறை அமைப்பில் காட்டுகின்றார். இதே போல்

"வாழ்வுதனை மாலையாய்/கதவுதனில் சிக்கவிட்டு
சிகண்டியென மாறிய/அம்பையாய்
எடுத்தபிறவி பயன்பெற/எடுப்பேன் புதுப்பிறவி" (சூரியாள் பக் 32)

என்ற வரிகளில் இதுவரை மிகுதியும் பயன்படுத்தப்படாத புராணப்பெண் மாதிரிகளைப் பயன்பாட்டுக்குக் கொண்டு வருகிறார். இதில் தம்மை வஞ்சிக்கும் வர்க்கத்தினைப் பழிவாங்கத் தானும் வீரத்துடன் புதுப்பிறவி எடுத்து வாழ்வதாக ஒரு பெண் கூறும்போக்கு சுட்டப்பட்டுள்ளது.

இவ்வாறு இவர்களின் தேடல் பெரும்பான்மை உடல் சார்ந்த, உணர்வு சார்ந்த தேடலாக உள்ளது. பொது அரசியல் சார்ந்த தேடலை கவிஞர் தாமரையின் கவிதைகளில் காணலாம்.

## எதிர்ப்பு நிலை

காலங்கலமாய் அடிமைநிலையில் இருந்து வரும் பெண்ணினம் விழிப்புணர்வு பெற்ற நிலையில் தம்மை அடிமைப்படுத்தும் காரணிகளை மிகுந்த வீச்சுடன் எதிர்க்கும் போக்கினையும் இக்கவிஞர்களிடத்தில் காணமுடிகிறது. இவ்வகையில் திலகபாமா, மாலதிமைத்ரி, தாமரை ஆகியோரின் கவிதைகளிலும், ஈழக்கவிஞர்களான ரங்கா, சிவரமணி, சன்மார்க்கா ஆகியோரின் கவிதைகளிலும் இவ்வெதிர்ப்பு, நிலைப்பாங்கு மிகுதியாகக் கையாளப்பட்டுள்ளது.சான்றாக சாபதேவி என்கிற கவிஞர் தம் கவிதையில் பெண்ணையும் மண்ணையும் ஒப்பிட்டு அவையிரண்டிலும் உள்ள ஒப்புமைக் கூறுகளைக் கூறி அதன்பின் அவளின் எதிர்ப்புத் தன்மையையும் கூறியிருப்பது சிந்தனைக்குரியது.

"நானும் மண்ணும்/ஒன்றுதான்
என்னையும் உழுகிறார்கள்/என்னிலும் விதைக்கிறார்கள்
....
கொடுமைகளால்/பொறுமையிழந்த
பூமிபோல்/நானும் ஓர்நாள்
அதிர்ச்சி தருவேன்/அன்று தெரியும்
என் வலிமை"

என்பது அக்கவிதை. இருப்புநிலை, தேடல் ஆகிய கவிதைகளைவிட எதிர்ப்பு நிலைக்கவிதைகள் குறைவாகவே உள்ளன. இம்மூவகையினுள் இருப்புநிலை குறித்த கவிதைகள் பெண்களின் படைப்பில் பெரும்பான்மையாக இடம் பெற்றுள்ளன. இவ்வளவு நாட்கள் அல்லல்களை அனுபவித்தவர்கள், முதலில் எழுதவரும்போது அவர்கள் பட்ட துன்பங்களை முதலில் கூறுவர் என்பது இயல்பு. மேலும் தன் இருப்புக்குறித்த விழிப்புணர்வுக்கு இதுவும் அடிப்படையாகும்.

இவ்வகையினர் கவிதைகள் பெரும்பாலும் தீவிரப் பெண்ணிய வெளிப்பாடாகும், பெண்மொழிக்கான அடையாளப் பதிவாகவும் உள்ளன. இவர்களின் படைப்புகள் அடிமைப்பட்டுக்கிடக்கும் பெண்களின் அடிமை நிலையைத் தகர்த்து அவளும் சமூகத்தில் ஒரு அங்கமாக மதிக்கப்பட வேண்டுமென்பதை அடிப்படையாகக் கொண்டு அமைந்துள்ளன என்பதில் ஐயமில்லை.

# “எனக்கென்றொரு முகம்” - “ஒரு பெண்ணியப் பார்வை”

*தா. பர்வீன்பானு,* எம்.ஃபில். தமிழ்த்துறை,
பூ. சா. கோ. கலை அறிவியல் கல்லூரி, கோயமுத்தூர்.

## முன்னுரை :

ஒரு தனிமனிதனைப் பற்றியோ, ஒரு குடும்பத்தைப் பற்றியோ, ஒரு சமுதாயத்தைப் பற்றியோ கூறும் ஒரு முழுமையான இலக்கிய வடிவம் நாவல் ஆகும். இவ்விலக்கிய வடிவம் தமிழில் மிகச் சிறந்த வளர்ச்சியைக் கண்டு வருகிறது. “மாந்தர்களின் பண்பு விளக்கத்தைத் தலைமையாகக் கொண்டு, அதற்காக நிகழ்ச்சிகளைப் பின்னுவனவே வெற்றிகரமானவை”1. என்ற கூற்றுக்கிணங்க “சுப்ரா” அவர்களின் “எனக்கென்றொரு முகம்” நாவல் அமைந்துள்ளது. இந்நாவலில் உமா என்னும் தலைமைப் பெண்பாத்திரத்தின் வழி வெளிப்படுத்தப்படும் பெண்ணியச் சிந்தனைகளை ஆராய்வதே இக்கட்டுரையின் நோக்கம்.

## பெண் நிலைவாதம் :

‘Feminism” என்ற சொல்லுக்குத் தமிழில் “பெண் நிலைவாதம்” என்ற விளக்கம் கூறுவர். இச்சொல் சமூகவியல் நோக்கில் எடுத்தாளப்பட்ட சொல்லாகும். இதனையே கல்வியாளர்கள் (Academicians) “பெண்ணியம்” என்ற சொல்லால் குறிப்பிடுகின்றனர். “பெண் நிலைவாதம்” என்பது அறிவியல் உலகில் பல்துறைகளில் முன்னேறும் துடிப்பான பெண்களின் வளர்ச்சி நிலையைக் குறிப்பதாகக் கொள்ளலாம். “பெண் நிலைவாதம்” என்ற சொல் பெண்களை விவாத நோக்கில் பார்க்கிறது” 2. .ந்த அடிப்படையில் இக்கதையமைப்பு “உமா” என்னும் பெண் பாத்திரத்தைத் துடிப்புள்ள பெண்ணாக சுப்ரா அவர்கள் தமது நாவலில் சிறப்பாக வெளிப்படுத்தியுள்ளார்.

## பெண்ணிய விமர்சனங்கள் :

உமா என்னும் கதாப்பாத்திரத்தின் வாயிலாக பெண்ணடிமைத்தனங்கள் விமர்ச்சிக்கப்பட்டுள்ளன.

1. திருமணம் எனும் வேலி, 2. பெண் உரிமை, 3. கல்வியறிவின் இன்றியமையாமை

## திருமணம் எனும் வேலி :

பெண்களுக்குத் திருமணம் என்ற வேலி அமைத்து அதற்குள்ளேயே அவளைச் சுற்றிச் சுழல வைக்கிறது சமூகம். இதனால் பெண்களுக்கென இருக்கும் தனிப்பட்ட ஆசைகள், எண்ணங்கள் ஆகியவை நிறைவேற்றப் படாமல் போகிறது. இதனை உமா பின்வருமாறு எடுத்துக் கூறுகிறாள். “முகம் தெரியாத அந்த எவனோ ஒருவனுக்காகத், தன் கழுத்தில் மூன்று முடிச்சுப் போட்டு கூட்டிச் செல்லப்போகும் அந்த யாரோ ஒரு ஆண்மகனுக்காகப் பிறந்தது முதல் படுகின்ற அவமானங்கள் எத்தனை யெத்தனை?”3.

என்பதிலிருந்து சிறுவயதிலிருந்து முகம்தெரியாத யாரோ ஒருவனுக்காக தன் சுதந்திரங்கள் பாதிக்கப்படுவதை எண்ணிக் குமுறுகிறாள். இதனை ஆசிரியர் பின்வரும் வரிகள் மூலம் எடுத்துரைக்கிறார்.

“முகம் தெரியாத அந்த யாரோ ஒருவனின் முகத்தில் காரிதுப்ப வேண்டும் போல் உந்தியது உமாவிற்கு” 4. என்பதிலிருந்து திருமணம் என்னும் பந்தத்தை நிராகரிக்கும் பாத்திரமாக உமாவைச் சித்தரித்துள்ளார் சுப்ரா அவர்கள்.

இரா. பிரேமா அவர்கள் தீவிரப் பெண்ணியத்திற்கு ஆதரவு கொடுத்து பின்வரும் கருத்தைக் கூறுகிறார். “பாரம்பரிய திருமண முறையை, குடும்ப அமைப்பை அடியோடு ஒழிக்க வேண்டும் என்று குரல் கொடுக்கத் தொடங்கினார். இதையே தங்கள் இயக்கத்தின் மையப் பிரச்சாரமாக எடுத்துக் கொண்டு புதிய சமுதாயத்தை உருவாக்க முனைந்தனர்” 5 என்பதன் மூலம் அவரது கருத்தை நன்கு வெளிப்படுத்தியுள்ளது புலப்படுகிறது. உமாவும் தொடக்கத்தில் திருமணம் என்பது பெண்களுக்குப் பல கொடுமைகளை ஏற்படுத்தக் கூடியது என்று நினைப்பதிலிருந்து தீவிரவாதப் பெண்ணியவாதியாகத் திகழ்கிறாள் என்பது வெளிப்படுத்தப்படுகிறது.

“ஏற்கெனவே இருக்கும் சமூக அமைப்பை முன்னேற்றித் தேவையான மாறுதல்களைச் செய்து, அதன் மூலம் பெண்களுக்குத் தேவையான அளவு விடுதலையும், மதிப்பையும், தகுதியையும் பெற்றுத்தர முயன்றது.....” 5. என்ற வரிகள் மூலம் தாராளப் பெண்ணியம் பற்றி இரா. பிரேமா அவர்கள் கருத்தைக் கூறுகிறார்.உமா தொடக்கத்தில் தீவிரவாதப் பெண்ணியவாதியாகப் படைக்கப்பட்டிருந்தாலும் கதையின் இறுதியில் இதற்குத் தீர்வாக...... “என்னை முழுவதுமாகப் புரிந்து கொண்டு என் உடலுக்காக அல்லாமல் எனக்காக என்னை விரும்பும் ஒரு மனிதனை நான் நிச்சயம் சந்திப்பேன்” 6.என்று உமா கூறுவதிலிருந்து திருமணத்திற்கு ஒப்புக்கொள்கிறாள் என்று கதை முடிவடைகிறது. முடிவில் அவளை ஒரு தாராளப் பெண்ணியவாதியாக ஆசிரியர் படைத்துள்ளார்.

### பெண் உரிமை :

பெண்களை வெறும் போகப்பொருளாக மட்டும் பார்க்காமல் அவர்களுக்கும் ஆசைகள் விருப்பு வெறுப்புகள் உரிமைகள் தேவை என்பதைத் தெரிந்துகொள்ள வேண்டும் என்பதை ஆசிரியர் உமா வாயிலாக உணர்த்தியுள்ளார்."பெண்கள் சதைப்பிண்டமா? அதற்காகத்தான் பெண்களை விரும்புகிறார்களா? இந்தநிலை மாற வேண்டும். யார் என்று தெரியாத ஒருவனுக்காகக் கழுத்தை நீட்டி, மஞ்சக் கயிற்றைக் கட்டியவுடன் உரிமை வந்து விடுமா?" 7என்று கூறுவதிலிருந்து உடலுக்காக மட்டும் பெண்களை விரும்பாமல் அவர்களின் உள்ள உணர்வுகளையும் ஆண்கள் புரிந்து கொள்ள வேண்டும் என்ற எண்ணம் வெளிப்படுத்தப்படுகிறது.

இதே கருத்தை "மா. செல்வராசன்" அவர்களும் பின்வருமாறு எடுத்துக் காட்டுகின்றார்."பொதுவாகப் பெண்கள் போகப்பொருளாக மட்டுமே கருதப்பட்டனர். குழந்தை பெறுவதும் ஆண்களின் குறிப்பறிந்து நடப்பதும்தான் அவர்கள் வாழ்க்கையின் குறிக்கோளாக இருக்க வேண்டும் என்று வலியுறுத்தப்பட்டது......" 8. என்பதிலிருந்து பெண்களுக்கென இருக்கும் தனிப்பட்ட எண்ணங்களை எந்த ஆடவரும் உணருவதில்லை என்பது தெளிவுபடுத்தப்படுகிறது. இந்த எண்ணங்களைப் போக்கவே பெண்ணியம் இங்க வலியுறுத்தப்படுகிறது.

### கல்வியறிவின் இன்றியமையாமை :

கல்வி என்பது ஆண்களுக்கும் பெண்களுக்கும் பொதுவானது. ஆண்களுக்கு நிகராகப் பெண்களும் படிக்க வேண்டும் என்பது இன்றைய சூழலில் இன்றியமையாத ஒன்றாகும். இந்நாவலில் வரும் உமா கதாபாத்திரத்தின் மூலம் பெண்கல்வி எவ்வளவு இன்றியமையாதது என்பதைச் சுட்டிக்காட்டியுள்ளார் ஆசிரியர்.

"இன்று பெண் கல்வியின் பெருமை உணர்ந்து, நம் நாட்டு மகளிர் கல்வி கற்று, தமக்கும் பிறர்க்கும் நலம் விளைவித்து வாழ்கின்றனர்" 9

என்பதிலிருந்து ஒருபெண் கல்வியறிவு பெறுவதிலிருந்து தனக்கு மட்டும் அன்றி தன்னைச் சுற்றி உள்ளவர்களுக்கும் அது நலம் விளைவிக்கும் என்பதை வெளிப்படுத்தியுள்ளார்.

### முடிவுரை :

காலந்தோறும் சமூகத்தில் பெண்களுக்கு ஏற்படக்கூடிய பெண்ணடிமைத்தனத்தை நீக்க வேண்டும் என்றும், பெண்களுக்கு கல்வியறிவு மிக அவசியம் என்றும் "உமா" என்ற கதாபாத்திரத்தின் மூலம் மிக அம்சமாக ஆசிரியர் வெளிப்படுத்தியுள்ளார். திருமணம் என்பது சுதந்திரத்திற்குத் தடை என்ற எண்ணத்தைக் கொண்டுள்ள உமா கதையின் இறுதியில் திருமணம் என்பது இருமணமும் ஒன்றாக இணையும்போது தடையல்ல என்பதை உணர்கிறாள். கணவன், மனைவி இருவரும் ஒருவரை ஒருவர் பரஸ்பரம் நன்கு உணர்ந்து நடக்கும்போது அங்கு பெண்ணடிமைத் தனம் என்பதேஇருக்க வாய்ப்பில்லை என்பதை "உமா", "பாபு" ஆகிய காதைமாந்தர்களின் வாயிலாக ஆசிரியர் சுட்டிக்காட்டத் தவறவில்லை.இங்கு "பெண்ணியம்" என்பது ஆண்களை எதிர்பபது அல்ல என்றும் அடிமைப்பட்டு வாழும் பெண்களுக்கு கல்வி, தொழில் முதலியவற்றின் மூலம் மதிப்பினைப் பெற்றுத் தருவதே உண்மையான "பெண்ணியம்" ஆகும் என்பதையும் மிக அழகாக இந்நாவலின் வழி அறிய முடிகிறது.

### பார்வை நூல்கள் :


1. புதிய நோக்கில் தமிழ் இலக்கிய வரலாறு, தமிழண்ணல், பக்.453
2. பெண்ணியம் அணுகுமுறை, இரா. பிரோ, பக். 18.
3. எனக்கென்றொரு முகம், சுப்ரா, பக். 143.
4. பெண்ணியம், இரா. பிரேமா, பக். 77.
5. பெண்ணியம், இரா. பிரேமா, பக். 63.
6. எனக்கென்றொரு முகம், சுப்ரா, பக். 148.
7. எனக்கென்றொரு முகம், சுப்ரா, பக். 77.
8. பாரதிதாசன் ஒரு புரட்சிக் கவிஞர், மா. செல்வராசன், பக். 27, 28.
9. பெண்கள், பெ. அம்சவேணி, பக். 69.

# "பத்தினிப் பெண்" புதினத்தில் பெண்ணியம்

*பா. பாண்டிச்செல்வி,* தமிழ் இலக்கியம் - முதுகலை நிறைவாண்டு,
அ.ப.ம. கல்லூரி, பழனி.

## முன்னுரை

ஆணின்றிப் பெண் நீண்ட காலம் நிம்மதியுடன் தனித்து வாழ முடியாது என்ற கருத்து தொன்று தொட்டு இன்று வரை நம்மிடையே நிலவுகின்றது. பாதுகாப்பு என்ற நம்பிக்கைக்கு உரிய இவ்வாணே நம்பிக்கையின்மையையும் ஏற்படுத்துகின்றான் என்பதே வேதனை மிகுந்த நிகழ்வாகும். பலதரப் பெண்களும் இத்துன்பத்திற்கு ஆளாகின்றனர். பெண் எவ்வளவு தான் உயர்நிலையில் இருந்தாலும் சமுதாயத்தில் ஆண்களால் பெண் நசுக்கப்படுகிறாள் என்ற கருத்து கோட்பாடாக நிலைத்து விடுமோ என்ற வலுவான எண்ணம் நமக்குள் உருவாவதற்கான ஏதுவாகவும் இக்கட்டுரையின் கருத்துக்கள் அமைகின்றன. ஏனெனில் தன்னுடைய வாழ்க்கைக்குத் துணையாவான என நம்பித் தேர்ந்தெடுத்தவனால் உருவான சிக்கல்களை இவ்வாய்வுப் பொருளாகக் கொண்டு திலகவதியின் பத்தினிப் பெண் நாவல் பிரதிபலிக்கின்றது.

## பெண்ணின் திறமை

பெண் வீட்டை விட்டு வெளியே வரக்கூடாது என்ற நிலை இருந்தும் அவற்றை எதிர்த்து இப்போது பெண் ஆணைப் போல் இரவு நேரங்களிலும் வேலைக்குச் செல்கிறாள். பல்வேறு ஆலைகளுக்குப் பணிபுரியச் செல்லும் பெண்களை இதற்குச் சான்றாகக் கூறலாம். பெண் நினைத்தால் எதையும் சாதிக்க முடியும் என்பதற்கு உதாரணமாக இந்நிகழ்வு அமைகிறது. பெண் தனியாக ஒரு நிறுவனத்தைத் திறமையாக நடத்த முடியும் என்பதற்கு உதாரணமாக பத்தினிப் பெண் புதினத்தில் இடம் பெறும் வாணி திகழ்கிறாள்.

## பெண்ணை அடிமையாக்கும் சமுதாய நிலைப்பாடு

காதல் திருமணம் புரிவோரிடையே நல்ல புரிதல்கள் நிலவும், இல்லறம் இனிமையானதாகும் என்ற எண்ணம் பரவலாகி வருகின்றது. அதனால் தன் மனம் விரும்பியவாறு பெண்ணைக் காதலித்து பெற்றோர் சம்மதத்துடன் திருமணம் செய்து கொள்கிறான். பிறகு ஆண்களுக்கே உரிய ஆதிக்கத் தன்மையால் தன் மனைவியின் ஒவ்வொரு அசைவிலிருந்தும் குற்றங்களைக் கண்டுபிடித்து அவளை சந்தேகக் கண் கொண்டுப் பார்க்கிறான். ஆண் வெளியில் சென்று நேரம் கழித்து வந்தாலும் தவறில்லை என்பது சமுதாய நிலைப்பாடு. ஆனால் பெண் வேலைக்குச் சென்று நேரம் கழித்து வந்ததால் "இன்னிக்கு ஹோட்டல்லே வேலை முடிஞ்சதும் எங்கே போய் மேஞ்சே? ஏன் இவ்வளவு நேரம் கழிச்சி வீட்டுக்கு வர்ரே"1. என்று பெண்ணை சந்தேகப் பார்வை கொண்டு கேள்வி கேட்பதும் இச்சமுதாயத்தின் நிலைப்பாடு.

## பெண்ணின் அடிமை நிலை

இல்லற மனைவி பணி முடிந்து வரும் கணவனை எதிர்நோக்கிக் காத்திருக்க வேண்டும் என்பது மனைவியின் தகுதிகளில் ஒன்று. "ஆமாமா அஞ்சு நிமிஷமா காலிங் பெல் அலறிக்கிட்டிருந்தது கூடத் தெரியாத அந்தப் பயத்துலதான் நிம்மதியா தூங்கிட்டே போல....இல்லே....2. என்று ரங்கதுரை மனைவியைக் கேலியாகக் கேள்வி கேட்பது அக்கூற்றை மெய்ப்பிக்கின்றது. மேலும் பெண் என்பவள் கணவனுக்குத் தேவையான பணிவிடைகளைச் செய்ய வேண்டும். அப்படி செய்யாவிட்டால் அவளை ஒழுக்கம் கெட்டவள் என்று கணவனே கூறும் நிலையும் நிலவுகின்றது. பெண் திருமணம் முடிந்த பிறகு புகுந்த வீட்டில் நடக்கும் பிரச்சனைகளையும், தனக்கு ஏற்படும் துன்பங்களையும் தன் மனதுக்குள் வைத்து வேதனைப்படுகிறாள். பிறந்த வீட்டார் வேதனையடைக்கூடாது என்பதற்காகவே இவள் இவ்வாறு செய்கிறாள். இதனால் கணவனால் உளவியல் பாதிப்பும் பெண்களுக்கு ஏற்படுகிறது.

## உறவின் நெருக்கடி

உணர்வுகளை வெளிப்படுத்தும் உரிமை பெண்களுக்கு இல்லை. குடும்பத்தில் ஏற்படும் பிரச்சனைகளால் அவள் ஆணை எதிர்த்துப் பேசினால் மனைவி என்றும் பாராமல் கணவன் கொலை செய்யவும் துணிந்துவிடுகிறான். "கட்னவளை கொல்றதுக்குக்கூட புருஷனுக்கு உரிமை இருக்குது. எவனாவது வந்து கேக்கட்டும் பார்க்கறேன்"3. என்று ரங்கதுரை தன் ஆளுமை மூலம் அதை நிரூபிக்கின்றான். இத்தகைய கொடுமைகளைத் தொடர்ந்து அனுபவிக்க முடியாமல் தனியாக வாழ முடியும் என்ற நம்பிக்கையோடு கணவனைப் பிரிகின்றாள். அவனுடைய கொடுமையிலிருந்து நிரந்தரமாகப் பிரிய வேண்டும் என்பதற்காக நீதிமன்றம் செல்கிறாள். "சமூகப் பாதுகாப்பு வளையம் என்று நம்பி ஏற்கும் உறவுகள் குரல் வளையை

நெறிக்கின்றன. மிருக வதைக்குக்கூட தடுப்புச் சட்டம் உண்டு. ஆனால் இந்த மனித வதைகளை எவரும் ஏனென்று கேட்க முடிவதில்லை"4. என்ற கூற்று அவள் சிக்கலை உணர்த்தி விடுதலை பெறவேண்டும் என்ற உணர்வையும் தூண்டுகிறது.

## பெண்ணின் வேதனை

பெண் தன் வாழ்க்கைத் துணைவனை தானே தேர்ந்தெடுத்து மணம் செய்தும் மகிழ்வற்ற வாழ்வாகவே உள்ளதை எண்ணி வேதனையுறுகிறாள். ஒரு சம்பவத்தை வைத்து மனிதர்களின் குணத்தை எடை போடுதல் எவ்வளவு ஆபத்தானது? எனவும் எல்லா ஆண்களும் ஒரே மாதிரி இருக்க மாட்டார்கள் எனவும் எண்ணுகிறாள். "ஒரு பானை சோற்றுக்கு ஒரு சோறு பதமாக இருக்கலாம். அது பானைக்கும் சோற்றுக்கும் மட்டுமே பொருந்துகிறது. பழமொழி மனிதர்களுக்கு அல்ல" என்று தன் வாழ்க்கையில் ஏற்பட்ட நிகழ்வுகளால் முடிவெடுக்கின்றாள்.

## பால் பிரிவில் பெண்கள் நிலை

ஆண்கள் எத்தனை பெண்களிடம் வேண்டுமானாலும் தொடர்பு வைத்துக் கொள்ளலாம். மனைவி ஏன் எதற்கு என்று கேள்வி கேட்கக்கூடாது. பெண் கணவனைத் தவிர வேறு ஆணுடன் நட்பு வைத்திருந்தாலும் கணவன் அதைத் தவறாகப் புரிந்து கொண்டு அவர்களை நிம்மதியாக வாழவிட முடியாத நிலை சமுதாயத்தில் நிலவுகின்றது. இதே நிலையை இப்புதினத்தில் காணலாம். "பெண்ணை "கோவலம் பெண்" என்று மட்டந்தட்டி மனசில் ஆணி அறைந்து ஊனப்படுத்துவது ஒருவிதம் என்றால் பெண் என்பதற்காகவே தாங்கு தாங்கென்று தாங்கி.நடந்து போகத் திராணியில்லாதவளாக ஆக்கி விடுவதும் அடிமைத்தளம் தான்"5. அன்பினால் அவள் தாக்கப்படவில்லை. தன் கவனத்திலிருந்து அவள் சற்றும் விலகிச் செயல்பட்டு விடக்கூடாது என்ற எண்ணத்தையே இக்கூற்று உணர்த்துகிறது. ஆனால் பெண்கள் ஆண்களை இவ்வாறு கவனித்துக் கொண்டு இருக்க முடியாது ஏனெனில் இவர்கள் இத்தாலியை எல்லைக்குள் அடங்காத ஏகபோக உரிமைகளைப் பெற்றுள்ளதாகச் சமுதாயத்தால் அடையாளப்படுத்தப் பட்டுள்ளார்கள்.

## பெண்ணின் இழிவு நிலை

உடல் களங்கமுற்ற பெண்களுக்குச் சமுதாயம் தரும் தண்டனை விபச்சாரி என்ற பட்டம். ஒரு பெண்ணை மாசுபடுத்தின ஆடவனைச் சமுதாயம் தண்டிக்கவில்லை. அப்பெண்ணின் உணர்வுகளும், மன உளைச்சல்களும், துன்பமும் யாராலும் எண்ணிப் பார்க்கப்படுவதில்லை. குற்றவாளியான ஆண் சலுகைகளும் உரிமைகளும் பெறும் நிலையில் பெண்ணே அனைத்து நிலைகளிலும் பாதிக்கப்படுகிறாள். "நமது சமூக அமைப்பு ஒரு தலை பட்சமான கற்பு நெறிகளை வகுத்து அதிலே பெண்களை வீழ்த்திவைத்திருக்கிறது. ஆதிக்கச் சக்திகள் திட்டமிட்டுப் பெண்களை பிரித்தாளுகின்றன. எல்லாப் பெண்களுமே ஏதாவது ஒரு விதத்தில் பாதிக்கப்படுகிறோம்"6. என்ற கருத்து சமுதாயத்தின் ஆணின் ஒருதலைபட்டசமான போக்கை உணர்த்துகின்றது.

## நிறைவுரை

பெண் தன் உணர்வுகளைப் பணயம் வைத்து விருப்பங்களை உதறி ஆசைகளை வெறுத்து கனவுகளைக் கலைத்து, இலட்சியங்களைத் தொலைத்து, ஆளுமையை அழித்து ஆணுக்குப் பெண் அடிமையாக்கப்படுகிறாள். இப்படிப் பலவிதத் தியாகங்கள் செய்தும் கூட பெண்ணின் மண வாழக்கையில் நிம்மதியின்றி மனநோய் அடையும் நிலைதான் ஏற்பட்டுவிடுகின்றது. எனவே பெண்ணுக்கு மண வாழ்க்கை என்பது ஒரு சுமையாக அமைகிறது என்பதை இப்புதினம் மெய்ப்பிக்கின்றது.

## அடிக்குறிப்புகள்


1. திலகவதி - பத்தினிப் பெண் - ப - 32
2. மேலது - ப - 41
3. மேலது - ப - 48
4. பாரதி - பெண் வார்ப்பும் வளர்ப்பும் - ப -69
5. மேலது - ப - 55
6. மேலது - ப - 53

# பெண்ணியப் பிரச்சினைகளுக்கு அம்பை தரும் தீர்வுகள்

முனைவர் திருமதி . *பி.பார்வதி,எம்.ஏ.,எம்.ஃபில்.,பி.எச்டி.*, இணைப்பேராசிரியர் - தமிழ்த்துறை,
ஸ்ரீ பராசக்தி மகளிர் கல்லூரி, குற்றாலம் - 627 802.

சிறுகதை ஆசிரியர்கள் சமுதாயத்தில் உள்ள பிரச்சினைகளை மட்டுமே கதைகளாக எழுத, பெண்ணியச் சிந்தனையுடைய அம்பை, அப்பிரச்சினைகளுக்குரிய தீர்வுகளையும் தம் சிறுகதைகளில் தந்துள்ளார். பெண்கள் பிரச்சினைகளைக் கண்டு வியந்து பின் வாங்கக் கூடாது. அதற்குப் பதிலாக அதிலிருந்து விடுபடுவதற்குரிய வழிமுறைகளை ஆராய்ந்து, அவற்றை நடைமுறை வாழ்க்கையில் பின்பற்ற வேண்டும் என்ற கருத்தினைத் தம் கதைகளில் கூறியுள்ளார். பெண்கள் பற்றிய ஆய்வுக்கான ஆவண மையத்தின் இயக்குநராகப் பணிபுரியம் அம்பை தம் கதைகளில் கூறியுள்ள பெண்கள் பிரச்சினைகளுக்கான தீர்வுகளை இக்கட்டுரை எடுத்துரைக்கிறது.

அம்மை என்ற புனைபெயரில் சிறுகதைகளை எழுதும் சி.எஸ். இலட்சுமி மூன்று சிறுகதைத் தொகுப்புகளை வெளியிட்டுள்ளார். சிறகுகள் முறியும் (1976), வீட்டின் மூலையில் ஒரு சமையலறை (1988), காட்டில் ஒரு மான் (2000) என்ற மூன்று நூல்களுள் மூன்றாவதாக அண்மையில் வெளிவந்துள்ள காட்டில் ஒரு மான் என்ற சிறுகதைத் தொகுதியினை அடிப்படையாகக் கொண்டு இக்கட்டுரை படைக்கப்படுகிறது. 1. கல்வி ஒரு பெண்ணிற்குத் துணை செய்யும். 2. இசைத்துறையில் ஒரு பெண் சிறந்து விளங்க அவளது கணவனின் தூண்டுகோல் தேவை. 3. பெண்ணின் ஆற்றலை மதிக்காத ஆடவனை விட்டு விலகுவதே சிறந்தது. 4. பெண்களுக்கு விதிக்கப்பட்ட மூடத்தனமாக கட்டுப்பாடுகளை உடைத்தெறிய வேண்டும் என்று ஆய்வுக்கு எடுத்துக்கொண்ட கதைகள் வழி நான்கு தீர்வுகளை அம்பை தருகிறார்.

பிரசுரிக்கப்படாத கைப்பிரதி என்ற கதையின் வழி கல்வி ஒரு பெண்ணின் வாழ்க்கையை முன்னேற்றிக் கொள்ளப் பயன்படும் ன்ற கருத்தை அம்பை கூறியுள்ளார். இராமசாமி என்பவரின் மகள் திருமகள். இராமசாமி மனைவியை இழந்தவர். பெண்ணை நன்கு படிக்க வைத்தார். அவள் விருப்பப்படி அவள் ஒரு கல்லூரியில் பேராசிரியராகப் பணியேற்றாள். அவளது விருப்பப்படி முத்துக்குமரன் என்பவருக்குத் திருமணம் செய்து வைத்தார். குடிகாரனாக, வேலையில்லாதவனாக, மனைவியை ஆட்டிப்படைக்கும் குரூர குணம் கொண்டவனாக முத்துக்குமரன் விளங்கினான். இதனால் கணவனை வெறுத்த திருமகள் தனது தந்தை இறந்த பின் அவருடைய பதிப்பகத்தைப் பொறுப்பேற்று நடத்தினாள்.

முத்துக்குமரன் தான் எழுதிய கவிதைத் தொகுதியை திருமகள் நடத்தி வந்த பதிப்பகம் வழியாக அச்சடித்து வெளியிட வேண்டும் எனக் கூறினாள். பெண்ணடிமைத்தனத்தை வலியுறுத்தும் அக்கவிதைத் தொகுதியை வெளியிடமுடியாது எனக்கூறிய திருமகளைத் தாக்கியதோடு அவளை மனநிலை பாதிக்கப்பட்டோருக்கான மருத்துவமனையில் சேர்த்துவிட்டான். மயக்கம் தெளிந்த திருமகள் தனது கல்வியின் துணையோடு முத்துக்குமரனின் வஞ்சகத்தைத் தவிடு பொடியாக்கியதோடு பதிப்பகத்தை விற்றுவிட்டு தனது மகளை அழைத்துக் கொண்டு பனாரசுக்குச் சென்றாள். அங்குள்ள பல்கலைக்கழகத்தில் பேராசிரியராகப் பணியாற்றியதோடு தனது மகளான செந்தாமரையை நல்ல பள்ளிக்கூடத்தில் சேர்த்துப் படிக்க வைத்தாள். கணவனோடு அதன்பின் அவள் கடித உறவு கூட வைத்துக்கொள்ளவில்லை.

திருமகள் படித்த பெண்ணாக இருந்ததால் கணவனின் வஞ்சனையைப் அறிந்தவுடன் அவனை விட்டு விலகினாள். அவளுடைய கல்வியே அவளது வாழ்க்கைக்கு ஆதாரமாக விளங்கியது. தனது கல்வியின் காரணமாக பல கல்வியாளர்களைத் தனது மகளுக்கு அறிமுகப்படுத்த முடிந்தது. மகளின் கல்வி மேம்பட அவளது வாழ்க்கை முறை பயன்பட்டது. இதன் வழி கல்வி ஒரு பெண்ணின் வாழ்க்கையை முன்னேற்றிக் கொள்ள உதவுகிறது என்ற கருத்தை அம்பை வாயிலாக விளக்கியுள்ளார். மேலும் தவறு செய்யும் கணவனைத் திருத்த முயற்சி எடுக்க வேண்டும். அவன் திருந்தவில்லை எனில் அவனை விட்டு விலகுவதே நல்லது என்ற தீர்வையும் அம்பை இக்கதையில் தந்துள்ளார் எனலாம்.

## கலைத்துறையில் பெண் முன்னேற :

சிற்பம், ஓவியம், நடனம், சங்கீதம் போன்ற கலைத்துறைகளில் பெண்கள் முன்னேற வேண்டுமென்றால் வீட்டில் உள்ளோர் அதனை மதித்து ஊக்கம் கொடுக்க வேண்டும். இல்லையெனில் பெண்கள் கலைத்துறையில் சிறந்தவர்களாகத் திகழ முடியாது என்ற கருத்தை அம்பை தமது சிறுகதையாகிய மல்லுக்கட்டு என்ற கதை வழி எடுத்துரைக்கிறார்.

அய்யா என்று அழைக்கப்படுபவர் சங்கீதம் கற்றுக்கொடுக்கும் ஆசிரியர் ஆவார். அவரது மனைவி நாகம்மாள். இவர்களது வீட்டில் சிறுகுழந்தையில் இருந்தே தங்கி சங்கீதம் கற்றுவந்தாள் செண்பகம். இவளது குரல் வளத்தினால் ஈர்க்கப்பட்ட அய்யா அவளுக்குச் சங்கீதம் கற்றுக் கொடுத்ததோடு தனது கச்சேரியில் அவளைப் பாட அழைத்துச் செல்வதும் உண்டு. இவரது மகன் சண்முகம் செண்பகத்தை விட நான்கு வயது மூத்தவன். சங்கீதம் கற்றுக் கொடுத்த அய்யா செண்பகத்திடம், நீ கச்சேரி செய்றதைத் தடுக்கிறவனை நீ கட்டக் கூடாது. அவன் உன்பாட்டை மதிக்கணும் (காட்டில் ஒரு மான், ப.113) என்று கூறினார். அதன்படி அவரது மகன் சண்முகத்தையே செண்பகம் திருமணம் செய்து கொள்கிறாள்.

திருமணம் ஆனபின் சண்முகம் தனது மனைவி செண்பகம் கச்சேரி செய்வதை விரும்பவில்லை. இதனை அவனது தந்தை அய்யா எதிர்த்தார். ஆனால் சண்முகமோ, அவ எதுக்கு ஓடணும். அங்க இங்க? வீட்டுல பாட்டுமே எவ்வளவு வேணுமின்னாலும், கச்சேரின்னா அவ களைச்சுப் போயிடுவா. ஓட்டமெல்லாம் எனக்கே இரிக்கட்டும். அவ ஓய்வா இரிக்கட்டும் (மேலது, ப.114) என்றான். மிகச் சிறப்பாகப் பாடும் செண்பகம் வீட்டிற்குள் முடக்கப்பட்டாள். அவளை விடச் சுமாராகப் பாடும் சண்முகம் உண்மையான கலைஞர் என்ற உலகினுள் புகுந்தான். ஆனாலும் செண்பகம் ஒரு தடவை சண்முகத்தோடு சந்தர்ப்ப சூழ்நிலையால் பாட நேர்ந்த போது அவையினர் கரவோசையோடு அவளை வாழ்த்தினார்.

இந்தியாவின் இசைக்குயில், நைட்டிங்கேல் என அழைக்கப்பட்ட எம்.எஸ்.சுப்புலட்சுமியின் சங்கீதம் உலக அரங்கில் பேசப்படுவதற்கு அவரது கணவர் சதாசிவம் காரணம் எனில் மிகையன்று. தமது மனைவி சங்கீத உலகத்தில் ராணியாக விளங்கியதைப் பெருமையாக எண்ணியவர். இத்தகு சிறப்புத்தன்மையுடைய கணவர் கிடைத்ததனால் தான் எம்.எஸ்.சுப்புலட்சுமி கர்நாடக சங்கீதத்தில் உலகப் புகழ் பெறமுடிந்தது. மல்லுக்கட்டு என்ற அம்பையின் கதையில் வரும் செண்பகம் சிறந்த பாடகியாக இருந்தாலும் அவளது கணவனின் பொறாமை உணர்வால் அவளது சங்கீதம் பெருமை அடையவில்லை. சங்கீதத்துல ஆம்பிள என்ன பொம்பள என் சார்? எங்கய்யா குடும்பத்துல பொம்பளைங்க மிருதங்கம், கஞ்சிரா எல்லாம் வாசிச்சிருக்காங்க. பொம்பளைங்க ராகம், தாளம், பல்லவி எல்லாம் பாட வேண்டிய அவசியமில்லேனுட்டு சொன்ன காலத்துல இவங்க வம்சத்துப் பொம்பளங்க ராகம் பாடி, ஸ்வரமும் போட்டிருக்காங்க. இவங்க பெரிய பாட்டியே இப்படி ஸ்வரம் பாடினவங்கதான். எங்கய்யா பிள்ளை இவர். ஒண்ணும் சொல்லமாட்டார் போங்க (ப.115) என்று செண்பகம் கச்சேரிக்கு ஏற்பாடு செய்யும் ரங்கசாமியிடம் கூறுவதிலிருந்து சங்கீதம் ஆண், பெண் இருபாலருக்கும் பொதுவானது என்ற கருத்தை அம்பை வெளிப்படுத்தியுள்ளார்.

பெண்ணின் சங்கீத ஞானத்தைப் போற்றும் கணவன் தந்தையால் மட்டுமே பெண் முன்னேற முடியும் என்ற கருத்தையும், சங்கீத ஞானம் உள்ள பெண்கள் தங்களது ஞானத்தை மதித்துப் போற்றும் ஆடவனை மட்டுமே திருமணம் செய்துகொள்ள வேண்டும் என்ற தீர்வையும் இக்கதை வழி அம்பை தந்துள்ளார் எனலாம்.

## தன்னை மதிக்காத ஆடவனை விட்டுப்பிரிவதே பெண்ணிற்குச் சிறந்தது:

கணவன் மனைவி என்ற பந்தம் ஏற்பட்ட பின்பு கணவன் மனைவியையும், மனைவி கணவனையும் மதித்து, ஒருவருக்கு ஒருவர் விட்டுக் கொடுத்து வாழ வேண்டும். பெண் மட்டுமே வாழ்க்கையில் விட்டுக்கொடுத்துப் போக வேண்டும் என்ற ஆணாதிக்கத்தை அம்பை எதிர்க்கிறார்.

அடவி கதையின் தலைவி செந்திரு அவள் எம்.எஸ்ஸி டெக்ஸ்டையில்ஸ் படித்தவன். பி.எஸ்ஸி படித்த பின்பு அப்பாவின் வியாபாரத்திற்குத் துணை செய்யும் திருமலையை விரும்பி அப்பாவின் சம்மதத்தின் பேரில் திருமணம் செய்துகொள்கிறாள். திருமணமான பின் கணவனின் வியாபாரத்தில் ஈடுபட்டு பெரிய தொழிலதிபராகத் தனது கணவனை மாற்றி விடுகிறாள் செந்திரு. தொழிலில் முன்னேறிய திருமலையின் தொழில் பல கிளைகளைக் கொண்டதாக விரிந்தது. பலர் அவனுடன் வியாபாரத்தில் கூட்டு சேர்ந்தனர். அவனோடு கூட்டு சேர்ந்து தொழில்

நடத்தியவர்களுக்கு திருமலையின் மனைவி தொழிலில் தலையிடுவதை சகித்துக் கொள்ள முடியவில்லை. திருமலையும் தனது கூட்டாளிகளின் கருத்தினை ஏற்றுக்கொண்டு தனது மனைவி செந்திருவிடம் தொழிலில் தலையிட வேண்டாம் எனக் கூறிவிடுகிறான். இதனை விரும்பாத செந்திரு திருமலையை விட்டு, அவனது வீட்டை விட்டு வெளியேறி வனத்தின் அரசு விருந்தினர் விடுதியில் தங்கி விடுகிறாள். வனத்தில் வேலை செய்யும் பெண்களுடன் பழகி அரசு விடுதியில் பணிபுரிந்து தனது வாழ்நாளைக் கழிக்கின்றாள்.

தனது தொழில் முன்னேற்றத்திற்குக் காரணமானவள் செந்திருதான் என்பதை திருமலை உணர்ந்தாலும் தன்னோடு கூட்டுச் சேர்ந்துள்ள ஆடவர்களின் சொல்லுக்குத்தான் மதிப்புக் கொடுத்தான். இதனை உணர்ந்த செந்திரு தன்னை மதிக்காத கணவனோடு வாழ விரும்பாது, வனத்தில் உள்ள அரசு விருந்தினர் விடுதியில் தங்கி தனது கல்வியின் துணையோடு புதிய இராமாயணத்தை எழுதினாள்.

பிரசுரிக்கப்படாத கைப்பிரதி என்ற சிறுகதையிலும் காதலித்துத் திருமணம் செய்து கொண்ட முத்துக்குமரன் தன்னைத் துன்புறுத்திய போது அவனைத் திருத்த முற்படுகிறாள் திருமகள். தன்னால் அவனைத் திருத்த முடியாது என்ற நிலைக்கு வந்தவுடன் தனது கணவனைப் பிரிந்து பனாரசுக்கு வந்து விடுகிறாள். தனது கல்வியின் துணையோடு பனாரஸ் பல்கலைக்கழகத்தில் ஆங்கிலப் பேராசிரியராகப் பணிபுரிந்து தனது மகளைச் சிறந்த முறையில் படிக்க வைக்கிறாள். இவ்விரு கதைகளிலும் காதலித்து, விருப்பப்பட்டு திருமணம் செய்து கொண்ட பெண்கள் தங்களது கணவர்களின் செயலை வெறுத்த சமயத்தில் அவர்களைப் பிரிந்து நிம்மதியாக வாழ முற்படுகின்றனர். கல்லானாலும் கணவன் புல்லானாலும் புருஷன் என்ற பழமொழியைத் தூக்கி எறிந்த அம்பையின் சிறுகதைத் தலைவியர் தங்கள் வாழ்க்கையைத் தங்களது கல்வியின் துணையோடு நடத்திக் கொள்கின்றனர். இவ்விரு கதைகள் வழி அம்பை பெற்றோர் நடத்தி வைத்த காதல் திருமணத்தில கணவனின் நடத்தையை மனைவியர் வெறுத்தால் அக்கணவனைப் பிரிந்து வாழ்வதில் தவறில்லை என்ற தீர்வைத் தந்துள்ளார்.

## பெண்கள் மூடத்தனமான கட்டுப்பாடுகளை உடைத்து எறிய வேண்டும்:

மூடத்தனத்தின் முடை நாற்றம் வீசுகின்ற காடு மணக்க வரும் கற்பூரப் பெட்டகமாக பாரதிதாசன் பெண்குழந்தையைத் தாலாட்டுகிறார். அம்பையும் பெண்குழந்தை வழியாக சமுதாயத்தில் நடக்கும் மூடத்தனமான சில செயல்பாடுகளை எதிர்க்கிறார்.

கடற்கரையில் ஒரு காவிப்பிள்ளையார் என்ற சிறுகதையில் விநாயகர் சதுர்த்தி முடிந்த பின்பு விநாயகர் சிலையை நீர்நிலைகளில் கரைப்பதால் சுற்றுப்புறச் சூழல் பாதிக்கப்படுவதை எடுத்துரைத்துள்ளார். இதனால் ஏற்படும் பாதிப்பை பத்து வயது சிறுமி, அந்த சாமிக்குள்ள இருக்குற கம்பி இல்ல கம்பி, அது மீனோட வாயைக் கிழிச்சிடும், வாயெல்லாம் ரத்தமா, வயிறெல்லாம் ரத்தமா வர மாதிரி மீனைக் கீறி விட்டுடும். அப்புறம்... அப்புறம்.... அந்த பிளாஸ்டிக் பையைச் சாப்பிட்டா மீன் செத்திடும், தண்ணில மொதக்கும்... எனக் கூறுகிறது. இதன் வழி விநாயகர் சதுர்த்தித் திருவிழா எவ்வாறு சுற்றுப்புறத்தை பாதிக்கிறது என்பதை எடுத்துரைத்து இத்தகைய மூடப்பழக்க வழக்கங்களை நிறுத்த வேண்டும் என்ற தனது கருத்தை அம்பை குறிப்பாகத் தெரிவித்துள்ளார் எனலாம்.

## முடிவுரை:

பெண் கல்வியின் அவசியத்தையும், அதனால் ஒரு பெண் பொருளாதார சுதந்திரத்தோடு வாழ முடியும் என்பதையும் எடுத்துரைத்துள்ளார். கலையில் ஈடுபாடுடைய ஒரு பெண் தனது வாழ்க்கைத் துணையாக யாரைத் தேர்ந்து எடுக்க வேண்டும் என்ற கருத்தை எடுத்துரைத்ததோடு, தன்னைக் கணவன் மதிக்காத போது அவனை விட்டு விலகி இருப்பதே நல்லது என்ற தீர்வினையும் தந்துள்ளார்.

# பற நாவலில் பெண்ணியச் சிந்தனை

*வெ.பொ. பிரேமா*, ஆய்வியல் நிறைஞர்,
பாரதியார் பல்கலைக் கழகம், கோவை - 641046.

தற்கால இலக்கிய வகைகளில் சிறப்புகள் பல பெற்று விளங்குவது நாவல்களாகும். நாவல்கள் கதைகள் செறிவும், தெளிவும் ஒருமைப்பாடும் அமையப்பெற்றுள்ளதால், எல்லோராலும் அதிகம் விரும்பிப் படிக்கப்படும் சிறப்புடையதாய் வளர்ந்துள்ளது. அத்தகைய நாவல்களுள் அருண் சரண்யாவின் பற நாவலில் பெண்ணியச் சிந்தனைப் பற்றி இக்கட்டுரை ஆய்கிறது.

## அருள்சரண்யாவும் அவரது படைப்பும்

இன்றைய காலகட்டத்தில் அறிமுகமானவர் அருண்சரண்யா ஆவார். இவருடைய கதைகளில் பெண்ணின் பெருமைகளையும், மனித உணர்வுகளின் ஆழங்களையும், அவர்களின் சிந்தனைகளையும், எண்ணங்களின் பிரதிபலிப்பையும், எல்லோராலும் சாதிக்க முடியும் என்ற தாரக மந்திரமாகக் கொண்டதே இவருடைய படைப்புகளாகும். இவர் ஆண் படைப்பாளராக இருந்தபோதிலும், இவருடைய கதையில் ஒரு பெண் தன் வாழ்வில் அனைத்து தடைகளையும் மீறி வெற்றி பெறுவதாக சிறப்பான முறையில் தனது கதையைப் படைத்துள்ளார். ஆசிரியர் ஒரு ஆணாக இருந்த போதிலும் பெண்ணின் முன்னேற்றத்திற்கும், அவர்களின் வாழ்க்கைக்கும் வழிகாட்டுபவராகவும் படைத்துள்ளது இவரது படைப்பின் தனிச்சிறப்பாகும்.

## பெண்ணியம்

பெண்ணியம் என்பது ஆணும், பெண்ணும் சரிநிகர் சமானம் என்பது மட்டுமல்ல, பெண்ணின் உணர்வுகளுக்கும், அவர்களின் எண்ணங்கள் சிந்தனை செயல்பாட்டிற்கும் மதிப்பளித்து, அவர்களை முன்னேற்றப் பாதைகளுக்கு வழி நடத்துவதே பெண்ணியம் ஆகும். இவ்வகையில் பெண்ணியச் சிந்தனையின் வெளிப்பாடாக பற நாவலில் தன் எண்ணப்படியே சுவாதி தனது வாழ்வில் பறக்க வேண்டும் என்ற எண்ணத்தை செயல்படுத்தி வெற்றி பெறுகிறாள். அது போலவே சத்யா பாத்திரப் படைப்பும் தனக்காக வாழ்வதைக் காட்டிலும், பிறருக்காக வாழும் போது தான் வாழ்க்கை அர்த்தமுள்ளதாக விளங்குகின்றது என்பதை சத்யாவின் வாழ்வின் மூலம் பொதுநல சிந்தனையை வெளிப்படுத்துகிறார். பெண்ணியச் சிந்தனைகள் வெறும் ஏட்டளவில் நின்று விடாமல் ஒவ்வொரு தனிநபரின் வாழ்க்கையிலும், கடைபிடிக்க வேண்டும் என்ற எண்ணத்தின் வெளிப்பாடே பற நாவலில் வரும் பெண்ணியச் சிந்தனைகளாகும்.

## சுவாதி

சுவாதியை அறிமுகப்படுத்தும்போது ஒரு பள்ளி மாணவியாக அறிமுகப்படுத்துகிறார். தனது எதிர்கால லட்சியக் கனவாக பறக்க வேண்டும் என்ற எண்ணத்துடனும், சிந்தனையுடனும் வளர்கிறாள். தனது அப்பாவிடம் தனது எண்ணத்தை வெளிப்படுத்தும் இடத்திலும், அதை அவர் மறுத்து பெண் என்பவள் மண்ணைப் பார்த்து நடக்க வேண்டும் என்று சொன்னவுடன் அப்பாவிற்கு அடங்கி நடக்கும் பெண்ணாக கவலைப்பட்டாலும், தன்னால் பறக்க முடியும் என்ற விடாமுயற்சியுடன் வாழ்கிறாள். இச்சூழ்நிலையில் அப்பாவை இழந்து தன் தம்பியுடன் சென்னைக்கு செல்கிறாள் அங்கு தன் அம்மாவின் தோழியுடன் தங்கி வருகிறாள். அவர்களிடம் தன் எண்ணத்தை சொல்கிறாள். அவர்கள் அவளை உன்னால் முடியுமா என்று கேட்டதற்கு ஏற்ப முடியும் என்று சொல்லால் மட்டும் நில்லாமல் செயல்படுத்தியும் காட்டுகிறாள்.

தனது வயதிற்குரிய அனைத்து ஆசைகளையும் நேசங்களையும் விடுத்து பறப்பதே தனது வாழ்வின் இலட்சியம் என்ற ஒரே எண்ணத்தின்படி ஒவ்வொரு செயலிலும் தோல்வியைக் கண்டபோதிலும் துவண்டுவிடாமல் ஒரே முயற்சியுடன் கதையின் முடிவில் சுவாதி பைலட்டாக விமான ஓட்டுநராக சிறந்து விளங்குகிறாள். தனது எண்ணங்களை மனதில் மட்டும் வைத்துக் கொண்டிருக்காமல் தனது ஒவ்வொரு செயலிலும் சிந்தனையிலும் கொண்டுவந்து வாழ்க்கையின் முடிவிலாவது தனது லட்சியத்தை எட்டிய மகிழ்ச்சியுடன் வாழ்வதே வாழ்க்கையின் நிறைவாகும். என்னும் கருத்தை சுவாதியின் சிந்தனைச் செயல்பாட்டினால் நமக்குச் சொல்கிறாள். எண்ணங்கள்தான் செயல்கள் ஆகின்றன. செயல்களே இலட்சியங்களை தொடும் ஏணிப்படிகளாகி நமக்கு வாழ்வில் உயர

வழிகாட்டுகின்றன. என்பதை சுவாதியின் வாழ்க்கையின் மூலம் நாம் உணரலாம்.

பெண் என்றால் பிறந்தோம், வளர்ந்தோம், படித்தோம், காதலித்தோம், கல்யாணம் செய்தோம், வாழ்ந்தோம் என்றில்லாமல் சுவாதி தனது லட்சியத்திற்கு தடையாக வரும் காதலையும், கல்யாணத்தையும் கூட வெறுத்து எனது லட்சியம் மண்ணில் வாழ்வதல்ல விண்ணில் பறப்பதே தனது ஒரே எண்ணம் என்று சொல்லும் இடத்தும், ஒரு சராசரி பெண்ணாக இல்லாமல் ஒரு புதுமைப்பெண்ணுக்குரிய அனைத்து திறமைகளான தன்னம்பிக்கை, தைரியம் விடாமுயற்சியின் பிறப்பிடமாக சுவாதி என்ற ஒரு உன்னதமான பாத்திரப்படைப்பாக படைக்கப்பட்டுள்ளார். இவளைப் பார்த்தும் இவளின் வெற்றியைக் கண்டும் இலட்சியத்தையும், வாழ்க்கையையும் தனது எண்ணப்படியே உயர்த்திக் கொள்ள முயல வேண்டும் என்பதே இவளின் வாழ்க்கை சொல்லும் பாடமாகும்.

## சத்யா

சத்யா சுவாதியின் தாயாக படைக்கப்பட்டுள்ள ஒரு அற்புதமான ஒரு பாத்திரப் படைப்பாகும். சுவாதியின் தாய் என்று அனைத்து செயல்களிலும் அவளுக்கு வழிகாட்டியாக வந்த போதிலும், இறுதிவரை அவளின் கண்களில் படாமலேயே சத்யா இறந்து விடுகிறாள். ஒரு தாயின் நற்செயல்களும், நற்பண்புகளுமே தன் பிள்ளைகளின் வாழ்க்கைக்கு வழிகாட்டியாக இருந்து உதவும் என்பதை சத்யாவின் படைப்பின் வழியே நாம் உணரலாம். தனது எண்ணத்திற்கும், செயல்பாடுகளுக்கும் தடையாக வரும் தனது கணவனையும் தனது ஒரே மகளான சுவாதியையும் பிரிந்து 18 வருடங்கள் வாழும் மனைவியாகவும், தாயாகவும் என் ஒவ்வொரு பரிமாணத்திலும் தனது பொறுமையான பண்பினாலும் படிப்பவர்களின் மனதில் உயர்ந்து நிற்கிறாள். நாம் இப்பூமியில் பிறந்தோம், வாழ்ந்தோம், இறந்தோம் என்றில்லாமல் நம்மால் முயன்ற அனைத்து நல்ல காரியங்களில் நம்மையும் நம் மனத்தையும் ஈடுபடுத்திக்கொண்டால் வாழ்வில் துன்பமின்றி நிம்மதியைப் பெறலாம் என்னும் ஒரு உன்னதமான உயரிய கொள்கையை சத்யா நமக்கு உணர்த்துகிறாள். தனது வாழ்க்கையில் தொடர்ந்து நடக்கும் துன்பகரமான நிகழ்வுகளில் சிக்கிய போதிலும் மனமுடைந்து போகாமல் வாழ்வில் முன்னேற்றம் பெற முடியும் நம்மால் இப்பந்த பாசங்களை இழந்து வாழ முடியும் என்ற எண்ணத்தை கைவிடாமல் பத்திரிக்கை ஆசிரியராகவும், சமூக சேவகியாகவும் தனது வாழ்க்கை பயணத்தையும் ஒரு புதிய கோணத்தில் தொடர்ந்து வாழ்கிறாள். வாழும் போதும் பிறருக்காக வாழ்ந்தவள் இறந்த பின்னும் தனது கண், இருதயம், சிறுநீரகம் என்ற தனது உடல் உறுப்புகளை தானம் செய்தவளாக அவர்களின் வாழ்க்கைக்கு ஒளி விளக்காகவும் வாழ்கிறாள். அனைவருக்கும் சிறந்த வழிகாட்டும் நல்ல தோழியாகவும் அக்காவும் ஆசிரியராகவும் என ஒவ்வொரு பரிமாணத்திலும் நிஜ வாழ்க்கையில் காணும் ஒரு பெண்ணாகவே நமது மனதில் வாழ்பவளாக சத்யா படைக்கப்பட்டுள்ளார்.

பெண் என்பவள் குடும்பம் தன் குடும்ப வாழ்க்கை என்ற வட்டத்திற்குள் அகப்பட்டு வாழ்வதைக் காட்டிலும் பொதுநல வாழ்க்கையில் நம்மை ஈடுபடுத்திக் கொள்வதே சிறந்த வாழ்க்கை என்ற உயரிய கொள்கையையும் நமது லட்சியங்களின் வழியே நமது வாழ்க்கையை அமைத்துக் கொள்ளவேண்டும் உயரிய எண்ணத்தை சுவாதி சத்யா என்னும் இருவரின் வழியே, பெண்களால் எதையும் சாதிக்க முடியும் என்ற கருத்தினை தனது கதையின் படைப்பான சுவாதி, சத்யா இருவரின் வழியே பெண்ணின் உயரிய சிந்தனைகளை நமக்கு உணர்த்துகிறார்.

பெண்ணியச் சிந்தனை என்பது வெறுமனே ஏட்டளவிலும், பேச்சளவிலும் நின்று விடாமல் அவர்களின் வாழ்க்கையின் ஒவ்வொரு செயல்களிலும் பெண்ணின் சிந்தனை வெளிப்பட வேண்டும். எண்ணங்கள் தான் வாழ்க்கை. வாழ்க்கையின் பிரதிபலிப்பே சிந்தனையாகும். சிந்தனைகள் தான் நம்மை உயரிய பல இலட்சியங்களை அடைய வழிகாட்டுகின்றன. எனவே நமது வாழ்வின் உயரிய சிந்தனைகளை உணர வேண்டும். உணர்நத பின் அதனை செயல்படுத்த முயற்சிக்க வேண்டும் என்பதே இக்கதையின் மையக் கருவாகும்.

## முடிவுரை

இன்றைய காலகட்டத்தில் ஆணும் பெண்ணும் சரிநிகர் சமானம் என்பதை உணர்ந்து வாழ வேண்டும். ஆண்களால் மட்டும் சாதிக்க முடியும் என்ற எண்ணத்தை தகர்த்தெறிந்து பெண்களாலும் சாதிக்க முடியும் என்பதை சுவாதியின் படைப்பின் மூலம் உலகிற்கு உணர்த்துகின்றார். தனக்கு நடக்கும் கொடுமைகளிலிருந்தும் அநீதிகளிலிருந்தும் தன்னைக் காப்பாற்றிக் கொள்ள முடியும் என்பதை சத்யாவின் வாழ்க்கை நமக்கு பல கருத்துக்களையும் மேலும் பெண்களால் சமூகத்தில் தனித்து வாழ்ந்து சாதிக்க முடியும் என்ற உயரிய எண்ணங்களை பெண்கள் முன்னேற்றத்தின் வாயிலாக ஆசிரியர் உலகிற்கு உணர்த்தியுள்ளார்.

# கஸ்தூரி சிறுகதையில் பெண்ணியப் பார்வை

*பா. பிரேமா* முதுகலை-தமிழ் நிறைவாண்டு,
அ. ப. ம. கல்லூரி, சின்னக்கலையம்புர்தூர்.

## முன்னுரை:

இன்றைய காலகட்டத்தில் படைப்புகள் என்பது பெருகிக் கொண்டே வருகிறது. கவிதை, புதினம், நாடகம் என்றும் சிறுகதை, ஹைக்கூ, புதுக்கவிதை என்றும் படைப்புலகிறல் புதிய புதய சிந்தனையாளர்கள் தோன்றி பல மாறுதல்களுடன் கூடிய புதிய படைப்புக்களை படைத்துக்கொண்டே இருக்கின்றனர். தற்போது பெண்ணியம் என்ற சொல் சிறப்பாகப் பேசப்படுகிறது. அந்த வகையில் காவேரியின் கஸ்தூரி கதையில் கூறப்படும் பெண்ணியச் சிந்தனைகளை காண்பதே இந்த ஆய்வுக்கட்டுரையின் நோக்கமாகும்.

## கதைச்சுருக்கம்:

நடேச ஷர்மா என்பவர் சென்னையில் அரசாங்கப் பணியில் இருந்தார் அவருக்கு எதிர்பாராத விதமாக டெல்லிக்கு மாற்றலாகிவிட்டது. எனவே குடும்பத்துடன் டெல்லி சென்ற ஷர்மாவின் மனைவி தன்னுடைய மகளான சங்கரியை நினைத்துக் கவலைப்படுகிறாள். தமிழ்நாட்டில் இருந்தால் மாமியார், மாமனார் என சொந்தங்கள் பல பேர் இருக்கின்றனர். தன் மகளையும் நன்றாக கவனித்துக்கொள்வார்கள். கோயில், பூஜை என்று இங்கேயே இருந்து நல்லவரன் வந்தால் திருமணம் செய்து கொடுக்கமுடியும். டெல்லி சென்றால் அதெல்லாம் முடியாது என்று நினைக்கிறாள். டெல்லி சென்று மகளை கவனமாகப் பாதுகாக்கிறாள். யாருடனும் பேசக்கூடாது, பழகக்கூடாது என்று கட்டுப்பாட்டுடன் வளர்க்கிறாள். கஸ்தூரி என்ற வாசனை மிக்க பொருளை விற்கவரும் பெண்ணிடம் கூட பேச அனுமதிக்காமல் தன் மகளை அடக்கி வைக்கிறாள். அதன்பிறகு திருமணம் செய்துவைத்தால்தான் தன்மகளுக்கு முழுமையான பாதுகாப்பு இருக்கும் என்று கதை செல்கிறது.

## பெண்ணிய விளக்கம்:

பெண்ணியம் என்பது சமூக அக்கறையின் வெளிப்பாடு. மகளிரின் பிரச்சனைகளைக் கண்டறிந்து அவற்றைத் தீர்க்க முயல்வது. பெண்ணியத்தை மிகச் சரியாகப் புரிந்து கொள்வது இன்றைய இன்றியமையாத் தேவையாகும்.பெண்ணியம் என்ற சொல் 1890-லிருந்து பாலின சமத்துவ கோட்பாடுகளையும், பெண்ணுரிமைகளையும் பெற செயற்படும் இயக்கங்களையும் குறிக்கப் பயன்பட்டு வருகின்றது.

பெண்ணியம் என்பது பெண்களின் எல்லாச் சிக்கல்களையும் புரிந்து கொண்டு அவற்றை நீக்கி உலகளவில் பெருத்த மாற்றத்தை ஏற்படுத்துவது [1] (இரா. பிரேமா, பெண்ணியம் ப.13)

சைமன்-டி-பெவாயர் என்பவர் பெண்ணியம் என்பது பெண்களின் அடிமைநிலையை மாற்ற முற்படும் கோட்பாடு என்பதும். பெண்ணியவாதி என்பவர் பெண்களின் நிலை மாற்றத்திற்காகக் குரல் கொடுப்பவர் அல்லது பாடுபடுபவர் என்றும் விளக்கம் கூறுகிறார்[2] (மேலது. ப.15)

## இந்நூலுள் கூறப்பட்டுள்ள பெண்ணிய கருத்தாக்கங்கள்:

காவேரியின் கஸ்தூரி என்ற சிறுகதையில் பெண்ணிற்கு பெற்றோரால் விதிக்கப்படும் கட்டுப்பாடுகள், வீட்டிற்குள்ளேயே பெண் அடங்கியிருக்கும் நிலை, பெண்ணே பெண்களை அடக்கி வைக்கும் அடிமை நிலை, பெண் உரிமை மறுப்பு, பெண்ணிற்கு கட்டுப்பாடுகள், பெண் அனுமதியின்றி திருமணம் செய்து வைக்கும் பெற்றோரின் ஆதிக்க நிலை ஆகியவற்றை எடுத்துக் கூற வருகிறது.

## பெண்ணிற்குக் கட்டுப்பாடுகள்:

பெண்ணியம் என்ற சொல்லின் மூலமே பெண்களுக்கு வேண்டும் உரிமைகள் கிடைக்கப்பெற்றது. ஆணும், பெண்ணும் சமமாக இருக்க வேண்டும், ஏற்றத்தாழ்வு கூடாது என்று நினைக்க வேண்டும். இக்கதையில் வரும் சங்கரிக்கும் பல கட்டுப்பாடுகள் விதிக்கப்படுகிறது. சங்கரியின் அம்மா அவளைக் கண்ணும் கருத்துமாகப் பாதுகாக்கிறாள். யாருடனும் பேசக்கூடாது, பழகக்கூடாது என்றும் விரைவில் திருமணம் செய்து வைக்க வேண்டும் என்று கூறுவதையும் காணமுடிகிறது. சங்கரி நீ வெவ்வேறு சாதிக்காரர்களுடன் பழகறே அதனால் உன் மனதே

கெட்டுப் போயிண்டு வருது, நம்ம தமிழ் வட்டாரத்துக்குள்ளேயே இரு. அதுதான் உனக்குப் பொருந்தும் (ச.முத்துலட்சுமி, இக்கால இலக்கியம் தொகுப்பு, ப.285)

பெண்களுக்கு உரிமைகள் கிடைக்க வேண்டும் என்று பேச்சளவில் மட்டுமே கூறுகின்றனர். பெண் என்றால் வீட்டிற்குள்ளேயே இருக்க வேண்டும். பெரியவர்களின் கருத்துக்கு மாறாக எதுவும் சொல்லக்கூடாது என்ற பழமைவாத்தினையே முன்வைக்கின்றனர்.

### வீட்டிற்குள் பெண் அடங்கியிருக்க வேண்டிய நிலை:

பெண்கள் என்றாலே அச்சம், மடம், நாணம் என்ற குணங்களுக்கு ஏற்றாற்போல் இருக்க வேண்டும் என்று எதிர்பார்க்கின்றனர். அந்த வகையிலே பண்பாடு பாரம்பரியம் போன்ற மரபுவழிப்பட்ட சிறப்புக்களைக் காப்பாற்றுவது பெண்ணின் கையில்தான் இருக்கிறது. சங்கரியை நினைத்து அவளின் அம்மா மிகுந்த கவலையடைகிறாள். தமிழ்நாட்டில் இருந்தால் எல்லாரின் உதவியுடனும் சங்கரியை பாட்டு, பூஜைன்னு வளர்த்து, சீக்கிரமா ஒரு வரன் பார்த்து நல்ல குடும்பத்தில் ஒப்படைச்சிடுவேன் டெல்லி சென்றால் அவ்வாறு செய்யமுடியாது திரண்ட பெண்ணான சங்கரியை அந்நிய ஊரில் முறையா எப்படி வளர்ப்பேன் (மேலது. ப.283)

என்று தன் மகளை நினைத்து தாய் மங்களம் கவலையடைகிறாள். பெண்ணுக்குத் திருமணம் மூலமே முழுமையான பாதுகாப்புக் கிடைக்கும் என்று பெற்றோர் நினைக்கின்றனர். பெண்களின் எண்ணங்களுக்கு மதிப்புக் கொடுக்காமல் தங்களுடைய கருத்தை மட்டுமே திணிக்கின்றனர். குடும்பம் பண்பாடு சிறப்பாக இருக்க வேண்டும் என்று கருதுகின்றனர்.

### பெண்ணே பெண்ணுக்கு எதிரி:

பெண்ணுக்குப் பெண்ணே எதிரி என்று கூறுவது வாய்மொழியாக இருந்தாலும் இக்கதையிலும் ஒரு பெண் இன்னொரு பெண்ணிடம் பேசுவதை அனுமதிக்கவில்லை. தன்மீது நம்பிக்கை இல்லாமல் யாருடனும் பேசக்கூடாது என்று தாயே அடக்கி வைக்கிறாள். கஸ்தூரி என்ற வாசனைப் பொருளை விற்கவரும் பெண்ணிடம் சங்கரி பேசக்கூடாது என்று கூறும்போது பெண்களுடனே பேசக்கூடாது என்றால் பெண்கள் திருமணத்திற்கு முன் ஆண்களுடன் பழகக்கூடாது என்று நினைப்பவளாக அவளுடைய அம்மா இருக்கிறாள். ஆண்மானின் வயிற்றிலிருந்து எடுக்கப்பட்டதும், ஆண்களிடம் விருப்பம் உண்டாக்குவதுமான கஸ்தூரி என்ற மணப் பொருளைத் தொடவும் அவளுக்கு உரிமையில்லை. அப்பொருளை விற்கும் பெண்ணிடம் கூட பேசக்கூடாது என்று அடக்கிவைக்கப்படுகிறாள்.

### பெண்ணை அடக்கி வைக்கும் நிலை:

பெண்ணை அடக்கிவைக்கும் நிலை இச்சமுதாயத்தில் காலங்காலமாக நிகழ்ந்து கொண்டிருக்கிறது. இச்சிறுகதையிலும் சங்கரி தன் குடும்பத்தாராலே உரிமைகள் மறுக்கப்பட்டு அடக்கி ஒடுக்கப்படுகிறாள்.

மலைப்பிரதேசத்துப் பெண் சங்கரியின் அம்மாவிடம் குழந்தை ஆசைப்படறது வாங்கிக்கறீங்களா. இதோபார் நீ அந்தக் கஸ்தூரியை இலவசமாகக் கொடுத்தாலும் நான் அதை வீட்டில் வைத்துக்கொள்ள மாட்டேன். உம்.. நட வெளியே, இப்ப உடனே அதை எடுத்துக் கொண்டு போறயா? என் மகளிடம் உனக்கென்ன பேச்சு நட வெளியே [5] (மேலது. ப.283)

என்று கடுமையான குரலில் அதட்டுகிறாள். அம்மா தன்னுடைய இயல்பான சுபாவத்திற்கு முற்றிலும் நேர்மாறாக நடப்பதைக் கண்டு நடுங்கிப் போகும் நிலையில் காணப்படுகிறாள். சமுதாயத்திற்குப் பயந்து திருமணம் செய்து வைக்க நினைக்கிறாள். உனக்கு காலாகாலத்தில் கல்யாணம் பண்ணி வைக்காமல் வடக்கே இந்த ராஷ்சஸ ஊருக்கு அழைத்து வந்ததின் விளைவு இவ்வாறெல்லாம் நடக்கிறது. (மேலது. ப.288)

என்று பெண்மீது குற்றம் சாட்டுகிறாள்.

பெண்ணின் மன உணர்வைப் புரிந்து கொள்ள முடியாத தாய்மீது வெறுப்படையும் சூழ்நிலை உண்டாகிறது. சமுதாயத்தில் பெண்களின் கருத்து எடுபடாமல் அடங்கி வாழவேண்டிய நிலையை அறியமுடிகிறது.

### பெண் உரிமை மறுப்பு:

பெண்கள் என்றாலே இப்படித்தான் வாழ வேண்டும் என்று கூறி பெண்ணின் உரிமைகளும்,

உணர்வுகளும் மறுக்கப்படுகிறது. திருமணம் மட்டுமே முழுமையான பாதுகாப்புத் தரும் என்று நினைக்கின்ற பெற்றோர் திருமணம் செய்து கொள்ளும் பெண்ணிடம் விருப்பத்தைக் கேட்க மறுத்துவிடுகின்றனர்.

இனிமேல் இந்த அம்மாவுடன் பேச்சுவிட்டு விட வேண்டும். ரொம்ப மோசம். என்னை என்னமா ஆட்டி வைக்கிறா?என் விருப்பங்களை மதிக்கிறதில்லை என்ன கொடூரம் [7]. (மேலது. ப. 289)

என்று மகளே தன் பெற்றோரை நினைக்கிற அளவுக்கு சங்கரியின் விருப்பத்தை தெரிந்து கொள்ளாமல் பெற்றோர் தங்களின் விருப்பப்படி திருமண ஏற்பாடு செய்கின்றனர். பெண் என்பவள் பிறப்பிலிருநது இறப்பு வரை பிறரைச் சார்ந்தே காணப்படுகிறாள். பிறப்பு முதல் பெற்றோரையும் திருமணத்தற்குப் பிறகு கணவனையும், அதன் பிறகு மகளையும் சார்ந்தே வாழும் நிலை இன்று வரை நடந்து கொண்டுதான் இருக்கிறது. இதற்குச் சாதகமாக பெண்ணுக்குத் தருமண பந்தமே சிறந்தது என்று கருதுகின்றனர். இதற்கிடையில் பெண் தன் கருத்தைக் கூறமுடியாமல் பெற்றோரின் ஆசைகளை நிறைவேற்ற தயாராகிறாள். அடுத்த வருடம் காலேஜில் படிப்பேனோ? அல்லது எவனோ ஒரு கண்ணம் ஒட்டிய வரண்ட முசுடு மூஞ்சி பிராமணப் பேடிப் பயலுக்கு வாக்கப்பட்டு, மாம்பலத்திலோ, சைதாப்பேட்டையிலோ, ஒரு மாமி ஆகிவிடுவேனோ. என்னுடைய வாழ்க்கையே அவ்வளவுதான். [8] (மேலது. ப.293).

என்று தன்னுடைய இயலாமை நிலையையும், உரிமைகள் மறுக்கப்பட்ட நிலையையும் சிந்தக்கத் தூண்டுகறது. பெண்களின் ஆசைகள், கனவுகள் எல்லாம் நிறைவேறாத கானல் நீராய் அமைந்துவிடுகிறது. இதற்கெல்லாம் காரணம் காலம்காலமாகத் தொடர்ந்து வரும் பெண்ணடிமை நிலையே ஆகும்.

## தொகுப்புரை:

மேலே கூறப்பட்ட அனைத்துக் கருத்தக்களையும் ஆராய்ந்து பார்க்கும் போது பெண்களின் எல்லாப் பிரச்சனைகளையும் புரிந்து கொண்டு நீக்க முயல வேண்டும் என்று சொல்வது வாயளவிலே காணப்படுகறது. திருமண ஒப்பந்தம் மாற்றப்பட வேண்டும். ஆண், பெண் இருவருக்கும் சமமான உரிமை வழங்கப்பட வேண்டும்.
[9] (முனைவர் தேவதத்தா, பெண்ணியம். ப.30)

என்று பெண்ணியலாளர் மல் கூற்றுப்படி பெண்களின் உணர்வுகளுக்கும் எண்ணங்களுக்கும் மதிப்புக் கொடுக்க வேண்டும். பெண்களை ஒடுக்கி நடத்தக் கூடாது. ஆண்களுக்கு இணையான சம உரிமை வழங்கப்பட வேண்டும். காலங்காலமாக நிலவி வந்த பெண்ணடிமை தீர வேண்டும்.

## புதிய ஏவாள் சிறுகதைகளில் பெண்ணியச் சிந்தனைகள்

டாக்டர். *புனிதா ஏகாம்பரம்*,
அரசுக் கல்லூரி, கோவை.

சமுதாய வளர்ச்சிக்கு ஆணிவேராய் இருப்பவள் பெண். பெண்ணின் பண்முகப் பார்வைகளை இன்றைய படைப்பிலக்கியங்கள் தெளிவுபடுத்துகின்றன. பட்டங்கள் ஆளவும் சட்டங்கள் செய்யவும் பாரினில் பெண்கள் புறப்பட்டு வந்தாலும் இன்றும் பெண்கள் நிலை முற்றிலுமாக மாறவில்லை. வீட்டிற்குள்ளும், வெளியிலும் பெண்கள் எண்ணற்ற கொடுமைகளை எதிர்கொள்கின்றனர். இந்தச் சிக்கல்களைப் பற்றிப் பெண் எழுத்தாளர்கள் சிந்தித்து, வடிவம் கொடுத்துச் சிறுகதைகளைப் படைத்துள்ளனர். கோவை ஞானி அவர்கள் ஆண்டு தோறும் பெண் எழுத்தாளர்களுக்குச் சிறுகதைப் போட்டி நடத்தி வருகிறார். திருமதி. இராஜேஸ்வரி பாலசுப்பிரமணியம் அவர்களின் விருப்பப்படித் "தமிழ்நேயம்" சார்பில் நடைபெறும் இப்போட்டியில் பரிசு பெற்ற எழுத்தாளர்களின் சிறுகதைகள் தொகுக்கப்பட்டு வெளியிடப்படுகின்றன. அந்தத் தொகுதிகளில் ஒன்றுதான் 2003ஆம் ஆண்டு வெளியிடப்பட்ட "புதிய ஏவாள்" சிறுகதைத் தொகுதியாகும். இத்தொகுப்பில் சிறுகதை எழுத்தாளர்கள் பெண்ணியச் சிந்தனைகளைப் பதிவு செய்துள்ளனர்.

### புதிய ஏவாள் - கதைக்கரு

"புதிய ஏவாள்" என்ற சிறுகதைத் தொகுப்பில் 15 சிறுகதைகள் இடம் பெற்றுள்ளன. புதிய ஏவாள், ஆற்றின் சுவடு, கனவின் குருதி, விடியல் ஏதடி பெண்ணே, சூரிய காந்தி, எப்படியாவது ஒரு திருமணம், மகேசுகளும் மகேஸ்வரிகளும், உடம்பை உடுத்தும் உளைச்சல்கள், வீழ்ச்சியல்ல, அடிமாடுகள், அந்த மூன்று நாட்கள், சௌம்யாம்மா, ஆசை ஆசையாய், அஞ்சலி, முதல் அத்தியாயம் என்பவனவாகும். சமூக சமூக விழிப்புணர்வுடையதாய், ஆணாதிக்கத்தை எதிர்த்துப் போராடுவதாய் கதைகள் எழுதப்பட்டு உள்ளன. ஒவ்வொரு சிறகதையிலும் பெண்களின் மனவுணர்வுகள் பதிவு செய்யப்பட்டுள்ளன. இக்கதைகளில் வரும் பெண்கள் நாள்தோறும் நாம் சந்திக்கும் பெண்கள், பிரச்சனையை எதிர்த்து போராடுபவர்கள்.

### எழுத்தாளர்களின் பெண்ணியச் சிந்தனைகள்

இக்கதைத்தொகுப்பில் 15 எழுத்தாளர்கள் எழுதியுள்ள சிறுகதைகள் இடம் பெற்றுள்ளன. காலம் காலமாக இவர்கள் அடக்கி வைத்திருந்த மனவுணர்வுகளை, பெண்ணிய முன்னேற்றச் சிந்தனைகளைக் கதைகளின் வழியே வெளிப்படுத்துகின்றன. காதல் உணர்வுகளுக்கு இடம் தராமல் சமுதாயத்தில் பெண்படும் அவலங்களை, அனுபவங்களை எழுதியுள்ளனர்.

### புதிய ஏவாள் - தீவிர வாதப் பெண்ணியம்

"புதிய ஏவாள்" என்ற கதையில் தாய்வழிச் சமூகம் மறைந்து ஆணாதிக்கம் தோன்றிய வரலாறு கதைக்கருவாக கையாளப்பட்டுள்ளது. பெண்ணில் தோன்றிய ஆதாம், பெண்ணையே அழிக்க முயலும் அடக்கு முறையைப் "புதிய ஏவாள்" எதிர்க்கிறாள். ஒரு காலத்தில் அடிமைப்பட்டுக் கிடந்த பெண்ணினம் விழிப்புற்றுப் போராடுவதே கதைக்கரு. சுறுசுறுப்பாகச் சுழன்று ஓடியாடி வேலை செய்யும் ஏவாளும், சோம்பிக் கிடக்கும் ஆதாமும் நமக்குப் புதியவர்களல்லர். உறங்கிக் கொண்டிருக்கும் ஆதாமை ஏவாள் எழுப்பும் போது, "சனியனே, என் தூக்கத்தை கெடுக்கிறதுக்கின்னே வந்தியா, இங்கிருந்து ஓடிப்போயிரு, இல்ல உதை விழும்," (புதிய ஏவாள் ப. 7) என்று சீறுவது ஒவ்வொரு வீட்டிலும் ஆண் பேசுகின்ற வசனங்கள்தான் பல நூற்றாண்டுகளுக்குப் பிறகும் ஆதாம் மாறவில்லை. அவனுக்குள் குரூரங்கள் கூடிக் கொண்டேயிருந்தன. அவன் கையிலிருந்த சாட்டையில் ஏவாளின் எண்பதினாயிரம் லிட்டர் கொட்டியது. (மேலது. ப. 10) என்ற வரிகள் ஆணாதிக்க அடக்கு முறையை வெளிப்படுத்துகின்றன. இறுதியில் புதிய ஏவாள் விழிப்படைந்து ஆதாமை வீட்டை விட்டு வெளியே விரட்டுகிறாள். "நாம சந்திச்சுக் கொண்ட ஒவ்வொரு பொழுதையும் நரகமாகிட்ட நேரம் ஆயிட்டது. நீ கிளம்பலாம். உன்மேல் எனக்கு வெறுப்பு இல்ல. என்ன மறுபடியும் மனுசனாக்குறதுக்கு எனக்கு வேற வழி தெரியல. எனக்கு நிறைய வேலை காத்துக்கிடக்கு. நீ கிளம்பலாம். ஏதாம் ஆதாமைத் தள்ளி கதவைச் சாத்தினாள். இந்த முறை ஏவாளுக்கு நெஞ்சில் வலி இல்லை. ஏனெனில் இவள் புதிய ஏவாள் (மேலது ப. 12) தீவிரவைப் பெண்ணியவாதிகள் தந்தை வழிச் சமூக அமைப்பின் எதிரியாகி (நிர்மலா ராணி, பெண்ணியத் திறனாய்வு, ப. 1) "விடியல் ஏதடி பெண்ணே" கதையில் ஆசிரியர் மாமியாரின் வசவுக்கும் கணவனின் உதைக்கும் அஞ்சாமல் பெற்றெடுத்த இரட்டைப் பெண் குழந்தைகளை வேறு வழியின்றிப் பெற்றவளே கள்ளிப்பால் கொடுத்துக் கொல்லும் கொடுமையைக் கூறுகிறார். "ஏய் இந்தாடி.....இந்தக் கள்ளிப் பாலை உன் கையாலே ஊத்தி,.... ரெண்டையும் வாய மூடவை... இல்லை..... அந்த இரும்புக் கம்பியாலே சூடு வெச்சே சாகடிச்சுடுவேன்," என்றபடி

கள்ளிப்பால் நிரம்பிய சங்கடையை மாமியார் கையில் திணித்தவுடன் வேறுவழியின்றி ராசாத்தி சங்கடைப் பாலை குழந்தைக்குப் புகட்டினாள் என்று கூறுவது பெண் மீதான வன்முறையை உணர்த்துகிறது.

### பெண்மைச் சித்தரிப்பு

பொருளாதார விடுதலை பெற வேண்டிப் பெண் வீட்டைவிட்டுப் புறவாழ்க்கையில் அடியெடுத்து வைக்கிறாள். வேலைக்குச் செல்லும் பெண் எதிர்கொள்ளும் பிரச்சனைகள் பல குடும்பச் சுமை ஒருபுறமும், பணிக்குச் செல்லுமிடங்களில் ஏற்படும் பிரச்சனைகள் மறுபுறம் பெண்ணை வதைக்கின்றன. வேலைக்குச் செல்லும் பெண்ணின் குழந்தைபடும் ஏக்க உணர்வுகளை "சூரியகாந்தி" கதை கூறுகிறது.

### பரிசெக்ஸ் யுகத்திலும், பெண்ணடிமைத்தனம்

"எப்படியாவது உரு திருமணம்" கதையில் ஸோனா என்ற பணிப்பெண் திருமணம் புரிய எடுக்கும் முயற்சிகளை வாழ்வில் யதார்த்தத்துடன் ஆசிரியர் கூறுகிறார். தான் இரண்டாம் தாரமாக வாழ்வதற்கு முன் வந்தாலும் பெண்ணை அடிமைப்படுத்தும் ஆணின் மனோபாவம் அவளுக்குப் புரிய வருகின்றது. ஆணின் வக்கரத்தைப் புரிந்து கொண்ட ஸோனா, நிலைமையுணர்ந்து திருமணத்தை உதறித் தள்ளுகிறாள். "ப்ரீ செக்ஸிலும் கூட பெண்ணடிமைத்தனம் தான் அடிஸ்வரம்", என்று ஸோனா கூறுவது இன்றைய சூழலைப் படம் பிடித்துக் காட்டுகிறது.

### மறு உற்பத்திப் பொருளாய் மாறும் பெண்மை

"சமூக குடும்பத்தளங்களில் பெண் மறு உற்பத்திப் பொருளாக நடத்தப்படுகிறாளே தவிர அறிவும் உணர்வும் மிக்க மனிதப் பிறவியாக மதிக்கப் பெறுவதில்லை (மேலது. ப. 32) என்பதற்கேற்ப "மகேசும் மகேஸ்வரிகளும்" சிறுகதையில் வரும் சரசு தான் குழந்தை பெறும் யந்திரமாக மாறுவதுடன் படிக்க விரும்பும் பெண் குழந்தையின் படிப்பைப் பாதியில் நிறுத்தி அவளுடைய சூழலை ஆசிரியர் கூறுகிறார். தந்தை வழிச் சமூக அமைப்பை மாற்ற வேண்டுமென்று போராடினர்" (தேவதந்தா. பெண்ணியம் ப.21) என்று பேசப்படும் பெண்ணியக் கருத்தை இக்கதை வழியாக ஆசிரியர் உணர்த்துகிறார்.

### பெண்ணின் மனச் சோர்வு

"ஆற்றின் சுவடு" கதையில் வரும் கதைத்தலைவி ஒரு ஆணால் காதலிக்கப்பட்டு ஏமாற்றப்படுவதையும், அதனால் மனச்சோர்வு அடைவதையும் ஆசிரியர் விளக்குகிறார். பெண்ணை ஆற்றோடு ஒப்பிட்டு அவளடையும் இன்ப துன்பங்களைக் குறிப்பிடுகின்றார். "சமூக மற்றும் குடும்ப முரண்பாடுகள் பெண்களுக்கு மன அளவிலும், உடல் அளவிலும் பெரும் பாதிப்புகளை ஏற்படுத்துகின்றன." (வீ. நிர்மலா ராணி, பெண்ணியத்திறனாய்வு, ப. 57) என்ற பெண்ணியக் கருத்தினை இச்சிறுகதை உணர்த்துகிறது. ஆறு வறண்டு கிடந்தது. குறுணேலோரமாய் நாங்கள் பேசிய வார்த்தைகள் நீயின்றி இறந்து கிடக்கும் பறவையென இறைத்து கிடந்தன. (புதிய ஏவாள். ப. 18) என்ற வரிகள் பெண்ணின் மனச் சோர்வை உணர்த்துகிறது.

### பாலின வேறுபாடுகள்

ஆணாதிக்க சமுதாயத்தால் ஆணுக்கென்றும் பெண்ணுக்கென்றும் இடையே வகுக்கப்படும் பண்புகள், நியதிகள், மரபுகள் அடிப்படையிலான வேறுபாடுகள் பாலின வேறுபாடுகள் எனலாம். (நிர்மலா ராணி, பெண்ணியத்திறனாய்வு ப. 9) வெண்ணிலா எழுதிய "கனவின் குருதி" சிறுகதை பாலின வேறுபாட்டை மையமாய் வைத்து எழுதப்பட்டது. சிறுவயது முதலே பெண்பாலியல் பொருளாகப் பார்க்கப்படுவதைச் சுட்டிக்காட்டுகின்றார். அண்ணனென்றும் மாமனென்றும் வரும் உறவுகள் வக்ரங்களுடையதாய்ப் பெண்ணைப் போகப் பொருளாக அனுபவிக்கத் துடிக்கும் வல்லூறுகளாய் இருப்பதைக் "கனவின் குருதியில்" ஆசிரியர் புலப்படுத்துகின்றார். கதைத்தலைவி சுதா கனவில் அனுபவிக்கும் பாலியல் ரீதியான கொடுமைகளை ஆசிரியர் குறிப்பிடுகிறார். "கனவின் ஊடேயும் அலறத்துவங்கினாள் உருவத்தின் முகம் அவள் அப்பாவைப் போல் இருந்தது" (புதிய ஏவாள், ப.24) என்ற வரிகள் பெண் கனவிலும் அனுபவிக்கும் பாலியல் கொடுமைகளை நமக்கு உணர்த்துகின்றன.

### பெண் மீதான வன்முறை

சமுதாயத்தில் பெண் மீதான வன்மறைகள் இன்றளவும் காணப்படுகின்றன. "பிறப்பில் ஆண், பெண், பேதம் காட்டுவதும், கருவிலேயே பெண் குழந்தையை அழிப்பதும் வன்முறையின் நிகழ்வுகள்".

### ஆணாதிக்க அடிமையுணர்வு

"உடம்பை உடுத்தும் உளைச்சல்கள்" கதையில் பாலின வேறுபாட்டில் ஆண் பெண்ணிற்கு இழைக்கும் கொடுமைகளை ஆசிரியர் எழுதுகிறார். ராதா ஆசையாக மணந்த கணவன் ரமேஷ் அவளை நாள்தோறும் அவமானப்படுத்துகிறான். சிகரட்டால் சுட்டு சித்திரவதை செய்கிறான். உடலும் உள்ளமும் சோர்ந்து

மனச் சிதைவிற்குள்ளாகிறாள். மனதிற்குள் புலம்புகிறாள், "நான் முண்டம்"ன்னா? "இவன் தெண்டம்"ன்னு சொல்ல எத்தனை நேரம் பிடிக்கும்? சுடுவான் சிகரெட்டால....சுடட்டும்...தாங்கிப்போம். படவா...ஒன்னால ஒரு சூடு தாங்கமுடியாது" என்று குமுறுகிறாள். (புதிய ஏவாள். ப. 57) "பெண்ணடிமை" என்ற நூலில் "ஜான் ஸ்டுவர்ட்மில்" திருமணம் என்ற நிறுவனம் பெண்ணுக்கு மிகப் பாதகமானது. பெண்ணடிமைத்தனத்திற்கு இத்திருமணமே காரணமாக உள்ளது என்றும் இவற்றைப்போக்கினாலொழிய பெண் விடுதலைக்கு வழியில்லை என்று கூறுவது நோக்கத்தக்கது. (செ. கணேசலிங்கன். பெண்ணடிமைத் தீர ப. 2)

## வீழ்ச்சியல்ல..., எழுச்சி

"வீழ்ச்சியல்ல" என்ற கதையில் மனைவியைக் கணவன் அடித்துக் கொடுமைப்படுத்துகிறான். எதிர்த்தும் கேட்ட ஒரு சின்னப் பெண்ணிற்கு எதிராக ஆணாதிக்க சமுதாயமே ஒன்று திரண்டு, "பஞ்சாயத்து" என்ற பெயரில் பாதகத்தைச் செய்கிறது. அவளுக்குப் பத்தாயிரம் ரூபாய் பணமும் அத்துடன் பத்துத்தடவை காலில் விழுந்து மன்னிப்பு கேட்கனும் என்ற தீர்ப்பையும் பஞ்சாயத்து விதிக்கிறது. "மனைவியுடைய வேலைகளில் சமையல்களில் குறைகண்டு பிடிப்பதற்கும் கணவனுக்கு அதிகாரம் உண்டு. அதுமட்டுமல்ல அடிப்பதற்கும் உதைப்பதற்கும் உரிமையுண்டு. வலி தாங்காது மனைவி சத்தமிடினும் அயலார் எவரும் தலையிட மாட்டார்கள்"

## பாலின வக்ர எண்ணங்கள் நீங்க வேண்டும்

"அந்த மூன்று நாட்கள்" கதையில் பெண்களுக்கேயுரித்தான "மூன்று நாள்" பிரச்சனைகள் ஆசிரியரால் உளவியல் ரீதியாகக் கூறப்படுகிறது. பெண்களைக் கேலிபேசும் ஆடவர்களின் வக்கிர உணர்வு திருத்தவில்லை என்பதைச் சாடுகிறார். "காதுல பஞ்சை அடைச்சி வச்சிக்கிட்டு போனாலும் இந்தக் கேலிகள் அதை ஒதுக்கித் தள்ளிட்டு உள்ளே போய்குடையற குடைசல்ல காதுல இருந்து சீழே வடிய ஆரம்பிச்சுடும்" என்று ஆணின் கேலியைப் பொறுக்காத பெண் அடையும் மனவுணர்வினை ஆசிரியர் கூறுகின்றார்.

"ஆண்களின் துரியோதனப் பார்வைகள் நீங்க வேண்டும். அவர்களுக்குப் புதிய மனங்களுடன் புதிய பார்வைகளும் வேண்டும். பாலின வக்கர எண்ணங்கள் தனி மனித மனத்தில் முதலில் நீங்க வேண்டும்". (மீனாட்சி முருகரத்தினம். பெண்ணியச் சிந்தனைகள். ப. 14) என்று கூறியுள்ள கருத்துக்கள் ஆசிரியரால் இக்கதையில் இடம் பெற்றுள்ளன.

## போர்க்குணமிக்க புதுமைப் பெண்

"அஞ்சலி" கதையில் தமக்கையைத் திருமணம்செய்து அவளைக் கொடுமைப்படுத்தி பைத்தியமாக்குகிறான் கணவன். மனச்சிதைவிற்கான அவள் உயிரை விடுகிறாள். அக்காவின் வாழ்வை அழித்த கணவனைத் தங்கை பழிவாங்க எண்ணித் தன்வாழ்வைக் "காவு" கொடுத்துப் போராடப் புறப்படுகிறாள்.

"முதல் அத்தியாயம்" கதையில் நாள்தோறும் வதைபடும் பெண், புகுந்த வீட்டில் அனைவராலும் அவமானப்படுத்தப்பட்டு வெளியேற்றப்படுகின்றாள். படித்த பெண்ணான வசந்தி பழையதைக் கழித்துப் புதுவாழ்க்கை வாழப் புறப்படுகின்றாள். புதிய வேலை ஒன்றினையும் தேடிக் கொள்கிறாள். திருமணம் அல்லது வேலை என்றில்லாமல் வேலை பார்த்துக்கொண்டே குடும்பத்தில் இருக்கலாம்:... பெண்ணுக்கென ஆணைச்சாராத ஒரு பின்புலம் இருக்க முடியும் என்று மிதவாதப் பெண்ணியம் கூறுவதை இக்கருத்து புலப்படுத்துகிறது. (தேவதத்தா- பெண்ணியம் ப. 183)

"அடிமாடுகள்" கதையில் மருமகளால் மாமியார் அனுபவிக்கும் கொடுமைகளை ஆசிரியர் அனுபவங்களாக எழுதுகிறார். "பெண்" எந்த நிலையிலும் துன்பத்தை அனுபவிக்கும் சூழலை இக்கருத்து உணர்த்துகிறது.

## நிறைவுரை

இச்சிறுகதைத் தொகுப்பில் உள்ள கதைகளில் பெரும்பான்மையானவை பெண்ணியச் சிந்தனைகளைக் கருவாகக் கொண்டு எழுதப்பட்டுள்ளன. காலங்காலமாய் வேரூன்றிக்கிடக்கும் ஆணாதிக்க மனப்பான்மையைச் சுட்டிக் காட்டும் விதத்திலும் பெண் ஆணை எதிர்த்துப் போராடித் தீர்வு காணும் முயற்சிகளையும் இக்கதைகள் விளக்குகின்றன. பெண்ணை ஆண் புரிந்து செயல்படுதல் அவசியம். பகிர்ந்து கொள்ளப்படாத அவளது சோகமும் தனிமையும் கதைக்கருக்களாக இத்தொகுப்பில் வெளியிடப்பட்டுள்ளன.

# ஈழக்கவிதைகளில் பெண்ணியச் சிந்தனைகள்

சு.ர.பூங்கொடி முனைவர் பட்ட ஆய்வாளர்,
பாத்திமாக் கல்லூரி, மதுரை - 18.

காலங்காலமாகவே நமது சமுதாயக் கட்டமைப்பில் குடும்பத்தின் அதிகாரம் ஆணின் கையில்தான் இருக்கிறது. அதே வேளையில் அவனால் கட்டமைக்கப்பட்ட சமூக, அரசியல் சார்ந்த அதிகார பீடத்தின் ஆதிக்கம் அவனையே கூட மூச்சு திணற வைக்கிறது. எனவே இங்கு சுதந்திரத்தை விரும்பும் ஆண், குடும்பத்திற்கு வெளியேயான அதிகாரக் கட்டமைப்புக்கு எதிராகக் குரலெழுப்புகிறான். ஆனால் பெண்ணோ, ஆணினால் கட்டமைக்கப்பட்டுள்ள குடும்ப அமைப்பு, அதற்கு வெளியேயான சமூக, அரசியல் அதிகார அமைப்பு இரண்டின் ஆதிக்கத்துக்கும் உள்ளாகிறாள். இக்காரணத்தினால் இங்கு சுதந்திரத்தை விரும்பும் பெண் இவ்விரு ஆதிக்கங்களுக்கும் எதிராகக் குரலெழுப்ப வேண்டியவளாகிறாள். இந்தக் குரலே பெண்ணியமாகிறது.

## பெண் கவிதை மரபு

சங்ககாலத்தில் குறிப்பிடத்தக்கக் கவிஞருள் ஒருவர் ஔவையார். ஔவையாருக்குப் பின்னுள்ள கவிஞர்களில் காரைக்காலம்மையார், ஆண்டாள் ஆகிய இருவரும் சிறப்பான முத்திரை பதித்திருப்பவர்கள். தொல்காப்பியர்,

அச்சமும் நாணும் மடனும் முந்துறுத்த
நிச்சமும் பெண்பாற்கு உரிய என்ப

என்று பொதுவாகப் பெண்களின் குண நலன்களையும், இயல்களையும் வலியுறுத்திக் கூறிய ஆணாதிக்கம் மிகுந்த ஒரு சமுதாயத்தின் இரண்டாயிரம் ஆண்டுக்காலக் கவிதை வரலாற்றில் பெண் கவிஞர்களின் பெயர்கள் இடம் பெறுவதே ஆரோக்கியமான சூழல் என்று கூறத் தோன்றுகிறது.

20ம் நூற்றாண்டில் நாணமும் அச்சமும் நாய்கட்கு வேண்டுமாம் என்ற பாரதியின் ஆணாதிக்கப்பார்வைக்கு எதிரான கலகக்குரல், பெண்களுக்குக் கிடைத்த மிகப்பெரிய வரம் என்றே கூறலாம். இதனால் 1930-களுக்குப் பிறகு பெண்களின் எழுத்துலகமும், கருத்துலகமும் விரிவடையத் தொடங்கின. எழுதுதல் என்பதே பல பெண்களுக்கு வடிகாலாக, ஆறுதலாக, வெற்றியாக, சாதனையாக இருந்தது. அப்படி எழுதினால்கூட அவர்கள் நினைத்ததை எல்லாம் எழுதிவிட முடியாத நிலைமை இன்றும் பல பெண்களுக்கு இருந்துவருகிறது. அவர்களுக்கென்று தனிப்பட்ட இடத்தைக் கொடுக்கச் சமுதாயம் மறுக்கிறது. இதனைக் கவிஞர் சல்மா, தனது உரையில்

ஒரு பெண் தனிப்பட்ட முறையில் வெளி உலகில் அங்கீகாரத்தைப் பெறமுடியும் என்பதோ தனது அடையாளத்தைப் பதிவு செய்ய இயலும் என்பதோ முதல்முறையாக இங்கு நிகழும் போது அது தாங்கவியலாத ஆத்திரத்தை ஒட்டுமொத்த சமூகத்திடம் உண்டு பண்ணியிருக்கிறது . என்று கூறுகிறார்.

இப்படிப்பட்ட சமூகத்தைக் காட்டிக்கொடுக்கும், எதிர்கொள்ளும் கவிதைகள் தற்போது பெண்களால் அதிகம் புனையப்படுகின்றன.

## ஈழப் பெண் கவிஞர்களும், கவிதைகளும்

ஈழத்தில் ஏற்பட்ட தீவிரமான அரசியல் நெருக்கடிகளும் தமிழ்த் தேசிய இயக்கத்தின் எழுச்சியும் ஈழத்துப்பெண்களிடையே குறிப்பாக மாணவியரிடையே பெரும் விழிப்புணர்ச்சியை ஏற்படுத்தின. இயக்கங்கள் சார்ந்தும் தனித்தும் பெண்கள் அமைப்புகள் ஏற்படுத்தப்பட்டு அவை தீவிரமாகச் செயல்படத் தொடங்கின.

ஈழத்துப் பெண் கவிஞர்கள் எழுதிய சொல்லாத சேதிகள் என்னும் கவிதைத் தொகுப்பு 1986ல் வெளிவந்தது. இந்தக் கவிதைத் தொகுப்பு ஈழத்துக் கவிதைப் போக்கில் புதிய பரிமாணத்தை ஏற்படுத்தியது எனலாம். ஈழத்துப் பெண் கவிஞர்களைப் பொறுத்த அளவில் ஊர்வசி, சங்கரி, அவ்வை ஆகிய மூவரையும் குறிப்பிட்டுச் சொல்லலாம்.

இருபதாம் நூற்றாண்டின் வெளியீடாகிய பறத்தல் அதன் சுதந்திரம் என்ற பெண் கவிதைத் தொகுப்பு நூலில் இடம்பெற்றுள்ள ஈழப் பெண் கவிஞர்களின் கவிதைகள் இக்கட்டுரையின் மூலச்சான்றாதாரமாக அமைகிறது. அக்கவிதைகளில் ஈழத்தின் பொதுப்பிரச்சினைகளாகக் கருதப்படும் போர்க்கால நெருக்கடிகள், புலம்பெயர் வாழ்க்கைச்சிக்கல்கள், தனிமனித இழப்புகள் ஆகியவற்றின் ஊடே இப்பெண் கவிஞர்கள் தங்களுக்கு நேரும் ஒடுக்குமுறைகள், பாலியல் வன்முறைகள் முதலியவற்றை எழுதியதோடு அவற்றை எதிர்த்தும், மறுத்தும் குரல் கொடுத்திருக்கிறார்கள். இப்போக்கினை எடுத்துக்காட்டுவதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

## கவிதைகளில் பெண்ணின் அடையாளங்கள்

பெண்ணுக்கென்று சில அடையாளங்கள் சமுதாயத்தில் கூறப்படுகின்றன. பெண் என்றாலே இப்படித்தான் இருப்பாள் என்று உடல் உறுப்பு அடிப்படையில் இனங்காட்டும் அடையாளங்கள் பெண்ணை இழிவு படுத்துகின்றன. சங்கரி எழுதிய அவர்கள் பார்வையில் என்ற கவிதை,

எனக்கு
முகம் இல்லை
இதயம் இல்லை
ஆத்மாவும் இல்லை
அவர்களின் பார்வையில்
இரண்டு மார்புகள்
நீண்ட கூந்தல்
சிறிய இடை பருத்த தொடை
இவைகளே உள்ளன . (ப.அ.சு.ப.84)

என்று பெண்ணின் பால் அடையாளங்களை மட்டுமே சமுதாயம் கருத்தில் கொள்வதைக் கோடிட்டுக்காட்டுகிறது.

## பெண்களுக்குப் பாதுகாப்பு இன்மை

ஈழத்தில் நடக்கும் போரினால் ஆண், பெண் ஆகிய இருவருக்குமே பாதிப்பு ஏற்படுகிறது. ஆனால் இதில் பெண்ணே ஆணைவிட மனதாலும், உடலாலும் பாதிக்கப்படுகிறாள். பெண் உடல் வலுவில்லாதவள். அவளை எது வேண்டுமானாலும் செய்ய முடியும் என்ற ஆணாதிக்கப் பார்வையை ஊர்வசி எழுதிய இடையில் ஒரு நாள் எனும் கவிதையில்

ராணுவ கும்பல்
அல்லது போலீஸ் படை
பிறகு
கூந்தல் அவிழ்ந்து விழுகிற வரையில்
விசாரணை (ப.சே.சு.ப. 54)

என்ற வரிகள் விளக்குகின்றன.

சமூகம் வலியுறுத்தும் பெண்ணின் கடமைகள்

சமூகம் பெண்ணுக்கென சில கடமைகளை விதித்துள்ளது. பெண் என்றால் ஆணுக்கு அடங்கி நடப்பவள், அவனது கட்டளைகளுக்குக் கீழ்ப்படிபவள், அனைத்து வேலைகளையும் செய்யும் இயந்திரம் அவள் என்ற கருத்துக்கள் பெண்ணை இரண்டாவது நிலையில் வைத்திருப்பதைக் காணமுடிகிறது.

சமையல் செய்தல்
படுக்கையை விரித்தல்
குழந்தை பெறுதல்

இவையே எனது கடமைகள் ஆகும்" (ப.அ.சு.ப.84)
என்று சங்கரி எழுதிய அவர்கள் பார்வையில் என்ற கவிதை வரிகளும்,
"சூரியப்புலவின் முன் இங்கேயும்
பெண்ணின் பெருமைக்காய் எழுதல்" (ப.அ.சு.ப. 113)
என்று சுமதி ரூபன் எழுதிய "கழுகு" என்ற கவிதை வரிகளும் பெண் ஆணுக்காய் படைக்கப்பட்டவள் என்ற கருத்தை முன் வைப்பதின் மூலம் பெண்கள் தங்களுக்கு விதிக்கப்பட்டிருக்கும் இந்தக் கடமைகளுக்கு எதிரான நிலைப் பாட்டுக்குத் தயாராகிவிட்டனர் என்பது மறைமுகமாக புலனாகிறது.
பாலின வேறுபாடு
"சமூகத்தால் உருவாக்கப்பட்ட ஆண்மை, பெண்மை என்ற கருத்துருவங்களின் அடிப்படையில் ஆணிலிருந்து பெண்ணை வேறுபடுத்திப் பார்ப்பது பாலின வேறுபாடு எனலாம்".
"பெண்ணை
என்றும் பேதையாகவும்
ஆணை
வீரபுருஷ நாயகனாகவும்
நோக்கும் வரையும்" (ப.அ.சு.ப.86)
என்று ஊர்வசி எழுதிய 'இடைவெளி' என்னும் கவிதையில் பெண்ணைத் தாழ்த்தியும் ஆணை உயர்த்தியும் பார்க்கும் சமுதாயம் காணும் நிலை உணர்த்தப்படுகிறது.
வரதட்சிணை எனும் கட்டாயம்
ஆணும் பெண்ணும் இணைந்து வாழ்வதே திருமணம். ஆனால், அதில் பெண்கள் மட்டுமே கப்பம் கட்ட வேண்டிய கட்டாய நிலைக்குத்-தள்ளப்படுகின்றனர் என்று ஹீஜா குறிப்பிடுவது போல் வசந்தி ராஜா எழுதிய கூரை எரிந்ததில் நிலவை ரசிக்கும் நான் எனும் கவிதையில்,
"காசு கொடுத்து
ஆம்பிளை வாங்கி
அதற்கு
பணிவிடை செய்யும் அவலங்கள்" (ப.அ.சு.ப.185)
என்ற வரிகள் பெண்ணுக்குக் காலங்காலமாக நடந்து வரும் அவலத்தை விளக்குகிறது.
பெண்களுக்குச் சமூகத்தில் நடக்கும் இக்கொடுமைகளிலிருந்தும் போர்க்காலச் சூழல்களில் நேரும் வன்முறைகளிலிருந்தும் மாற்றம் பெற அரசியல் ஒரு சிறந்த துறையெனக் கருதி அதில் ஈடுபட்டு ஆணுக்கு இணையான உரிமையைப் பெற்றனர். அரசியலில் நுழைந்து பொது வாழ்வில் ஈடுபட்டதால் அவர்கள் மீது விதிக்கப்பட்டிருந்த சமூகக் கட்டுப்பாடுகள் விடுபடத்தொடங்கின.
போர்ச்சூழலில் சில பெண்கள் அயல்நாடுகளுக்குப் புலம் பெயர்ந்து சென்றனர். அந்நாடுகளில் வரதட்சிணை மற்றும் ஆணைச் சார்ந்து வாழும் நிலைமை போன்ற பெண்சார் மரபு நிலைப்பாடுகள் இல்லாத காரணத்தினால் தங்களுடைய அடுத்த தலைமுறை 'காசுகெதடுத்து ஆம்பிளை வாங்கிப் பணிவிடை செய்யும்' மரபிலிருந்து விடுபட்டுச் சுதந்திரமாக இருப்பதாகத் தங்களுடைய கவிதைகளில் வெளிப்படுத்துகின்றனர். இதன்மூலம் புலப் பெயர்வு என்பது தீமையில் கிடைத்த நன்மையாக 'தாங்கத் தட்டில் கிடைத்த சுதந்திரம்'

என வசந்தி ராஜா அதனைக் குறிப்பிடுகிறார்.

மேலும் பெண் ஆணைச்சார்ந்து வாழ வேண்டிய சமுதாயக் கட்டமைப்பிலிருந்து விடுதலைபெற எண்ணுவதை நஞ்சினி தனது கீழ்வருமாறுகூறுகிறார்.

நண்பனே
நான் சுதந்திரமாக இருப்பதற்குக்
காரணமே உன் துணை
இல்லாமல் இருப்பது தான் (ப.அ.சு.ப. 206)

என்ற வரிகளிலிருந்து ஆண் துணை தனக்குத் தேவையில்லை என்ற எதிர்ப்புக்குரல் கவிதையாக உருமாற்றம் பெற்றிருப்பதைக் காணமுடிகிறது.

## முடிவுகள்

ஈழப்பெண் கவிஞர்கள், தங்களுக்கு ஏற்படுகின்ற சமுதாய அவலங்களை பதிவு செய்வதுடன் அம்மரபு வழி இடர்பாடுகளை எதிர்த்தும் குரல் கொடுத்திருக்கிறார்கள்.

## அடிக்குறிப்புகள்

1. சல்மா, காலச்சுவடு 2003, ப. 59
2. தி. ஷர்மிளா, தேனி மாவட்ட தேவாங்கர்குல நாட்டுப்புறக்கதைகளில் பாலின பாகுபாடுகள், ப.17
3. S.L.Hooja, Dowry System in India, P.Nil

## சுருக்கக் குறியீட்டு விளக்கம்

ப - பக்கம்

ப.அ.சு. - பறத்தல் அதன் சுதந்திரம்

# "உறங்க மறந்த கும்பகர்ணர்கள்" புதினத்தில் பெண்ணியம்

*க. மஞ்சுளா*, தமிழ் இலக்கியம் - முதுகலை நிறைவாண்டு,
அ.ப.ம. கல்லூரி, சி.க.புத்தூர், பழனி.

## முன்னுரை

ஆண்களும் பெண்களும், அறிவிலும் ஆற்றலிலும் இயல்பாகவே சமமானவர்கள் என்ற கருத்தை பெண்ணியலாளர்கள் கூறுகின்றனர். பெண் அறிவுக் கூர்மை உடையவள், இயக்க சக்தியாக இருப்பவள் என்று பெண்ணுக்குரிய சில மேன்மையான சிறப்புக்கள் பற்றி எடுத்துரைக்கப்பட்டுள்ளன. தங்கள் வாழ்நிலையில் ஆண்கள் தங்களுக்கான உரிமையைச் சரிநிகராகப் பெண்களுக்கு விட்டுக்கொடுத்தும் வாழ வேண்டும் என்ற கருத்தை வலியுறுத்தும் சோலை சுந்தரப் பெருமாளின் "உறங்க மறந்த கும்பகர்ணர்கள்" புதினத்தில் பெண்ணியச் சிறுகதைகளை ஆராய்வதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

## பெண்ணியம் விளக்கம்

பெண்ணியம் என்பது பெண்களின் அடிமைநிலையை மாற்ற முற்படும் கோட்பாடு என்றும், பெண்ணை ஓர் "உயிரி" எனச் சமூகம் அங்கீகரித்து அவளுக்கு ஆணுக்குச் சமமான உரிமையும், சுதந்திரமும் கொடுக்கத் தூண்டும் கொள்கையாகும் என்றும் பெண்ணியலாளர்கள் முன்வைக்கின்றனர். "சார்லட்பன்ச்" பெண்ணியம் என்பது பெண்களுக்கான உரிமையைப் பெற்றுத் தருவது மட்டுமல்ல சமூகத்தையே மாற்றி அமைக்க முயல்வதாகும்"1. என்று கூறியுள்ளார்.

"புட்சா" என்பவர் பெண்கள் பாலின பாகுபாட்டால் அனுபவிக்கும் தனிப்பட்ட பொருளாதாரத் துன்பங்களை எதிர்த்து மேற்கொள்ளும் இயக்கமே பெண்ணியம்"2. என்று கூறியுள்ளார்.

1. தாராளப் பெண்ணியம், 2. சமதர்மப் பெண்ணியம், 3. தீவிரவாதப் பெண்ணியம், 4. ஆன்மீகப் பெண்ணியம், 5. கிறித்துவப் பெண்ணியம், 6. கலாச்சாரப் பெண்ணியம், 7. இல்லப் பெண்ணியம், 8. தலைமைத்துவம் வேண்டாப் பெண்ணியம், 9. கருப்புப் பெண்ணியம், 10. சூழல் பெண்ணியம் போன்ற பலவகையான பெண்ணிய வகைகள் உள்ளன.

## உறங்க மறந்த கும்பகர்ணர்கள் புதினத்தின் மையப்பொருள்

மனநிலை பாதிக்கப்பட்ட அப்புவின் வாழ்வில் அபூர்வ மலர்ச்சி தரும் செவந்தி என்ற பெண்ணின் கதையும், மருதாயி என்ற இன்னொரு பெண்ணின் கனவுகள் உடைந்து சிதறும் கதையும் ஆகும். வேளாண் தொழிலாளர்களிடையே அன்றாடம் எழும் பிரச்சனைகள் அவற்றிடமிருந்து அவர்கள் விலகிச் செல்லும் பாங்கையும், இயற்கையுடன் இயைந்து வாழும் முறைகளைப் பற்றி ஆசிரியர் இப்புதினத்தின் மையப் பொருளாக எடுத்துக்காட்டியுள்ளார்.

## இப்புதினத்தில் வரும் பெண்ணிய கருத்தாக்கங்கள்

1. பெண்ணின் தாய்மையைப் போற்ற வேண்டும். 2. ஆணாதிக்க நிலையைச் சாடுதல், 3. தான் விரும்பும் ஆணை திருமணம் செய்யும் உரிமை, 4. ஆண் - பெண் சமத்துவ உரிமை, 5. பெண்கள் ஊர் பஞ்சாயத்தில் கலந்து கொள்ளும் உரிமை, 6. பெண்ணின் வாழ்வின் எதிர்பார்ப்புகள், 7. பெண்களுக்கு கல்வி தேவை 8. பெண்ணின் தொழிற் திறன். 9, சடங்கு செய்தல் பெண்ணுக்கு இன்றியமையாதது போன்ற பெண்ணியக் கருத்தாக்கங்கள் இப்புதினத்தில் விரவிக் கிடப்பதைக் காணலாம்.

## பெண்ணின் தாய்மையைப் போற்ற வேண்டும்

திருமணம் முடிந்த பெண்கள் ஒரு குழந்தையைப் பெற்றெடுப்பது எளிதானது அல்ல. பல சோதனைகளையும் வேதனைகளையும் தாண்டி பெற்றெடுக்கிறாள். ஆண்கள் இவ்வகையான துன்பத்தை அனுபவிக்கிறார்கள் என்பதை தங்கத்தின் மூலம் புதின ஆசிரியர் வெளிப்படுத்தியுள்ளார். இப்புதினத்தில் வரும் தங்கம் மனவளர்ச்சி குன்றிய 25வயது அப்புனு என்ற மகனைத் திருத்தப் பாடுபடும் துன்பத்தின் மூலம் தாய்மை படும் துயரத்தைப் புதின ஆசிரியர் காட்டியுள்ளார். 3.

## ஆணாதிக்க நிலையைச் சாடுதல்

சிவராமன் நல்ல வேலையில் இருந்தும் பெற்றோர்களை உடன்பிறந்தவர்களை கவனிக்கத் தவறிவிடுகிறான். காரணம், தான் வேலை பார்க்கிற ஆணவம். தன் பண்ணையில் வேலை செய்யும் பொன்னுக்கண்ணுவின் மகள் மருதாயின் சடங்கிற்கு தங்கம் சென்று வருகிறாள். தன் மகன் வந்த பின் என்ன நடக்கப் போகிறதோ என்ற கவலைதான் அவள் மனதில் மையமிட்டுக் கொண்டிருந்தது. தாய் மகனிடம் பேசவே பயப்படுகிறாள். எனவே சிவராமனின் ஆணாதிக்க நிலை தெரிய வருகிறது. 4.

## தான் விரும்பும் ஆணைத் திருமணம் செய்யும் உரிமை

செவந்தி தாழ்ந்த குலப் பெண்ணாக இருந்தாலும் தனக்கு விருப்பப்பட்ட ஆண் மேல் ஜாதி என்று தெரிந்தும் அப்புவைத் திருமணம் செய்து கொள்கிறாள். இத்தகைய திருமணத்திற்கு சமுதாயத்தினர் எதிர்க்கும் நிலை இன்று வரை நிகழ்ந்து வரும் நிகழ்சியாக உள்ளது. அப்புவின் உடல்நிலையை மனநிலையை அறிந்து அவனது விருப்பத்திற்கு இணங்குகின்றாள். பெண் தனக்குப் பிடித்த ஆணைத் திருமணம் செய்து கொள்ளும் உரிமை அனைத்துப் பெண்ணியலாளர்களால் வலியுறுத்தப்பட்டுள்ளது. பொன்னுக்கண்ணு பண்ணையில்

வேலை பார்த்தாலும், அன்றாடக் கூலி வேலை செய்தாலும் தன் மகளுக்குச் செய்ய வேண்டிய சடங்கு முறையைச் செய்கிறாள். தன் மகள் மருதாயி யாரை விரும்புகிறாளோ அவரையே திருமணம் செய்து கொள்ளட்டும் என்று நினைக்கிறாள். இன்றைய நூற்றாண்டில் சமுதாயத்தில் தனக்குப் பிடித்தவரை திருமணம் செய்து கொள்ளும் உரிமையைப் பெற்றோர் வழங்க வேண்டும் என்ற பெண்ணியச் சிந்தனையை இப்புதின ஆசிரியர் வலியுறுத்தியுள்ளார். "திருமண ஒப்பந்தம் மாற்றப்பட வேண்டும். ஆண்-பெண் இருவருக்கும் சமமாக உரிமைகள் வழங்கப்பட வேண்டும்"5. என்று கூறிய பெண்ணியலாளரான மில் என்பவரின் கூற்றுப்படி பெண்ணுக்கு திருமண உரிமை வழங்கப்படுகிறது.

### ஆண் - பெண் சமத்துவ உரிமை

தங்கத்தின் கணவன் எந்தக் காரியம் செய்தாலும் தங்கத்தின் முடிவைக் கேட்டுத்தான் கலந்து பேசி கணவன் சின்னச்சாமி முடிவு செய்கிறார். குடும்பத் தலைவிக்குரிய மதிப்பு, தகுதி சமமாக தங்கத்திற்கு கொடுக்கப்படுகிறது. அய்யாவு தன் மனைவி பொன்னுக்கண்ணுவிடம் மனம் கோணாமல் கலந்து பேசி அவளின் முடிவைப் படியே எல்லாக் காரியங்களையும் விட்டு விடுகின்றான். பெண் என்பவள் அடிமை அல்ல. அவள் ஆணுக்கு சமமாக மதிக்கப்படுகிறாள். குடும்பத்தில் சரிபாதியாக அவளுடைய கருத்தை ஏற்று செயல்படும் பெண்ணியச் சிந்தனையை இப்புதின ஆசிரியர் முன் வைத்துள்ளார்.

### பெண்கள் ஊர் பஞ்சாயத்தில் கலந்து கொள்ளும் உரிமை

கிராமத்தில் நடக்கும் பஞ்சாயத்தில் பெண்களும் கலந்து கொள்ள உரிமை வழங்கப்பட்டுள்ளது. பெண்களின் பிரச்சனையைப் பேசி முடிக்கும் போது பெண்கள் ஊர்ப் பஞ்சாயத்தில் கலந்து கொள்ளும் உரிமை இருந்தது. செவந்தி அப்புனுவின் திருமணப் பிரச்சனையால் நிகழந்த ஊர்க்கூட்டத்தில் கலந்து கொள்வதில் இருந்து அறிய முடிகிறது. ஆண்களுக்கு இணையாக பெண்களும் கிராம வேலைகளில் பங்கேற்றால் தான் அந்தக் கிராம முன்னேற்றம் சரியான திசையில் செல்லும் என்பது இப்புதினத்தில் மெய்ப்பிக்கப்பட்டுள்ளது.6.

### பெண்ணின் வாழ்வின் எதிர்பார்ப்புகள்

பெண்ணின் எதிர்பார்ப்பு ஏமாற்றமாக நிகழும் போது எதிர்கால வாழ்க்கை ஏமாற்றமாகவே ஆழப்பதிகிறது. மருதாயின் தாய் மாமன் சாமியப்பன், வண்டியில் சுற்றி வருவதைப் பார்த்து தனக்கு இப்படிப்பட்ட கணவன் அமையவில்லை என்று அறியாமையில் மூழ்கி கங்கா நினைக்கிறாள். மருதாயிக்கு அமையப் போகும் வாழ்க்கையை நினைத்த கங்காவிற்கு இக்கரைக்கு அக்கரை பச்சையாய் இருந்தது. தனது வாழ்க்கையை ஏமாற்றமாகவே நினைக்கிறாள்.

### பெண்களுக்கு கல்வி தேவை

பெண் கல்வி என்பது பெண்ணியச் சிந்தனையாளர்களால் வலியுறுத்தப்படும் கருத்தாக்கமாகும். அய்யாவு தான் படிக்காவிட்டாலும் தன் மகள் மருதாயியை படிக்க வைக்க நினைக்கிறான். கிராமத்தில் பணக்காரப் பிள்ளைகள் மட்டுமே படித்தனர். அந்த சூழ்நிலையில் கூலி வேலை செய்து தன்மகளைப் படிக்க வைக்க நினைப்பதன் மூலம் பெண்களுக்கு படிப்புரிமை வழங்கப்படுகிறது. பெண்களுக்கு கல்வி அவசியம் வேண்டும் என்பதை ஆசிரியர் உணர்த்தியுள்ளார். 7.

### பெண்ணின் தொழில் திறன் பாராட்டப்பட வேண்டும்

வரதட்சணை இல்லாமல் செவந்தியை தங்கம் மருமகளாக ஏற்றுக் கொள்வதன் மூலம் பெண்களுக்கு உழைப்பு ஒன்று மட்டுமே போதும். அதுவே சிறந்த மூலதனச் சொத்தாக ஏற்றுக் கொள்ளப்படுகிறது. கிராமத்து மக்களிடையே கல்வி அறிவு இல்லாமல் இருந்தாலும் மருதாயி அப்புவுடன் கேலிப் பேசிப் பழகும் போது, அதை கிராமத்து மக்கள் தவறாகக் கருதவில்லை. எனவே பெண்ணுக்குப் பேச்சுரிமை வழங்கப்பட்டுள்ளது. வயல் வெளிகளில் உழைக்கும் பெண்களின் மேன்மை புலப்படுத்துகின்றன.

### சடங்கு செய்தல் பெண்களுக்கு இன்றியமையாதது

பெண்களுக்கு கடன் பட்டாவது சடங்கு செய்ய வேண்டும் என்று பெற்றோர்கள் நினைக்கின்றனர். கண்ணேறு கழித்தல் முறையைக் காண முடிகிறது. பொருள் வசதி இருந்தாலும், இல்லாமலிருந்தாலும் பெண்ணுக்கு சடங்கு செய்ய வேண்டும் என்ற நியதி இப்புதினத்தில் காணப்படுகிறது.

### தொகுப்புரை

ஆணுக்குச் சமமான உரிமைகள் பெண்ணுக்கு வழங்குவது பெண்ணியம் ஆகும். இப்புதினத்தில் பெண்களே குடும்பத்தை நிர்வகிக்கின்றனர். உரிமைகள் ஆண் பெண் அனைவருக்கும் பொதுவானவை. கல்வி, வேலை வாய்ப்பு உள்ளிட்ட அனைத்து உரிமைகளைப் பட்டியலிட்டு அவற்றில் பெண்களுக்கு சமவுரிமை கிடைக்கச் செய்வதன் மூலமே பெண்களது நிலையை உயர்த்த முடியும். ஆணாதிக்க நிலையை ஒழிக்க வேண்டும், தாய்மையைப் போற்ற வேண்டும் போன்ற பெண்ணியச் சிந்தனைகள் இப்புதினம் முழுவதும் விரவிக்கிடக்கின்றன.

### குறிப்புகள்


1. முனைவர். இரா. பிரேமா, பெண்ணியம், ப. 14
2. டாக்டர். ச. முத்துச்சிதம்பரம், பெண்ணியம் தோற்றமும் வளர்ச்சியும், ப. 11
3. சோலைசுந்தரப் பெருமாள், உறங்க மறந்த கும்பகர்ணர்கள், ப. 15
4. மேலது, ப. 16, 5. தேவதத்தா, பெண்ணியம் ப. 8, 6. மு.நூல் ப. 131, 7. மேலது. ப. 26, 8. மேலது. ப. 65

# வானமே காத்திரு என்னும் சிறுகதையில் பெண்ணியம்

டாக்டர். பா. மல்லிகா. இணைப் பேராசிரியர், தமித்துறை,
ஜெ.அ.மகளிர் கல்லூரி, பெரியகுளம் - 625 601.

## முன்னுரை

அளவில் சிறியதாக இருப்பது சிறுகதை. "சிறுகதை என்பது வாழ்க்கையில் நிகழும் ஒரு நிகழ்ச்சியை ஓர் உணர்ச்சியைக் கருவாகக் கொண்டு பின்னப்படுவது ஆகும். ஒரு பாத்திரம், ஒரு மன உணர்ச்சி என ஏதேனும் ஒன்றை மட்டுமே நிலைக்கலனாக வைத்துக்கொண்டு அதன்மீது புனையப்படுவது சிறுகதை ஆகும்", என தமிழண்ணல் புதிய நோக்கில் தமிழ் இலக்கிய வரலாறு என்னும் தம் நூலில் குறிப்பிட்டுள்ளார். (ப.475)ஆர். சூடாமணி என்னும் பெண் எழுத்தாளர் எழுதிய சிறுகதை தான் "வானமே காத்திரு" என்னும் சிறுகதை. இக்கதையில் பெண்ணின் மன உணர்ச்சி நன்கு சித்தரிக்கப்பட்டுள்ளதால் இக்கதையில் பெண்ணியம் எவ்வாறு சித்தரிக்கப்பட்டுள்ளது என்ற ஆய்வு மேற்கொள்ளப்படுகிறது. இதற்கு அரணாக "ஆர். சூடாமணியின் சிறுகதைகள், ஓர் நேர்முக வர்ணனை போல் அமைந்து, மன உணர்வுத் தடங்களைச் சித்தரிப்பன" என்ற தமிழண்ணல் கூற்றும் அமைகிறது. (ப. 482).

## பெண்ணியம்

"பெண்ணியம்" பெண்களின் சமூகத்தகுதி நிலைகுறித்து இதுவரையில் எடுத்துரைக்கப்பட்ட இலக்கியத்தரவுகளை மறுபரிசீலனை செய்ய உதவியாக இருக்கிறது என்கிறார். தமிழ் இலக்கிய வகைகளுள் ஒன்றான சிறுகதையில் பெண்ணின் சமூகத் தகுதி எவ்வாறு சித்தரிக்கப்பட்டுள்ளது என்று ஆய்வு மேற்கொள்ளப்படுகிறது.

## சிறுகதையில் வரும் பெண் பாத்திரங்கள்

வானமே காத்திரு என்னும் கதையில் கதைத்தலைவி ரஞ்சனி, பக்கத்து வீட்டு விமலா, ஜானா, வேலைக்காரி என்று நான்கு பெண் பாத்திரங்கள் அமைகின்றன. எனினும் கதையில் தொடக்கத்திலிருந்து இறுதிவரை வலம் வருபவள் கதைத்தலைவி ரஞ்சனி மட்டுமே.

## ரஞ்சனி வாயிலாக ஆசிரியர் கூறும் பெண்ணியக் கருத்துக்கள்

"மரபார்ந்த ஆணாதிக்கம் பொருளாதார உற்பத்தியில் பெண்ணின் உழைப்பை அங்கீகரிக்கின்ற போதிலும் அதிகமாக வீட்டுப் பணியில் ஈடுபடுவதையே சமூக நீதியாக்கி இருக்கிறது" என பாலியல் பணி வேறுபாடு பற்றி அரங்கமல்லிகா தன் புத்தகத்தில் குறிப்பிட்டுள்ளார். (ப. 10) அதற்கேற்ப ரஞ்சனி இக்கதையில் அதிக நேரம் வீட்டுப்பணியில் ஈடுபடுவதை ஆசிரியர் விள்க்கியுள்ளார். இதனை,

"இப்பொழுதும் எழுதுகிறாள் தான்.

வேட்டி-2, டீ சர்ட் -2, பட்டுச்சேலை -1, (டிரைவாஷ்) ஜாக்கெட் -3, பாவாடை =2, கலர் பெட்ஷீட் -2, என்றோ அல்லது......

உளுந்தப் பருப்பு - அரைகிலோ, து. பருப்பு - 2கிலோ, சன்டிராப் எண்ணெய் - 1லிட்டர், காப்பிப் பொடி - 500 கிராம், புதுப்புளி - 1 கிலோ" என்றோ என்று குறிப்பிடுவதிலிருந்து அறியலாம் (ப.1). மேலும்

> "உள்ளே பீரோவில் பத்திரப்படுத்தியிருந்த கண்ணாடிச் சாடியை எடுத்து கழுவி தண்ணீர் நிரப்பி வைத்திருந்தாள். அதற்குள் சமையலுக்கு நேரமாகவே அதைக் கவனிக்க ஓட வேண்டியிருந்தது என்றும் எழுதியிருப்பதில் இருந்து அறியலாம் (ப.3).
>
> தட்டு வைத்து உணவு பரிமாறினாள் (ப.4) என்றும்
>
> அமிர்தா செய்து போடறபோதெல்லாம் தலையில் கிரீடமா வைக்கிறார் (ப.4) என்றும்

குழந்தைக்கு உணவூட்டித் தூங்க வைத்துத் தானும் சாப்பிட்டு முடித்துப் பாத்திரங்களை ஒழித்துப்போட்டுச் சமையலறைக் கதவை மூடிக்கொண்டு.... (ப.7) என்றும் ஆங்காங்கே ரஞ்சனியின் வேலையைச் சுட்டிக் காட்டுகிறார் ஆசிரியர்.

"அடுப்பூதும் பெண்களுக்கு படிப்பு எதற்கு? என்றிருந்த நிலையை மாற்றி, மங்கையர் கல்வி கற்று, வாழ்க்கையின் எல்லாத்தளங்களிலும், ஆடவருக்கு நிகராகச் செயல்பட்டு, முன்னேறி, வருகின்ற சூழலுக்கு வித்திட்டது பெண்ணியம்" என்ற முனைவர். தி. கமலி பெண்ணியல் என்ற நூலில் "பெண்ணியம்" என்ற கட்டுரையில் குறிப்பிடுகின்றார். (ப.32) அதற்கேற்பவே சூடாமணியும் தம் சிறுகதையில்,

"நீ அழைச்சதும் ஓடிவர நான் என்ன உன் நாய்க்குட்டியா?" முகுந்தன்.

"நாய்க்குட்டியோ, பூனைக்குட்டியோ நான் கூப்பிடறேன். நீங்க வாரேள்".

"நடக்காது".

"நடக்கும்"

"பார்க்கலாமா?"

"பார்க்கலாம்".

என்ற உரையாடலைப் புகுத்தியுள்ளார். ஆணும் பெண்ணும் சரிசமமாக இருக்கும் நிலை வரவேண்டும் என்பதனையே இவ்வரிகள் புலப்படுத்துகின்றன. "ஆண் தனது ஆதிக்கத்தை எதிர்பால் இனமான பெண்ணின் மீது செலுத்தும் நிலையை ஆணாதிக்கம் எனலாம் என்கிறார்" முனைவர். வி. விமலாராணி பெண்ணியத் திறனாய்வு என்ற தம் நூலில். ஆணாதிக்கத்தைப் புலப்படுத்தும் வண்ணம் சூடாமணியும்

"ரஞ்சி, சோப் எங்கே?"

முகுந்தனின் குரல் குளியலறைப் பக்கமிருந்து கர்ஜித்தபோது திடுக்கிட்டுத் தன்னிலை பெற்றாள். (ப .2) என்பதிலிருந்தும்

"இங்கே எதையும் காணோம். சீக்கிரம் வந்து வேற எடுத்துக் கொடு" என்பதிலிருந்தும் அறியலாம். மேலும்,

"டவல் இருக்கா பார்த்திடுங்க. அப்புறம் அதுக்கு ஒரு கூப்பாடு போட வேண்டாம்"

"பதில் இல்லை. அப்படியானால் டவல் இருக்கிறது. அதைச் சொல்லிவிடக்கூடாதே! அப்புறம் கௌரவம் என்ன ஆவது?" என்று ரஞ்சி கூறிக் கொள்வதிலிருந்து ஆணாதிக்கத்தை உணரமுடிகிறது. எனவே தற்காலத்துப் பெண்ணியம் பற்றிய கருத்துக்கள் பரவிய பின்னரும் இவ்வேறுபாடு நிலவுவதை ஆசிரியர் அழகாகத் தம் கதையில் குறிப்பிட்டுள்ளார்.

பெண்ணை இனங்கண்டு பாராட்டுவது கூட இல்லை என்பதனை ஆசிரியர்

"சொல்லிவிட்டுப் போகட்டும் பாலு! அமிர்தமா செய்து போடற போதெல்லாம் தலையில் கிரீடமா வைக்கிறார்?" என ரஞ்சியின் கற்றாக எடுத்துரைக்கிறார். பெண்ணிற்கு முடிவெடுக்கும் சுதந்திரமும் இல்லை என்பதனை

"இரண்டு பேரும் கட்டாயம் கல்யாணத்துக்கு வந்துடுங்கோ" என்று பாலு சொல்லிக்கொண்டிருந்தான்.

"ரஞ்சி கட்டாயம் வந்திடுவா. நான் முடிஞ்சா வரேன். வராவிட்டாலும் உங்க தங்கைக்கு இங்கிருந்தே என் ஆசீர்வாதத்தை சொல்லிடறேன்" என்றான் முகுந்தன் என ஆசிரியர் கூறுவதிலிருந்து அறிய முடிகிறது.

பெண்ணியல் என்ற நூலிலுள்ள "மகளிரும் ஆற்றல் பேறு அடைதலும்"

என்ற கட்டுரையில் முனைவர். ஜெய கோதை பிள்ளை, முனைவர். ஆனந்தவல்லி மகாதேவன் இருவரும்

" விதைக்குள் விருட்சமாக வளர்வதற்குரிய ஆற்றல் ஒளிந்திருப்பதைப் போல், ஒவ்வொருவரிடமும் குழந்தைப் பருவத்திலிருந்தே மலர்வதற்குரிய உள்ளாற்றல்கள் புதைந்துள்ளன. இந்த ஆற்றலை, திறனை, திறமையை வெளிக்கொணர்ந்து, அதை முழுமையாக வளர்த்து, வாழ்க்கையின் பலவித அம்சங்களிலும் சிறப்பாகத் தன் தனித்துவத்தை நிலைநாட்டுவதற்கே, ஆற்றல் அடைதல். இதை பாரதி, "வல்லமை" பெறல் என்கிறார் என்று குறிப்பிட்டுள்ளனர். (ப. 1) அதனைக் கண்டு வெளிப்படுத்த முயல்கிறாள் சூடாமணி படைத்த ரஞ்சனி.

கதையின் துவக்கமே "தன் எழுத்து வானத்தின் நீலத்தில் ஒளி சேர்க்க வேண்டும் என்று கனவு கண்டிருந்த காலம் ஒன்று உண்டு. ஒரு தாகூராய், ஒரு பாரதியாய்.........(ப.1) என்று தொடங்குகிறது. இடையிடையே கவிதை எழுத வேண்டுமென்று அவள் மனது இடிப்பதை "அதுக்காக உளுத்தம்பருப்பிலேயே ஊறிப் போய்ட்டா எப்படி? என்று அவளுள்ளிருந்து இன்னொரு ரஞ்சனி திடீர் திடீரென்று இடிக்கிறாள். பாதி ராத்திரிவரை கூட உற்சாகமாய் கண்விழிச்சுக் கவிதை எழுதுவியே, அதெல்லாம் மறந்துடுத்தா? (ப.2) என்ற வரிகளால் சூடாமணி புலப்படுத்துகிறார். மேலும், "இன்று மத்தியானம் எப்படியும் கொஞ்சநேரமாவது எழுத வேண்டும்...... எவ்வளவு காலமாயிற்று! விரல்களில் தினவு எடுக்கிறது. தீனி கொண்டா கொண்டா என்று வெற்றுக் காகிதம் பசியில் அழுகிறது" என்று ரஞ்சனி (ப. 5) சிந்திப்பதிலிருந்து அவளது ஆவலை அறிய முடிகிறது.

"காகிதமும் பேனாவுமாய் ஹாலில் வந்து அமர்ந்த போது அந்தத் தீஞ்ச நாற்றம் கருத்திலிருந்து வரிகள்

துளிர்த்து விரல் நுனிகளில் குறுகுறுத்தன. பேனாவைத் திறந்து காகிதத்தில் வைத்தாள்..... எழுதலானாள்.

"அழகின் சுவாசம்
பூவிதழலில் மணத்தது
காற்று பூங்காற்றாகி
பூவுக்கு நன்றி சொன்னது"

"அம்மா காய் !" என்று காய்கறிக்காரன் தடைப்படுத்தினான் (ப.7) அடுத்து தொடர்நது எழுதத் தொடங்கினாள்.

"புதுமலர் நன்றி ஏற்றுப்
பன்னகை செய்யும் முன்னே
மனம்போன இடமெங்கே?
மாறாக அங்கொரு...."

"அம்மா, அம்மா" என வேலைக்காரி வந்து சர்க்கரை வாங்க ரேஷன்கார்டும் துட்டும் வாங்கிச் செல்கிறாள். (ப.8)

தூங்கி எழுந்து "சமையலறைக்குச் சென்று பால் காய்ச்சிக் குழந்தைக்கு கொடுத்துவிட்டுத் தானும் காப்பி கலந்து குடித்தாள் .பிறகு ஐந்து நிமிடம் எழுதியிருப்பாள்.

"எழுதிண்டிருக்கீங்களா?"

என்று பக்கத்து வீட்டு விமலா வர அவளை " வாய் வரவேற்க கை பேனாவை மூடியது. காகிதங்களை மடித்து ஒரு பக்கமாய் வைத்தது. முகத்தின் இளநகையில் நெஞ்சின் பெருமூச்சு கேட்கவில்லை (ப.9) என ஆசிரியர் இயலாமையயைக் குறிப்பிடுகின்றார். மேலும், "ஆனால் மனசில் ஒரே ஒரு சின்ன மூலை. அவருக்கு மட்டுமே சொந்தம். அவருக்கு மட்டுமே. அங்கு மங்கலாய் ஓர் ஏக்கம். அர்த்தம் கொண்டு நிரப்ப வேண்டிய ஓர் சூனியம். ஏதோ வாக்குறுதியை நிறைவேற்றாதது போன்ற நமைச்சல்" (ப. 10) என்று குறிப்பிட் டபோதிலும் கதையின் முடிவில்

"எழுதுவேன் ஒரு நாள்,

இன்றில்லையேல் நாளை, நாளையின்றேல் பிறிதொரு நாள். அடுத்த மாதம், அடுத்த ஆண்டு, அடுத்த பத்தாண்டு, என்றோ ஒரு நாள் ...... என் எழுத்து உன் நிலத்தில் ஒளி சேர்க்கிற அந்த நாள் நிச்சயம் வரும். வானமே காத்திரு" என்று ஆற்றலை வெளிப்படுத்த துணிகிறாள் என முடிக்கிறார். இக்கதையில் சூடாமணி பெண்கள் தங்களுள் ஒளிந்திருக்கும் ஆற்றலை இனங்கண்டு வளர்க்க வேண்டும் என்பதையும், "வானமே காத்திரு" என்ற கதைத்தலைப்பின் மூலம் வெளிப்படுத்தி உள்ளார்.

## முடிவுரை

பெண்ணியத்தை வளர்க்க பெண்களே முன்வர வேண்டும் என்பதை கதைத்தலைவி ரஞ்சனி வாயிலாக சூடாமணி வலியுறுத்துகிறார்.

# "தாட்சாயிணி" சிறுகதைத் தொகுப்பு - ஒரு பார்வை

முனைவர் *சு. மகாலட்சுமி*, இணைப்பேராசிரியர் - தமிழ்த்துறை,
எம்.வி.எம். அரசு மகளிர் கலைக்கல்லூரி,திண்டுக்கல்.

முன்னுரை

இலக்கியம் சமுதாயத்தின் மக்களின் வாழ்க்கையின் பிரதிபலிப்பாக அமைந்து, அமையும் என்பதை யாராலும் மறுக்க இயலாது. சமூகத்தில் பெண்களுக்கு எதிராக இழைக்கப்படும் குற்றங்களும் அடிமைத்தனமும் பலாத்காரங்களும் புதியன அல்ல என்றாலும் அது பற்றிய சமுதாய விழிப்புணர்வு பலரிடம் உள்ளது. சங்ககாலம் முதல் வந்த இலக்கியமும் ஆண்சார்பு இலக்கியங்களாக படைக்கப்பட்டு வந்தன. எனவே பெண்மை பற்றிய கருத்தாய்வு மறுபரிசீலனைக்கு உட்படாமல் இருந்தது. சுதந்திரம் போராட்ட காலங்களில் இறுதியில் இந்தியா முழுவதிலும் பெண்ணியம் பற்றிய விழிப்புணர்வு பரவத் தோன்றியது. "பெண்மை" பற்றி மாறுபட்ட கோணத்தில் முதலில் எடுத்துக் கூறியவர் பாரதியார் என்றால் மிகையாகாது. பெண்கல்வி, பெண் விடுதலை குறித்து, அவர் எழுதிய கவிதைகளை தமிழ் இலக்கியத்தில் பெண்ணைப்பற்றி அறிவதற்கான சான்றுகளைத் தருகின்றன. அவர்கூறிய

"மாதர் தம்மை இழிவு செய்யும் மடமையைக் கொளுத்துவோம்"
ஆணும் பெண்ணும் சரிநிகர் சமானம்"

என்ற வரிகள் வரலாற்றில் பெண்மையிடம் பல்வேறு மாற்றங்களைச் செய்யத்தூண்டின. அதன்பின் வந்தவர்களில் சுயமரியாதை இலக்கியத்தைப் பெரியாரும் "பெண் என்பவள் போகப் பொருள் அல்ல ஆணின் சரிபாதி என்பதைப்

"பெண்களைப் புருஷனுக்கு நல்ல பண்டமாக

மாத்திரம் ஆக்காமல் மனித சமுதாயத்திற்குத் தொண்டாற்றவும் கீர்த்தி, புகழ் பெறும் பெண்மணி ஆக்கவும் வேண்டும்...நம் பெண்கள் வெறும் போகப் பொருளாக ஆக்கப்பட கூடாது அவர்கள் புது உலகத்தைச் சித்தரிக்க வேண்டும்" என்று கூறியதன் வாயிலாக அறிந்து கொள்ள முடிகின்றது. இந்திய விடுதலைக்குப்பின் நாட்டில் சமூகப் பொருளாதார மாற்றங்கள் நிகழ்ந்தன. பெண்ணியம் பற்றிய சிந்தனைகளும் மாறலாயின. பெண்மைகள் அடிமைகள் ஆணாதிக்கச் சமுதாயம் என்னும் சமுதாதய மதிப்பீடுகள் மறுபரிசீலனைக்கு உட்பட்டன. இவை இலக்கியங்களிலும் பிரதிபலித்தன. சிறுகதைகளும் புதினங்களும் இவைபற்றிப் பேசும் களங்களாயின. இவற்றுள் ஜெயகாந்தன், இராஜம், கிருஷ்ணன், அம்பை ஆகியோரது படைப்புக்கள் குறிப்பிடத்தக்கன. இவர்களது வரிசையில் தோன்றியவர்தான் சிறுகதை எழுத்தாளர் இந்திரபவாநி.

எழுத்தாளர் இந்திரபவாநி

"தாட்சாயிணி" என்னும் சிறுகதைத் தொகுப்பில் உள்ள , திரு. பொன்னீலன், திரு தமிழ்ச் செல்வன், திரு அறிவுமதி ஆகியோரது முன்னுரைகளிலிருந்து இந்திரபவாநி அவர்களைப்பற்றி அறிந்து கொள்ள முடிகிறது. திரு. தமிழ்ச்செல்வன் அவர்கள் "இந்திரபவாநி 20 ஆண்டுகள் இலக்கியப் பயிற்சி உடையவர். மொழி பெயர்ப்பு - சிறுகதை - ஆராய்ச்சி என இயங்கி வருபவர். தனது வலதுகையைப் பயன்படுத்த முடியாத அளவிற்குப் பலவீனப்பட்ட உடம்பே வாய்த்திருந்த போதும் விசையுறு பந்தினைப் போலட் இத்தொகுப்பைத் தந்துள்ளார்" என்று கூறுகிறார்.

தாட்சாயிணி - சிறுகதைத் தொகுப்பு

இந்திரபவாநி எழுதிய தாட்சாயிணி சிறுகதைத் தொகுப்பில் நியாயம், நாய்கள், மனிதர்கள், தனீயாவா...., நாலுபேர், விடிஞ்சாச்சு, செகண்ட் ஹேண்ட, போர்க்கொடிகள், தாட்சாயிணி, பட்டாம்பூச்சி ஆகியபத்து சிறுகதைகள் அடங்கியுள்ளன.

1. நியாயம் - குழந்தை இல்லாத சீனியம்மா என்ற சலவைத் தொழிலாளப் பெண்ணைப்பற்றியது.
2. மனிதர்கள் - கணவனை இழந்த பெண் ஒருத்திக்கு விதவைத் தாய் மறுமணம் செய்து வைத்தல் பற்றியது.
3. தனீயாவா... - பேருந்தில் இரவில் தனியாகப் பயணம் செய்யும் மேடைப் பேச்சாளிப் பெண்ணின் நிலையைப் பற்றி பேசுகிறது.
4. நாலு பேர் - நான்கு மகன்களைப் பெற்ற விதவைத்தாயின் நிலையை விவரிக்கின்றது.
5. நாய்கள் - விலங்கினும் கீழாக மனம்படைத்த மனிதர்களைப் பற்றி பேசுகிறது.
6. விடிஞ்சாச்சு - தானே விரும்பி மணம் செய்து கொண்ட பெண்ணின் நிலையைப் பற்றி பேசுகிறது.
7. செகண்ட் ஹேண்ட - விரும்பியவனை மணம் செய்து கொள்ள முயலும் பெண்ணைப் பற்றி பேசுகிறது.
8. போர்க்கொடிகள் - அதிகார வர்க்கத்தை எதிர்க்கத் துணியும் பெண்ணின் கதை.
9. தாட்சாயிணி - பெண்ணே பெண்ணிற்கு பிரச்சனையான நிலைபற்றி பேசுகிறது.
10. பட்டாம்பூச்சி - கணவனைப் பிரிந்து மாமனாருடன் வசிக்கும் மனைவியின் கதை.

மேலே கூறிய கதைகளில் பெண்ணிய இலக்குகளான பெண்விடுதலை, உழைப்பு விடுதலை, விதவை

மறுமணம், பெண் ஆணையும் சார்ந்தால் ஏற்படும் நிலை, பிற ஆண்களுடன் பேசுவதை பழகுவதை கொச்சைப்படுத்தக் கூடாது ஆகியவற்றையும் ஆணாதிக்க நிலை, ஆண்களின் வக்கிரப்பார்வை ஆகியற்றையும் பதிவு செய்துள்ளமை பாராட்டுக்குரியது.

பெண் விடுதலை

"நியாயம்" எனும் சிறுகதையில் வரும் சீனியம்மா தானே உழைத்துச் சம்பாதித்து வாழ்க்கையை ஓட்டுகிறாள். குழந்தை இல்லாத காரணத்தினால் கணவன் வேறு பெண்ணைத் திருமணம் செய்து கொள்வதையும் மனதார ஏற்றுக்கொள்கின்றாள். உணவிற்காகவும், பணத்திற்காகவும் மீண்டும் வந்த கணவனால் சீனியம்மா கரு உண்டாகிறாள். அக்கருவும் சதைப்பிண்டமாகிவிட நகையும் பணமும் தந்தால் உண்ணோடு வாழ்வேன் எனக் கணவன் சீனியம்மாவிடம் கூறுகிறான். இறுதியில் "மூன்றுநாள் கழித்து முழுசா சீனியம்மா வேலைக்குத் திரும்பினாள்" என்றுகதை முடிகிறது. இது பணமும் நகையும் கொடுத்துக் கணவனோடு வாழத் தேவையில்லை என்று சுதந்திரமாகப் பெண் முடிவெடுக்கும் நிலையைச்சுடடுகிது.. உழைக்கும் பெண்களுக்கு நல்ல பாடமாக அமைகிறது.

"தனியாவா...." என்னும் சிறுகதை, பேருந்தில் தனியாகப் பயணம் செய்யும் பெண்ணிற்கு ஆண்வர்க்கத்தால் ஏற்படும் அவலநிலையைப் பதிவு செய்கிறது. எனினும் அந்த அவல நிலையிலிருந்து பெண் எவ்வாறு விடுபட வேண்டும் என்ற உணர்வையும் பெண்களுக்குத் தரப்படுகின்ற ரகசிய அவமானங்களை வெளிப்படுத்த வெட்கப்பட்டு எதிர்ப்பதற்குப் பயந்த பெண்ணாகச் "சம்முகம்" என்பவளைப் படைத்த கதாசிரியர், அதை எதிர்த்து உலகிற்கு வெளிப்படுத்தி தண்டனையும் தந்த பெண்ணாகப் பார்வதியைப் படைத்துள்ளார்.

"நாலுபேர்" என்னும் சிறுகதை ஆண்வர்க்கத்தைச் சார்ந்திருக்கும் முதுமையான விதைவைத்தாயின் சோகங்களைப்பற்றி பேசுகிறது. நான்கு மகன்களின் வீட்டிற்குப் 3 மாதத்திற்கு ஒருமுறை பந்தாடப்படும் விதவைத்தாய் எத்தகைய துன்பத்திற்கு ஆளாகிறாள் என்பதை விளக்குகிறது. சுதந்திரமாகத் தனக்குப் பிடித்த கோதை வீட்டில் அவளால் இருக்க இயலவில்லை. இக்கதையும் பெண் விடுதலை பெறவேண்டும் என்ற கதாசிரியரின் முனைப்பையே காட்டுகிறது.

நாலுமகள் இருக்கான்னு
நானிருந்தேன் சந்தோசமா
நாலுசுவர் எம்மக்க
மேக்கூரை எம்புருசன்
கூரை எரிஞ்சுதடி
கூடும் கலைஞ்சுதடி
கூட்டுறவும் குலைஞ்சதடி
கூடைகள் நொழைஞ்சதாலே "

என்றுமுதியவள் பாடுவதன் வாயிலாக பாதுகாப்புச் சுவர்களாக இருக்க வேண்டிய ஆண்வர்க்கம், முள்வேலியாய் மாறிய நிலையைக் காட்டுகிறார் ஆசிரியர். முதுமையை மனித குலத்தைப் பெற்றுத்தந்த முதிய தாய்மையை இளைய தலைமுறையினர் மட்டுமல்லாது மனித குலமும் மதிக்க வேண்டும் என விரும்புகிறாள். மதிக்காத மனித குலத்தை மிதிக்கவேண்டும் என இகழவும் செய்கிறார் ஆசிரியர்.

உழைப்பு விடுதலை

"நியாயம்" எனும் சிறுகதையில் குழந்தை இல்லாத சீனியம்மா கணவனுக்கும் சேர்த்து உழைக்கின்றாள். அவனோ குழந்தை இல்லாத காரணத்திற்காக வேறு பெண்ணை மணம் செய்து கொள்கின்றான். நகைக்காகவும் பணத்திற்காகவும் திரும்ப சீனியம்மாவை நாடி வருகிறான். அவள் உழைப்பில் சுகம் காண விரும்பிய பொழுது அவனை உதறிவிட்டு மீண்டும் தானே தனியாய் உழைக்க முற்படுகிறாள். மனைவியின் உழைப்பைச் சுரண்டி வாழும் ஆண்மகன்கள் நிறைந்த நாட்டில் சீனியம்மாவைப் போன்று மகளிர் சுதந்திரமாகச் செயல்பட வேண்டும் என்ற உணர்வை ஊடடுகிறது இக்கதை.

"போர்க்கொடிகள்" , "தாட்சாயிணி" எனும் கதைகள் அதிகார வர்க்கத்தின் அடிமைகளாக கல்லூரிப் பேராசிரியர்கள் நிலையை விளக்குகிறது. பேராசிரியர்களின் உழைப்பைச் சுரண்டிய அதிகார வர்க்கம் இயற்கை உந்துதலைச் செய்யவும் நேரம் தர மறுக்கிறது. பிரசவித்த பெண்கள் தன் குழந்தைகளுக்குச் செய்ய வேண்டிய கடமைகளைச் செய்யவும் வவிடவில்லை. பெண்கள் தலைமையிடத்தில் இருக்க பெண்கள் பெண்களாலேயேய நசுக்கப்படும் மிகக் கேவலமான நிலையை விளக்குகிறது. மதிக்கப்பட வேண்டிய மானுடத்தின் மானசீகமான இனிய அனுபவங்கள் எல்லாம் மிதிக்கப்பட்டு இந்தப் பெண்கள் பூமியில் விரசப்படுத்துகிற நிலையைச் சாடுகிறது. இதனை ஆசிரியர் "அண்ணாந்து வானத்தைப் பார்த்துத் தன் முதுகில் தானே எச்சில் துப்பிக் கொள்வது போல" மகா அசிங்கம் என விவரிக்கின்றார். இத்தகைய அசிங்கங்களிலிருந்து பெண்கள் விடிவு பெற வேண்டும் என விழைகிறார் ஆசிரியர்.

விதவை மறுமணம்

பாரதி பெண் உரிமைகளில் ஒன்றாக விதவை மறுமணத்தைக் குறிப்பிடுகின்றார். "மனிதர்கள்" எனும்

சிறுகதை விதவைத் தாய் ஒருத்தி தன் மகனுக்கு விதவைப் பெண் ஒருத்தியை மணமுடித்து அதனால் தன் ஏக்கங்களை மறந்த நிலையை விளக்குகிறது. கல்யாணமாகி வந்த பொண்ணு அப்பா அம்மாவை மறந்திட முடியுமா? ஆது போலத்தான் இதுவும், மறைஞ்சு போன கணவன் பற்றிய உன் நினைவுகளை எப்படி நீ துடைச்சுப் போட முடியும்? அப்படி நீ செய்யனும்னு நான் நெனச்சா அதைவிட அயோக்கித்தனம் வேறு இருக்க முடியாது. அப்படித் பேதலிக்க வைக்கவா நான் கல்யாணம் பண்ணி இருக்கேன் என விதவையை மணந்த கணவன் கேட்கிறான். இது விதவையின் மன உணர்வுகளுக்கு மரியாதை கொடுத்து அவளையும் சமூகத்தில் ஒருத்தியாய் உலவ விட வேண்டும் என ஆசிரியரின் உள்ள முனைப்பைக் காட்டுகிறது.

பிற ஆடவர்களோடு பேசுவதைக் கொச்சைப்படுத்தக்கூடாது

"பெண்ணியத்தின் இலக்குகளுள் ஒன்று பெண் பிற ஆடவர்களுடன் பேசுவதை கூடாது, பழகுவது கூடாது என்ற நிலையை மாற்றுவதாகும். "விடிஞ்சாச்சு" எனும் கதையில் வரும் கதை நாயகி தான் விரும்பி மணம் செய்து கொண்ட கணவன் தான் பிற ஆடவர்களுடன் சேர்ந்து வேலை செய்வதையே தவறாக நினைக்கிறான். அவனை எதிர்த்து அவனோடு போராடி தன்நிலையை உணரச்செய்து மன்னிப்புக் கேட்க வைக்கிறாள்.

"பட்டாம்பூச்சி" எனும் கதையில் வரும் ரேகா, வேலையின் காரணமாக கணவன் வேறிடத்தில் இருக்க தன் மாமனாருடன் சேர்ந்து வாழ்கிறள். மருமகளுக்கு அவள் நண்பனிடமிருந்து வந்த கடிதத்தை "எவன்கிட்டேயோ இருந்து வந்தது என்று கூறி அவள் மனதில் அம்பைத் தைக்கிறார். சாட்டையாய் வந்த வார்த்தைகளால் பட்டாம்பூச்சியாய் இருந்த ரேகா கூட்டுப்புழுவாய் துடித்தாள். கோபம் ஏற்பட்டாலும் அவளோ அவர் வயதிற்கு மரபுத் தளையிலிருந்து மீறாதவரிடம் மாற்றங்களை ஏற்படுத்த முடியாது என நினைத்து தன்னை மாற்றிக் கொள்ள முற்படுகின்றாள்.

ஆனாலும் "தனியாவா" - எனும் கதையில் இந்த மண்ணில் பரிச்சயம் இல்லாத ஒரு ஆண் ஒரு பெண்ணோட ஒரு பெண் ஆணோட பேசறது கூடத் தப்பாயிருக்கு என்று மரபைக் காட்டிய ஆசிரியர் இறுதியில் பார்வதி, "இன்னிக்கு நடந்த சம்பவத்தாலே ஒங்கமேலே புகாரோ வழக்கோ வந்தால் எனக்கு எழுதுங்க, நான் உதவ வருவேன்" என முன்பின் தெரியாத டிரைவரிடமும் கண்டக்டரிடமும் கூறி முடிப்பது பழைய சிந்தனைப் போக்குகளை மறுபரிசீலனை செய்து மாற்றியுள்ள நிலையைக் காட்டுகிறது.

ஆணாதிக்க நிலை

"தனியாவா" எனும் கதையில் தனியே பேருந்தில் பயணம் செய்யும் பார்வதியின் பின்சீட்டில் இருப்பவன் செய்யும் அக்கிரமங்களைக் கண்டு கொதித்தெழுகிறாள். தன்னுடைய எதிர்ப்பையும் காட்டுகிறாள். ஆனால் அதையும் மீறிய அவன் செய்கைகளால் அவனைக் கண்டக்டரிடம் கூறி பேருந்தைவிட்டுக் கீழே இறங்கச் செய்கிறாள். உடனே அவன் "பொட்டச்சி ஒருத்தி சொல்லிட்டா நம்பிறதோ? செருப்பு பிஞ்சிடும், நறுக்கிடுவேன் நாக்கை" என மிருகமாகக் கொக்கரிக்கிறாள். ஆண் என்ன செய்தாலும் நியாயம்., பெண் என்பவள் அதைத் தட்டிக் கேட்கக் கூடாதுஎன்ற ஆணாதிக்க மரபினைக் காட்டுகிறது. ஆனால் இறுதியில் பார்வதி அவனைப் போலீசிடம் பிடித்துக் கொடுப்பது ஆணாதிக்க நிலையை எதிர்த்துக் குரல் கொடுக்கும் பெண்ணின் நிலையைச் சுட்டுவதாக அமைகிறது.

"நாய்கள்" எனும் சிறுகதையில் ஆண் வர்க்கத்தின் வர்க்கப்பார்வையையும் அவர்களது உள் அழுகலையும் சுட்டிக் காட்டுகிறார் ஆசிரியர். பேருந்தில் பயணம் செய்யும் ஒருவன் ஆபாசப் படங்கள் நிறைந்த புத்தகத்தை திறந்து வைத்துக் கொண்டு அழுகலான பழச்சுளைகளைத் தின்கிறான். அவன் அருகே டிரைவர் சீட்டிற்கு வந்த டிரைவரும் அப்படங்களைப் பார்த்துக்கொண்டே கியரில் கை வைக்கிறான். அருகில் இருந்த மற்றொருவர் "நமக்கொன்னு தர்ரது" எனக் கேட்பது மனித மனங்களின் வக்கிரங்களையும் சுட்டுவதோடு அவர்களின் உள் அழுகலையும் காட்டுகிறது. இதனை ஆசிரியர், "பஸ் நகர்ந்து வாசலுக்கு வந்து விட்டது. வாசல் அருகே மூன்று நாய்கள் செத்த பெருச்சாளி ஒன்றை உருமிக்கொண்டு குதறி இழுத்துக்கொண்டு இருந்தன" என்ற குறியீடுகளால் விளக்குவதிலிருந்து அறிந்து கொள்ள முடிகின்றது.

முடிவுரை

எழுத்தாளர் இந்திரபவாநிதியின் பார்வை - பாரதியின் பார்வையாகும் - ஆணும் பெண்ணும் நிகரெனக் கொள்ளும் பார்வையாகும் .குடும்ப வாழ்க்கையே சமூகத்தின் அடித்தளம். எனவே அதனை இருவருக்கும் சமத்துவப்படுத்த வேண்டும் என்பதாகும். பரஸ்பரம் ஒருவரை ஒருவர் மதித்து ஒருவரை ஒருவர் நம்பி ஒருவருக்கொருவர் விட்டுக் கொடுத்து வாழ்வை அழகுபடுத்த வேண்டும் என்பது இவரது நோக்கமாகும். முதுமையை மனித குலத்தைப் பெற்றுத்தந்த முதிர்ந்த தாயை மதிக்க வேண்டுமென இளைய சமுதாயத்திற்குக் கூறுவதால் இவரது சமூக அக்கறை கொண்ட பார்வையும் அறிந்து கொள்ள முடிகிறது. வன்முறையையும் வக்கிரத்தையும் கடுமையாக எதிர்க்க வேண்டுமென்பதையும், உள் அழுகலையும் போலித்தனத்தையும் காரித்துப்ப வேண்டும் என்ற பார்வையும் இவருடையது. பிரச்சனைகளைச் சந்தித்து அவற்றை நீக்குவதற்குப் போராடும் போர்க்குணம் கொண்ட பார்வையும் இவருடையது.

# நெஞ்சில் ஆசையில் - பெண்ணியம்

*அ.சீ. மகாலட்சுமி,எம்.ஏ.,எம்.ஃபில்.*, விரிவுரையாளர், (தமிழ்த்துறை)
அரசு கலைக் கல்லூரி, உடுமலைப்பேட்டை.

தற்போது சமுதாயத்தின் பொதுவான சிக்கல்களைக் கூறும் புதினங்கள் ஒருபுறம் வந்தாலும், குறிப்பாக பெண்ணைப் பற்றியும், தலித் மக்கள் பற்றியும் புதினங்கள் வெளிவருகின்றன. சமூகமரபுகள், சமயங்கள் சாஸ்திரங்கள் போன்ற பல தளைகள் பெண்களை இறுக்கியுள்ளன. எனவே பெண்களின் இன்றைய சிலையினைத் தெளிவாகப் புரிந்து கொண்டு, தேவைப்படும் மாற்றங்களை ஏற்படுவதற்கு வழிகோலும் வகையில் பெண்களைப் பற்றி ஆய்வுகள் மிகுதியாக வருகின்றன. சமூக வாழ்க்கையில் ஏற்பட்டு வரும் பெண் விடுதலைச் சிந்தனையின் பகுதியாகப் பெண்ணிய இலக்கியக் கொள்கைகள் படைப்பிலக்கியங்களிலும் வெளிப்படுகின்றன. இதுபற்றி வெங்கடராமன் தனது நூலில் பின்வருமாறு ஆங்காங்கே குறிப்பிடுகிறார்.

பிரச்சினைகளை எதிர்கொள்வது, அடக்கு முறைகளுக்கு எதிராகப் போராடுவது, தனித்து வாழ்வது, விழிப்புணர்வு பெறுவது, சக பெண்களுக்கு விழிப்புணர்வு ஏற்படுத்துவது போன்றவற்றைப் பற்றி இப்புதினங்கள் நம்பிக்கை குரலை வெளிப்படுத்துகின்றன என்றும் விளக்குகின்றார். இராஜம் கிருஷ்ணன், லட்சுமி, சிவசங்கரி போன்றோர்கள் தத்தம் இலக்கியப் படைப்புகளில் பெண்களின் நிலையை விளக்கவும் அவர்களிடையே விழிப்புணர்வு ஏற்படுத்தவும் அவர்களை நெறிப்படுத்தவும் விளைகின்றனர். அத்தகைய வரிசைகளில் திலகவதியும் ஒருவர் ஆவர். இவர் படைத்த புதினங்களில் ஒன்றான நெஞ்சில் ஆசையில் பெண்ணிய நோக்கு காணப்படும் பாங்கினை ஆராய்வதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

### கதைச்சுருக்கம்:

சியாமளா, இளங்கலைப் பட்டமும், ஆசிரியர் பயிற்சிக்கான பட்டமும் பெற்று ஆசிரியராக வேலை பார்ப்பவள். அவளோடு பயிலும், முரளி என்பவன் சியாமளாவைக் காதலிக்கிறான். காதல் வாழ்வின்போதே அவன், அவளை அடித்துத் துன்புறுத்துகிறான். சியாமளாவினுடைய முயற்சியாலும், தன் சக ஆசிரியைகள் உதவியாலும் இல்லறவாழ்வு துவங்குகிறது. திருமணமான முதல் நாளிலிருந்தே சியாமளாவுக்கு முரளியினால் துன்பங்கள் வருகின்றன. பின்னாளில் சியாமளாவைக் கொலை செய்யவும் முயற்சிக்கிறான். வீடுவாசல் எல்லாவற்றையும் இழந்து, உயிர்பிழைக்க வீட்டைவிட்டு வெளியேறுகிறாள். சியாமளா விவாகரத்துக் கோரியும், முரளி விவாகரத்துப் பெற மறுக்கிறான். அவளைப் பழி வாங்கக்கருதி, தான் தவறே செய்யாததுபோல மேலதிகாரிகளிடம் அழுது புலம்பி அவள் நடத்தையில் குற்றம் சுமத்தி நடிக்கிறான். கர்ப்பம் கலையும் அளவிற்கு முரளியினால் தாக்கப்படுகிறாள். இந்நிலையில் தாய், தந்தை அனைவரும் சியாமளாவின் பக்கம் நிற்கின்றனர். பல போராட்டங்களுககுப் பிறகு பின் வீட்டையும் மீட்டு, விவாகரத்துப் பெறுகிறாள். தான் இவ்வுலகிற்கு ஏதாவது பணியாற்றக் கருதி சமூக சேவை செய்யத் திட்டமிடுகிறாள்.

### குடும்பம் என்ற அமைப்பைப் பற்றிய திலகவதியின் கருத்து:

குடும்பம் என்ற அமைப்பு புனிதமாகப் போற்றிப் பாதுகாக்க வேண்டிய அமைப்பாக இருந்தாலும் அப்பெண்ணுக்கு அது நரகமாகி விடுகிறதெனில், ஒரு மாறாத சிறையாகி விடுகிறதெனில் அதை உடைத்து நொறுக்கி வெளியேறுவது அந்தப் பெண்ணின் முதல் சுதந்திரமாகும் என்ற கருத்தினை உடையவராக விளக்குகிறார். குடும்பம் என்ற அமைப்பினை உடைத்துவிடுவதில் ஆர்வம் கொண்டிருப்பதாகத் தன்னை எவரும் புரிந்து கொண்டுவிடக் கூடாது என்பதனை,

இரண்டுபேர் சொந்த வாழ்க்கையில் மூன்று கருத்துக்கள் நிலவக்கூடிய வாய்ப்புகள் அதிகம். சின்னச்சின்ன சங்கடங்கள், மோதல்கள் இருக்கவே இருக்கும். இந்தச் சின்ன விஷயங்களுக்காக, கணவனிடம் சண்டை போட்டுக்கொண்டு, முணுக்கென்றால் அம்மா வீட்டுக்குப் போகிற அசட்டைத்தனத்தை ஆதரிப்பதற்காக இந்த நாவலை எழுத வில்லை.(நெ.ஆ.பக்.7) என்று குறிப்பிடுகிறார். கணவன் கயவனாக பின்னால் அவன் கணவன் என்பதற்காகவே அவனை சகித்துக் கொண்டு வாழவேண்டிய கட்டாயத்தைப் பெண் மேற்கொண்டேயாக வேண்டும் என்பதில்லை என்ற

கருத்தை வலியுறுத்துவதாக திகழ்கிறார்.

### பெண்களின் மணவாழ்வுச் சிக்கல்கள்:

பெண்கள் பல வகையில் மணவாழ்வில் பாதிக்கப்படுகின்றனர் என்பதை நெஞ்சில் ஆசையில் விளக்குகிறார். நெஞ்சில் ஆசையில் மணவாழ்வுச் சிக்கல்களை இரண்டு வகையாகப் பிரித்திருக்கிறார். 1. திருமணத்திற்கு அடித்தளமான காதல் வாழ்வில் பெண்களுக்கு ஏற்படும் சிக்கல்கள், 2. திருமணத்திற்குப் பின்னர் பெண்கள் வாழ்வில் ஏற்படும் சிக்கல்கள்.

### காதல் வாழ்வில் பெண்களுக்கு ஏற்படும் சிக்கல்கள்:

தமிழ்ச்சமூக அமைப்பில் பெற்றோர் பார்த்து ஒழுங்கு பண்ணும் திருமணமே பெரும்பாலும் அங்கீகரிக்கப்படுகிறது. காதல் என்பதே அவமானத்தைத் தேடித் தருகிற ஒன்று எனவும், சமூக மரபுகளை உடைத்தெறிகிற ஒன்று எனவும் கருதுகிற பெற்றோர்கள் அப்பெண்ணை ஏசுகின்றனர். இதனால் காதல் வாழ்விலேயே பெற்றோர், சமுதாயத்திற்கிடையே போராட்டம் நிலவுகிறது எனக் கூறுகிறார். ஜாதி விட்டு ஜாதி கல்யாணம் பண்ணிக்கிறதெல்லாம் சரிப்பட்டு வராது. ஊர் உலகம் என்ன பேசும் அம்மா கீழ்க்குரலில் முணுமுணுத்தாள். (நெ.ஆ.ப.67) பெற்றோர்கள், சமுதாயத்தால் ஏளனப்படுத்தப்படுவார்களோ என்று அஞ்சியே, மகளின் காதல் திருமணத்திற்கு ஒத்துக்கொள்ள மறுக்கிறார்கள்.

### காதல் வாழ்விலேயே பலர் முன்னிலையில் காதலியை அடித்தல்:

சியாமளா கல்லூரித் தோழர்களிடம் சிரித்துப்பேசிக் கொண்டிருந்ததைப் பார்த்த முரளி,

முற்றிலும் எதிர்பாராத நிலையில் பாய்ந்து சென்று பளாரென்று சியாமளாவை அறைந்தான் முரளி. மாறி மாறி கன்னத்திலும், முதுகிலும் சாட்டையால் இறங்கின.(நெ.ஆ.ப.60)

ஏளனமாய்ப் பார்க்கின்றவர்கள் மற்றும் அனுதாபமாய்ப் பார்க்கின்ற பலரின் முன் சியாமளா பயத்தோடு அங்கிருந்து செல்ல, காதலிக்கும்போதே அப்பெண்ணுடைய வாழ்வில் சிக்கல்கள் ஆரம்பமாகிறது.

### திருமணத்திற்குப்பின் பெண்கள் வாழ்வில் ஏற்படும் சிக்கல்கள்:

குணநலனற்ற ஆடவனைக் கணவனாக ஏற்கும் சில பெண்களுக்கு மண வாழ்க்கை என்றைக்குத் தொடங்குகிறதோ அன்றைக்கே போராட்டம் ஆரம்பமாகிறது. சியாமளா, திருமணான அன்றே முரளியால் சந்தேகிக்கப்பட்டு, தாக்கப்படுவதுடன் பலவகையிலும், அவனால் எச்சரிக்கப்படுகிறாள். கல்யாணத் தன்னிக்கேவா ஒருத்தர் இப்படி ருத்ரதாண்டவம் ஆடுவார். (நெ.ஆ.ப.76)

சியாமளாவின் தொடக்க நாளே போராட்டத்தின் துவக்கத்தினை உணர முடிகிறது.

### கணவன் மனைவியைச் சந்தேகித்தல்:

திருமணமான பின் கணவன் மனைவியை எந்த அளவிற்குச் சந்தேகப்பட முடியுமோ அந்த அளவிற்குச் சந்தேகிப்பதாக இப்புதினத்தில் படைத்துக் காட்டுகிறார்.

சியாமளா தலையில் பூ வைத்தாலும், யாரை மயக்குவதற்கு என்று அப்பூவைக் கசக்சி எரியும் கொடூரம் படைத்தவனாக முரளி காணப்படுகிறான்.

மகாராணி நகர்வலம், ஊர்சுத்து எல்லாம் முடிச்சுராத் தங்களுக்கு வந்தாச்சா கெஸ்ட் உறவுசுக்கு.(நெ.ஆ.ப.97)

என்று தன் மனைவி சியாமளாவை முரளி சந்தேகிக்கிறான். மனைவியை சந்தேகித்தலினால் மணவாழ்க்கை சிதைய ஆரம்பிக்கின்ற நடப்பில் சூழல்கள் சித்தரித்துக் காட்டப்படுகின்றன.

### கணவன் மனைவியை அடித்தல்:

மனைவியை சந்தேகிக்கும் ஆண்கள் சிலர் மனைவியை அடிக்கவும் செய்கின்றனர். சியாமளா தன் கர்ப்பம் கலையுமளவிற்குக் கணவன் முரளியால் தாக்கப்படுகிறாள். சியாமளா தன் நிலையை மருத்துவரிடம் கூற, மருத்துவர் வருத்தமும், கோபமும் சூழ சியாமளாவின் உடல்நிலை பற்றிக் கூறியதை,

ஒரு கான்சண்ட்ரேஷன் கேம்ப்பிலே வர இந்த மாதிரி ஒருத்தனை சேதப்படுத்த முடியாதும்மா என்றார்.

எவ்வளவு சரியான வார்த்தை. கான்சண்ட்ரேஷன் கேம்ப் என்பது சித்தரவதைக் கூடம் (நெ.ஆ.ப.187) என்று ஆசிரியர் விளக்குகிறார். முரளியால் சியாமளா எல்லா விதத்திலும் மூர்க்கமாய் தாக்கப்பட்டிருக்கிறாள். உச்சிமுதல் உள்ளங்கால் வரையிலும் துவைத்து எடுக்கப்பட்டிருக்கிறாள். கணவனால் எல்லா இடங்களிலும் மூர்க்கத்தனமாகப் பெண்கள் தாக்கப்படும் நிலை உண்டு என்பதையும் இதன் வாயிலாக அறிய முடிகிறது.

### கணவன் வேறொரு பெண்ணுடன் உறவு கொள்ளுதல்:

காதலித்துத் திருமணம் செய்து கொள்ளும் ஆண்கள், திருமணமாகி மனைவியுடனும் வாழாமல் இருப்பதுடன் மனைவி எதிரிலேயே மற்றொருத்தியுடன் தொடர்பு கொள்ளுதலும் உண்டு என்று ஆணாதிக்க நிலையைச் சுட்டுகிறார். சியாமளாவின் கணவர் முரளி இரு பெண்களுடன் தொடர்பு கொண்டிருக்கிறான் எனக் குறிப்பிடுகிறார். கற்பு தனக்கு இல்லை என்று நினைக்கும் ஆண்கள், மனைவி இருக்கிற பொழுதே, வேறொருத்தியுடன் தொடர்பு கொண்டு, அப்பெண்களைச் சீரழித்துவிடுகின்றனர். மனைவியாகிய பெண்ணோ, கணவனுடன் போராட வேண்டிய நிலைக்குத் தள்ளப்படுகிறாள்.

### பிறந்த வீட்டுத் தொடர்பைத் துண்டித்துக் கொள்ளுமாறு எச்சரிக்கப்படுதல்:

முரளி திருமணமான அன்றே தன் மனைவி சியாமளாவை, தாய், தந்தை சொந்தம் எல்லாவற்றையும் மறந்துவிடுமாறு எச்சரிக்கிறான். மனைவியின் மனநிலையினைப் பொருட்படுத்தாமல் அவளை நிர்பந்தப்படுத்தி அவளைத் துன்புறுத்துகிற ஆணைக் காண முடிகிறது.

### சமுதாயப் பார்வை:

தவறே செய்யாத சியாமளா தனது ஆசிரியர் பணியைச் சென்னையிலிருந்து மதுரைக்கு மாற்றுகிறார்கள். அதைக்கேட்க மேலதிகாரியிடம் பெண் என்பவள் அனுசரித்துப்போக வேண்டும் என்று அறிவுரை வழங்குகிறார்.

எவ்வளவு சண்டை சச்சரவு வந்தாலும் நாலு சுவருக்குள் வச்சுக்கனுமின்னுதான் ஒரு நல்ல குடும்பப் பொண்ணு நினைக்கனும் வாசப்படி தாண்டி வெளியே வந்திரக்கூடாது. (நெ.ஆ.ப.238).

என்று அவரின் நிலை அறியாமல் தன் போக்கில் மேலதிகாரி பதவியில் அமர்ந்த தோரணையில் பேசித்தீர்க்கிறார் என்று திலகவதி விவரிக்கிறார். சமூகம் பழி சுமத்துவதோடு மட்டுமல்லாமல் படித்துப் பட்டம் பெற்று அதிகாரிகூட எதையும் சிந்திக்காமல் அப்பெண்ணின் மீதே பழியைச் சுமத்துகின்ற போக்கினையும் அறிய முடிகிறது.

### ஆய்வு முடிவுகள்:

நெஞ்சில் ஆசையில், பெண்ணியச் சிந்தனையைக் கீழ்க்கண்டவாறு வகைப்படுத்தலாம்.

பெண்கள் தம் வாழ்க்கைத் துணையைத் தெரிவு செய்வதில் கவனம் தேவை.

கணவன் மனைவி இருவரின் வாழ்க்கை அணுகுமுறை மாற வேண்டும்.

குடும்பமே நரகமாகி விடுகிறதெனில் வெளியேறுதல்.

பெண்கள் வீட்டை விட்டு வெளியேறும் சூழலில் தன்னம்பிக்கை கொள்ளுதல்.

சமூகம் பெண் பற்றிய சிந்தனையை மாற்றுதல்

சமூகப்பணி செய்து குறிக்கோளோடு வாழுதல்.

# தலித் பெண்ணியம் : "பலி ஆடுகள்" நாடகத்தை முன்வைத்து....

முனைவர். *மு. மதியழகன்*, மொழித்துறைத் தலைவர்,
ஸ்ரீ நாராயண குரு கல்லூரி, கோயம்புத்தூர்

## முன்னுரை

சாதி கொடுமைகளைப் பற்றி - தலித் மற்றும் தலித் பெண்களுக்கு இழைக்கப்படும் கொடுமைகளைப் பற்றி வெளிப்படையான வசனங்களை உள்ளடக்கிய கே.ஏ. குணசேகரனின் "பலி ஆடுகள்" தமிழுக்குப் புதுமையானது, தமிழின் முதல் தலித் பெண்ணிய நாடகமாக அமைவது. இந்நாடகக் கரு ஒரு கல்வெட்டுச் செய்தியின் அடிப்படையில் உருவாக்கப்பட்டது. ஆண்டாண்டு காலமாக இந்து மதத்தின் - மனுதர்மத்தின் பேரால் வர்ண பேதத்தை உருவாக்கித் தங்களை மேலோர்களாக வளப்படுத்திக் கொண்ட பார்ப்பனர்கள், பிற மக்களை குறிப்பாக தலித்துக்களை நாயினும் கீழாக அடிமைகளாகக் கருதும் போக்கு இன்றளவும் தொடர்கிறது. இச்சூழலில் அடிமைகளின் எழுச்சிக் குரலை - சகல விதமான ஒடுக்கு முறைக்கும் சுரண்டலுக்கும் ஆளாகியுள்ள தலித் மற்றும் தலித் பெண்களின் விடுதலைக் குரலை பதிவு செய்த கே.ஏ. குணசேகரனின் பலி ஆடுகள் நாடகத்தை, நவீன நாடக வரலாற்றில் புதிய பரிமாணமாகக் காட்டுவது இக்கட்டுரையின் நோக்கம்.

## நாடகக் கதையாக்கம்

நாடகம் தொடங்குவதற்கு முன், மேடையில் இருள் கவ்வுகிறது. ஒளிப்பதிவு நாடாவில் பதிவு செய்யப்பட்டிருக்கும் அம்பேத்கர் - முல்க்ராஜ் ஆனந்த் உரையாடிய சில பகுதிகள் நாடகத்தின் தொடக்கத்திலும் இடையிடையேயும் ஒளிபரப்பப்படுகின்றது. பறைஒலி அவ்வப்போது எழுப்பப்படுகிறது. நாடகத்தின் இடையிடையே பாடல்கள் இடம் பெறுகின்றன. அம்மன் தேர்ச்சக்கரம் உடைந்து போனதற்காக பறை அறிவித்து ஊர்க்கூட்டம் கூட்டப்படுகின்றது. தேர்ச்சக்கரம் உடைந்ததற்கான காரணம் ஆராயப்படுகின்றது. சாமியாடி ஒருவர் வந்து, எட்டு நாட்களுக்குள் நரபலி கொடுக்க வேண்டும் என்று சொல்ல, பார்ப்பனர்கள் குழு, நரபலி வாங்க பறையர் இனத்தைச் சார்ந்த ஒருவரை அடையாளப்படுத்துகிறது. பறையர் தெருவில் பறை அறிவிக்கப்பட்டு தெருக்கூட்டம் நடக்கிறது. பார்ப்பனர்களுக்குச் சேவகம் செய்வதை - அடிமைகளாக நடந்து கொள்வதைத் தங்களுக்குக் கிடைத்த சலுகைகள் என உடுமன் என்பவன் பேசுகிறான். இதனை மறுத்து, பார்ப்பனர்களின் ஆதிக்கச் சங்கிலியை அறுத்தெரிய வேண்டுமென சின்னாண்டி சொல்கிறான். தம்மைப் பலிகொடுக்க பார்ப்பனர்கள் திட்டமிட்டிருப்பதாக சின்னாண்டி சொல்ல, சாமியே உன்னை விரும்பும் போது அதைத் தடுப்பது முறையன்று என்று உடுமன் பதில் அளிக்கின்றான். சின்னாண்டி அதனை மீண்டும் மறுத்துப் பேசிவிட்டு, தமது மனைவியோடு இரவு நேரத்தில் தப்பியோடி விடுகிறான்.

சின்னாண்டி தலைமறைவான செய்தியறிந்த பார்ப்பனர் குழு உடுமனைப் பலிகொடுக்க முடிவு செய்கிறது. வாதப் பிரதிவாதங்கள் நடக்கின்றது. அப்போது, உடும்பன் தம் மனைவியை நரபலி கொடுக்கலாம் என்று சொல்லித் தப்பிக்க முயல்கின்றான். உடுமன் மனைவி எதிர்கொண்டு வாதம் செய்கிறாள். எனினும் சாமியாடி ஒருவர் வந்து உடுமனின் மனைவியை கொலை செய்துவிடுகிறான். அப்போது பார்ப்பனர்குழு பயந்து ஒளிந்து சோக முகங்களுடன் நிற்கின்றனர். பறைஒலி தொடர்ந்து ஒலிக்க, கட்டுண்டோர் குழு தங்களது கட்டுகளைப் பிரித்தெறிந்துவிட்டு, கோபக் கனலோடு நிமிர்கிறனர்,

"என்றுமே பலி ஆடுகள் - பெண்கள் / எங்குமே பலி ஆடுகள் / தாலிகள் எங்கும் வேலிகள் - எந்தச் சாதியிலும் பெண்கள் அடிமைகள்" என்று பெண்கள் குழு பாடுகின்றனர். சமூகத்தில் ஒதுக்கித் தள்ளப்பட்ட இம்மக்களுக்கான செய்தியாக அம்பேத்கர் உரைக்கும் பின்வரும் பகுதியோடு நாடகம் நிறைவுறுகின்றது.

> "தீண்டத் தகாதவர்களாக ஆக்கப்பட்டிருக்கும் இந்த /மக்களுக்கு கூறுவதெல்லாம் இது ஒன்றுதான் சிங்கமாக இருங்கள்! இந்துக்கள் தங்களுக்கு அதிகாரம் / வேண்டுமென்பதற்காக சாமிக்கு ஆடுகளைத் தான் / பலியிடுகிறார்கள்... சிங்கங்களை அல்ல....!

காலந்தோறும் நிகழ்வுறும் மக்களின் கருத்தோட்டத்திற்கு ஏற்ப இந்நாடகமும் மாற்றுக் கருத்துக்களை - புதிய சொல்லாடல்களை முன்வைக்கிறது. பின்வரும் வினாக்களுக்கு விடைகாண்பதன் மூலம் இந்நாடகத்தின் போக்கை - நாடக ஆசிரியரின் கருத்துச் செயல்பாட்டை உய்த்துணர முடியும்.

காலந்தோறும் பின்பற்றப்படும் சமூக மதிப்பீடுகளை இந்நாடகம் எங்ஙனம் எதிர்கொள்கிறது?

எந்த மாற்றத்தை ஆசிரியர் விரும்புகிறார்? அம்மாற்றத்திற்கான வழிமுறைகள் என்ன?
நாட்டுப்புறக் கலைவடிவத்தை இந்நாடகத்தில் தேர்ந்து கொண்டதற்கான பிண்ணனி என்ன?
யாரைப் பார்வையாளரைகக் கருதி இந்நாடகத்தை ஆசிரியர் தயாரித்துள்ளார்?

பார்ப்பனர்களின் ஆதிக்கக் குரலை அடித்து நொறுக்க அவ்வப்போது கலக்குரல் எழுவதும், அதற்குப் பிறகு அக்குரல்கள் நீத்துப் போவதும் தவிர்க்க இயலாத வரலாறாகவே உருவாகி விட்டது. புத்தரில் தொடங்கி பெரியார் வரை பார்ப்பன ஆதிக்கத்தை எதிர்த்தே வந்திருக்கின்றார்கள். தீண்டாமை, சாதிக்கொடுமை போன்றவற்றிற்கு ஆணிவேறாய் இருப்பவர்கள் பார்ப்பனர்களே என்ற உண்மையை அம்பேத்கர் வெளிச்சம்

போட்டுக் காட்டினார். இந்து மதமும் பார்ப்பனியச் செயல்பாடுகளுமே சகலவிதமான ஒடுக்கு முறைகளுக்கும் காரணம் என்பதை உணர்ந்து கொண்டவர் அவர். இருபதாம் நூற்றாண்டின் மத்திய காலப் பகுதியில் தமிழகத்தில் வீறு கொண்டெழுந்த பெரியார் இயக்கம், எங்கும் பரவிக் கிடந்த பார்ப்பன மயத்தை ஒழித்துக்கட்ட களமிறங்கியது. பார்ப்பனியத்தின் வேர்களை - அதன் கொடிய நச்சுத்தன்மையை அடையாளப்படுத்திய பெரியார், அப்பார்ப்பனர்கள் உருவாக்கிய எதனையும் புறம் தள்ளவும் தயங்கவில்லை. மானமும் அறிவும் மனிதனுக்குத் தேவை என்பதை உணர்த்திஅதன் மூலம் சுயமரியாதையை - தன்மான எழுச்சியை இம்மண்ணில் வேரூன்ற வைத்தார். தமிழகச் சூழலில், பெரியார் மேற்கொண்ட சமூக அரசியல் செயற்பாடுகள், பார்ப்பனச் செயல்பாடுகளுக்கு முட்டுக்கட்டையாக அமைந்தது. எனினும்,, பார்ப்பன மூளை பல்வேறு தளங்களில் தங்களது மேலாண்மையை - ஆதிக்க இருத்தலைத் தக்க வைத்துக் கொண்டது. இச்சூழலில், சகல ஒடுக்குமுறைகளுக்கும் உள்ளானவர்கள் தங்களைத் தலித்தாக உணார்ந்து கொண்டு அவற்றிற்கெதிரான செயல்தளங்களை முன்வைத்துப் போராடி வருகின்றனர். வருணாச்சிரமத் தத்துவத்திற்குள்ளும், இந்துத்துவ நடைமுறைக்குள்ளும் அடங்க மறுக்கிற, போர்க்குணமுள்ள தலித்துக்களை உருவாக்குவதில், பல்வேறு இயக்கங்கள் முனைந்து போராடி வருகிற சூழலில், இந்நாடகம் முக்கியத்துவம் பெறுகின்றது.

காலந்தோறும் பின்பற்றப்படும் ஆதிக்கப்பண்பாட்டை உடைப்பது, அப்பண்பாடு எதை இழிவென்று சொல்கின்றதோ அதை மாற்று வடிவமாகக் கொண்டு போர்க்குணமுள்ள கலை வெளிப்பாடாக - வடிவமாகக் முகக்கொள்வது. இங்கே பறைஅடித்தல் இழிவெனக் கருதும் ஆதிக்கப்பண்பாட்டைஉடைத்தெறிந்து அப்பறையொலி தலித்துக்களின் போர்முரசாக வெளிப்படுவதை இந்நாடகத்தில் பார்க்கிறோம். இங்கே “பறை” என்ற நாட்டுப்புறக் கலை வடிவம் உயிர்கொள்கிறது. தலித் என்பவர்கள் அடிமை வாழ்வில் சுகம் காண்பவர்கள் என்ற பிம்பத்தை தகர்த்தெறிந்து, உழைக்கும் வர்க்கத்தின் கலைக் குரலாக அவர்களை முன்னிறுத்திச் செயல்படுகின்றது இந்நாடகம். முற்றிலும் ஆண்களையே சார்ந்த பண்பாடு தலித் பெண்களிடம் இல்லையென்றாலும் தலித்துக்களின் வாழ்வில் ஊடாடி நிற்கும் பெண்களைப் பற்றிய மதிப்பீடுகள் இங்கே கேள்விக்குள்ளாக்கப்படுகின்றன. தலித்தாகத் தன்னை உணாந்த ஒருவன், தான் நரபலியாக ஆவதைவிட, தன்மனைவி நரபலி ஆவதில் காட்டும் ஆணாதிக்க மகோபாவம் இந்நாடகத்தில் வெளிப்படுகின்றது. இந்தச் சமூகத்திலும் பெண்கள் பலிஆடுகள் தான் என்பதையும், சகல ஒடுக்கப்பட்ட சாதிகளுக்குள்ளும் நிகழும் பெண்ணடிமைத்தனத்தை சரியான முறையில் இந்நாடகம் எடுத்துச் சொல்கின்றது.

தலித் மக்களின் வாழ்வியல் போக்கில் கூட்டு வாழ்வின் பண்பாடு பேரளவு போற்றப்படுகின்றது. இம்மக்களின் வாழ்க்கை நெறிமுறைகளும், வழிபாடும் கிராமத்தேவதைத் தெய்வங்களையே சார்ந்துள்ளது. சாமிக்குத்தத்திற்காக எதையும் தரத் தயாராக இருக்கும் மனப்பானமை பார்ப்பனர்கள் தங்களை ஆட்டுவிக்கிறார்கள் என்பதைக்கூட உணர்ந்து கொள்ளச் சக்தியற்ற வாழ்வியல் சூழல். பார்ப்பனர்களுக்கு - அவர்களது மேலாதிக்கப் பண்பாட்டிற்கு அடிமைச் சேவகர்களாக இருப்பது தங்களுக்குக் கிடைத்த சலுகையென எண்ணி மகிழும் போக்கு, இவையனைத்தையும் கேள்விக்குள்ளாக்கி தலித்துகளுக்கான பண்பாட்டு விழுமியங்களை இந்நாடகம் எதிர்கொள்கின்றது. யாருக்காக இந்நாடகம் படைக்கப்பட்டது. யாரைப் பார்வையாளராகக் கருதி இந்நாடகத்தை ஆசிரியர் படைத்துள்ளார் என்பது அடுத்த வினா? எந்தவொரு கலைவடிவமும் காலமாற்றத்திற்கேற்ப சமூக விழுமியங்களைப் புதிதாய் படைக்கிற போதுதான் அக்கலை வடிவம் முழு வளர்ச்சி பெறும்/பெற முடியும். தலித்தியம் சார்ந்த பண்பாட்டு அம்சங்களை - கலகக் குரலை அம்மக்கள் பேசும் மொழியாலேயே படைத்திருப்பது இந்நாடகத்திற்கு உயிர் கொடுக்கிறது. இழிசாதி மக்களாகவும், இழிசாதி மொழியாகவும் மேல்சாதி மக்களால் அடையாளப்படுத்தப்பட்ட மக்களையும், அம்மக்களின் மொழியினையும் எவ்வித வண்ணப்பூச்சுக்களுமின்றி - பாசாங்குமின்றி எழுதப்பட்ட வசனங்கள் இதுகாறும் தமிழ் நாடக உலகம் காணாத புதுமையாகும். சமூகப் பண்பாட்டு நடைமுறைகளையும், பொருளாதார நடைமுறைகளையும் இணைத்துப் பார்க்கும் தலித் பெண்ணிய நாடகமாக “பலி ஆடுகள்” விளங்குகிறது.

## முடிப்புரை

மேல்நாட்டு நாடகங்களைத் தழுவியும், பிற மாநில நாடகக் கதைகளை மொழியாக்கம் செய்தும் நவீன நாடகமாக அரங்கேற்றம் செய்வது நம் நாடக மரபிற்கு உறுதுணையாக அமையலாம். இருப்பினும் மண்ணும் மண் சார்ந்த மக்களின் சகல துறைகளையும் உள்ளடக்கிய கலை இலக்கிய வெளிப்பாடுகளே உயிர்த்தன்மைகளோடு அம்மக்களின் வாழ்வுரிமையை வென்றெடுக்கும் ஆற்றல் உடையது. எழுதப் படிக்கத் தெரியாத தலித் மற்றும் தலித் பெண்களுக்கு - அதிகார சக்திகளை எதிர்த்துப் போராடவும், புளித்துப்போன இந்துமதப் புராண மரபுகளையும் ஆதிக்கத்தளைகளையும் சுட்டுப் பொசுக்கி விட்டு, ஒடுக்கப்பட்ட மக்களின் போர்க்கருவியாக இந்நாடகம் அமைந்திருப்பது தமிழ்நாடகத்தின் புதிய போக்காக - பரிமாணமாகக் கொள்ளலாம்.

## பார்வை நூல்கள்

1. கே.ஏ. குணசேகரன், “பலி ஆடுகள்” நிறப்பிரிகை இலக்கிய இணைப்பு, நவம்பர் - 1994
2. கே.ஏ. குணசேகரன், “சத்திய சோதனை” நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை - 1993.

# படைப்பிலக்கியங்களில் ஒலிக்கின்ற உரிமைக்குரலால் பிறக்கும் புதிய விடியல்

*பி. மகேசுவரி,* எம்.ஏ., எம்.ஃபில், பேராசிரியர் - தமிழ்த்துறை,
நிர்மலா மகளிர் கல்லூரி, கோவை.

இன்றைய படைப்பிலக்கியங்களான சிறுகதையிலும், புதினங்களிலும் பரவலாகப் பேசப்படுகின்ற ஒன்று பெண் விடுதலை. பெண்களின் பிரச்சனைகள், அதற்குரிய தீர்வுகள் என்ற கோணங்களில் இன்று படைப்பிலக்கியங்கள் பெரும்பாலும் படைக்கப்படுகின்றன. அவற்றை விளக்குவதே இக்கட்டுரையின் நோக்கம்.

## அடிப்படை

பிறவி எடுக்கும் போது, இருபாலருக்கும் பொதுவாகவே "சித்தம், அறிவு" என்று சொல்லக்கூடிய மலரும் கூறுகள் அமைந்திருக்கின்றன. மிகவும் புராதனமான இந்திய சமயம் சார்ந்த கருத்துப்படி படைப்புக்கடவுள் தாமே இருபகுதிகளாகப் பிரிந்து "ஆண்" என்றும் "பெண்" என்றும் சக்திகளைத் தோற்றுவித்தார் என்றும், இவரே ஆதி ஸ்வயம்புவன் என்றும் மனைவி சத்ரூபி என்றும் பெயர் பெற்றனர் என்று புராணம் கூறுகிறது. இந்த கோட்ப்பாட்டின்படி ஒருவருக்கு மற்றவர் அடக்கம் என்ற குறிப்பு நிச்சயமாக இல்லை.,

சுவிஸ் நாட்டு பச்சோஃபெண் என்ற மானிடவியலறிஞர் "ஆதியில் மனித இனம், எந்த நியதியும் இல்லாத பாலினக்கப்பலில் விலங்கு நிலையில் தான் பல்கிப் பெருகினர். அந்த நிலையில் தாய்வழி தான் முதன்மை பெற்றிருந்தது; பின்னரே குடும்பத்தலைவர், தந்தை என்ற முக்கியத்துவம் பெற மாற்றம் கண்டனர்" என்று தகுந்த காரணங்களுடன் விளக்கினடார்.

## காலமாற்றம் -

"தேரா மன்னா செப்பூவதுடையேன்... என்று கண்ணகி, நீதி கேட்பதற்காக, மன்னனிடம் அவையில் வழக்காடியதும், "எத்திசைச் செல்லினும் அத்திசைச் சோறே" என்று பரிசு கொடுக்கக் காலம் தாழ்த்திய அதியமானிடம் அஞ்சாது கேட்ட ஔவையும் கால மாற்றத்தை, பெண்ணுரிமையை நிலைநாட்டுபவர்களாக விளங்கினர் எனலாம்.

"சகிப்புத் தன்மையில் வலிமை மிகுந்தவள் பெண்தான்" என்கிறார் காந்திமகான்.

மகளிர் வாழ்வைச் சித்தரிக்கும் நாவல்களை, குடும்ப உறவு நிலை, காதல் திருமணம், அலுவலக மகளிர் நிலை, கற்பழிப்பு, விதவையர் நிலை, விலை மகளிர் நிலை, கல்லூரி மாணவியர் நிலை, மகளிர் வறுமைக் கோலம், மகளிர் தம் ஆதவற்ற நிலை எனப் பவலவகைகளாகப் பிரித்து புள்ளி விவரங்களுடன் தருகின்றார். "தமிழ் இதழ்கள் காட்டும் மகளிர் நிலை" என்ற புத்தகத்தில் டாக்டர். சிவ. சசிரேகா அவர்கள் உள்ளத்திற்கு மதிப்பளித்த சங்ககாலத்திற்குப் பின் பணத்திற்கு மட்டுமே மதிப்புக் கொடுக்கும் அவலமான பிற்காலம் இப்பபோது வந்துள்ளதால் பண்பாட்டுச் சீரழிவுகளும், பிரச்சனைகளும் அதிகமாகி, மனவளம் குறைந்து "சமுதாயம் சீர் கெட்டு வருகிறது" என்கிறார்.

பெண் விடுதலை பெற்று, கல்வி கற்று, சொந்தக்காலில் நின்று, சாதனைகள் பல செய்து வந்தாலும் பெண்களுக்கென்று தடைகள் இருந்துகொண்டே தான் இருக்கின்றன. இன்று அத்தடைகளைக் கடந்து முன்னேறி வருகின்றது பெண்கள் குலம் எனலாம்.

பெண்குலம் முன்னேற வேண்டுமெனில் "பெண்மை" இன்னும் அதிகமாக விழித்தெழ வேண்டும். தாழ்வு மனப்பான்மையை விட்டுவிட வேண்டும். மனவளத்தையும், அறிவையும் பெருக்க வேண்டும். இதற்குச் சில சான்றுகள் தரப்பட்டுள்ளன.

"அன்புக்கு மேலே" என்ற சூடாமணியின் சிறுகதையில் பெண்ணியத்தின் நுண்மையான உணர்வுகள் திறம்படச் சொல்லப்பட்டுள்ளன.

இந்தக்கதையில் வரும் கதைத்தலைவன் மாணிக்கம், வேலைக்குச் செல்லும் தன் மனைவி லலிதா

ஓய்வு பெறுவதற்கு முன்பே தான் பணியிலிருந்து ஓய்வு பெறுகிறார். இதையே தன் தாழ்வு மனப்பான்மையால் விமர்சனம் செய்கிறார். திருமணத்தின் போது, பல பொருத்தங்களைப் பார்க்கும் போது, ஓய்வு பெறும் வயதையும் பார்க்க வேண்டும் என்கிறார். லலிதா, ஆணின் இம்மனநிலையை உணாந்து எந்தக் குறையுமில்லாமல் தன் கடமைகளைச் செய்கின்றாள். அலுவலகத்திற்கு வேலைக்குச் சென்று வரும் தன் களைப்பையும் மறந்து கணவனுடன் பேசுகின்றாள், அவன் ஆசைப்படி இசைவிழாவிற்கு அவனுடன் செல்கிறாள். தினமும் கணவனிடம் அவன் பகலில் பொழுதைப் போக்கிய விதம் பற்றி விசாரிக்கின்றாள். ஆயினும் பணி ஓய்வைத் தாங்கிக்கொள்ள முடியாத, தாழ்வு மனப்பான்மையால் லலிதாவை வேலைக்குச் செல்ல வேண்டாம் என்று ஆணையிடுகின்றான். லலிதாவும் அவனது அம்முடிவை ஏற்றுக்கொண்டு விட்டாள். இதனால், குற்றவுணர்வு குறுகுறுக்க, இவ்வாறு நான் கேட்டதால் உன் அன்பை இழந்து விடுவேனோ? என்கிறான். ஆனால் அவளோ "அன்பு போகாது" என்று கூறியதும் "மதிப்பு போய்விடும்" என்கிறாய் அல்லவா என்று கூறி, தன் தவற்றினை உணர்கிறான்.

ஒவ்வொரு கட்டத்திலும் பெண் இவ்வாறு போராடித் தான் வாழ்க்கையை ஓட்ட வேண்டியுள்ளது. என்பதைம இச்சிறுகதை நன்கு உணர்த்துகின்றது எனலாம்.

"கருணை மனு " என்ற லிங்கஷின் சிறுகதையில் பெண்ணின் சுயமரியாதையைக் காட்டுகின்றது.

அம்பிகா சாதாரணக்குடும்பத்தைச் சார்ந்த, அதிகம் படிக்காத பெண், புகுந்த வீட்டில் ஸ்கூட்டர் கேட்டு பிறந்த வீட்டிற்கு அனுப்பப்பட்டாள். கணவன் கோபிநாத் விவாகரத்து நோட்டீஸில் கையெழுத்திடுமாறு கடிதம் அனுப்புகிறான். மேலும் அக்கடிதத்தில் எனக்கு மனைவி இல்லாததால் நான் எதையும் இழந்துவிட மாட்டேன், நான் ஆண், ஆயிரம் இடங்களுக்கு என்னால் தனியாகச் சுதந்திரமாகச் செல்ல முடியும், வரமுடியும் என்றும் எழுதியிருந்தான். இவ்வார்த்தைகள் அம்பிகாவின் மனதைப் பாதித்தது. தன் சுயகௌரவத்தைக் காப்பாற்ற நினைத்து, ஒரு சமூகக்கட்டாயத்திற்காக அவனுடன் பொய்யான வாழ்க்கை வாழ்வதைவிட விவாகரத்துப் பத்திரத்தில் கையெழுத்துப் போட்டு அனுப்புகின்றாள். தன் தந்தையிடம், கணவனில்லாத நஷ்டத்தினை ஒரு பெண் வேறு எத்தனையோ நேர்வழிகளில் தன் சிந்தனையைச் செலுத்தி ஈடுகட்டலாம் என்று பதிலளிக்கின்றாள். கடைசியில் கோபிநாத் விபத்தில் கால் இழந்ததால் அவளை மீண்டும் வருமாறு இரண்டாம் கடிதம் அனுப்புகின்றான். அவருக்கு இப்போது தேவை நிரந்தர வேலைக்காரி. அதை மனைவி என்கிற பேரில் அமர்த்தினால்தான் நிரந்தரமாக இருப்பாள் என்று கருதி இக்கடிதத்தை அனுப்பியிருக்கிறான். என்று உணர்ந்து, தான் எடுத்த முடிவிலிருந்து மாறாமல் தன் சுயமரியாதையைக் காப்பாற்றினாள் அம்பிகா.

"வல்லூறுகள்" என்ற அம்பையின் சிறுகதை, பெண் தன் முடிவில் உறுதியாக இருந்து, கணவனைத் தண்டித்தல், சமுதாய நலன் கருதுதல் முதலியனவற்றை விளக்குகிறது.

உணவுப் பண்டங்களைச் சமுதாயத்திலுள்ள பலருக்கும் கிடைக்காமல் பதுக்கி வைத்தும், தன் மனைவி மீது சந்தேகப்பட்டும் வாழும் கணவன் பற்றிக் கூறப்படுகிறது. இக்கதையில் கணவனின் நண்பனுடன் சிரித்துப் பேசியதற்காகச் சந்தேகப்படும் கணவன் அவளை பூஜையறையிலிருந்து கங்கைச் சொம்பின் மீது கைவைத்துத் தான் நிரபராதி என்று நிரூபிக்கச் சொல்கிறான். அவன் மனைவி, அச்சொம்பைப் பிடுங்கி அவனிடமிருந்து வீசுகின்றாள். அன்று முதல் அவன் குடும்பத்தில் இருந்து கொண்டு, அவனுடன் பேசாமல் வாழ்ந்து, அவனைத் தண்டிக்கின்றாள். ஒருநாள் அவன் தூங்கும்போது தானியக்கிடங்கின் சாவியை எடுத்து, அவனது பதுக்கலை அம்பலப்படுத்தினாள். இதனால் தனக்கு ஆபத்து நேரும் என்று தெரிந்திருந்தும் சமுதாய நலன் கருதி இந்நன்மையை செய்தாள்.

"யுகசந்தி" என்ற ஜெயகாந்தனின் சிறுகதை பெண் சுதந்திரம் அவர்கள் கையில் தானுள்ளது என்பதைத் தெளிவுபடுத்துகின்றது.

கௌரிப் பாட்டியின் பேத்தி - கீதா பத்தே மாதங்களில் வாழ்க்கையினை இழந்து விதவையாக வந்தபோது பழைய கைம்மைக் கோலத்தை ஏற்காமல், வண்ண ஆடை உடுத்தி, உயர்கல்வி கற்று, வேலையில்

அமர வழிவகை செய்யப்படுகின்றது. இதற்கெல்லாம் கீதாவின் அப்பா கணேசன் ஆதரவு தருகின்றார். ஆனால் அடுத்தபடியாக கீதா மறுமணம் செய்யத் துடிப்பதை அறிந்த கணேசன் மறுக்கின்றார். இதை அறிந்த கௌரிப்பாட்டி பேத்தியின் எண்ணத்திற்கு ஆதரவளிக்கின்றார். தன் மகனின் சுயநலத்தை நடுநிலையுடன் கண்டிக்கின்றாள். விதவைக் கோலம் அழியவேண்டும் என்பதற்கு மட்டும் அனுமதி கொடுத்தாய், காலத்தின் கட்டாயத்தை உணர்ந்து நீ இப்போது மறுமணத்திற்கு மட்டும் அனுமதி தரமாட்டேன் என்கிறாய். எனவே நான் கீதாவுடன் வெளியேறுகின்றேன் என்று கூறிச் செல்கின்ற பாட்டியின் மூலம் காலப்போக்கில் தோன்றும் நல்ல மாற்றங்களை அனுசரித்துப் பெண் முன்னேற்றத்திற்குப் பெண்களே தடையாக இருக்கக் கூடாது என்ற கருத்தும் புலப்படுகின்றது. கீதா, தன் நியாயமான கோரிக்கையினை, நேர்மையான வழியில் நின்று தீர்க்கமாக தெளிவான முறையில் செயல்படுத்தத் துணிகிறாள் என்பதன் மூலம் பெண் விடுதலை அவர்கள் கையில்தானுள்ளது என்பதை வெளிப்படுத்தியுள்ளார், ஜெயகாந்தன்.

"சிறிய சிலப்பதிகாரம்" என்று சொல்லத்தக்க அளவு சிறப்புடைய வரலாற்றுக் காதலியல் நூலான "வசந்த முல்லை" பெண்ணுக்கு முன்னுரிமை கொடுத்து எழுதப்பட்ட புதினமாகும்.

"முல்லை சான்ற கற்பு" என்பதற்கேயாகவும், கற்பை வெளிப்படுத்தும் நோக்கத்திற்காகவும், குறியீடாகவும், தியாகத்திற்கு எடுத்துக்காட்டாகவும், கற்புக்கடம் பூண்ட பொற்புடைத் தெய்வமாக, கொங்கச்செல்வியாக, விசுவரூபம் எடுக்கிற முல்லையின் சிறப்பு "வசந்த முல்லை" என்ற நாவலில் அழகாகப் பேசப்படுகின்றது.

வசந்தன் முல்லை - இருவரின் காதல் கைகூடி மணம் நிகழ்நததும் முல்லையின் அண்ணனும், வசந்தனும் நாட்டு விடுதலைப் போரில் ஈடுபடுகின்றனர். மணமான அன்றே மனைவியைப் பிரிகின்றான் வசந்தன். இந்நிலையில் தடீரென ஒருநாள் இரவில் வந்து மகிழ்வித்துச் செல்லும் வசந்தனின் உறவால் தாய்மைப்பேறடைந்த முல்லை, வசந்தன் வெள்ளத்தில் சிக்கி இறந்ததாக வதந்தி சொல்லப்படுவதை மட்டும் அனைவரிடமும் சொல்கிறாள். அவன் உயிரோடிருப்பதாகச் சொன்னால் ஆபத்து நேரிடும் என்பதால் தன்னுடன் இரவில் தங்கியதை மறைக்கின்றாள் முல்லை. ஊரார் அவளது கற்பை ஐயுற்று, இழிவாகப் பேசுகின்றனர். நாட்டிற்காக தன் குடும்ப வாழ்வைத் துறந்த தியாகியாக, வீரமறவனாக விளங்குகின்றான் வசந்தன்.

அவனுக்கு ஆபத்து வரக்கூடாது என்பதற்காக, ஊராரின் தூற்றுதலுக்கு ஆளாகி, ஒழுக்கங் கெட்டவள் என்ற பழியைச் சுமந்து ஊர், உலகம் அறியாத தியாகியாகிய வாழ்கிறாள் முல்லை. வச்நதனின் தியாகத்தை விட முல்லையின் தியாகமே பன்மடங்கு மேம்பட்டதாக விளங்குகின்றது இந்நாவலில். சிலப்பதிகாரத்தில் வரும் கண்ணகிக்கு ஏற்படாத அவப்பெயர் முல்லைக்கு வருகின்றது. நாவலின் இறுதயில், திருச்செங்கோட்டு அர்த்தநாரீசுவரர் கோயில் விளக்கு மண்டப நிகழ்சியில் அவளது கற்பின் சிறப்பு எடுத்துக்காட்டப்படுகின்றது. எதையும் தாங்கும் இதயம் படைத்தவளாகப் பெண்ணிருத்தல் இந்நாவலில் விளக்கப்படுகிறது. இவ்வாறு படைப்பிலக்கியங்களில் பெண்களின் போராட்டங்களும், மன உளைச்சல்களும் காட்டப்பட்டு, உரிமைக்குரல் ஒலித்துப், புதிய வடியல் பிறக்க வாய்ப்பு உள்ளது எனலாம்.

# "வரலாற்று நோக்கில் சட்ட திட்டங்களும் - பெண்ணியமும்"

*தி. மனோன்மணி - டாக்டர். தி. செல்வநாயகி,* வரலாற்றுத்துறை,
அ.ப.ம. கல்லூரி, பழனி.

## முன்னுரை :

பெண்ணியம் என்ற தமிழ்ச் சொல்லானது "Feminism" என்ற ஆங்கிலச் சொல்லிலிருந்து வந்ததாகும். ஆரம்பத்தில் இச்சொல் "Femina" என்ற இலத்தீன் மொழிச் சொல்லிலிருந்து பிறந்ததாகும். மேலை நாடுகள் பெண்ணியம் என்ற கருத்தை ஆணின் அதிகாரத்தைப் போக்குதல் சமவுரிமை, பாலினசமத்துவம், பெண்ணைப் பாதுகாக்கும் சட்டங்கள், வழிமுறைகள் ஆகியவற்றைப் பெறுவதையே நோக்கமாக கொண்டு பெண்ணியம் உருவானது.

நம் பாரதம் பெண்களின் முன்னேற்றம், பெண்களுக்கு இழைக்கப்படும் கொடுமைகளை எதிர்த்தல், பெண்கல்வி, சமூக பொருளாதாரத்தில் சமவுரிமை போன்ற முன்னேற்றக் கருத்துக்களை சட்ட திட்டங்களின் மூலம் நிறைவேற்றுவதையே கருவியாகக் கொண்டு அமைந்துள்ளது.

## ஆரம்பகால பெண்களின் நிலையும், பெண்ணியமும் :

முப்பதாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே குகைகளில் வாழ்ந்த மனிதன், பெண்ணோடு சேர்த்து சில விலங்குகளையும், உருவமாகத் தீட்டி பெண்ணை வெற்றித் திருமகளாகவும் தான் வழிபடுகிற கடவுளாகவும் அறிமுகப் படுத்தினான். பின்பு சிந்து சமவெளி நாகரீக காலத்தில் பெண்ணை தெய்வ உருவங்களாகக் கொண்டிருந்தனர். நம் பாரதம் முழுவதும் கிடைத்த ஓவியங்கள், மண் உருவங்கள், சிற்பங்கள் கலைப் பொருட்கள் இவை போன்ற பிறவும் சமுதாயத்தில் பெண்ணைப் போற்றும் வகையிலே அமைந்திருந்தன. பின் வளமையான பகுதிகளில் வாழ்ந்த மலைவாழ் மக்கள் பெண்களை செல்வத்தை கொடுக்கும் திருமகளாக கருதி அவளை வாழ்த்தி வழிபட்டனர். நாகவழிபாடு, சப்தமாதா வழிபாடு வளமை சிற்பங்கள் இவையெல்லாம் சமூதாயம் பெண்ணை எவ்வாறு போற்றியது என்பதை எடுத்துக் காட்டுவதாக அமைந்துள்ளது.

வேத காலத்தில் வேதமும் பெண்மையைப் போற்றியது. இந்து சமயம் அல்லாத பிற சமயங்களான பௌத்தமும், சமணமும் பெண்மையை, பெண் இனத்தைத் தங்களைப் பாதுகாக்கும் கருவியாகவே கருதி வழிபட்டனர்.

## பாரதத்தில் போற்றப்பட்ட பெண்கள் :

ஆரம்ப காலகட்டத்தில் பாரதத்தில் நம் பெண்கள் சிறந்த கல்வியாளர்களாகவும், வேதப் பாடல்கள் இயற்றுவதில் சிறந்தவர்களாகவும் (கார்க்கி, மைத்ரேயி, கோஷா, அப்போலா, லோபமுத்ரா) தூதுவராக (ஔவை), சிறந்த வீரத்தாயாக (ஜீஜாபாய்) சமுதாய நலன், அரசாட்சி செய்யும் வலிமை உடையவர்களாக (செம்பியன் மாதேவி, முக்கோ கிளானடிகள், வானவன் மாதேவி) வீர பெண்மணிகளாக (ஜான்சிராணி, ராணி மங்கம்மாள்) என பலத்துறைகளில் சிறப்பு பெற்றவர்களாக விளங்கியவர்கள் எண்ணிலடங்காதவர்கள் இருந்துள்ளனர். இதிலிருந்து நம் பாரதம் பெண்மையைப் போற்றியும் அவர்களின் நிலையை உயர்த்த ஊக்குவிக்கும் நாடாகவே இருந்து வந்திருக்கின்றது.

## பெண்ணினத்தில் ஏற்பட்ட மாற்றம் :

நம் பாரதத்தில் முன்பு பெண்கள் உயர்நிலையை அடைந்திருந்தாலும், பல தாக்கங்களும், மாற்றங்களும் பெண்ணினத்தை இழிவு நிலைக்குக் கொண்டு சென்றன. சிசுவதை, பாலிய விவாகம், பலதார மணம், கைம்பெண்கொடுமை, உடன்கட்டை ஏறுதல், வரதட்சணைக்கொடுமை, ஆணாதிக்கம், தொழில் உரிமை இழப்பு என பெண்கள் உள்ளத்தாலும், உடலாலும் தாழ்த்தப்பட்ட நிலையில் தான் "பெண்ணியம்" தலை தூக்கியது.

## பெண்ணியத்திற்கான இயக்கங்கள் :

மேலைநாட்டுக் கல்வி, எண்ணங்கள், இயக்கங்கள் செயல்பாடுகள், சமூக நடைமுறை இவைகள் நம் இந்திய சீர்திருத்தவாதிகளையும், இந்திய நலம் விரும்பும் பல அயல்நாட்டினராலும் இயக்கங்கள் தோன்ற வழிவகை செய்தது. மார்க்சிய கருத்துகளும், அமெரிக்காவில் ஏற்பட்ட சமுதாயப் பெண்ணியக் கருத்துக்கள், மார்க்சியல், வயலன்ஸ், திருமணம் தொடர்பான பாதிப்புகள் இவையெல்லாம் இந்தியத் தலைவர்களைப் பல இயக்கங்கள் தோற்றுவிக்க ஊக்குவித்தன.

அவற்றின் அடிப்படையில் இந்திய பிரம்ம சமாஜம், ஆரிய சமாஜம், தியாஷாபிகல் நிறுவனம்,

இராமகிருஷ்ணா மட அமைப்புகள் என பல அமைப்புகளும் ஏற்படுத்தப்பட்டு இராஜராம் மோகன்ராய், சுவாமி தயானந்த சரஸ்வதி, அன்னிபெசன்ட் அம்மையார், இராம கிருஷ்ண பரமஹம்சர், சுவாமி விவேகானந்தர், மேடம் காமா, இராணி ஸ்வர்னோமயா, ஸ்வர்ணகுமாரி தேவி, பண்டித ரமபாய், சகோதரி நிவேதிதா, டாக்டர் முத்துலெட்சுமி ரெட்டி இவ்வியக்கங்கள் தோற்றுவிக்கப்பட்டு பெண்ணியக் கருத்துகளை இந்தியாவில் ஊக்குவிக்க வழிவகை செய்தன.

### சட்டங்களும் பெண்ணியமும் :

இயக்கங்கள், ஆங்கிலேயர்கள், இந்தியத் தலைவர்கள் எனப் பலக்காரணிகள் பெண்ணியத்தை நிறைவேற்றும் சட்டங்களை வலியுறுத்தியது. 1923 -ல் பெண்களுக்கு வாக்குரிமை சட்டம் கொண்டு வந்ததால் பெண்கள் ஆண்களுக்கு நிகராக வாக்களிக்கும் உரிமையைப் பெற்றனர். 1795 ஆம் ஆண்டில் சட்டம் “பெண சிசுக் கொலையை” தடைச் செய்தது. 1829 -ம் ஆண்டு சட்டம்ட “உடன் கட்டை ஏறுதலைத்” தடை செய்தது. 1856 ஆம் ஆண்டு “விதவையர் மறுமணத்தை” ஆதரித்தது. 1929 ஆம் ஆண்டுச் சட்டம் “குழந்தைகள் திருமண சட்டத்தை” தடை செய்தது. 1856 ஆம் ஆண்டு விதவைகளுக்கு சொத்துரிமை உண்டு என்பதை வலியுறுத்தியது. இவ்வாறாக தோன்றிய பல சட்டங்களால் பெண்ணினம் சமுதாயக் கொடுமைகளிலிருந்து விடுதலை அடைந்தது.

இச்சட்டங்கள் மேலைநாடுகளில் செயல்பட்ட எவாஞ்சலிக்கர்கள் இயக்கத்தையும், அமெரிக்க வாக்குரிமைக்குப் போராடிய லியூசிஸ்டோன், சூசன்ப்ரௌன்வெல் அந்தோனி, எலிசாபத் கொடி ஸ்டான்டன் போன்றோர்களின் செயல்பாடுகளை நமக்கு நினைவு கூறுகின்றன. இதைத் தான் மேரி உல்ஸ்டோன் கிராப்டஸின் “ A vindication of the Rights of women” (பெண்களின் புனித நூல்) என்ற நூல் வலியுறுத்தியது.

### புனித ஆண்டு :

பெண் சமுதாயத்தின் புனித ஆண்டாக 1961 ஆம் ஆண்டைக் கூறலாம். ஏனென்றால் வரதட்சணைக் கொடுமை செய்து ஆண்களிடம் வாழ வேண்டும் என்ற முட்டாள்தனமான எண்ணம் மக்களிடையே தோன்றிய காலகட்டத்தில், “ஸ்தீரிதனம்” கேட்கும் கொடுமையிலிருந்து பெண்களை விடுவித்தது. இவற்றுடன் 1961 -ல் மகப்பேறு நலச்சட்டமும், 1976 -ல் சம ஊதியச் சட்டமும், 1948 -ல் பெண் தொழிலாளர் அரசு காப்பீட்டுச் சட்டமும், 1952 -ல் சுரங்கச் சட்டமும், 1951 -ல் தோட்டத் தொழிலாளர்ச் சட்டமும், 1980 -ல் வேளாண்மைச் சட்டமும் போன்றவையெல்லாம் வேகமாக சென்று கொண்டிருக்கும் நவீன உலகில் கெண்களைத் தன்னம்பிக்கை உடையவர்களாகவும், அரசு நலன்களை நுகர்புவர்களாகவும், துங்களின் உடல், உள்ளம் நலனில் அக்கறை காட்டுவதிலும் சமுதாய பொருளாதாரப் அளவில் உயர்த்தும்விதமாய் “பெண்ணியம்” அமைந்துள்ளது.

### பெண்ணியமும், திட்டங்களும் :

சட்டங்கள் பெண்ணின் பாதுகாப்பைத் தலைமையாக கொண்டிருந்தாலும், பெண்ணின் அன்றாட வாழ்வில் அவளின் நலனில் அக்கறை கொள்ளும் திட்டங்கள் பலவும் தோன்ற அரசுகள் தீட்டியது. பிற நாடுகளுடன் பொருளாதாரத் துறையில் ஈடுபடுத்த விரும்பிய ஐந்தாண்டு திட்டம், பெண்ணிய மேம்பாட்டிற்கான பல திட்டங்களை தீட்டியது. அவற்றில் விதவை மறுமணத்தை ஊக்குவிப்புத்திட்டம், தேசிய மகளிர் தகவல் மையம், கஸ்தூரி பாய்காந்தி சிகிச்சை யோகஜனா, மகிளா சம்ரிதி யோகஜனா, இந்திரா ஆவாஸ் யோஜனா, ஜவஹர் வேலைவாய்புத்திட்டம், தேசிய பால்வள மேம்பாட்டு வாரியம், மத்திய சமூக நல வாரியம், தேசிய பெண்கள் கமிட்டிக்குழு, இந்தியமகளிரியல் கல்விக் காகம், ஆபாசப் புத்தகம், விளம்பரம் தடைச் செயல் சேவா, பெண்ணியத்தின் கண்ணியத்திற்கான பதியம் என இத்திட்டங்கள் பெண்ணினத்தின் அறிவாற்றல், தன்னம்பிக்கை, நிர்வாகத் திறன், தலைமைப் பண்பு போன்ற காரணிகளுடன் பொருளாதாரக் காரணியும் பெண்ணிய மேம்பாட்டிற்கு முக்கியத்துவம் அளித்தது.

### முடிவுரை :

“பெண்ணே உலகம்” என்று வீர முழக்கமிட்டாலும், அன்று முதல் இன்றுவரை பெண்ணினத்திற்கு தாக்குதல், நேரிடையாகவோ, மறைமுகமாகவோ நடந்து வருகிறது. மேலும் பண்பாடு, கலாச்சாரம் என்றெல்லாம் கூறி பல அறிய அணிகலன்களை பெண்களை அணிந்து பவனி வருவதை காணலாம். இதை மாற்றப் பெண்ணியம் இன்றைக்கு பல முயற்சிகளுடன் செயல்படுவதைக் காண்கிறோம்.

“சட்டங்கள் ஆள்வதும்/பட்டங்கள் பெறுவதும்
பாரினில் பெண்கள்/நடத்த வேண்டும்”

என்ற பாரதியின் கூற்றுக்கிணங்க, பெண்களுக்கென தோன்றிய சட்டங்களும், திட்டங்களும் இருந்தாலும், பெண்களின் பங்கு பெண்ணின மேம்பாட்டிற்கு உயிர்நாடியாக “இத்தகைய பெண்ணிய திட்டங்களும், சட்டங்களும் அமைகின்றன.

# "சுந்தர காண்டம்" புதினத்தில் பெண்ணியம்

*ச. மாலதி,* தமிழ் இலக்கியம் - முதுகலை நிறைவாண்டு,
அ.ப.ம. கல்லூரி, சின்னக்கலையம்புத்தூர், பழனி.

## முன்னுரை

பெண்ணியம் என்பது சமூக அக்கறையின் வெளிப்பாடு என்றாலும் ஆண்களின் அடிமைத்தளையிலிருந்து மீட்டு சமூகத்தில் ஆண்களுக்கு இணையாக மதிப்பினைப் பெற்றுத் தருவதே பெண்ணியத்தின் நோக்கமாக இருந்து வருகிறது. கம்பராமாயன கதாப்பாத்திரமான சீதையை தொன்மக் கூற்றினை எடுத்துக்கொண்டு இக்காலப் பெண்களின் நிலையை ஜெயகாந்தன் சுந்தரகாண்டம் புதினத்தில் கூறியுள்ள கருத்துக்களை வெளிக்கொணர்வதே இந்த ஆய்வுக்கட்டுரையின் நோக்கமாகும்.

## பெண்ணியம் வரையறை

பெண்ணியம் என்பதற்குப் பல விதமான விளக்கங்களை பெண்ணியலாளர்கள் முன் வைத்துள்ளனர், "பெண்ணியம் என்ற இயக்கமானது பெண்கள் தாமாக முடிவெடுத்து அவர்களின் விருப்பப்படி வாழ்க்கையை நடத்திச் செல்லும் ஒரு சமூகத்தை உருவாக்குவதாகும்"1. என்பர்"சுந்தர காண்டம்" புதினத்தில் *பெண்ணியம்*(இரா. பிரேமா பெண்ணியம் ப.12). பெண்ணியம் என்பது பெண்களின் எல்லாச் சிக்கல்களையும் புரிந்து கொண்டு அவற்றை நீக்க முயல்வதாகும். இப்புதினத்தில் புலப்படுத்தப்படும் பெண்ணியச் சிந்தனைகள்

முதலில் இக்கதை தொடங்கும் போதே "ஹே! சீதே, என்ற கம்பீரமான புருஹோத்தமனின் தீனமான பிளிறலாய்ச் சிதறுகிற எழுத்து..."2. என்று தொடங்குவது பெண்களை அதிரச் செய்வதாக உள்ளது. (ஜெயகாந்தன் சுந்தர காண்டம் ப. 1) . சீதை என்றால் எப்பொழுதும் சமுதாயத்தில் அடங்கி வாழ வேண்டும் என்ற நிலை மாறி இக்காலச் சீதைகளை எச்சரிக்கைப் படுத்தும் விதத்தில் இக்கதை படைக்கப்பட்டுள்ளது.

ஒரு பெண் தனியாக ஆணின் துணை இல்லாமல் வாழ்ந்து சமூகத்தில் தலை நிமிர்ந்து இருக்க முடியும். பெண் என்றால் காதல், குடும்பம், திருமணம் என்ற பந்தத்திற்குள் இல்லாமல் அவளாக சமூகத்தில் வாழ முடியும். ஆண்களுக்கு அடிமைப்பட்டு வாழ்வதை வெறுத்துத் துணிவுடனும் சமூகத்தின் மீது அக்கறையுடனும் வாழ்வதையே புதின ஆசிரியர் கூறுகிறார். தொன்ம சீதையிலிருந்து முற்றிலும் மாறுபட்டு அவளுக்குள் இருக்கும் உரிமையைக் கேட்பவளாக ஆசிரியர் இந்த சீதையைப் படைத்துள்ளார். திருமணம் அவளுடைய விருப்பம் இல்லாமல் நடைபெறுகிறது. மற்றவர்களுக்காக நடத்தப்பட்ட திருமணம் ஆனால் அவளுக்கு எந்த ஒரு விருப்பும் வெறுப்பும் இல்லாத மணமாக இருக்கிறது. திருமணம் நடைபெற்றாலும் கணவனிடம் உடலாலும் உள்ளத்தாலும், மாறுபட்ட குறிக்கோள் கொண்டு வாழும் பெண்ணாக சீத்தா இருக்கிறாள்.

## செல்வந்தர்களிடம் அடிமை நிலையில் பெண்கள்

சமூகத்தில் பெண்களை ஆண்கள் என்ற முதலாளித்துவம் அடிமைப்படுத்துகிறது. சீதாவை கல்யாணத்திற்கு முன்பே நான்கு இலட்ச ரூபாய் கொடுத்து வாங்கி விட்டேன். சுகுமார் என்ற செல்வந்தர் திமிர் கலந்து சொல்கிறான். தனது குடும்ப சூழ்நிலையை எண்ணி மறு பேச்சு பேசாமல் சீதா அமைதியாகிறாள். இருந்தாலும் தன் உரிமை இல்லாமல் தன்னை நெருங்க முடியாது என்று சபதம் செய்கிறாள். "ஆணுக்கு உழைப்பதற்காகவே - ஆணின் சுய நலத்திற்காகவே பெண் படைக்கப்பட்டாள்" என்கிறார் ஆசிரியர். (சரயா ராசகோபாலன் தமிழ்த்தென்றலும் பெண்மையும் - ப. 115)

"முதலாளிகள் தொழிலாளிகளை அடக்கி ஆள்வது போல் ஆண்மக்கள் பெண் மக்களை அடக்கி ஆண்டு வருகிறார்கள் என்கிறார். தங்களுக்கு ஊழியம் செய்யவே தொழிலாளர்களைக் கடவுள் படைத்தார் என்று முதலாளிகள் நினைப்பது போல் பெண்களைத் தங்களுக்கு ஊழியம் செய்யவே கடவுள் படைத்ததாக ஆண்கள் நினைக்கின்னறனர்" 4. பெண்களை அடிமைப்படுத்தி வாழ்வதையே ஆண்கள் குறிக்கோளாக இக்கூற்று உறுதிப்படுத்துகின்றது. (மேலது, ப. 115)

## பெண்ணின் மனம் த்ளராத உறுதிநிலை

ஆண்களை விடப் பெண்களுக்கு மன உறுதி அதிகம் என்பதை இப்புதினத்தில் காட்டப்பட்டுள்ளது. சீதா வாழ்வில் பல மாறுதல்கள் நடந்தாலும் எதையும் தன்னால் சாதிக்க இயலும் என்ற நம்பிக்கையுடன் வாழ்கிறாள். இவள் பார்வையில் கணவன் ஒரு இராவணனாகவே இருக்கிறான். என்ன வசதிகள் ஏற்படுத்திக் கொடுத்தாலும் கணவனின் விருப்பத்திற்கு இணங்காத மனஉறுதியை விட்டுக் கொடுக்காமல் வாழ்கிறாள்.பெண்களை எந்த வகையிலும் வளைத்து விடலாம் என்று விரும்பும் ஆண்கள் எண்ணத்திற்கு இடம் கொடுக்காமல் மன உறுதி தளராத நவீன பெண்ணியத்தின் முன்னோட்டமாக இப்புதினம் கூறுகிறது.

## பெண்ணின் சுதந்திர உணர்வு

சமூகத்தில் பெண் சுதந்திர உணர்வில் இருந்தாள் அவளுக்கு சமூகம் இடும் பெயர்களோ பல. ஆனாலும் சீதா எந்தப் பெயரும் வாங்காமல் சமூகத்தில் ஒரு பாதுகாப்பு என்ற வட்டத்தில் சுதந்திரப் பறவையாக செயல்படுகிறாள். கணவனுக்கே சவாலாக ஒரு பத்திரிக்கையில் உரிமையாளராகப் பொறுப்பேற்கிறாள். அந்தப்

பத்திரிக்கைக்கு "சுதந்தரி" என்று பெயர் சூட்டப்படுகின்றது. சுதந்தரி என்றால் சுதந்திர பெண் என்பது பொருள் ஆகும். இதிலிருந்து சீதா முழுமையாக சுகுமாரனிடமிருந்து விடுதமலை அடைந்து விட்டாள் என்றும் அவள் தனி வாழ்க்கையில் மகிழ்ச்சியுடனும் முழு உரிமையுடனும் வாழ்கிறாள் என்பதையும் ஆசிரியர் தெரிவிக்கின்றார்.

## பெண்களின் அவலநிலை

சமூகத்தில் பெண்ணை ஒரு உயிருள்ள ஜீவனாக நினைப்பதில்லை ஒரு பொருளாகவே கருதப்படுகின்றனர். பெண்களைப் போகப் பொருளாகவும், விற்பனைப் பொருளாகவும் சமுதாயத்திலுள்ள ஆண்கள் நினைக்கின்றனர். பெண்கள் கணவனைப் பிரிந்து வாழ்ந்தால் அவளுக்கு வாழா வெட்டி என்று பெயர் சூட்டப்படுகிறது.

"யாரு - அந்த வாழா வெட்டி சுசீலாவா" / என்று பெற்ற தந்தையே மகளின் தோழியை இழிவாகப் பேசுகிறார். (ஜெயகாந்தன் சுந்தரகாண்டம் - ப. 39)

பெண்ணைப் பிரிந்து வாழும் ஆண்களை சமுதாயம் சாடுவதில்லை. பெண்களுக்குப் பிடிக்காத போதும் கட்டாயத் திருமணம் நடத்தப்படுகின்றது. பெண்களை வீட்டு வேலைக்குச் சேர்த்துக் கொண்டு அவர்களைத் தங்களது இன்பத்திற்குப் பயன்படுத்தும் ஆண்களைப் பற்றி இப்புதினத்தில் ஆசிரியர் வெகுவாகச் சாடுகிறார். சமூகத்தில் பெண்களுக்கென தனி உணர்வுகள், நல்ல அறிவு, சிந்தனை என்று எதையும் பெறுவதை ஆண்கள் துளியும் விரும்பாமல் கீழ் நிலையில் இருக்க வேண்டும் என்றே விரும்புகின்றனர்.

## இன்றைய சீதைகளின் நிலை

பெண்கள் இன்று வரதட்சணை என்ற கொடுமையால் பெரும் அவதிப்படுகிறார்கள். இதனால் தான் கவிஞர் வைரமுத்து தனது கவிதையில் "இராமர்களுக்கு இன்று இரத்தமில்லை" என்ற தலைப்பில் பின்வருமாறு கூறியுள்ளார்.

இந்த சீதை / சிந்திக்கிறாள் / இந்த வரதட்சணை / வில்லை வளைப்பது யார்? / இராமர்களுக்கு இன்று இரத்தம் இல்லை (வைரமுத்து கவிதைகள் ப. 230)

சீதா படும் துன்பம் மட்டும் அல்லாமல் சீதாவின் தோழியான உரோமானியப் பெண் காத்ரீனாவுக்கும் சீதையின் கதையையும் அவற்றுள் சோகமான துயரங்களையும் எடுத்துக்கூறி ஆசிரியர் உலக அளவில் பெண்களின் உரிமையற்ற தாழ்ந்த நிலையை சித்தரிக்கப்படுகிறார். ஒரு பெண் இராமனில்லாது தனியாக வாழ முடியும் என்றும் விடுதலை பெற்று புரட்சிப் பெண்ணாக வாழ முடியும் என்றும் "சீதை" என்ற கதாபாத்திரம் உணர்த்துகின்றது. குடும்பத்தில் இருந்து கொண்டு பல்வேறு விதமான துன்பங்களுடன் மனம் புழுங்கி வாழ்வதைவிட குடும்பத்தை விட்டு வெளிவந்து தனியாக வாழ்வதே சிறந்தது. உயர்ந்தது.

## கற்புக் கோட்பாடு

கற்பு என்பது பல நூற்றாண்டுகளாகத் தொன்று தொட்டு வருவது ஆகும். எத்தனை விஞ்ஞான வளர்ச்சி ஏற்பட்டாலும் பெண்களுக்கு மட்டும் தான் கற்பு என்ற ஆணாதிக்கச் சமுதாயத்தில் வலியுறுத்தப்படுகிறது. ஆண்களுக்கு கற்பு வேண்டும் என்று எவரும் சொல்வதில்லை அன்று ராமன் சீதையைப் பார்த்து கற்பு நெறியை சோதிப்பதற்கு தீ குளிக்க வேண்டும் என்று சொன்னான். கௌதவ முனிவர் அகலியை கற்பு இழந்து விட்டவளாக சாபம் கொடுக்கிறார். எனவே காலம் காலமாகப் பெண்களுக்கு மட்டுமே கற்புநெறி வலியுறுத்தப்பட்டு வருகின்றது. சமூகத்தில் ஆண்களுக்கு கற்பு வேண்டும் என்று கூறும் பாரதியும்,

கற்பு நிலை என்று சொல்ல வந்தால் / இரு கட்சிக்கும் இதனைப் பொதுவில் வைப்போம் - என்கிறார்.

## குறிக்கோளுடன் திகழும் சீதா

சமூகத்தில் பிற ஆணுடன் பேசினால்கூட இணைத்துப் பேசுகின்றனர். ஆனால் சீதாவும் கிரிதரனும் நல்ல நண்பர்கள். சுகுமாரனுக்கு கிரிதரன் ஒரு வேலை இவள் நினைக்கும் ராமனோ? என்று பயம் ஏற்படுகிறது. இருந்தாலும் தெளிவாக குறிக்கோள் கொண்டு திகழ்கிறாள். "சமூகத்தில் உள்ள ஒவ்வொரு வர்க்கத்தைப் பற்றியும் ஜெயகாந்தன் கூறுகிறார். சில குறிக்கோள்களுடன் தம் வாழ்வை இணைத்துக் கொண்டு அதற்காகவே வாழும் பண்புடைய குறிக்கோள் மாந்தரையும் இன்றைய சமூக அமைப்பின் சிதைவுகளையும் ஜெயகாந்தன் கதை மாந்தர்களாகப் படைத்துள்ளார். (ம. திருமலை ஜெயகாந்தன் தகழி சிவசங்கர பிள்ளை நாவல்கள் ஒப்பாய்வு - ப. 133)

## தொகுப்புரை

சுந்தரகாண்டம் உணர்த்தும் பெண்ணிய சிந்தனைகள் சமுதாயத்தில் வாழ்கின்ற அனைத்துப் பிரிவினைச் சார்ந்த பெண்களுக்கும் எக்காலத்திற்கும் பொருந்துவதாக உள்ளது. தொன்மைச் சீதையிலிருந்து முற்றிலும் மாறுபட்டு தனது உரிமையை கேட்கும் பெண்ணாக இருக்கிறாள். செல்வந்தர்களிடம் சிக்கி வாழும் சீதாவாள் நிலைத்து உறுதியுடன் மனம் தளராமல் இறுதிவரை வாழ்வில் எத்தனை துன்பம் ஏற்பட்டாலும் விடாமல் வாழவேண்டும். கற்பு என்ற பெயரில் பெண்கள் சமுதாயத்திற்கு கட்டுப்பட்டு அடிமைகளாக வாழ முனையாமல் ஆண்களுக்கு இணையாக வாழ துணிச்சல் ஊட்டப்பட வேண்டும். பெண்களுக்கு ஏற்படும் அவல நிலையினையும், அடிமை நிலையினையும் முழுவதுமாக நீக்கி தங்களது உரிமைகளை தாங்களே எடுத்துக் கொண்டு மகிழ்ச்சியுடன் தனிவாழ்க்கை வாழவும் தயங்கக் கூடாது என்ற உந்து சக்தியை இப்புதினம் தருகிறது.

# தமிழ் இலக்கியங்களில் பெண்ணியச் சிந்தனைகள்

டாக்டர். *ந. மாணிக்கம்,* எம்.ஏ., எம்.பிஃல்., பி.எச்.டி.,தமிழ் விரிவுரையாளர்,

தேசியக் கல்லூரி, திருச்சிராப்பள்ளி - 1.

அண்மைக்காலத்து இலக்கிய ஆய்வாளர்களால் அதிகம் பேசப்படும் பொருள் பெண்ணியம் ஆகும். தமிழிலக்கியங்களில் ஆயிரக்கணக்கான ஆண்டுகளாகவே பெண்களைப் பற்றிய சிந்தனை இருந்து வந்திருக்கின்றது. பெண்ணியம் என்ற சொல் ஊங்ம்ண்ய்ண்ள்ம் என்ற ஆங்கில சொல்லின் தமிழாக்கம் ஆகும். பெண்களுடைய வாழக்கை முறையையும், சமுதாயத்தில் அவர்கள் பெறுகிற இடம், அவர்களுடைய கல்வி ஆற்றல், சமுதாயத்திற்கு அவர்கள் பயன்படும் பாங்கு, மாறிவரும் உலகச் சூழலில் அவர்கள் நின்று நிலைபெறும் விதம் ஆகியனவே பெண்ணியத்தின் கூறுபாடுகளாம்.

சங்க இலக்கியங்களில் பெண்களுக்கு கிடைத்திருக்கும் இடம் நிறைய விவாதங்களை எழுப்பியிருக்கிறது. ஒருவனுக்கு ஒருத்தி என்னும் சமூக வாழ்க்கை இல்லாத காலம் அது பரத்தமை என்பது சங்ககால இல்லற வாழ்வின் விளங்கிக் கொள்ள முடியாத ஒரு சிக்கலாக நிலவி வந்திருக்கிறது. தோழி, செவிலி ஆகியவர்களின் சமுதாய மதிப்பும், விழைவுக்குரியதாகவே அமைந்திருக்கிறது. மனைவியைக் கணவன் பிரிந்து செல்வது, அறுவகைப் பிரிவுகளில் பரத்தை மாட்டு பிரிதலே ஒரு வகையாக இருந்து இருக்கிறது என்பது அதிர்ச்சி தரத்தக்க செய்தியாகும்.

இதற்கு ஆய்வாளர்கள் அறிவுப்பூர்வமான ஒரு விளக்கத்தைத் தருகிறார்கள். சங்ககாலம் என்பதே வீரயுகம் எனப்படுகிறது. போர்கள் தொடர்ந்து நிகழ்ந்தன. போர்களில் பங்கெடுத்து உயிர்விடுகிறவர்கள் வாழ வயதிலிருந்த இளைஞர்களே ஆவர். எனவே அவர்களில் பெரும்பாலானவர்கள் போர்க்களங்களில் மாண்டு போயினர். பெண்களின் எண்ணிக்கை அதிகமாகவும், ஆண்கள் எண்ணிக்கை குறைவாகவுமான சமுதாயமாக சங்க கால சமுதாயம் விளங்கியது. இந்த சிக்கல்களுக்குத் தீர்வாக பரதால மணமும், பரத்தமை வாழ்க்கையும் அமைந்தன என்பதே ஆய்வாளர்களின் கணிப்பாகும்.

சங்க இலக்கியத்திலேயே ஏகபத்தினி விரதர்களாகப் பூதப் பாண்டியன், நலங்கிள்ளி ஆகியோர் விளங்கியதைப் புறநானூறு காட்டுகிறது.

"பல் சான்றீரே பல சான்றீரே
செல்கனச் சொல்லாது, ஒலிகென விலக்கும்,
பொல்லாச் சூழ்சிப் பல்சான்றீரே"

என்னும் பூதப்பாண்டியன் மனைவியின் கூற்றும்,

"பேரமர் உண்கண் இவளினும் பிரிக"

என்னும் நலங்கிள்ளியின் கூற்றும் சிறந்த ஆடவர்களாக அவர்களைக் காட்டுகின்றன.

திருக்குறள் தமிழக்கியங்களில் மிகவும் செம்மையானது ஆகும். பெண்ணைப் பற்றி வள்ளுவர் நிரம்பிப் பாராட்டிச் சொல்கிறார். ஆனால் அவரே "பெண் வழிச் சேரல்" என்னும் அதிகாரத்தையும் எழுதுகிறார். பெண்ணின் பேச்சைக் கேட்டு நடப்பவன், அந்தப் பெண்ணையும்விட இழிவானவன் ஆவான் என்று அவர்

குறிப்பிட்டுள்ளார். காலத்தின் கொடிய விலங்குகளை உடைத்துக் கொண்டு பரிபூரணமாக வெளிவருவது எவருக்கும் இயலாதது ஆகும். காம வசப்பட்டு பெண்ணுக்கு அடிமையாக நடப்பவனைக் கண்டிப்பதற்காகவே இந்த அதிகாரம் எழுதப்பட்டது என்று ஒரு சமாதனம் கூறப்படுகிறது. காப்பியங்களில் அக்கால மரபுக்கேற்ற வகையில் பெண் சித்தரிக்கப்படுகிறாள். கணவன் செய்த தவறுகளையெல்லாம் பொறுத்துக் கொண்ட கண்ணகி கணவனுடைய சாவுக்குக் காரணமான பாண்டிய மன்னனின் தவற்றைப் பொறுக்க முடியாமல் சினங்கொண்டு எழுகிறாள்.

இராமாயணத்தில் வரும் சீதையே கணவனுக்காக எல்லாத் தியாகத்தையும் செய்கிறாள். அயோத்தியைத் தாண்டுவதற்கு முன்னரே ஆரணியம் வந்துவிட்டதா என்று கேட்கிறாள். அவளே அக்னிப் பிரவேசத்தின் போது இராமனைப் பார்த்துக் கேட்கும் வினாக்கள் பெண்ணுரிமையின் எழுச்சியைக் காட்டுகின்றன. இராமன் சீதையைக் கண்டிப்பதாக எத்தனை பாடல்கள் உள்ளனவோ, அதே அளவு சீதை இராமனைக் கண்டிப்பதாகப் பாடல்களைக் கம்பர் எழுதியுள்ளார். மகாபாரதத்தில், சூதாட்டத்தில் தான் பணையப் பொருளாக வைக்கப்பட்டது பற்றி பாஞ்சாலி வாதிடுகிறாள். பெண்ணுரிமை இல்லாத காலத்தில் படைப்பாளிகள் தங்கள் சொந்த மானுடநேசத்தில் உணர்ந்த வரிகள் இவை.

பக்தி இலக்கியங்களில் பரம்பொருள் மையமாக்கப்பட்டதால் சமுதாயவியல் ஆய்வுகளில் நிரம்பச் சிக்கல் ஏற்படுகிறது. இயற்கை இறந்த நிகழச்சிகள் நிறைய வருவதால் அங்கு தர்க்கங்கள் செல்லுபடி ஆவதில்லை. சிற்றிலக்கியங்களில் பெண்ணுரிமை பெரிதாகச் சொல்லப்படவில்லை.

ஆங்கிலேய வரவால் இந்தியா அரசியல் ரீதியாக அடிமைப்பட்டது. ஆனால் சமுதாய விழிப்புணர்ச்சி, கல்வி மறுமலர்ச்சி, அறிவுப் பூர்வமான சிந்தனைகள் ஆகியவை அவர்களால் விளைந்ததை மறுக்கமுடியாது. பெண்ணியச் சிந்தனைகளில் புதிய பார்வையை அவர்கள் தந்தனர். "வேல்ஸ் இளவரசருக்கு வரவேற்பு", என்னும் கவிதையில் பாரதி இதைப்பாடுகிறார். வெள்ளையர் வருவதற்கு முன்னர் கணவன் மாண்டதும், உடன் கட்டை ஏறும் வழக்கம் இருந்தது. அதற்குச் சம்மதிக்காதப் பெண்களைக்கூட கட்டாயப்படுத்தி ஒழிக்கும் வழக்கம் நிலவியது. வெள்ளையர் வரவுக்குப் பின்னரே இத்தீமைகள் அகன்றன என்று பாரதி குறிப்பிடுகிறார்.

பாரதிதாசன் பெண்ணியச் சிந்தனைகளில் பாரதியை அடியொற்றி நடந்தார். கதையாசிரியர்களில் தி. ஜானகிராமன், புதுமைப்பித்தன், ஜெயகாந்தன் முதலானோர்கள் பெண்ணியச் சிந்தனைகளை முன்னெடுத்து சென்றார்கள்.

அறிவியல் வளர்ச்சியால் கண்டுபிடிக்கப்பட்ட தொலைக்காட்சி சாதனங்கள் பழைய பிற்போக்குத் தனங்களை நியாயப்படுத்தி மக்களிடையே பரப்புகின்றன என்பது அதிர்சியூட்டும் உண்மையாகும்.

# "சூரியனை விடிய வைப்போம்" கவிதையில் பெண்ணுலகச் சிந்தனை

*க. மீனா குமாரி,* இணைப் பேராசிரியர்-
ஸ்ரீ பராசக்தி மகளிர் கல்லூரி,குற்றாலம்.

இந்த நூற்றாண்டில் பல விந்தைகளும் வியப்புகளும் விஞ்ஞானத்தில் வெளிப்பாடாய் ஒரு புறம் வளர்ந்து கொண்டிருக்க, மறுபுறம் படித்த பெண்கள் படிப்பறிவில்லாத பெண்கள் என்ற இருதிறத்தாருக்குமே இன்றைய சமூகச் சூழலில் பலவித இடர்பாடுகளைச் சந்தித்து வருகிறார்கள். அறிவின் ஒளியால் அனைத்தையும் அறிந்து அளந்து அற்புதமாய் வாழ முடியுமென்ற நம்பிக்கையுடன் படித்து பதவி பெற்று, பணம் சம்பாதிக்கும் பெண்களின் வாழ்க்கையையும், அன்றாடங் காய்ச்சியாய் அறியாமையால் மூழ்கிக் கிடக்கும் பெண்களின் வாழ்க்கையையும் அலசி ஆராய்கின்ற சமூகச் சிந்தனை மிகுந்த ஒரு கதைக்கவிதையை ஆண்டாள் பிரியதர்ஷினி என்ற கவிஞர் சூரியனை விடியவைப்போம் என்ற தலைப்பில் உருவாக்கியுள்ளார். இவர்தம் கவிதையில் இன்றைய பெண்ணுலகின் வாழ்க்கைச் சிக்கல்களும் அச்சிக்கல்களுக்கு அவர் தரும் தீர்வுகளையும் கண்டறிவதாக இக்கட்டுரை அமைகிறது.

அறிவுப் பணியில் மேலோங்கி, சுயஉணர்வுடன் வாழ்வதோடு, சமூக உணர்வுடன் பிறர்வாழ்வுக்குத் துணையாக நிற்பதுமான பெரும் பணிக்குத் தன்னை அர்ப்பணித்துக் கொண்ட பேராசிரியை சரஸ்வதி. இவளே இந்த கதைக்கவிதையின் நாயகியாக அறிமுகமாகிறாள்.

"பிரச்சனைகளைச் சிறைப்படுத்தவும் கருகிக் கொண்டிருக்கும்

பண்பாட்டு வேர்களை வளப்படுத்தவும் மனிதத்தை

மனிதர்களில் விதைப்படுத்தவும் ஒரு கூட்டு முயற்சியே"

தன் கல்லூரி மாணவியர்களோடு சக்தி குழுவொன்று அமைத்து கிராமப்புறம் ஒன்றைத் தத்தெடுத்து அதன் வாழ்வை வளமாக்கி பணிசெய்து வருகிறாள். பெண்களால் பெண்களுக்காக பெண்களே சுயகர்ப்பம் சுமந்த விடியலை விளக்கி 21ம் நூற்றாண்டின் சாதுரியப் பெண்களுக்கு நிலவுமுகம் தேவையில்லை என்று விழிப்புணர்வு ஊட்டி நம் மனசை சமூகத்தின் மனசை பிளாஸ்டிக் சர்ஜரி செய்து புதிய பெண்முகம் படைக்கும் ஆயுதஎழுத்தாகத் தன் மாணவ சக்திக்குழுவினரின் செயல்பாடுகள் அமைய வழிகாட்டுகிறாள் பேராசிரியை சரஸ்வதி.

உடன் பணியாற்றும் படிப்பறிவில் தேர்ந்த பேராசிரியப் பெண்களின் ஒத்துழைப்பையும் சரஸ்வதி நாடும் பொழுது, முனைந்து பெற்ற முனைவர் பட்டம் கூட விஜயா என்ற உறவு பயத்தை உதறிவிடாத பேராசிரியை தன் மாமனார், மாமியார் புருசன் என்று சகலரையும் தன் சமையல் பணியால் நிறைவு செய்ய வேண்டியவளாய், பிள்ளையில்லா மலடி என்ற பெயரைச் சுமந்தவளாய் , தன் வாழக்கையை தக்கவைத்துக்கொள்ள வேண்டியிருக்கிறாள். சமூகப் பணியில் இடம்பெறத் தன்னால் இயலாது என்று ஒதுங்கிவிடுகிறாள். மேலும் குழந்தைக் கனவை கற்பமாய்ச் சுமக்கும் விஜயரின் வாழ்வு கணவனின் இரண்டாம்தார மணவாழ்க்கையில் எந்த நேரம் சரியுமோ என்ற ஏக்கம் உணர்வுடன் தடுமாறுகிறது. கால் ஊனமான பேராசிரியை பானுமதி, மணவாழ்க்கையை எதிர்பார்த்து ஊனத்தால் ஒதுக்கப்பட்டவளாய் ஏங்கி நிற்கும் வேதனையில் சமூக நலம் கருதத் தனக்கு நேரம் இல்லாதவளாக ஒதுங்கிவிடுகிறாள். எனவே சமூக யுத்தத்தில் ஒற்றை ஆயாய் ஒற்றை வாளாய், தனிமைக் கேடயம் தாங்கித்தன் பணிகளைத் தொடர்கிறாள் சரஸ்வதி.

"புத்தக வீணை சுமக்கும் கவியுக சரஸ்வதிகள்

சுவாசக் காற்றிலும் கல்வி விதை விதைப்பவர்கள் தான் எனினும் அறிவார்ந்த பேச்சும் திறமையும் நிறைந்த பல பெண்களின் வாழ்வும், பலமும், அவரவர் சார்ந்த குடும்பம் என்ற சூழலில் மிகுந்த அக்கறையுடன் சித்தரிக்கிறார். கவிஞர் ஆண்டாதள் பிரியதர்ஷினி

"படிப்பும் பட்டமும் பொருளாதாரச் சுதந்திரமும்

பெண்ணின் சுாசக் காற்றில் சுதந்திரத்தை விதைக்கவில்லை

அவர்களுக்கான காற்றில் மட்டும்

கந்தகமும் கரியமில வாயுவும் நெருப்புக் கங்குகளும்

வெறுப்புகளும்" நிறைந்த வேதனை வாழ்க்கையை வாழ்ந்தாக வேண்டிய நிர்பந்தத்தில் பெண்கள் இருப்பதைக் காணலாம்.

ஓம் சக்தி கவிஞரின் "சூரியனை விடிய வைப்போம்" என்ற கவிதை கதை போன்ற வடிவிலமைந்துள்ளது. இந்த படைப்பைத்தான் உருவாக்கியது குறித்த ஓர் அறிமுகமாக "பெண்ணுக்கு எழுத்து அலங்காரமல்ல. அலங்கோலம் ஆக்கப்பட்ட வாழ்வின் பிரதிபலிப்பு, எழுத்து சுகத்துக்காக எழுதாமல் வலி நிவாரணியாக எழுதுகிறாள். நாகரீகத்திற்காக எழுதாமல் யுகயுகமாய்ப் பெண்ணைத் தின்னும் சமூகத்தை மாற்றாதா என்ற ஆதங்கத்தில் எழுதுகிறாள். அவளுடைய எழுத்து மரணித்த மனசு, மரணித்த சுபம், மரணித்த வாழ்க்கையை என்ற தனது

வார்த்தைகளை மீள் கண்டுபிடிப்பு செய்கிறது. " என்ற தன் படைப்புப்பணி குறித்த விளக்கவுரையுடன் தனது படைப்பை அறிமுகம் செய்கிறார் கவிஞர் ஆண்டாள் பிரியதர்ஷினி. பெண்ணுலகம் இன்றைய நடைமுறை வாழ்வில் சந்தித்து வருகின்ற பிரச்சனைகளையும், அப்பிரச்சனைகளால் சிதைந்து போகின்றவர்களையும், அதை எதிர்த்து நின்று போராடி புதுவாழ்வை புது நெறியை தேடி வாழ்க்கையை அமைத்துக் கொள்ளும் ஆற்றலுள்ளவர்களையும் அடையாளம் காட்டுகிற நம்பிக்கையூட்டல் மிகுந்த இலக்கியமாக இக்கதைக்கவிதை அமைந்துள்ளதென்பது குறிப்பிடத்தக்கது.

இவரது கதைக் கவிதையில் இன்றைய வாழ்க்கைச் சூழலில் பெண்ணுலகம் சந்தித்து வருகின்ற துயரங்களாக இரண்டு செய்திகள் முன்வைக்கப்படுகின்றன.

1. ஆணாதிக்கத்தால் அவலமுறும் பெண்கள்

2. பொருளாதாரச் சிக்கலில் புதையும் பெண்கள்

1. ஆணாதிக்கத்தால் அவலமுறும் நகர்புற பெண்களின் வாழ்க்கையை மூன்று கல்லூரிப் பேராசிரியப் பெண்களின் வாழ்க்கைவழி தெளிவுபடுத்துகிறார் கவிஞர். "பெண்குழந்தை போதாது, அடுத்து ஆண்குழந்தை ஒன்றைப் பெற்றுக் கொடு" என்று மனைவியை நிர்பந்திக்கும் கணவன், சுற்றி சுற்றித் காதலித்த காலத்தில் காட்டாத பத்துதலை இராவணமுகம் காட்டும் இயல்புகண்டு. மனம் துடித்து

"குழந்தையில் ஆண் பெண் என்ற வேறுபாடு ஏன்?
ஆண்குழந்தை பெண்குழந்தை பால்வேறுபாடு பாராமல்
தாய்ப்பால் சமமாய்த்தான் சுரக்கிறது ஆண்பால் பெண்பால்
வேறுபாட்டுக்கு ஆணின் ஜீவ அணுவே காரணியாய்
இருக்கிறது உங்களின் வித்தியாச உற்பத்திக்கு என்னைக்
குற்றவாளிக் கூண்டில் அடைப்பது நியாயாமா? என்று துணிவுடன் கேட்கிறாள் பேராசிரியை சரஸ்வதி.

குழந்தையே பெற்றுத்தராத மலடியென்று பெயர் சூட்டி, அவளின் உடன்பிறந்த தங்கையை மறுமணம் செய்யத் தன்னை சம்மதிக்க வற்புறுத்தும் கணவனும் குடும்பமும் தருகின்ற துயரங்களால் களைத்துப் போகிறாள் மற்றொரு பேராசிரியை விஜயா

மகப்பேறு அற்ற நிலைக்குத் தான் காரணமல்ல என்பதைத் தெளிவுபடுத்தி தன் கணவனின் மலட்டுத்தனத்தைச் சுட்டிக்காட்டிய செயலால் கணவனோடு மாமனும் மாமியும் சேர்ந்து கணவன் குறையை காட்டிக் கொடுக்கின்ற உன் உறவு தேவையில்லை என்று துரத்தியடிக்கும்போது, துடித்துப் போகிறாள்.

"பெண்ணென்ன காய்கறியா குறை கண்டால் திருப்பித்தர?
பெண்ணென்ன நுகர்பொருளா பயன்படுத்தி தூக்கிப்போட?
பெண்ணென்ன கால்செருப்பா தேய்த்துவிட்டுத் தள்ளிப்போட?"

என்று துணிந்து கேள்விகேட்டவளின் வாழ்வு முடிக்க சிலந்திவலையாகச் சதிவலை பின்னி மஞ்சள் கிழங்காய் விளங்கிய மங்கலப் பெண் கழுத்திலிருந்து கால் நுனிவரைக்கும் நெருப்புச் சர்வாதிகாரியின் எரிப்பு ஊர்வலம் நடத்த ஏற்பாடு செய்தனர். உயிரோடு தன்னை எரிக்க முனைந்தவர்களைத் தன் உயிர்வாழ்வின் முடிவு நேரத்தில் தன் முடிவுக்குக் காரணமானவர்களைத் தெளிவாக அடையாளம் காட்டுகிறாள்.

"நெருப்பை நான் பற்ற வைக்கவில்லை அதுவும் என்னைப்
பற்றவில்லை மனைவியாய்ப் பற்றுவைத்த இந்தக்
கைதான் மரணத்துக்கும் பற்று வைத்தது சிதை நெருப்பை
உயிரோடு பற்ற வைத்தது"

என்ற உண்மையைச் சொல்லி உயிர் முடிக்கிறாள் விஜயா.

தன் கால் ஊனத்தைக் காரணம்காட்டி, ஊனப்பட்ட ஆண்களாலும் ஊதாசீனம் செய்யப்பட்டு, முதிர்கன்னியாய், மணவாழ்வின் நாளுக்காய் காத்து நிற்கிறாள் மற்றொரு பேராசிரியை, "மனித வாழ்வில் கிறுக்கல் ஆணவத்தின் பெருக்கல் குடும்பத்தாரின் மனதைச் சறுக்களால் அறிவுத்திறமிக்க பெண்ணொருத்தியின் அன்புள்ளம் அலட்சியப்படுத்தப்படுகின்றது. ஒவ்வொரு பெண்பார்க்கும் படலத்திலும் உடலழகைக் கோடிக் கண்களுக்குப் படையலாக்கும் அழகிப் போட்டிக்கும் பெண்பார்க்கும் படலத்துக்கும் வித்தியாச விகிதம் குறைவுதான் என்றும், அடுத்த நூற்றாண்டிலாவது பெண்பார்க்கும் படலம் மண்முடிப்போகவேண்டும் என்று குமுறுகிறாள் பேராசிரியர் பானுமதி"

இவளின் குமுறல் துயர்கண்டு துடிதுடித்த போலீஸ் தோழி ஷ்யாமா, "ஆண் என்னும் பௌதீக உருவத்திற்கு நம் சமூக அமைப்பு தரும் ராஜ உபச்சாரம் ஏராளம். பல லட்சங்களை வரதட்சணையாக கொடுத்து கலயாண கடன்பட்டுச் சந்தனமாய்க் கரைத்துச் சாக்கடையில் ஊற்ற வேண்டாம்" என்று தேறுதலும் தெளிவும் தந்து ஊக்கப்படுத்துகிறாள். எனினும் மண வாழ்க்கையில்லாத தன் வாழ்வுதான் பிறந்த குடும்பத்திற்கும் சுமையாக இருப்பதை உணர்ந்து அழும்போது தோழி ஷ்யாமா,

உன் வேலைதான் முணுமுணுக்காத துணுக்குத் துணைவன்
சம்பளம்தான் கண்ணீர் கரைக்கும் களிப்பு இறைவன்"

என்று தேற்றுகிறாள். மேலும் புருசன் என்னும் பொன்விலங்கை, மணாளன் என்னும் முள்கிரீடத்தை

கணவன் என்னும் சந்தேகச் சுமையைச் சுமக்காமல்
"பெண்களாய்ச் சேர்ந்து புது உலகம் படைப்போம்
என்று புது வழி காட்டுகிறாள்.

மேலும்

"ஆண் என்பவன் ஆக்ஸிஜன் இல்லை
அவன் இல்லாமலும் பெண் சுவாசிக்கலாம்"
என்பதையும் தெளிவுபடுத்துகிறாள்.

மேற்கண்ட மூன்று படித்த அறிவுநிலை மேலோங்கிய பெண்களின் வாழ்வும், ஆண்களின் சுயநலம் மிகுந்த அதிகாரப் பேச்சினாலும் செயல்களாலும் உள்ளமும் சுயநலம் மிகுந்த அதிகாரப் பேச்சினாலும் செயல்களாலும் உள்ளமும் உயிரும் துடிக்க உணவு கலங்கி நிற்கும் அவலத்தை கவிஞர் எடுத்துரைக்கக் காணலாம்.

2. கிராமப்புறங்களில் சுயமாய் சிந்திக்கவும், பேசவும், வாழவும் தெரியாத கிராமப்புறத்துப் பெண்கள் பொருளாதாரச் சிக்கலுக்கு ஈடுகொடுக்க இயலாமல் தவித்து தளர்ந்தழியும் வாழ்வையும் கவிஞர் சித்தரிக்கின்றார். எதிர்காலத்தில் சீர்செனத்தியென்று தன் பெண்ணின் வாழ்வு சீரழிய வேண்டாமென்று, பிறக்கும் ஒவ்வொரு பெண்குழந்தையையும் கிராமத்து ஏழைத்தாய்மார்கள் கள்ளிப்பால் கொடுக்கும் கொடுமை சேலம், தர்மபுரி, தேனி மாவட்டத்துப் பகுதிகளில் மிகுந்திருப்பதைக் கவிஞர் சுட்டுகிறார்.

"தன் வயிற்றில் உதித்த குஞ்சு சூரியனை
ஈரத்துணியால் தலையோடு காலாய் போர்த்தி வைக்கோல் போரில் புதைத்து வைக்கும் சோகங்கள்"
பொருளாதாரச் சிக்கலால் தொடரும் கதையாகி வருவதை கவிஞர் தெளிவுபடுத்துகிறார்.

பெண் சிசுவை கண்மூட வைக்கும் கொடுமை வேண்டாமென்று அறிவுறுத்தும் வகையில், வீதி நாடகம். மேடைப்பேச்சு, அறிவுரையென்று சகலவித தொல்லையும் கிராமத்து வீதிகளில் விதைத்த போதிலும்

"லட்சிய உச்சி நோக்கு ஒருபடி ஏறுவதற்குள் ஓராயிரம் சறுக்கல்
பிரச்சினையின் பெருக்கல் தோல்வியின் வகுத்தல் வாழ்நாளில்
கழித்தல் வருத்தத்தின் காட்டலாய்"
நாள்தோறும் பெருகிவரும் அவலம் கண்டு வருந்துகிறாள் பேராசிரியை சரஸ்வதி. மேலும்
பெண் குழந்தைகளை மண்ணுக்குள் நட்டு நட்டு இன்னும்
கொஞ்ச காலத்தில் மண்ணுக்கும் கூடப் பெண்சாயல் வந்து விடுமோ
என்று வேதனைப்படுகிறாள். ஏழை கிராமத்துத் தாய் சங்கரம்மா சொல்லுகின்றாள்
"கஞ்சியப் பங்கு வைக்கலாம் கஷ்டத்தைப் பங்கு
வைக்கணுமா?
பத்துப் பைசா சம்பாதிக்கப் பத்து நாளு குட்டிக்கரணம்
போடறேன் ஒருவாய்க் கஞ்சி குடிக்க நூறுநாளா பட்டினியைக்
குடிக்கிறேன்"

என்று வறுமையில் பிறக்கும் பெண் குழந்தைக்கு இங்கே வாழ்விடம் தர வழியில்லை என்பதைத் தெளிவுபடுத்துகிறாள் ஏழைத்தாய்.பொருளாதாரத் துயரங்களால் தொடரும் கிராமத்துப்புறப்பெண்களின் அவலமான வாழ்க்கையைத் தவணைமுறை சந்திப்புகளால் பேச்சுக்களால் ஒருபோதும் திருத்த முடியாது

"இவர்களின் பிரச்சனை தீர்க்க நிரந்தர மாருதலாக
வலதீர்க்க வேதனை தீர்க்க நிரந்தர நிவாரணியாய் வசந்த
வார்த்தைப் பூச வேண்டும் இந்த மண்தான் என் ஆன்மா இந்த மக்கள் தான் குழந்தைகள்"

என்ற தூய தொண்டுணர்வுடன் ஒவ்வொரு நல்ல உள்ளமும் முன்வந்தால் மட்டுமே மாற்றமுண்டு என்பதைப் பேராசிரியை சரஸ்வதியின் செயல்மூலம் தெளிவுபடுத்துகின்றார் கவிஞர். மேலும் தம் கதைக்கவிதையின் முடிவுரையாக

"ஆணாதிக்க கருமை விலக்கிப் பெண் உயிரை ஒளிர
வைப்போம் அறியாமை மேகத்தில் இருண்டிருக்கும்
பெண் சூரியனை விடிய வைப்போம்"

என்ற உறுதிமொழியுடன் பெண் பிறவியைக் கலவி உளியால் செதுக்கும் நிலை ஒதுக்கிக் கல்வி உளியால் செதுக்க வேண்டும். அப்போதுதான் பெண்ணுலகம் என்னும் சூரியனின் விடியல் ஒளி அறிவின் வழியாய் உலகம் அறிய உயரும் என்பதையும் தமது கவிதைப் படைப்பின் வழி கவிஞர் ஆண்டாள் பிரியதர்ஷினி தெளிவுபடுத்தியுள்ளமை குறிப்பிடத்தக்கது.

## ஜீவஜோதி வழக்கும் தமிழ் இதழ்களும் ஆய்வுக் கட்டுரை

*கோ. முத்துராஜ்* எம்.ஏ., ஆய்வாளர்,
மனோன்மணீயம் சுந்தரனார் பல்கலைக்கழகம்.

மக்கள் தகவல் தொடர்பில், இதழ்கள் முக்கிய இடத்தைப் பெறுகின்றன. பத்திரிக்கைத் துறை மக்களுக்குச் செய்திகளைத் தெரிவிப்பதையோ, கற்பிப்பதையோ மட்டும் செய்வதில்லை. பொதுப் பணிகள் கண்காணிப்பாளனாகவும், மக்கள் உரிமைகளின் பாதுகாவலனாகவும் செயல்படுகின்றது. பொது மக்களின் கருத்துக்களை உருவாக்கவோ, மாற்றவோ வல்ல சக்தி கொண்டது.

மக்களாட்சியின் காவல்நாய் , அரசின் நான்காம் தூண் , பத்திரிக்கையும் வாக்குச்சீட்டும் மக்களாட்சியில் இரட்டைக் குழாய் துப்பாக்கி என்றெல்லாம் சொல்லப்படும் இதழ்கள், சில சமயங்களில் இதழியல் கோட்பாட்டிற்கு மாறாகச் செயல்படக்கூடிய சூழல் ஏற்படுகிறது. இச்சூழலில் அவை எவ்வாறு நிகழ்வின் போக்கிலும், மக்களின் மனநிலையிலும் மாற்றத்தை உண்டுபண்ண முயல்கின்றன என்பதனை இக்கட்டுரை ஆராய்கின்றது.

இவ்வாறு வெளியிடப்படும் செய்திகள் எவ்றாறு இதழியல் கோட்பாட்டினை விட்டு விலகிச் செல்கின்றன. அவ்வாறு விலகிச் செல்லக் காரணங்கள் யாவை என்பதனையும் இக்கட்டுரை ஆராய்கின்றது.

### இவ்வாய்வுக்கான தரவுகள் :

ஜீவஜோதி வழக்கு பற்றி தினசரிகளாக தினமலர், தினத்தந்தி, மாலைமலர், மாலைமுரசு, கதிரவன், தினமணி, புலனாய்வு இதழ்களான ஜூனியர் விகடன், நக்கீரன், குமுதம் ரிப்போர்ட்டர், தமிழன் எக்ஸ்பிரஸ், நெற்றிக்கண், பகுத்தறிவு இதழ்களான நந்தன், விளக்கு போன்ற இதழ்கள் நவம்பர் 20 முதல் டிச.31 (2001) வரையிலானவை ஆராயப்படுகிறது. அதாவது இச்செய்திகளுக்கு கொடுக்கும் பக்க அளவுகள், தலைப்புகள், செய்திகளின் போக்குகள், பேட்டிகள், புகைப்படங்கள் போன்றவற்றின் மூலம் எவ்வாறு இச்செய்தியினை அவை கொடுக்கின்றனர் என்பதனை ஆராயலாம்.

இதழியல் கோட்பாடுகளுக்காக Journalism Today - Navin chandra - (1997) என்ற ஆங்கில நூலும், இதழியல் - இரா. கோதண்டபாணி - (1980), இதழியல் கலை - மா.பா.குருசாமி - (1982) என்ற இரு தமிழ் நூல்களும், ஆக மொத்தம் மூன்று நூல்களில் உள்ள இதழியல் கோட்பாடுகள் இங்கே எடுத்தாளப்பட்டுள்ளன.

### இதழியல் கோட்பாடு ஓர் அறிமுகம்:

செய்தி இதழ்கள் எவ்வகையான கோட்பாடுகளைப் பின்பற்ற வேண்டும் என்பதைப் பல்வேறு நாடுகளும் தங்களுக்குள் வகுத்துள்ளன.

செய்தித்தாள் ஆசிரியர்களின் அமெரிக்கச் சங்கம் 1923-ம் ஆண்டிலேயே சில இதழியல் விதிகளை உருவாக்கித் தந்திருக்கிறது. இவற்றோடு அந்தந்த நாடுகளின் பத்திரிகைச் சங்கங்கள் சில விதிகளையும் சேர்த்து இதழ்களுக்குக் கட்டுப்பாட்டை விதிக்கின்றன (மா.பா.குருசாமி - 1988. ப.12)

இதுபோல் நம் நாட்டிலும் அமெரிக்கச் சங்கத்தின் விதிகளோடு இந்திய பத்திரிகைச் சம்மேளனமும் சில கோட்பாடுகளை உருவாக்கித் தந்திருக்கின்றன. இக்கோட்பாடுகளைத் தான் இவ்வழக்கில் பொருத்தி ஆய்வு செய்வதே இக்கட்டுரையின் நோக்கம்.

### ஜீவஜோதி வழக்கு ஓர் அறிமுகம்:

ஜீவஜோதி - சாந்தக்குமார் ஆகிய இருவரும காதலித்து திருமணம் செய்து கொண்ட இளம் தம்பதிகள். இவர்கள் சென்னையில் தனியார் டிராவல் ஏஜென்சி நடத்தி வருகின்றனர்.

ஜீவஜோதியை சென்னை சரவணபவன் ஹோட்டல் அதிபர் ராஜகோபாலன் கடத்திச் சென்று மூன்றாவது மனைவியாக்க முயன்றார் என ஒரு வழக்கும், இதற்கு தடையாக இருந்த அவரின் கணவரைத் தன் அடியாட்கள் கொண்டு கொலை செய்தார் என ஒரு வழக்கினையும் ஜீவஜோதி தரப்பினர் கொடுத்து உள்ளனர்.

ஜீவஜோதியின் தந்தை சரவணபவன் தி.நகர் கிளையில் மேனேஜராக வேலை செய்தவர் என்பதோடு, இவ்வழக்கிற்கு முன்பே இவ்விரு குடும்பங்கள் தங்களுக்குள்ளேயே பரஸ்பர உதவிகளை பரிமாறிக் கொண்டிருந்திருக்கின்றனர் என்பது கடந்த காலம்.

**பக்க அளவுகளில் இவ்வழக்கு:**

செய்தித்தாளின் நிர்வாக ஆசிரியர் செய்தித்தாளின் பக்க அமைப்பு எப்படி இருக்க வேண்டுமெனத் தீர்மானிக்கின்றார். ஆனால் அவருக்கு வழிகாட்டும் வகையில் செய்தி ஆசிரியர் முதலில் மாதிரிப் பக்கங்களை உருவாக்குகின்றார். அவற்றின் அடிப்படையில் செய்தித்தாளின் பக்கங்களை உருவாக்கவும், வடிவத்தை அமைக்கவும் செய்கின்றனர்.

ஒரு செய்தித்தாளைப் பார்க்கின்ற, புரட்டுகின்ற வாசகர்களின் பார்வையில் முக்கியமான பார்வைபடும் இடங்களில் வாசர்கள் அனைவரும் படிக்க வேண்டிய செய்திகளை வெளியிட வேண்டும். இயல்பாக செய்தியாளரின் பார்வை படாத இடங்களில் முக்கியமற்ற, வாசகர்கள் படிக்கக் கூடாத செய்திகளை வெளியிடலாம். (Journalism Today - Navin chandra - 1997 Pg.180)

இச்செய்தியினை முதன் முதலில் பிரசுரித்த தினமலரில், மிக முக்கியச் செய்திகளுக்கு இடமளிக்கும் முன் பக்கத்தின் இடது ஓரத்தில் ஜீவ ஜோதியின் எண்ணபடத்தை (இப்படம் அவர் மீது ஓர் இரக்க உணர்வை ஏற்படுத்துவது போர் இருந்தது. நீள, அகல முறையை மூன்று பத்தி அளவில் பரிவு செய்வதோ, ஒரு பத்தி அளவு சுமார் எட்டு பத்தி அளவே பத்திரிக்கையின் சராசரி நீளமாகும்). நான்காம் பக்கம் முழுவதும் இதற்காக ஒதுக்கியதோடு அல்லாமல் செய்திகளாகவும் மற்ற பக்கங்களிலும் இவ்வழக்கு பற்றிய செய்திகள் வரத் தவறவில்லை.

பத்திரிக்கையில் ஒரு மில்லிமீட்டர் பகுதியின் முக்கியம் அறிந்தவர்களுக்கு இச்செய்தி வியப்பை ஏற்படுத்தும். ஏனெனில் கடத்தப்பட்டவரைப் போல அறிமுகச் செய்திகளுக்கு தபால்தலை, பாஸ்போர்ட் அளவிலான கருப்பு, வெள்ளை புகைப்படமே போதுமானதாக விதிகளிருக்க (இரா. கோதண்டபாணி 1980 ப.98) இவர்கள் வண்ணத்துடன் உணர்வையும் வெளிப்படுத்துவது போல புகைபடத்தைப் பயன்படுத்தியுள்ளார். ஆராய்ச்சிக் கட்டுரைகள் போன்ற முக்கிய விவாதத்திற்காக ஒதுக்கும் நான்காம் பக்கம் முழுவதும் இச்செய்திகளுக்காக இவர்கள் ஒதுக்கியிருந்தனர். இவ்வாறு இவர்கள் விதிகளுக்கு முரணாக நடப்பது ஏதேனும் உள் நோக்கம் இருக்கக்கூடும் என்ற ஐயத்தை ஏற்படுத்துகிறது.

தினமணியில் கடத்தல் சம்பவம் தெரிந்தவுடன் நீள, அகலத்தில் இரு, மூன்று பத்தி அளவில் அதாவது தினமலரில் ஜீவஜோதியின் புகைப்படத்திற்கு கொடுத்த அளவில் பத்திரிக்கைகளின் குருட்டுப் பக்கங்கள் என இதழாளர்களால் (Journalism Today - Navin chandra - 1997 ஊஆ.183)அழைக்கப்படும் ஆறு, எட்டு, ஒன்பது போன்ற பக்கங்களில் வலது ஓரத்தில் இச்செய்திகளை வெளியிட்டிருந்தன. அதோடு வழக்கில் சில திருப்பங்கள் ஏற்படும்போதும் அதாவது சாந்தக்குமார் கொலை செய்யப்பட்டது, ஓட்டல் அதிபருக்கு ஜாமீன் மறுத்தது டேனியல் பிடிப்பட்டது தினமணி நவ. (22,26,28) டிச.(7,12) போன்ற இவ்வழக்கில் ஏற்பட்ட மாற்றங்களில் போதும் முதன்முதலில் இச்செய்திகளுக்குக் கொடுத்த முக்கியத்துவத்தையே இறுதிவரையும் இந்நாளிதழ் கொடுத்து வந்தன.

இவ்வழக்கு நவம்பர் 22-ம் தேதியே எல்லா இதழ்களிலும் விமர்சனங்களோடு செய்திகள் பிரசுரமாகிக் கொண்டிருக்கும் வேளை. தினத்தந்தி நவ.27-ல் விரிவான செய்திகள் இல்லாமல் அதாவது ராஜகோபாலன் மனு தள்ளுபடி என்று தலைப்பிட்டு முதல் நாள் செய்திகளை இதுபற்றி முன்பே இந்நாளிதழில் செய்திகள் வந்தது போல் செய்திகளை வெளியிட்டிருந்தனர்.

தினத்தந்தி மட்டுமல்லாமல், இந்நிறுவன இதழ்களான மாலைமலர், மாலைமுரசு, கதிரவன் போன்றவைகளும் தினத்தந்தியை வழிமொழிந்திருக்கின்றன.

தினமலர் இச்செய்தியை புலனாய்வு செய்து முதலில் தருகிறது. அதனை அடுத்து உடனடியாக வெளியிட்ட நாளிதழ் தினமணி, ஆனால் உடனுக்குடன் வட்டாரச் செய்திகளை வெளியிடும் தினத்தந்தியும் அதன் குழுவினரும் தாமதமாகவும், சிறிய அளவிலும் வெளியிட்டுள்ளன. இவ்வாறு தேர்வு செய்து வெளியிட்டதில் உள்நோக்கம் இருக்கும் என்பது எளிதில் விளங்கக்கூடியதே.

புலனாய்வு இதழ்களும் தாங்களுக்குள் போட்டியிட்டுக் கொண்டு இச்செய்திகளுக்கு முக்கியத்துவம் கொடுத்துள்ளனர். இதில் அதிகபக்கங்கள் இச்செய்திகளுக்கு ஒதுக்கியவை என்ற வரிசைப்படுத்தினால் ஜுனியர் விகடன், நக்கீரன், குமுதம் ரிப்போர்ட்டர். தமிழன் எக்ஸ்பிரஸ், நெற்றிக்கண் என்று பட்டியலிடலாம்.

நெற்றிக்கண்ணில் ராஜகோபாலன் மகன் சரவணன் அவர்களின் பேட்டி மட்டும் டிசம்பரின் இறுதியில் (டிசம்பர் 27) வெளியிட்டிருந்தார். இதில் இந்த ஒரு செய்தி மட்டும் தான். நக்கீரனில் செய்திகளோடு ஒரு அதிபரின்

கதை என்று நடுப்பக்கத்தில் தொடர்ந்து நான்கு இதழ்களில் செய்திகள் வெளியிட்டனர்.

பகுத்தறிவு இதழ்களான நந்தன், விளக்கு போன்றவை இச்செய்திகளுக்கு முக்கியத்துவம் கொடுத்துள்ளனர். அதிலும் பக்க அளவில் நந்தனே முதலிடத்துள்ளது.

## தலைப்புகளில் இவ்வழக்கு:

பொதுவாக நாளிதழ்கில்ல செய்திகளுக்குத் தலைப்பிடும் பணியை செய்திகளைச் செப்பனிடுகின்ற துணையாசிரியர்களே செய்கின்றனர்.

செய்தித் தலைப்பு வாசகர்களுக்கு செய்தியின் சாரத்தைக் கூறவேண்டும் (மா.பா.குருசாமி 1988 ப.23)

ஒரு செய்தியைப் பற்றி ஒருவர் இன்னொருவரிடம் முதலில் எதைச் சொல்கிறாரோ அதைத்தான் தலைப்பில் கொண்டு வரவேண்டும். (சி.பா. ஆதித்தனார் 1978 ப.10)

தலைப்பு ஒரு கருத்தை வலியுறுத்துவதாக இருக்க வேண்டும். பலவற்றைக் கூறி வாசகர்களைக் குழப்பக்கூடாது.(Journalism Today - Navin chandra - 1997 Pg.183)

இதன் அடிப்படையில் தினமலரில் முதல் பக்கத்தில் அதிபரின் அதிரடி கடத்தல் (நவ.20) என்பதில் தொடங்க, கிருத்திகாவை அள்ளியது போலீஸ் (நவ.22) அண்ணாச்சிக்கு சிறையில் கஞ்சி (நவ.26) போலீஸ் காவல் வேண்டாம் அண்ணாச்சி கதறல் (நவ.28) எனச் செய்தி வெளியிட்டிருந்தனர்.

செய்திகளின் சாரத்தைத் தலைப்பு கூறவேண்டும் என்று விதியிருக்க, அண்ணாச்சிக்கு சிறையில் கஞ்சி என்பது ஒரு செய்தி கூட அல்ல, ஏனெனில் சிறையில் கஞ்சி வழங்குவது வழக்கமான நிகழ்ச்சியே, வழக்கமான நிகழ்ச்சி என்று கூறக்கூட வாய்ப்பில்லாத போது அது எப்படி தலைப்பாகியது என்பது ஆய்விற்குரியது.

கிருத்திகாவை அள்ளியது போலீஸ் என்பதில் கிருத்திகாவும் குற்றவாளி என்ற ஒரு உணர்வை ஏற்படுத்தும் படிச் செய்தி வெளியிட்டிருந்தனர். ஆனால் மற்ற இதழ்களில் இவ்வழக்கின் ஆரம்பக் கட்டத்தில் போலீஸ் கிருத்திகாவின் வீட்டிற்குச் சென்று விசாரணை நடத்தினர், கிருத்திகாவே சிறைக்கும், நீதிமன்றத்திற்கும் சென்று ராஜகோபாலனை பார்த்தார் என்ற செய்திகள் வெளியிட்டிருந்தன. உதாரணமாக ஜூனியர்விகடனில் இரண்டு மனைவிகளிடமும் போலீஸ் விசாரணை (நவ.27) என்று செய்தி வெளியிட்டிருந்தது. உண்மை இவ்வாறிருக்கும் தினமலரோ ராஜகோபாலன் சார்புள்ள அனைவரையும் குற்றவாளிகள் போல் காட்ட முனைந்துள்ளது என்ற மனப்போக்கை வாசகரிடம் உருவாகியது எனலாம்.தினமணியில் பெண் கடத்தல் வழக்கில் சரவண பவன் ஓட்டல் அதிபர் கைது (நவ.22) என்பதிலிருந்து ஜாமீன் மனு தள்ளுபடி (நவ.26) அதிபரின் கடத்தல் வழக்கு கொலை வழக்காகிறது (டிச.3) என்று செய்திகளை வெளியிட்டு மக்களுக்கு இச்செய்திகளை உணர்த்தியதோடு நிறுத்திக் கொண்டிருக்கின்றது.

தினத்தந்தியில் முதல்நாள் செய்தியின் தலைப்பு ராஜகோபாலன் மனு தள்ளுபடி நவ.27 என்பதில் தொடங்கி சாந்தக்குமார் கொலை (நவ.30) ஜீவஜோதி சாந்தக்குமார் பிணத்தை அடையாளம் காட்டினார் (டிச.10) என்பதுபோல் தலைப்பு வெளியிட்டிருந்தனர். முதல் நாள் தலைப்பிலேயே முன்புள்ள செய்திகள் எதையும் வெளிக்காட்டிக் கொள்ளவில்லை.பொதுவாக ராஜகோபாலன் தரப்பினரை அதிகம் வெளிக்காட்டவில்லை அவர்கள் தரப்பிலேயே வழக்கிருந்தும் செய்திகளின் தலைப்பில் ராஜகோபாலன் தரப்பினரின் பெயர்கள் வராதவாறு தலைப்பிட்டுள்ளனர். இவர்கள் இச்செய்திகளுக்கு முன்பு கொடுத்த அளவிலேயே முக்கியத்துவம் கொடுத்துள்ளனர். அதாவது தாமதத்தோடு மட்டுமல்லாமல், ராஜகோபாலன் தரப்பின் பெயர்கள் அதிகம் இடம் பெறாதவாறு தலைப்பிட்டுள்ளனர்.

புலனாய்வு இதழ் ஜூனியர் விகடனில் காமம் கடத்தல் – வலை விரித்தாள் விழுந்தேன் (நவ.23) என்ற தலைப்பில் தொடங்கி டேஞ்சர் டேனியர் (நவ.26) சாந்தக்குமார் சஸ்பென்ஸ் (நவ.30) அதிபர் அன்றும் இன்றும் (டிச.3) என்று இருசாராரின் சாதக பாதகங்களை அலசி ஆராய்வதாகவே இவ்விதழின் தலைப்புகள் அமைந்துள்ளன.நக்கீரனில் ஜோதிட விபரீதம் – ஓட்டல் அதிபரின் பெண் வேட்டை (நவ.23) என்பதிலிருந்து தொடங்கி ஒரு தொழிலதிபரின் கதை (நவ.28) ஜீவஜோதியுடன் கூட்டணி வைத்த கிருத்திகா (டிச.3) இது முஸ்லீம் வியாபாரிகளின் சதிவேலை (டிச.8) என்பது போன்ற இவ்வழக்கிற்கு குறைவாக ஏதோ ஒரு விதத்தில் சம்மந்தமிருப்பினும் அது வாசகர்களை தங்கள் பக்கம் ஈர்க்கும் வண்ணம் தலைப்பிட்டுள்ளனர். அதாவது ஜோதிட விபரீதம் – அதிபரின் பெண் வேட்டை என்ற தலைப்பில் ஜோதிடமே எல்லா பிரச்சினைகளுக்கும் காரணம் என்பது போல் ஒரு பிரமையை ஏற்படுத்தும் தன்மையில் உள்ளது. ஆனால் அதிபர் ஜீவஜோதியின் அழகில் மயங்கியும், ஜீவஜோதியின் பலவீனங்களைத் தனக்குச் சாதகமாக்கிய போது ஜாதகமும் சாதகமாகியதே தவிர ஜாதகத்தினால் தான் அதிபர்

எல்லாவற்றையும் தனக்குச் சாதகமாக்கினார் என்பது உண்மையல்ல. இதோடு இது முஸ்லீம் வியாபாரிகளின் சதிவேலை (டிச.3) என்று வழக்கின் போக்கை மதரீதியாக இணைத்துப் பார்க்கும் விபரீத செயலில் ஈடுபட்டது கண்டனத்திற்குரியது.

தமிழன் எக்ஸ்பிரசில் - ராஜாவின் பார்வை ராணிகள் பக்கம் (நவ.23), என்பதில் தொடங்கி அண்ணாச்சிக்கு முன்பே என் அண்ணன் (நவ.30) என்ற தலைப்புகளில் பாலியல் தொடர்பான செய்திகளோடு கலந்து பரபரப்பிற்காகப் புலனாய்வு செய்துள்ளனர்.

நெற்றிக்கண்ணில் எங்கள் குடும்ப விவகாரத்தை அரசியலாக்கி விட்டனர். (டிச.28) சரவணன் பேட்டி என்று தலைப்பிட்டு இச்செய்தியினைத் தாமதமாகக் கொடுத்துள்ளனர்.

பகுத்தறிவு இதழ்களான நந்தனில் சதிகாரர்களின் சபதம் நிறைவேறிவிட்டது (டிச.1-15) என்றும் ஐயா பாவம் (டிச.31) என்ற விளக்கின் தலைப்புக்களினாலும் அதிபரின் தரப்பிற்கு ஓர் ஆறுதல் கிடைத்ததோடு, அவர்கள் தங்களின் பகுத்தறிவின் மூலம் இவ்வழக்கினை விளக்குவதிலும் வெற்றி பெற்றிருக்கிறார்கள் என்றே சொல்ல வேண்டும்.

மேலே குறிப்பிட்ட பாணியிலேயே ஒவ்வொரு இதழ்களும், புகைப்படங்கள் செய்தியின் போக்குகள், பேட்டிகள் ஆகியவற்றைக் கையாண்டுள்ளன.

## ஆய்வின் முடிவுகள்

ராஜகோபாலன் மிகவும் ஏழ்மை நிலையிலிருந்து, ஓட்டலுக்கு உடுப்பி என்றிருந்த தலைநகரில் உணவுக்கு சரவணபவனே என்று பாதசாரிகள் முதல் மந்திரிகள் வரை பேசும்படிச் சாதனை படைத்தவர். இதனால் வர்த்தகப் போட்டியாளர்கள் இவருக்கு அதிகமானார்கள்.

அரசியல் காழ்ப்புணர்வாலும் பலருக்கு எதிரான இவரைப் பழிவாங்க ஒரு கூட்டம் காத்திருந்தது. இக்கூட்ட அதிபருக்கு ஏற்கனவேயிருந்த பெண் சபலத்தைப் பயன்படுத்தி ஜீவஜோதியின் குடும்பத்தாரைப் பகடைக்காயாக நகர்த்த அவர்களின் சம்மதத்தோடே விளையாட்டிலிறங்க இவ்விளையாட்டு இவ்வளவு விபரீதமாகும் என்று தெரியாமலேயே ஜீவஜோதி குடும்பத்தினர் இவ்வழக்கில் மாட்டித் தவித்தனர். இதன் முடிவும் ஒரு விக்கிரமாதித்தன் கதையே.ஒரு தனிநபரை பழிவாங்க குறிப்பிட்ட சில இதழ்களின் முயன்றது தான் இதழியல் கோட்பாட்டிற்கு முற்றிலும் முரணானது.முதலில் அதிபரின் முகத்தில் சேற்றை அள்ளி வீசிவிட்டு இறுதியில் இரு சாராரையும் அலசியதோடு இவ்விவகாரத்தை நான்காம் பக்கத்தில் பிரசுரிப்பதை நிறுத்திவிட்டு, நான்காம் பக்கம் சமூக அவலங்களை வெளிச்சம் போட்டுக்காட்டும் பக்கம் என்றும், இப்பக்கத்திற்காக வாசகர்களிடமிருந்து அவர்கள் பகுதியிலிருக்கும் இதுபோன்ற அவலங்களை எழுதி அனுப்பக் கூறியும், அடுத்து நீலப்படம் (ப்ளூபிலிம்) டாக்டர் பிரகாஷின் புதுக்கதையை இப்பக்கத்தில் தொடங்கியதின் மூலம் அவ்விதழின் வாசகர்களுக்கு ஜீவஜோதி வழக்கு பற்றி மறக்கடித்து விட்டு, ஆட்டிவைத்த திருப்தியிலும், விற்பனையை கணிசமாக உயர்த்தியதிலும், வாசகரிடத்திலிருந்து எந்த அதிருப்தியும் வராது பார்த்துக்கொண்ட தன்னுடைய மேதாவித்தனத்தைக் காட்டும் வகையில் வழக்கத்தை விட அதிவீர நடையோடு சென்று கொண்டிருக்கிறது தினமலர்.தினத்தந்தியோ சாதிய, வர்த்தக, நட்பு என்னும் கூண்டுக்குள் சிக்கியதால் வழக்கம்போல் இச்செய்தியைக் கொடுக்க முடியவில்லையே என்றும், இச்செய்திகளைப் பயன்படுத்தித் தன்னுடைய விற்பனையைக் கணிசமாக உயர்த்த முடியாமல் போனதே என்றும், தன்னுடைய வாசகர்களை ஏமாற்றிவிட்டோமே இவற்றையெல்லாம் எச்செய்தியின் மூலம் சரிசெய்யப் போகிறோமோ என்று ஆராய்ந்து கொண்டிருக்கிறது. விரைவில் ஜீவஜோதி வழக்கு போல் ஒரு பாலியல் சம்பந்தப்பட்ட வழக்கைத் தினத்தந்தியில் எதிர்பார்க்கலாம்.இதே நிலையில்தான் மாலைமலரும், மாலைமுரசும், கதிரவனும் உள்ளது. தினமணி, பகுத்தறிவு, புலனாய்வு இதழ்களிலும் இவ்வழக்கினைப் பொறுத்தளவில் அவரவர் பாணியிலேயே பதிவு செய்துள்ளனர்.வளைந்து கொடுக்காத பேனா முனை இங்கே ஆக்குவதற்குப் பதிலாக அழித்துவிடுகிறது. இந்த அவலநிலை மாறவேண்டும். இதழியல் தர்மத்திற்கு ஏற்பச் செயல்பட வேண்டிய இதழ்கள், வணிக நோக்கத்திற்காக தங்களுடைய கொள்கையிலிருந்து விலகிச் செய்யப்படுகின்ற நிலையைக் காணமுடிகின்றது. இதழ்களுக்கு இடையேயான போட்டியில், வாசகர்களுக்குப் பரபரப்பான தகவல்களைத் தரவேண்டும் என்ற நோக்கத்தில் தாம் தாழ்ந்த செய்திகளையும், வழக்கிற்கு சம்பந்தமில்லாத செய்திகளுக்கும், பாலியல் ரீதியான செய்திகளையும், விளம்பரச் சுவரொட்டிகளில் (Wall paper) அச்சிட்டு வாசகர்களின் கவனத்தை ஈர்க்கச் செய்கின்றனர்.தகவல் ஊடகங்கள் மக்களுக்கு உண்மையான தகவல்களையேத் தரவேண்டும் என்ற விதிகளிலிருக்க, இதழ்களில் இந்தப் போக்கு வளரும் சமுதாயத்திற்குத் தவறான வழியினைச் சுட்டிக்காட்டுவதாக அமைந்து விடுகின்றன.ஒவ்வொரு இதழ்களும் தங்களுடைய கொள்கைக்கு ஏற்ப, சரியான அணுகுமுறையில் புலனாய்வு நோக்கில் செய்திகளை அணுக வேண்டும். இந்த அணுகுமுறை சமுதாய அக்கறையுடன் கூடியதாக இருப்பின் இதழின் வெற்றி நிச்சயமானதாகும்.

# சிவகாமியின் "ஆனந்தாயி" நாவலில் பெண் பதிவு

-முனைவர். இரா. முரளி
அரசு கலைக் கல்லூரி, கோவை.

"சிவகாமியின் ஆனந்தாயி" தமிழக கிராமத்துக் குடும்பப் பெண். சோதனைகளுக்குப் பயந்து போகாமல் துணிந்து எதிர்த்து நிற்பவள். உழைப்பாளி. அதே சமயம் குடும்ப நலனைக் கருத்தில் கொண்டு சகிப்புத் தன்மையுடன் எல்லாவற்றையும் தாங்கிக் கொள்ளும் குடும்பத் தலைவியாக, தாயாக வாழ்கிறாள். "நான் பெண்ணியவாதிதான் வாழ்க்கையில் சந்திக்கும் துரதிர்ஷ்டங்களையும், சோகங்களையும் தாங்கப் பழகிக் கொண்ட பெண்ணியவாதி" என்ற சுஷ்மிதா பந்தோ பாத்யாயாவின் வார்த்தைகளின் வடிவமாகக் காட்சி அளிக்கிறாள் ஆனந்தாயி.

ஒரு கிராமம் நகரமாக வளர முற்படும் போது ஏற்படும் மாறுதல்களால் ஒரு விவசாய உழைப்பாளியின் குடும்பம் எப்படியெல்லாம் தன் குணங்களை இழக்கிறது என்பதை நாவல் கூறுகிறது. விவசாய உழைப்பாளி பெரியண்ணன் சிறுகச் சிறுக வளர்ந்து காண்ட்ராக்டராகி உயர்கிறான். வசதி வரும்போது மாறுகிறான். ஊரைவிட்டு, குடும்பத்தை விட்டு ஓடி வந்த இலட்சுமி என்ற பெண்ணோடு தொடர்பு கொள்கிறான். அவளையும் தன் வீட்டிற்கே அழைத்து வருகிறான். ஆட்டிப் படைக்கிறான். கடைசிவரை திருந்துவதில்லை. குடும்ப நலன், கணவன் குழந்தைகள் எதிர்காலம் போன்றவற்றைக் கருத்தில் கொண்டு "ஆனந்தாயி" எதிர்ப்பினை அளவாகக் காட்டிக்கொண்டு பொறுத்துக் கொண்டு வாழ்க்கை நடத்துகிறாள். "பெண் உரிமைக்குரல் மேடை தோறும் பலமாக ஒலிக்கும் இந்நாளில் பெண்மை பலவிதங்களிலும் பல நிலைகளிலும், சுரண்டப்படுவதை மெல்லிய குரலில் ஒலிக்கிறது இந்நாவல்". - அகிலன் கண்ணன்.

பெண்மை - தாய்மை - இறைமை என்பது திரு.வி.க. அவர்கள் பெண்ணின் பெருமையில் தெளிவுறுத்தும் கொள்கையாகும். பெண் தாயாகக் கனிகிறாள். தாய்மையில் தெய்வீகம் "இறையாமை" பொலிகிறது.

ஒரு பெண் தாயாகக் கனியும் நிலையின் இயல்புகளை சொல் ஓவியமாக்குகிறார் சிவகாமி.

"................ பனிக்குடம் உடைந்து தரையெல்லாம் ஈரக்கசிவு"

"................. ஒரே முக்கலில் தலை வழுக்கிக் கொண்டு கீழே விழுந்தது"

"................ கருக்கரிவாள் எடுத்துக் கொடியைத் துண்டித்து பழைய சீலைத் துணியால் குழந்தையைச் சுருட்டி கையில் கொடுத்து விட்டு உதிரமும், பிண்டமுமாக வெளித்தள்ளியிருந்தவற்றை இரும்பு வாளியில் வழித்தாள்".

ஜன்னி கண்டு சுயநினைவு இழக்கிறாள் ஆனந்தாயி. அப்போது வடக்கத்தியாள் என்ற பெண் ஆனந்தாயியின் குழந்தைக்குப் பாலூட்டுகிறாள். இந்நிகழ்ச்சி வாயிலாகப் பெண்ணின் அன்புள்ளம், தாய்மைப் பரிவு, பாசம் ஆகியவற்றை வெளிப்படுத்துகிறார் ஆசிரியர். நன்றாகப் படித்து முன்னுக்கு வரவேண்டிய பெண்கள் பலர் வறுமைச் சூழ்நிலையால் குடும்பக் குதர்க்கங்களால் படிப்பைத் தொடர முடியாமல் வாழ்க்கையில் பின்தங்கிப் போக வேண்டிய பாதிப்புக்கு ஆளாவதைப் "பூங்காவனம்" என்ற சிறுமியின் வாயிலாக வெளிப்படுத்துகிறது இந்நாவல்.

"............. இடைவேளை மணியடிக்க இன்னும் சிறிதுதான் பாக்கி. இன்னும் இரண்டு கணக்குகள் போட வேண்டும். இரண்டுஇரயில்கள் கடக்கும் வேகம் குறித்த கணக்கு. பூங்காவனத்தின் பிஞ்சுக் குடல்களுக்குள் இரண்டு இரயில்கள் மோதி வெடித்தது போலப் பசி பற்றியெரித்தது.அறிவு தனது வேகம் இழக்க,அந்தக் கணக்கு அவளுள் குழம்பியது. தப்பும் தவறுமாகப் போட்டாள், வழிக்கு இரண்டு மார்க்காவது கிடைக்கட்டும் என்று தான்".

பசியைப் பற்றிய ஓய்வு பெற்ற உச்சநீதிமன்ற நீதிபதியின் கருத்து நினைவு கூரத்தக்கது. "பசி என்ற கொடுமையால் எந்தவொரு குடிமகனும் துன்புறாமல் பார்த்துக்கொள்ள வேண்டியது அரசின் கடமையாகும்".

- ஓய்வு பெற்ற உச்சநீதிமன்ற நீதிபதி கிருஷ்ணா அய்யர்

இந்நாவலின் கதைத் தலைவி ஆனந்தாயியே சிறுவயதில் இத்தகைய வேதனைகளை

அனுபவித்தவள். சிறுவயதில் அனாதையாகிவிட்ட அவள் குழந்தைத் தொழிலாளியாக மாற்றப்படுகிறாள். ஒன்றுமறியாத குழந்தையாகிய ஆனந்தாயி தேயிலைத் தோட்ட முதலாளியின் பிஞ்சுக் குழந்தையைப் பார்த்துக்கொள்ள வேண்டிய பணிக்கு நிர்பந்திக்கப்படுகிறாள். பொறுப்பில்லாத ஆண்வர்க்கத்தினரால் இயலாத நிலையிலும் உழைப்பைக் கடுமையாக மேற்கொள்ளப் பல குடும்பப் பெண்கள் தள்ளப்படுவதை இந்நாவலாசிரியர் சுட்டுகிறார். "............... பிரசவத்திற்குப் பின் நீண்ட நாட்களாகக் காட்டு வேலை செய்யாமலேயிருந்தாலும், கொளுத்தும் வெய்யிலாலும் ஆனந்தாயிக்கு விரைவிலே களைப்பு மேலிட்டது. பூங்காவனம் போன்ற சின்னப் பிஞ்சுகள் வயிற்றுப் பாட்டுக்காக வேகாத வெய்யிலில் கையெல்லாம் கொப்பளிக்க *வெட்டுவதைப் பார்த்துத் தன்னைத் தேற்றிக் கொண்டாள் .........*"

பெண்ணுக்கு உள்ளம் என்ற ஒன்று உண்டு. இதைக் கூர்ந்து பார்க்காமல் அஃறிணைப் பொருளைப் போல அவர்களை நினைத்துக் கொடுமைப்படுத்துகின்றனர் பல ஆண்கள். இத்தகைய ஆண் ஆதிக்க வெறியின் பிரதிநிதி பெரியண்ணன் தன் மனைவி ஆனந்தாயியை அடித்துச் சித்ரவதை செய்கிறான். ஆனந்தாயியின் உடலும், மனமும் படும் வேதனை நம் கண்களில் கண்ணீரை வரவழைக்கின்றது.

பெரியண்ணன் போன்ற ஆண் ஆதிக்க வெறியர்களைச் சவாலுடன் எதிர்கொள்ளும் பெண்ணியவாதியாக லட்சுமியைப் படைத்துள்ளார் ஆசிரியர். தன்னைச் சாடும் அவனையெதிர்த்துச் சாடித் தண்டிக்கிறாள் அவள். சிந்தனை, தைரியம் ஆகியவையின்றி பருவக்கோளாறால் காதல் விளையாட்டில் இறங்கும் தனம் - டேனியல் இணை நாவலில் சித்திரிக்கப்படுகிறது. ஆனந்தாயி தனத்தைக் கண்டித்துக் கண்காணிப்பில் வைக்கிறாள். ".............. இந்தத் தலைமுறையின் நியாயங்களை முந்தைய தலைமுறையல்லவோ முடிவு செய்கிறது" என்கிறார் ஆசிரியர். வயதான பெண்கள், குடும்பத்திற்குக் காவலாய் அமைவதைப் பெரியண்ணனின் தாய் மூலம் வெளிப்படுத்துகிறார் ஆசிரியர். சிறுவாடு சேர்த்துக் குடும்பத்தைப் பொருளாதாரச் சிக்கல் வரும் நேரங்களில் பாதுகாக்க நினைக்கும் பெண்ணின் ஜாக்கிரதை உணர்வு தாய்க் கிழவியின் மூலம் வெளியாகிறது. அதே சமயம் அவர்களது படிப்பறிவின்மையைப் பயன்படுத்தி அவர்களை ஏமாற்றும் ஆண் ஆதிக்கச் சுரண்டல் சுட்டப்படுகிறது. அடித்தாலும், உதைத்தாலும் ஒருவனோடு குடும்பம் நடத்த வேண்டும் என்ற கொள்கை உடையவள் ஆனந்தாயி. அனுபவ வாழ்வில் முதிர்ச்சி பெற்ற ஆனந்தாயிக்கு இலட்சுமி தான் பெற்ற அனுபவ ஞானத்தின் அடிப்படையில் பொறுமையாகப் பதில் கூறுகிறாள்.

"................ உங்களுக்கு நான் எப்படி சொல்வேன். ஒரு பொம்பிளை அழகோ .............. அழகில்லையோ அது வேற சமாச்சாரம் ................ தனியா இருந்திட முடியுமா? இருக்க விட்டுடுவானுகளா? பட்டாத்தாங்க தெரியும்". தர்மங்கள் மோதிக் கொள்கின்றன. நியாயம் சொல்ல நினைப்பவருக்கு தர்மசங்கடமான நிலை உருவாகிறது.

வெளியே அழுதுவிட்டு, இலட்சுமியின் இறப்புக்காக ஒரு நாள் பட்டினி கூட இருக்காத ஆணாதிக்கப் பூச்சி பெரியண்ணனை ஆனந்தாயி மூலம் சாட்டையடி போல் சாடுகிறார் ஆசிரியர்.

கிராமத்துப் பெண்ணின் யதார்த்த இயல்பும், நன்றி மறவாமனமும் ஆனந்தாயி மூலம் வெளிப்படுகின்றன. அரைகுறையாகப் படித்துவிட்டு போலி கௌரவம் தராதரம் பார்க்கும் அருளைச் சாடுகிறாள் ஆனந்தாயி.

".......... யே.......... போடி............ புத்தி சொல்ல வந்துட்டா பெரிய்ய இவளாட்டம். ஏ அரைகுறையாப் படிச்சவளே ................. உம்படிப்பு இங்க பாரு ................ எங்கால் தூசுக்கு சமானம்". "............. எனக்கு ஜன்னி வந்து ஒதறுச்சு; ஒங்கப்பன் எட்டிக்கூட பார்க்கல, அப்ப இவளுக்கு (பூங்காவனத்துக்கு) அம்மா வடக்கத்தியாதான் உன்னை தூக்கிப் பால் குடுத்தா தெரியுமா? இவங்கப்பந்தான் போயி சித்த வைத்தியரைக் கூட்டிக்கிட்டு வந்தான் தெரியுமா? பெரிய்ய பேச்சுப் பேச வந்துட்டா ..............?". குழந்தையைக் கொடுத்துவிட்டு பொறுப்பில்லாமல் *ஓடிப்போன கணவன் வரும்போது ஏற்றுக்கொள்ள மறுக்கிறாள் புரட்சிப் பெண் பூங்காவனம்.*

இவ்வாறு புதினம் முழுவதும் பெண்மை வெளிப்பாடு சொல்லோவியமாகத் தீட்டப்பட்டுள்ளது.

**தொகுப்புரை : கதை வாயிலாகப் பெறப்படும் கருத்துக்கள் பின்வருமாறு :**

1. *பெண்மை பலவிதங்களில் பல நிலைகளில் சுரண்டப்படுகின்றது.*
2. ஒரு பெண் தாயாகக் கனியும் நிலையில் உடல் ரீதியாகவும், மன ரீதியாகவும் பல சிக்கல்களை எதிர் கொண்டு வெற்றிகாண வேண்டியுள்ளது.

3. பெண் இயல்பாகவே அன்பு, தாய்மைப்பரிவு, பாசம் கொண்டவள்.
4. கணவனின் சிறுமைகளை மறந்துவிட்டுக் குடும்ப நலனுக்காக இணங்கிப் போக வேண்டிய கட்டாயம் பெண்ணுக்கு உள்ளது.
5. குடும்ப வாழ்வில் நம்பிக்கை, தைரியம் ஏற்படுவதில் பெண்ணுக்கும் பெரும் பங்கு உள்ளது.
6. அழகோ, அழகில்லையோ பெண்கள் விழிப்பாக இருக்க வேண்டியுள்ளது.
7. பொறுப்பற்ற ஆண் சமுதாயத்தைத் திருத்தும் பணி பெண்களுக்கு இருக்கிறது.
8. நன்றாகப் படித்து முன்னுக்கு வர வேண்டிய பெண்கள் பலர் வறுமைச் சூழலால், குடும்பச் சூழ்நிலைகளால் படிப்பைத் தொடர முடியாமல் பாதிப்புக்கு ஆளாகும் நிலைமை இருக்கிறது.
9. குழந்தைத் தொழிலாளி முறை - ஆண், பெண் இருபாலரிலும் - கண்டிக்கப்பட வேண்டும். சமுதாயம் சிந்தித்து மாற்றங்களை உருவாக்க வேண்டும்.
10. பொறுப்பில்லாத ஆண் வர்க்கத்தினரின் போக்கால் இயலாத நிலையிலும் கடுமையான உழைப்பை மேற்கொள்ளப் பல குடும்பப் பெண்கள் தள்ளப்படுகின்றனர்.
11. பெண்ணுக்கு மனம் என்ற ஒன்று உண்டு. இதை ஆண் ஆதிக்கப் பூச்சிகள் உணர வேண்டும்.
12. ஆண் ஆதிக்கத்தை அளவோடு எதிர்த்து, இணங்கிப் போகும் பெண்மை இன்றும் உண்டு.
13. ஆணாதிக்கத்தை எதிர்த்துச் சாடி அடி கொடுக்கும் எரிமலைப் பெண் மனங்களும் இருக்கின்றன.
14. பெண்களின் சிக்கல்கல்களைப் பெண்கள் புரிந்துகொள்ள வேண்டும். சில நேரங்களில் பெண்ணுக்கு பெண்ணே-எதிரி.
15. கிராமத்துப் பெண்கள் பலர் யதார்த்த இயல்பும், நன்றி மறவாத மனமும் கொண்டவர்கள்.
16. சிந்தனை, தைரியம் இன்றி, பருவக் கோளாறால் காதல் விளையாட்டில் இறங்குவோர் வேதனைப்படுவர்.
17. பண்பாடு, பழக்க வழக்கங்களில் பெண்களின் பங்கு சமுதாயத்தில் மிகுதியாக உள்ளது.
18. பொருளாதார விழிப்புடன், குடும்பக் காவலாய்ப் பெண்மை அமைதல் நலம்.
19. பெண்களைப் பெற்றோர்கள் விழிப்பாகப் பாதுகாத்து வர வேண்டும்.
20. குடும்பத்து நலனைக் கருதிப் பொருத்துப் போக வேண்டியவள் பெண். அடங்காவிட்டால் பட்டுத் தெரிந்து கொள்வாள்.
21. மேற்சுட்டிய கருத்தை மறுபக்கத்தில் அணுகிப் பொறுப்பு அற்ற குடும்பத் தலைவனை எதிர்த்து விலக்கித் தனியே குடும்பச் சுமையை ஏற்றுப் போராடும் போராளிப் பெண்மை பற்றியும் சிந்திக்க வேண்டும்.

மேற்குறிப்பிட்ட கருத்துக்களை மதிப்பீட்டு நிலையில் நோக்கும்போது பெண்ணின் சுதந்திரம் உரிமை என்பது "குடும்பம்" என்ற கட்டுக்குள் உட்பட்டதா அக்கட்டிலிருந்து வெளிப்பட்டதா என்பதில் ஆசிரியருக்குரிய தடுமாற்றம் "பெண்" நாவலாசிரியர் என்ற நிலையில் பதிவு செய்யப்பட்டிருக்கிறது எனலாம். இதனை முரண்பட்ட கருத்துடைய பெண் பாத்திரங்களான "ஆனந்தாயி" "லட்சுமி" உரையாடல்கள் உறுதி செய்கின்றன.

# உழவு மாடுகளில் பெண்ணியச் சிந்தனைகள்

முனைவர். *கி. மைதிலி,* இணைப் பேராசிரியர்,
பச்சையப்பன் கல்லூரி,சென்னை.

கோவை ஞானியால் தொடுக்கப்பட்டுத் தமிழ் நேயத்தால் இரண்டாயிரத்து இரண்டாம் ஆண்டு வெளியிடப்பட்ட உழவு மாடுகள் என்னும் சிறுகதைத் தொகுப்பினுள் பதினாறு பெண் எழுத்தாளர் சிறுகதைகள் உள்ளன. பெண்ணியம் குறித்த விழிப்புணர்வு அரும்பத் தொடங்கியிருப்பதை இச்சிறுகதைகள் காட்டுகின்றன. பல்துறையிலும் பணியாற்றுவோர் எழுதிய சிறுகதைகள் இவை. கல்லூரிப் பேராசிரியர் முதல் வீட்டு வேலை செய்யும் பெண்வரை சொல்லியிருக்கிற இச்சிறுகதைகள். கலங்காலமாய் பெண் அடிமைப்பட்டிருந்ததையும், விடுதலை உணர்வு இருந்தும் ஆதிக்கச் சமூகத்தின் அடக்குமுறையால் வெளியேறும் வழியைப் பற்றி சிந்திக்காமல் அஞ்சியிருந்ததையும் உணர்த்த முற்பட்டிருக்கின்றன. ஆண்களால் ஏற்படும் சிக்கல்களையே இச்சிறுகதைகள் விவரிக்கின்றன. தம்மை, தம்மைச் சார்ந்தவரை, தாம் பார்த்தவரைக் கொண்டு கதைகளைப் புனைந்துள்ளனர். வீடு, அலுவலகம், குழந்தை என மூன்று நிலைகளில் தன் கடமையைச் செய்யப் போராட வேண்டியிருப்புதை எடுத்துக்காட்டும் கதைதான் விழிப்புணர்வு பெற்றிருப்பதையும் காட்டுகிறது. மேலும் சிந்தித்து தீர்வு காணும் முயற்சிக்கு அறிகுறிகள் தென்படுகின்றன.

அவர்தம் முயற்சியைப் பாராட்டி ஊக்கப்படுத்துவதுடன், அவர்தம் அணுவில் ஊறி ஒளிந்திருக்கும் ஆண்மொழிப்புனைவிலிருந்து விலகி வரவேண்டும் என்னும் சிந்தனையை இக்கட்டுரை முன்வைக்கின்றது. ஆண்மொழிப் புனைவிலிருந்து வெளியேறும் போது, பெண்ணியச் சிந்தனைகள் மேலும் வலுவாகச் சென்றடையும். "உழவுமாடுகள்" என்னும் சிறுகதையை ஆராயும் போது, ஆண்மொழிப் புனைவு ஊடாடுவதை அறிய முடிந்தது.

"உழவு மாடுகளில்" மூன்று தலைமுறையாக வரும் மோசமான கணவன்மார்கள். பாட்டியும் தாயும் தம் கணவர்களைச் சகித்துக் கொண்டு வாழ்ந்த போது மூன்றாம் தலைமுறையில் வரும் மகள், கணவன் சரியில்லை என்றவுடன் அவனை உதறுகிறாள். விடுதலை பெற்ற பெண் சமூகம் உருவாகிறது என்றும் கருத்து கதையின் கருவாக உணர்த்துகிறது.

படிப்பறிவில்லாத பாட்டியும் பள்ளியிறுதிவரை படித்த அம்மாவும் போராடும் உணர்வை கையாள முடியாமல் நொந்து போயிருப்பதைக் காட்டும் கதை இது. படிப்பு, சிந்தனையை வளர்த்திருக்கிறது. மகளைக் கல்லூரிப் படிப்புக்கு அனுப்புமாறு செய்திருக்கிறது. மகள் மேலும் சிந்திக்கிறாள்.

"எவ்வளவோ கனவுகளோட அவருக்குக் கழுத்தை நீட்டினேன். முதலிரவு அறையிலேயே அவர்தன் மூர்க்கத்தைக் காண்பிச்சுட்டார். நிறைய பேசனும்னு ஆசைப்பட்டேன். மனசிலுள்ள சுக துக்கங்களைப் பகிர்ந்துக்க நல்ல ஆண்துணை கிடைச்சிருச்சுன்னு நினைச்சு சந்தோஷப்பட்ட என் வாய் இன்னிக்கு வரைக்கும் பூட்டியே கிடக்கு. ப்ரியா, கணவன் சிறந்த நண்பனா இருக்கனும்னு சொல்லுவாங்க ஆனா அவர் ஒரு சராசரி கணவனாகூட இல்லை என்று அம்மா தன் தோழியிடம் அழுதது காதில் விழ அபர்ணாவுக்கு ரத்தம் கொதித்தது. அம்மா அழுதிருக்கின்றார் மகளின் ரத்தம் கொதித்திருக்கின்றது. வாயைத் திறக்கும் உரிமை அம்மாவுக்கு மறுக்கப்பட்டிருக்கிறது. அந்தச் சூழலில் வாழ்ந்து கொண்டிருக்கும் மகளுக்குப் பெண்ணுரிமை பற்றிய விழிப்புணர்வு இருப்பதால் ரத்தம் கொதித்தது. அம்மாவின் பூட்டிய வாய் திறக்கப்படவேயில்லை. ஆனால் மகள் தன் வாயைத்தான் திறக்கும் உரிமை தனக்கிருப்பதை உணர்ந்து கொண்டிருக்கின்றாள். வாயைத் திறந்து வார்த்தைகளை கொட்டுகிறாள்.

"ஒண்ணமேயில்லாததுக்கெல்லாம் ஏன் இவ்ளோ கோபப்படணும்? உன் புருஷன் நாயைவிட மட்டமானவர்மா" என்கிறாள். மகள் தன் உரிமையை உணர்ந்து கொண்டு தந்தையை வமர்சனம் செய்வது பாராட்டுக்குரியது. ஆனாலும் அவள் தன் தாயைப் போன்றே ஆண் மொழிப்பனர்விலிருந்து விடுபட முடியாமல் இருக்கின்றாள். அம்மா, கணவன், நண்பன் என்னும் சொற்களைக் கூறியிருந்தாலும் கோபமும். அழுகையும் கொண்டிருந்தாலும் ஓர் ஆணை "அவன்" என்று குறிப்பிட மறந்துவிட்டிருந்தார். மூர்க்கத்தை காண்பிக்கிறவனை அவன் என்று கூட குறிப்பிடாமல் அது என்று அஃறிணையில் குறிப்பிடும் மரபினை மூலமொழி நினைவுபடுத்திக் கொண்டிருந்தாலும் - மூர்க்கனும் முதலையும் கொண்டது விடா - என்பது நினைவில் இருந்தாலும்

ஆண்மொழிப்புனைவாக உள்ள "அவர்" என்ற சொல்லையே எல்லா இடங்களிலும் அம்மா பயன்படுத்தியிருக்கிறார்.

"தாத்தா மேலே உனக்கு அன்பே இல்லையா பாட்டி? அவர் செத்த பிறகும் இப்படி கரிச்சுக் கொட்டறியே" படைப்பாளியான கிருத்திகாவும் ஆண்மொழிப் புனைவிலிருந்து விடுபடவில்லை.

"பாட்டியைத் தன் வாழ்க்கையை கதை கதையாய் கூறுவாள்" என்றும் "பாட்டி இறந்து போன அந்த மனிதரை நினைத்துப் பல்லைக் கடிப்பாள்" என்றும் கூறுவன சிந்திக்கத்தக்கன. மகளுக்கு முந்தைய இரு தலைமுறையில் வாழ்ந்த தாத்தா என்ற ஆணும் அப்பா என்ற ஆணும் இருவகையில் தங்கள் ஆதிக்கத்தைக் காட்டியமையை ஆசிரியர் நன்கு எடுத்துக்காட்டுகின்றார்.

"தாத்தா ஒருவிதம் இருந்த சொத்துக்களை அழித்து மானத்தை கப்பல் ஏற்றினார். அப்பா ஒருவிதம். வுள்ளென்று நாயாய் விழுந்து பிடுங்கி மனதைச் சாகடித்துக் குழிதோண்டிப் புதைத்தார்"

முதல் தலைமுறையின் ஆணாதிக்கம் பாதுகாப்பு குறைகிறதே என்றும் சார்ந்து வாழும் வாழ்க்கைதான் தம்விதி என்று மூளைச் சலவை செய்யப்பட்டிருந்ததால் பொருளாதாரம் குறைகிறதே என்றும் அஞ்சும் அஞ்சும் நிலையைப் பெண்ணுக்கு உருவாக்கியது. அதற்கு மேல் சிந்திக்கவிடவில்லை.

"ரெண்டு வீடு, கொல்லையில் பத்துசீமைப்பசு தவிர நஞ்சை, புஞ்சை என்று ஏகபோக சொத்துக்களோடு புகுந்த வீட்டுக்குள் காலடி எடுத்து வைத்த கொஞ்ச நாட்களிலேயே எல்லாவற்றையும் இழந்து தவியாய் தவித்த போதிலும் தாத்தாவுக்கு ரேஸ் பைத்தியம் தீரவில்லை. "வந்தவர்களுக்கு சாப்பாடும். வராதவர்களுக்கு இலையுமா இருந்த வீட்டை ஒண்ணுமில்லாம ஆக்கின பிறகும் உன்தாத்தா அம்மா உட்காரவில்லை. அவர் பேர்ல இருந்த சொத்தையும் குதிரை மேலே கட்டி, கட்டியே அழிச்சார்" சமைத்து வருபவர்க்கெல்லாம் போடுவதே வாழ்க்கை என்னும் ஆண் சூதாடி சொத்துக்களை இழந்த போதும் பணமில்லையே என்பதற்காக அஞ்சிக் கொண்டு அவளோடு வாழ்வதே வாழ்க்கை என்றும் அந்தத் தலைமுறைப் பெண் எண்ணினாள்.

அவர் செஞ்சதை இப்ப நினைச்சாலும் வயறு பத்தி எரியுதடி, அவர் வெளியிலே போனாலே எவ்ளோ பணத்தை விட்டுட்டு வருவாரோன்னு பயந்துகிட்டே உட்கார்ந்திருக்கனும். இப்படி ஒரு வாழ்க்கை தேவையான்னு சில சமயம் தோணும், விதியேன்னு அழுதுக்கிட்டு தூணோரமா உட்கார்ந்திருப்பேன்" என்னும் பாட்டியின் கூற்றில் அவரது மூளைச்சலவை செய்யப்பட்டிருப்பதை அறியலாம்.

அடுத்த தலைமுறையான அம்மாவின் பெண் சமூகம் முணுமுணுக்கும் அளவுக்கு உயர்ந்தது என்று சொல்லலாம். அதுகூட வருத்தத்திற்கு வடிகால் தேடவே, ஆதிக்கம் செலுத்தும் ஆண் எதிரில் அமைதிகாத்தது. "ரசமா இது, உப்புமில்ல, உறைப்புமில்ல மனுசன் தின்பான இதை" என்று அப்பா வீசியெறிந்த தட்டிலிருந்த ரசச்சோறு எதிரே நின்றிருந்த அம்மாவின் கண்ணில் தெறித்து திகுதிகுவென்று எரிந்தபோதும் அம்மா மௌனப் பிராணியாய் நகர்ந்தது ஒரு உதாரணம்தான்"

அடிபட்ட பின்னும் சீறாத பெண்ணாகவே இருந்தார். ஆனால் மற்றொரு பெண்ணிடத்தில் பேசுகிற போது தனக்குச் சிந்திக்கத் தெரியும் என்பதை வெளிகாட்டுகிறார். முதல் தலைமுறை ஆண் பணத்தைத் தொலைக்கும் நடத்தையால் பெண்ணை அஞ்ச வைத்தாள். அடுத்த தலைமுறை ஆண், கடுஞ்சொற்களால் காயப்படுத்தி அஞ்ச வைத்தான். மகள் படிக்கும் கல்லூரியில் "கல்சரல்" விழாவிற்கு அம்மா போக அப்பாவிடம் அனுமதி கேட்டவுடன் பளாரென்று கன்னத்தில் அறை விழுந்தது அதோடு

"பொம்பளையா லட்சணமா வீட்டோட இரு தே... மாதிரி அலைய ஆசைப்படாதே" . வார்த்தைகளின் ஆசிட் வீச்சில் நிலை குலைய வைக்கிற போக்கு இருந்தது. சிந்திக்கத் தெரிந்த அம்மா ஆணாதிக்கச் சமுதாயத்திற்காகவும் அஞ்சினார். வீட்டோடு இருக்கப் பிறந்தவள் பெண், வெளியுலகம் பற்றிய சிந்தனையோ கருத்தோ, விமர்சனம் செய்வதோ கூடாது. என்று தடுக்கப்பட்டவளாக இருக்கப் பிறந்தவள் பெண் என்னும் நிலையை உருவாக்கியிருந்தது சமூகம்.

மகள் "இந்தாளு சகவாசமே நமக்கு வேண்டாம்மா. நாம எங்கேயாவது போயிடுவோம்" என்று கூறுகிறாள். கல்லூரியில் படித்தும் இன்றும் சம்பாதிக்காத பெண் என்றாலும் வெளியேறும் எண்ணத்தில், எதிர்த்து வாழும் எண்ணத்தில் மகள் இருக்கிறாள். அவளுக்கு "அம்மா ஆதிக்க சமுதாயத்தைச் சுட்டிக் காட்டுகிறாள்".

"எங்கே போறது? நல்லா சம்பாதிக்கிறான் எந்த கெட்டபழக்கமும் கிடையாது. அவனோட குடும்பம் நடத்த முடியாதவ என்ன பொம்பளையடா இருப்பா. அவ கிட்டதான் தப்பு இருக்குன்னு சமூகம் என் மேல் காறித்துப்பும்"

சம்பாதிப்பதும் அதைச் செலவழிப்பதில் பயிற்சி இருப்பதும் மட்டுமே போதுமான காரணங்களாக ஆதிக்க சமுதாயம் கூறுகிறது. பெண்ணை நேராகவும், மறைமுகமாகவும் கையாலும் சொல்லாலும் குதறுவதை இந்தச் சமுதாயம் பொருட்டாகவே கொள்ளவில்லை. பெண்ணை அப்படித் துன்புறுத்துவதைக் கண்டுகொள்ளாத சமுதாயம் சொல்லால் செயலால் துன்புறுத்தாமல் ஆலோசனையாகவோ, மாற்றுக் கருத்தாகவோ பெண் ஓர் ஆணிடம் சொல்லத் தொடங்கினாலும் மிகப்பெரிய அவமானம் நிகழ்ந்து விட்டதாகக் கருதி மிகக் கொடிய துன்பத்தைப் பெண்ணுக்குச் செய்வதையும் கண்டு கொள்வதில்லை. ஆண் மீது தவறு இருந்த போதிலும் அதை அவன் உணர்வதற்கு முன் பெண்ணைக் கடுமையாகச் சாடியவன் தன் தவறினை உணர்ந்த பின் வருத்தம் தெரிவிப்பது கூட இழுக்கு என எண்ணுகிறான்.

"நல்லமாட்டுக்கு ஒரு சூடு. உனக்கு எத்தனை தடவை சொல்லியிருக்கிறேன். என் டேபிள்ல கை வைக்காதேன்னு சுத்தம்பண்றேன் பேர்வழின்னு எல்லாத்தையும் எடுத்து எங்கேயாவது போட்டுட வேண்டியது தரித்திரம்"

மாடென்றும் தரித்திரமென்றும் கூறப்பட்ட கடுஞ்சொற்களுக்கு அடுத்த நிலை கைநீட்டல்தான். அதற்கும் சேர்ந்து அஞ்சிக்கொண்டே "எ... எதையாவது காணமா?" என்று மெதுவாகக் கேட்டார் அம்மா. அவரது அச்சம் மேலும் ஆணுக்கு வலிமையைக் கூட்டவே.

"பச்சை கலர் ஃபைல் வச்சிருந்தேன். அதை எங்கேயோ தூக்கி போட்டுட்ட உன் கையை முறிச்சி அடுப்புல வைக்கணும்" என்று குரலை உயர்த்தியவனைப் பாட்டி தடுத்தார். "பீப்பாய் மேல பச்சைக் கலர் அட்டை மாதிரி என்னவோ இருக்கே. நேத்து ராத்திரி நீதான் அதை அங்கே வச்சிட்டுப் போனே, இதுவானு பாரு" என்றவுடன் பார்த்தவன் அம்மாவிடம் மன்னிப்பும் கேட்கவில்லை, மனத்தில் குற்ற உணர்ச்சி தோன்றியதற்கான அறிகுறியும் இல்லை என்பதை ஆசிரியர் குறிப்பிடுகின்றார். மகளுக்குக் கோபம் வந்தது. தந்தை காதில் விழுமாறு சொன்னாளா இல்லையா என்பது கதையில் இல்லாது போனாலும் வாய்விட்டுச் சொல்லும் உரிமையை உணர்ந்திருந்தாள் என்பதை உணரமுடிகின்றது.

"உடம்புள்ள ரொம்பக் கஷ்டப்பட்டுத்தான் சாகப் போறார். பார்த்துக்கிட்டேயிரு" என்று பாட்டியிடம் கூறினாள். சாகப் போறார் என்ற மரியாதை உணர்வு குறையாமல் சபிக்கிறாள். மேலும் "பாம்புக்கு பல்லுலதான் விஷம் ஆனா அந்த மனுஷனுக்கு உடம்பு முழுக்க விஷம். அந்த விஷம் எங்கம்மா வாழ்க்கையைப் பஸ்மமாக்கிடுச்சு. பார்த்துக் கிட்டேயிரு அவர் ரொம்பக் கஷ்டப்பட போறார்" என்றாள். மனுஷன் என்ற கோப உணர்வு தொடர்ந்து அவன் கஷ்டப்பட போறான் என்று கூற ஆண்மொழிப் புனைவு இடந்தரவில்லை.

கணவன் பக்கவாதத்தில் விழுந்த போது பணி விடைகள் செய்த அம்மா தொடர்ந்து துன்புறுத்தப்பட்டார். ஆனால் மகள் தெளிவாக இருந்தாள். பாரதி கண்ட புதுமைப் பெண் பேச்சுப் போட்டிக்கு அம்மா எழுதித்தர ஆர்வமுடன் இருந்தார் மகளோ அதனை மறுத்து,

"நான் கலந்துக்கப் போறதில்ல. எழுதி தர்றதுக்கு நீயோ, பேசறதுக்கு நானோ தகுதியானவளாக இல்ல. ப்ரைஸ் வாங்கறதுக்காக மட்டும் பேசறதுல எனக்கு உடன்பாடு கிடையாதும்மா என்று உறுதியோடு உரைத்தாள்.

ஆனால் அவளைக் கட்டாயப்படுத்தி மணம் முடித்த போது, கணவரின் சந்தேகம் அவளை விலகி வரச் செய்தது. அவன் விபத்தில் இறந்தபோது பதட்டமில்லாமல் இருந்ததோடு கதை முடிகிறது.

பாட்டியின் சிந்திக்கத் தெரியாத நிலை அம்மாவின் சிந்தனையைச் செயல்படுத்தத் தெரியாதநிலை மகளின் செயற்பாட்டிற்குக் குடும்பம் ஒத்துழைக்காத நிலையிருந்தும் சார்ந்து வாழாமல் சம்பாதிக்கத் தொடங்கியிருந்தால் தனித்து வாழ முற்பட்டநிலை என்று படிப்படியே பெண் விழிப்புணர்வைப் பெற்றதை உடன்பாட்டுப் போக்கில் கூறியிருப்பது பாராட்டத்தக்கது. ஆண்மொழிப் பனைவு மறக்கப் படுமானால் மேலும் வெற்றி கிட்டும். பெண் எழுத்தாளர்களுக்குப் போட்டி வைத்து அறுபது கதைகளுள் பதினாறுகதைகளைத். தேர்ந்து அவற்றுள் "உழவு மாடுகள்" கதையின் தலைப்பையே தொகுப்புக்கும் சூட்டியிருப்பது பொருத்தமானது. எழுத்தில், பேச்சில், செயலில் உழவு மாடுகளாக இருக்கும் பெண்கள் விழிப்புணர்வை மெல்ல மெல்ல பெற்று வருவதை அறிய முடிகிறது.

# பெண்ணிய எதிர்ப்புகளும் எதிர்பார்ப்புகளும்

முனைவர். *த. ராசவன்னியன்*, தமிழ்பேராசிரியர்,
அண்ணாமலைப் பல்கலைக் கழகம், அண்ணாமலை நகர்.

முன்னூறு ஆண்டுகட்கு முன்பே மேலை நாடுகளில் சமூக, பொருளாதார, அரசியல், வரலாறுகளில் பெண்ணியம் பற்றிய சிந்தனைகள் வெளிப்பட்டு நின்றன. “பெண்ணியம் என்ற சொல் வளர்ச்சி, கருத்தியல் வடிவமாக்கப்பட்டு இன்று உலகம் முழுவதற்கும் கொள்கைகளை விரிவுபடுத்தி வழிகாட்டியுள்ளது. பழைய மரபுகள் இதனை உடைத்து வெளியேறிய இந்தநிலை புரட்சிகரமான சிந்தனைகளை இன்று வளர்த்திருக்கிறது என்றால் அது வியப்பினும் வியப்பே ஆகும். பெண் ஒரு அடையாளக் குறியீடே. அன்றைய உலகிலும் சரி. இன்றைய நவநாகரிக உலகிலும் சரி. பெண்ணினத்தின் முழுமையான பாதுகாப்பு, அவர்களின் அறிவு வளர்ச்சியையும், உலகியல் நடைமுறைகளையும், கவ்சமாக்கி வருகின்றது என்றாலும் கூட ஆணாதிக்க எதிர்ப்புகளும், எதிர்பார்ப்புகளும் அவர்களை ஒரு வரம்புக்குள் கொண்டு வருவதே நடைமுறைச் சிக்கலாகவும், எதிர்பார்ப்பு சிக்கல்களாவும் தோற்றம் காட்டுகின்றன.

## (அ) பெண்ணியம் வாழ்வியலும், நடைமுறையும் :

சமூகத்தின் எல்லா நிலைகளிலும் பெண்கள் தம் வாழ்வியலை வசப்படுத்தியுள்ளனர். அச்சம், மடம், நாணம், பயிர்ப்பு, அடிமை, அலைமனம், கோழை, ஒடுக்கம், பாலுணர்வு, கண்ணீர், மென்மை, முதலான பல்வேறு நிலையிலும், தன்னை ஆட்படுத்தி, உயர்ந்து, வெளிமுகம் காட்டி நின்றாலும், அவர்களின் வாழ்வியல் பூர்த்திகளை நிறைவு செய்பவர்கள் ஆண்கள்.

ஆணின் மனநிலையும், பெண்ணின் நிலையும், ஒரே நேர்கோட்டில் பயணித்தாலும், ஆங்காங்கே ஏற்படும் உத்திரவாதமில்லாச் சிக்கல்கள் இருவரையுமே புண்படுத்தியுள்ளன. இருப்பினும் பெண் வாழ்வியல் தேர்வுகளை எதிர்கொண்டு வெற்றியடைய முயற்சி செய்கின்றனர். இவ்வாறான வெற்றி, தோல்விகள், நடைமுறையைச் சிக்கல் ஆக்குகின்றன. இதனையும் மீறித் தங்கள் உரிமைக்குரலை உயர்த்துகின்றனர்.

அறிவுத்தேடல், பொருளாதாரத் தேடல், பாலியல் வன்முறை, ஆணாதிக்க அடக்குமுறை இவற்றிலிருந்து விடுபடுவது பெண்ணியம் ஆர்வம் காட்டுகின்றது. தங்களின் உரிமை, விடுதலை சமூகத்தின் வளர்ச்சியில் தங்கள் பங்கு போன்ற கருத்துகளில் முழுமையடைந்து வென்று வருகின்றனர்.

## (ஆ) பெண்ணிய எதிர்புக் கண்ணோட்டம்.

பெண்ணிய வளர்ச்சி மற்றும் மாற்றம் புதுமையானது. வரவேற்கத்தக்கது. இருப்பினும் காலகட்டத்தின் அவசரத்திற்கும், பரிணாம வளர்ச்சிக்கு ஏற்பவும், மாற்றங்கள் தொடக்கம் முதல் இறுதி வரை சில, பல போராட்டங்களை எதிர்நோக்கும் அவசியத்தில் ஆழ்ந்துள்ளது.

முன்னேற்பாடான வாழ்க்கைப் பயணம், கல்விச் சூழல், பொருளாதார நிலைகள் இதனையும் தாண்டிய பருவ வளர்ச்சிகளையும் மையப்படுத்தியே சுழன்று வருகின்றனர். இந்நிலை கண்டுணரும் ஆண்கள் வசப்படுத்தியோ, அடிமைப்படுத்தியோ, சிறுமைப்படுத்தியோ தங்களின் நிலையைப் பூர்த்தி செய்து கொள்கின்றனர். வரலாறு கண்ட பெண்களையும் வாழ்வியல் கண்ட பெண்களையும் நினைக்கையில் எங்கேயோ , எப்படியோ இவர்கள் பன்மடங்கு பலங்களைப் பயன்படுத்தி வெற்றி பெற்றுள்ளனர் என்ற உண்மை புலனாகிறது. இந்த நிலைப்பாட்டு உணர்வை ஆணாதிக்கம் எவ்வாறு சமன் செய்யம் என்ற கேள்விக்கு இதனுள்ளேயே பதிலும் அடங்கியுள்ளது என்பதை அடிக்கோடிட்டுக் காட்டிடலாம்.

## (இ) சமதாயம் கண்ட புரட்சி

“உலகின் முழு விடுதலை, பெண்விடுதலை” என்ற பெண்ணியக் கோட்பாடுட்டுப் புரட்சி மெல்ல

மெல்ல உலகை வியப்பில் ஆழ்த்தி உணர்த்தி வருகின்றது. சீர்திருத்தம் பெற்ற பெண்ணியம், சமுதாய மேன்மைக்கு, பல நிலையிலும் உதவியாய் நிற்கின்றது. கல்வி கற்கும் உரிமை, விரும்பியவரை மணக்கும் உரிமை, பணிபுரியும் உரிமை, சொத்துரிமை, மணவிலக்கு உரிமை, வாக்குரிமை, சம ஊதிய உரிமை, தத்தெடுக்கும் உரிமை என்ற நீண்ட கால உரிமைகளைப் போராடித்தான் கைப்பற்றியுள்ளனர்.

ஆனால் இன்றையச் சூழலில் எதிர்காணும் போராட்டங்கள் நடைமுறையைப் பின்னுக்கும், முன்னுக்கும் தள்ளிப் பார்க்கின்றன. இருந்தாலும் இதனையும் தாண்டிய வேகச் சூறாவளியாய், புறப்பட்டு உயர்ந்த நிலையை எட்டிப்பார்க்கின்றன.

சமுதாயம் கண்ட புரட்சிப் பாதை இன்று எல்லாப் பெண்களையும் பயணிக்கத் துணை கொள்ளவே இல்லை என்பது முழு உண்மை, காரணம் பின்தங்கிய கிராமங்கள், அடிப்படையில்லாத ஒவ்வொரு சமுதாயப் பிண்ணனியிலும் ஒழிந்து வாழும் பெண்கள் இன்றும் நம் நாட்டில் ஏராளம்.

இவர்கள் அனைவரையும் உயர்த்திப் பார்க்கும் தேசம் இந்தியாவாக மாறும் என்ற நம்பிக்கை என்று வளர்கிறதோ அன்றுதான் இந்தியா ஒளிர்ந்த நாடாக வரலாற்றில் இடம் பெறும். புரட்சியின் மாற்றங்கள் வேறுவேறாக இருந்தாலும் வெற்றி அனைவருக்கும் பொதுவே.

## பெண்ணிய எதிர்பார்ப்புகள் வாழ்வியல் நிலையில்

உயிர் தேடும் ...

உயிர்கள் ...

உறவின் துணையில் ... !

தத்துவப், பூர்வாங்கச் செய்திகள் மனித உயிர்களை வளர்க்கவும், வாழவும், செய்கின்றன என்றால் அதனுள் பெண்ணின் பங்கு உயர்வினும் உயர்வு.

"பெண்ணியம்" - வர்க்கத்தோடும்,இனத்தோடும் தொடர்புடைய ஒன்று என்றாலும், இதன் தேவைகள் அனைத்தும் எதிர்ப்புகளோடும், எதிர்பார்ப்புகளோடும் தான் வலம் வருகின்றன. ஒரு முன்னேற்பாடான சமுதாயத்தின் அடித்தளம், நன்கு பராமரிக்கப்பட வேண்டும். அப்போது தான் அது நிலையான பயனைத் தந்துதவும்.

வாழ்வியல் தேடல்கள் தொலைந்து கொண்டே சென்றாலும், எங்கேயோ? கிடைத்துவிடும். அதைப்போல் பெண்ணியத் தேடல்களும், எதிர்பார்ப்புகளும் தொலைவில் நின்றாலும், அதன் பயன்கள் அருகில் இருக்கத்தான் செய்கின்றன. ஆடவரின் துணைகோடல் பெருமை வாய்ந்த பெண்ணியத்தின் சான்றுகளை விதைத்து நிற்கின்றன. இவ்வாறு விதைக்கப்பட்ட மனித வரலாறுகள் மட்டுமே வாழ்வியலைப் பூர்த்தி செய்துள்ளன.

காலம், காலமாக, துன்பம் என்னும் சுமையைச் சுமந்தாலும், சுமை தாங்கிக் கற்களாக நின்றும், நீட்டித்தும் பயன் தந்தவர்கள் ஆண்கள் என்ற உண்மை அடிப்படையானது.

## முடிவுரை

எங்கேயோ ஒரு மூலையில் பெண்ணியம் பேசி நிற்பதை விட, நிழலாடும் உறவில், உலகில், நிரந்தரங்களைப் பேச வேண்டும். அப்போது தான், பெண்ணிய எதிர்ப்புகள் மூடி மறையும், எதிர்பார்ப்புகள் முழுமையடையும். காலம் தவறிய கடமையும், கண்கள் இல்லாப் பார்வையும், வெறுமையைத் தருகின்றன. அதைப்போல இல்லாமல் பெண்ணியப் போக்குகள் வரலாற்றின் பாதையை அழகுபடுத்தியும். பயன்படுத்தியும், வலம் வர வேண்டும். இதுவே பெண்ணிய எதிர்ப்புக் குரலுக்குக் கிடைக்கும் தண்டனை என்றும், பெண்ணிய எதிர்பார்ப்புக்குக் கிடைத்த பரிசு என்றும் உரக்கக் கூறலாம்.

சமுதயாத்தின் தேடல்களும், தேவைகளும் உங்கள் வசம், நின்றாடுகின்றன. காலம் நின்று வெல்வீர்.

# திரைப்படப் பாடல்களில் பெண்கள்

வெ.ர. *இராசகோபால்*, எம்.ஏ., எம்.ஃபில்.,
கோபி கலை அறிவியல் கல்லூரி, கோபி.

"பெண்மை வாழ்க என்று கூத்திடுவோமடா" என்றும்
"மாதர்தம்மை இழிவு செய்யும் மடமையைக் கொளுத்துவோம்" என்றும் மகாகவிபாரதி பெண்மையைப் போற்றினான். நம் நாடு பெண்ணுக்குத் தந்த பெருமை போற்றுதற்குரியது நாட்டினை நாம் பாரதத்தாய், பாரதமாதா எனவும், நதிகளைக் கங்கை,யமுனை, காவிரி எனவும், மொழியைத் தமிழ்த்தாய் எனவும் பெண்ணாகக் கருதி போற்றுகிறோம். இவ்வாறு பெண்மையைப் பேணும் நாம் இலக்கியங்களிலும், இதிகாசங்களிலும் கண்ணகி, சீதை என்று புனிதப் பாத்திரங்களைப் படைத்துப் பெண்மைக்குப் பெருமை சேர்த்திருக்கின்றோம். இவ்வாறு ஒரு புறம் பெண்ணிமையின் சிறப்புகளைப் பறைசாற்றும் நாம் மக்களுக்கு எளிதில் சென்று சேரும் திரைப்பாடல்களில் எவ்வாறு பெண்மையைப் பாடினோம் பாடுகிறோம் என்பது பற்றி ஆய்வது இக்கட்டுரையின் நோக்கமாகும்.

திரைப்பாடல்களில் பெண்கள் தாயாக, தங்கையாக, தோழியாக, காதலியாக என இப்படிப் பல்வேறு உறவுமுறைகளில் இடம் பெறுகிறார்கள். இவற்றுள் ஒருசில உறவு முறைகளில் பெண்கள் எவ்வாறு பாடப்பெற்றனர். பாடப்பெறுகின்றனர் எனக் காண்பது சரியான அணுகுமுறையாகும்.

## திரைப்பாடல்களில் தாய்

தாய் என்ற வணக்கத்திற்குரிய உறவை என்றும் போற்றும் திரைப்பாடல்கள் பல வெளிவந்துள்ளன. மன்னாதி மன்னன் என்ற திரைப்படத்தில் கவிஞர் கண்ணதாசன் எழுதிய

"கருவினில் வளரும் மழலையின் உடலில்
தைரியம் வளர்ப்பாள் தமிழன்னை" என்ற பாடலில் தாயின் பெருமை புலப்படும். புலவர் புலமைப்பித்தனின்,
"எந்தக் குழந்தையும் நல்ல குழந்தைதான்
மண்ணில் பிறக்கையிலே - அவன்
நல்லவனாவதும் தீயவனாவதும்
அன்னை வளர்ப்பதிலே" என்ற பாடலும் ஒரு தாயின் வளப்பே குழந்தையின் எதிர்காலத்தை நிர்ணயிக்கும் எனக் கூறுகிறது.
"அம்மா என்றழைக்காத உயிரில்லையே
அம்மாவை வணங்காது உயர்வில்லையே
நேரில் நின்று பேசும் தெய்வம்
பெற்ற தாயன்றி வேறொன்று ஏது?" என்னும் வாலியின் பாடலும் தாயன்பைப் போற்றுகிறது.

இவ்வாறு தாய் என்ற உறவில் திரைப்பாடல்களில் பெண்கள் உயர்வாகக் கூறப்பட்டுப் பெண்மைக்குப் பெருமை சேர்க்கப்பட்டுள்ளமையை மறுக்க இயலாது.

## திரைப்பாடல்களில் தங்கை உறவு

திரைப்பாடல்களில் பாசத்திற்குரிய தங்கை உறவினைப்பாடும் போது பெண் போற்றப்படுகிறார்கள்.

"ஒரு கொடியில் இருமலர்கள் பிறந்ததம்மா
அண்ணன் தங்கை உறவு முறை வளர்ந்ததம்மா" எனவும்
இந்த மண்ணும் கடல்வானும் மறைந்து முடிந்தாலும்
மறக்க முடியாதடா! உறவை
பிரிக்க முடியாதடா! எனவும் போற்றப்படும் தங்கை.
"நதியில் விளையாடிக் கொடியில் தலைசீவி
நடந்த இளம் தென்றலே! எனப் போற்றப்படுகின்றாள். இவ்வாறு பெண்மை திரைப்படப்பாடல்களில் தங்கையைப் பாடும் பாடல்களில் சிறப்பிக்கப்படுகிறது.

## திரைப்பாடல்களில் பெண் காதலியாக

ஒரு பெண் காதலியாகத் திரைப்படத்தில் வரும் போது அவளது அழகு பாராட்டப்படுகிறது. அவளது அழகைக் கதை நாயகன் பாராட்டுவதாகப் பாடல்கள் பெரிதும் அமைந்துள்ளன. இவ்வாறு அன்றைய திரைப்பாடல்களிலும் இன்றைய திரைப்பாடல்களிலும் பெண்ணின் அழகு வருணிக்கப்படுகிறது. இவற்றுள் இன்றைய பாடல்களே வேறுபடுகின்றன.

"தங்கச் சுரங்கம்" என்ற படத்தில்,

"கட்டழகும் பொட்டழகும் பூவழகும் - தண்டைக்
காலழகும் - எங்கள்
மங்கையரின் கலையல்லவா?" என்று பெண்ணுக்குரிய அழகு இப்பாடலில் எடுத்துக் கூறப்பட்டுள்ளது.

"மாலையிட்ட மங்கை" என்ற படத்தில் இடம் பெறும்,

"செந்தமிழ்த் தேன்மொழியாள் - நிலாவெனச்
சிரித்திடும் மலர்கொடியாள்
பைந்தமிழ் இதழில் பழரசம் தருவாள்
பருகிடத் தலை குனிவாள்" என்று பெண் என்பவள் எத்தகைய இனிமையானவள் என்பதைக் கூறுகிறார் கவிஞர் கண்ணதாசன்.

"கண்டு கேட்டு உண்டு உயிர்த்து உற்றறியும் ஐம்புலனும்
ஒண்டொடி கண்ணே உல" என்ற திருக்குறள் கருத்தை இந்த வரிகள் நமக்கு நினைவூட்டி மகிழ்விக்கின்றன.

மேலும் இந்தப் பாடலில் வரும்,

"மோகத்திலே இந்த உலகம் யாவையும்
மூழ்கிடச் செய்யும் மோகினியோ? என்று கவிதையாக ஒரு பெண்ணின் அழகு கூறப்படுகிறது. இந்த வரிகள் பாவேந்தரின்

"கோலம் முழுவதும் காட்டிவிடாமல் காதற்
கொள்ளையிலே இவ்வுலகம் சாமோ? என்ற கவிதை வரிகளை நமக்கு நினைவூட்டி இலக்கியச் சுவை பயக்கிறதல்லவா?

வாழ்க்கை வாழ்வதற்கே என்ற படப்பாடல்,

"இயற்கையின் நாடக மேடையில்/ இனிமை எனும் திரைச்சோலையில்
எழுதிய ஓவியம் பழுதுபடாமல் /எழுந்து நடந்தது மண்ணிலே"
இளமை இனிமேல் யாரிடமோ?/இறைவன் திருவுளம் எவ்விதமோ?
கனிமொழி பேசும் கன்னியன் உள்ளம்/யாரோடு போராடுமோ? - எந்தப்
பாலோடு தேனாகுமோ? என்று பெண்ணின் உறவை வெளிப்படுத்துகிறது இவ்வரிகள்

"பாலொடு தேன் கலந்தற்றே பன்மொழி
வாயெயிறூறிய நீர்" என்ற திருக்குறள் கருத்தை நினைவூட்டி இலக்கியச் சுவை பாய்கிறது.

மேலும் பெண்மை என்பது,

"மாவிலைத் தளிராக - நல்ல /மாம்பழச் சுவையாக
கோவில் விளக்காக - வண்ண கோபுரச் சிலையாக
மகிழ்ந்து மகிழ்ந்து வரும் - பலர் /மனதும் தொடர்ந்து வரும் - சுகம்
வளர்ந்து கலந்துவிடும்" என்று உயர்வாகப் போற்றப் படுவதை இப்பாடல் வரிகளின் மூலம் கவிஞர் கண்ணதாசன் கூறக் காணலாம்.

ஆண், பெண் கொள்ளும் காதல் உணர்வில் பெண்ணை ஆண் காணுகின்ற காட்சியை,

"பன்னீர்ப் பூப்போன்ற பார்வையும் - நெற்றிப்
பரப்பிலே முத்தான வேர்வையும் /பின்னிவரும் நாணமென்னும் போர்வையும் - சுற்றிப்
பின்னிவிட்ட கூந்தலென்னும் தோகையும் கொண்டு /பின்னலிட்ட கூந்தலென்னும் தோகையும் கொண்டு /கண்ணெதிரே தோன்றினாள்" என்ற இருவர் உள்ளப் படப்பாடல் விளக்குகிறது.

பெண் அழகை வருணிக்கும் போதும் கவிதை எதுகை மோனை கொஞ்சிட உயர்வுடன் உவமைகள் பவனிவர நர்த்தனமிடுவதைக் காணலாம். இதனைக்

"கட்டித் தங்கம் வெட்டி எடுத்து/காதல் என்னும் சாறு பிழிந்து
தட்டித் தட்டி சிற்பிகள் செய்த உருவமடா! -அவள்
தளதள வென்று சிற்பிகள் செய்த உருவமடா! என்ற வரிகள் நமக்கு உணர்த்தும்.

காதலியின் வாயிலிருந்து வரும் காதல் வார்த்தைகள் பாடலில் வரும்போது கூடப் பண்பாடு மாறாமல் வருகின்றது.

"இரவே இரவே விடியாதே !/இன்பத்தின் கதையை முடிக்காதே !
சேவல் குரலே கூவாதே !/சேர்நதவர் உயிரைப் பிரிக்காதே ! என்ற பாடல்வரிகளில் காதல் என்பது உயிர்கலந்த உறவாகக் கூறக்காணலாம்.

காதலர் மண வாழ்வில் காணும் இல்லற உறவுகூடத் திரைப்பாடல் எவ்வளவு பண்பாட்டோடு அன்று கூறியுள்ளது என்புதை நாம் இப்பாடலில் காணலாம். அப்பாடல்

"வண்டு வருகின்றது/மலரில் அமர்கின்றது /உண்டு சுவைக்கின்றது
உறங்கி விழுகின்றது /வானம் பொழிகின்றது /பூமி நனைகின்றது /மேனி குளிர்கின்றது
வெள்ளம் வடிகின்றது" என்ற இயற்கையாக நிகழும் நிகழ்ச்சிகள் வாயிலாக ஒரு இல்லற வாழ்வின் இனிய உறவைத் தெளிவு படுத்துகின்றார் கவிஞர்.

இவ்வாறு பழைய திரைப்பாடல்களில் பெண்மை போற்றப்பட்டன அறிகிறோம் இன்னும் அத்தகைய பாடல்கள் வெளிவந்து பெண்மையைப் போற்றுகின்றன. ஆனால் பல பாடல்கள் பெண்ணின் அங்கங்களைப் பற்றிக் கொச்சையாகக் கூறி வணிகம் செய்யும் பாடலாசிரியர்களின் பாடலாக உள்ளன. இப்பாடல்கள் அனைத்தும் பெண்ணைப் போகப் பொருளாகச் சித்திரிப்பதைக் காணுகின்றோம்.

இன்றைய பாடல்களில் பெண் - பா. விஜியின் பாடல்

"என்னோட மேனியது நெய்முறுக்கு /அங்கங்கே இருக்கு பாரு கை முறுக்கு" என்றும் கலைக்குமார்,
"நூலை வெட்டுங்கடா !/நம்ம மேரிப் பெண்ணே ஓரக்கண்ணாலே
நூலை வெட்டங்கடா !/கால விடுங்கடா ! மச்சி கால விடுங்கடா !
ஒண்ணும் ஆழம் பாக்கத் தேவையில்லே/காலவிடுங்கடா ! என்றும், மேலும்,
"ஆசை ஆசை இப்போது பேராசை எப்போது?" என்ற பாடலில் வரும் வரியில் கதாநாயகன் கதைநாயகியைப் பார்த்து "உன் இதழ்களைச் சுவைப்பது எப்பொழுது? என்று நேரடியாகக் கேட்பதாகவுள்ளது.

பழநிபாரதியின் பாடல்

"முழிச்சு முழிச்சு பாக்குதடி/நீ வளக்குற ரெண்டு மொசக்குட்டி/முழிக்குதடி கொட்ட கொட்ட முழிக்குதடி/ வளைச்சுப் புடிச்சு மூச்சு முட்டி/என்னை வேட்டையாடத் தூண்டுதடி ! என்று ஆணும்

அதற்குப் பெண்,

"உன்னை நான் உள்ளே விட்டா /துப்பு கெட்டுப் போகுமடா !/உன்னுடைய அம்பு பட்டா
மொசக்குட்டி நோகுமடா !/வம்பு வந்து சேருமடா ! என்று கூறுவதாக அமைந்து சிற்றின்பத்தைச் சில்லறை வியாபாரமாக்கியுள்ளமையைக் காணமுடிகிறது. மேலும், இப்பாடலில் வரும்,
"என்னுடைய வெத்தலைக்குச் சுண்ணாம்பு தரவேணாம்" என்ற வரிகளும்

முத்து விஜயின்

"வாடியம்மா வாடி புது வெத்தலை கொண்டாடியோ/போடுற சுண்ணாம்பு நான் அதில் கில்லாடி
கொஞ்சம் போட்டு சொதப்பிக்கிட்டா/குஷ்பு போல சிவக்குமடி !/கும்தலக்கடி கும்மா நான் கொடுக்கட்டுமா உம்மா?/சம்மதத்தைத் தாம்மா உன்னை ஆக்குறேன்டி அம்மா ! என்றும்

மேலும்,

"வெத்தலையைக் காம்பு கிள்ளித் /தடவும் போதில் /ஒரு ஈரம் ஈரம் முழுங்கையிலே /சுண்ணாம்பைப் பூசிக்கிட்டு /போடும் போதிலே /புது வேகம் ஏறும் உடம்பிலே!" என்றும் வெற்றிலைபோட்டே /பாடலில் குதப்புகிறார் பண்பாட்டை.

தற்போது வெளிவந்த

"இலந்தப் பழம்ம இலந்தப் பழம் உனக்குத்தான்/செக்கச் சிவந்த பழம் சிவந்த பழம் உனக்குத்தான் பால்பழம் உனக்குத்தான் பாயாசமும் உனக்குத்தான்"/என்றும் பாடுவதனைக் காணலாம்.
"பெண்ணே நீயும் பெண்ணா/பெண்ணாகிய ஓவியம்/கண்ணே ரெண்டு கண்ணா/ஒவ்வொன்றும் காவியம்" என்ற பெண்களைப் /போற்றும் திரைப்பாடல் உலகம் தான் /"வாடி மச்சி ! காதல் பட்சி ! உனக்கொரு கூடு இருக்குது பாரு" என்ற பாடலில் வரும் அடுத்த வரி கூறத்தகுதியற்றதாக அமைந்து பெண்ணை இழிவாகப் பாடிய நிலையை நமக்குக் கூறுகின்றது.

இவ்வாறு பெண்மைமையைப் பெண்ணின் அங்கங்களை நகைக்கும் வகையில் இழிவாக அவற்றின் அழகைக் கொச்சைப் படுத்தும் வகையில் வரும் பாடல்கள் பற்பல.

நம் தமிழில் பெண்மையையும், பெண்ணின் அழகையும், இலைமறைகாயாக உயர்ந்த உவமைகளோடு பெருமைபடக் கூற வார்த்தைகளா இல்லை? ஆனால் அதை விடுத்து அதனை நேரடியாக, கொச்சையான வார்த்தைகளைப் போட்டுப் பாடலாக்கி வணிக நோக்கில் எழுதப்படுவது வருந்தத்தக்கது, தவிர்க்க வேண்டியது.

இந்நிலை தொடர்ந்தால் கொச்சையான வார்த்தை நிலையும் கடந்து போய் பச்சையான வார்த்தைகளே இடம் பெற நாம் வாய்ப்பளித்தவர்களாவோம். எனவே சிறந்த இலக்கியங்களுக்கு மத்தியில் சீரழிக்கும் குப்பைகள் போல இவை திரைப்படப் பாடல்களுக்கு உரிய சிறப்பை, இலக்கியத்தைக் கரையானகளாக, களைகளாக உடனிருந்தே வீழ்த்தும் தன்மையன இவைகள் களையப்பட வேண்டும். அப்போதுதான் பெண்மைக்கு நாம் உண்மையிலேயே மதிப்பளிப்பவர்கள் ஆவோம்.

# பெண்ணியப் பார்வையில் "எதிரெதிர் கோணங்கள்"

*ம. ராஜாத்தி செல்வக்கனி,* எம்.ஏ., எம்.ஃபில்., தமிழத்துறை - முனைவர் பட்ட ஆய்வாளர் உயராய்வு மையம், அருள்மிகு பழனியாண்டவர் கலை மற்றும் பண்பாட்டுக் கல்லூரி - பழனி.

பல்லாயிரம் ஆண்டுகளாக ஆணாதிக்கத்தால் அடிமைப்பட்டிருந்த பெண்ணினம் இன்று ஆணாதிக்கத்தைத் தகர்த்துக் கொள்ள முற்படுகின்றது. இதனை இலக்கியங்களும் பிரதிபலிக்கின்றன. ஆணாதிக்கச் சமுதாயத்தால் பெண்கள் அடையும் துன்பங்களையும், அத்துன்பங்களிலிருந்துமு விடுபடுவதற்கான தீர்வையும் சூர்யகாந்தனும் தம் எதிரெதிர் கோணங்களில் எடுத்துக்காட்டியுள்ளார். இப்புதினத்தில் இடம் பெறும் பெண்ணியச் சிந்தனை இக்கட்டுரையின் ஆய்வுப் பொருளாகும்.

## பெண்ணியம் - விளக்கம்

பெண்ணியம் என்ற சொல்லை`Feminism` என்று ஆங்கிலத்தில் குறிப்பர். பெண் விடுதலை, பெண்ணுரிமை, எனப் பல்வேறு பெயர்களில் இன்று பெண்ணியம் என்பது சமுதாயத்தில் குறிப்பாக இலக்கியங்ளில் பேசப்பெற்று வருகின்றது. பல்லாண்டு காலமாக அடக்கி வைக்கப்பெற்றிருந்த பெண்ணினத்தின் எழுச்சிக் குரல் இப்பேது உரிமைக் குரலாக உருவெடுத்துள்ளது"1 என்று சுபாஷ் சந்திரபோஸ் குறிப்பிடுவதும், மேலும், "பெண்ணியம் என்பது பெண்ணைப் பற்றிய தலைப்பு. இது பெண்களுக்கானதாகவும், சமூகம், அரசியல், பொருளாதாரம், சமயம், வரலாறு மொழி ஆகியவற்றில் பெண்களின் பங்கினை விளக்குவதாகவும் அமைகிறது"2 என்று சரோஜா குறிப்பிடுவதும் பெண்ணியம் என்னும் சொற்பொருளின் விளக்கமாகும்.

இவ்விளக்கத்தின் அடிப்படையில் எதிரெதிர் கோணங்களை நோக்கும் பொழுது பெண் சுதந்திரம், பெண் கல்வி, பெண் மறுமணம் ஆகிய பெண்ணியச் சிந்தனைகளை சூர்யகாந்தன் குறிப்பிட்டுள்ளமை புலனாகும்.

## பெண்களுக்கு இழைக்கப்படும் துன்பங்கள்

பொதுவாகத் தமிழ்ச்சமுதாயம் ஆணாதிக்கச் சமுதாயம். ஆணாதிக்கச் சமுதாயத்தில் பெண்கள் ஆண்களால் அடக்கி ஒடுக்கப்படுகிறார்கள். இவ்வடக்குமுறையினைச் சூர்யகாந்தன் தமது புதினத்தில் குறிப்பிட்டுள்ள விதம் கீழ்வருமாறு

1. மகளுக்குத் தந்தையால் இழைக்கப்படும் துன்பங்கள்
2. மனைவிக்கு கணவனால் இழைக்கப்படும் துன்பங்கள்
3. பெண்களுக்கச் சமூகச் சூழலால் இழைக்கப்படும் துன்பங்கள்

### 1. மகளுக்குத் தந்தையால் இழைக்கப்படும் துன்பங்கள்

குடும்பத்தின் தலைவனாக விளங்குபவர் தந்தைதான். அன்பாக நடந்து கொள்ள வேண்டிய தந்தை தன் பெண்களை அடிமையாக நடத்துவது இச்சமுதாயத்தில் காணப்படுகிறது. இந்நிலை எதிரெதிர் கோணங்களில் சூர்யகாந்தனால் சுட்டிக்காட்டப்பட்டுள்ளது. இப்புதின ஆரம்பத்தில் கதையின் முதன்மைப் பாத்திரமாப் படைக்கப்பட்டுள்ள பாக்யரதி முதல் நாள் வேலைக்குச் செல்கிறாள். அவளின் தந்தை சீனிவாசன், புத்திமதி கூறி பஸ் ஏற்றி விடுகிறார். தந்தை தன் மகளுக்கு அறிவுரை கூறும்போது கடுமையான அநாகரீகச் சொற்களால் எச்சரிக்கின்றார். "இவரோட அளவுக்கு மீறின கண்டிப்பும், வீணான அதிகாமும் மற்றவர்களை எப்படியெல்லாம் நோகடித்துக் கொண்டிருக்கிறது என்பதை துளியாவது நினைத்திருப்பாரா இந்த அப்பா"3.... எனப் பாக்யரதி நினைப்பது தந்தை மீது அன்பை விட, வெறுப்புணர்வே மேலோங்கி நிற்பதைக் காட்டுகிறது.

பெண் குழந்தைகள் பிறப்பதைப் பெரும்பாலான ஆண்கள் வெறுக்கின்றனர். நான்கு பெண் பிள்ளைகளுக்குத் தந்தையாக விளங்குபவர் சீனிவாசன். நான்கு பெண் பிள்ளைகள் என்ற காரணத்தினாலே தன் மகள்களை வெறுக்கிறார்.

கணவனை இழந்த பாக்யரதியை நோக்கி, "மனதிலே நல்ல எண்ணத்தோட மணவறைக்குப் போயிருந்தா இப்படி மூளியாகுற நெலமை வந்திருக்காதுங்கிறேன். என்ன நினைச்சாளோ..... இனி ஏது நெனச்சாளோ அது அம்பாளுக்குத்தான் வெளிச்சம், இவ தரித்திரம் புடுச்ச பீடை. இப்ப ஆம்படையானோட ஆயுசைப் பறிச்சுண்டு மூலையிலெ கெடக்கிறா மூதேவி...."4 என்று சீனிவாசன் தன் மகளை கடுமையான சொற்களால் காயப்படுத்துகிறார். இக்கருத்துக்கள் தந்தை மகள் உறவு நிலையில் இருக்க வேண்டிய அன்புறவு

இல்லாது தந்தை, மகள் மீது ஆதிக்க உறவுடன் நடந்துகொள்வதை இப்புதினம் வெளிப்படுத்துகிறது.

## 2. மனைவிக்கு கணவனால் இழைக்கப்படும் துன்பங்கள்

பாக்யரதியின் கணவன் கங்காதரன் ஒரு குடிகாரன். மனைவி திருமணத்திற்கு முன்பே ஒருவனை காதலித்த உண்மையை அறிந்தவன். ஆதலால் அவளைக் கடுமையான சொற்களால் காயப்படுத்துகிறான், கொடுமைப்படுத்துகின்றான். இந்நிலையில் பாக்யரதிக்குள் எழுந்த ஆவேச உணர்வு கணவனை எதிர்த்து நிற்க எண்ணியது. ஆனால் பெண்களின் அவலநிலை காரணமாக அவ்வுணர்வு அவள் மனதினுள்ளேயே அடங்கிபோய்விட்டது. திருமணம் ஆன நாள் முதல் அனுதினமும் அந்தக் குடிகாரக் கயவனுக்குக் காவு கொடுக்கப்பட்டாள். "போதை ஏறிவிட்ட நிலையில்.... அவன் பண்ணுகிற அக்கிரமங்களைச் சகிக்க முடியாமல் தத்தளித்தாள் இவள்"5 என்று ஆசிரியர் குறிப்பிடுவது பெண்களுக்குக் கணவனால் இழைக்கப்படும் கொடுமைகளை எடுத்துகாட்டுகிறது. பெண்கள் பிறந்ததிலிருந்தே குடும்பம் என்னும் வட்டத்துக்குள் அடைபடுவதற்கென்றே உருவாக்கப்படுகின்றனர். வேதனைகளைத் தாங்கித் தாங்கி நொந்து போகும் உயிராகவே பாக்யரதி ஆளாக்கப்படுகிறாள். மனைவி என்பவள் கணவணின் கையடிக்கும், சொல்லடிக்கும், உள்ளாகும் நிலை ஏற்படுகிறது. கணவன் கயவனாகும்போதும், குடும்பம் நரகமாகும் போதும் அந்நரகத்தில் சிக்கித் தவிப்பவர் பெண்ணே.

## 3. பெண்களுக்குச் சமூகச் சூழலால் இழைக்கப்படும் துன்பங்கள்

திருமணம் என்ற பெயரால் பெண்களுக்குச் சமூகம் இழைத்து வரும் கொடுமைகள் பல. தனக்கு விருப்பமான ஒருவனைக் கணவனாக ஏற்கும் உரிமை பெண்களுக்கு மறுக்கப்படுகிறது. இத்தகைய நிலை இந்நாவலின் நாயகி பாக்யரதிக்கு ஏற்படுகிறது. தான் பணிபுரியும் நிறுவனத்தின் அசிஸ்டெண்ட் மேனேஜர் ராபர்ட்டை காதலிக்கின்றாள். ராபர்ட்டோ சமூக அந்தஸ்து மற்றும் மதம் காரணமாக காதலை திருமணமாக்கச் சிந்திக்க அவகாசம் கேட்கிறான். இந்நிலையில் தந்தையின் அடக்குமுறையால், விருப்பமின்றி கங்காதரனைத் திருமணம் புரிய வேண்டிய சூழல் பாக்யரதிக்கு ஏற்படுகிறது.

இதனை, "மணப்பெண்" எனும் நினைவு கூட அற்றவளாக ஒரு கைதியைப் போல் பாக்யரதி காணப்பட்டாள். வேரோடு பிடுங்கி எறியப்பட்ட பிறகு, மண் பெயர்த்த இடத்தின் சிதறலைப் போல் மனநிலை சஞ்சலப்பட்டது. கல்யாணம் நிகழவிருந்த அந்த அதிகாலை வேளையிலாவது தனக்கு விமோசனம் உண்டாகும் விளைவுகள் எவையேனும் உண்டாகக் கூடாதா?.... எனப் பிரார்த்தித்துப் பார்த்தாள். ஆனால், அப்படி எந்த விடிவெள்ளியும் முளைத்தெழுந்து இவளை நோக்கி வரவில்லை"6 எனச் சூர்யகாந்தன் குறிப்பிடுவதன் மூலம் அறியலாம். திருமணமாகி பதினைந்தாவது நாளே பாக்யரதி கணவனை இழக்கிறாள். "துக்கம் விசாரிக்க வந்தவர்களில் பெரும்பாலோர் பாக்யரதியை..... கபோதித்தனதோடும், கழிசடைத் தனத்தோடும் ஒரு மாதிரியாக வெறித்துப் பார்த்தனர்"7 என்று ஆசிரியர் குறிப்பிடுகிறார். ஆனால், அந்த ஒருவன் விதிவசத்தாலோ, எப்படியோ மாய்ந்து போனால், அவள் சபிக்கப்பட்ட பிறவியாக சமுதாயத்திலிருந்து தூக்கி எறியப்படும் குப்பையாக வீழ்ச்சியுறுகிறாள். பாக்யரதியின் கணவன் மாண்டு போனதற்கு இவளின் துரதிஷ்டம் தான் என்று சமுதாயம் நோக்குவதாச் சூர்யகாந்தன் எடுத்துக் காட்டியுள்ளார். பாக்யரதி மட்டுமின்றி அவளின் தங்கை கல்பனாவிற்கும் பாலியல் துன்பம் ஏற்படுத்த ஆண்வர்க்கம் முனைவதாகக் காட்டப்படுகிறது. கல்பனா தனியார் கம்பெனி ஒன்றில் பணிபுரிந்து வருகிறாள். கம்பெனி மேனேஜர் கணேஷ்மூர்த்தி பல பெண்களுடன் தொடர்பு உடையவர். ஒருநாள் மாலை வேளையில் கணேஷ்மூர்த்தி கல்பனாவிடம் தவறான முறையில் நடக்க முயற்சிக்கிறார். ஆனால் கல்பனாவின் தீடீர் தாக்குதலால் நிலைதடுமாறிப் போனார். அதிஷ்டவசமாகக் கல்பனா தன்னைக் காத்துக் கொள்கிறாள். இவ்வாறு, பெண்களுக்குக் கொடுமைகள் இழைக்கும் சமூக விரோதி பற்றிக் குறிப்பிடும் பொழுது ஆசிரியர், "கொழுத்துப் போன விலாங்க மீன்களையெல்லாம் உட்கார்ந்த இடத்திலிருந்தே பிடித்துச் சுவைத்தாலும் அவ்வப்போது பல்குத்திக் கொள்ளவாவது சிறு அயிரை மீன் கைவசம் வேண்டுமெனத் திட்டமிடும் ஓனர் கிழத்தின் நெஞ்சம் மார்க்கெட்டுக்கு வந்துவிட்டால் இன்னபொருளுக்கு இன்னவிலை என்று கணக்குப்போட்டு உறுதி செய்யும் வியாபாரத்தனம்"8 என்று சாடுவதை அறியலாம். இவ்வாறு பெண்களுக்கு இழைக்கப்படும் கொடுமைகளை எடுத்துரைத்த சூர்யகாந்தன் இக்கொடுமைகளிலிருந்து விடுபடுவதற்கும், பெண் சமுதாயம் மேம்படுவதற்கும் தீர்வுகளை தம் நாவலில் தந்துள்ளார்.

## புதினத்தில் சூர்யகாந்தனால் சுட்டிக்காட்டப்படும் தீர்வுகள்

1. குடும்பத்தினராலோ, சமூகத்தினாராலோ பெண்களுக்கு துன்பம் நேரும்போது தங்கள் வாழ்க்கையை அமைத்துக் கொள்ள தாங்களே முடிவெடுத்தல் அவசியம் எனச் சூர்யகாந்தன் குறிப்பிடுகிறார்.

“அன்பும் அமைதியுமாக இருக்கும் வரை, சாதுக்களுக்குள் எல்லாம் பெரும் சாதுக்களாக இருப்பவர்கள் பெண்கள், வீறு கொண்டு எழுந்து விடும்போது, வீரர்க்கெல்லாம் வீரராகத் திமிர்ந்து விடுவோரும் பெண்களே”9 என்று குறிப்பிடுவர். அடக்கி ஆளப்பட்ட பெண்ணாகப் படைக்கப்பட்ட பாக்யரதி தனக்கென ஒரு வாழ்வை அமைத்துக் கொள்ள தன் வீட்டை விட்டு வெளியேறுகிறாள் “...... என்ன வுட்டுடுங்க. இனி என்னோட வாழ்க்கையை எந்தவிதமாக அமைச்சுகிறதுண்ணு நா தீர்மானம் பண்ணிட்டேன். இதைத் தடுக்கிறதுக்கோ எதிர்க்கிறதுக்கோ உரிமை கொண்டாடாதீங்கோ....”10 என்று தந்தையை நோக்கி இவள் கூறுவது ஆணாதிக்கச் சமுதாயத்திற்கு விழும் சாட்டையடி என்பதில் ஐயமில்லை.

2. ஆணாதிக்கச் சமுதாயத்தில் சிலர் பெண்களின் சுதந்திரத்திற்கு உதவுபவர்களாகவும் இருக்கிறார்கள் என்பதை ரத்தினசாமி பாத்திரப்படைப்பின் மூலம் சூர்யகாந்தன் உணர்த்துகிறார். பாக்யரதிக்கு பள்ளி ஆசிரியர் ஜெகனாதனை மறுமணம் செய்து வைக்க ரத்தினசாமி முன் வருகிறார். “இது மறுமணம் தான்.... என்றாலும் இருமணம் கலந்து ஒருமனதான விஷயமாக ரத்தினசாமிக் மிக்க மகிழ்ச்சியை உண்டாக்கியது”11 என்று ஆசிரியர் கூறுமிடத்து பெண் சுதந்திரத்திற்கும், நல்வாழ்விற்கும் சில ஆண்களும் உதவிபுரிகின்றனர் என்ற உண்மையைப் புலப்படுத்துகின்றார்.

எனவே, பெண்கள் தங்களைக் காத்துக் கொள்ள, தங்கள் கைகளையே நம்ப வேண்டும் எனும் தீர்வினை இவ்வாசிரியர் முன் வைக்கிறார் எனலாம்.

3. பெண்களின் முன்னேற்றத்திற்குப் பெண்களும் வழிகாட்டுதல் வேண்டும் என்பதையும் சூர்யகாந்தன் சுட்டிக்காட்டுகிறார். இந்நோக்கில் சீரங்கத்து அத்தையின் பாத்திரம் படைக்கப்பட்டுள்ளது. பாக்யரதியின் முதிர்ந்த அத்தை, சிறுவயில் கணவனை இழந்து சீரழிவுகளை உணர்ந்தவள். “சீரங்கத்து அத்தைக்கு கிட்டத்தட்ட இந்த மறுமண விஷயம் சிறைப்பட்ட பறவைக்கு விடுதலை தருகிற ஒரு புண்ணிய காரியமாகவே பட்டது”12 என்று சூர்யகாந்தன் குறிப்பிடுவது மறுமணத்தை ஆதரிக்கும் விதத்தைப் புலப்படுத்துகிறது.

இதன் மூலம் பெண்கள் தங்களைத் தாங்களே காத்துக் கொள்வதோடு, அவர்கள் கொடுமைகளிலிருந்து விடுபட பக்கபலமாக சமுதாய அங்கத்தினர்களும் (ஆண்-பெண்) உதவ வேண்டும் எனும் தீர்வும் இவ்வாசிரியரால் தரப்படுவதை அறியலாம்.

*ஆண்டாண்டு காலமாக அடிமைப்பட்டுக்கிடக்கும் பெண் சமுதாயம்* இன்று கல்வி என்னும் பற்றுக்கோட்டை உறுதியாகப் பிடித்து பொருளாதாரத்தில் தற்சார்புடன் காலூன்ற வேண்டும். மேலும், தன்னம்பிக்கையும், எதனையும் சீர்தூக்கிப் பார்த்து முடிவு செய்யும் ஆற்றலும் கொண்டு, தன் வாழ்வினைச் செம்மையான வழியில் உறுதியுடன் நடந்த முனைய வேண்டும் எனும் தீர்வினைச் சூர்யகாந்தன் எதிரெதிர் கோணங்களாக உணர்த்தியுள்ள திறம் குறிப்பிடக்குரியது. ஆணும் பெண்ணும் சம உரிமை பெற்று வாழும் சமுதாயமே சிறந்த சமுதாயம் அமையும், இங்கு

“ஆணும் பெண்ணும் நிகரெனக் கொள்வதால்
அறிவிலோங்கி இவ்வையம் தழைக்குமாம்”13

என்ற பாரதியின் கருத்து நினைத்தற்குரியது.

## குறிப்புகள்

1. ச.சுபாஸ் சந்திரபோஸ், தமிழ் இலக்கிய வரலாறு, ப.352
2. கோ.சரோஜா, பெண்படைப்பாளர்களின் புதினங்களில் பெண்ணியப் பார்வை, ப.31
3. சூர்யகாந்தன், எதிரெதிர் கோணங்கள், ப.12
4. மேலது, ப.130
5. மேலது, ப.128
6. மேலது, ப.122
7. மேலது, ப.130
8. மேலது, ப.65
9. சாலை இளந்திரையன், சாலினி இளந்திரையன், தமிழ் தந்த பெண்கள், ப.147
10. சூர்யகாந்தன், எதிரெதிர் கோணங்ள், ப.156
11. மேலது, ப.158
12. மேலது, ப.146
13. பாரதியார், பாரதியார் கவிதைகள், ப.179

# வ.ரா.வின் "சுந்தரி" புதினத்தில் பெண்ணுரிமைச் சிந்தனைகள்

முனைவர். *ச. ராமமூர்த்தி,*
தமிழ் விரிவுரையாளர்,யாதவர் கல்லூரி,மதுரை - 14.

இருக்கும் ,நிலையை மாற்றிடப் புதிய சிந்தனைகளை யார் மொழிக்கின்றார்களே அவர்களைச் சமுதாயச் சீர்திருத்தவாதிகள் என்று மதிக்கின்றோம். அவ்வகையில் நாட்டு விடுதலை. பெண்விடுதலை, கலை இலக்கியங்களில் மறுமலர்ச்சி ஆகியவற்றைப் பற்றி ஆழமாகச் சிந்தித்து, தன் படைப்புக்கள் மூலமாகவும் வாழ்க்கை வரலாற்றின் மூலமாகவும் வாழ்க்கை வரலாற்றின் மூலமாகவும் கருத்துக்களை உணர்த்திய வ.ரா. (வ. ராமசாமி அய்யங்கார்)வை முதன்மையான சீர்திருத்தவாதிகளுள் ஒருவராகக் கொள்ளலாம். சீர்திருத்தவாதியான வ.ரா. தம்முடைய படைப்பிலக்கியத்தில் பெண்ணுரிமைச் சிந்தனைகளை விவரித்துள்ளார். வ.ரா. படைத்த முதல் புதினமான "சுந்தரி" யில் காணலாகும் பெண்ணுரிமைச் சிந்தனைகளை ஆராய்வதாக அமைகின்றது இக்கட்டுரை.

## சுந்தரி புதினக் கதைச்சுருக்கம்

பூமரத்தக்குடி நாட்டுக்கணக்கர் சுப்பராயர் - பர்வதம் தம்பதிகளின் மகள் சுந்தரி. மகன் முகுந்தன். மைசூரில் உள்ள பெரும் வசதிபடைத்த பையனுக்குச் சுந்தரியைத் திருமணம் செய்து கொடுத்தார்கள். சுந்தரியின் மாப்பிள்ளை மூளைக்காய்ச்சல் ஏற்பட்டு இறந்து போனான். அதனால் மணமான சிலநாட்களிலேயே சுந்தரி விதவையாகின்றாள். அப்பொழுது அவருக்கு வயது பதினொன்னு. முகுந்தன் படித்து பெரிய பணக்காரனாகின்றான். அவனுக்கும் பத்மா என்ற பெண்ணுக்கும் திருமணம் நடைபெறுகின்றது. இந்நிலையில் முகுந்தன் தாயார் இறந்துவிடுகின்றார். இதனால் தந்தையின் மனநலம் பாதிக்கப்படுகின்றது. இந்தச் சூழலில் சுந்தரி பருவமடைகின்றாள் (திருமணமான பின்பு பருவமடைகின்றாள்). சுந்தரி பருவமடைந்ததற்கு கொட்டு. முழக்கு போன்ற மங்கல நிகழ்சிகள் எதுவும் நடைபெறவில்லை. காரணம் சுந்தரி விதவை. சகுனத்தடை. படித்த முற்போக்கு எண்ணம் கொண்ட கந்தனின் திருமணத்திற்கு டாக்டருக்குப் படித்த வேதாந்தம் வருகின்றான். வேதாந்தம் முகுந்தனைச் சந்திக்கின்றான். முற்போக்கு மற்றும் சீர்திருத்த எண்ணம் கொண்ட வேதாந்தன் சுந்தரியை மணக்க முன்வருகின்றான். இந்நிலையில் சாதிக்கும் சாத்திரத்திற்கும் அடுக்காது என்று கூறி இத்திருமணத்தை எதிர்க்கின்றாள் சுந்தரியின் அண்ணி. வேதாந்தத்திற்கு அம்மை நோய் ஏற்பட முகுந்தனும் சுந்தரியும் உடனிருந்து உதவுகின்றார்கள். குணமடைந்த பின் வேதாந்தம் சுந்தரியை மணக்கின்றான். இதுவே சுந்தரி புதினத்தின் கதைக்கருவாகும்.

## விதவைக்கோலம்

அறியாப் பருவத்தில் விதவையாகின்ற சுந்தரியின் அவலநிலையினை வ.ரா:, "பொற்றாலியோடு எவையும் போம்" என்றார் ஒருவர். அதன் முழு உண்மையையும் உணரக்கூடாத பருவம். இருள் பிரியாத காலம். உலகத்தின் இயற்கையறியாத வயது. பொம்மையும் பள்ளிக்கூடமும்தான் தெரியும். பள்ளிக்கூடத்திலேயும் உபாத்தியாயர் தெரியும். பாடப்புத்தகம் தெரியும். சொல்லிக்கொடுக்கின்றதை படிக்கத் தெரியும். வெளித்தோற்றத்தையே கொண்டு மயங்குகின்ற வயது. பிறந்த சத்தத்துக்கொல்லாம் காடு கொடுக்கின்ற வயது. கிழிந்த மயிலிறகு குட்டி போடும் வயது. இந்த வயதிலே சுந்தரி விதவையானாள். விதவையென்ற வார்த்தைக்கு இந்தியாவிலே கொடுக்கின்ற முழு அர்த்தமும் அவருக்குத் தெரியுமோ? (வ.ரா., சுந்தரி, ப. 97) என்று விதவை என்ற சொல்லுக்குப் பொருள்புரியாத வயதில் விதவையானதைப் படம்பிடித்துக் காட்டுகின்றார்.

## விதவைத்துயர்

அந்தக்காலத்தில் இந்து சமூகத்தில் விதவை அலங்கோலப்படுத்தப்பட்டு கொடுமைக்குள்ளானாள். இத்துயர நிலையினை வ.ரா. தம்புதினத்தில் எடுத்துக்காட்டுகின்றார். நோய்வாய்ப்பட்ட சுந்தரியின் தந்தை சுப்பராயர் இறக்கும் பொழுது எழுதிவைத்துச் சென்ற உயில் கிடைக்கின்றது. அதில், "சுந்தரிக்கு அம்பட்டச்

சின்னப் பயலைக் கொண்டு மயிர் எடுத்துவிட வேண்டும்" (இராம. குருநாதன், வ.ராவின் சுந்தரி, இரா. மோகன், (பதி. ஆ) நாவல் வளர்ச்சி, பக். 53-54)என்பதாகும். இதன்மூலம் பழைமைவாதிகளால் இளம் விதவைகளுக்கு ஏற்படுகின்ற கொடுமைகளைக் காணமுடிகிறது.

### சகுனத்தடை

சமுதாயத்தில் கைம்பெண்களைப் பற்றி, மாங்கல்யப் பெண்கள் எத்தகைய கருத்துக் கொண்டிருந்தார்கள் என்பதையும் இப்புதினத்தின் மூலம் அவர் சொல்லத் தவறவில்லை. விதவைக் கொடுமையோடு பெண்களுக்கு மறுக்கப்பட்ட பிற வாய்ப்புக்களையும் பிற்போக்குவாதிகளின் கற்றாக எழுகின்றார் வ.ரா. "இவர்கள் என்ன வேலைக்குப் போகப் போகிறார்கள், வக்கில் வேலையா, கவர்னர் வேலையா? ஒன்றுக்கும் தோதில்லா பொம்மைகள். பெண்களுக்கு நகைகள் வேண்டும். நல்ல சேலைகள் வேண்டும். சமையல் தெரிய வேண்டும் மற்றபடி வேண்டியதில்லை.அதே சமயத்தில் நியாயத்தைப் பேசுகின்ற முற்போக்கு எண்ணம் கொண்ட ஒரு பெண்ணின் கற்பின் மூலமாக விதவைப் பெண்களுக்கு மறுமணம் செய்து வைப்பதில் தவறில்லை என்ற கருத்தையும் வ.ரா. முன்வைக்கின்றார். "அம்மா, ஏன் சுந்தரி இன்னொரு தரம் கலியாணம் செய்து கொள்ளட்டுமே அவருக்குத்தான் சொத்து இருக்கிறது என்கிறார்கள். நாணு மாமாவுக்கு ஒருதரம் சம்சாரம் செத்துப்போக. இரண்டாம் தாரம் கலியாணம் செய்து கொண்டிருக்கின்றாரே. அதுமாதிரி, நம்ம சுந்தரியும் கலியாணம் செய்து கொள்ளுகிறாள். மோசம் என்ன வந்துவிட்டது" (சுந்தரி, ப.99)

### ஒழுக்கக் கேடு

இளம்பெண்கள் கைம்மை மேற்கொள்ளுவதால் உண்டாகும் சமூகச் சீர்கேட்டினை, "நான் உடைத்துச் சொல்லுகிறேன், கம்மனாட்டிக் கல்யாணம் இல்லாததனாலேதான் குளத்திலும் ஆற்றிலும் குழந்தை எலும்புகள் அகப்படுகின்றன" (சுந்தரி, ப. 268) என உரையாடல் மூலம் உணர்த்தி மறுமணத்திற்கு வலுசேர்க்கிறார் வ.ரா.

### ஆணாதிக்கம்

தலைவிதி, சாஸ்திரம் ஆகியவற்றைக் காரணம் காட்டி, இளம் விதவைகளுக்கு மறுமணம் மறுக்கப்படுவதைக் கடுமையாகச் சாடுகின்றார். "ஆண்பிள்ளைகளுக்குத் தலைவிதி இல்லையோ? இதயம் இல்லாத மகாபாபிகள் சேர்ந்து சாஸ்திரம் எழுதிவிட்டு, கலியாணம் கூடாது கூடாது என்கிறார்கள். சாஸ்திரத்திலே நம்பிக்கை வைத்து மனிதன் தன் சொந்தப் புத்தியை இழந்துவிட்டான்" சுந்தரி, ப. 205) என்று சாடுகின்றார்.ஆண்கள் சாஸ்திரங்களைச் செய்தமையால், அவர்கள் தந்திரமாக தங்களுக்குச் சாதமான அவற்றை அமைத்துக் கொண்டனர் என்கின்றார். "விதவா விவாகம் ஏன் கூடாது என்று தடுத்திருக்கிறார்கள். ஆண்பிள்ளைகள் எழுதிய சாஸ்திரம், அதனாலேயோ?" (சுந்தரி, ப. 194).

### வரதட்சணைக் கொடுமை

இன்று பெண்ணடிமைத்தனத்தின் மிகப்பெரிய சிக்கலாக விளங்கும் வரதட்சணை பற்றிய ஆழமான உரையாடல்களைச் சுந்தரி புதினத்தில் காணமுடிகிறது. "நாலாயிரம் ரூபாயை வரதட்சணையாகக் கொடுத்துவிட்ட முத்துக்குட்டி அய்யர். மீதி ரூபாய் ஆயிரத்தைக் கொடுக்க முடியாமல் அல்லல்படுகின்றார். வரதட்சணைத் தொகை முழுவதையும் கொடுத்தால்தான் திருமணம் என்று மாப்பிள்ளை வீட்டார் இடும் கட்டளையினை, "இந்த லக்கினம் இல்லாவிட்டால் பாதகமில்லை. அடுத்த லக்கினமும் சுத்தமாகத்தானிருக்கின்றது. அந்த வசதியற்றவன், என்னடா, கல்யாணம் செய்கிறான். பாக்கித் தொகையைக் கீழே வைக்கச் சொல்லு, நோட்டுக் கண்டிப்பாய் வேண்டாம். ரொக்க ரூபாய் எண்ணி வைக்கச் சொல்லு, இல்லாவிட்டால் கல்யாணம் வேண்டாம். ஊருக்குக் கிளம்பிவிடுவோம்" (சுந்தரி, ப.155) என்று வரதட்சணைக் கொடுமையால் திருமணம் தடைபடும் நிலையினை விளக்குகின்றார்.ஒரே சாதியாக இருந்தாலும் ஆண் பிள்ளையைப் பெற்றவன், பெண் பிள்ளையைப் பெற்றவனைவிட ஒருபடி உயர்ந்தவன் என்ற ஆணவப் போக்கினை இந்த உரையாடல் காட்டுகின்றது. இப்புதினத்தின் மற்றொரு பகுதியில் இப்பிரச்சனைகளுக்குத் தீர்வையும் கூறுகின்றார். வ.ரா.தன் மகனுக்காக வரன்தேடும் சட்டப்பையர் தன் வசதியின்படி அவராகவே

கொஞ்சம் வரதட்சணை கொடுக்க முன்வருகின்றார். இறுதியாக அவரது மகளைக் கட்டிக்கொள்ள வந்த மாப்பிள்ளை தனக்கு வரதட்சணை வேண்டாம், பெண் மட்டும் போதும் என்று சொல்லிவிடுகின்றான். (சுந்தரி, ப. 244) இதன் மூலம் வரதட்சணை என்ற சமூகப் பிரச்சனைக்குத் தீர்வுகாணும் கடமை இளைஞர்களுக்கே உரியது என்பதையும் தெளிவுபடுத்துகின்றார் வ.ரா.

## மதிப்பீடு

தமிழ் சமூக நாவல்களைத் திறனாய்வு செய்த இரா. தண்டாயுதம் சுந்தரி கதையைக் கொண்டே வ.ரா. வை ஒரு புரட்சியாளராக மதிப்பீடு செய்கின்றார். புதினத்தில் இடம் பெறும் பெண் விடுதலை உணர்வினைத் திறனாய்வு செய்யும் போது, "விதவைத் துயரம் பற்றி ஆயிரம் சொற்பொழிவுகள் சாதிப்பதைவிடவும் ஆற்றல் உடைய இந்நாவல் மிகவும் சாதிக்கும்" (இரா. தண்டாயுதம், சமூக நாவல்கள், ப. 267) என்று "கல்கி" கூறிய கருத்தினை மேற்கோளாக எடுத்துமொழிகின்றார்.

## பெண்ணுரிமை

"பெண்ணியம்", "பெண்மை", "பெண்ணுரிமை", "மகளிர்நிலை", "பெண் ஏன் அடிமையானாள்"?, "பெண் அடிமைத்தனமும் பெண் விடுதலையும்" என்ற தலைப்புகளில் ஆய்வு நூல்கள் வெளிவந்திருப்பதோடு பல்கலைக்கழகங்களிலும் கல்லூரிகளிலும் இத்தலைப்புகளில் கருத்தரங்குகள் நிகழ்ந்து வருகின்றன. தன்னார்வக் குழுக்கள், மகளிர் அமைப்புக்கள் ஆகியன பெண்ணுரிமைகோரிப் போராட்டங்கள் நிகழ்த்துகின்றன. இந்திய நாடாளுமன்றத்தின் இரு அவைகளிலும் மகளிருக்கு 33% இட ஒதுக்கீடு குறித்த விவாதங்கள் நிகழ்த்தப்பட்டன. தமிழ்நாட்டில் உள்ளாட்சி அமைப்புகளில் மகளிருக்கு 33% இடங்கள் ஒதுக்கப்பட்டன. அது போன்று, கல்விநிலையங்களிலும் வேலைவாய்ப்பிலும் இடஒதுக்கீடு செய்யப்பெற்றுள்ளது. இந்த மாற்றங்கள் இயல்பாக நிகழ்ந்தவை அல்ல. மாயூரம் வேதநாயம் பிள்ளை, பாரதி, பெரியார் ஈ.வே.ரா., பாரதிதாசன், வ.ரா., மார்க்சிய சிந்தனையாளர்கள், மக்களாட்சியில் மெய்யான நம்பிக்கை உடையவர்கள் போன்ற சான்றோர்களின் முயற்சியால் முகிழ்த்தவையாகும்.

## முடிபுகள்

மாயூரம் வேதநாயகம் பிள்ளை, மாதவையா, பாரதி, பாரதிதாசன், பெரியார் ஈ.வே.ரா., ஆகியோரை முன்னோடிகளாகவும், அவர்களுடைய பெண்ணுரிமைச் சிந்தனைகளை அடிப்படையாகவும் கொண்ட வ.ரா. வின் பெண்ணுரிமைச் சிந்தனைகள் புரட்சிகரமாகத் தோன்றுகின்றன. வ.ரா. தன் படைப்பிலக்கியங்கள் அனைத்திலும் விதவை மறுமணத்தையும் பெண் கல்வியையும் வலியுறுத்துகின்றார். "விதவை சகுனத்தடை", "தீண்டாமைக்கொடுமை", "விதவைக்குக் கல்விமறுப்பு", "வரதட்சணை" என்ற மூத்த தலைமுறையினர் மூடநம்பிக்கை, சமூக முன்னேற்றத்திற்குத் தடைபோட்டதையும், "மறுமணம்", "பெண்கல்வி", "பகுத்தறிவு", ஆகியவற்றிற்கு இளைய தலைமுறையினர் வரவேற்பு நல்குவதையும் வ.ரா. வின் சுந்தரி புதினக் கதை நடப்பியல் போக்கில் சித்தரிக்கின்றது."விதவை நிலை" என்ற சமூகத்தீமையை ஒழிப்பதற்குப் பெண்ணுக்குக் கல்வியும், சட்டப்படியாகத் திருமண வயதை உயர்த்தவும், திருமணத்தில் பெண்கள் விருப்பம் பெறப்படவேண்டும் என்பதையும், சொத்தில் பெண்ணுக்கு சம உரிமையும் வேண்டும் என்கின்றார்.

# க.இராமச்சந்திரனின் ஹைகூ கவிதைகளில் பெண்ணியச் சிந்தனைகள்

*பொ. ராமநாதன்,*தமிழ் விரிவுரையாளர்,
ஸ்ரீ எஸ். இராமசாமிநாயுடு நினைவுக் கல்லூரி,சாத்தூர்.

ஜப்பானியக்கவிதை வடிவமான ஹைகூ தற்போது தமிழிலும் சிறப்புப்பெற்றுள்ளது. தமிழ் ஹைகூ கவிதைகள் சமுதாயத்தின் அனைத்துச் சிக்கல்களையும் தொட்டுகாட்டி வாசகர்களின் மனதில் சமூக உணர்வை ஊட்டுகின்றன. கல்லூரிப் பேராசிரியரான க. இராமச்சந்திரன் "ஐக்கூ பூக்கள்", "மழை பெய்தபிறகு" என்னும் இரு ஹைகூ கவிதைத் தொகுப்பு நூல்களை வெளியிட்டுள்ளார். அக்கவிதை நூல்களில் காணப்படும் பெண்ணியச் சிந்தனைகள் குறித்த ஹைகூ கவிதைகளை ஆராய்வதாக இக்கட்டுரை அமைகின்றது.

## தவமா? தவறா?

"அறிவிற் சிறந்த சான்றோர்கள் பெண்களையும் பெண்மையையும் உயர்வாகவே மதிக்கின்றனர்.

மங்கையராகப் பிறப்பதற்கே - நல்ல
மாதவம் செய்திடல் வேண்டும் அம்மா"

என்று பெண்மையின் சிறப்பைக் கவிமணி புலப்படுத்தினார். ஆனால் பெண்குழந்தை பிறப்பது தற்காலத்தில் பெரிய தவறுபோல் கருதப்படுகின்றது. பெண்களுக்குப் பல கொடுமைகள் இழைக்கப்படுகின்றன. ஹைகூ கவிஞர்கள் பெண்களுக்கு இழைக்கப்படும் கொடுமைகளுக்கு எதிராக அழுத்தமாகக் குரல் கொடுத்து வருகின்றனர்.

## வெறுப்பும் வேதனையும்

திருமண வாழ்க்கையில் "குழந்தைப்பேறு" என்பது கொண்டாடப்பட வேண்டிய செய்தியாகும். மனைவிக்குப் பிரசவம் சுகமாக அமைந்துவிட்டதால் கணவன் மகிழ்ச்சியடைவது இயல்பான ஒன்றாகும்.

ஆனால்,

"சுகப்பிரசவம் மனைவிக்கு
வேதனையுடன் கணவன்
பெண்குழந்தை" -1

என்னும் இராமச்சந்திரன் கவிதை தனக்குப் பெண் குழந்தை பிறந்ததை நினைத்து மகிழ்ச்சியடையாமல் வேதனைப்படும் ஓர் ஆணின் மனநிலையைச் சுட்டிக்காட்டுகிறது. ஆண்,பெண் பிறப்பதற்குக் "குரோமோசோம்கள்" மூலம் ஆணே முழு முதற்காரணமாக அமைவதை மருத்துவ அறிவியல் விளக்கியுள்ளது. ஆனால் அதைப் பற்றியெல்லாம் தெரிந்துகொள்ளாமல் தனக்குப் பெண் குழந்தை பிறந்ததற்காக மனைவியின் மீது வெறுப்புகொள்வதும் பிறந்த குழந்தையை நினைத்து வேதனைப்படுவதும் கணவனின் இயல்பாக உள்ளதை இக்கவிதை விளக்கியுள்ளது.

## பெண் குழந்தைக்கொலை

பிறந்த பெண் குழந்தையின் எதிர்காலத்தை நினைத்து கவலைப்பட்டு அக்குழந்தையைக் கள்ளிப்பால் ஊற்றியும், நெல்மணியைக் கொடுத்தும் கொல்ல முற்படும் நிலை இக்காலத்திலும் நடைபெறுகிறது. இவ்வாறு, தான் பெற்றெடுத்தக் குழந்தையைக் கொல்லத்துணியும் தாயைக் "கொலைகாரி" எனக் கவிஞர் எஸ். குமார் சாடுவார். கவிஞர் இராமச்சந்திரனும் தனது கவிதையில்

"பால் ஊற்றினாள்
இறந்தது குழந்தை
கள்ளிப்பால் -2"

எனக் கூறுகின்றார். குழந்தை அழும்போது தாய் பாலூட்டுவாள். சாகும் தருவாயில் உள்ளவர்களுக்குப் பால் ஊற்றுவார்கள். இங்கு பால் "ஊட்டினாள்" எனச் சொல்லாமல் "ஊற்றினாள்" எனச் சொல்வது கவிஞரின் சொல்லாட்சியைக் காட்டுகிறது.

## சிறை

"வண்ணச்சீறடி மண்மகள் அறிந்திலள்" என்னும் சிலப்பதிகார வரி திருமணம் நடந்தபிறகு வீட்டை விட்டு வெளியில் செல்லாத கண்ணகியின் கட்டுப்பாடான வாழ்க்கையைக் காட்டுவதாக உள்ளது. கண்ணகி காலம் முதல் இன்றைய கம்ப்யூட்டர் காலம் வரையில் ஒரு பெண்ணுக்குத் தன் உணர்வுகளைச் சுதந்திரமாக வெளியிடும் நிலை என்பது இல்லை. குழந்தைப் பருவத்திலிருந்தே கட்டுப்பாடுடனேயே பெண்

வளர்க்கப்படுகிறாள். அக்கட்டுப்பாடு பூப்புப்பருவம் எய்திய பிறகு மிகுதியாகின்றது. வீட்டின் கதவைத் தாண்டி எளிதில் வெளிவர முடியாத நிலையில் ஜன்னல் கம்பிகளின் வழியே வெளி உலகைக் காணும் அழகான பெண்ணின் அவலத்தை,

"தாமரை மலர்ந்தது
கம்பிகளுக்குள்
ஜன்னலில் பெண்" -3

என்ற கவிதையில் கவிஞர் இராமச்சந்திரன் வெளிப்படுத்தியுள்ளார்.

## வரதட்சணை

வாழ்க்கையில் திருமணம் என்பது இன்றியமையாத ஒன்றாகும். திருமணச்சந்தையில் மணமகனின் தரத்திற்கேற்ப பெண் வீட்டார் வரதட்சணை கொடுக்க வேண்டியுள்ளது. மணப்பெண் கருப்பாகவும் அங்கக் குறைபாடுகளுடனும் இருந்தால் சற்று கூடுதலாக விலை கொடுக்க வேண்டியிருக்கும். இவ்வாறு வரதட்சணை வாங்கும் மணமகன் வீட்டாரை "நவீனப் பிச்சைக்காரர்கள்" என்றும் "கொள்ளை அடிப்பவர்கள்" என்றும் ஹைகூ கவிஞர்கள் சாடுகின்றனர்.

"சொக்கத்தங்கம் நூறுபவுன்/ரொக்கப்பணம் ஐம்பதாயிரம்/ஸ்கூட்டர், டிவி எனப்
பட்டியலிடும் பொழுதுதான்/கண்டுகொள்ள முடிந்தது என்னால்/ஆனால்...
கதவு திறக்கும் பொழுதே/கண்டுகொண்டு குரைத்தது/என் வீட்டு நாய் "

என்ற தாமிரபரணியின் கவிதை வரதட்சணை வாங்குபவர்களைத் "திருடர்களாக" இனங்காட்டுகிறது. வரதட்சணை பணத்தில் ஆடம்பரச் செலவுகள் செய்யப்படுவதை,

/மின்னிக் கொண்டிருந்தது/திருமண அழைப்பிதழ்/வரதட்சணையின் தொகை - 4"

என்னும் கவிதை வெளிப்படுத்துகிறது.

## முதிர்கன்னி

வரதட்சணை கொடுக்க முடியாததாலும் பிற காரணங்களாலும் உரியகாலத்தில் திருமணம் ஆகாமல் இருக்கும் வயது முதிர்ந்த கன்னியரின் நிலையைக் கவிஞர் இராமச்சந்திரன் பின்வரும் கவிதைவரிகளில் சுட்டிக்காட்டியுள்ளார்.

ஜன்னல் கம்பிகள்/துருப்பிடித்தன/முதிர்கன்னி - 5

## காலந்தோறும் பெண்

பெண்களுக்கு எவ்வளவு கொடுமைகள் நிகழ்ந்தாலும் அவர்களிடம் உள்ள அழகு, கவர்ச்சியைப் பயன்படுத்தி பலர் பயனடைகின்றனர். பத்திரிக்கையின் விற்பனையைப் பெருக்க அழகான பெண்ணின் படத்தை அட்டைப் படத்தில் வெளியிடுகின்றனர். ஆனால் பல பெண்களுக்குச் சமயலறையைப் பெருக்கி பொருட்களைச் சுத்தம் செய்யவதிலேயே மிகுதியான நேரம் கழிந்துவிடுகிறது.

"பத்திரிக்கையின் முன்பக்கத்தில்/அடுப்பாங்கரையின் பின்பக்கத்தில்/காலந்தோறும் பெண்" - 6

## விடுதலை எப்போது?

காலங்காலமாக ஆணாதிக்கத்தின் பிடியில் சிக்கி அல்லலுறும் பெண்களுக்கு எப்படி, எப்போது முழுமையான விடுதலை கிடைக்கும் எனப் பலக்கவிஞர்கள் சிந்தித்துள்ளனர். கவிஞர் தமிழ்நெஞ்சன், "உறங்கும் எரிமலையைப்போல் அமைதியுடன் காட்சியளிக்கும் பெண் விழித்தெழுந்தால் விடுதலை பெறுவாள்" எனக் காட்டியுள்ளார். கவிஞர் இராமச்சந்திரனும் பெண்களைப் பொங்கியெழ வற்புறுத்துகிறார்.

"பொங்கியது அரைத்தமாவும்/அடுப்பில் வைத்த பொங்கலும்/பெண்ணே நீ" -7

அரைத்து வைத்த மாவும், அடுப்பில் வைத்த பொங்கலும் பொங்கும் போது அநீதி கண்டும் பெண்கள் பொங்கியெழாமல் அமைதியாக இருக்கலாமா? எனக் கவிஞர் கேட்கும் கேள்விக்குப் பதில் கிடைக்கும் காலம் வெகு தொலைவில் இல்லை.

## குறிப்புகள்

1. க. இராமச்சந்திரன், ஐக்கூபூக்கள், ப.11
2. க. இராமச்சந்திரன், ஐக்கூபூக்கள், ப.48
3. க. இராமச்சந்திரன், ஐக்கூபூக்கள், ப.65
4. க. இராமச்சந்திரன், ஐக்கூபூக்கள், ப.14
5. க. இராமச்சந்திரன், மழைபெய்தபிறகு, ப.74

# வாசந்தி நாவல்களில் சமூகமேம்பாட்டு உணர்வுடைய பெண் பாத்திரங்கள்

*வே. இராசா.* எம்.ஏ., எம்.ஃபில்.,முனைவர் பட்ட ஆய்வாளர்,தமிழ்த்துறை,
பாரதியார் பல்கலைக்கழகம்,கோயமுத்தூர் - 641 046.

வாசந்தி தமது பெண் பாத்திரங்களைப் பெண்ணுரிமை போற்றல், பெண் சிசுக் கொலைத் தடுப்பு என்ற ஆக்கபூர்வமான செயற்பாடு உடையவர்களாகப் படைத்துக் காட்டியுள்ளார்.பெண்கள் நல அமைப்பு பெண்சிசுக் கொலைத்தடுப்பு, ஆகிய களங்களில் பெண்கள் சமூக மேம்பாட்டு உணர்வுகளாகப் படைக்கபட்டிருப்பதை வாசந்தியின் நாவல்களில் காணலாம்.

## பெண்கள் நல அமைப்பு

தனித்துவமும், உரிமையும் பெற்ற பெண்கள் சமூக உணர்வாளர்களாகத் தமக்கென வாழாது பிறருக்கென வாழ முற்படுகின்றனர். இவர்கள் பெண்ணுரிமை, வரதட்சிணைக் கொடுமை பற்றிய விழிப்புணர்வு ஏற்படுத்துவதிலும் சமூக வளர்சிக்காகச் செயலாற்றுவதிலும் ஈடுபடுகின்றனர்.

தனித்தனியாகச் செயல்படுவதைக் காட்டிலும், "பெண்ணுரிமைச் சங்கங்கள்", "பெண்கள் நல அமைப்பு" என்ற அமைப்பின் கீழ், மகளிர் ஒன்று சேர்ந்து இயக்கமாகப் போராடுவதன் மூலம்தான் வெற்றி பெற முடியும் என்ற சிந்தனையை வாசந்தி தம் நாவல்களில் படைத்திருக்கின்றார்.

## பெண்ணுரிமை போற்றல்

சமூக நாவல்களில் பொதுப்பிரச்சனைகளுக்காக வாதாடுகின்ற பாத்திரப் படைப்புகள் சமூக உணர்வின் எதிரொலியாக அமைவது பொதுநிலை. "சமூகத்தின் ஓர் அங்கமான நாவலாசிரியரின் உளவியல் கட்டமைப்பு சமூக உணர்வின் திறவுகோலாக அமையும்" என்பது சமூக நாவல்கள் பற்றி ஆராய்ந்த லூயி கஸாமியானின் கருத்து.

பெண் எழுத்தாளர்களைப் பற்றி அனிதா தேசாய்,

"பெண் எழுத்தாளர்கள் பெண்கள் எதிர்கொள்கின்ற ஏதேனும் ஒரு
பிரச்சனைகளைப் பற்றிய உணர்வாளர்களாக இருக்கிறார்கள்"

என்று கூறுவது வாசந்திக்குப் பொருந்தி வருகிறது.

"சங்கமத்தைத் தேடி" - நாவலில் "தாரா" முற்போக்கு சிந்தனைவாதியாகவும், பெண் கொடுமையை எதிர்த்து நிற்பவளாகவும் சித்தரிக்கப்படுகிறாள்.

தாரா மாணவப் பருவத்திலேயே பொதுவுடைமைக் கொள்கையில் பிடிப்புடையவள். நாட்டில் வறுமைப் பிடியிலிருப்பவர்களை எண்ணி வருந்துகிறாள். திருமணம் செய்துகொண்ட பிறகும் தாரா பொதுநல சேவைகளில் ஈடுபடுகிறாள். பெண்கள் நலம் விரும்பி "மகளிர் நல அமைப்பு" ஒன்றை உருவாக்கிப் பெண்ணுரிமைக்காகப் பாடுபடுகிறாள். அவ்வமைப்பில் உறுப்பினரான "ரூபா" என்பவளிடம் அதிகாரி "லோபோ" முறைகேடாக நடந்து கொள்வதை அறிந்து அவனுக்கு எதிராக வழக்குத் தொடுக்க உதவுகிறாள்.

தாராவின் கணவன் கார்த்திக். அவள் சமூகப் பணிகளில் ஈடுபவதை கண்டித்துப் பேசுகிறான்.

"எந்தப் பெண் அவமானப் பட்டாலும் நா அவமானப்பட்ட மாதிரி
எனக்குப் பதற்றமேற்படறது. ஒரு பெண்ணுக்கு அநீதி ஏற்பட்டா
மொத்தப் பெண் சமூகத்தையும் அது பாதிக்கும். எனக்குள்ள இது
எவ்வளவு பெரிய துக்கத்தை ஏற்ப்படுத்துறதுன்னு உன்னால
புரிஞ்சுக்க முடியாது"

என்று பிறர் துன்பத்தைத் தன் துன்பமாக கருதுகிறாள். பெண்களிடத்து மண்டிக்கிடக்கின்ற இத்தகைய பலவீனத்துக்குக் காரணங்கள் உண்டு என்று அவன் கூறும் போது,

" பல நூற்றாண்டுகளாகத் தொடர்ந்து வரும் காரணங்கள்
சரித்திரக் காரணங்கள்............ பேர்விட்டுக் கிளை பரப்பிப்

பயங்கரமாக வளர்ந்து போய்விட்ட அதன் பயங்கரத்தை உணராத
ஜடங்கும்பராக இருக்கும் பெண்கள்"

என்றும் பெண்களுக்கான விழிப்புணர்வை ஏற்படுத்த வேண்டிய தேவையை கணவனுக்கு உணர்த்துகிறாள்.

### பெண்ணுரிமைச் சங்கங்கள்

வாசந்தி "எல்லையின் விளிம்பில்" நாவலில் பெண்களுக்கு விழிப்புணர்வு வேண்டும் என்பது மட்டுமின்றி, பெண்கள் எதிர்கொள்ளும் வரதட்சணை என்கின்ற அநீதியை எதிர்த்துப் போராடப் பெண்ணுரிமைச் சங்கங்கள் இருப்பதனையும் எடுத்துரைக்கின்றார்.

நாவலின் தலைமைப் பாத்திரம் மாலு என்ற மாலதி. பல்கலைகழகத்தில் எம்.எ., படித்தவள். பெண் வீட்டார் வரதட்சணைப் பேரம் நடத்தும் போது மணமகன் இதில் தனக்கு எவ்விதத் தொடர்பும் இல்லாதது போன்று இருப்பது கண்டு அதிர்நது போகிறாள். இதனாலேயே மணமகனைத் தனக்கு பிடிக்கவில்லை என்று மறுக்கிறாள். வரதட்சணை ஒரு சமூக வழக்கம் தானே என்று வாதிடும் தாயாருக்கு சமூகச் சீர்திருத்தம் வீட்டிலிருந்துதான் தொடங்க வேண்டும் என்று கருதும் மாலதி.

"இந்த தேசம் உருப்படாதும்மா. நல்ல ஆரோக்கியமான
உடம்பிருக்கு. வேலை செய்யற மூளை இருக்கு. இத்தனை
சர்க்கரை, இத்தனை நெய், இத்தனை மாவு போட்டா இந்தப்பதம்
வரும்முனு யோசிச்சு மைசூர்பாகு நிமிஷமா கிளர மூளையிருக்கு .
இந்த மாதிரி நடவடிக்கை எடுத்தா நம்ம சமூகத்திலே இருக்கிற
வெங்கடேஷ்களைப் பதம் பார்க்கலாம்னு மூளை வேலை
செய்யறதோ? அந்த மைசூர்பாகுக்கு கொடுக்கிற
முக்கியத்துவத்தை வரதட்சணைப் பிரச்சனைக்குக்குக் கொடுக்கறயா?"

என்று தன் தாயிடம் முறையிடுகிறாள். வரதட்சணை பற்றிய விழிப்புணர்வு பெற்றோர்களுக்கு வரவேண்டும். சிந்தனைத் தேக்கம் கொண்ட பெற்றோரை விழிப்படையச் செய்தாலே சமுதாயம் விழித்துக்கொள்ளும் என்று வாசந்தி கருதுகிறார். இதனை பெண்களின் வாழ்வுச் சிக்கலாகக் கொள்ளாமல் சமூகச் சிக்கலாக்கிக் கொண்டு எல்லா பெற்றோர்களும் வரதட்சணை வாங்கவும் கொடுக்கவும் மறுக்க வேண்டும் என்று வரதட்சணை சிக்கலுக்கு நடைமுறைப் படுத்தக்கூடியதொரு தீர்வையும் முன்வைக்கிறார்.

வரதட்சணை என்ற சமூகக்கொடுமை பற்றி ஆண் எழுத்தாளர்களும் இதே கோணத்தில் சிந்தித்துள்ளனர் என்பது ஒப்பிடத்தக்கது. பாலகுமாரன் தமது " கையோர முதலைகள்" என்ற நாவலில்

"பெண்கள் இங்கே விற்பனை பொருட்கள் வரதட்சணை
வாங்குபவனைக் காட்டிலும் எப்படியாவது விற்க
நினைக்கிறவன் தான் பாவி. இவன் தன் குழந்தைகள் மீது
அன்பிலாத தகப்பன்"

என்று குறிப்பிடுகிறார். வரதட்சணைப் பழக்கம் பற்றிய சமூக சிந்தனைகளில் எழுந்துள்ள மாற்றங்களின் எதிரொலியை இப்பகுதிகளில் இனம் காணலாம். இதே நாவலில் "கலா" என்பவள் வரதட்சணைக் கொடுமைக்குப் பலியாவது மாலதியின் வரதட்சணை எதிர்ப்புக் கோட்பாட்டிற்கு மேலும் வலிமை சேர்க்கிறது.

மாலதி அந்த அநீதிக்குத் தீர்வு பெறப் பெண்ணுரிமைச் சங்கங்களை நாட முடிவுசெய்கிறாள். அவள் தன் தாயிடம் ,

" நான் ஒரு யோசனை சொல்கிறேன் கேளு. உன்னுடைய
ஃபிரெண்டஸ் எல்லாம் இருக்காள்லியோ... அவளோட மனசை
மாத்தப்பாரு.... சக்தி இருந்தாலும் வரதட்சணை
கொடுக்கக் கூடாதுன்னு சொல்லு. நான் இந்ா கலாவுடைய
கேஸைப்பத்தி நிச்சயம் பேப்பருக்கு ரிப்போர்ட் பண்ணப்போறேன் !

............நிறைய பெண்ணுரிமைச் சங்கங்கள் இருக்கு.

எல்லாத்துக்கும் நான் போன் பண்ணுறேன். போலீஸ் வந்து

அவாளை தண்டிக்கும் வரை சும்மா இருக்கக் கூடாது"

என்று கூறுகிறாள். தன் தாயும் தாயின் நட்பு வட்டமும் தொடர்ந்து உலகப் பெண்களுமாக வரதட்சணைக் கொடுமைக்கு எதிராகச் செயல்பட முற்படவேண்டும் என்ற தன் இலட்சியத்தை முன் வைக்கிறாள். ஒரு தாயிடம் தோன்றும் விழிப்புணர்வு அதன்மூலம் பத்து, நூறு, ஆயிரம் தாய்மார்களிடம் பரவி சமுதாயச்சீர்திருத்தம் ஏற்படும் என்பதனை வாசந்தி புலப்படுத்துகிறாள்.

பெண்களுக்கு எதிராக வரதட்சணைக் கொடுமை, எரியூட்டப்படுதல் ஆகியவற்றைக் கண்டித்து வீட்டின் முன் ஆர்ப்பாட்டம் நடத்துவதை பார்க்கும் போது புதிய சகாப்தம் உருவாகியதைப் போல் தோன்றுகிறது என்னும் ஆசிரியரின் கூற்று வரதட்சணைக்கு எதிராக ஆசிரியரின் வலுவான நிலைப்பாட்டைச் சுட்டுகிறது.

### பெண்சிசுக் கொலைத் தடுப்பு

மரபுவழிச்சிந்தனைகளாலும், சமூக கருத்தாக்கங்களினாலும் பெண் குழந்தைகள் பிறக்கும் போதே அழிக்கப்படுகின்ற அவலநிலை காணப்படுகிறது. ஒரு குடும்பத்திற்கு பெருஞ்சுமை என்று கருதும் போக்கு நிலவுகிறது. பெண்சிசுக் கொலைகள் வடமாநிலங்களிலும் பெருகியிருந்தன. ஆங்கிலேயர்கள் இச்சமூக வழக்கத்தைக் கடுமையாகக் கண்டித்தனர். புள்ளி வவரங்களைத் திரட்டி வெளியிட்டு மக்களிடம் ஒரு விழிப்புணர்வை உருவாக்க முயன்றனர். விடுதலைக்குப் பிறகும் அரசு இச்சமூகக் கொடுமையை சட்டங்கள் மூலமாகவும் பல்வேறு திட்டங்கள் மூலமும் வேரறுக்க முயன்று வருகிறது. 1870ல் பெண் சிசுக் கொலை தடுப்புக்கான சட்டம் நிறைவேற்றப்பட்டது. அறிவியல் முன்னேற்றம் பெண்சிசுவைக் கருவிலேயே அழிக்க உறுதுணை செய்தபோது 1994ல் கருவிலேயே குழந்தையின் பாலை இனங்கண்டுபிடித்து அழிக்கின்ற போக்கைத் தடுக்க அரசு சட்டமியற்றியது.

2001ல் எடுக்கப்பட்டதொரு புள்ளி விபரம் தமிழகத்தில் நிலவும் பெண்சிசுக் கெலையின் பரிணாமத்தை உணர்த்துகிறது.

" 1000 பெண் குழந்தைகள் பிறப்பில் 15.8 சதவீதம் பெண்
குழந்தைகள் இறக்கின்றன. சேலத்தின் 1000 குழந்தைகள்
பிறப்பில் 54 சிசுக்கள் கொல்லப்படுகின்றன. சேலத்தை அடுத்து
தர்மபுரியில் 42 சிசுக்களும், தேனியில் 36 ம், மதுரையில் 20ம்
வேலூரில் 24 சிசுக்களும் கொலை செய்யப்படுகின்றன"

மக்களும் பெண்களும் விழிப்புணர்வு பெற்றாலொழியப் பெண் சிசுக் கொலையை நாட்டிலிருந்து ஒழிக்க இயலாது என்று மகளிர் கருத்தரங்கங்களும் அரசும் அறிவுறுத்தி வருகின்றன.

"கருவில் உள்ள குழந்தைகளின் குறைபாடுகளை அறிந்து ஆவண
செய்வதற்காக கண்டுபிடிக்கப்பட்ட அற்புதமான மருத்துவ
முன்னேற்றத்தைப் பெண்குழந்தைகளின் அழிவுக்குப்
பயன்படுத்துவது தடுக்கப்படவேண்டும்"

என்று தமிழ்நாடு மாநில மகளிர் ஆணையக்குழுத் தலைவர் வசந்திதேவி வலியுறுத்துகிறார்.

வாசந்தியின் "கடைசிப் பொம்மைகள்", "கடைசிவரை" என்ற இரு நாவல்களும் பெண்சிசுக் கொலை பற்றிய விழிப்புணர்வையும், சிசுக் காப்பகங்களின் சேவை மனப்பான்மையையும் எதிரொலிக்கின்றன.

"கடைசி பொம்மைகள்" நாவல் சிசுக் கொலைத் தடுப்பினை சித்தரிக்கின்றது. பெண் சிசுக் கொலை மிகுதியாக நடக்கும் "கருமாத்தூர்" கிராமத்திற்கு நேரடியாகச் சென்று அதைத் தடுத்து அக்குழந்தைகளை மீட்கும் பணியையும், மீட்ட குழந்தைகளை காப்பாற்றும் காப்பகத்தின் சேவையையும் இந்நாவல் சித்தரிக்கின்றது. அக்காப்பகத்தில் வளர்க்கப்படுகிறவர்களும் பணிபுரிபவர்களும் பெண்சிசுக் கொலையிலிருந்து மீட்கப்பட்டு வளர்க்கப்பட்டவர்கள்.

# பெண்ணிய வாசிப்பின் இயங்கு தளத்தில் சத்திய சோதனை - நாடகம்

முனைவர். *இரா. ரெங்கம்மாள்*, இணைப்பேராசிரியை - தமிழ்த்துறை,
அ.ப.ம. கலைக்கல்லூரி, சி.க. புதூர், பழனி.

## முன்னுரை

சத்தியசோதனை நாடகம் முனைவர். கே.ஏ. குணசேகரனின் படைப்பால் உருவாக்கப்பட்டது. இவர் தன்னானே இசைக்குழுவைச் சேர்ந்தவர். பெண்ணடிமைத்தனம் இன்றுவரை மாறவில்லை. அது நவீன வடிவம் பெற்றுள்ளது என்பதை இந்நாடகம் பல இடங்களில் பதிவு செய்துள்ளது. அரிச்சந்திரன் கதையும், பெண்களுக்குச் சமூகமும், காவல்துறையும் இழைக்கும் கொடுமைகளும் என்பதும் சேர்ந்து நடைபெறும் பழைய புதிய நாடகக் காட்சிகளின் இடையே, முளைப்பாரி, அக்கினிச்சட்டி ஆட்டங்கள் மேடையில் தோன்றுகின்றன. முளைப்பாரி புதுமைகளை வரவேற்கும் குறியீடாகவும், அக்கினிச்சட்டி பெண்களின் கொடுமைகளுக்கு எதிரான ருத்ரதாண்டவக் குறியீடாகவும் காட்டப்பட்டுள்ளது. இந்நாடகத்தில் பெண் உரிமைக்காக, சமத்துவத்துக்காகப் போராடும் பெண்ணிய வாசிப்பினை நாடகம் முழுவதிலும் காணலாம்.

## பெண்ணியம் - விளக்கம்

அடிமைப்பட்டு, உரிமைகள் மறுக்கப்பட்டிருக்கும் பெண்களுக்கு விழிப்புணர்வை ஏற்படுத்தும் நோக்கில் உருவானதே பெண்ணியம். ஆக்ஸ்போர்டு அகராதி பெண்ணியம் என்ற சொல்லுக்குப் பெண்களின் தேவையை நிறைவேற்ற அவர்கள் சார்பாக வாதாடுவது, போராடுவது என்ற பொருளைத்தந்துள்ளது. 1. (இரா. பிரேமா, பெண்ணியம், ப.11)."பெண்ணியம் என்பது பெண்களின் எல்லாச் சிக்கல்களையும் புரிந்து கொண்டு அவற்றை நீக்க முயல்வதாகும். அதன் மூலம் உலக அளவில் அரசியலிலும், பண்பாட்டிலும், பொருளாதாரத்திலும், ஆன்மீகத்திலும் பெருத்த மாற்றத்தினை ஏற்படுத்த முடியும்"2. என்கிறார் சார்லட் பஞ்சு. (ஆய்வுக் கோவை 2003, ப. 1465)

சென்ற நூற்றாண்டின் பிற்பகுதியில் விதைக்கப்பட்டு இருபதாம் நூற்றாண்டில் காலூன்றி, இந்த நூற்றாண்டில் முளைவிட்டும் பெண்ணியம் வளர்ந்து கொண்டிருக்கின்றது. எனவே பெண்ணியம் என்பது பெண்கள் தங்களின் பிரச்சனைகளை, சிக்கல்களை, அரசியல் சமூக பொருளாதார ஏற்றத் தாழ்வுகளைத் தாங்களே சிந்தித்து, தங்களது மனக்கட்டுப்பாட்டிலிருந்து முழுமையாக வெளிப்படுத்துவது ஆகும்.

## நாடகக் கதை அமைப்பும் போக்கும்

அரிச்சந்திரன் மயான காண்ட நாடகம் தன் பாரம்பரிய கட்டியங்காரனின் ஆரவாரத்தோடு தொடங்குகிறது. கூட்டத்திலிருந்த வசந்தா என்ற இளம்பெண் சந்திரமதியின் நிலை பெண்ணடிமைத்தனத்தையே வற்புறுத்துகின்றது, ஆகவே அந்நாடகத்தை நடத்தக்கூடாது என்று எதிர்க்கிறாள். கட்டியங்காரனுக்கும் இளம் பெண் வசந்தாவுக்கும் வாக்குவாதம் நிகழ்கிறது. இறுதியில் அவர்கள் அரிச்சந்திர நாடகம், மயான காண்டத்தையும் இன்றைய சமுதாயத்தில் பெண்களுக்குச் சமூகமும், காவல்துறையும் இழைக்கும் கொடுமைகளையும் சேர்த்து இரண்டு நாடகங்களாக நடத்த ஒப்புக்கொள்கின்றனர். நாடக அரங்கின் மேல் தளத்தினல் அரிச்சந்திரன் நாடகமும், கீழ் தளத்தில் பெண்ணுரிமைச் சிந்தனையை வலியுறுத்தும் நவீன நாடகமும் மாற்றி மாற்றி நடத்தப்படுகிறது.

## நாடகத்தில் பேசப்படும் பெண்ணிய கருத்தாக்கங்கள் :

அரிச்சந்திர நாடகம் வழக்கமாகச் சத்தியம் தவறாத அரிச்சந்திரனின் உறுதியை, சிறப்பை, மையமாகக் கொண்டு விரிகிறது. இந்நாடகத்தில் அரிச்சந்திரனின் கொள்கைக்காகச் சந்திரமதிக்கு ஏற்பட்ட கொடிய துயரம், அவமானத்தை மையமாகக் கொண்டு விளங்குகிறது. இன்றைய சமூகத்தில் உள்ள பெண்குழந்தைகள் கல்வியில் புறக்கணிக்கப்படுவது, வரதட்சணைக் கொடுமை, ஆண்களோடு பேசக்கூடாது, மனம் விட்டுச் சிரிக்கக் கூடாது, இல்லற வாழ்க்கையில் சமத்துவமின்மை ஆகியனவும் சித்தரிக்கப்பட்டுள்ளது.

## ஆணாதிக்கத்தைச் சாடுதல் :

பெண்ணியக் கருத்தாக்கங்களில் ஆணாதிக்கத்தை எதிர்தத்ல் என்பது குறிப்பிடத் தகுந்த ஒன்றாகும். அரிச்சந்திரனின் மனைவி சந்திரமதி ஒரு சத்திய சோதனை வாழ்க்கை வாழ்கின்றாள். மகாத்மாகாந்தி தொடங்கி இன்று வரை அரிச்சந்திரன் சத்திய வாழ்க்கை வாழ்ந்தான் என்றே பேசினார்கள். எழுதியும் வந்தார்கள் சந்திரமதி ஒரு பெண்ணாக இருப்பதால், அவள் வாழ்க்கையைப் பற்றி யாரும் அறியத் தவறிவிட்டார்கள். அக்காலச் சந்திரமதிகள் இன்னும் நம்மிடையே உள்ளார்கள். அந்தச் சந்திரமதியைப் போல தலைகுனிவோராக இன்றைய

பெண்கள் இல்லை. பிரச்சனைகளை எதிர்கொள்பவர்களாகவே உள்ளனர் என்பதை இந்நாடகத்தின் வாயிலாக அறிய முடிகின்றது.

### சந்திரமதியின் சத்திய சோதனை வாழ்க்கை மறைக்கப்படல்

அரிச்சந்திரனுக்கு ஏற்பட்ட சத்திய சோதனையை இந்நாடகத்தைப் படிப்பவர் அனைவரும் அறிவர். இந்நாடகத்தில் சந்திரமதியின் சத்தியசோதனை மறைத்து அமுக்கி வைக்கப்பட்டுள்ளது தவிர்க்க இயலாததாக உள்ளது. அரிச்சந்திரன் தன் கொள்கைகளாகத் தன் மனைவியை விலைக்கு விற்றது இங்கு கேள்விக்கு உள்ளாக்கப்படுகின்றது. "தனி மனிதச் சுதந்திரம் வலியுறுத்தப்பட்டதென்றால் அது ஒரு பெண்ணுக்கும் உரியதுதான். மனித இனத்துக்கான சகல உரிமைகளையும் அனுபவிக்கும் தகுதி ஆண்களுக்கு இருப்பது போலவே பெண்களுக்கும் உண்டு. பெண் என்று பாலியல் வழி நோக்காமல் மனித இனப் பிரிவாகவே காணவேண்டும். அறியாமை அவள் குற்றமன்று. அத்தகைய சூழலுக்கு அவளை ஆளாக்கியது ஆண்மகனின் குற்றமேயாகும்"3. (தேவதத்தா, பெண்ணியம், ப. 13) என்று பெண்ணியலாளரான மேரி உல்ஸ்டோன் கிராப்ட் கூறியிருப்பது இங்கு ஆழ்ந்து சிந்திப்பதற்குரியது. அரிச்சந்திரனின் மனைவி சந்திரமதியை அரிச்சந்திரனே விலைக்கு விற்ற செயல், பெண்ணடிமைத்தனத்தில் ஆணாதிக்கத்தின் எதேச்சாதிகாரப் போக்கையே காட்டுகின்றது. சந்திரமதியும் உண்மையான, தூய வாழ்க்கையே வாழ்கின்றாள். எனினும் தனக்கு வந்த இன்னல்களைத் தாங்கிக் கொண்டு வாழ்ந்தாள். எனவே பெண்ணடிமையின் குறியீடாக சந்திரமதி நாடகத்தில் படைக்கப்பட்டுள்ளார்.

### வசந்தா - சந்திரிகா இருவரும் பெண்ணின முன்னோடிகள்

சந்திரிகா என்னும் முதிர் கன்னி ஒருத்தி தம் தோழர்களுடனும், தோழியர்களுடனும் கூட்டம் போட்டு பெண்ணுரிமைக்காகப் போராடும் எம்.ஏ., படித்த வேலையில்லாத பட்டாதாரியாகவும், நாடகத்தில் பெண்ணியக் கருத்துக்களை விதைக்க குறிக்கோள் நிலையில் படைக்கப்பட்டுள்ளார். துணிச்சலுடன் பல சோதனைகளை எதிர்கொள்கின்றார். உண்மையான வாழ்க்கை வாழ்வோருக்கு இச்சமூகம் காலம் காலமாகத் தரும் சத்திய சோதனையே இது."பெண்கள் தாங்களே ஒன்று சேர்ந்து இச்சமூகத்தில் விடுதலைக்கான ஒளிக்கீற்றையும் உரிமைகளையும் பெற முயல வேண்டும்" 4. (தேவதத்தா, பெண்ணியம், ப. 17).என்ற பெண்ணியலாளரின் சிந்தனைகள் முன்னெடுத்துச் செல்லும் வீரியம் மிக்கப் பெண்ணாக வசந்தாவும், சந்திரிகாவும் செயல்படுகின்றனர்.

### பெண்ணுரிமையின் எதிர்ப்புக்குரல் வெளிப்பாடு

நாடக அரங்கின் மேல்தளத்தில் நடைபெற்ற சந்திரமதியின் அடிமைத்தனத்தை, அரிச்சந்திர நாடகமாகப் பார்க்க விரும்பவில்லை என்று கூறி புதிய நாடகம் ஏதாவது இருந்தா நடத்து என்று கட்டியங்காரனிடம் வசந்தா என்ற பெண் எதிர்ப்புக் குரல் கொடுக்கின்றாள், அதற்கு அவன்,"நான் என்ன பொம்பளகப் பேச்சு கேட்கிற பொட்டப் பயலா?"5. என்று கூறி பெண்ணினத்தை இழிவுபடுத்துகின்றான். (கே.ஏ. ஞானசேகரன், சத்தியசோதனை, ப. 5)

### கிளர்த்தெழுந்து பெண்ணியம் பேசும் வசந்தா

கட்டியங்காரன் பெண்களை உடைமைப் பொருள் போல கூறியதைக் கேட்ட வசந்தா,

> *"பொம்பளைங்கன்னா கிள்ளுக்கீரையா போச்சுதா!*
> யோவ்! பொம்பளைங்கள கேவலமாகப் பார்க்கிறதோ, பேசுறதோ (கை கட்டை விரலை அசைத்து) இனிமேல் செல்லாது"6. (மேலது, ப. 5)

பெண்ணியத்தின் உரிமைகளையும் எழுச்சியையும் வசந்தா மூலமாக நாடக ஆசிரியர் பேச வைத்துள்ளார்.

> "பெண்களுக்கென ஆணைச்சாராத ஒரு பின்புலம் தேவை இருக்கிறது"7.
> (தேவதத்தா, பெண்ணியம், ப. 11)

என்ற பெண்ணியக்கோட்பாளரின் கருத்தே இங்கு வலியுறுத்தப்பட்டுள்ளது.

### வரதட்சனைக்கொடுமையை விளக்கும் சமுதாயச் சாடல்கள்

கட்டியங்காரன் சந்திரிகாவைப் பார்த்துவிட்டு,

"பெண்ணாகப் பொறந்தவிகளுக்குச் சட்டுப்புட்டுன்னு கலியாணம் பண்ணாமலிருந்தா பேசமாட்டாங்களா? நாலுபோர் நாலு விதமாத்தான் பேசுவாங்க, கழுத வயசு ஆனபிறகு கூட காவாலிப்பய கூட கலியாணம் பண்ணிக்கிற வரமாட்டான்?"8. (மேலது, ப. 9)

என்று கூறி பெண்மையை இழிவு படுத்திய போது, வசந்தா புரட்சிக் கனலாகக் கிளர்த்தெழுந்து

பெண்ணியம் பேசுகிறாள்,"மேகம் மழைபொழியலென்ன அதற்கு மேகம் மட்டும் காரணமில்லே, இயற்கை சூழல்கள்தான் மழையைத் தீர்மானிக்குது, அதுபோல இவுங்க (சந்திரிகாவுக்கு) கலியாணம் பண்ணாததுக்கு அரசியல், பொருளாதாரச் சூழ்நிலைகள் தான் காரணம். கலியாணம் பண்ணிக்கிறதுக்கு மனசுதான் முக்கியம், வயது முக்கியமில்ல"9. என்று பெண் முன்னேற்றச் சிந்தனைகள் பேசப்பட்டுள்ளன. (மேலது, ப. 9)

### பெண்கள், தங்கள் திருமணத்தை தாங்களே தீர்மானித்துக் கொள்ள வேண்டும்

பெண்ணியச்சார்பாளரான வசந்தா, "சாதி இல்லாம ! சமயமில்லாம ! சீதனமில்லாம !எவன் ஒருத்தன் என்னைய விரும்பி கலியாணம் செஞ்சுக்க ஆண்மகனா முன்வறானோ....... அந்த மாதிரி முழு மனுசனத்தான் நான் கலியாணம் பண்ணிக்கிறதாய் இருக்கேன்"10 என்று கூறி பெண்கள் உரிமையைச் சிந்திக்கத் தூண்டுகிறார். (மேலது ப. 10). "திருமண ஒப்பந்தம் மாற்றப்பட வேண்டும் சட்டத்தின் முன் அனைவருக்கும் சமத்துவம் நிலவவேண்டும்"11. என்று பெண்ணியலாளரான மில் வாதாடினார். இக்கருத்தையே ஆசிரியர் வசந்தா என்ற புரட்சிப் பெண்ணின் வாயிலாகப் பேச வைத்துள்ளார். (தேவதத்தா, பெண்ணியம் ப. 13)

### பெண்ணே பெண்ணுக்கு எதிரி

சந்திரமதி தர்பபைப் பறிக்கச் சென்ற மகன் லோகிதாசனை விடம் தீண்ட, அம் மகனை அடக்கம் செய்ய தங்களை விலைக்கு வாங்கியிருக்கும் காலகண்ட அய்யரிடம் அனுமதி கேட்கிறாள். காலகண்டரின் மனைவியோ,

"என்னடி சந்திரா வீட்டு வேலைகளெல்லாம் செஞ்சிட்டியா? இல்லையா? அடுப்புக் கூட்டிச் சாம்பல் அள்ளிட்டியா? வாசல் கூட்டிச் சாணம் தெளிச்சுக் கோலம் போட்டியா?................"12.

என்று அதிகாரம் செலுத்தியதிலிருந்து பெண்ணே பெண்ணுக்கு எதிரி என்பதை நாடகத்தின் இப்பகுதியில் தெளிவுபடுத்தப்பட்டுள்ளது. (சத்தியசோதனை ப. 13)

### சமமான பணிப்பங்கீடு வேண்டும்

பெண்ணியக் கருதாங்களில் பணிப்பங்கீடு என்பது முக்கியமான ஒன்று. வசந்தா, பணிப்பங்கீடு என்பது இன்றுவரை ஆணுக்கும் பெண்ணுக்கும் சமப்படுத்தப்படவில்லை என்பதை

"இப்பமட்டும் என்ன வாழுது, புருஷனும் பொஞ்சாதியும் சேர்ந்து வேலைக்குப் போறாங்க, சேர்ந்துதான் வாராங்க? திரும்ப வீட்டுக்கு வந்ததும் புருஷன் மட்டும் ஓய்வெடுத்துக்குவார். பொண்டாட்டி அரைக்கனும், துவைக்கனும். பெண்களுக்கென ஒதுக்கி வச்ச இந்த வேலைப்பாடுகள் இன்னும் ஓயவே இல்லை"13. (மேலது, ப. 16). என்று வசந்தா மூலம் ஆணாதிக்கத்தைச் சாடியுள்ளார்.

### ஸ்டவ் அடுப்புகள் மருமகள்களை மட்டுமே எரித்தல்

நாடகத்தின் 5ம் காட்சியில் வெள்ளைத்துணியால் போர்த்தப்பட்ட சடலம் கட்டிலில் வைக்கப்பட்டுள்ளது. பிணத்தைச்சுற்றி இறந்த பெண்ணின் கணவரும் மாமியாரும் அழுது கொண்டிருந்தார்கள். போலீஸ் எஸ்.ஐ. உடன் அங்கு நுழைந்த சந்திரிகா, "அப்பாவிப் பெண்ணை சாகடிச்சிட்டு இவங்க நடிக்கறாங்க. இவர்களிருவரையும் அரெஸ்ட் பண்ணுங்க"14 என்றாள் (மேலது ப. 14)

நாடகக்குழு மேடையில் 2முறை குழுவாகக் கூடி பெண்ணின் சாவிற்கு,

"ஸ்டவ் அடுப்பு தானா வெடிச்சு, மருமகள் தானா இறந்து போயிட்டா"15. (மேலது, ப. 14)

என்றும்,

"நம்நாட்டு ஸ்டவ் அடுப்புகள்<br>
வீட்டுக்கு வந்த மருமக்களை மட்டும்<br>
தனித்துக் கொல்லக் கூடிய<br>
மகா சக்தி பெற்றது"16. (மேலது, ப. 14)

என்றும் கூறி ஓலமிடுகிறார்.

பெரும்பாலான பெண்கள் வரதட்சணைக் கொடுமையால், திருமணமாகியும், கணவன் வீட்டாரால் துன்புறுத்தப்பட்டு கொடுமையான தீக்கிரையாக்கப் படுகின்ற நிலையினை இந்நாடகக் குழுவினர் பெண் இனத்தின் சார்பாக (மருமகள்கள்) வன்மையாகக் கண்டிக்கின்றனர்.

### சந்திரிகா ஒட்டுமொத்தப் பெண்ணின் குறியீடு

முதிர் கன்னி சந்திரிகா காவல்துறையினரிடம் வாதம் புரிகின்றாள்.

" சீதனக் கொடுமையால் ஸ்டவ் அடுப்புக்கு தீக்கு இரையாகிக் கெடக்கறாளே செல்வி அவ வாழ்ந்த

சமகாலப் பெண்களில் நானும் ஒருத்தி அவள் வாழ்ந்த இச்சமூக அமைப்பில் தான் நானும் வாழ்கிறேன். அவளும் ஒரு பொண்ணு, நானும் ஒரு பொண்ணு"17. என்கிறாள். (மேலது ப. 27)

## துரியோதனப் பார்வைகள் நீக்க வேண்டும்

பூங்காவில் பேசிக்கொண்டிருக்கும் ஆணையும் பெண்ணையும் தவறாகக் காதலர்களாகப் பேசும் கட்டியங்காரனிடம் புரட்சிப் புயல் வசந்தா, "காதலுக்கும் கல்விக்கும் வயது வேண்டியதில்லை. ஏன்னா ஒரு ஆணும் ஒரு பெண்ணும் தனியாகப் பேசினா ரெண்டு பேரும் காதல் தான் பண்றாங்கங்கிறது எந்த வகையில் நியாயம். ஒரு ஆணும் பெண்ணும் நண்பர்களாகயிருக்கக் கூடாதா? நட்பு என்பது வேறு? காதல் என்பது வேறு?" 18. என்று கூறுகிறாள். (மேலது ப. 23)ஆண்கள் தங்களது பார்வையை விசாலப்படுத்திக் கொள்ள வேண்டும் என்கிறார் ஆசிரியர்.

## நாடகத்தின் முடிவு

நாடகத்தின் முடிவில்தான் சத்தியத்திற்காகத் தானே மனைவியை வெட்டிப்போடும் அரிச்சந்திரனையும், சனங்களைத்திரட்டி உரிமைக்காகப் போராடும் புதுமைப் பெண்ணைக் கைது செய்து இழுத்துச் செல்லும் காவல் துறையினரையும் எதிர்த்து புரட்சிக்குரல்.....ஒலிக்கிறது. இந்த நாடகத்தில் அனல் பறக்கும் இறுதிக் காட்சிகள், ஜனநாய நாட்டில் பெண்கள் தங்களது ஜனநாயக உரிமைகளைக் கேட்பது என்பதே மாபெரும் குற்றமாகக் கருதப்படும் ஆண் ஆதிக்கச் சமுதாய நிலையில், நமது பெண்களின் மனநிலை அடிமைநிலையிலேயே மூழ்கிக் கிடக்கின்றது.

## ஆய்வு முடிவுகள்

1. பெண்ணடிமைத்தனம் இன்று வரை மாறாமல் உள்ளது.
2. அரிச்சந்திரனின் மனைவி சந்திரமதி சத்தியசோதனை வாழ்க்கை வாழ்ந்தாள். அவள் பெண்ணாக இருந்த காரணத்தினால் அவளது வாழ்க்கையைப் பற்றி யாரும் அறியத்தவறி விட்டார்கள்.
3. சந்திரமதியைப் போன்று இன்றைய மகளிர் இல்லை. பிரச்சனைகளை எதிர்கொள்பவர்களாகவே உள்ளனர்.
4. அரசியல் சமூகப் பொருளாதாரக் காரணிகள் தான் முதிர் கன்னியர்களாகப் பெண் திருமணமாகாமல் இருப்பதற்குக் காரணம்.
5. ஆண்கள் தங்களது துரியோதனப் பார்வைகளை நீக்க வேண்டும். வரதட்சணைச் சந்தையில் பெண்ணை ஏலம் விடக்கூடாது.
6. பெண்கள் தங்கள் திருமணத்தை சாதியில்லாமல், மதமில்லாமல் தாங்களே தீர்மானித்துக் கொள்ள வேண்டும்.
7. கணவனைப் பேணுவதும், குழந்தைகளைப் பாதுகாப்பதுமாகிய செயல்களுடன் இச்சமூகத்தில் பெண்ணின் பணி முடிந்துவிடவில்லை.
8. ஆண்களின் பொறுப்பின்மையே ஒட்டுமொத்தமான சமுதாயச் சீரழிவுக்கும், சிக்கல்களுக்கும் காரணம்.
9. தீக்குளித்த சீதை, துயிலுரிக்கப்பட்ட பாஞ்சாலி, நகைகளையும், வாழ்க்கையும் பறிகொடுத்த கண்ணகி, விலைமாதுவிடம் செல்ல கணவனால் துன்புறுத்தப்பட்ட நளாயினி ஆகியோர் போல ஆணாதிக்கச் சமுதாயத்தில் பெண்கள் இனி அடிமை வாழ்வு வாழ மாட்டார்கள். பொங்கி எழுவார்கள்.
10. ஆணும் பெண்ணும் சேர்ந்து பழகினாலேயே அவர்கள் காதலர்களாகிவிடமாட்டார்கள். நண்பர்களாகவும் இருக்கலாம் என்ற விசாலமான பார்வை ஆண்களுக்குத் தேவை.

பெண்ணியத்தின் வீரிய விதைகள் பல விதைக்கப்பட்டு அவை விருட்சங்களாகி இச்சமுதாயத்தின் மறுமலர்ச்சிக்கு நற்பலன் விளையுமாறு நாடகம் சிறக்கின்றது.

## பயன்பட்ட நூல்கள்


1. குணசேகரன், கே.ஏ. சத்தியசோதனை, (நாடகம்) நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை. நா.ப.மே. 2002.
2. தேவதத்தா, பெண்ணியக்கட்டுரைகள், காவ்யா வெளியீடு, சென்னை.
3. பிரேமா, இரா., பெண்ணியம், தமிழ்ப்புத்தகாலயம், சென்னை.
4. பிரேமா, இரா., பெண்ணியத்திறனாய்வும் கட்டுரைகளும் (நாடகம்) நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை 2005.
5. ரெங்கம்மாள் இரா., (பெண்ணியக்கட்டுரைகள்) பெண்ணிய வாசிப்பின் பதிவுகள். ஸ்ரீ அன்னை இல்ல வெளியீடு. பழனி. 2005.

# இலக்கியச் சிந்தனைச் சிறுகதைகளில் தனித்து வாழும் மகளிர் – பெண்ணியப் பார்வை

முனைவர். *இல.ரேவதி,* அரசு கலைக்கல்லூரி, திருவண்ணாமலை.

ஆணாதிக்கச் சமுதாயக் கட்டமைப்பில் பெண்ணடிமைத்தனம் நீண்ட நெடுங்காலமாக இருந்து வருகிறது. பெண் கல்வியும், பெண்களுடைய சிந்தனை மாற்றமும் பெண்களிடம் விழிப்புணர்ச்சியை ஏற்படுத்தின. பெண் விடுதலைக் குறித்த சிந்தனைத் தோற்றம் பெற்றது. பெண் விடுதலை இயக்கம் எழுச்சியுற்று பெண்ணியமாக உருவெடுத்துள்ளது. ஆண்களுக்குச் சமமான உரிமையும், சுதந்திரமும் பெண்களுக்குத் தரப்பட வேண்டும் என்பதை வலியுறுத்தும் போக்கில் பெண்ணியம் அமைந்தது. பெண்ணியச் சிந்தனைகளைக் கருப்பொருள்களாகக் கொண்டு பல படைப்புகள் வெளிவந்தன. இலக்கியச் சிந்தனைச் சிறுகதைத் தொகுப்பில் வெளிவந்துள்ள கவிதைகளில் தனித்து வாழும் மகளிர் நோக்குகின்ற சிக்கலை மையமிட்ட கதைகள் மட்டும் ஆய்வுக்குள்ளாகின்றன.

இளம் பெண்ணாக இருந்தபோது தந்தையையும், திருமணமான நிலையில் கணவனையும், வயதான நிலையில் மகனையும் சார்ந்து வாழ்வது தான் மனுதர்மம் எனச் சொல்லி நம்ப வைத்திருந்தனர். ஆணுக்குத் துணையாகக் கருதியே பெண்களின் பண்பாடு பேசப்பட்டது. ஆணாதிக்கப் பண்பாட்டின் ஒரு துணைப் பண்பாடாகப் பார்க்கப்படுவதை பெண்ணியம் ஏற்பதில்லை. சமத்துவமும், சமபங்கும் வலியுறுத்தப்படுகிறது. இந்நிலையில் ஆணைச்சார்ந்து தான் வாழ வேண்டும் என்ற நியதில்லை. ஆணைப்போல பெண்களும் தனித்து வாழலாம் என்பது மேலைநாட்டுப் பெண்ணியவாதிகளின் கருத்தாகும். தனித்து வாழ்ந்து பல சாதனைகளைப் படைக்கும் பெண் பாத்திரங்களை ஆராயும் நோக்கில் இக்கட்டுரை அமைகின்றது.

தனித்து வாழும் மகளிரை, 1. கணவனைப் பிரிந்து தனித்து வாழும் மகளிர், 2. கணவனை இழந்து தனித்து வாழும் மகளிர் என இருநிலைகளில் பகுத்து ஆராய்கின்றது.

## கணவனைப் பிரிந்து தனித்து வாழும் மகளிர்:

மனித வாழ்க்கையில் திருமணம் என்பது முக்கியமானது. ஆண், பெண் இருவருக்கும் திருமணம் திருப்புமுனையானது என்பர் இருப்பினும் சிலவேளைகளில் சிக்கலாகி விடுவதுமுண்டு. ஒரு விநாடியும் ஒருயுகமும் கதைத்தலைவி ஜெயந்தி மெய்த்திருப்பதம் மேவு கதை நாயகி சரோஜினி ஆகிய இருவரும் திருமணமான பின் கணவனைப் பிரிந்து தனித்து வாழ்கின்றனர்.

## ஒரு விநாடியும் ஒரு யுகம் – ஜெயந்தி :

ஜெயந்தி நடுத்தர வர்க்கத்தைச் சேர்ந்தவள். ஜெயந்தியின் கணவன் கதையில் அடையாளம் காட்டப்பெறவில்லை. பெண் பாத்திரமாகிய ஜெயந்தியே கதையில் முதன்மைப்படுத்தப்படுகிறாள். ஜெயந்தி எதிர் நோக்கும் பிரச்சினைகளே கதையில் மையப்படுத்தப்பட்டுள்ளது.

ஜெயந்தி கணவன் தனக்கு மட்டுமே உரியவளாக இருக்கவேண்டும் என்று எண்ணுகிறாள். எண்ணத்திற்கு மாறான கணவன் அமைந்த நிலையில் அவனை நிரந்தரமாகப் பிரிய எண்ணுகின்றாள். அவனை அந்த வீட்டில் இருந்து வெளியேற்றுகின்றாள். த்தூ.. இரட்டை வாழ்க்கை வாழற ஒருத்தனுக்குப் பெண்டாட்டியா வாழ நான் விரும்பலை. அவகிட்டயே போய்டுங்க

என்ற ஜெயந்தியின் கூற்றிலிருந்து அவனை வீட்டை விட்டு வெளியேற்றக்கூடிய தைரியமான பெண்ணாக ஜெயந்தியைக் காணமுடிகின்றது.

பூவும், பொட்டும் கணவனால் தனக்குக்கிடைத்தது என்ற கணவனின் குற்றச்சாட்டில் இருந்து விடுபட எண்ணிய ஜெயந்தி

வேண்டாம், நீங்க போடற பிச்சை எனக்கு வேண்டாம். பூவும், பொட்டும் இல்லாமலே இந்த உலகத்துல் என்னால வாழ்ந்து காட்டமுடியும் என்று சவால் விடுகின்றாள். கணவன் மாங்கல்ய சரடை பறித்துக்கொண்டு போனநிலையிலும் சற்றும் தயங்காமல் விதவைக்கோலமும் பூணுகின்றாள். குழந்தை நிவேதாவிடம் தந்தை இறந்ததாகக் கூறுகின்றாள். நல்லொழுக்கமில்லாதவனைத் தந்தை என்று அடையாளங் காட்டுவதைவிட தந்தை இல்லாத பிள்ளை என்று அடையாளங்காட்டுவதை உயர்வாக எண்ணுகின்றாள். யாரும்மா அந்த மாமா? என்று குழந்தை தன் கணவனைக் காட்டி கேட்ட நிலையிலும் உன்னுடைய தந்தைதான் என்று கூற விரும்பாதவளாக படைக்கப்பட்டுள்ளாள்.

பெண் திருமணமான நிலையில் கணவனுடன்தான் வாழ வேண்டும் என சமூகம் நிர்பந்திக்கிறது. உண்மையான ஒட்டுதல் இல்லாமல் கணவனுடன் சேர்ந்து வாழ்வதை விட பிரிந்து வாழ்வதே மேல் என்று முடிவுக்கு வருகின்றாள். கணவனைப் பிரிந்து ஒரு பெண் கடைசிவரை தனித்து இயங்க முடியும். அவளால் ஆண் சார்பில்லாத ஆண் செய்ய நினைக்கும் அனைத்தையும் செய்து வாழ்க்கையைச் சுயமாக நடத்த இயலும் என்று எண்ணுகின்றாள். கணவனைப் பொருளாதார அடிப்படையில் சார்ந்து இல்லாமல், தன்னைச் சுயச்சார்புடைய பெண்ணாக உருமாற்றிக் கொள்கிறாள். தனக்குத் தெரிந்த தையற்கலையைக்கொண்டு வாழ்க்கைக்குத் தேவையான பொருளாதாரத்தை அமைத்துக்கொள்கிறாள். கணவனின் நடத்தையை அறிந்த ஜெயந்தி பெற்றோருக்கோ, உற்றாருக்கோ பாரமாக இல்லாமல் சுய மரியாதையோடு தன்மானங் கொண்டவளாக வாழுகின்றாள்.

குழந்தையைத் தன்னம்பிக்கை உடையவளாக, தானே தன் வேலையைச் செய்யக் கூடியவளாக வளர்க்கிறாள். கணவனின்றியும் ஒரு பெண் தனித்து நின்று குழந்தையை வளர்க்க முடியும் என்பதைச் சவாலாகக் கொண்டு வாழக் கூடியவளாகப் படைக்கப்பட்டுள்ளாள்.

### மெய்த்திருப்பதம் மேவு – சரோஜினி

சரோஜினி மேட்டுக்குடி வர்க்கத்தைச் சேர்ந்தவள். கணவன் மூர்த்தியின் போக்குகள் பிடிக்காத நிலையில், அவன்பால் ஏற்பட்ட மனக்கசப்பால் அவனைப் பிரிகின்றாள். பொருளாதார தேவைக்காக கணவனை எதிர்பார்க்காதவள். அலுவலகப்பணி செய்யக்கூடியவள். இலக்கிய ஆன்மீக ஈடுபாடு உடையவள். கணவனைப் பிரிந்துதன் இரு குழந்தைகளோடு வீட்டைவிட்டு வெளியேறுகின்றாள். உழைத்துப்போராடி குழந்தைகளை வளர்த்து நன்னிலைக்கு ஆளாக்கியவள். இலக்கிய ஆன்மீக ஈடுபாட்டை குழந்தைகளிடத்தும் ஏற்படுத்தியவள்.

இன்னிக்கு உன்னை மாதிரி சில விதிவிலக்கு பெற்றோர் தவிர எல்லோரும் பிள்ளைங்க பணம் சம்பாதிக்கணும்னு நினைக்கிறாங்களே தவிர மனசிலேயும், வெளியேயும் வெறி இல்லாம அமைதியோட இருக்கனும்னு நினைக்கறதில்லை.

என்று இரவீந்திரன் தாயாரை நன்றியுடன் பாராட்டுகிறான். மகனின் பாராட்டைக் கேட்டு மனம் மகிழ்கின்றாள். மன அமைதியோடு வாழும் மருந்தைத் தந்து பிள்ளைகளை வளர்த்தவள்.

குழந்தைகளை நல்லியல்புடையவர்களாக உருவாக்குவதே வாழ்வில் ஈட்டும் உண்மையான செல்வம். சரோஜினியைப் பொறுத்தவரையில் உண்மையான செல்வத்தைப் பெற்றவளாக படைக்கப்பட்டுள்ளாள். தந்தை இல்லாத புதல்வன் இன்னா சான்றோனாக்குதல் தந்தைக்குக் கடனே என்றெல்லாம் இலக்கியங்கள் தந்தையின் கடமை உணர்வை வலியுறுத்துகின்றன. கணவன் துணையின்றித்தனித்து வாழ்ந்து குழந்தைகளை நன்னிலைக்கு உருவாக்கிய தாயாக சரோஜினி படைக்கப்பட்டுள்ளாள்.

### கணவனை இழந்து தனித்து வாழும் மகளிர்:

பூ ஒன்று புயலானது என்ற கதையின் கதைத் தலைவி மைத்ரேயி அதுவும் கடந்து கதையின் கதைநாயகி சித்தார்த்தின் தாய் ஆகிய இருவரும் கைம்பெண்டிர்களாக காணப்படுகின்றனர்.

### பூ ஒன்று புயலானது – மைத்ரேயி:

தாய், தந்தையற்ற நடுத்தரக்குடும்பத்தைச் சேர்ந்தவள் விபத்தில் கணவனை இழந்தவள். தனித்து வாழ்ந்து குழந்தைகளை வளர்க்க எண்ணுபவள். கணவனின் இறப்பை எண்ணி வருந்துவதால் பயனில்லை என்று எண்ணுகின்றாள். உற்றார், உறவினரைச் சார்ந்து வாழாமல் தானே தனித்து நின்று வாழ எண்ணுகின்றாள். அதற்காக அவள் பணி மேற்கொள்ளும் செயலில் இறங்குகின்றாள்.

கண்ணகி, கோவலன் உயிருடன் இருந்த நிலையில் ஏதும் அறியாதவளாகவும், கோவலனை இழந்த நிலையில் கண்ணகி கணவன் துயர் துடைக்கும் முயற்சியில் இறங்குவதையும் சிலப்பதிகாரம் காட்டுவது போல மைத்ரேயி கணவன் உயிருடன் இருந்தபோது அவன் தோளில் இன்பம் துய்த்து பூப்போல் வாழ்ந்ததாகவும். கணவனை இழந்த நிலையில் தன்னம்பிக்கையும், தைரியமும் கொண்ட புயலாக மாறுவதை கதாசிரியர் காட்டுகின்றார். காவிய கதாநாயகி கண்ணகியோடு ஒப்பிடும் நிலையில் மைத்ரேயி பாத்திரம் படைக்கப்பட்டுள்ளது. கணவனை இழந்தநிலையிலும் தன் சாயலில் தான் குழந்தைகள் வளர வேண்டும் என்று எண்ணுகின்றாள். பெண்கள் பிறரைச்சார்ந்து தான் வாழ முடியும் என்ற பழமைப்பார்வையில் இருந்து விலகிய பெண்ணாக மைத்ரேயி படைக்கப்பட்டுள்ளாள்.

### அதுவும் கடந்து சித்தார்த்தின் தாய்:

நடுத்தரக் குடும்பத்தைச் சேர்ந்தவள் கணவன், குழந்தைகளை இழந்து தனிமரமாக வாழ்பவள். கணவன். குழந்தை இல்லாத நிலையில் பெண்களின் வாழ்வு அர்த்தமற்றதாக, வெறுப்புடையதாகச் சமூகம் எண்ணுகிறது. சமூக எண்ணங்களில் இருந்து மாறி வாழக்கூடியவளாக் தனக்கான வாழ்வை வாழத்தயங்காதவளாகச் சித்தார்த்தின் தாய் படைக்கப்பட்டுள்ளாள்.

### ஆய்வில் கண்ட முடிவுகள்:

1) குடும்பக்கட்டமைப்புச் சிதைவிற்குப்பிறகும் பெண்கள் மரபு சார்ந்த நிலையில் மேலோங்கிய வாழ்க்கை நடத்தும் முறைகளைக் காட்டுகின்றார்.

2) ஆணின் ஆண்மையும் சிநேகிதமும் தான் வாழ்விற்கு முழுமை தரும். வாழ்க்கைத் துணை இல்லாத வாழ்க்கை பட்டமரமாகும் என்பன போன்ற மரபுக்கண்ணோட்டங்களை எல்லாம் உடைத்தெறிந்து விட்டு பெண்கள் தனித்து வாழ்ந்து சாதனைகளைப் படைப்பதாகக் காட்டுகின்றார்.

3) கணவனைப் பிரிந்தாலும் குழந்தைகளை வளர்த்து ஆளாக்குவது தாயின் கடமை என்ற மரபு ரீதியான பார்வை உடையவர்களாகவே காணப்படுகின்றனர்.

4) கணவனைப் பிரிந்த நிலையிலும் தன் மானத்தையும், தனக்குரிய அடையாளத்தையும் யாருக்காகவும் இழக்கத்தேவையில்லை என்பதை நிலைநிறுத்துகின்றனர்.

### குறிப்புகள்:

1) சத்யராஜகுமார் - ஒருவிநாடியும் ஒரு யுகமும்
- (அ) ஹிம்சை இலக்கியச் சிந்தனைச் சிறுகதைத் தொகுப்பு ப.185.

2) மேற்படி ப.186

3) பாரதி பாஸ்கர் - மெய்த்திருப்பதம் மேவு - அண்ணாசாலையில் ஒரு இந்தியன் இலக்கியச் சிந்தனைச் சிறுகதைத் தொகுப்பு ப.48.

### ஆய்விற்கு பயன்படுத்தப்பட்ட மூல நூல்கள்:

1993 ஆம் ஆண்டின் இலக்கியச் சிந்தனைச் சிறுகதைத் தொகுப்பு
1994 ஆம் ஆண்டின் இலக்கியச் சிந்தனைச் சிறுகதைத் தொகுப்பு
1996 ஆம் ஆண்டின் இலக்கியச் சிந்தனைச் சிறுகதைத் தொகுப்பு

# கனாக்காலம் - ஒரு பெண்ணியப் பார்வை

*கோ. லட்சுமிபிரியா,* பூ.சா.கோ. கலை அறிவியல் கல்லூரி,

## முன்னுரை

மக்கள் வாழ்க்கையைப் படம் பிடிக்கும் கண்ணாடியாகத் திகழ்வது இலக்கியம். வாழ்வியல் சிக்கல்களைச் சுட்டிக்காட்டுவதோடு அவற்றுக்குத் தீர்வுகளையும் இலக்கியங்கள் முன்வைக்கின்றன. இவ்வகையில் பெண்களின் பிரச்சனைகளை முன் வைத்துப் பேசக்கூடிய இலக்கியப் படைப்புகள் இன்று சிறப்பானதொரு பரிணாமத்தை அடைந்துள்ளன.

கலைகளில் சிறப்பாக இலக்கியத்தில் பெண்கள் எவ்வாறு படைக்கப்பட்டுள்ளனர் என்பதை முன்னரே வென்றுநின்ற அரசியல், பொருளாதாரத் தொடர்பான பெண்ணியக் கோட்பாடுகளைக் கொண்டு நோக்கத்தலைப்பட்டது. அதன் விளைவாக இலக்கியக் கொள்கை, இலக்கியத் திறனாய்வு என்னும் இருதுறைகளிலும் பெண்ணிய அணுகுமுறை நிலைபெறலாயிற்று. இவ்வணுகுமுறை இரண்டு வகைகளில் தற்போது செயல்படுகின்றது. அவையாவன,

1. பெண் வாசகர் நோக்கில் இலக்கியப் படைப்பை அணுகுதல்.
3. பெண் எழுத்தாளர் நோக்கில் இலக்கியத்தைப் படைத்து ஆராய்தல்.

என்று அ.மணவாளன் அவர்கள் பெண்ணியத்தின் இரு முக்கியத் திறனாய்வுகளைக் குறிப்பிடுகிறார். இந்தத் திறனாய்வின் அடிப்படையில் கனாக்காலம் என்ற சிறுகதைத் தொகுப்பில் இடம்பெற்ற சங்கமித்ரா அவர்கள் எழுதிய எல்லோர்க்கும் பெய்யும் மழை திறனாய்வு செய்யப்படுகிறது.

## இலக்கியத்தைப் படைத்து ஆராய்தல்

இந்தக் கதையில் இருதார மனப்போக்கு, ஆண்வாரிசு, மாமியார் மருமகளுக்கு இடையேயான பிரச்சனை, பழம்பெரும் இலக்கியங்களில் காணலாகும் பெண்ணடிமைத்தனம் ஆகியன குறித்து ஆசிரியர் சங்கமித்ரா அவர்கள் வாசுகி என்ற கதாப்பாத்திரம் மூலம் ஆராய்ந்துள்ளார்.

## இருதார மணப்போக்கு

இருதாரமணம் இன்று நேற்று ஏற்பட்டதல்ல. தொன்றுதொட்டு நிலவக்கூடியதாகும். ஏங்கல்ஸ் தமது குடும்பம் தனிச் சொத்து அரசு ஆகியவற்றின் தோற்றம் என்ற தமது நூலில் மிகவிரிவாக ஆராய்ந்துள்ளார். பொது மகளிர் முறையிலிருந்து ஒருதாரமணத்தைக் கொண்டுவந்தவர்கள் முக்கியமாகப் பெண்களே. புராதன காட்டுத்தன்மையை சமுதாயம் இழந்துவரவர அந்த உறவுகள் ஈனமானவை என்றும் ஒடுக்குவனவாயும் பெண்களுக்குத் தோன்றியிருக்க வேண்டும். மேலும் மேலும் ஆர்வத்தோடு அவர்கள் கற்புரிமைக்காக வேட்கை கொண்டிருக்க வேண்டும். இந்த எண்ணம் ஆண்களிடமிருந்து தோன்றியிருக்க முடியாது அவர்கள் என்றைக்குமே இன்றைய நாள்வரைக்குங்கூட நடைமுறைக் குழுமணத்தின் இன்பங்களைக் கைவிடக் கனாக்கூடக் கண்டது கிடையாது. ஆகவே இந்தக் கதையில் வரக்கூடிய ஸ்ரீனிவாசனிடம் இருதார மணப்போக்கு நிகழ்வதைக் காணலாம். வாசுகியின் கணவனான ஸ்ரீனிவாசன் ரமா என்னும் பெண்ணுடன் கள்ளத்தனமாக நான்கு வருடமாக வாழ்க்கை நடத்துகிறான். இப்போக்கு ஆணாதிக்கத்தின் ஒருகூறு என்பதை மிக விரிவாக வாசுகி பின்வருமாறு எடுத்துக் கூறுகிறாள்.

சம்பாதிக்க நான் சுகம் கொடுக்க நீன்னு நம்ப ரெண்டு பேரோட ரத்தத்தையும் குடிச்சிட்டிருந்த ரத்தக் காட்டேரி அவன் . அவனால சுலபமா இந்த வாழ்க்கையை விட்டுக் கொடுக்க முடியாது . பெண்டாட்டிகிட்டிருக்கறதை எடுத்து வப்பாட்டிகிட்டேக் கொடுத்து சுகம்காண நினைக்கிற இந்த அல்ப ஜன்மங்களுக்கு நாம பாடம் கத்துக்கொடுக்க வேண்டுமா இவ்வாறு வாசுகி இருதார மணப்போக்கை வன்மையாகக் கண்டிக்கிறாள். ரமாவும் இதைத் தவறு என உணர்கிறாள். வாசுகியும் இன்னும் சில பெண்களும் ஆழியாரில் உருவாக்க இருக்கின்ற இயக்கத்தில் ரமாவும் ஸ்ரீனிவாசனை விட்டுவிட்டு சேர விரும்புகிறாள். இவ்வாறு இருதார மணப்போக்கிற்குத் தீர்வு சொல்லப்பட்டு இருக்கிறது.

### ஆண்வாரிசு

தமிழ்நாட்டில் ஆண்பிறந்தால் அருமை, பெண் பிறந்தால் எருமை என்ற பழமொழியும், ஆண் குழந்தை வரவென்றும் பெண்குழந்தை செலவென்றும் ஒரு கருத்து சமூகத்தில் நிலவுகிறது. இக்கதையில் வாசுகி பெண்குழந்தை பெற்றுக் கொண்டாள் என நொடிக்கு நூறுமுறை குத்திக்காட்டுவான் என்ற வரிகள் மூலம் சமூகத்தில் பெண் குழந்தைகள் மீதுள்ள வெறுப்பை ஆசிரியர் நேரடியாகச் சுட்டிக்காட்டுகிறார்.

### மாமியார் மருமகள் பிரச்சனை

பெண்ணுக்குப் பொருளாதார சுதந்திரம் இல்லாத நிலையில் மாமியாருக்கும் மருமகளுக்கும் இடையே உட்பூசல் நிலவுகிறது. அதாவது ஒரு ஆணைச் சார்ந்து வாழும் நிலையில் மாமியார் மருமகளுக்கிடையே போட்டி மனப்பான்மை ஏற்படுகிறது. மாமியார் கொடுமை ஏன் வந்தது? எல்லாம் காசுக்குத்தானே? பெண்ணுக்குப் பொருளாதாரச் சுதந்திரம் வந்துடக் கூடாதுங்கறதுல ஆண்கள் கவனமா இருப்பாங்க, ஏன்னா, அப்பத்தானே பெண் தீப்பெட்டியிலேர்ந்து பட்டுப்புடவை வரை அவன் கையையே நம்பிட்டிருப்பா? இதுநாள் வரை தன் ஆசைகளையும் எதிர்பார்ப்புகளையும் தன் குடும்பத்தாரின் நலனுக்காக உரமாய் போட்டு எருவாக ஆக்கி வெறும் சக்கையாகிப் போன பெண்கள் தகுந்த நேரத்துக்காகக் காத்திருக்காங்க? மகனுக்குத் திருமணமானதும் அவனால தன்முழு அதிகாரத்தையும் பிரயோகிக்க முடிஞ்ச இன்னொரு பலவீனமான ஜீவன் அந்த வீட்டு மருமகள்தானே? சிறைச்சாலைகள்லே சில சீனியர் ஆயுள் தண்டனைக் கைதிகளையே வார்டன்களா நியமிக்கறதில்லையா? கிட்டத்தட்ட அதே நிலைதானே நம் பெண்களுக்கும். இப்படி இரண்டு பெண்கள் அடிச்சுக்கிறதை வன்மத்தோட ரசிக்கிறது இந்த ஆண்கள் கூட்டம். இதோ நாம ரெண்டு பேரும் சண்டை பிடிச்சுக்கிட்டாக் கூட ஸ்ரீனிவாசன் மாதிரி ஆண்களுக்கு மஹாப் பெருமைதான். அதற்கு இடம் கொடுக்கக் கூடாதுன்னுதான் நான் சமாதானமாப் பேச வந்திருக்கேன். பெண்ணுக்குப் பெண் எதிரியில்லை என்பதை வாசுகியின் கருத்து மூலம் ஆசிரியர் சுட்டிக்காட்டுகிறார்.

### பழம்பெறும் இலக்கியங்களில் காணலாகும் பெண்ணடிமைத்தனம்

பெண்ணிய நோக்கின்படி, பெரும்பாலான பழம்பெரும் இலக்கியங்கள் ஆடவருலகில் கோட்பாடுகளால் இயற்றப்பெற்றவை. அவற்றில் உலவும் பெண்கள் தனித்துவம் பெற்ற முழு ஆளுமை உடைய உயிர்கள் அல்ல தலைவனுக்காக, அவனுடைய குறிக்கோள்களுக்காக அல்லது அவற்றை எதிர்த்துச் செயல்படும் பாவைகள் ஏறக்குறைய சிலபடைப்பு வாய்பாடுகளுக்குள் அடங்கிவிடும் வார்ப்புகள் தலைவன் இன்றிப் பொருள்படாப் பதுமைகள் நாவாவின் ஆராய்ச்சியில் அ.மனவாளன் அவர்கள் பெண்ணடிமைத்தனம் பற்றி குறிப்பிட்டுள்ளார். இதனையே,

கண்ணகி பெரிய வியாபாரியின் மகள். சீதை மிகப்பெரிய அரசனோட பொண்ணு. காவிரிப்பூம்பட்டினம் தாண்டியதும் மதுரை மூதூர் வந்துட்டுதான்னு கேட்ட கண்ணகியின் பேதமையும், அயோத்தி அரண்மனை தாண்டியதுமே காடு வந்துதான்னு கேட்ட சீதையோட மடமையும் தான் இலக்கியத்திலே பெருமையாப் பேசப்படுவது ஏன் தெரியுமா? வெளியுலகம் தெரியாம வளர்ந்த பெண் அரசன் மகளாகவே இருந்தாலும் ஒரு புருஷனால அவளை சுலபமா ஏமாத்தலாங்கிற மனக்கணக்குக்காகத்தான். நிஜத்திலே அவங்களும் ஏமாந்தாங்களா இல்லையா? கோவலன் செய்த துரோகத்தால மாதவி, கண்ணகி, மணிமேகலைன்னு மூணு பெண்களோட எதிர்காலமும், அழகும், இளமையும் கேள்விக்குறியாயிடுச்சு பாத்தியா? என்று வாசுகி கூறுவதிலிருந்து பழங்காலந்தொட்டு இன்றுவரை பெண்கள் அடிமைப்பட்டுக் கிடக்கின்றனர் என்பதை இலக்கியங்கள் வாயிலாக நிரூபித்துள்ளாள் வாசுகி.

### தீர்வு

பரந்துபட்ட நல்லெண்ணங்களைக் கொண்டவைகள் பெண்ணிய இலக்கியங்கள். ஆண் தன்னைக் கொடுமைப்படுத்தினால் அதிலே ஆட்பட்டுக் கிடக்காமல் உழைப்பாலும், கல்வியாலும் நல்லதொரு வாழ்க்கையை அமைத்துக் கொள்ளப் போதிப்பதே பெண்ணியம் என்று ச.பிரேமா அவர்கள் குறிப்பிட்டுள்ளார். இக்கதையிலும் வாசுகி ஆதரவற்ற பெண்களுக்காக இயக்கம் அமைத்துப் போராடுவதைக் காணலாம். நாளைக்குக் காலையில் நானும் சம்பூவும் (வாசுகியின் மகள்) வேன்ல ஆழியாறு புறப்படறோம். எங்களோட சில பெண்களும் வர்றாங்க. அங்கே ஒரு பெரிய பெண் தொழிலதிபர் நிலமும், கட்டிடமும், ஸ்நேகிதி ங்கற மகளிர் அமைப்புக்குக் கொடுத்து உதவ இருக்கிறார். வாழ்க்கையில் முன்னேறத் துடிக்கிற ஆதரவற்ற பெண்களுக்கான இயக்கமா இது இருக்கப் போகுது. கண்ணில் ஒளியும், உதட்டில் சிரிப்பும், புத்தியில் உண்மையும் நேர்மையும் இருக்கிறவங்களா அவங்களை மாத்தி,

சுயதொழில் கத்துக்கொடுத்து, தன் சொந்தக் காலிலேயே அவங்களை நிக்கவைச்சு, எந்த சமுதாயத்தால அவங்க வஞ்சிக்கப்பட்டாங்களோ அதே சமூகம் முன்னால நிமிர்ந்து நிக்க வைக்கற வரைக்கும் நான் ஓய மாட்டேன். என்று வாசுகி கூறியதும். நாளைக்கு நீங்க ஆழியாறு போகப் போகிற வண்டியில இன்னும் ஒருத்திக்கு கூடுதலாக ஒரு ஸீட் இருக்குமா? என்று ரமா கேட்பதிலிருந்து, ரமா மனம் திருந்தி இயக்கத்தில் சேர விரும்புகிறாள் என்பதை அறியலாம்.

## முடிவுரை

இலக்கியத்தைப் படைத்து ஆராய்தல் என்ற முறையில் ஆசிரியர் சங்கமித்ரா அவர்கள் பல வாழ்வியல் பிரச்சனைகளை ஆராய்ந்துள்ளார். இதற்குத் தீர்வாக சிநேகிதி என்ற பெண்ணிய இயக்கம் ஒன்றைச் சித்தரிக்கிறார். இதன்மூலம் பெண்கள் யாருடைய (ஆண்களுடைய) எதிர்பார்ப்பும் இன்றி தன் சொந்தக்காலில் நின்று சமூகத்தைத் தன்பக்கம் திரும்பிப்பார்க்கச் செய்யும் துணிவுபடைத்தவளாக இருக்கவேண்டும் என்று வலியுறுத்தியுள்ளார். மேலும் பெண்களுக்கு எந்தப் பிரச்சனையாக இருந்தாலும் சுயமாக முடிவெடுக்கும் அறிவும் துணிவும் வேண்டும் என்பதையும் சுட்டிக்காட்டியுள்ளார்.

## பார்வை நூல்கள்


| | | | |
|---|---|---|---|
| 1. | நாவாவின் ஆராய்ச்சி | ஏப்ரல் 1990 | பக்.87 |
| 2. | குடும்பம் தனிச்சொத்து அரசு ஆகியவற்றின் தோற்றம்று | | பக். 85 |
| 3. | கனாக்காலம் | | பக்.17 |
| 4. | மேலது | | பக். 14 |
| 5. | மேலது | | பக். 18 |
| 6. | நாவாவின் ஆராய்ச்சி | ஏப்ரல் 1990 | பக். 88 |
| 7. | கனாக்காலம் | | பக். 18, 19 |
| 8. | பெண் - மரபிலும் இலக்கியத்திலும் | | பக். 126 |
| 9. | கனாக்காலம் | | பக். 19 |
| 10. | மேலது | | பக். 20 |


## முதன்மை நூல்


கனாக்காலம் - ஞானி (தொ.அ) - தமிழ்நேயம்,24, வி.ஆர்.வி. நகர், ஞானாம்பிகை ஆலை, கோவை.


## துணை நூல்கள்


1. நாவாவின் ஆராய்ச்சி - அ. மணவாளன் -மக்கள் அச்சகம், 24, உனீசு அலிசாகிப் தெரு, எல்லீசு சாலை,சென்னை
2. குடும்பம் தனிச்சொத்து ஆகியவற்றின் தோற்றம் ஏங்கல்ஸ் நியூ சென்சுரி புக் ஹவுஸ் அரசு பிரைவேட் லிமிடெட், 6, நல்லதம்பி செட்டித் தெரு, சென்னை - 002.
3. பெண் மரபிலும் இலக்கியத்திலும் பிரேமா - தமிழ்ப் புத்தகாலயம் - 8, மாசிலாமணி தெரு, பிளாட் எண் - 2. தரைத்தளம், பாண்டி பஜார், தி.நகர், சென்னை.

## கவிஞர் "மீனாட்சி" கவிதைகளில் பெண்களுக்கான சிக்கல்கள்

*ஸ்ரீ. லெட்சுமிதேவி,* ஆசிரியை, சிவகாசி.

உலகில் மொழி என்பது பல வகைப்பட்டது. மனிதர்கள் தங்கள் கருத்தை வெளிப்படுத்த மழலைமொழி, பெரியோர் மொழி எனப் பயன்படுத்துவது போன்று பெண்ணுக்கு என்று "பெண்மொழி" என்ற மொழி இருக்கிறது. தற்பொழுதைய சூழ்நிலையில் பெண்களுக்கு ஓரளவிற்குக் கருத்துச் சுதந்திரம் கொடுக்கப்பட்டாலும் அனைவருமே தங்களது கருத்துக்களை வெளிப்படுத்துபவர்கள் அல்லர். இப்படிப்பட்ட பெண்களின் எண்ணக் குவியல்களின் சிதறல்களைக் கவிஞர் மீனாட்சி பெண்களுக்கானச் சிக்கல்களாகவும், அதனைப் பெண் எதிர்கொள்ள வேண்டிய விதத்தினையும், இதையும் தாண்டிய பெண்ணியத்தையும் தன் கவிதைகளில் கையாண்டுள்ளதைப் பற்றி ஆய்வதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

**பெண்மொழி - விளக்கம் :**

" பெண்மை அதன் தன்மையில் ஆண்களோடு மாறுப்பட்டிருப்பினும் அது ஆண்மைக்கு நிகரானது என்பதை ஏற்றுக் கொள்ள முயற்சிப்பது" பெண்மொழி என்று விளக்கம் தருகிறார். ஜெயின்.

**அறிவே துணை :**

பெண்கள் காலங்காலமாக அடிமைப்பட்டு இருந்திருக்கிறார்கள். இன்னும் இருக்கிறார்கள். அப்படிப்பட்ட அடிமைத்தளையிலிருந்து விடுபட்டு அறிவுத்துணையை தனக்கு உரிய துணையாகக் கொள்ள வேண்டும் என்பதை,

"நீயொரு
வாழ்க்கைப் பயணி
ஓயும் வரை
கை வீசி
நடைபோடு
தனிமையில் புலம்பி
தாகங்கொண்டு
கானல்நீருக்குப்
பறக்காதே"

என்று பெண்ணை அழைத்து அறிவுரை கூறுவதுடன், அவள் வாழ்வின் நிலையைப் பற்றி,

"முதிராட்டி என்னை
வளர்த்திட வேண்டி
அறிவுப் பட்டறை
வாயில் புகுந்தேன்"

இப்படி இருக்க வேண்டும் என்பதை தன் நிலையின் வழி சுட்டிக் காட்டியுள்ளார்.

**பாலியல் சிக்கல் :**

பெண்ணுக்குக் கருத்துச் சுதந்திரம் கிடைத்து விட்டாலும் பாலியல் கொடுமை சற்றும் குறையவில்லை. மாறாக, அதிகரிக்கின்ற தன்மையைத் தான் காணமுடிகிறது.

இதனை, இதிகாசமான இராமாயணக் கதையோடு ஒப்பிட்டு அழகாக குறிப்பிடுகின்றார். கவிஞர்,

"முதுகைத் தடவி
தலையையும் தடவி
அவர்கள் அளப்பது

கூலியுமல்ல

கப்பமுமல்ல"

என்ற வரியில் கட்டிடத் தொழில் செய்யும் பெண்ணின் நிலை சுட்டிக் காட்டப்பட்டுள்ளது.

"புழுதிகளில் பூக்கும்

எங்களை எழுப்ப

என்ன அவதாரம்

எடுக்கப் போகிறாய்

தோழியர் சீதையின்

தோழமை ராமா?"

என்ற வரிகளில் பெண்களுக்கான இச்சிக்கல் யார் மூலம் தீர்க்க முடியும் என்று பெண்களின் சார்பில் கவிஞர் வாதிடுகின்ற நிலைமையை அறிய முடிகிறது.

## இற்றுப்போன காதல் :

"காதல்" எல்லா உயிரையும் வாழ வைக்கிறது. காதல் ஐந்தறிவுயிர் முதல் ஆறறிவுயிர் வரையான ஒவ்வொன்றின் உள்ளும் உறைந்து இருப்பது. பொதுவாக காதலுக்கென இரு சுவை உண்டு. ஒன்று அன்பு மற்றொன்று காமம். இவ்விரு சுவைகளில் எச்சுவைக்கு முக்கியத்துவம் கொடுக்கப்படுகின்றதோ, அவ்வுணர்வே முதலில் வெளிப்படும். எப்படி இருந்தாலும் காதல் சந்தர்ப்பங்களை வைத்துத் தான் வெளிப்படும்.

கவிஞர் மீனாட்சி தனது கவிதைகளில் காதலைப் பற்றிக் கூறும் போது காமம் என்ற ஒன்றைப் பெற்று மட்டுமே அது முழுமை அடைவதாக கூறுகிறார்.

"அவன் காதல்

நாயில் ஆரம்பித்து

நாயில் முடிந்தது.

கொஞ்சல்

கடி

வெறி

மாமிசம்

தெருப் பொறுக்கல்"

என்று மனிதக் காதலை நாய்க் காதலோடு ஒப்பிட்டுக் கூறுவதோடு நின்றுவிடாமல்.

"அப்புறமென்ன

காதலாவது

கத்திரிக்காயாவது?"

என்று காதலுக்கு புதிய பரிமாணத்தில் விளக்கம் அளிக்கின்றார்.

## உறவு :

மனித இனம் ஒரு சமூகக் கூட்டமாக வாழ்கிறது. "சமூகம் என்பது மக்களின் திரள்" என்பார். அச்சமூகத்தினர் தங்கள் இனத்தோடு உறவுமுறை பாராட்டி வாழ்கிறார்கள். இவ்வுறவுமுறைகள் பெரும்பாலும் மனிதர்களுக்கு மகிழ்ச்சியான நேரங்களில் தோள் கொடுக்கவும் உதவுகிறது. கவிஞர் மீனாட்சி மருமகனுக்கு அறிவுரை என்ற கவிதையில் மருமகனைக் கொஞ்சும் போது சமூக விழிப்புணர்வுள்ளவளாக வளர வேண்டும்

என்று கூறுகிறார்.

“வேலி ஓரத்து ரோஜாவும் மணக்கிறது

விஜய் பையா, நீயும் அப்படி

உயர வேண்டும் படர வேண்டும்

நாளெல்லாம் மணக்க வேண்டும்

உழைக்க வேண்டும்

உதவ வேண்டும்”

என்ற வரிகள் பெண்ணின் வாழ்க்கையை தெளிவாக வரையறுத்து இருப்பதைச் சுட்டிக் காட்டுகிறது.

**தன்னம்பிக்கை :**

இன்றைய நவீனயுகத்தில் பெண்ணுக்குத் தன்னம்பிக்கை அதிகம் இருக்கின்றது. நம்பிக்கையைப் பெற்ற பெண் தன்னையும், தனது இனத்தையும் விழிப்புணர்வு பெற துடிக்கின்றாள்.

“சமைக்கின்ற கரங்களும்

சரித்திரம் படைப்பதை

நாளும் பார்க்க வேண்டும்”

என்ற எண்ணத்தைக் கொண்டே கவிஞர் மீனாட்சி கவிதை குறிப்பிடப்பட்டுள்ளது.

“குங்குமச்சிமிழ் கொட்டாங்கச்சி

புது மேள வாசிப்பை

நிறுத்துங்கள் இப்போதே”.

என்று கூறுவதோடல்லாமல்,

“சொந்தக் கருப்பையைக்

குத்தகைக்கு ஏன் விடணும்?

நாங்கள் கூட்டமாயக் குரவையிட்டு

கன்னியராய் வீடு செய்வோம்

நீங்கள் சும்மா இருங்களேன்”

என்ற இவ்வரிகள் பெண்ணியத்திற்கான பாதையை வழிகாட்டுவதாக அமைகிறது.

**முடிவுரை :**

இக்கட்டுரையின் வாயிலாக, மீனாட்சி என்ற பெண் கவிஞர் பெண்கள், ஆண்டாண்டு காலமாகத் தொடரும் பிரச்சனைகளைக் கையில் எடுக்க வேண்டும். பழைய மரபினைத் தொற்றிக் கொண்டிராது, பெண்ணியல் வழிகளைப் பின்பற்றி அஞ்சாமல் தீமையை எதிர் கொள்ள வேண்டிய பங்களிப்பு போன்றவற்றை தம் நோக்கமாகத் தம் படைப்பில் காட்டியுள்ளார்.

# பாரதிதாசன் கவிதைகளில் பெண்ணியம்

முனைவர்.கவிமுரசு. *எம்.லோகநாயகி,* முதுநிலை தமிழ் விரிவுரையாளர்,
இராணி மேரி கல்லூரி , சென்னை – 4.

ஆணின் நலத்திற்குப் பெண், ஆணின் திருப்திக்குப் பெண், ஆணின் சமையல்காரி, அவனது வீட்டிற்கு வீட்டுக்காரி, அவனின் குடும்பப் பெருக்கி, அவளது இன்ப நுகர்வு, காமம் தீர்க்கும் காமினி, சகலத்திலும் ஆணுக்காய் பெண், ஒருவனுக்கு ஒருத்தி என்பது கதை. ஒருத்திக்கு ஒருவன் என்பதே நிஜம். இது ஒரு புறமிருக்க,

அடிமைத்தளைப் பூண்டிருக்கிறோம் என்ற உணர்வின்றி நகை அலமாரிகளாய், ஜவுளிக் கடை பொம்மைகளாய் வலம் வந்து கொண்டு உலக அழகி, தேச அழகி, மாநில அழகி, மாவட்ட அழகி, நகர அழகி, தெரு அழகி என்று அழகிகளாய் அலைந்து கொண்டு அழகிப்போட்டிகளிலும், கோலம், சமையல் என்று காலத்தை வீணாக்கிக் கொண்டும், கற்றாலும், கற்க வில்லையென்றாலும் வம்பளந்து வாய் பேசித் திரிந்து கொண்டும் நவீன கால நங்கையர் வீணாகிக் கொண்டிருக்கின்றனர். பட்டங்கள் பெறுவது, சட்டங்கள் செய்வது, பாரினில் பெண்கள் நடத்துவதல்லவா பெண் சுதந்திரம். ஆணுக்குப் பெண் சரிநிகர் சமானமாய் வாழ்வதல்லவா பெண் சுதந்திரம் சமூகத்தில் , அரசியலில் பொருளாரத்தில் சமநிலை அடைய வேண்டாமா பெண்கள்? சகலத்திலும் ஆணுக்குள்ள அனைத்து உரிமைகளும் பெண்கள் பெற வேண்டாமா? அதுவல்லவா பெண்ணியம்?

பெண்ணியம் பேசும் பாரதிதாசன் கவிதைகளின் வைரவரிகள் நிதர்சனத்தை படம்பிடிப்பவை, உண்மைகளை எடுத்துரைப்பவை.

> கல்வியில்லாத பெண்கள் களர்நிலம்
> அந்நிலத்தில்
> புல் விளைந்திடலாம், நல்ல புதல்வர்கள்
> விளைவதில்லை

என்று கல்வியறிவு பெறாத பெண்டிர் நல்ல புதல்வர்களைப் பெறுவதில்லை. அவர்கள் வெறும் களர்நிலமாய் தானிருப்பர் என்று வேதனையோடு பெண் கல்வியின் அவசிய்த்தை வலியுறுத்துகின்றார். ஐயோ, இப்பெண்டிற்கு,

> கல்வியில்லை, உரிமையில்லை
> கடைத்தேற வழியின்றி விழிக்கின்றார்களே

என்று மனம் புழுங்குகின்றார் புரட்சிக் கவிஞர்.

அழகானவளாய் – கற்பினளாய் – நிறமானவளாய் – படித்தவளாய் – நாகரிகம் தெரிந்தவளாய் – தனக்கு அடங்கியவளாய் – சம்பாதிப்பவளாய் இன்றைய சமூக நாயகன் பெண் தேடுகிறான். காதல் ஒருவனை கைப்பிடிப்பது அவன் காரியங்கள் யாவினும் கைகொடுக்கவா? என்று காதலில் பெண் யோசிப்பதில்லை. வருவதற்கு தட்சணையாம் வரதட்சணை கொடுத்தாவது ஆணை மணந்து ஆவதென்ன? தனக்கென வாழாது பிறர்க்கே உழைத்து ஏழையாகவா? என்னதான் படித்து ஆணைவிட அதிகமான மதிப்பெண் பெற்றாலும் பெற்றோர்கள் அனைவரும் தாம் பெற்ற பெண்களின் அறிவை மதிக்கிறார்களா?

## பெற்றோர்கள்

> கல்லென உன்னை மதிப்பார் கண்ணியல்
> கல்யாண மாப்பிள்ளை தன்னையுங் காட்டார்

என்று பெண்களுக்காய் இரங்குகிறார் பாரதிதாசன்.

பெண்கள் காதலுள்ளத்தைத் தடுப்பது வாழ்வைக் கவிழ்க்கின்றதை நிகர்க்கும் என்று பெண் காதலுக்காய்க் குரல்தரும் புரட்சிக்கவிஞர் பெண்களைப் பற்றிப் பெர்னார்ட்ஷா என்ற தம் கவிதையில்,

> உவந்தொருவன் வாழ்க்கை சரி யாய்நடத்த
> உதவுபவள் பெரும்பாலும் மனைவி ஆவாள்

என்று ஆணின் வாழ்க்கை ஆதாரம், அவனது மகிழ்ச்சி பெண் என்பதை சுட்டிக்காட்டுகிறார். அவளாலே மணவாளன் ஒழுங்கு பெற்றான். சுத்தி பெற்றான் என்கிறார். பெண் ஆண் என்ற இரண்டுருளையால் நடப்பதே இன்ப வாழ்க்கை. ஆடவர்கள் அவை வாழ்வில் கடைத்தேறத் தகக்கதான சூட்சுமம் பெண்ணிடம்தான் உள்ளது என்பதை

உணர்த்துகிறார் பாரதிதாசன். கூவத்தெரியாத குயிலின் குஞ்சாம் ஏழுவயது சிறுமியின் குழந்தைத் திருமணத்தைப் பலவாறு சாடிய கவிஞர் கைம்மைத் துயருக்கு உள்ளம் இரங்கிப் பாடி பெண்களுக்காய் குரல் தருகிறார். ஒரு பெண்ணை விதவையாக வைத்து சாகாமல் காக்கும் கொடுமை ஜீவன் ஒன்றைப் பட்டினிபோட்டு கொல்வதற்குச் சமம் என்பார் தந்தை பெரியார். ஆணாதிக்க சமுதாயமிதில் கணவனை இழந்தவள் விதவையாக, இன்றும் மனைவியை இழந்தவன் விதவனாகாது மறுமாப்பிள்ளையாகும் அவலம் நிகழ்ந்துகொண்டு தான் இருக்கிறது. கைம்மைக்கு எதிர்க்குரல் எழுப்பும் புரட்சிக் கவிஞர்,

கோரிக்கை அற்றுக் கிடக்குதண்ணே இங்கு
வேரிற் பழுத்த பலா— மிகக்
கொடியதென் றெண்ணிடப் பட்டதண்ணே – குளிர்
வடிகின்ற வட்ட நிலா

என்று குமுறுவதோடு, இங்கு யாருக்கும் வெட்கமில்லை. என்று சாடி பெண்ணியத்தின் பக்கம் துணை நிற்கிறார் கைம்மைக் கொடுமையை,

கூண்டிற் கிளிவளர்ப்பார் – இல்லத்தில்
குக்கல் வளர்த்திடுவார்
வேண்டியது கூறுவார் – அவற்றின்
விருப்பத்தை அறிந்தே
மாண்டவன் மாண்டபின்னர் – அவனின்
மனைவியின் உளத்தை
ஆண்டையர் காண்பதில்லை – ஐயகோ,
அடிமைப் பெண் கதியே

என்று படம் பிடித்துக் காட்டுகிறார். கணவனை இழந்தவளது நெஞ்சை நோக்க நாதியில்லை. விருப்பத்தை கேட்க ஆளில்லை. கிளி, நாய் கூட அவளது நிலையினும் உயர்ந்தே இருக்கின்றன என்று சுடும் உண்மைகளைச் சொல்லி முடிக்கிறார் பாரதிதாசன்.

துணையிழந்த பெண்கட்குக் காதல் பொய்யோ?
சுகம் வேண்டா திருப்பதுண்டோ அவர்கள் உள்ளம்.
என்று வினா எழுப்பும் கவிஞர்,
பெண்ணுக்கொரு நீதிகண்டீர்
பேதமெனும் மதுவை யுண்டீல்
கண்ணிலொன்றைப் பழுதுசெய்தால் சான்றுமிழாதோ?
கான்றுமிழாதோ? புவிதான பழியாதோ?

என்று இச்சமூகத்திடம் நீதி கேட்கிறார் பெண்ணியம் பேசுகிறார்.

காதலுக்கு வழிவைத்து
கருப்பாதை சாத்துங்கள்

என்று பெண் பிள்ளை பெறும் இயந்திரமாகாதிருக்கும் வழியைக் காட்டிய புரட்சிக் கவிஞர் பெண் குழந்தையைத் தாலாட்டும் விதமே தனி. நாய் என்பவனுக்குத் தாய் என உணர்த்த வந்தவள் நீ, சோலை மரமே, மனிதர் நலமெல்லாம் உன்னாலன்றோ?

மூடத்தனத்தின் முடைநாற்றம் வீசுகின்ற
காடு மணக்க வரும் கற்பூரப் பெட்டகமே
சாதி இருள் வெளுப்பதற்கு நீயே தூண்டா
விளக்கு. பொய்ம்மததை கண்ணில் கனல்
சிந்தி கட்டழிக்க வந்தவள் நீ, பகுத்தறிவே
புதுமை செய்ய வந்தவளே

என்று புதுமைப் பெண்ணைத் தாலாட்டுப் பாடி உறங்கச் செய்கிறார். பெண்ணியம் பாடி நிலை பெறுகிறார்.

# தமிழன்பன் கவிதைகளில் பெண் விடுதலை

முனைவர். திருமதி *தெ. வாசுகி இளவரசு,* இணைப் பேராசிரியர் (தமிழ்),
அ.து.ம. மகளிர் கல்லூரி (தன்னாட்சி), நாகப்பட்டினம்.

## முன்னுரை :

இலக்கியம் காலம் காட்டும் கண்ணாடியாக மட்டும் நில்லாமல் சமுதாயப் புரட்சியை உண்டு பண்ணவும் உதவுகிறது. இலக்கியங்களும், கவிதைகளும் பெண்ணியச் சிந்தனைகளை வெளிப்படுத்தும் வகையில் படைக்கப்பட்டு வருகின்றன. பெண்கள் சரிநிகர் சமானமாக வாழத் துடிக்கும் இன்றைய சூழலில் பெண்ணியச் சிந்தனைகளைப் புதுக்கவிதைகள் வெளிப்படுத்தி வருவதில் வியப்பேதும் இல்லை. ஒரு படைப்பாளனின் படைப்புகள் படிப்பவரைச் சிந்திக்க வைப்பதோடு பாதிப்பை ஏற்படுத்த வேண்டும். அப்படிப் பாதிப்பை ஏற்படுத்தும் படைப்புகள் தாம் சிறப்புடையதாகக் கருதப்படும். அந்த வகையில் தமிழன்பன் கவிதைகள் படிப்பவரைச் சிந்திக்க வைப்பதோடு பாதிப்பு ஏற்படுத்தும் வகையிலும் அமைந்துள்ளன. இவர் பல்துறைச் சிந்தனையாளராகவும், சமூக சீர்திருத்தவாதியாகவும், சமுதாய விழிப்புணர்வு கவிஞராகவும் திகழ்ந்து வருகின்றார். தமிழன்பன் புலப்படுத்திய பல்வேறு கோட்பாடுகளில் பெண்ணியமும் ஒன்று.

பெண்ணியம் என்பது ஆணுக்கு எதிரான இயக்கமன்று, பெண் என்பவள் போகப்பொருள் அல்ல. தனித்துவம் வாய்ந்தவள். அர்த்தமில்லாத அடக்குமுறை, ஒடுக்குமுறைச் சக்திகளினால் பெண்களின் மதிப்புகள் ஆணாதிக்கச் சமுதாயத்தில் நசுக்கப்படும் பொழுது அதற்கு எதிராகக் குரல் கொடுத்து பெண்ணின் தனித்துவத்தை, மகத்துவத்தை ஆணாதிக்கச் சமுதாயத்திற்கு உணர வைப்பதும் பெண்களின் மதிப்புகள் பற்றிய விழிப்புணர்வை வளரச் செய்வதுமாகும்.

## விடுதலை - விளக்கம் :

விடுதலை என்பது பிறருக்குத் தீங்கில்லாமல் அவரவர் தான் விரும்பியதெல்லாம் செய்யலாம் என்பதேயாகும். தொழிலாளர் விடுதலை தொழிலாளர்களாலேயே சாதிக்கப்படுவது போல உழைக்கும் பெண்களின் விடுதலையையும் பெண்களாலேயே சாதிக்க முடியும் என்பதை உணர்ந்து செயல்பட வேண்டும். மேலும் விடுதலை என்பது ஒருவர் தந்து ஒருவர் பெறுவதல்ல. ஆணும், பெண்ணும் சமம் என்பதில்தான் உருவாகிறது.

## பெண் விடுதலையின் தொடக்கம் :

பெண்களின் வீட்டுப் பணிகள் அனைத்திலும் ஆடவர் பங்குபெற வேண்டும். பெண்களின் விடுதலைக்கு முன்வந்து பாடுபட வேண்டியவர்கள் பெண்கள்தாம். பெண்களால் ஆண்மை என்ற தத்துவம் அழிக்கப்பட்டாலல்லது பெண்மை விடுதலை அடைய் இயலாது என்பது உறுதியாகும். ஆணுக்கு எதிர்ப்பாக நடந்து கொள்ளும் அனைத்தும் பெண்விடுதலை என்று எண்ணுதல் கூடாது. விடுதலையை விரும்பும் பெண்ணினம் போராடியோ, கேட்டோ பெற வேண்டியுள்ளது. பெண்களுக்குக் கொடுக்கப்பட வேண்டிய உரிமைகள் மறுக்கப்பட்டதால் போராடி உரிமைகள் பெற்று விடுதலை அடைந்த நிலையே பெண் விடுதலையின் தொடக்கமாகும்.

## விடுதலை அடைந்த பெண்கள் :

பாரதியார் தம் கவிதைத் திறனால் விடுதலை பெற்ற பெண்டிரைப் புதுமைப் பெண் என்றும், பெண்மையின் சீர்மிகு நிலைகளைக் கற்பனை நயத்தோடும் பாடியுள்ளார். அவரைத் தொடர்ந்து அடுத்து வந்த பல கவிஞர்களும் அவர் கூறிய புதுமைப் பெண்ணின் இலக்கணத்தை மனங்கொண்டு கவிதைகள் எழுதி வருகின்றார்கள். இன்றைய சமூகச் சூழலில் பெண்களின் நிலைகளைக் கூர்ந்து நோக்கிய கவிஞர் தமிழன்பன் கவிதைவழி பெண் விடுதலையைக் காட்டுவது இன்றியமையாதது.

"மனையுறை மகளிர்க்கு
ஆடவர் உயிர் என்ற
குறுந்தொகை விலங்கை

நறுக்கி எறிந்தவள்

கூட்டுக்குள் இல்லை

இனி வாழ்வென்று

நாட்டுக்குள் புறப்பட்டவள்." (தமிழன்பன் கவிதைகள், ப.92).

என வீட்டில் வாழ்கின்ற பெண்களுக்கு ஆண்கள்தான் உயிர் என்ற நிலையை எதிர்த்து, மறுத்து நாடாளப் புறப்பட்ட புதுமைப் பெண்ணைச் சுட்டுகின்றார் தமிழன்பன்.

**பெண் சிசு விடுதலை :**

சாதியம் மூடநம்பிக்கைகள், பெண்ணடிமைத்தனம் போன்றவை வேரறுக்கப் படவில்லை. இதனால் பெண் சிசுவதை நடைபெற்ற வண்ணம் உள்ளது. பெண் சிசுக்கொலை என்பது கள்ளிப்பாலால் நடைபெறுகிறது. பிறந்த பெண் குழந்தைக்கு கள்ளிப்பால் ஊட்டினால் உடனே மூச்சுத்திணறி இறந்துவிடும். இந்த அவல நிலையிலிருந்து தப்பித்து வளர்ந்து வந்த பெண் கூறுவதாக அமைந்த கவிதையில்,

"கள்ளிப்பாலைக்/கடந்து வந்த மகிழ்ச்சி/அலைகளில்

நீந்த முடியவில்லை/அவளுக்குள்ளிருந்து/ஆண்டு சில சென்ற பின்

புறப்பட இருந்த/கன்னியும் காதலியும்/உடைந்த நிலாக்களாய்

உதிருகின்றனர் அந்த/அலைகளில்" (அந்த நந்தனை எரிச்ச நெருப்பின் மிச்சம், ப. 86)

என பெண் சிசுக் கொலையிலிருந்து தப்பித்து வளர்ந்த பெண்ணின் நிலைப் பற்றி பாடுகிறார் தமிழன்பன்.

**புதுமைப் பெண் :**

புதுமைப் பெண் என்ற சொல் அடிமைத்தனம் நீக்கித் தன்னைத்தான் காத்து அதன்வழிச் சமுதாய மேம்பாட்டைத் தர விழையும் தன்மையினள் என்பதைக் குறிப்பதாகும். இப்புதுமைப் பெண் தற்சார்புத்திறன் மிக்கவளாக இருத்தல் வேண்டும் என்பதைக் கவிஞர்கள் வற்புறுத்தி வருகின்றனர். கணவனுடைய தவற்றைச் சுட்டிக் காட்டுவதோடு, திருந்த வைக்கும் புதுமைப் பெண்ணைத் தமிழன்பன் பாடுவதை,

"அன்புள்ள கணவன் பால் குறையிருந்ததால்

அதைச் செய்தித் தாளுக்கும் அனுப்பி வைக்க

இன்று புதுமைப்பெண் செய்தி நிருபரானாள்" (மின்மினிகாடு, ப. 73)

என்ற கவிதையின் வாயிலாக அறியலாம். பழமையான மரபுகள் மாறிப் புதிய மரபுகளை மேற்கொள்ளும் புதுமைப் பெண்கள் உருவாக வேண்டும் என விரும்புவதை,

"விழிகளில், விரல்களில்/தீண்டாமை தேடாமல்

விடுதலைப் பிரகடனம்/தீட்டுவதற்காகத்

தேடுங்கள்"(தீவுகள் கரையேறுகின்றன, ப.27)

என கண்களுக்கு மைதீட்டும் விரல்கள் இனி விடுதலைப் பிரகடனம் தீட்ட வேண்டும் என்பதை வலியுறுத்துகிறார்.

**காதல் நிராகரிப்பு :**

காதல் என்பது இனக்கவர்ச்சி. காதலுக்கு நுழைவாயில் பார்வை. ஆணும், பெண்ணும் நன்றாகப் பழகி ஒருவரையொருவர் புரிந்து கொண்டு பல்வேறு குணநலன்களையும் சீர்தூக்கிப் பார்த்து இரண்டு மனங்கள் ஒன்றாக வேண்டும் என்பதுதான் காதல் என்பர். இலக்கியங்களில் ஆண் காதலித்துப் பெண் நிராகரிப்பதாக இடம்பெற்றுள்ளதை அப்படியே தமிழன்பனும் தம் கவிதையில் எடுத்தாள்கிறார். இதனை,

"அமுத சுரபியில்/அள்ளி அள்ளி வழங்கிய

மணிமேகலை/மனத்தில் / ஒரு படுக்கையாக

விழமாட்டோமா என்று/தவித்தான் உதயகுமாரன் (மின்மினிகாடு, ப. 73)

என்ற கவிதை வாயிலாக அறியலாம்.

**பாலியல் வன்முறை எதிர்ப்பு :**

பெண்கள் பாலியல் வன்முறையை எதிர்ப்பதாக அமைந்த கவிதையில்,

"காம அசைவுளில்/ஆபாச நெளிவுகளில்

பண்ம் பெறுக்கும் நிர்வாணங்கள் மேல்/

நெருப்புத் தறி போடுவோம்" (நடை மறந்த நதியும் திசை மாறிய ஓடையும், ப.34).

என ஆண்களை எச்சரிக்கின்றதைச் சுட்டிச் சென்றுள்ளார் தமிழன்பன்.

**கலப்பு மணம் :**

கலப்பு மணம் என்பது சிக்கல் நிறைந்ததாகவே உள்ளது. கலப்பு மணம் புரிந்து கொள்வோரின் குடும்பங்களில் இருபாலரின் உறவு முறைகள் முற்றிலும் பிரிந்துள்ளதைக் காணலாம். சாதியை ஒழிக்கும் வழி கலப்பு மணமேயாகும் என்பதை,

"செம்புலப் பெயல் நீரில்/நாணச் சுழிகள் எழுந்ததன்றி

சாதி/நச்சுத்துளிகள் விழுந்ததில்லை"(வணக்கம் வள்ளுவ, ப.175)

என கலப்பு மணத்தால் சாதி ஒழியும் என்றார் தமிழன்பன். மற்றொரு கவிதையில்,

"கால காலமாய்/சிறைக் கம்பிகளுக்குப் பின்னால்

காத்து நின்று காதல் சவத்திற்கு/கோடி போட

கண்களால் - ஒரு/துணி நெய்வதைக் காட்டிலும்

சுதந்திரமான/ஒரு/தழுவலில்

உயிர்க்கு விடுதலை தருவது/

எவ்வளவு அதிகம்"(நிலா வந்த நேரம், ப. 72)

என காலங்காலமாய் சிறைக்கம்பிகளுக்குள் காத்துக் கிடந்து காதல் என்ற பிணத்திற்கு கோடித்துணி போட நினைப்பதை விட ஒரு அணைப்பில் உயிர்க்கு விடுதலை தருவது எவ்வளவு இன்பமானது என்ற காதல் மணத்தை, கலப்பு மணத்தை ஆதரித்துப் பாடுகின்றார் தமிழன்பன்.

**பெண் ஆதிக்கம் :**

மனைவிக்கு அடங்கிய கணவனாக, அவர்கள் பேச்சை மீறாதவனாக அவள் ஆணைக்குக் கட்டுப்பட்டவனாகச் செயல்படுகின்ற கணவனின் ஆதங்கத்தை,

"ஊரிலிருந்து/நான் வந்து பார்க்கும் முன்

என்ன அவசரம்?/கழிவறைப்பக்கமா பூஜை அறை?

இடியுங்கள் என மனைவி சொன்னாள்/இடிபட்டேன்" (பனிபெய்யும் பகல், ப. 20).

என்ற கவிதை வரிகள் வாயிலாக வெளிப்படுத்துகின்றார். மேலும், புதுமைப் பெண்ணின் புரட்சிகர எண்ணத்தை வெளிப்படுத்துகிறார். இதனை,

"கல்லானாலும் கணவன்/புல்லானாலும் புருஷன்

என்னும்/பழமொழிகளைக்/குழிதோண்டிப் புதைத்தாள்"

என, கணவன் எத்தகைய தவறு இழைப்பனும் அவனே கண்கண்ட தெய்வம் என்ற நிலையை மாற்றிப் புதுமைப் பெண்ணாகத் திகழ்கின்ற பெண்ணைச் சுட்டிக்காட்டுகின்றார். தமிழன்பன். இங்ஙனம் பெண்கள் சிந்தனை மிக்கவர்களாக விளங்குவதோடு, விடுதலை வாழ்வைத் தாமே முயன்று பெற்றதனால் வீடும் நாடும் நலம்பெற்று வருகின்றது.

**முடிவுரை :**

பெண்கள் தம் உரிமைகளை மதித்து அடிமைத் தனத்தை விலக்கி அனைத்துத் துறையிலும் ஈடுபாடு கொண்டதனால் இந்நாடு பெற்ற நன்மைகள் பலப் பல. இன்று பெண் சிசு வதை என்பதே குறைவு எனலாம். காதல், கலப்பு மணத்தால் வரதட்சணை, சாதிப் பிரச்சினை மிகுந்துள்ளது. பெண்கள் ஏற்காத பணியே இல்லை. பல்வேறு துறைகளிலும் பெண்கள் இடம்பெற்றதனால் நம் நாடு உலக நாடுகள் மத்தியில் தலை நிமிர்ந்து நிற்க வாய்ப்புகள் ஏற்பட்டுள்ளது. விடுதலை அடைந்த மகளிரால் நாடு நலம்பெறுவதோடு புதுமை மகளிர் என அழைக்கப்படுகின்றனர். பெண் விடுதலையின் அடிப்படை வெற்றி நாடும் வீடும் நலம் பெறுவதேயாகும் என்பதை தமிழன்பன் கவிதைகள் வெளிப்படுத்திய வண்ணம் உள்ளன என்பதில் சிறிதும் ஐயமில்லை.

# தகனம் நாவலில் பெண்ணியக் கோட்பாடுகள்

*டே.வில்சன்,* விரிவுரையாளர்,
இதயா மகளிர் கல்லூரி, கும்பகோணம்.

பெண்கள் கல்வி பெற்று சமுதாயத்தில் ஆணுக்கு நிகராகப் பணிபுரிதல் என்பதே சமத்துவம், சமஉரிமை என்று தவறாக எண்ணப்படுகிறது. கல்வி, நாகரீகம் இல்லாமல் கிராமத்தில் வாழும் பெண்களிடமும் சமநோக்கு உணர்வு வெளிப்படுத்தப்படுவதைத் தகனம் என்னும் நாவல் சித்தரிக்கின்றது. சமூகத்தில் ஆண்களுக்கு இணையான மதிப்பினைப் பெற்றுத் தருவது பெண்ணியத்தின் தன்மை என அறிஞர்களின் கூற்றிற்கு இணங்க ஆண்டாள் பிரியதர்ஷினியின் நாவல் தகனம் அமைந்துள்ளமையைக் காண்கின்றோம்.

காலம் காலமாக அடிமைப்பட்டு, தன் எண்ணங்களை வெளிப்படுத்த முடியாமல் சிக்கித் தவிக்கும் பெண் சமுதாயத்திற்கோர் கலங்கரை விளக்கு தகனம். சமூக அக்கறையோடு தனது படைப்புகளின் வழி பெண்ணியக் கோட்பாடுகளை புரிந்து வெளிப்படுத்தும் சிந்தனையாளர்களில் ஆண்டாள் பிரியதர்ஷினியும் ஒருவர். அவரது தகனம் எனும் நாவலில் இடம் பெறும் பெண்ணியக் கோட்பாடுகளைப் பற்றி ஆராய்வதும், அவற்றின் வழி உணர்த்த விரும்பும் கருத்துக்களை விளக்குவதும் இக்கட்டுரையின் நோக்கம்.

## தகனம் - கதைச் சுருக்கம்

தாழாங்குப்பம் கிராமத்தில் வெட்டியான் தொழில் செய்யும் அண்ணன், தங்கை இரு குடும்பத்திற்கிடையே பிணக்கு ஏற்படுகிறது. தங்கையின் கணவன் குடும்பத்தை நிற்கதியாக விட்டுச் செல்கின்றான். குடும்பத்தை நடத்திச் செல்ல தகப்பனின் தொழிலாகிய வெட்டியான் தொழிலை அக்குடும்பத்தில் உள்ள மூவரில் சின்னப் பொண்ணு என்பவள் செய்கின்றாள். பெண் என்பதால் வேலை செய்யும்போது அவள் படும் வேதனைகளையும், இறுதியில் இரு குடும்பத்திற்கிடையே உறவுப் பாலம் அமையுமா? என்ற கேள்வியையும் ஏற்படுத்தி, பெண்ணால் தன்னிச்சையாக குடும்பத்தை நடத்திச் செல்ல முடியும் என்ற நிலையை நாவல் விளக்குகிறது.

## பெண்ணியக் கோட்பாடு

பெண்ணியம் என்ற கோட்பாட்டிற்கு ஆண்கள் எந்த அளவு சமூக அமைப்பிலும், பொருளாதாரத்திலும், அரசியலிலும் ஈடுபட்டு உரிமை கொண்டாடுகிறார்களோ, அந்த அளவுக்குப் பெண்களுக்கும் மேற்கூறிய துறைகளில் அனைத்து உரிமைகளும் வழங்கப்பட வேண்டும் என்று கூறுவதோடு, அதனடிப்படையில் நன்கு வரையறுக்கப்பட்ட சமூக அமைப்பை உருவாக்கித் தரவும் முயலுகிறது என்று விளக்கம் தரப்படுகிறது. பெண்ணியம் பல கோணங்களை உடையது. ஆதலால், அவற்றிற்குரிய கோட்பாடுகளும் வெவ்வேறு கருத்துக்களை உள்ளடக்கியதாக அமைகிறது.

அவற்றுள்

1. மகளிர் ஒடுக்கப்படுவதைக் கேள்விக்குட்படுத்தல்
2. பாலின வேறுபாட்டை விமர்சித்தல்
3. தொழில் தர்மம்
4. பெண் பற்றிய இழிவான கருத்தியலை உடைத்தெறிதல்

போன்ற கூறுகள் இந்நாவலில் அமைந்துள்ளதைக் காணமுடிகிறது.

## 1. மகளிர் ஒடுக்கப்படுவதைக் கேள்விக்குட்படுத்தல்

பாரம்பரியக் குடும்ப அமைப்பில் பெண்களைப் பொறுத்தவரையில் வீட்டிலும் வேலை செய்து, வெளியிலும் வேலை செய்து அதிக சுமைக்கு ஆளாகித் தனிமைப் படுத்தப்படுகின்றார்கள், என்றும், இக்குடும்ப அமைப்பில்

தீவிரமான சில மாற்றங்களை ஏற்படுத்த வேண்டும் என்றும் சமதர்ம பெண்ணிய வாதிகள் எடுத்துரைக்கின்றார். அவ்வகையில் ஆசிரியரின் தகனம் நாவலில் சின்னப்பொண்ணு பாத்திரத்தின் மூலம் வெளிப்படுத்துகிறார்.

இந்நாவலில் மாரியம்மாவின் கணவன் தன் குடும்பத்தை விட்டுவிட்டுச் சொல்லிக்கொள்ளாமல் வேறு பெண்ணுடன் சென்று விடுகின்றான். அவன் தொழில் பிணம் எரிக்கும் வெட்டியான் தொழில். வேறு எந்த விதமான சேமிப்பும் கிடையாது.

தினம் தினம் சுடுகாட்டிற்குப் பிணம் வந்தால் அதில் கிடைக்கும் வாய்க்கரிசியே தங்கள் வயிற்றுப் பிழைப்புக்கு கிடைக்கும். இந்நிலையில் குடும்பத்தலைவன் தன் சுகத்தில் நாட்டம் கொண்டவனாகச் செயல்பட்டு குடும்பத்தை நிர்கதியாக விட்டுச் செல்கிறான்.

அந்நிலையில் தான் சின்னப் பொண்ணு தன் குடும்பப் பொறுப்புகளைத் தாங்கும் நிலைக்குத் தள்ளப்படுகிறாள். அவள் தன் தந்தையின் குலத் தொழிலாகிய வெட்டியான் வேலைக்குச் செல்லத் துணிகிறாள். அதில் கிடைக்கும் வருமானத்தில் தன் குடும்பத்தைக் காப்பாற்றுகிறாள். இதனைச் சமூகம் கடுமையாக விமர்சனம் செய்வதைத் தன் நாவலில் குறிப்பிட்டுச் சொல்கிறார் ஆசிரியர்.

பொட்டச்சிங்க கூட வெட்டியான் தொழிலுக்கு வந்தாச்சு அதுங்கள்ளெல்லாம் போட்டி போட்டா.... ஒன்ன மாதிரி ஆம்பளைங்க என்னத்தைச் சம்பாதிக்க? எப்படிக் குடும்பத்தைக் காப்பாத்த...? என்ற இருசப்பன் கூற்று தெளிவாகப் பிரதிபலிக்கிறது. மேலும், சின்னராசு தன் குடும்பப் பகையை மாற்றி தன் உறவுகளோடு ஒன்றிக்க நினைக்கையில் இருசப்பன், தன் இறப்பிற்கு பின்பு உறவுகளோடு சேர்ந்து கொள் என்று தன் கருத்தை வெளிப்படுத்துகின்றார். இதன்மூலம் வேலைபார்க்கும் மகளிர் ஒடுக்கப்படுவதைக் கடுமையாகச் சாடுகிறார்.

## 2. பாலின வேறுபாட்டை விமர்சித்தல்

உலகம் பெண்களை உலகின் கண்களாகப் போற்றுகிறது. தமிழ் மரபுப்படி, நதிகளாகவும், கடலாகவும்; பூமியாகவும் இன்னும் பலவிதமாகவும் வைத்துப் பூசிக்கின்றார்கள். இது ஒரு புறம் இருக்கத் தெய்வ நிலைக்கு உயர்த்தப்பட்ட அதே மகளிரைப் போதைப் பொருளாகவும் சமுதாயம் பயன்படுத்தி இழிவு செய்வதை வன்மையாகக் கண்டிக்கிறார். ஆண்களின் சுகத்திற்காக மட்டும் பெண்கள் என்ற ஆணாதிக்கச் சிந்தனையைக் கேலி செய்கின்றார். சின்னப் பொண்ணு பாத்திரத்தின் மூலம் இக்கருத்தை வெளிப்படுத்துகின்றார்.

பொம்பளப் புள்ளங்களை இவனுங்க சொகத்துக்கு மோந்துப்புட்டு, பிரச்சனையாயிரக் கூடாதுன்னு எரிக்க வக்கறதே இவனுங்களுக்குப் பொழப்பாயிருச்சு.... அந்தப் பொண்ணை எரிச்சு சாம்பலாக்கி இல்லாமப் பண்ணிப்புடலாம்.... ஆனா.... மேலே ஒருத்தன் இருக்கான். அவன் பார்வையிலிருந்து தப்பை மறச்சுட முடியுமா? (ப.49)

இன்றைய சமுதாயத்தில் பெண்ணுக்கு கற்பு நெறி வலியுறுத்தப்படுகின்றது. அதுவே ஆடவர்க்குக் கற்பு நெறியின்மையைச் சுட்டி ஒருதலைப்பட்சமாகச் சமூகம் அமைந்துள்ளமையைச் சுட்டுகிறார். இறுதியில் கடவுள் என்ற வார்த்தை கூறி பெண் சமூகத்தில் கொடுமைப்படுத்தப் படுவதை வெளிப்படுத்துகிறார்.

## 3. தொழில் தர்மம்

சமுதாயம் வலிமை, தைரியம் என்ற சொற்களுக்கு உரிமை உடையவர்களாக ஆண்களையே முன்னிலைப்படுத்தியது. தொன்று தொட்டு வலிமையுடையவர்களாக, கடுமையான பணிகளைப் பெரும்பாலும் ஆண்களே செய்து வந்தனர். ஆண் மக்கள் செய்யக்கூடிய செயல்களாகச் சிலவற்றையும், பெண் மக்கள் செய்யக் கூடிய செயல்களாகச் சிலவற்றையும் பாகுபாடு செய்துள்ளனர். இன்று வரை ஆண்களுக்கு உரிய செயல்களில் பெண்கள் ஈடுபட்டால் சமூகம் அவர்களை ஒரு கேலிப்பொருளாக பேசுவதைக் காண முடிகிறது. சின்னப் பொண்ணு

தன் குடும்பத்தைக் காப்பாற்ற மேற்கொள்ளும் போது, சின்னப் பொண்ணுக்குக் கஞ்சியூத்த ஆள் இல்ல.... மயானத்தில் இறங்கிட்ட..... பொட்டப் புள்ளக்கி எம்புட்டு நெஞ்சாரம் பாரு.... கடைசி ஊர்வலத்துலேயே வர விடாத பொம்புளைக..... இன்னிக்கி பொணம் எரிக்குதுண்ணே.... (ப.26) என்ற கூற்றின் மூலம் வெளிப்படுகிறது.

இத்தொழிலைச் செய்யும் சின்னப் பொண்ணு அதில் உடலும் உணர்வும் ஒன்றித்து செய்யும் செயல் என்பதை, எல்லாப் பொணத்துக்கும் கடைசிச் சொந்தக்காரங்க நாங்கதான் ஸார்.... நாங்கதான் அவங்களை வழியனுப்புவோம். புனிதமா பண்ற தொழிலு சார் இது.... (ப.16) என்ற கூற்றின் மூலம் தெளிவாகிறது.

## 4. பெண் பற்றி இழிவான கருத்தியலை உடைத்தெறிதல்

பெண் என்பவள் ஆணுக்கு அடங்கி நடக்க வேண்டும். வீதி வரை மனைவி என்ற பட்டினத்தார் கூற்றிற்கேற்ப கட்டிய கணவன், பெற்ற பிள்ளை என யார் இறந்தாலும் இறுதி ஊர்வலத்தில் வீதியோடு நிற்க வேண்டும். ஆண்கள் மட்டுமே செய்து கொண்டிருக்கும் பணியில் பெண் எப்போதும் தலையிட்டுப் பணி செய்தல் கூடாது. இந்தக் கட்டுப்பாடுகளை எல்லாம் உடைத்தெறிந்து சமதர்ம சமூகத்தை, ஆண் பெண் என்ற வர்க்க வேறுபாடில்லாத சமுதாயத்தை உசிரோட இருக்கிற மனுசங்களோட பொய்யி.... திருட்டுத் தனம்.... ஏமாத்து, களவாணித்தனம் இந்த நாத்தத்தை விடாவா (ப.14) என்ற சின்னப் பொண்ணு கூற்றின் மூலம் தெளிவாக்குகின்றார் ஆசிரியர்.

## தொகுப்புரை

பெண்களின் மனவலிமைக்குச் சின்னப் பொண்ணு மயான வேலை செய்தல் சான்றாகும்.

பெண்களைப் போதைப் பொருளாகவே பார்க்கும் ஒரு கூட்டத்தினரைக் கண்டித்தல்.

பெண், செய்யும் தொழிலைப் புனிதமாகக் கருதுபவள்.

சமுதாயம் பெண்கள் மீது கொள்ள தாழ்வான எண்ணங்களை அகற்றுதல்.

## சான்றெண் விளக்கம்


1. பிரேமா. இரா. பெண்ணியம், 2001, பக்கம் – 13.
2. பிரேமா. இரா. பெண்ணியம், 1994, பக்கம் – 45.
3. ஆண்டாள் பிரியதர்ஷினி, தகனம், நியூ நெஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை – 2001.

# மாலதி மைத்ரியின் கவிதைகளில் பெண்ணியம்

*க. ஜவஹர்*, ஆய்வியல் நிறைஞர் - தமிழியல் துறை,
பாரதியார் பர்கலைக்கழகம், கோவை - 46.

நிகழ்காலச் சூழலில் பெண் சுதந்திரம், பெண்ணுரிமை, ஆண்-பெண் சமத்துவம் போன்ற கருத்தாக்கங்கள் உலக அளவில் தீவிரமாக வலுப்பெற்று வருகின்றன. இச்சூழலில் ஆண் தனக்கான ஒரு கருவியாக/சேவைப் பொருளாக பெண்ணை வைத்திருக்கின்றான் என்கிற கருத்தாக்கங்களை பெண்ணியவாதிகள் முன் வைக்கின்றனர். சமூகம், இலக்கியம், அரசு போன்றன தங்களுக்கான வரையறைகளை வகுத்துள்ளன என கூறுவதோடு அவைகளைக் கட்டுடைக்கின்றனர். இவ்வாறாக அனைத்துத் தளங்களிலும் இருந்தும் விடுபட்டு இயங்கும் சுதந்திர நிலையில் பெண்ணியத்தை நவீனகாலம் முன்வைக்கின்றது.

## பெண்ணிய வகைகள்

பெண்ணியம் உருவாகும் சூழல், நாட்டின் பின்புலம், காலங்களுக்கேற்ப பர்வேறு கருத்து நிலைகளில் உள்ளதை Marxist Feminism, Liberal Feminism, Socialist Feminism, Post - Morden Feminism, Post Structural Feminism, Meterial Feminism, International Feminism, Transformative Feminism, Radical Feminism, Anti-racist Feminism, Psycholanytical Feminism என www. members.w.linkpnet~parkertr/ Feminism/types என்கிற இணைய தளம் விளக்குகிறது. இவைகளுள் தாராளவாதப் பெண்ணியம், சமதர்மப் பெண்ணியம், தீவிரவாதப் பெண்ணியம் போன்றவைகளே முக்கியத்துவம் வாய்ந்தவைகளாகக் கருதப்படுகிறது.

## பெண்ணியமும் - அறிஞர்களும்

எல்லாப் பெண்களையும் அரசியல் மற்றும் பிற அடிமைத்தளத்திலிருந்து விடுவித்தல் என பார்ராஸ்மித்தும் ( ஆஹழ்கூஷஹழ்ஹ நம்ண்றட் ) பெண்ணியத்தின் லட்சியம் பெண்கள் விடுதலையே, அதற்குள் அனைத்து மக்களின் பாலியல் தன்னுரிமையும், ஓரினப்புரட்சியாளர்களின் விடுதலையும் அடங்கியுள்ளது என காட்மனும் பெண்ணியம் குறித்து விளக்குகின்றனர். ஆக பெண்ணியம் என்பது பெண் சமூகத்திற்கான, பெண்ணுடலுக்கான விடுதலையை நோக்கிய விழைவெனக் கொள்ளலாம்.

## பெண்மொழி

ஆண் மதிப்பீடுகளால் உருவாக்கப்பட்டவைகளை கேள்விக்குட்படுத்துவதன் மூலம் பெண்மொழி சாத்தியமாகிறது என பெண்ணியவாதிகள் கூறுகின்றனர். அழகு, பெண்மை, நாணம் முதலிய இல்க்கண வரையரைகளை மீறுவதாகவும் ஆணுடலை தூக்கியெறியும் வல்லமை பெற்றதாகவும் பெண்மொழி உருப்பெறுகிறது.

## மாலதி மைத்ரியின் கவிதைகளில் பெண்ணியம்

பெண்ணியக் கருத்தாக்கம் இவரின் கவிதைகளில் இயற்கை, தாய்மை போன்ற உணர்வு சார்நிலைகளில் இயங்குகின்றன. உடல் மனம் சார்ந்த வலிகள், அவைகள் மீது நிகழும் சமூக வன்முறைகள், ஆணாதிக்கம் போன்ற அனைத்து கட்டுப்பாடுகளில் இருந்தும் விடுபட்டு இய்ற்கை நிலைக்குத் திரும்புதல் என்பதாக அமைகின்றன. தன் கவிதைகள் குறித்து அவர் கூறுகிறபொழுது, “சமூக வயப்பட்ட மனித உடலை மீண்டும் அதன் இயற்கை வயப்பட்ட நிலைக்கு கொண்டு செல்லும் விழைவு” என்கிறார். பெண்ணுடலுக்கான பெண் சமூகத்திற்கான, ஒட்டுமொத்த மனித சமுதாயத்திற்குமான விடுதலையாக இவரின் கவிதைகள் விரிவு பெறுகின்றன.

## பெண்நிலை

பெண்ணுக்கான இருப்பென்பது காலங்கள் தோறும் சமூகத்தில் மிக வலிமையாக கவனத்தோடு ஊடகம், தகவல் தொடர்பியல், இலக்கியம் என எல்லா நிலைகளிலும் வரையறுக்கப்படுகின்றது. தனக்கென்று

சுயமற்றுப் போகிற நிலையில் தனக்கான வாழ்தல், விருப்பு, வெறுப்புகளை முன்வைக்கின்ற பெண்ணின் குரல் மறுக்கப்படுகின்றது. இந்நிலையில்

துண்டிக்கப்பட்ட நாக்குகளை
சேகரித்துக் கொண்டிருக்கிறேன்

என கவிதையில் ஒட்டு மொத்த பெண்களின் ஒலியாக கவிதையின் குரல் ஒலிக்கிறது. தொடர்சியாக முற்றுப்பெறாத, பேசப்படாத, நினைக்கப்படாத பெண்ணுக்கேயுரித்தான சொற்களை கவிதை சேகரிக்கிறது. ஆண்-பெண் என்கிற எதிர் நிலையில் கவிதை பிறக்கிற பொழுது,

உனது தாகத்திற்கு /குவளையில் தளும்பும்/உதிரம் /என குருதியைக் குடிக்கிற பெருந்தாகமெடுத்தலைகிற வடிவாக ஆணுடல் அடையாளப்படுத்தப்படுகின்றது. உலையில் வேகிற உயிராக ஆணின் பசிக்கு பெண்ணுடல் இரையாக்கப்படுகிறது. பெண்ணுடல் மீது தொடர்ந்து நிகழும் அனைத்து விதமான வன்முறைகளையும் செய்கிற கருவியாக ஆண்உடல் இருக்கிறதென்பதை

காலங்காலமாக /உடல் குதறி உயிர்க்கும்/நாகரிகம்/என மிக உயிர்ப்புடனும், வீச்சுடனும் நம்மனதில் பெருங்கனத்தை ஏற்படுத்துகிறது.

## பெண்ணுடல் மீதான வன்முறை

சமூக மதிப்பீடுகள் பெண்ணுடல் மீதான வன்முறைக்கு எந்நேரமும் தயாராய் இருக்கும் ஏவுகணையாக இருக்கிறதென்பதை

கண்களில் காமம் நுரைத்து நீர் வடிய
ஆண்கள் ஊரெங்கும் அலைய

என்பதாக கட்டமைகிறது. பெண்ணுக்கான அங்கீகாரம் சமூகப் பாதுகாப்பு என்பது முற்றிலும் இல்லையென்பதை

இரவுமுறை வேலைக்குச் செல்லும்
இன்னும் சிலர் தங்கள் கருப்பைகளில்
நஞ்சை நிறைத்துக் கொண்டு திரும்புகின்றார்கள்

எனக் கூறுவதன் மூலம் சமூகத்தில் பெண் பாதிக்கப்படுகின்றாள் என்ற வெற்று கோஷங்களை தகர்த்து யதார்த்தத்தை முன்வைக்கின்றது கவிதை. பெண்ணுடல் நீருக்கு ஒப்புமையாகிற பொழுது கண்கள் மழைத்துளியாகவும், கூந்தல் அருவியாகவும், உடல் நதியாகவும் புனையப்படுகின்றது.

கடலடைந்த கணத்தில் /எல்லையற்றதாகிச் சுழல்கிறது/உடலுலகு.

கடலடைகிற கணநேரத்தில் வரையற்றதாக உடலும் உலகமும் மாற்றம் பெறுகிறது. கவிதையில்,

## பெண் எழுச்சி

பெண் மீதான கட்டுப்பாடுகளையும், ஆணின் வரையறைகளையும் தகர்த்தெறிகிற வலிமையை கவிதை பெறுகிற பொழுது,

உனது சிமிழுக்குள் அடைக்கப்பட்ட /கிளியல்ல உயிர்

என எதிர்க்கிறது. விசையற்ற கோளமாகிறது. ஆணுடலின் வலிமையையும் உச்சத்தையும் அளவிட்டு,

உன்னால் ஏழுகடல் மட்டுமே தாண்ட முடியும்
கோப்பைக்குள் நீ - அதன்/விளிம்புக்கு வெளியே ./எல்லையற்ற என்னுடல்

என எல்லைகளை மீறிய சுதந்திர உருவாகிறது பெண்ணுடல்

## மன வலிமையும் பெண்ணுருவும்

ஆணுடல் விலங்கின் உடலாகப் புனையப்படுகிறது. அதன் ஆதிக்கங்கள் விளைவுகளாக கவிதை உருப்பெறுகிறபொழுது,

கதறி அடங்கும் விலங்குகள் /சிறகுகள் பொசுங்க வட்டமிடும் ஆற்றாமை

என வன்முறை வாழ்வில் தனக்கான வாழ்தலுக்குரிய சிறகுகள் இழந்த ஆற்றாமை வலியாக மாறுகிறது. இயற்கை நிகழ்வுகளும் பெருந்துயராகிறது. காற்று அனலாக வீசுகிறது. மணலென நொறுங்கும் மனம்/புழுதியாச் சுழலும்/ நிலையின்றி மனம் புழுதியாய்ச் சுழல்கிறது. மணலாக நொறுங்கிப் போகிறது. இப்படியாக மனவலியின் உச்சம் கவிதையாக உருப்பெருகிறது. மனம் மட்டுமன்றி ஆன்மாவும் கூட பாதிப்பிற்குள்ளாகிறது.

என் ஆன்மாவைப் போன்ற /கறுத்துக் கசந்தம தேனீரை குடித்துக் /கொண்டிருக்கின்றேன்

என்று கறுத்துக் கசந்து போன தேனீருக்கு வலியால் உருமாறிய ஆன்மா உவமிக்கப்படுகிறது.

## பெண் அரசியல்

கட்டுப்பாடுகள், மரபுகள் போன்றவைகளில் இருந்து ஒட்டுமொத்த பெண்சமூகத்திற்குமான விடுதலையை முன்வைப்பதாக பெண் அரசியல் கவிதைகளில் நீள்கிறது.

ஊரின் அனைத்து வீடுகளும் /நடப்பட்ட பெண்களென நிற்கின்றன
சாளரங்கள் கண்களாகவும் வாசல் யோனியாகவும்.........

என்று பெண்ணுடல் ஆணிற்காக எல்லா வீடுகளிலும் காத்துக்கிடக்கிறது என வீச்சுடன் எழுகிற கவிதை பெண்ணுடல் மீது நிகழும் ஆதிக்கம் வன்முறையை உள்ளீடாகக் காட்டுகிறது. அத்துடன் நில்லாது வீடென்பது எல்லை. அத்தகைய எல்லைகளைக கடந்த நிலையில் பெண்கள் உள்ளனர் என்பதை

காலத்தை ஆளும் பெண்கள் வீடாவதில்லை என கால வெளிகளில் பெண்ணுடலை முன்வைக்கிறது. அரசு நிலையிலும் பெண் மீது வன்முறைகள் நிகழ்வதை இரும்புத் தொப்பி கவிதை விளக்குகிறது. சிப்பாயால் பாலியல் வன்முறைக்கு உள்ளாக்கப்பட்டு ஒரு பெண் கர்பவதியாகிறாள். தற்கொலை செய்ய முயன்று காப்பாற்றப்படுகிறாள். குழந்தை பிறக்கின்றது.

பிறந்த குழந்தை ஊரை விட்டுப் போய்விட்ட
ஏதோ ஒரு இரும்புத் தொப்பிக் காரனின்
சாயலில்............

என்ற அரசுநிலையான வன்முறையைப் பேசுகிற கவிதை, குழந்தையின் வளர்தல் பெண்ணுடல் மீதான அரசாங்கத்தின் வளர்தலாகப் புனையப்படுகிறபொழுது

இரும்புத் தொப்பி /வளர்ந்துகொண்டே இருக்கிறது

என்று உருப்பெறுகிறது. மாலதி மைத்ரியின் கவிதைகளில் பெண்ணியமானது, அனைத்துத் தளைகளில் இருந்தும் விடுபடல், மரபுகளின் கட்டமைப்பு, மதிப்பீடுகளால் உருவான ஆணுடலை வெளியே நிறுத்தல், பெண்ணுடல், பெண் சமூகத்திற்கான சுதந்திரதளத்தை நோக்கிய விழைவு போன்றவைகளாக வடிவம் கொள்கின்ற பொழுது புனைவம்சத்துடன் உயிர்ப்புடன் ஊற்றெனப் பாய்கிறது நம்முன்.

# வாஸந்தியின் கடை பொம்மைகள் நாவலில்
# பெண் சிசுக்கொலை - ஒரு பார்வை

முனைவர். *க.ஜோஸ்பின்மேரி,* தேர்வுநிலை விரிவுரையாளர்,
பாத்தமா கல்லூரி, மதுரை-18.

மங்கையராய்ப் பிறப்பதற்கே நல்ல மாதவம் செய்திடல் வேண்டுமம்மா என்று பாடிய கவிமண பிறந்த மண்ணில் தான் பெண் பெரும் சுமையாகிப் போன அவலத்தைக் காண முடிகிறது. பெண்ணாய்ப் பிறப்பதற்கே நித்தமும் கொலை செய்யும் பாதகமும் இம்மண்ணில் தான் நிகழ்கின்றது. பெண் குழந்தைகளின் பிறப்புரிமையும், வாழ்வு நிலையும் சர்வதேச அரசியல் சாசனத்தில் உறுதி செய்யப்பட்டபோதிலும் நடைமுறையில் செயல்படுத்தப்படவில்லை என்பதே உண்மை. மனித உரிமை குறித்த மிகப் பெரிய மீறலாகிய பெண் சிசுக்கொலையை மையமாகக் கொண்டு வாஸந்தி அவர்கள் கடைபொம்மைகள் எனும் நாவலை உருவாக்கியுள்ளார். அந்நாவலை ஆதாரமாகக் கொண்டு பெண் நிராகரிக்கப்பட்டாலும், அதற்கான காரணங்களும் பெண் நிராகரிப்பு ஏற்படுத்தும் விளைவுகள், இதற்கான தீர்வுகள் குறித்த சிந்தனையை வெளிப்படுத்த இக்கட்டுரையில் முயற்சி மேற்கொள்ளப்பட்டுள்ளது.

## கதை மாந்தர்கள்

கதை சொல்லி வாஸந்தி தன் கதையில் ஆண் மாந்தர்களைவிட பெண் மாந்தர்களையே அதிகம் படைத்துள்ளார். சிசுவிலே அழிக்க முயன்றும் பிழைத்துப் படித்த மஞ்சு, குழந்தை மீனாட்சி, உதயா, பெற்றோரால் நிராகரிக்கப்பட்ட கப்பு, கணவனால் கைவிடப்பட்ட பவானி, நிராதரவான சாரதா, வரதட்சணைக் கொடுமையைத் தன் வீட்டிலே கண்டு திருமண வாழ்வை வெறுத்த கலாவதி, காவல்துறைப் பணியினை மேற்கொள்ளும் கற்பனையோடு அனாதையான கருப்பாயி போன்ற பெண் கூட்டமே கதை சொல்லியால் உருவாக்கப்பட்ட கதைமாந்தர்கள்.

## பெண் - நிராகரிக்கப்படல்

பெண் உணர்வுடையவள் என்றோ, அறிவுடையவள் என்றோ, தன்னை ஒத்த மனுஷி என்றோ கருதப்படவில்லை. ஆண்களே பெண்களை நிராகரிப்பவர்களாகவும், அவர்களது நிர்பந்தத்தினால் பெண்கள் கருவை, சிசுவை நிராகரிக்கின்றனர் என்பதனைக் கதை சுட்டுகிறது.

பெண்ணாப் பிறந்தா முதல் குழந்தையானாலும் வேண்டாமாம் புருசனுக்கு

இதப்பாரு புள்ளே மறுபடியும் தெளிவாச் சொல்றேன்...... மறுபடி ஒரு பொட்டைப் புள்ளையோட வந்து நின்னே இந்த வீட்டிலே இடம் கிடையாது .

முதல் ரெண்டும் பொட்டைப்புள்ளைங்களா வெட்கம் இல்லாமல் சுமந்துகிட்டு வந்தே

எனும் பகுதிகள் ஆணே பெண்ணை வெறுப்பவனாக, பெண் பிறப்பை வெட்கக் கேடானது என்று கருதுபவனாக படைத்துக் காட்டுகிறது கதை.

ஆணின் வற்புறுத்தலுக்காகவும், பெண் தன் சுயமதிப்பு இழந்த விரக்தி நிலையிலும் பெண்ணை நிராகரிக்கின்றாள்.

இதைத் தூக்கிக்கிட்டு (பெண்) உம்புருஷன்கிட்ட தைரியமா போயிடுவியா

தூக்கிட்டுப் போனா புருஷன் உள்ளே சேர்க்க மாட்டான்

பெண் பிறந்தா கொல்றதுதான்.... நாமபடற கஷ்டம் அது ஏன் படணும்

போன்ற பகுதிகள் மேற்கூறியதை விளக்கும் சான்றுகளாக அமைகின்றன.

பெண் நிராகரிப்பு என்பதன் கொடுமைய்யும் கதை சொல்லி சுட்டிச் செல்லத் தயங்கவில்லை. நிராகரிப்பு என்பது மிக விபரீதமான விஷயம். பிறந்து கண் திறப்பதற்கு முன்பே வெறுக்கப்படுவது ஆன்மாவில் விழும் செமையான அடி. அது ஏற்படுத்தும் ஊனம் நிரந்தரமானது. அந்த ஊனமும், பிழைத்து யாரிடமோ வளரும்போது இந்த உயிர் யாரோ இட்ட பிச்சை என்று எழுகின்ற நினைப்பும் பல ஜென்மங்களுக்கு உள்ளத்தில் கூனல் விழச் செய்துவிடும் என்பதையும் கதை உணர்த்துகிறது. இதையெல்லாம் நோக்க, கணவன் விரும்பாத பெண் குழந்தைகளை பெண்ணும் நிராகரித்தல் என்பது அவள் தன் கணவன்மீது கொண்ட நம்பிக்கையை

நிரூபிப்பதற்காகவே ஆகும். மேலும் இந்தச் சமுதாயம் லாபக் கோட்பாட்டிற்கே முக்கியத்துவம் தருவதால் பெண்ணின் பிறப்புரிமையும், வாழ்வுரிமையும் மறுக்கப்படுகிறது. அதனால் பெண் நிராகரிக்கப்படும் ஒரு பொருளாகிப் போனாள் என்பதனை உணரமுடிகிறது.

**காரணங்கள்**

பெண் நிராகரிக்கப்பட சமூகம் பலகாரணங்களைக் கற்பிக்கின்றது. அவற்றுள் ஒன்று வரதட்சணை.

பெண்ணைத் திருமணம் செய்து கொடுக்கத் தரப்படும் வரதட்சணையோடு பெற்றோரின் செலவுக் கடமை தீர்ந்து விடுவதில்லை. அதன்பின்னும் ஆடிச் சீர், பொங்கல் சீர், பின்பு பிள்ளைப்பேற்றுக் கடமை எனத் தொடரும் செலவுகள், அதில் தன்னையே சிக்க வைத்துக் கொண்டது மனித இனம்.

மூத்த அக்கா கல்யாணத்துக்கு வாங்கின கடன் சுமை தாங்காம அப்பா ஓடிட்டாரு. இரண்டாவது அக்கா கொண்டுவந்த வரதட்சணை பத்தாதுன்னு அவ புருஷன்கிட்டேயிருந்து தினம் அடி உதை. மூன்றாவது அக்காவுக்கு வந்த வரன் எல்லாம் பணத் தகராறிலே தட்டிப் போச்சு.

என்பதும்

காசு பணம்வாங்காம எவன் கட்டிக்குவான்?

என் பொஸிஷன்லே இருக்கிறவன் ஏகமா வரதட்சணை கேக்கிறான்

எனும் பகுதிகள் வரதட்சணை எனும் வன்முறை பெற்றோருக்கு கடன்சுமையைத் தருகிறது எனும் உண்மையை உணர்த்துகிறது. இதே போன்றதுதான் திருமணத்திற்குப் பின் செய்யும் கடமைகளும்.

மாப்பிள்ளைக்கு ஆடிச் சீரும் கல்யாண ஊர்வலம் போல கொட்டுமேள சகிதமாய் கூட்டமாய்போக வேண்டும். கூட்டத்தின் முன் இரண்டு வண்டிகள் நிறைய மூட்டைகளும், வாழைத்தார்களும் செல்ல வேண்டும்.

மாப்பிள்ளைச் சீரும் இத்தனை இத்தனை கொடுக்கணும்னு இருக்கு... இல்லேன்னா சொந்தக்காரங்களே இடிச்சு பேசுவாங்க... அதையே காரணம் காட்டிப் பெண்ணை பிறந்த வீட்டுக்கு அனுப்பிச்சிடுவான் மாப்பிள்ளை என்பதும் கூட ஆண் லாபம் கருதியே வாழ்வதனால் பெண் ஒதுக்கப்படுகிறாள் என்பது புலனாகும்.

பணியிடங்களில், படிக்கும் இடங்களில் கூட பெண்களுக்கும், பெண் குழந்தைகளுக்கும் வன்முறையில் இருந்து பாதுகாப்பு என்பதற்கு உத்தரவாதம் இல்லை.

ரிசர்ச் மாணவர்களுக்கும் அவர்களுடைய கைடுகளுக்கும் அநேகமாக நெருக்கமான தொடர்பு இருப்பது எனக்குத் தெரியும். மாணவிகளின் நிலை பரிதாபமானது.... இருவருக்குமிடையே இயல்பான ஆகர்ஷனம் ஏற்படுவதுண்டு என்றாலும் அதே சமயம் நிர்பந்தத்திற்குள்ளாவது பொதுவான அங்கீகரிக்கப்பட்ட நடைமுறை வழக்கு

பெண் என்றால் அதனை மேற்கூறிய வன்முறையினின்றும் காப்பது பெற்றோருக்குச் சுமையாகிப் போகிறது.

ஆணைப் பெற்றவருக்கு இருக்கும் பண ஆசை ஒருபுறம் நம்மிடம் இருக்கும் நிறமோகம் மறுபுறம் நின்று பெண்ணை ஒதுக்குகின்றது.

பிள்ளையைப் பெத்து வியாபாரம் பண்ணலாம்னு

பிள்ளை வீட்டுக்காரங்க கேட்கிற 10 சவரன் நகை போட இல்லாததாலே

என்னும் பகுதிகள்,

நல்ல நிறமா இருக்கிற பெண்களுக்கு கல்யாணம் செய்யறது கஷ்டமாயிருக்கும் போது கரிக்கட்டையா வேற இருக்காளே

என்னும் பகுதிகளும் மேற்கூறியதை விளக்கும். மேற்கூறிய காரணங்கள் பெண்ணை இச்சமூகம் ஒரு சுமையாகப் பாவிக்கும் மனப்பக்குவம் கொண்டுள்ளது என்பதைப் புலப்படுத்தும.

இன்றைய சமூக நிலை நோக்க வரதட்சணை கொடுப்பதும் வாங்குவதும் சமூக அந்தஸ்தை வெளிப்படுத்தும கருவிகளாக மாறிப் போயின. வரதடசணை வலைக்குள் சிக்கிக் கொண்ட மக்கள் அதினின்று வெளிவர இயலாது போக பெண் குழந்தைகள் என்றால் அதிகச் செலவு எனும்கருத்தையும் வளர்த்துக் கொண்டனர். பெண் என்றால் அதிகச் செலவு எனும் சிந்தனையை உருவாக்கிக் கொண்டமையால் சமூகம் பெண் குழந்தைமீது வெறுப்பை வளர்க்கத் தொடங்கியது.

## விளைவுகள்

பெண் குழந்தைமீது கொண்ட வெறுப்பின் வெளிப்பாடே பெண் கருக்கொலையும், சிசுக்கொலையுமாகும். பெண் கருவை அழிக்க மருத்துவ முறையைக் கூட நாடுவதில்லை. மருத்துவச்சியை நாடுகின்றனர். ஏனெனில் மருத்துவமுறையை நாடினால் அது மற்றவர்களுக்கு தெரிந்துவிடும். தெரிந்தால் அவமானம் எனக் கருதுகின்றனர். இதனால் ஓர் உயிர் அழிகிறது என்பதைவிட போலிக் கவுரவம், மானம், அவமானம் குறித்த சிந்தனைக்கே முதலிடம் தரும் சமூக நிலையே காரணமாகும்.

பிறந்த பெண் குழந்தையைக் காப்பகத்துக்கும் கொடுக்கச் சம்மதிக்காத சமூகம். காப்பகத்துககுத் தருவது கௌரவக்குறைச்சல், வளர்க்கத் துப்பில்லேன்னு ஜனங்க ஏசுவாங்க என்ற எண்ணம்.

போலிக் கௌரவம் காரணமாக சிசுக்கொலை நடைபெறுகிறது. அதுவும் பெண்ணே செய்கிறாள். ஆணின் கட்டளையில்,

பெண்ணைப் பெத்ததும் ஊரிலே எல்லோரும் என்ன செய்யறாகளோ அதை நீயும் செய் என்கிறான் கணவன்

ஆத்தா கொல்லைப்பக்கம் சென்று எருக்கம் பாலை சங்கில் எடுத்து வருகிறாள்

கண் திறக்காமலே எருக்கம் பாலைக் குடித்துக் கதையை முடித்துக் கொண்டிருக்கும். இல்லாவிட்டால் பத்து நாட்கள் பாலும் நீரும் கிடைக்காமல் வற்ற வற்றக் காய்ந்திருக்கும். கருப்புப் பல்லியாய் அது செத்திருக்கும்.

என்னும் பகுதிகள் பெண் நிராகரிப்பு என்பதன் விளைவாய் பெண் ஆணின் கட்டளைக்குக் கீழ்ப்படிந்து பெண் சிசுவை கொடுமையில், கொடூரமாய் கொல்லப்படுவதனை உணர்த்துகின்றன. இஃது சமூக அநீதி மட்டுமல்ல மனித உரிமை மீறலுமாகும். இதில் தாயின் மனநிலை என்ன?

பவுன் தாயி..... விருக்கென்று எழுந்து.... மஞ்சுவைக் கைக்குள் வைத்து அணைத்து வேண்டாம்..... முடியாது..... வேணாம் ஆத்தா வேணாம் என்று அலறுகிறாள்! ஆத்தா.... உன் புருஷன் படியேற விடமாட்டாண்டி... பவுன்தாயி என்ன வேணும்னாலும் ஆகட்டும் கொன்னுடாதே ஆத்தா என்கிறாள். பின்னர் காப்பகத்தாரிடம்! அம்மா உங்களுக்குப் புண்ணியமாப் போகும் இந்தக் குழந்தையை நீங்க தூக்கிட்டுப் போங்க எங்கேயாவது அது பொளச்சுக்கட்டும்

என்கிறாள். இப்பகுதி பத்துமாதம் சுமந்து பெற்ற ஒரு தாயின் மனநிலையை உணர்வைப் புரிந்து கொள்ள வைக்கின்றது.பெண் கொலை நீடித்தால் பெண்ணில் எண்ணிக்கை குறையும். அது நினைத்துப் பார்க்க இயலாத விளைவுகளை ஏற்படுத்தும். பெண்களின் எண்ணிக்கைக் குறைவு அவர்களை ஒரு பாலுறவுப் பொருளாகவே பார்க்க வைக்கும். அவர்கள் ஒருபோதும் மனிதாபிமானத்துடன் நடத்தப்படமாட்டார்கள் என்பது மட்டுமே நிதர்சன உண்மையாகிப் போகும்.

## தீர்வுகள்

பெண் சிசுக்கொலையைத் தடுக்க கதை சொல்லி தன் கதையில் சில செய்திகளை முத்திரைப் பதிக்கின்றனர்.

கடுமையான தண்டனை கொடுக்கப்பட வேண்டும். அப்போதுதான் கொலை குறித்த பயமிருக்கும்.

தவறு செய்வதற்குக் காரணம் படிப்பறிவின்மை. படிப்பறிவு மட்டுமே தன்னைக் காக்கும். அதே நேரத்தில் பிரச்சனைகளை சமாளிக்கக் கற்றுத்தரும். எனவே படிப்பறிவு தர வேண்டும்.

இந்தக் கை உதவத்தான் இருக்க. அவலங்களைக் கண்டு ஓடிப்போனால் உதவி வேண்டியவர்களுக்கு உதவி எப்படிக் கிடைக்கும் பிறர் உதவி பெற்று உயர்ந்தோரும், ஏனையோரும் உதவ முன்வர வேண்டும். அதற்கு தன்னையோ, தன் வாழ்வையோ அர்ப்பணிக்கத் தேவையில்லை. மத்தவங்களுக்கு வழி காண்பித்தாலே போதும்.

திருமணம் செய்து கொள்ள ஆசைப்படுவது குற்றம் இல்லை. ஆனால் அது ஒன்றே இங்கே இலட்சியமாகப் போய்விடுகிறது. மனுஷனே .இல்லை என்று தெரிந்திருந்தும் அவனோடு வாழும் அவலம் இந்த மண்ணில் தான் நிகழும் இந்நிலை முற்றிலுமாக மாற வேண்டும்.

அரிது! அரிது! மானிடராய்ப் பிறத்தல் அரிது. எல்லாப் பிறப்புக்கும் காரணம் உண்டு என்பதனை உணர்ந்து வாழக் கற்றுக்கொள்ள வேண்டும்.

பெண் தன் திறமையை உணரவும், அதனைப் பயன்படுத்தவும் வழிகாட்டிகள் உதவ முன்வரவேண்டும் என்பதே கதைசொல்லி தரும் சில தீர்ப்புகள் ஆகும். மொத்தத்தில் எல்லாப் பெண்களும் படித்தவர்களாக, பொருளாதாரச் சுதந்திரம் பெற்றவர்களாக, எந்தவிதமான நிர்பந்தத்துக்கும் பயப்படாதவர்காளக மாறவேண்டும். சமூகநலம் பெற அது இன்று அவசியத் தேவையாய் நிற்கின்றது.

# "ஓராண்காணி" சிறுகதையில் பெண்ணியம்

*இரா. ஜோதி,* தமிழ் இலக்கியம் - முதுகலை நிறைவாண்டு,,
அ.ப.ம. கல்லூரி, சின்னக்கலையம்புத்தூர், பழனி.

## முன்னுரை

பெண்கள் ஆண்களின் விருப்பத்திற்கேற்ப,, எதிர்பார்ப்பிற்கேற்பச் செயல்பட வேண்டும் என்ற சிந்தனை காலத்தால் புதிதல்ல. கிராமத்துப் பெண்கள், நகரத்துப் பெண்கள், கல்வியறிவு பெற்றவர்கள், பெறாதவர்கள் எனப் பிரித்துப் பார்க்க இயலாத வகையில் பெண்ணினம் முழுமையும் இச்சிந்தனைக்கு ஆட்பட்டு இருக்கின்றது. இதனை "சோலை - சுந்தரப்பெருமாளின், ஓராண்காணி" சிறுகதையில் காணலாகும். சில ஏக்கங்கள் வாயிலாக ஆராய்ந்து கூறமுற்படுகின்றது இக்கட்டுரை.

## பெண்ணிய வரையறை

பெண் விடுதலை என்பது காலங்காலமாகப் பேசப்பட்டு வரும் ஒன்றாகும். பெரும்பான்மையான பெண்கள் ஆண்களால் அனுபவிக்கும் இன்னல்களையும், கொடுமைகளையும் சகித்துக் கொண்டிருக்கின்றனர். ஆண்களின் அடிமைத்தனத்திலிருந்து பெண்களை மீட்டு அவர்களுக்கு ஒரு விழிப்புணர்வை வலியுறுத்துவதாக அமைகிறது பெண்ணியம். மேலும், ஆண்கள் மட்டுமின்றிப் பெண்களுக்குப் பெண்களாலும் பல்வேறு சிக்கல்கள் உருவாகின்றன என்பது மறுக்க முடியாத உண்மை. இவற்றினின்று விடுபட்டு மேன்மையடைய வழிகோலுவதே பெண்ணியம். "பெண்களின் தாழ்நிலையை ஆராய்ந்து அதை மாற்ற மேற்கொள்ளப்படும் வழிமுறைகளே பெண்ணியம்"1. என்று கார்டன் கூறுகிறார். புட்சர் "பெண்ணியம் என்பது பெண்கள் பாலினப் பாகுபாட்டால் அனுபவிக்கும் தனிப்பட்ட பொருளாதாரத் துன்பங்களை எதிர்த்து மேற்கொள்ளும் இயக்கமே"2. என்று கூறுகிறார்.

இக்கருத்துக்களை ஆராய்கையில் பல்வேறு முனைகளில் பெண்களுக்கு உருவாகும் பிரச்சனைகளை மாற்ற முற்படும் கோட்பாடு எனநாம் வரையறுக்கலாம்.

## தாலியால் அடிமையாக்கல்

"தாலி" என்பது இந்துமத மக்கள் சிலரால் புனிதமாகக் கருதப்படுகின்றது. தாலியின் மீது நம்பிக்கை உடையோரிடையே "திருமணமானவள்" எனப் பெண்ணை அடையாளப்படுத்துவது இத்தாலிதான். ஆண்களின் தவறான எண்ணங்களுக்கு ஆட்படாத வகையில் பெண்ணைக் காப்பது இத்தாலி தான் என்ற நம்பிக்கையும் இந்தியப் பெண்களிடையே உண்டு. ஆனால் இந்த தாலியே அவளுக்கு "குடும்பம்" என்ற அமைப்பிற்குள் அடிமைப்படுத்தும் வலங்காக ஆகிறது என்றால் அது மிகையாகாது.

"தாலி தான் பொண்ணுக்கு வேலி", "மூக்கணாங்கயிறு" என அவளது உறவுகள் அனைத்தும் தாலி மூலம் கட்டுப்படுத்தப்படுகின்றன"3. என்ற கூற்று அதை மெய்ப்பிக்கின்றது. தாலி என்ற ஒன்றை கட்டிவிட்டாலே பெண் தனக்கு அடிமை என்று ஆண் கருதும் போக்கைச் சோலை சுந்தரப்பெருமாளின் கூற்றும் நிரூபிக்கின்றது"அவள் புருஷன் மனசு சில்லாப்பில் குளிர்ந்து போயிருந்தது. அவளிடம் எல்லாத்தையும் தான் எடுத்துக் கொள்ள உரிமை கொடுக்க சுண்டுவிரல் மொத்தத்தில் மஞ்சள் கயித்தைக் கொண்டல்லவா இருக்கிறாள்"4. இத்தகைய பெண்கள் எந்நாளும் சிந்தனைகளால் தனித்தியங்க இயலாது.

சமுதாயத்தில் பெண்கள் பல சாதனைகளை செய்து வரும் நிலையிலும் மஞ்சள் கயிற்றைக் காரணமாகக் கொண்டு பெண்களைச் சுதந்திரமாகச் சிந்திக்கவிடாமலும், செயல்படாவிடாமலும் செய்யும் இப்போக்கு முற்றிலும் மாறவேண்டும். சில பெண்கள் தங்களுக்குத் தாங்களே இவ்விலங்கை மாட்டிக் கொள்ளும் நிலையும் நிலவுகிறது. இத்தகைய பெண்களும் சிந்திக்க வேண்டும். திருமணமானவள் என அடையாளப்படுத்தும் அக்கறியீடு பெண்ணின் வளர்ச்சிக்கு எவ்விதத் தடையாகவும் ஒரு போதும் ஆகக்கூடாது.

## திருமணத்தில் பெண் உரிமை பறிபோதல்

ஒவ்வொரு பெண்ணுக்குள்ளும், கனவுகளும் கற்பனைகளும் நிறைந்துள்ளன. எதிர்காலத்தில் தானும் தன் சந்ததிகளும் எவ்வாறு வாழ வேண்டும், உயர வேண்டும் என்பனவற்றைச் சார்ந்ததாக அது அமையும். சில பெண்களுக்கு இவ்வெண்ணம் எண்ணியவாறு கைகூடும். சிலருக்கு அவர்களுடையே எண்ணமே சிக்கலுக்கு காரணமாகிறது. அதனால் வாழ்க்கையில் ஏமாற்றம் ஏற்படுகின்றது. இந்நிலைக்கு ஈடுபடாமல் பெண்களுள் சிலர் இதனின்று விடுபட முனைவர். சிலருக்கு புகுந்த வீட்டிற்குச்சென்றுவிட்டால் பிறந்த வீட்டின் முழுமையான ஆதரவு பெற இயலாத நிலை ஏற்படலாம். இத்தகைய பெண்கள் தங்களுக்கு ஏற்பட்ட துன்பத்திலிருந்து மீள முடியாமல் வேறு வழியின்றி கிடைத்த வாழ்வு பொருந்தாததாக இருப்பினும் ஏற்றுக் கொண்டு வாழ்வர். "ஓராண்காணி" சிறுகதையில் வரும் பெண்ணிற்கு இத்தகைய நிலைதான் ஏற்படுகிறது.

"அவன் சில்மிஷத்தில் அவள் நெகிழ்ந்து போனாலும், புள்ளப் பெத்துக் கொள்வதில் உள்ள அவசரத்தை அவள் மனசு தோண்டிப் பார்த்தது. சொன்னா ஏத்துக்குவாரோ? ஏத்துக்கமாட்டாரோ? அதில் "பிகு" பண்ணி..... மத்தவங்களுக்குத் தெரிஞ்சா....இளப்பமா போயி என்னமோ ஏதோன்னு ஆளுக்கு ஆள் கண்ணு, காது, மூக்கு வச்சு பேச இடம் கொடுக்க வேண்டாம் என்று அவனோடு உடன்பட்டாள்"5. இவள் தன்மனதில் உள்ள விருப்பத்தை அவளால் சொல்ல இயலாமல் கணவனின் விருப்பத்திற்கு இணங்கி நடப்பவளாக இருக்கின்றாள் என்பதை "சோலை சுந்தரப்பெருமாள்" கூற்றால் நாம் அறியலாம்.

கிராமப்புறங்களில் வாழும் பெண்கள் சமூகச் கட்டுப்பாட்டிற்கு அஞ்சியும், தன்னைச் சுற்றியுள்ள மக்கள் குறை சொல்லாமல் இருக்க வேண்டும் என்பதற்காகவும் கணவன் சொல்லைக் கேட்டு அடங்கி நடக்கின்றனர். "கல்லானாலும் கணவன்", "புல்லானாலும் புருஷன்" என்ற பழமொழியைத் தவறாது கடைபிடிக்கின்றனர். இதற்கு ஏற்பக் கணவனை எதிர்த்துப் பேசி ஏச்சு, பேச்சு வாங்குவதைவிட அவன் சொல்லுக்குக் கட்டுப்பட்டு நடப்பதையே பெண்கள் வழக்கமாகக் கொள்கின்றனர். இவர்களுடைய அனுபவங்களே இவர்களை விழிப்படையச் செய்யும்.

## பெண்ணை அடிமைப்படுத்தும் "புற அழகு"

"பாலுறவிலும் தம் ஆதிக்கத்தைக் காட்டி அவற்றில் கிடைக்கும் இன்பத்தையும் மனைவி முழுமையாக அனுபவிக்க முடியாது. ஆண்கள் அங்கும் ஓரகமாகவே (தன்னலம்) நடந்து கொள்கிறார்கள்"6. என்ற கூற்றும் "மரரு (தேனு) ! நீ என்னை எப்பவும் சந்தோஷமா வைச்சுக்கனும்"7. என்ற கூற்றும் "உளவியல்" அடிப்படையில் பெண்களின் உணர்வுகள் இல்லறத்தில் ஆண்களால் புரிந்துகொள்ளப்படவில்லை என்ற புரிதலை நமக்கு ஏற்படுத்துகின்றது. தன்னை மகிழ்வாக வைத்துக் கொள்ள வேண்டும் எனத் தன்மனைவியிடம் எதிர்பார்க்கும் கணவன் தானும் அவளை அவ்வண்ணம் மதிக்க வேண்டும் என எண்ணுவதில்லை. மேலும் கணவன் மனைவியிடம் அன்பு காட்டுவது போல் இடம் பெற்றுள்ள அக்கூற்று ஆணின் தெளிந்த அறிவால் கூறப்படவில்லை. அவன் இல்லற இன்பத்தை நாடிக்கூறும் கூற்றாகவே உள்ளது.

இத்தகைய அன்பால் பெண்ணிற்கு யாதொரு நிலைத்தத் தன்மையும் குடும்பத்தில் ஏற்பட்டுவிடுவதில்லை. இவ்வாறு ஆண்கள் இன்ப நுகர்வையும் பெண்ணின் புற அழகையும் எதிர் நோக்கியே பெண்களிடம் அன்பு காட்டுகின்றனர். "எங்க வூட்ல எல்லோரும் கறுப்புதான் எனக்கு வரப்போறவளாச்சும் நல்ல சேப்ப மொழு மொழுப்பா அழகா இருக்கனுமின்னு ஆசைப்பட்டேன்"8. இம்மனப்போக்கு சமுதாயத்தில் நிலைத்து இருக்கும் வரை பெண்களுக்கெதிரான பிரச்சனைகளை முற்றிலும் களைந்துவிட முடியும் என்ற நம்பிக்கை கொஞ்சம் கொஞ்சமாகச் செயலிழந்து கொண்டே வருகின்றது என்று நாம் கருத இடமளிக்கின்றது.

## ஆணாதிக்கப் போக்கு

இளம் பெண்கள் சின்னச் சின்ன நிகழ்விலும் தங்கள் விருப்பத்தை, நிலைநாட்ட முயல்வர். பெண்கள் ஒவ்வொருவரும் சிலவற்றில் தனக்குத் தானே அனுபவித்து இன்பம் காணும் ஆசை கொள்வதும், புடவை

கட்டுதல், நகை அணிதல், பூச்சூடல் போன்றவற்றால் தங்கள் விருப்பம் நிறைவேற வேண்டும் என எண்ணுவதும் தவறில்லை. ஆனால் இதுவும் நிறைவேறாத நிலை ஓராண்காணிச் சிறுகதையில் வரும் பெண்ணிற்கு ஏற்படுகிறது. தேனு தனக்குப் பிடித்தமான நிறமுடைய புடவையை எடுத்தாள். ஆனால் அது கணவனுக்குப் பிடிக்கவில்லை. எனவே அப்புடவையை அவளால் உடுத்த முடியவில்லை. தன் கணவனே தனது ஆசைகளுக்குத் தடையாக இருக்கிறான் என்பதை அறிந்து அவள் வேதனையுறுகிறாள்.

திருமணத்திற்குப் பிறகு "தாலி, குங்குமம், பொட்டு இட, பூச்சூட, விரும்பிய கலர்சேலை நகைகள் அணிய பெண் உரிமை பெறுகிறாள்"9. எனவரும் கணேசலிங்கனின் கூற்று இவண் சிந்திக்கத் தக்கது. திருமதியானவள் என்பதற்கான அடையாளம் தாலி. எனவே இதை வேண்டுமானால் திருமணத்திற்குப் பிறகு ஏற்றுக் கொண்ட கூடுதல். அணிகலனாகக் கொள்ளலாம். ஆனால் குங்குமப் பொட்டு இடுதல், பூச்சூடல், தனக்குப் பிடித்த வண்ணப் புடவைகளை அணிதல் போன்றவை திருமணத்திற்குப் பின் நிகழக் கூடியவை இல்லை. அவற்றை அனுபவிக்க உகந்த பருவமுதலே ஒவ்வொரு பெண்ணும் அனுபவித்து வருகின்றாள். எனவே திருமணத்திற்குப் பின் இப்படி இருக்க வேண்டும், இப்படி இருக்கக் கூடாது என்ற தேவையற்ற விதிகளை விதித்து ஒவ்வொரு மனிதனின் வாழ்க்கைக்கும் ஆதாரமாக அமையும் மனமகிழ்வைப் பறிக்கத் தேவையில்லை.

ஒவ்வொரு காரியத்திலும் பெண் ஆணையே சார்ந்து இருக்கும் நிலை நிலவுகின்றது. எவ்வாறென்றால் கீழ்வரும் பல வகையில் அடிமையாக வாழ்கின்றாள். அவனது பாலுறவு இன்பத்திற்காகவும், அவனது பரம்பரையைப் பெருக்குவதற்காகவும் ஒரு பெண் ஆணுக்குத் தேவைப்படுகிறாள். அப்பெண்ணின் மனநிலை பெரும்பாலான ஆடவர்களால் புரிந்து கொள்ளப்படுவதில்லை. சமுதாயத்தில் உள்ள ஒவ்வொரு ஆணும் தன் விருப்பப்படி - தான் பெண் இயங்க வேண்டும் என்ற ஆதிக்க மனப்போக்கோடு உலவி வருவதால் பெண் ஆணுக்கு அடிமையாகும் நிலை நிலைத்த தன்மையை அடையும் வழிதான் அதிகமாகிறதே ஒழிய பெண்ணின் பிரச்சனைகள் குறையும் வாய்ப்பு அதிகம் காணப்படவில்லை.

## நிறைவுரை

பெண் விடுதலை என்பது காலங்காலமாய்ப் பேசப்பட்டு வரும் ஒன்றாகும். பெண்களின் சுதந்திரம் ஒவ்வொரு இடத்திலும் பல கோணங்களில் பறிக்கப்படுகின்றது. தங்களின் ஆதிக்கத்திற்குக் கீழ்தான் பெண் வாழ வேண்டும் என்று பல ஆண்கள் கருதுகின்றார்கள். இதனால் ஆண்ாதிக்கப் பிடியிலிருந்து விலகிப் பெண்கள் சுதந்திரமாக வாழவேண்டும் என்ற எண்ணம் சமுதாயத்தில் உள்ள ஒவ்வொரு பெண்ணிடமும் உருவாக வேண்டும். அதற்காகவே பெண்கள் மனதளவிலும், பொருளாதார அளவிலும் மேன்மை அடைய வேண்டும்.

## அடிக்குறிப்புகள்

1. டாக்டர் முத்துச்சிதம்பரம், பெண்ணியம் தோற்றமும் வளர்ச்சியும் ப. 10
2. மேலது, ப. 11
3. செ. கணேசலிங்கன், பெண்ணடிமைதீர, ப. 20
4. சோலை சுந்தரப்பெருமாள், ஓராண்காணி, ப. 76
5. மேலது, ப. 82
6. மு.நூல், ப. 24
7. மு.நூல், ப. 81
8. மு.நூல், ப. 81
9. மு.நூல், ப. 22

# தலித் பெண்ணிய அரங்கு

முனைவர். *க.அ. ஜோதிராணி*, விரிவுரையாளர்,
தமிழ்த்துறை, எத்திராஜ் மகளிர் கல்லூரி, சென்னை -8.

சாதியச் சமுதாயம் என்றவுடன் சட்டென்று கண்ணெதிரே நிற்பது ஆதிக்க கும்பலும் தலித் சமுதாயமும் எனும் இரும் பெரு பிளவுதான். சமுதாய சிறுபான்மையான பார்ப்பனக் கும்பல் வகுத்த விதியை மாற்ற வேண்டும். மாற்றி எழுதிட வேண்டும். அது சாதிய விடுதலையில்தான் சாத்தியமாகும். சாதிய விடுதலை சமூக விடுதலையுடன் இணைந்துள்ளது என்பதையும் காண வேண்டும்.

பார்ப்பனனின், தலித் எனும் பெரும்பிளவிலிருந்து விடுவிப்பதுதான் தலித் விடுதலை. பார்ப்பனனின் விதிகளை ஏற்று தலித்துகளை அடிமைச் சாதியாக நடத்தும் பார்ப்பனீயத்திலிருந்தும் பிற உயர்சாதிய பிளவிலிருந்தும் விடுபடுவதுதான் தலித் விடுதலை.

சாதியை ஒழிக்காமல் சமத்துவம் சகோதரத்துவம் ஒருமைப்பாடு என்பது விழலுக்கு நீரை இறைக்கும் வேலையே, சாதியை வைத்துக் கொண்டு சமுதாய ஏற்றத்தாழ்வைப் போக்க நினைப்பது விஷமத்தனத்தின் வேரைவிட்டு விழுதைப் பதம்பார்க்கும் வேலையே.

தொழில் பிரிவை, வர்க்கப்பிரிவை, வர்ணம் பூசி சாதியாக்கி உழைக்கும் மக்களை பிளவுபடுத்திய பார்ப்பானிய ஆதிக்கக் கும்பல், உடைமைச் சாதிய பிரிவுக்கு கீழே படிநிலையில் அடிமைச் சாதிகள் இருப்பதை மார்தட்டிச் சொல்லிக் கொள்ளச் செய்தது. தாம் பிளவுபடுத்திய மக்களை தமது சுரண்டல் மற்றும் ஆதிக்க நலனுக்கு ஏற்ப இந்து மதத்தின் பேரில் ஒன்றாக்கியது. சாதி இந்துக்கள் என்று சொல்லுவதைவிட உடைமைச் சாதி இந்துக்கள் என்றே கூறலாம்.

முதலாளி தொழிலாளி எனப் பெருத்த வேறுபாடு நிலவிக் கொண்டிருக்கும் சமூகத்தில், தொழிலாளி அடிமையாக இருப்பதும் முதலாளி சமூகத்தை ஆளுபவராக இருப்பதும் ஏற்றத்தாழ்விற்கு அடிப்படையாக இருக்கிறது. தொழிலாளி எப்போது தலைமையைக் கையில் எடுக்கிறானோ அப்போதுதான் சமுதாய வேறுபாடு களையப்பட முடியும். இது நகர்ப்புற நிலை என்றால், கிராமப்புறத்தில் நிலப் பண்ணையார்களிடம் தமைமையாதிக்கம் உள்ளது. கூலி ஏழை நடுத்தர உழவர்கள் அடிமைகளாக உழல்கின்றனர். அதற்கு முதலில் உழவனை அடிமைகொள்ளும் நிலம் சமப்பகிர்வு செய்யப்பட வேண்டும். அந்தநிலையை இந்த ஆதிக்க வர்க்கம் எளிதில் நமக்குத் தந்துவிடாது. போராடித்தான் அடைய முடியும். நமது போராட்டம் நிலத்துக்கும் சமூக அதிகாரத்துக்குமானது என்பதனை நாம் உறுதியுடன் பற்றிக் கொள்ள வேண்டும்.

அம்பேத்காரின் கொள்கைகளும், பெரியாரின் கொள்கைகளும் இன்றுவரை நமக்கு முழுச்சுதந்திரம், உரிமை பெற வழிகாட்டக் கூடியன என்று சொல்லிவிட முடியாது. இருவருமே பார்ப்பன சாதிமதத்தின் எதிராளிகளே. ஆனால் இருவரின் கொள்கைகளும் மலை தொடங்கி மடுவரையிலான ஏற்றத்தாழ்வுள்ள சாதியச் சமூகத்தை ஒழித்து சமத்துவமாக்கும் நடைமுறையைக் கொண்டதாக அமையவில்லை. ஒருவர் பார்ப்பனிய இந்தியாவை ஏற்றுக்கொண்டு சாதியத்தை ஒழிக்க முயன்றார். இன்னொருவர் பார்ப்பனிய இந்தியாவை மறுத்த போதும் உழைக்கும் மக்கள் அதிகாரத்திற்கான விடுதலை இயக்கம் கட்டவில்லை. சாரத்தில் இருவரது பணியும் சீர்திருத்தமாகவே இருந்தது. இருவரும் சனாதன, வர்ணசாதி கொள்கையாளர் காந்தியின் அகிம்சை வழியைத்தான் தத்தமது வழியாகக் கொண்டிருந்தனரே தவிர புரட்சிகர வழிமுறையை உழைக்கும் மக்களின் அதிகாரத்திற்கான வழிமுறையைக் கொண்டிருக்கவில்லை. சீர்திருத்த வழியே இருவரது வழியாக இருந்தது. சீர்திருத்தம் ஒருபோதும் புரட்சியைக் கொண்டுவராது. மக்களுக்கு விடுதலை அளிக்காது.

சாதியம் என்பது வர்க்க முரண்பாட்டுடன் இணைந்து இயங்குகிறது. தலித் மக்கள் நிலத்துடன் பிணையப்பட்ட உழவர் குடிகள் ஆவர். ஆனால் உழைப்பைச் செலுத்தி உயர்வுபெற சொந்த நிலம் இல்லை. சாதிய நிலவுடமைவகுப்புகள் உழவர் வகுப்பான தலித் மக்கள் மற்றும் பிற்படுத்தப்பட்ட மக்களை நிலமற்றவர்களாக்கி ஒடுக்கி வாழ்கின்றனர். இந்த ஒடுக்கு முறையை எதிர்த்து உழவர் வகுப்பு ஒன்றிணையக் கூடாது என்று சாதியக் கட்டமைப்பு தடுத்து விடுகிறது.

சாதிய நிலவுடமைப் பொருளாதாரத்தை தகர்க்க வேண்டும், அதற்கு முட்டுக்கொடுத்து நிறுத்தும் பார்ப்பினிய அரசியல் அதிகாரத்தை வீழ்த்திட வேண்டும். சமுதாயத்தின் அனைத்து ஒடுக்கப்பட்ட மக்களின் அதிகாரம் நிறுவப்பட வேண்டும். இந்த வழிமுறைதான் சாதீயத்தை ஒழிக்குமே தவிர இடைக்கால பொருளாதரச்

சீர்திருத்தக் கோரிக்கைகள் சீர்திருத்தப் போராட்டங்கள் விடிவைத்தராது. அரசியல் அதிகாரத்திற்கான புரட்சிப் போராட்டங்களே நமது சாதிய அடிமைச் சங்கலியை நொறுக்கி எறியும். இத்தகைய வரலாற்று கடமையை தலித் மக்களும் பிறசாதி உழைக்கும் மக்களும் எதிர்கொண்டுள்ளனர். இத்தகைய வரலாற்றுப் பின்னனியில் தலித் பெண்கள் தங்களது கடமையைச் செயலாற்ற வேண்டியுள்ளது.

பெண்ணியம் என்பதே மேட்டுக்குடி வர்க்க மகளிர் கருத்தியல் வாதங்களாகவே உள்ளன. பொருளாதார மேம்பாடுகொண்ட முதலாளிய அதிகார நிறுவனங்களில் இடம் பிடித்த வர்க்கப் பிரிவைக் கொண்ட மகளிர் குழுவின் கருத்தியல் வாதங்கள். உழைக்கும் பெண்களின் அதிகாரத்தை ஏற்றுக் கொண்டவர்கள் அல்ல. மாறாக, பாலியல் சுதந்திரம் பேசுகிறது. ஆணைப் போலத் தானும் தனிச் சொத்துடமை அடைய நினைக்கிறது. தலித் சொத்தின் அடிப்படையிலும் அதனுடன் சம்பந்தப்பட்ட விதத்திலும் தான் பெண்களின் பாலின அடிமைத்தனம் வளர்ச்சியுற்றது என்பதை வரலாறு நமக்குக் கற்பிக்கிறது. அதனை மனதில் கொண்டு தனிச் சொத்துடமையை ஒழிப்பதும், அதன் வளர்ச்சி நிலையிலுள்ள முதலாளித்துவத்தை ஒழிப்பதும் தான் வெற்றியாக அமையும். அதை விடுத்து எதிராளியாய் ஆண்களை பாலியல் எனும் சுந்திரம் பெயரில் பாலியல் அராஜாகத்தை கொள்கையாக்கும் மேட்டுக்குடி பெண்கள் கருத்தியல் சரியான தீர்வாகாது? உழைக்கும் மக்களுக்கு எதிரானதாகும்.

பெண் விடுதலை இயக்கமானது பெண்களைக் கொண்டே போராட்டத்தைத் தொடர்ந்ததல்ல. அதில் உழைக்கும் ஆண்களையும் இணைத்தே போராடினர் என்பதை நாம் புரட்டிப் பார்த்துக் கொள்ள வேண்டும். அந்த வகையில் தலித் பெண் விடுதலையில் ஆதிக்க வர்க்கக் குணமுள்ள தலித் பெண்கள் இணைய மாட்டார்கள். அவ்வாறு இணைந்தாலும் தமது ஆதிக்க நலனுக்காக அதிகாரம் செலுத்தவே முயல்வர். அதே வேளை பிறசாதிய பிரிவைச் சார்ந்த உழைக்கும் பெண்கள் ஆதரவுக்கரம் நீட்டுவர் என்பதையும் மனதில் கொள்ள வேண்டும. பெண் வர்க்கத்திற்குள்ளும் முதலாளி - தொழிலாளி, ஆளுமை - ஆதிக்க வர்க்கங்கள் உண்டு என்பதை அடிப்படை அம்சமாகக் கொள்ள வேண்டும்.

உழைக்கும் வர்க்கங்களின் தொழிலாளர் - உழவர்களின் புரட்சிகர வர்க்கப் போராட்டம் இன்றி தலித் பெண்கள் உட்பட பெண்களின் உண்மையான முழுவிடுதலை சாத்தியமில்லை என்பதை உணரச் செய்தல் வேண்டும். புரட்சி மட்டும் பெண்விடுதலைக்கான ஒரே வழி என்று உலக மகளிர் தினத்தை முன் மொழிந்த கிளாரா ஜெட்கினின் தத்துவத்தை நாம் கவனத்தில் எடுத்துக்கொண்டு தலித் விடுதலைக்குத் தயாராக வேண்டும்.

## தலித் பெண் அரங்க விடுதலைப் பணிகளும் நோக்கங்களும்

வயலுக்குள் இறங்காமல், களை எடுக்காமல், நாற்று நடாமல், பண்ணைக்கு பாத்திரம் பண்டம் கழுவாமல், களம் புடைக்காமல், நீர் இறைக்காமல், கல்யாணம், காச்சி ஊத்துக்கு பொட்டி முடையாமல் எதிப்பைக் காட்ட நினைத்தால் பிறசாதி இந்துக்களின் வயல்வரண்டுவிடும். இது நிதர்சனம். உழைக்கும் வர்க்கம் உழைப்புத்தர மறுத்தால் பொருள் அதிகார ஆணவம் அடங்கிவிடும். ஆக, பெண்களின் பங்கு என்பது தலித் விடுதலையில் பலமானது. குறிப்பாக எல்லா மேல்சாதி தாக்கத்திலிருந்தும் ஆதிக்கத்திலிருந்தும் விடுபடும் போராட்டமாகும்.

தலித்தியம் வந்தது, தலித் விடுதலை பற்றிப் பேசியது பின்பு படித்த தலித் பெண்கள் தலித் பெண்களுக்கு ஏற்பட்ட அவலங்களை, வலிகளை, அனுபவங்களை, ஆதிக்க வக்கிரங்களை, வன்கொடுமைகளை, பார்ப்பனிய சடங்குகளை எதிர்த்து எழுதத் தலைப்பட்டனர். தலித் விடுதலை தலித் கல்வியாளர் எழுச்சியாகவே மேட்டுக்குடி வர்க்கப்பிரிவைச் சார்ந்த பெண்களின் எழுச்சியாகவோ அமைந்துவிடக்கூடாது. மாறாக ஒட்டு மொத்த உழைக்கும் தலித் விடுதலையாகவே அமைய வேண்டும். தீண்டாமை மற்றும் சாதியிலிருந்து விடுதலை பெறுவது பற்றிப் பேசுவது தலித்தியம் அதையே தான் பெண்கள் தங்கள் குரலில் தங்களுக்கானது என்று தனிப்படுத்தி தலித் பெண் விடுதலை என்று பேசுகின்றனர்.

தலித்தியம், தலித் பெண்ணியம் என இரண்டுமே சாதியை, தீண்டாமையை ஒழிப்பதில்தான் அக்கறையுடையவை. சாதி ஒழிப்பில் ஆண் பெண் என்ற பாகுபாடு பார்க்காமல் விடுதலையில் அக்கறை கொள்ளும் தலித் சகோதரர்களோடு இணைந்து ஒட்டுமொத்த தலித் பெண்களின் சமத்துவத்தைப் பெற அணிவகுப்பதே இலக்கை நோக்கி விரைய உதவும், மாறாக குறுக்குப் பாதை கிடையாது.

இந்த விடுதலையை அரசியல் அதிகாரம் பெறுதல் மற்றும் பொருளாதார ஏற்றத்தாழ்வினை ஒழிப்பது என்ற நிலையினின்றே அணுக வேண்டும். சாதிய தீண்டாமையை ஒழிக்க வேண்டும் என்றால் ஆதிக்க வர்க்கத்தை எதிர்த்து அதிகாரத்தைக் கைப்பற்ற வேண்டும்.

# "மாமிசப்படைப்பு" நாவலில் நாஞ்சில் சமூகம்

*மு. அமுதா*, முனைவர்பட்ட ஆய்வாளர்,
பாரதியார் பல்கலைக்கழகம், கோவை.

தமிழ் இலக்கியமானது ஆரம்ப காலந்தொட்டே, மற்ற துறைகளோடு தொடர்புடையதாகவே காணப்படுகிறது. படிப்படியாக அதன் வளர்ச்சியும் கூடிக்கொண்டே செல்கையில் அவற்றை ஆராயும் எண்ணம் அனைவருக்கும் எழுகிறது. தமிழ் இலக்கியம், அறிவியல், பொருளியல், வரலாறு, சமூகவியல் போன்ற பிற துறைகளோடு தொடர்புடையதாக உள்ளது. அவற்றின் தாக்கங்கள் நாவல், சிறுகதை, கவிதை ஆகிய இலக்கியங்களில் அதிகளவில் காணப்படுகிறது. இவற்றில் சமூகவியலின் தாக்கங்கள் பற்றிய ஆராய்ச்சிகள் அதிகளவில் செய்யப்பட்டு வருகின்றன எனலாம்.

படைப்பிற்கும், படைப்பாளிக்கும் அடிப்படை சமுதாயமே என்பர். சமுதாயம் படைப்பாளியை உருவாக்குவதில் பெரும்பங்கு வகிக்கிறது. படைப்பாளிகள் தான் வாழும் சமுதாயத்திடமிருந்துதான் பெறும் அனுபவங்கள், உணர்வுகள், உண்மைகள் ஆகியவற்றைக் கொண்டு படைக்கும் இலக்கியம், தன் சமுதாய நலனுக்கு உதவுமாறு படைக்கின்றனர். இலக்கியம் ஒரு சமுதாய ஆவணமாக விளங்குகிறது. அதன் மூலம் தனிமனிதன் சமுதாய உறவு, சமுதாய நம்பிக்கைகள், பழக்க வழக்கங்கள், பண்பாட்டுக் கூறுகள் ஆகியவற்றை அறிய முடிகிறது. அவ்வகையில் நாஞ்சில் நாடனின், "மாமிசப் படைப்பு" நாவலில் நாஞ்சில் நாட்டின் சமூகம் எவ்வாறு உள்ளது என்பதைக் காண்போம்.

## வட்டார நாவல்கள் :

ஒரு குறிப்பிட்ட நிலப்பகுதியை அல்லது வட்டாரத்தினை நிலைக்கலனாகக் கொண்டுஅப்பகுதி வாழ் மக்களின் வாழ்க்கையை எடுத்துக் காட்டும் நோக்குடன் எழுதப்படும் நாவல்கள் வட்டார நாவல்கள் எனப்படுகின்றன. சமூகப் பிரச்சனைகளைப் பரந்துபட்டட அளவில் நோக்கிய புதின இலக்கியம், கிராமங்களைச் சென்றடைந்து அதன் பண்பு நலன்கள், பிரச்சனைகள் ஆகியவற்றை ஆராய முற்பட்டதன் விளைவு சமூகத்தால் புறக்கணிக்கப்பட்டவர்கள் பக்கமாக அதன் கவனம் திரும்பியதன் வெளிப்பாடுதான் வட்டார நாவல்கள் எனக் கூறப்படுகின்றன.

பெரும்பாலும் இவ்வட்டார நாவல்களை எழுதும் ஆசிரியர்கள் அந்த வட்டாரங்களைச் சார்ந்தவர்களாகவே இருப்பர். ஏனெனில், அவர்கள் மக்களோடு மக்களாய் வாழ்ந்து அச்சமூகத்தின் வாழ்க்கைச் சூழல், அரசியல், பண்பாடு, நாகரீகம் போன்றவற்றை உற்றுநோக்கி அதனை நாவலாகப் படைக்க முடிகிறது. மேலும், தன் உணர்வுகளைப் பாத்திரங்கள் வாயிலாக வெளிப்படுத்த முடிகிறது.

## மாமிசப் படைப்பு நாவல் :

இந்நாவலில், நாஞ்சில் நாடான கன்னியாகுமரி மற்றும் அதனைச் சுற்றியுள்ள பகுதிகளின் கிராம வாழ்க்கையைச் சிறிதும் மாற்றமில்லாது அப்படியே பிரதிபலித்து உள்ளார் நாஞ்சில் நாடன். மேலும், மருதநில வாழ்க்கையை நம் கண்முன்னே நிறுத்துவதாகவும் அமைந்துள்ளது. இதன் கதைக்கருவானது, மக்கள் மீதான அதிகார வர்கத்தின் அடக்குமுறையை எடுத்துக் காட்டுகிறது. சமூகத்தில் உள்ள சீர்கேடுகளைப் படம்பிடிப்பதாக இலக்கியங்கள் உள்ளன. அதனைப் பின்பற்றியே நாஞ்சில் நாடனும் தன் நாவலான் "மாமிசப்படைப்பு" நாவலில் கீழ்த்தட்டு மக்களை பலியாடுகளாக்கும் அதிகார வெறிகொண்ட சமூகத்தை எடுத்துக்காட்டுகிறார்.

## தெய்வம் :

இந்நாவலின் சமூகமானது முத்தாரம்மன் எனும் தெய்வத்தை முதற் கடவுளாகக் கொண்டுள்ளது. மேலும் பூதத்தான், சுடலைமாடன், இயக்கி, பேராய்ச்சி, புலைமான், முண்டன், பட்டன், முத்துப்பட்டன், முப்பிடாரி, பேய்ச்சி, கழுமாடன், சங்கிலி பூதத்தான், சாதாரண பூதத்தான் ஆகிய தெய்வங்களும் உள்ளன. மாமிசத்தைப் படையலாகக்கொள்ளும் சூலைப்பிடாரி, சந்தனமாரி, வைரவன் ஆகிய தெய்வங்களும் உள்ளன.

## நம்பிக்கை :

சாமியாடி, கனவு கண்டு கொடை (திருவிழா) நடத்த வேண்டுமென கூறினால் உடனே விழா

எடுக்கிறார்கள். ஏனெனில் தெய்வக்குற்றம் வந்து விடுமோ என்ற அச்சம் அவர்களிடையே காணப்படுகிறது. மேலும், அம்மக்களைப் பஞ்சம், வறுமை, நோய் போன்றவற்றிலிருந்து முத்தாரம்மனே காத்து வருகிறாள் என்ற நம்பிக்கையுடையவர்களாகக் காணப்படுகின்றனர். அதற்கு காணிக்கையாக அன்னதானம், விழாக்கள் மற்றும் வருடத்தில் வரும் அனைத்து பண்டிகைகளிலும் சிறப்பு செய்தார்கள். மேலும், பிறந்தநாள், கல்யாணம், சூலழைப்பு, ஆண்டு நிறைவு போன்ற எல்லாக் காரியங்களிலும் அம்மன் துணை நிற்பதாக நம்புகின்றனர்.

**உணவு :**

நாஞ்சில் சமூக மக்கள் சைவ, அசைவ உணவுகள் இரண்டையுமே உணவாக கொண்டுள்ளனர். இருந்தும் அசைவ உணவுகளான ஆடு, கோழி, மீன் போன்றவற்றிக்கு அதிக முக்கியத்துவம் அளிக்கின்றனர். கடலோரப் பகுதிகள் அதிகம் என்பதால் தினமும் உணவில் மீன் இடம் பெற்றிருந்தது.

**சாதி :**

சமூகத்தில் எல்லா சாதி மக்களும் இடம் பெற்றிருந்தாலும் பிள்ளை என்ற குறிப்பிட்ட சமூகத்தினரே அதிகளவில் காணப்படுகின்றனர். அவர்களே பண்ணையார்களாகவும், முதல் மரியாதைக்குரியவர்களாகவும் காணப்படுகின்றனர்.

**அதிகார வர்க்கம் :**

பண்ணையார்களே அச்சமூகத்தின் அதிகார வர்கத்தினராக உள்ளனர். அவர்கள் மற்றவர்கள் தங்களுக்கு கீழ்நிலையிலேயே இருக்க வேண்டும். தங்களை எதிர்த்து பேசுதல் கூடாது என்ற எழுதப்படாத சட்டத்தை உடையவர்களாகக் காணப்பட்டுகின்றனர்.

**பொருளாதாரம் :**

விவசாயத்தை அடிப்படையாகக் கொண்டே அச்சமூகத்தின் பொருளாதார நிலை காணப்படுகிறது. வழிவழியாக வந்த சொத்தின் காரணமாக பண்ணையார்களான விக்கிரம சிங்கம்பிள்ளை மற்றும் கங்காதரம்பிள்ளை ஆகிய இருவரின் குடும்பங்களே பொருளாதாரத்தில் மேம்பட்டவைகளாகக் காணப்படுகின்றன.

**கல்வி :**

கிராம மக்கள் என்பதாலும், விவசாயத்தையே தொழிலாகக் கொண்டதாலும் கல்விக்கு அதிகளவு முக்கியத்துவம் அளித்ததைக் காண முடியவில்லை. பி.யு.சி. வரையிலான படிப்புகளை மட்டுமே காணமுடிகிறது.

எனவே, கிராம மக்களின் வாழ்க்கை, அடிமைத்தளை, அடக்குமுறை போன்றதான சமூகத்ததை உடையதாக, "மாமிசப்படைப்பு" நாவல் நாஞ்சில் சமூகத்தைக் காட்டுகிறது.

**மாமிசப்படைப்பு பற்றி :**

இச்சமூகத்திலுள்ள மக்கள் கல்வியறிவு அற்றவர்களாக, விவசாய்தை மட்டுமே நம்பி வாழ்பவர்களாகக் காணப்படுகின்றனர். அதிகார வர்க்கம் தனக்கு எதிராக தலையெடுப்பவர்களை அழிக்கிறது. இக்கதையில் வரும் இரு பண்ணையார்களும் தனக்கெதிராக வளர்ந்து வரும் கூலித் தொழிலாளியான கந்தையாவை திட்டமிட்டு கொலை செய்கின்றனர். இதன் மூலம் அச்சமூகக் கொடுமையை நம்மால் உணர முடிகிறது. அடிமைகள் எப்பொழுதும் தங்களுக்கு கீழ் நிலையிலேயே இருக்க வேண்டும் என்ற வெறி கொண்ட சமூக அவலத்தைப் பார்க்க முடிகிறது. இதனையெல்லாம்நோக்கும் ஆசிரியர்கள் தம் இலக்கியங்களில், சமூகத்தைப் படம் பிடிக்கின்றனர். வட்டார நாவலாசிரியர்களின் நாவல்களில் சமூகத்தின் தாக்கங்களை நாம் அறிய முடிகிறது. சமூகத்தின் மேல் ஆசிரியர்கள் கொண்ட அக்கறையை நாவல்கள் பிரதிபலிக்கின்றன.

பழங்காலந்தொட்டே பொருளாதாரத்தில் மேம்பட்டவர்கள், கீழ்நிலையிலுள்ள மக்களை வழிவழியாக அடிமைப்படுத்தி வந்தனர். இன்றளவும்அத்தகைய இழிநிலையைக் காணமுடிகிறது. எனவே, நாஞ்சில் நாடனும் அத்தனைய அடிமைத்தனத்தையே கதைக் கருவாகக் கொண்டு, தன் நாவலில் தான் கண்ட சமூகத்தை மற்றவருக்கு எடுத்துக்காட்டும் வகையில் இம்மாமிசப் படைப்பு நாவலைப் படைத்துள்ளார்.

# தலித்திய இலக்கியங்களில் தனிமனிதத் தேடல்கள் -ஒரு சமுதாயப்பார்வை

முனைவர். *அ.அன்பு* எம்.ஏ., எம்.ஃபில்., பி.எச்.டி.,
தமிழ்-விரிவுரையாளர், அண்ணாமலைப்பல்கலைக்கழகம், அண்ணாமலை நகர் - 608 002.

## முன்னுரை

இனப்பரப்பு, விளக்கவியலின் தந்தையாகிய மார்கன், சமூக வாழ்க்கையின் ஆரம்ப கால வடிவங்களை வகைப்படுத்தியுள்ளார். மேலும் பூர்வீகமான சமுதாயத்தின் தேவைகளை, ஏதோ ஓர் இனத்தின் மீது திணிப்பதும், அதன் பயனை அனுபவிப்பதும் இன்றளவும் நடந்து வரும் உண்மைச் சம்பவம் ஆகும்.

தேவைகளைப் பெருக்கிக் கொள்ள, இனங்கள் பயன்பட்டதும், அதில் குறிப்பிட்ட சில இனங்கள் தங்களை அர்ப்பணித்துக் கொண்டு வாழ்வியல் நாட்களை நகர்த்திப் பார்த்தன. இக்காலங்களின் உண்மைகளை, நிலைமைகளை, தனித்னியே ஆராய முற்படும்போது யாரேனும் ஒருவர் சரித்திரத்தை திருப்பிப்போட்டு விடுகின்றனர். இதுவே இலக்கிய வகைகளை அறிமுகப்படுத்தும் செயலாகப் கருதப்பட்டது.

இனங்களின் பெருமைகளை, உரிமைகளை, விளக்கும் தகவல்கள், சாட்சியங்களாக பதிவுசெய்யப்பட்டு காலம் முழுவதற்கும் நற்பயனைத் தர உதவிடுகின்றது.

## தலித்திய இலக்கியப்பார்வை

வாழ்வியல், உரிமைகள், பயன்கள், இதனைக் கொண்டு தொடரப்பட்ட ஒரு இனத்தின் இலக்கியப் பார்வை, சமூகத்தின் விளக்கப்பார்வையாகக் கணக்கிடப்படுகின்றது.

புதிதுபுனைதல் மூலமாகவும், கண்டுபிடிப்பின் வாயிலாகவும், அறிவின் வளர்ச்சி இனம் காணப்பட்டது. இது சமுாயத் தேடலைப் பரவலாக்குகின்றது. மனித குல முன்னேற்றத்தின் அளவுப்பொருத்தத்தைவிட வாழ்வியல் பொருத்தம் தேவையான ஒன்றாக இலக்கியங்கள் வகைப்படுத்துகின்றன.

பண்பாடு, நாகரீகம், பழக்கவழக்கம், இவை எல்லாம் உயர்ந்த இன்த்தை அடையாளம் காட்டும் சாதனமாகும். உயர்வான எண்ணங்களின், தத்துவங்களை எடுத்தாளும், ஒவ்வோர் இனமும் அடையாளக்களாக, காணப்பட்டாலும், அவை எல்லோரும் விரும்பும் வகையில் இருந்தால் மட்டுமே இலக்கியமாகக் கருதமுடியும்.

இவ்வாறான இலக்கியங்களின் வகைப்பாட்டில் தலித்திய இலக்கியங்கள் அழகியலையும், உரிமையையும் தனித்தனியே காட்டாமல் இணைத்தே காட்டுகின்றது. உலகியலின் தேவைகளை, உழைப்பாளிகள் தருவது உயர்ந்த நோக்கமாகக் கருதப்பட்டாலும், அதிலும் கொள்கை முரண்பாடு, கருத்து முரண்டுபாடு, இன முரண்பாடுகள் நிறையக் காணக்கிடக்கின்றன.

தலித்திய சமுதாயம், நலம் போற்றிய இனத்தின் வெளிப்பாடு, பிறப்பையும், இறப்பையும் வகைப்படுத்தி, விளக்கப்படுத்தி, தத்துவப்பூர்வமான இலக்கியங்களைப் படைத்துள்ளன. சமூக உறவுகளை முதலில் வெளிப்படுத்தியும், பல்வேறு இனக்குழுக்களுக்கு இடையிலும், பிறகு அவற்றுக்குள்ளாகவும், ஒழுங்குப்படுத்தும் சக்தியாக இச்சமுதாயம் நின்றிருக்கிறது.

## தலித்திய இலக்கியங்களில் தனி மனித உணர்வுகள்

நாட்டுப்புற இலக்கியங்களையும், அதன் வாழ்வியல் போக்கையும் நிர்ணயிப்பவர்கள் உழைப்பவர்கள். இந்நிலை ஒரு குறிபிட்ட இனச்சமூகத்திற்கே உரிய கடமையாக இன்றளவும் நடைமுறைப்படுத்தப்பட்டுள்ளது.

பூர்வீக மனிதன் பல நேரங்களில் தர்க்கத்தை விடுத்து, நினைவுத்திறனில் நம்பிக்கை வைத்தான். எனவே மரபு, சமூக உறவுகளை ஒழுங்குபடுத்துகின்ற ஒரே வடிவமாக இல்லாவிட்டாலும், மிக முக்கியமான

வடிவமாக நெடுங்காலம் இருந்த சமூகம் உழைக்கும் மக்களே ஆவர். அதிலும் குறிப்பிட்ட இவ்வினத்தினரின் தனி மனித உணர்வுகளைப் பாடல் வடிவமாகக் கூறி, பொருளாக்கியுள்ளனர். இவ்வடிவம் இலக்கியத்தின் பண்பை உருவாக்கும் வடிவம் எனலாம்.

மக்கள் மத்தியில் சமூக உறவுகள் வலுப்படுகின்ற, சமூக வளர்ச்சிக் கட்டம் இவ்வாறாகத்தான் தோன்றியிருக்ககூடும் என்று நம்பப்படுகின்றது.

## சமுதாயத்தேவைகளும், நடைமுறைகளும்

எல்லோருக்கும், எல்லாம் இருந்த நிலையிலும், பல்வேறு சமுதாயங்கள், தேவைகளை மட்டுமே தேர்ந்தெடுக்கொண்டன. "இத்தேவைகள் தனிமனிதத் தேவைகளாகவே" இருந்து வந்தன.

வரலாற்றின் சுவடுகளிலும் சரி, வாழ்வியல் சுவடுகளிலும் சரி, அடிமைகள், நிரந்தர அடிமைகளாகவே ஆக்கப்பட்டுள்ளனர். உள்ளுணர்வையும், வெளியுலகையும் அவர்களுக்கு, அறிமுகப்படுத்தாமலேயே உருவாக்கி உள்ளனர். இத்தகைய பரிணமாத்தின் முடிவு ஒரு தனி மனித வடிவிலேயே துவக்கமாயிற்று. உலகை வியந்து பார்த்து, உள்ளத்தை திறந்து பார்த்து, முடிவுக்கு வந்தனர். அதன் ஆக்கம் புரட்சிப் பாதையைத் தோற்றுவித்தது.

புரட்சியும், வெற்றியும், அடிமைகளாலும், கோழைகளாலும், வெளி உலகிற்குத் தெரியவந்தன. உள்ளத்தின் எழுச்சியை, வாய்விட்டுப் பாடி ஒருங்கிணைத்துக் கொண்டனர். இந்த உருவாக்கம் மட்டுமே, தனித்து நின்று வெற்றியைத் தந்தது.

## தேடலின் துவக்கமும், மகிழ்வின் ஆரம்பமும்

உள்ளம் சோர்ந்திருந்த வேளையிலும், உடம்பு வலுவிழுந்து கிடக்கும் நிலையிலும், எண்ணங்களைச் சோர்ந்து விடச் செய்யாமல், உலகை எண்ணிப் பார்த்தனர்.

இந்தப் பார்வையின் அர்த்தங்கள், அனைத்தும் உற்சாகம் தந்தன. இந்த உற்சாகத்தின் கொண்டாட்டங்கள், விடுதலையைத் தந்தன. இந்த ஆள் விடுப்பு மாற்றம், பொதுவுடமை எண்ணங்களை வளர்க்கச் செய்தது. இந்த எண்ணங்களை தனி மனிதச் சுதந்திரம், தனிமனிதத் தேடல் என்ற பரந்த எல்லையை விரிவுபடுத்தன. இந்த விரிவுபடுத்தப்பட்ட எண்ணங்களே, உயர்ந்த இலக்கியங்களை வளர்க்கச் செய்தன.

## முடிவுரை

இவ்வாறான தனி மனிதத் தேடல்கள் தலித் இலக்கியங்களில் மறைமுகமாகவும், நேர்முகமாகவும், ஆராய்ந்து இன்றைய நாளில் விழிப்புணர்வை ஏற்படுத்தியுள்ளது.

விழிப்புணர்வை ஏற்படுத்தும், இன்றை சமுதாயப் பார்வைகள் குருடாய்ப் போகின்ற நிலையைப் பார்க்கும்போது, மீண்டும் இங்கே ஏதோ ஓர் ஏமாற்றம் தொடரப்போகிறதோ? என்ற அச்சத்தை உருவாக்கும் நிலை வேகமாக முன்னேறி வருகிறது. இந்நிலையை அகற்றி, எல்லா இலக்கியங்களின் வாழ்வியலையும் உற்று நோக்குவோம். தனி மனிதத் தேடல்களின் பார்வையை விரிவுப்படுத்தி, அழகு சேர்ப்போம்.

## "வன்மம்" நாவல் படைக்கும் தலித் சமூகம்

முனைவர். *வே. சசிகலா,* எம்.ஏ., எம்.ஃபில்., பி.எச்டி., இணைப்பேராசிரியர் -தமிழ்த்துறை,
ஸ்ரீ பராசக்தி மகளிர் கல்லூரி, குற்றாலம்.

### முன்னுரை

அண்மைக்காலத்தில் தமிழ் இலக்கியத்திற்கு தலித் இலக்கியங்களின் பங்களிப்பு கவனத்தை ஈர்ப்பதாக அமைந்துள்ளது. தலித் படைப்புகளில் காணப்படும் அழுத்தமும், ஆவேசமும், ஆதங்கமும், எதிர்ப்புணர்வும், எழுச்சிக்குரலும், நிதரிசனமும் இலக்கிய உலகில் அவற்றிற்குத் தனி இடத்தைப் பெற்றுத் தந்துள்ளன. தலித் இலக்கியப் படைப்புகளின் வரிசையில் முன்னணி இடத்தைப் பெற்றிருப்பவர்களுள் ஒருவர் பாமா. அவருடைய மூன்றாவது நாவலாகவும், நான்காவது படைப்பாகவும் விளங்கும் "வன்மம்" என்னும் படைப்பு தலித் சமூக மக்களின் வாழ்க்கையினை வெளிப்படுத்துவதையே நோக்கமாகக் கொண்டு எழுதப்பட்டிருக்கின்றது. தலித் மக்களின் பலங்களை மட்டுமின்றிப் பலவீனங்களையும் பாமா தன் நாவலில் நன்கு பதிவு செய்துள்ளார். இக்கட்டுரை "வன்மம்" நாவல் எடுத்துரைக்கும் தலித் சமூகம் பற்றிய கருத்துக்கள், வாழ்க்கை முறைகள், கல்வி, பெண்கள், மாற்றங்கள் ஆகிய தலைப்புகளில் ஆராயப்படுகிறது.

தலித் மக்களிடையே காணப்படும் இரு பெரும் பிரிவினராகிய பறையர், பள்ளர் ஆகியோரை மையப்படுத்தி "வன்மம்" நாவல் படைக்கப்பட்டுள்ளது. ஆதிக்க சாதியினரால் ஒதுக்கப்படும் இவ்விரு இனத்து மக்கள் அவர்களுடைய சூழ்சியால் பூசல்களில் சிக்கித் தமக்குள் ஒற்றுமை குலைந்து வாழ்வதும், அதனால் தாழ்வுறுவதும் பின்னர் தம் குறையுணர்ந்து ஒன்றுபட்டு நின்று அரசியல் அதிகாரம் பெற்று வாழ முற்படுவதுவும் நாவலின் கதைப்போக்காக அமைந்துள்ளது. தலித் மக்களின் இருபிரிவுகள் இந்நாவலில் இடம் பெற்ற போதிலும் பறையர் இன மக்களின் வாழ்க்கையே மிகுதியும் எடுத்துரைக்கப்படுவது மட்டுமின்றி மேன்மையாகவும் குறிப்பிடப்படுகிறது. எனினும் அம்மக்களின் வாழ்க்கைச் சிறப்புக்களை மட்டுமின்றி, அவர்களிடையே நிகழ்ந்து வரும்மாற்றங்களையும், நிகழ வேண்டிய முன்னேற்றங்களையும் நாவலாசிரியர் குறிப்பிடத் தவறவில்லை என்பது சுட்டிக்காட்டப்பட வேண்டிய தகவலாகும்.

### வாழ்க்கை முறைகள்

தலித் மக்கள் நல்ல உழைப்பாளிகள் அவர்கள் பெரும்பாலும் விவசாய வேலைகளில் ஈடுபடுவதுண்டு. கடும் உழைப்பாளிகளாகிய அம்மக்கள் விளையாத மண்ணையும் விளைய வைக்கும் ஆற்றல் பெற்றவர்கள் என்கிறார் நாவலாசிரியர். களை வெட்டுதல், கடலை விதைத்தல், எள்ளறுத்தல், அலசுதல், கதிர் அறுத்தல் போன்ற பல வேலைகளில் அவர்கள் ஈடுபட்டு வருதல் உண்டு. மேலும் விறகு பொறுக்குதல், தோப்புகளை ஒத்துகளுக்கு எடுத்தல், தோப்புக்களை காவல் காத்தல் போன்ற வேலைகளைச் செய்தும் அவர்கள் பிழைப்பு நடத்துவதை நாவல் குறிப்பிடுகின்றது. தலித் மக்கள் பல இன்னல்களுக்கிடையிலும் அஞ்சாது வேலை செய்வதை நாவல் நன்கு பதிவு செய்துள்ளது. அம்மக்கள் காடுகளில், மலையடிவாரத்தில் இருக்கும் தோப்புக்களில் இரவு, பகல் பாராமல் உழைக்கும் பழக்கத்தினர். தோப்புப் பணிகளிலும் காவலிலும் ஈடுபட்டிருக்கும் போது நரி, விசப்பாம்பு, காட்டுப்பன்றி, ஓநாய், காட்டெருமை, கருங்குரங்கு, யானைக்கூட்டம் போன்ற பல விலங்குகள் வருவதுண்டு. ஆயினும் அவர்கள் அவற்றைக் கண்டு அஞ்ச மாட்டார்கள்.

தலித் மக்களில் சிலர் முடிந்த வேலைகளையும், ஏவிய வேலைகளையும் செய்தும் பிழைப்பதுண்டு. எனினும் முந்தைய பரம்பரையினரிடையே இருந்து வந்த சாணி, சகதி அள்ளி முதலாளிகளை நம்பித் தொழில் புரிந்து புளித்த கஞ்சி, பழைய கஞ்சி சாப்பிட்டுப் பிழைத்த பழக்கம் அண்மைக் காலத்தில் குறைந்து விட்டது என்றும் நாவல் குறிப்பிடுகிறது. தலித் மக்களிடம் பரந்த கல்வியறிவு இல்லாவிட்டாலும் கூடத் திறமைகள் மிகுதி என்கிறார் நாவலாசிரியர். பள்ளி சென்று படிக்காவிட்டாலும் கூட அம்மக்கள் கணக்குகள் போடுவதில் வல்லவர்கள். அவர்களின் கணக்குகளைக் கல்லூரி மாணவர்களும் கூட விடைகாண முடியாது திகைப்பர் என்று அவர் குறிப்பிட்டுள்ளார்.தலித் மக்கள் கலையுணர்வு மிகுந்தவர்கள். கலை ஆர்வம் மிகுந்த அம்மக்களின் இரத்தத்தில் ஆட்டமும் பாட்டமும் ஊறிப்போன்றவை என்கின்றார் நாவலாசிரியர். கூழ், கஞ்சி, போன்றவற்றுடன்

வெங்காயத்தைச் சேர்த்து உண்ணும் எளிய உணவுப் பழக்கத்தைக் கொண்டவர் என்பதையும் நாவல், குறிப்பிடுகிறது. மேலும் அம்மக்களின் விளையாட்டுக்களையும் நாவலாசிரியர் குறிப்பிடத்தவறவில்லை. கிழவர்கள் முதல் சிறுவர்கள் வரை ஆடுபுலி ஆட்டம் ஆடிக்களிக்கும் அம்மக்களது வாழ்க்கை நிலையும் நாவலில் குறிக்கப்படுகிறது. தலித் மக்களின் வாழ்க்கையை உள்ளபடியே எடுத்துக் காட்டும் "வன்மம்" நாவல் அம்மக்களிடையே காணப்படும் அறியாமையையும் சுட்டிக் காட்டத் தவறவில்லை. மதவாதிகளின் கையில் அம்மக்கள் சிக்கிக் கிடப்பதை நாவலின் நிகழ்ச்சிகள் ஆங்காங்கு சுட்டிக்காட்டுகிறது. தங்களுடைய வாழ்க்கைச் சிக்கலுக்குப் பாதிரியார்கள் மூலம் தீர்வு கிடைக்கும் என்ற நம்பிக்கை அவர்களிடையே காணப்படுகின்றது. தங்களுடைய இக்கட்டான இன்னல் நிறைந்த போராட்ட வாழ்க்கையில் அவர்கள் வாழும் போதும், தேவாலயத் திருவிழாக்கள் கொண்டாடுவதை நிறுத்தவில்லை.தலித் மக்களிடையே குடிப்பழக்கம்நிலவி வருவதைச் சுட்டிக் காட்டும் நாவலாசிரியர் ஒருநாள் வேலைக்குப் போகவில்லை என்றாலும் வீட்டில் உலை வைக்க முடியாத அளவிற்கு வறுமை நிலவுவதையும் எடுத்துரைக்கின்றார். அம்மக்களிடையே காணப்படும் சுகாதாரக் கேடும் இந்நாவலில் இடம் பெறுகிறது. குழாயடியிலேயே துவைப்பது, குளிப்பது, குளிப்பது, பின் அங்கேயே குடிக்கத் தண்ணீர் எடுப்பது போன்ற வழங்கங்களிருப்பதை நாவல் உணர்த்துகிறது.

கல்வி

"கல்வி வலியுறுத்தல்" என்பது வன்மம் நாவலில் இடம் பெறும் முக்கியக் கருத்தகும். மக்களிடையே கல்வி பரப்பலுக்காக மேற்கொள்ளப்பட்ட முயற்சிகள், மக்களிடையே காணப்படும் ஆர்வமின்மை போன்றவற்றை நாவல் தெளிவாகப் பதிவு செய்துள்ளது.வெள்ளைக்காரப் பாதிரிமார்களும், கன்னிமார்களும் வீடுவீடாக வந்து, பிள்ளைகளைப் பள்ளியில் சேர்த்தது மட்டுமின்றி அவர்களுக்குப் பென்சில்கள், நோட்டுக்கள், புத்தகங்கள் போன்ற எதுபொருட்களை இலவசமாகத் தந்ததையும் நாவல் குறிப்பிடுகிறது. படிக்கச் சொல்லி ஊக்கப்படுத்தியதும் மட்டும் இன்றி மதிய உணவிற்குக் கோதுமைக் கஞ்சி கொடுத்து வயிற்றை நிரப்பியதையும் அது சுட்டிக்காட்டுகிறது. சிலர் அவர்களாகவே கற்கும் ஆசை இல்லாமல் இருந்ததையும், படிக்கும் ஆர்வம் கொண் சில பிள்ளைகளைப் பெற்றோர் படிக்க விடாமல் தடுத்ததையும் நாவல் எடுத்துக் காட்டுகிறது. வாய்ப்புக் கொடுத்த போது படிக்காதவர்கள் கல்வியின்றித் துன்புறுவதைச் சுட்டும் நாவல், அந்த வாய்ப்பைப் பயன்படுத்திக் கல்வி கற்று, ஆசிரியர் பயிற்சி பெற்று, ஆசிரியர் பணி புரியும் காளியம்மாவின் வாழ்க்கை மேம்பாட்டையும் குறிப்பிடுகிறது. படிக்கச் செல்லாமல் இன்றும் புல்லறுக்கும் மாடத்தியும், அன்னம்மாவும் தங்களை நொந்து கொள்வதுடன், நல்ல மதிக்கூர்மையுடைய பாக்கியத்தை அவளது தந்தை படிக்க அனுப்ப மறுத்ததையும் எண்ணிப் புலம்புகின்ற காட்சியும் நாவலில் இடம் பெறுகிறது.

மக்களிடையே கைநாட்டு வைக்கும் பழக்கம் நிலவுவதை, நாவல் "இப்படி கையெழுத்துப் போடத் தெரியா வரைக்கும் எல்லா நாய்களும் நம்ம மேலக் கை வைக்குங்க" (ப.89) என்று கண்டிப்பது மட்டுமின்றி, குழந்தைகளுக்குக் கல்வி மறுப்பதையும், "நீதான் இப்படின்னா, ஒம்மகனையும் பள்ளிக் கொடத்துக்கு அனுப்பாமெ மாடு மேய்க்கப் போகச் சொல்லி இருக்கை" (ப.89) என்று குறிப்பிடுகிறது. ஆசிரியர் ஒருநாள் அடித்ததற்காகச் செவறு மகன் சின்னப்பன் பத்து, பன்னிரண்டு வயதில இரண்டோ, மூன்றோ படித்து விட்டு ஆடு மேய்க்கப்போன நிகழ்ச்சியும் நாவலில் இடம் பெறுகிறது. "நாலெழுத்துப் படிச்சிருந்தா நாயா கூலி வேலைக்கு அலையவேண்டாம்" (ப.19) என்னுமிடத்தில் கல்வின்மையின் விளைவு சுட்டிக் காட்டப்படுகிறது. மக்களிடையே காணப்படும் கல்வி அறிவின்மையைச் சுட்டும் நாவலாசிரியர் அம்மக்களுக்குக் கல்வி கற்க நேரிடும் இடையூறுகளையும் குறிப்பிடுகிறார். ஆழிப் பேரலை இன்று பல பள்ளி, கல்லூரி மாணவர்களின் கல்வியைப் பாதித்திருப்பதைப் போல ஊருக்குள் நேரும் சாதீய மோதல்கள் பிள்ளைகளின் படிப்பிற்குக் கேடாக வந்து வாய்க்கிறது. மாற்று இனத்தவரின் தெருக்களைக் கடந்து பள்ளிக்கூடம் செல்ல வேண்டியிருப்பதால் கலவரத்தின் போது அச்சப்பட்டுப் பள்ளிசெல்வதையே அவர்கள் நிறுத்த வேண்டிய கட்டாயம் நேரிடுகிறது. இவ்வகையில் பெரிதும் பாதிக்கப்படுபவர்கள் பெண் குழந்தைகளே என்றும் நாவலாசிரியரின் கருத்து கூர்ந்து நோக்கற்குரியது.கல்வியினால் ஏற்படும் மேம்பாடுகளையும் நாவல் தெளிவாக எடுத்துரைக்கின்றது எனலாம். ஊரில் உள்ள கல்வி கற்ற இளைஞர்கள் தாங்கள் முன்னின்று "குழு" அமைத்து அதன்மூலம் ஊர் முன்னேற்றத்திற்கு வழி வகுப்பதாக நாவலாசிரியர் படைத்துக் காட்டுகிறார். தெருக்கள், குழாயடி போன்றவை கல்வி மேம்பாட்டினால் சுத்தமாக இருக்க முடியும் என்ற நாவலாசிரியர் கருத்து இங்கு தெளிவு பெறுகிறது.

**பெண்கள்**

"வன்மம்" நாவலில் பெண் சமத்துவம் பற்றிய பார்வை அழுத்தமாகப் பதிவு செய்யப்பட்டுள்ளது. ஆண்கள் குழுக்கள் அமைத்துப் பல பணிகளில் ஈடுபட்ட போது பெண்களும் அவர்களுடன் சேர்ந்து வேலையைப் பகிர்ந்து கொள்வதாக நாவலாசிரியர் குறிப்பிடுகின்றார். ஊர்த்திருவிழாப் போட்டிகளில் பெண்களும் பங்கேற்கின்றனர். இரு இனத்தவரிடையே மோதல் ஏற்பட்டுக் கல்லெறி நடந்த போதும் கூடப் பெண்கள் சிலர் அஞ்சாமல் அங்கு நின்றதாக நாவலாசிரியர் உரைக்கிறார். "மீசை வெச்ச ஆம்பிளன்னா நேருக்கு நேராவால" (ப.78) என்று வெள்ளத்தாயு இடும் கூக்குரலில் பெண்களின் அச்சமற்ற போக்கு தெரிகிறது. பொதுவாக ஊர்க்கூட்டங்களிலும், பஞ்சாயத்துக் கூட்டங்களிலும் பெண்கள் இடம் பெறுவதில்லை. இதை எதிர்த்துப் பல பெண்கள் குரலெழுப்புவதாக பாமா குறிப்பிடுகிறார். "பெரிய சீர்திருத்தவாதின்னு பீத்திக்கிறானுக. ஊர்கூட்டம்னு வந்துட்டா பொம்பளைகளைப் போகச் சொல்லிரானுக. இதென்ன நாயமாம்" (ப. 80) என்பது அவர் கேள்வி. "மத்ததுக்கெல்லாம் பொம்பள வேணும். இதுக்கு மட்டும் எதுக்கு வேண்டாங்கனும்" (ப.80) என்றும் அவர் வினாத் தொடுக்கிறார். ஊரில் மரக்கன்றுகளுக்குத் தண்ணீர் ஊற்றுதல், படிக்கும் பிள்ளைகளுக்குக் கற்பித்தல் போன்ற பல வேலைகளில் ாடுபடும் பெண்கள் ஊர்க்கூட்டத்தில் ஒதுக்கப்படுவது ஏன் என்ற வினாவை அவர் வேகமாக எழுப்புவது வாசகர்களைச் சிந்திக்கத் தூண்டுகிறது. ஊருக்குள் நேர்ந்த கலவரத்தில் சில பெண்களைக் காவல்துறையினர் சிறையில் அடைத்ததும், வெளியே இருந்த பெண்கள் அவர்களை விடுவிவக்க முயல்கின்றனர். காவல்துறையினருக்குத் தெரியாமல், பாடகளில் ஒளிந்திருந்த ஆண்களுக்கு உணவு கொடுக்கின்றனர். காவல் துறையினரிடம் அஞ்சாமல் எதிர்க்கேள்விகள் தொடுக்கின்றனர்.ரோஸ்மேரி என்கிற பெண்ணின் தலைமையில் கலவரத்தில் இறந்து போனவர்களின் பிணங்களை மாட்டுவண்டியில் கொண்டு வந்து அடக்கம் செய்கின்றனர். ராணிப்பிள்ளை என்னும் பெண் மாட்டு வண்டி ஓட்டுவதில் வல்லவள் என்கிறார் நாவலாசிரியர். காவல் துறையினரே பெண்களின் வீரத்தை எண்ணி வியப்பதாகவும் அவர் எழுதுகிறார். சிறையிலடைக்கப்பட்ட பெண்களை, இப்பெண்கள் பாதிரியாரின் உதவியுடன் சிறையிலிருந்து மீட்டுவரும் நிகழ்ச்சியும் குறிப்பிடத்தக்கது. கலவரத்தை ஒடுக்கிக் கட்டுப்படுத்த வந்த காவல் துறையினர் இழைக்கும் கொடுமைகளைத் தாங்கிக் கொள்ளும் இப்பெண்கள் ஆண்களே இல்லாத நிலையில் கன்று காலிகளை வைத்துப் பிழைப்பு நடத்திக் குழந்தைகளைக் காப்பாற்றுகின்றனர்.

பெண்களைப் பல விதத்திலும் போற்றி மதிக்கும் பாமா கலை நிகழ்ச்சிகளில் அவர்களுக்கு இருக்கும் ஆற்றலையும் குறிப்பிடத் தவறவில்லை. இளம் பெண்கள் மட்டுமின்றி ஐம்பது வயதிற்கு மேற்பட்ட பெண்களும் கும்மி அடிக்கும் நிகழ்ச்சியால் இது உணரப்படுகின்றது. மேலும் "நம்ம பொம்பளகளை சமான்யமா நெனச்சிரப்புடாது. அவளுக நெனச்சாளுகள்னா நிமுசத்துல தூணைத் துரும்பாக்குவாங்க. துரும்பத் தூணாக்குவாங்க" (ப.64) என்றும் நாவலாசிரியர் பெண்களின் ஆற்றலைப் போற்றுகின்றார். இளம் வயதில் பெண்கள் படிப்பை இழப்பதையும், பெண்கள் கல்வி கற்றால் முன்னேறலாம் என்ற கருத்தையும் நாவலில் குறிப்பிடும் படைப்பாளர், பெண்களுக்குத் தனி இடம் தந்து கருத்துக்களை உரைத்திருப்பதிலிருந்து பெண் முன்னேற்றத்தில் அவர் கொண்டிருக்கும் ஆர்வத்தை உணர முடிகிறது. ஓயாது பேசும் பழக்கமாகிய பெண்களின் பலவீனத்தையும் அவர் நாவலில் சுட்டிக் காட்டத் தவறவில்லை.

**மாற்றங்கள்**

"வன்மம்" நாவலில் மிக முக்கிய அங்கம் வகிப்பது நாவலாசிரியர் குறிப்பிடும் சமூக மாற்றங்கள் ஆகும். பாமா தன் படைப்பு நெடுகிலும் தலித் மக்களிடையே நேர்ந்துள்ள மன மாற்றங்களையும். சமூக மாற்றங்களையும் கூறிச் செல்கின்றார். ஒவ்வொரு பொங்கல் தோறும் ஒரு சேவல், ஒன்றிரண்டு பூசணிக்காய்கள், கரும்பு, பச்சரிசி ஆகியவற்றை எடுத்துக்கொண்டு குடும்பம் குடும்பமாகச் சென்று முதலாளிகளைக் கண்டு வணங்கி வரும் பழக்கம் உண்டு. "ஓடையாரு" என்று குறிப்பிடப்படும் இப்பழக்கம் அடியோடு மறைந்து போனது என்கிறார் நாவலாசிரியர். பொதுவாக ஆதிக்கச் சாதியினரின் கிணறுகளில் தலித் மக்கள் குளிப்பதற்குத் தடை இருப்பதுண்டு. அத்தடையை மீறி இளைஞர்கள் அக்கிணறுகளில் குளிப்பதாக நாவலாசிரியர் குறிப்பிடுகிறார். அம்மக்களின் மாற்றங்களினால் வழக்கமாக அவர்கள் செய்து வந்த தொழில்களும் மாறிவிட்டன. தையல் கலைஞர், கொத்தனார், ஆசிரியர், பேருந்து ஓட்டுநர், நடத்துனர், காவலர், தண்ணீர் குழாய் அமைப்போர்

போன்ற பலர் அம்மக்களிடையே உருவாகிவிட்ட நிலை ஏற்பட்டுள்ளது. அம்மக்களின் மாற்றங்களுக்கு அடிப்படைக் காரணமாக அமைவது கல்வி கற்று, விழிப்புணர்வு பெற்ற இளைஞர்களின் எழுச்சியே காரணமாகிறது. "வன்மம்" நாவலில் பலவிதக் குணாதிசயங்களைக் கொண்ட இளைஞர்கள் படைக்கப்பட்டுள்ளனர். கல்வி கற்ற பின் ஊரை விட்டும் ஒதுங்கி வாழும் ஜெயராசு, கல்வி கற்காமலேயே இருக்கும் பலர், கல்வி கற்றுத் தன் இன மக்களின் முன்னேற்றத்தில் நாட்டம் கொள்ளும் அந்தோணி போன்ற பல இளைஞர்கள் நாவலில் படைக்கப்பட்டுள்ளனர். இவர்கள் அனைவரும் ஒருங்கிணைந்து "கழனிக்கலைக்குழு" என்ற அமைப்பினை உருவாக்கி அதன் மூலம் தம் மக்களை விழிப்புணர்வு பெறச் செய்கின்றனர். கல்லூரியில் பயிலும் நிலையிலும், தன் கிராமத்திற்கு விடுமறை நாட்களில் வரும் போது காட்டு வேலை செய்யத் தயங்காத அந்தோணி தன் எழுச்சியான பேச்சுக்களால் தன்னினத்தவரைத் தூண்டி வழி நடத்துகின்றான். அனைவரும் கல்வி பெறவேண்டும் என்றும், அதன் வழி சமூக அறிவு பெறவேண்டுமென்றும், ஒடுக்கப்படுவதையும், ஓரங்கட்டப்படுவதையும் உணர வேண்டும் என்றும் அதனால் ஒன்று பட்டுப் போராட வேண்டும் என்றும் அவன் எடுத்துரைக்கின்றான். சாதியற்ற சமத்துவ சமுதாயம் தேவை என்று ஒலிக்கும் அந்தோணியின் குரலில் நாவலாசிரியர் நன்கு வெளிப்படுகின்றார். இரு தரப்பினருக்குமிடையே பிரச்சனை நேரும் போது காவல் துறையினரிடம் புகார்தர வேண்டுமென்ற இளைஞர்களின் கருத்திற்குப் பெரியவர்களிடமிருந்து மறுப்பு எழுந்த போது "இன்னும் அந்நதக் காலத்திலேயே உட்கார்ந்து கெடங்க, தானாவும் தெரியாது சொன்னாலும் புரியாது" (ப.84) என்னும் அந்தோணியின் சொற்கள் மாற்றத்திற்கு ஓர் எடுத்துக்காட்டு. எழுச்சியும் தன்மானமும் நிறைந்த அந்தோணி தன் ஊர் நாட்டைமை காவல்துறை அதிகாரியிடம் அளவுக்கதிகமாகப் பணிவதை வெறுக்கிறான். "இன்ஸ்பெக்டரும் நம்மளைப் போல மனுசன் தானெ. எதுக்கு அவரப்போயி ஐயா, சாமின்னு கும்பிட்டுக் கெடக்கனும்" (பக்.89) என்று எண்ணுகிறான். உடம்பை பாதியாக வளைத்து நாட்டாமை நின்ற கோலமும், மிகத் தயவாகக் காவல்துறை அதிகாரியிடம் பேசுவது அந்தோணிக்கு வெறுப்பை ஏற்படுத்துகின்றன. காலில் விழுந்துவிடும் அளவிற்குச் சுயமரியாதையை இழக்கத் தயாராக இருக்கும் முந்தைய பரம்பரையினரின் போக்கு அந்தோணிக்கு கோபத்தையும் எரிச்சலையும் ஏற்படுத்துகின்றன. இளைஞர்களின் எழுச்சிப் போக்கினைக் கடிந்து கொண்ட மாசிலாமணித் தாத்தாவிடம் "நீங்கதான் மான ஈனம்னு ஒண்ணுமில்லாமெ மண்ணாங்கட்டி கணக்கா கெடந்தீக. அது மாதிரி எங்களையும் இருக்கச் சொல்றியாக்கும்" (ப.123) என்று கோபத்துடன் கேட்கும் அவனிடம் ஏற்பட்டிருக்கும் மாற்றம் குறிப்பிடத்தக்கது. "நம்ம யாருன்னு ஒலகத்துக்குத் தெரிய வேண்டாமா? எதுக்கு நம்ம என்னைக்கும் ஒண்ணுமில்லாம இருக்கணும்" (ப.123) என்றவிடத்தில் அம்மக்களில் சிந்தனை மாற்றம் புலப்படுகிறது. இதையெல்லாம் விட "குடிக்கக் கூழு இல்லை. ஒங்கப்பங் காலத்திலயும் இல்ல, ஒம்பாட்டங் காலத்திலயும் இருக்காது. இது எதுன்னாலன்னு யோசிச்சுப் பாத்தியா. வருசக் கணக்குல இப்படியே கெடக்கப் போய்தான் ஒரு பெய மதிக்க மாட்டேங்கா" (ப. 123) என்ற வரிகள் அம்மக்களின் எழுச்சிக்கு எடுத்துக்காட்டு.

நாவலின் முடிவில் ஒன்றுபட்ட தலித மக்களின் ஒற்றுமைக்குக் கிடைத்த வெற்றியாக அவர்களது அரசியல் அதிகாரம் அமைகிறது. "தாழ்த்தப்பட்டோர் அரசியலதிகாரம் பெறாமல் சாதீயம் ஒழியாது" என்கிறார் கருணா மனோகரன் (ப. 141) கண்டம்பட்டியில் அதுகாறும் ஆதிக்க சாதியினர் மட்டுமே ஊர்த்தலைவர்களாக வந்த வரலாறு மாறுவதாக நாவலாசிரியர் குறிப்பிடுகிறார். தலித் இனத்தவர் அனைவரும் ஒன்றுகூடித் தங்கள் இனத்தவரையே தலைவராக்கி ஆதிக்கச் சாதியினரின் சூழ்ச்சியினை முறியடிக்கின்றனர். அழுத்தப்பட்ட மக்களின் எழுச்சி என்ற வெற்றியே நாவலின் முடிவாக அமைந்தது நாவலாசிரியரின் உள்ளக் கருத்தைத் தெளிவாக்குகிறது.

## முடிவுரை

"வன்மம்" நாவல் தாழ்த்தப்பட்ட மக்களின் வாழ்க்கை நிலையினைப் பலபடியாகச் சித்திரிக்கிறது. தலித் மக்களிடையே காணப்படும் தாழ்நிலைக்கான காரணங்களை நன்கு அலசும் இந்நாவல் அவற்றிலிருந்து விடுபடுவதற்கான வழிகளை உரத்துப் பேசுகிறது.

# கனவுகள் தொகுப்பில் தலித்தியம்

முனைவர். *சு.சந்திரா* விரிவுரையாளர், தமிழ்த்துறை,
அருள்மிகு மீனாட்சி அரசினர் மகளிர் கலைக் கல்லூரி (தன்னாட்சி) மதுரை - 625 002.

கனவுகள் என்ற தலைப்பில் பத்து சிறுகதைகள் 'தொகுக்கப்பட்டுள்ளன. இதனை எழுதியவர் சு.சுபாஷ்சந்திரபோஸ் என்பவர். இவர் முறைப்படி தமிழ் பயின்று கல்லூரி பேராசிரியராகப் பணியாற்றுபவர் என்பது நினைவில் கொள்ளத்தக்கதாகும். இவர் எழுதிய சிறுகதைகளில் ஊடாடிக் கிடக்கும் தலித்தியத்தைக் காண்பது ஆய்வின் செல் நெறியாகும்.

## தலித் இலக்கியம்:

தலித் இலக்கியம் என்பது தலித்துகளைப் பற்றியதா? அல்லது தலித் படைப்பாளியால் படைக்கப்படுவதா எனப் பலவாறு விவாதங்கள் நிலவுகின்றன. எல்லா வகையான விவாதங்களையும் அகப்படுத்தியதாகவும் விடைகாணும் முகமாகவும் தலித் இலக்கியம் பற்றி வரையறை செய்கின்றனர். எல்லா வகையிலும் உள்ள ஒடுக்குமுறைகளை எதிர்த்து, இனி தனக்குக்கீழ் ஒடுக்குவதற்கு எதுவும் இல்லா நிலையை உருவாக்கும் நோக்குடைய இலக்கியத்தைத்தான் தலித் இலக்கியம் என்பர் திறனாய்வாளர். (ராஜ் கௌதமன், தமிழக தலித்தும் தலித் இலக்கியமும், பக் 11-12).

## கனவுகள் தொகுப்பில் தலித்தியம்:

கனவுகள் சிறுகதைத் தொகுப்பை எழுதிய ஆசிரியர் தங்களுக்கு வரும் இலாபத்திற்கு மற்றவர்களை அதுவும் குறிப்பாக ஒடுக்கப்பட்டவர்களைப் பலி இடுவதில் நடுத்தர மேல்தட்டு மக்கள் கைதேர்ந்தவர்கள் (சுபாஷ் சந்திரபோஸ், சு. கனவுகள். ப. யீனூர) எனக் குறிப்பிடுகிறார்.முன்னுரையில் நலிந்த மக்களின் நலனைக் கருத்தில் கொண்டு அம்மக்கள் மொழியிலேயே பாத்திரங்களைப் பேச வைக்கிறார். (மேலது, ப.னூரயீ) என உரைப்பது கருதத்தக்கது. இவ்வாறு தொகுப்பில் ஒடுக்கப்பட்டவர்களது பிரச்சனைகளும் அதற்கான தீர்வு முறைகளும் சுட்டப்படுவதனைக் காண்போம்.

## சேரி வாழ்க்கை:

சுற்றுப் புறத்தூய்மை, சுய தூய்மை அற்றிருக்கின்றனர் சேரி மக்கள். பிறருக்கு உழைக்கவே விதிக்கப்பட்டவர்கள் தமக்கென வாழக் காலம் அற்று இருக்கிறார்கள். அதனை விழுதுக்குள் விருட்சங்கள் என்ற சிறுகதையில் குறிப்பிடுகிறார் ஆசிரியர்..... சேற்றில் புரண்ட எருமைக் கன்றுகள் போன்றிருந்த சில சிறுவர்கள். .... தொட்டி முழுந்திய மாட்டின் வாயைப் போல முகங்களில் திட்டுத் திட்டாக ஏழுகல அழுக்கு இருந்தது. மூக்கில் இருந்து சளி, கோடைக் கால அருவியாக வாய்க்குள் இறங்கிக் கொண்டிருந்தது. வயிறுகள் புள்ளாப் பானையைப் போலத் தள்ளிக் கொண்டிருந்தன.மேலும், நாள்தோறும் குளித்து சுத்தமாக இருப்பதும் சேரி வாழ்க்கையில் இயலாததாக உள்ளது. அங்குள்ள பெண்களும் எட்டோடு எட்டா நாள் குறிப்பவர்களாக உள்ளனர். பெண்களின் தலையில் எண்ணெயே இல்லாமல் பாலைவனாக விளங்குகிறது. கிடைமாடுகளைப் போல ஒட்டும் பேணும் கிளம்புகின்றன.

சரியான மருத்துவ வசதி இன்றி குழந்தைப் பிறப்பும் இறப்பும் தவறாமல் நடக்கின்றது. வருசம் தவறாமல் குழந்தை பெறுவதும், வருடம் தவறாமல் இறப்பதும் இயல்பானதாக உள்ளது. ஆண்கள் மட்டுமல்லாது பெண்களும் குடித்தார்கள். இளம்பருவத்திலேயே திருமணம் செய்து கொள்வதால் பெண்களின் உடல் கேடுறுவதோடு, பிறக்கும் குழந்தைகளும் இறந்து போகின்றார்கள். இக்கதை தவிர மேலைக்காற்று, எதிர்மறை இயக்கங்கள் முதலிய சிறுகதைகளிலும் சேரி மக்களது நைந்து போன வாழ்க்கை விரிவாகச் சுட்டப்படுகிறது. இதனை எதிர்மறை இயக்கங்கள் என்ற சிறுகதையின் நாயகனான குமார் .... ஒங்க சேரியும் எங்க கொல்லை வயக்காடும் ஒன்றுதானே (மேலது, பக்.69) என்று கூறுவது வெளிப்படுத்துகிறது.இந்தியர்களின் அடிப்படை உரிமைகளுள் ஒன்றாகிய ஓட்டுரிமையும் கூட, முதலாளிமார்களின் ஆணைக்குள் அடக்கப்பட்டிருக்கின்றதனை, கூப்பிட்டு இன்னாருக்கு ஓட்டுப் போடுங்கடான்னா நாங்க ஒங்க சொல்லக் கேக்கலயா? என்ற சேரிக்கிழவன் மாரியின் பேச்சு நமக்குத்

தெளிவாக்குகிறது. (மேலது. ப.69)ஓட்டுரிமை மட்டுமின்றி சேரிமக்கள் தங்களது முதலாளிமார்களிடம் வாங்கிய கடனில் முதல் மட்டும் பிள்ளையாரைப் போல அப்படியே இருக்கிறது என்கிறார்.

## பலி கடாக்கள்:

தாழ்த்தப்பட்டவர்களது வாழ்க்கை மட்டுமல்ல உயிரும் சமுதாயத்தின் மேல்தட்டு வர்க்கத்தினருக்குப் பலிப்பொருளாக மட்டுமே உள்ளதை மண்ணின் மணத்தோடு பலியாடுகள் என்ற சிறுகதையில் ஆசிரியர் காட்டுகிறார்.விவசாயத்திற்கான தண்ணீர்ப் பிரச்சினை என்ற தேசத்தின் பொதுப் பிரச்சனையைக் கருவாக்கி, தலித்துகள் பலியாக்கப்படுகின்றனர் என்பதைக் காட்டுகிறார்.கீழத்தெரு ஆட்களுக்கும் வடக்குத்தெரு ஆட்களுக்கும் ஒருவருக்கொருவர் தண்ணீருக்காக நடக்கும் போராட்டத்தில் அம்பலக்காரத் தெரு மனிதன் வெறும் பத்து பத்து ரூபாய் நோட்டுகளுக்குப் பலியாகும் அவலம் சுட்டப்படுகிறது. தான் பலியாடாக உள்ளதை அறியாமல் இது என்னங்க பெரிய காரியம், நீங்கல்லாம் சொல்லிப்புட்டா உசுரு என்னா வெல்லக்கட்டியா? பெரிய தெரவியமா? (மேலது ப.3) எனக் கூறுகிறான் அம்மாசி.மேலும், ஏம்பா நம்மத் தெரு எத்தேப் பெரிசு, இதத் தொறந்து விட நாலு புள்ளங்க இல்லியா? எனக் கேட்கிறான். அம்மாசியின் கேள்விக்கு உடனடியாகப் பதில் சொல்ல முடியாமல் மேல்வர்க்கத்தினர் திணறுகின்றனர்.

எந்தப் பய புள்ளக்குப் புத்தி இருக்குங்குறே அம்மாசி..... எக்குப் புக்காப் போயி மாட்டிக்கிறதுக்கு முன்னாடி இவனுகளே மதகுக்குள்ளே மாட்டிப் போயிருவானுவோ. நீன்னா.... (ப.6) என்ற பஞ்சாயத்தாரின் பேச்சு, ஒடுக்கப்பட்டவர்களை உயர்த்தி வைத்துப் பலியாக்கும் பான்மையைப் புலப்படுத்துகிறது. பலி கொடுக்கும் ஆட்டைக் குளிப்பாட்டி. சந்தனம் இட்டு, மாலையிட்டு அலங்கரிப்பதைப் போல ஒடுக்கப்பட்ட இனத்தின் அம்மாசியும் அழைத்துச் செல்லப்படுகிறான்.நண்டுஞ் சிண்டுமா ரெண்டு புள்ளியள வச்சிருக்கோம், வம்புதும்புல மாட்டி விட்டுறாத யோப்போ (ப.3) என்ற சின்னாத்தாளின் வேண்டுகோள், அடைக்கப்பட்ட மதகுநீரில் அமிழ்ந்து போகின்றது.இறந்து போன அம்மாசியின் பதினைந்தாம் நாள் படையலுக்கு வந்த உறவுகளின் குரலாக இவ தாலி விழுந்த மாரி அவறுவோ தாலியும் விழவுமா? என்ற கேள்வி கேட்கப்படுகிறது. காலங்காலமாகச் சமுதாயத்தின் பலிகடாவாகச் சேரிமக்கள் ஆக்கப்படுவதைச் சுட்டும் ஆசிரியர், தமது கதையில் எதிர்க்குரலையும் பதிவு செய்கிறார்.

## கலப்பு மணம்:

ஒடுக்கப்பட்ட மக்களைத் தமது கதைகளில் பாத்திரமாக்கும் ஆசிரியர், அதற்கு ஒரு தீர்வாகக் கலப்பு மணத்தைக் குறிப்பிடுகிறார். மேலைக் காற்று, எதிர் மறை இயக்கங்கள், விழுதுக்குள் விருட்சங்கள் ஆகிய மூன்று சுறுகதைகளிலும் கலப்பு மணம் பற்றிப் பேசுகிறார்.மேலைக்காற்று எனும் கதையில் வரும் தாத்தா சென்ற தலைமுறையின் எச்சமாகவும், அவரைச் சந்திக்க வரும் வேம்பு–பரமசிவம் முதலிய தம்பதியர், கலப்பு மணத்தினால் வெற்றி பெற்றவர்களாகவும் உள்ளனர்.எதிர்மறை இயக்கங்கள் என்ற சிறுகதையில் மேல்வருக்கம் சார்ந்த குமார் சேரிப் பெண்ணை மணக்க வேண்டுகோள் விடுக்கிறான். அதற்கு என் பேரனுக்கு அவர் வீட்டில் பெண் இருந்தால் கேளுங்கள் (ப.79) என்ற சாம்பானின் பதில் புதிய தீர்வாகும். இதனைச் சிறுகதைத் தொகுப்பின் முன்னுரையில் உள்ள இக்கதையில் ஆசிரியர் சமூக நீதிக்கான சரியான பாதையைத் துணிவுடன் கூட்டுவது வரவேற்கத்தக்க புதுமையாகும் (ப.�ா௱ா௱)என்ற கருத்து அரண் செய்கிறது.

விழுதுக்குள் விருட்சங்கள் என்ற சிறுகதையில், தலித்திய ஆணை மணக்கும் பொன்னி, தனது பெற்றோராலும், சகோதரனாலும் விதவையாக்கப்படுகின்றாள். ஆனாலும், வைராக்கியமாகக் குழந்தையைப் பெற்றெடுத்து, பாரதி என்று பெயரும் சூட்டுகின்றாள். சேரியைச் சீர்திருத்துகிறாள். தனது மகளை ஐ.ஏ.எஸ். படிக்க வைப்பது மட்டுமின்றி,சேரியில் உள்ள பிறரையும் படிக்க வைக்கிறாள் பொன்னி, ஆக, தலித்திய ஒடுக்குமுறைத் தீர்வுக்குக் கல்வியையும் வழியாக்குகிறார் ஆசிரியர்.

## துணை நூல்கள்


1. அந்தோணி குருசு. அ. தலித்தியக் கருத்தாடல்கள், டிச.2003.
2. சுபாஷ் சந்திரபோஸ்.சு., கனவுகள், டிச.2000.
3. ராஜ் கௌதமன், தமிழக தலித்தும், தலித் இயக்கமும், அக்.1999.

# மள்ளரிய இலக்கியப் போக்குகள்

முனைவர். *தே. ஞானசேகரன்,*தமிழ் இணைப் பேராசிரியர்,
பாரதியார் பல்கலைக் கழகம்,கோவை.

இக்கட்டுரை மள்ளரியம் எனும் இலக்கிய இயக்கத்தால் தோற்றுவிக்கப்பட்ட மள்ளரிய இலக்கியங்கள் பொதுவான போக்குகளையும், மள்ளரியம் முன்வைக்கும் கருத்தியலையும் சுருக்கமாக அறிமுகம் செய்ய முயல்கின்றது.

## மள்ளரிய இயக்கம் அறிமுகம்

எல்லாமே பொருட்படுத்த வேண்டியனதான் எனும் பின் நவீனத்துவம் முன்வைக்கும் கருத்தின் அடிப்படையில் மள்ளரிய இயக்கப்போக்குகளையும் இலக்கியப் போக்குகளையும் கவனத்தில் கொண்டால் மள்ளரியத்தில் சமூகவிடுதலை எனும் நுண்ணரசியல் பேசப்படுகின்றது என்பது எளிதில் விளங்கும். தமிழகத்தில் பூர்வ குடிகளான அடித்தள மக்கள் அல்லது விளிம்பு நிலை மக்களுக்கு ஏற்பட்டுள்ள முதன்மையான நெருக்கடி இம்மக்களின் பண்பாட்டு வேர்களுடனான அடையாளங்கள், தொன்மையான வரலாறுகள் மறைக்கப்படுவதும் மறுக்கப்படுவதும் ஆன அடையாள நெருக்கடிதான் என்பதைப் புரிந்து கொள்ள முடியும். இதனை மள்ளரியம் நன்கு புரிந்து கொண்டுள்ளது. தமிழர் என்ற ஒற்றைப் பண்பாட்டு அடையாளத்துடன் மட்டும் தமிழக நிலப்பரப்பில் ஒரு சமூகம் அடையாளப்படுத்தப்படவில்லை. அதற்கு மேலாக சாதிய அடையாளங்களுடனான விழுமியங்களே ஒரு சமூகத்தின் பண்பாட்டு மேலாண்மையை நிலைநிறுத்தும் தளமாகக் கருதப்படுகிறதை மள்ளரியம் இனங்கண்டுள்ளது. இதனடிப்படையில் தான் சாதியை மறுப்பதைக்காட்டிலும் அதன் தளத்திலே பயனித்து தனக்கான அடையாளங்களை மீட்டெடுத்து அதனை தனது சமூக விடுதலைக்கான சிந்தனையாக முன்வைக்க முயன்றது. அப்படி உருவானது தான் மன்னர் மரபுகள் குறித்த அறிஞர் தேவ ஆசிர்வாதத்தின் ஆய்வுகளும் (1970) முனைவர் குருசாமிசித்தரின் (1995) ஆய்வுகளும் தே. ஞானசேகரனின்"மள்ளரியம்" குறித்த ஆய்வுகளும் ஆகும். இவ்வாய்வுகள் சம காலத்தில் பள்ளர்கள், தேவேந்திரர்கள் என்று அறியப்படுவோர் சங்க இலக்கியங்களில் மருதநில மக்களாக அறியப்படும் மள்ளர் (உழவர், வீரர்) களின் வழித்தோன்றல்கள் ஆவர். இம்மக்களின் பண்பாடு மருதநில வேளாண்பண்பாடு. இவர்கள் தான் "நெல்லை" இப்பூமியில் முதன்முதலில் உண்டாக்கியவர்கள். வேளாண்மை இவர்களின் உயிர்மூச்சு. இந்த மரபு பள்ளு நூல்கள் வரை தொடர்வதை மேற்சொன்னவர்களின் ஆய்வு சான்றுகளுடன் நிறுவியது. இவ்வாறு 1995க்குப் பின்னர் "மள்ளர்" மரபாக அறியப்பட்ட இம்மக்களின் மருதநிலப் பண்பாடு இம்மக்களை தமிழக மண்ணில் வேர் ஊன்றிய பூர்வீகக் குடிகள் என்பதை அறிதற்கு ஏதுவாக அமைந்தது.

இவ்வாறான சூழலில் 1993களில் தோன்றிய தலித்யம் விளிம்பு நிலை மக்களின் சமூக விடுதலை பேசியது. என்றாலும் அது தீண்டாமையோடு தொடர்புபடுத்தியும், ஆதி திராவிடர் என்ற ஒரு சமூகத்தினரை மட்டுமே முன்னிலைப்படுத்தும் இயக்கமாக தமிழகச் சூழலில் தன்னைப் பிரகடனப்படுத்திக் கொண்டது. இந்தத் தலித்தியத்திற்குள் "மள்ளர்கள்" இடம்பெற முடியாத அடையாள நெருக்கடி ஏற்பட்டது. காரணம் இவர்கள் ஆதிக்க சாதிகளால் குறிப்பாக 17ம் நூற்றாண்டு வாக்கில் இருந்து ஒடுக்கப்பட்ட விவசாயக்கூலிகளாக ஆக்கப்பட்டவர்களே தவிர தீண்டாமைக்கும் இவர்களுக்கும் யாதொரு தொடர்பும் இல்லை. என்பதை இம்மக்கள் குறித்து உருவாக்கப்பட்ட "மள்ளர்மரபு" எடுத்தியம்பிய பின்புலத்தால் மள்ளரியச் சிந்தனையாளர்களால் தலித்யம் மறுக்கப்பட்டது. தலித்யம் மறுக்கப்பட்டதால் மள்ளர்கள் விடுதலை பேசும் தளம் என்ன என்ற கேள்வி எழுந்த போது அதற்கான மள்ளர்களின் விடுதலை பேசும் தளம் "மள்ளரியம்" என்று அடையாளப்படுத்தப்பட்டது. இத்தகைய அடையாளப்படுத்துவதற்கான சமூக, அரசியல் சூழல் தமிழகத்தில் 1990 வாக்கில் ஏற்பட்டிருந்தது. அது ஒவ்வொரு சாதியும் தனித்தனி சமூக இயக்கங்களாகவும் (சங்கம்) அரசியல் இயக்கமாகவும் தோற்றம் பெற்ற தமிழகச் சூழல் ஆகும். இச்சூழல் இக்காலத்தில் சமூக, இலக்கியத் தளத்தைப் பாதித்தன. ஒரு புதிய தோற்றம் அது தோன்றும் சமுதாயத்தில் பண்பாட்டுச் சிக்கலை உள்ளீடாகக் கொண்டு தோன்றும் என்பதற்கேற்ப 1995களிலும் அதற்கும் முன்பும் பின்பும் தமிழகத்தில் இம்மக்களின் மீது ஆதிக்க சாதியினரால் நிகழ்த்தப்பட்ட சாதிய மோதல்களும் (கொடியன்குளம் கலவரம், நெல்லைக் கலவரம்) இவ்வகை இலக்கிய இயக்கங்கள் தமிழ் மண்ணில் வேரூன்றக் களம் அமைத்துக் கொடுத்து என்றால் மிகையாகாது. தொடர்ந்து சக தமிழர்களால் (ஆதிக்க சக்திகள்) இம்மக்கள் ஒடுக்கப்படுவதற்கும் தாக்கப்படுவதற்கும் காரணம் இவர்களுக்கான பண்பாட்டு அடையாளத்தை இழந்து நிற்பதால்தான் என்பதை மள்ளரியம் வலுவாக நம்பியது. அரசின், தலித், தாழ்த்தப்பட்டோர் என்ற அடையாளம் தம்மை அடிமைப்படுத்தவும், வீழ்த்தவும் மட்டுமே கூடியது என்பதால் தமது பூர்வீக அடையாளமான வேளாண், வீர மரபான மள்ளர் எனும் மரபை தங்களுக்கான பண்பாட்டு

அடையாளமாகத் தூக்கிப் பிடிக்கும் இலக்கியங்கள் கவிதை, சிறுகதை, நாவல், காவியம் எனும் வகையில் 1995க்குப் பின் இயல்பாகவே தோன்றத் தொடங்கின. இந்த மள்ளரிய இலக்கியங்களை ஒரு வகையில் அரசியல் என்று நாம் சொல்லிவிட முடியும். காரணம் பெண்ணியம் ஒரு அரசியல், தலித்யம் ஒரு அரசியல், காரணம் பெண்களையும், தலித்களையும் சமூக விடுதலைக்குத் தயார் செய்வது போல் மள்ளரியமும் ஒரு சமூகத்தை சமூக விடுதலைக்குத் தயார் செய்கிறது. காரணமில்லாமல் காரியமில்லை என்பது போல் மள்ளர்களின் சமூக விடுதலையை உறுதிப்படுத்தும் அரசியலை மள்ளரியம் செய்வதால் மள்ளரியமும் அரசியல்தான். மள்ளரியம் தனக்கான அடையாளங்களுடன் செயல்பட்டாலும், தமிழர், தமிழர் ஒற்றுமை எனும் சமூகத் தளத்திலிருந்து வேறுபடாமல் இயங்கும் கருத்தியலைக் கொண்டு விளங்குகிறது. இம்மள்ளரிய இயக்கங்களால் மள்ளரியம் குறித்த ஆய்வுகளும் ஆய்வு நூல்களும் தொடர்ந்து வெளியிடப்பட்டு வருகின்றன. படைப்பு இலக்கியங்களும், இம்மள்ளரியம் தன் கவனத்தைச் செலுத்தி வருகிறது. அவ்வகையில் கவிதை, நாவல், சிறுகதை, காப்பியம், தோன்றத் தொடங்கியுள்ளது. இவையெல்லாம் ஏன் ஒரு சமூகத்தில் தோன்றுகின்றன. என்ற ஒரு கேள்வி எழலாம். இதற்கான காரணத்தை விளிம்பு நிலை மக்கள் குறித்த சிந்தனையாளர் முனைவர் நாகராஜ் முன் வைப்பார்.

"ஒவ்வொரு ஒடுக்கப்பட்ட சாதியும் தனது வேர்களை மறு கண்டுபிடிப்பு செய்து கொள்ள வேண்டியது அவசியம். அதன் மூலம் இந்த தேசத்தின் கலாச்சாரம் மறுபிறப்பு பெறமுடியும். ஆனால் விரோதங்களையும், பாகுபாடுகளையும் தவிர்த்துவிட வேண்டும், துரதிஷ்டவசமாக இன்று அது நடைபெறவில்லை.

ஒதுக்கப்பட்ட சாதியினர் தங்கள் கலாச்சார மீட்சி, ஒற்றுமை ஆகியவற்றை விட அரசியல் ரீதியாகச் தங்களை முன்னிலைப் படுத்துவதிலேயே குறியாக உள்ளனர். அவர்களில் தங்கள் கலாச்சாரம் பற்றிய சுயமதிப்பு இல்லை என்பது பற்றியே நான் மிகவும் கவலைப்படுகிறேன். அவர்களுக்கு வளம் மிகுந்த கலாச்சாரம் உள்ளது. செழுமையான ஆன்மீகமும் பாரம்பரியமும் மதங்களும் உள்ளன. அவை புறக்கணிக்கப்படுகின்றன.

நான் பழைய காலத்திற்குத் திரும்ப வேண்டும் என்று கூறமாட்டேன். பழமையைப் போற்றுவதில் எனக்கு உடன்பாடு இல்லை. ஆனால் யாராக இருந்தாலும் மரபிலிருந்து துண்டித்துக் கொள்வது தற்கொலைக்குச் சமம்தான். அது நம்மை வேரற்றவராக்கிவிடும். நம்மைச் சிதைத்து விடும். என்ற கருத்தை மள்ளரியம் ஏற்றுக்கொள்கிறது. இதனடிப்படையில் மள்ளர் மரபு, மள்ளர் வரலாறு, மள்ளர் பண்பாடு என்பனவற்றை மீட்டுருவாக்கம் செய்யும் பணியில் தன்னை ஈடுபடுத்திச் சமூக விடுதலைக்கான களத்தைத் தயார் செய்யும் பணியில் மள்ளரியம் ஈடுபட்டுள்ளது.

"இந்த உலகம் இரண்டால் ஆனது. ஒன்று நாம் வாழும் இயற்கை. அதாவது நிலம், நீர், காற்று, தீ, வான் என்பது. இன்னொன்று இதில் வாழும் மனிதனின் வரலாறு. அதாவது இரண்டாவது இயற்கை இந்த வரலாறு. வரலாறு அற்றவன் அனாதை, அகதி. வரலாறு என்பது என்ன வென்று பார்த்தால் டெப்ரேய் எனும் அறிஞரின் கூற்றுப்படி "அடிப்படையில் தனக்கான உரையாடலை தாமே சுட்டுவதுதான்." இதுதான் உண்மையான யுத்தக்களம். ஒவ்வொரு இனமும் தனக்கான உரையாடலை உருவாக்கித்தான் வைத்திருக்கிறது. எந்த இனத்திற்கும் இயற்கையிலேயே ஒரு வரலாறு இருந்தது. என்று சொல்ல முடியாது. இன்னும் சொல்லப்போனால் வரலாறு எழுதுவது என்பதும் ஒரு கருத்தியலை உருவாக்குவது என்பதும் கண்ணுக்குத் தெரியாத துப்பாக்கி ரவை தயாரிக்கும் தொழிற்சாலையைக் கட்டுவதற்கு நிகரென்று கருதப்படுகிறது. அரசு என்பது கூட துப்பாக்கிகளால் நிலைநிறுத்தப் படவில்லை. வார்த்தைகளினால் ஆன பிரதிகளினால் தான் என்பார் - 2. இந்த வகையான பணியைத்தான் மள்ளரிய இயக்கம் சுட்டுகின்றது. "இயக்கம்" என்ற சொல்லுக்குத் தூண்டுவது, புதுப்பிப்பது, உயிரூட்டம் பெறச் செய்வது என்று பல பொருள்கள் உள்ளன. சமுதாய, அரசியல், பொருளாதார மாற்றங்கள் தான் இயக்கம் தோன்றுவதற்கு அடிப்படையாக அமைகின்றன. இலக்கியம் சமுதாயத்தின் விளைபொருள். சூழ்நிலைக்கேற்ப இலக்கியம் தோன்றுகின்றது. இலக்கியம் பற்றிய கோட்பாடுகளை அறிந்து கொள்வதற்கு இயக்கங்கள் அடிப்படையாய் அமைகின்றன.3. 1990க்குப் பின் தமிழ்ச் சமூகத்தில் விளிம்பு நிலை மக்கள் சமூகம், அரசியல், கல்வித் தளத்தில் எழுச்சி பெற்ற நிலையில் தான் இது போன்ற இயக்கங்களும் அது சார்ந்த இலக்கிய வகைமையும் தோன்றத் தொடங்கின.

### பண்பாட்டு வேர்களை அடையாளப்படுத்தும் போராட்டம் :

20ம் நூற்றாண்டின் இறுதிக் கால கட்டத்தில் அடித்தள மக்கள், புலம்பெயர்ந்தோர், பெண்கள், பூர்வகுடிகள் தங்களின் அடையாள நெருக்கடி பற்றியும், சமூக விடுதலை பற்றியும் சிந்தித்து செயல்படத் தொடங்கிய காலமாக அமைவதும் இதற்கு ஏதுவான சூழலாக அமைந்தது. இதற்கு முன்பு இருந்த பெருங்கதையாடல் உடைக்கப்பட்டு (அதாவது தேசிய வாதம் போன்ற பெருங்கதையாடல்கள்) எந்தப் பெருங்கதையாடலுமற்ற வட்டாரத் தன்மையுடன் கூடிய கருத்துக்கள் முன்னிலைப்படுத்தப்பட்டன. இதனை காயத்திஸ்பைவக் அடித்தளமக்கள் பேசமுடியுமா? (ஊயவாை நை ) என்ற கட்டுறையில் "அடித்தள

மக்களுக்கென்று வரலாறு கிடையாது. அவர்கள் பேசக் கூட முடியாது. அதிலும் அடித்தள மக்களாகப் பெண் இருந்துவிட்டால் அவளது நிலை இன்னும் ஆழமான நிழலுக்குள் மறைக்கப்படும்" என்று சொல்வது 20 ஆம் நூற்றாண்டின் பிற்பகுதி வரை உலகெங்கிற்கும் பொதுவானவே. இருப்பினும் தமிழ் இலக்கியம் சூழலில் 17 ஆம் நூற்றாண்டில் தோன்றிய பள்ளு இலங்கியங்கள் தான் முதன்முதலில் விளிம்புநிலை மக்களின் சமூக விடுதலை பேசும் இலக்கியமாக அமைவது மனங்கொள்ளத்தக்கது. வேளாண்மையை உயிர்மூச்சாகக் கொண்டு வாழும் "மள்ளர் (பள்ளர்) வாழ்வை மையமாகவும், அம்மகளையே பிரதான பாத்திரங்களாகவும் கொண்டு உதித்த முக்கூடற்பள்ளு என்கிற நூலில் "கிட்டே பார்த்த உடனே தூரப்போ" என்று விரட்டுகிறார்கள்; ஆனால் அவர்களே நான் வேளாண்மை செய்து தரும் சோறை மட்டும் விலக்குவதில்லை, என்று கிண்டலாகப் பள்ளர் ஒருவர் கூறுவதாக அமையும்.

"பக்கம் தூரம் போயும்/தக்க சோறென வேளாண்மை/பள்ளா பள்ளா என்பர் மெய் கொள்ளாதவர்"

என்பதில் என்னைத் தூரப்போ என்று சொல்லும் இவர்கள் என் உழைப்பின் மேன்மையை உண்மையை அறியாதவர்கள் என்று கேள்வி கேட்கும் இலக்கியம் இந்த மள்ளர்களின் வேளாண் வாழ்வு பேசும் இலக்கியங்கள் என்பது இங்கு நினைக்கத்தக்கது. இந்தப் பள்ளு நூல்கள் இவர்களை மள்ளர் (உழவர்) என்றே அழைக்கும். இப்படியான இவர்களின் வேளாண்பண்பாட்டை மள்ளரிய இலக்கியங்கள் இம்மக்களின் பண்பாட்டு அடையாளங்களாகக் கண்டு சொல்கின்றன. சி. செல்லப்பா அவர்களின் "இந்திரகாவியம்" மள்ளர்களின் முதல்வனான இந்திரனின் (வேந்தன்) புகழைக் கடல் கொண்ட நாவலந்தீவு நாட்டில் காடுகொண்டு குளம் வெட்டி கழனி பெருக்கி நெல் வேளாண்மை பெருங்கிழவன். தமிழைச் செம்மை செய்து ஐந்திரம் எனும் இலக்கண நூலைப் படைத்தவன் என்று விரித்துப் பேசும் காவியம் மள்ளரிய அடையாளத்துடன எழுதப்பட்டதே ஆகும். சூரிய காந்தனின் "நொய்யல் ஆற்றங்கரையினிலே" எனும் நாவல் கொங்கு நாட்டில் பண்ணாடி எனும் பட்டத்துடன் வாழும் தேவேந்திர குல வேளாளர்களின் வேளாண்மை வாழ்க்கையை விரித்துப் பேசும். வினோதாவின் "வசந்த முல்லை" தேவேந்திரர்களின் இன வரலாறு கூறும் நாவல் எனும் வகையில் அமைந்து, கொங்கு நாட்டின் எழுகரை நாட்டில் வாழும் தேவேந்திர குல வேளாளர்களின் சமூகப் பண்பாட்டு வரலாற்றினையும் இந்தியச் சுதந்திரப் போராட்டக்காலத்தில் சுந்தரலிங்கம் குடும்பனார் தலைமையில் இணைந்து எழுதப்பட்ட நாவலாக அமைகின்றது. முனைவர் குருசாமிசித்தர், முனைவர். தே. ஞானசேகரன் முதலியோர் தொகுத்து வெளியட்டுள்ள "நட்பு" எனும் சிறுகதைத் தொகுப்பு நூலில் இடம்பெற்றுள்ள 15 சிறுகதைகள் சமூக இயங்கியல் தளங்களில் அரசியல், கல்வி, பொருளாதாரம், சாதி, தொழில் என அனைத்துத் தளங்களிலும் தனக்கான தேடுதலையும் பங்களிப்பையும் பதிவு செய்துள்ளன. கவிதை இலக்கியம் மிக அலாதியாக அமைகின்றது. மள்ளரிய அடையாளங்களுடான நாவல், சிறுகதை, காப்பியம் போன்றன தோன்றுவதற்கு முன்பே 1980களில் "மருதமலர்" எனும் சமுதாயப் பத்திரிகையிலும் 1995க்குப் பின்னர் "மள்ளர் மலர்" , "பாட்டாளி முடிக்கம்" எனும் இதழிலும் 2001க்குப் பின்னர் "மள்ளரியம்" எனும் இதழிலும் நூற்றுக்கணக்கான கவிதைகள் மள்ளரிய அடையாளங்களுடன் எழுதப்பட்டு வருவதைப் பார்க்க முடிகின்றது.பெரும்பாலான கவிதைகள் மள்ளர்க்ளுக்கான சமூக விடுதலையை ஆதிக்க சாதியினரிடமிருந்து போராடித்தான் பெற வேண்டும் என்பதை வலியுறுத்துவ்தாகவே அமைந்துள்ளன. காட்டாக "இன்னுமா பொறுமை" எனும் தலைப்பில் அமைந்த ஒரு கவிதை

"போதும் போதும்/இனியும் நாங்கள்/பொறுத்திருக்க முடியாது /காடும் மேடும்/கடினிகள் செய்தோம்/ நிலத்தைப் புரட்டிய/எமது வலிமை/நிலமை மாற்றத் திரும்பும்" 5என்றும்

"எழுக இளைஞனே எழுக/உரிய காலத்தில் நீ உறங்காதே!/மருத நில மக்களே எழுக!/முதுகெலும்பாய் சொல்லிச் சொல்லியே/பின்னுக்குத் தள்ளிவிட்டனர் பின்வந்தோர்/முதுகெலும்பை உடைப்பவர்கள் நாம்/ இதைப் புரிய வைப்போம்! எனவே எழுக!" 6/என்றும்

"உறங்கிக் கிடந்த சமுதாயம்/விழித்துக் கொண்டது - இந்த/உலகம் எதிர்த்து வந்த போதும்/நிமிர்ந்து நின்றது" 17.என்பதான கவிதைகளில் சாதிய ஆதிக்கத்தை உடைத்தெரிந்து சமயத்துவம் காண முயலும் தன்மை வெளிப்படக் காணலாம். இதனையெல்லாம் உள்வாங்கிக் கொண்ட மள்ளரியம்,

"ஆதிக்கத்தை உடைத்தெறி/சமயத்துவம் போற்று"/என்ற கொள்கையை முன்வைத்து இலக்கியம் படைக்கும் முயற்சியில் ஈடுபட்டு வருகின்றது.

## குறிப்புகள்

1. த. செயகுமார், தலித் மள்ளரிய நோக்கில், ப.20
2. தே. ஞானசேகரன், மள்ளரியமும் இலக்கியமும், ப.36
3. சி. மங்கையர்க்கரசி, இலக்கிய இயக்கங்கள், ப.4
4. தா. ஆனந்த குமார், பிள்ளைக் காலத்துவம் ஒரு பொது அறிமுகம், (கட்டுரை)
5. தே. ஞானசேகரன், மேலது ப.46
6. மேலது, ப. 48- 7. மேலது, ப, 50 .

# தலித்திய நோக்கில் "கோவேறு கழுதைகள்"

பேராசிரியை. *க. தனலட்சுமி*,
என்.ஜி.எம். கல்லூரி, பொள்ளாச்சி.

இமையம் என்ற நாவலாசிரியர் எழுதிய "கோவேறு கழுதைகள்" என்ற இந்த நாவல் வண்ணார் இன மக்களின் அடிமைத்தனம், அவமானம், வேதனை, சமுதாயத்தில் புறக்கணிக்கப்படுதல் ஆகியவற்றைப்பற்றி எடுத்துரைக்கின்றது. உயிரைக் கொடுத்து பாடுபடு, உடல் உழைப்பால் நேரடித் தொடர்புடையவர்கள் உணவிற்குக் கூட துன்பப்படும் நிலையை இந்நாவல் முழுவதிலும் காணலாம். மற்ற விஷயங்களில் சாதி பார்க்கும் சமுதாயம் தன்னுடைய காம இச்சையைத் தீர்த்துக் கொள்வதில் மட்டும் சாதி பார்ப்பதில்லை. குடியானத் தெருவிற்கு என்று தனி வண்ணாரும் இந்நாவலில் கூறப்பட்டுள்ளது. பறையர் இன மக்கள் வேளாண்மைத் தொழிலைச் செய்கின்றனர். அவர்களுக்குத் துணி வெளுப்பவர்களாக சவுரியும், ஆரோக்கியமும் படைக்கப்பட்டுள்ளனர். இவர்களுடைய வாழ்க்கை நிலையையே "கோவேறு கழுதைகளாக" இந்நாவலில் கூறப்பட்டுள்ளது.

## கொடுமையிலும் கொடுமை

தலித் மக்கள் சாதியின் பெயரால் கொடுமைப்படுத்தப்படுகின்றனர். உழைப்பிற்கு ஏற்ற ஊதியமும் இல்லை. இந்நாவல் வெளிப்படுத்தும் தொடர் கொடுமைகளாக,

1. சாதியின் பெயரால் கொடுமை 2. பாலியல் கொடுமை 3. உழைப்பும் ஊதியக் குறைவும்
4. ஊதியக் குறைவும் வறுமையும் 5. வறுமையும் கீழ்படிதலும் 6. போராட்டமும் நீதியின்மையும்

## சாதியின் பெயரால் கொடுமை

சவுரியும், ஆரோக்கியமும் கோயிலுக்குப் போவதற்குக் கூட அனுமதி கேட்கின்றனர். ஒரு நாள் ஓய்வுகூட அக்கிராம மக்களால் ஏற்றுக்கொள்ளப்படாத ஒன்று. சவுரிக்கும், ஆரோக்கியத்திற்கும் ஜோசப், பீட்டர் என்ற இரு ஆண் குழந்தைகளும், மேரி என்ற பெண்குழந்தையும் உண்டு. ஒரு நாள் பீட்டர் மற்ற குழந்தைகளோடு விளையாடச் செல்கிறான். அங்கு விளையாடும் பிள்ளைகள் மண்ணைச் சோறாக்கி "இது காக்காய்க்கு, இது நாய்க்கு, இது வண்ணாரப் பெயலுக்கு" என்று விளையாடுகின்றனர். பீட்டரால் வண்ணராப் பெயலுக்கு என்று மண்சோற்று உருண்டையைப் பிடித்து வைக்க முடியவில்லை. ஆத்திரமும், அழுகையுமாய் வீடு திரும்புகின்றான். ஆரோக்கியத்திடம் "ஏம்மா நாம்ம ராச்சோறு எடுக்காம இருக்கக் கூடாதா? நெதமுமம் நம்பூட்ல சோறாக்கினா என்ன?" என்று பீட்டர் அழுகும் பொழுது சாதிப்பெயராலும் சூழ்நிலையாலும் ஒரு குழந்தை துன்பப்படுவதை உணருகின்றோம். மேலும் ஆரோக்கியத்தைப் பெயர் சொல்லி அழைக்காமல் "வண்ணாத்தி மவள..." என்று அழைப்பதை நாவல் முழுவதிலும் காணலாம். ஆரோக்கியத்தையும், சவுரியையும் விட அவர்களுடைய குழந்தைகள் சாதியால் துன்பப்படுவதை உணர முடிகின்றது.

## பாலியல் கொடுமை

தலித்திய மக்கள் வறுமையால் உழைக்கச் செல்லும் இடங்களிலும் பாலியல் கொடுமைக்கு உள்ளாக்கப்படுகிறார்கள். இதனை ஒட்டுமொத்த தலித்திய வேதனைகளை "சுண்டுவோர் சுரண்டப்படுவோர் என்று வன்முறைகளால் நிலைநிறுத்தப்பட்ட உற்பத்தி உறவுகளைப் பண்பாட்டு தளத்தில் இடம், வீடு, உணவு, உடை, பழக்கவழக்கம், நீதி, நெறி, மொழி, பாலியல் முதலானவற்றில் குறியீடுகளாக்கியுள்ளன" என்று தலித் பண்பாடு என்ற நூலின் ஆசிரியர் ராஜ்கவுதமன் கூறுவதிலிருந்தும் அறியலாம். இந்நாவலில் மேரி பாலியல் கொடுமைக்கு ஆளாக்கப்படுகின்றாள். சவுரி ஒருநாள் வெளிநாடு சென்றுவிடுகிறான். ஆரோக்கியத்திற்கு திடீரென்று காய்ச்சல் வந்து விடுகின்றது. வேறு வழியில்லாமல் மேரி துணி எடுக்கச் செல்கிறாள். சடையன் என்ற கொத்துக்காரனின் வீட்டிற்குத் துணியெடுக்கச் செல்லும் போது சடையனால் கெடுக்கப்படுகிறாள். மேரி

சடையனிடம் கெஞ்சுவது கல் மனதுடையவர்களையும் கலங்க வைக்கும்.

"வாண்டாம் சாமீ / நல்லதில்ல சாமீ / மானம் மருவாத பூடும் சாமீ /
தெருவுல தலைகாட்ட முடியாது சாமீ / உங்களுக்கு காலுக்கு கும்பிடுறேனய்யா....
உங்க வவுத்துல மவளாப் பொறக்கனய்யா / வேணும்மின்னா என்னக் கொன்னு போடுங்கய்யா
சுட்டுப் பொசுக்குங்கய்யா...." என்று மானத்திற்காக உயிர் போனாலும் பரவாயில்லை என மேரி கதறுகிறாள்.

இப்பேச்சையெல்லாம் காதில் வாங்கிக் கொள்ளாமல் சடையன் மேரியைக் கெடுத்து விடுகிறான். "நம்ம ஊரு மீசை நரைச்ச கிழவன் கூட எங்கிட்ட கேலி பேசுறான்" என்று மேரி ஆரோக்கியத்திடம் கூறுவதன் மூலம் எந்த அளவிற்கு பாலியல் கொடுமைக்கு ஆட்படுகிறார்கள் என்பதை உணரலாம். மத்தவங்க கேலி பண்ணியதைக் கேட்ட ஆரோக்கியம் மேரியிடம் "நம்மளுக்கு முன்னாடி எம்பூட்டோ, நம்பசாதி, சனம் இருந்திட்டுக் காலம் தள்ளினாப்ல நம்பளும் போவ வேண்டியதுதான் மனசு முக்கியம் உட்ராதே, உசிரு மாதிரி மனசு, உசுரு போனா நாம இல்ல, மனசு போச்சுன்னா அது நமக்கில்ல, மனசக் கல்லாக்கிடு" என்கிறாள். எந்த அளவிற்கு மனசக் கல்லாக்கிட்டு தலித் மக்கள் வாழ்கிறார்கள் என்பதற்கு இது தக்க சான்றாகும்.

## உழைப்பும் ஊதியக் குறைவும்

இழவு வீடுகளில் வாக்கரிசிக் கூடையை சுமந்து சுமந்து உச்சந்தல வெந்து போகிறது. இறுதியில் மிகவும் குறைவான தானியமே கிடைக்கின்றது. இதனை "என்னாங்க சாமீ இது? கையக் கையக் காட்டுறீங்க உச்சந்தல வெந்து போச்சி, நான் உங்கள அண்டி வவுரு வளக்கறவ சாமீ" என்ற ஆரோக்கியத்தின் பேச்சின் மூலமும் "அம்பூட்டுத் தூரம் ஆச்சா? கயித வாயை மூடு என்ற மொட்டையனின் ஆதிக்கப் பேச்சின் மூலமும் அறியலாம்". உடல் உழைப்பு மட்டுமல்லாமல் தக்க நேரத்தில் உதவி செய்கிற குணமும் ஆரோக்கியத்திடம் உண்டு. பிரசவம் பார்ப்பதையும் இவளே செய்கிறாள். ஊரிலுள்ள பெண்களின் உயிரைக் காப்பாற்றுபவர்களாகவும் உள்ளாள். இதனை

"அட ஆமாங்கறன் / இவ கைவெச்சா நல்லாப்பூடும்.. / கைராசிக் காரி
இவ ஒருத்தி இல்லன்னாலும் நம்ப கதி / பொணமாச் சாவ வேண்டியது தான்"

என்ற உரையாடல் மூலம் அறியலாம். வேலை வாங்குகின்ற வரை இனிக்க இனிக்கப் பேசிவிட்டு, வேலை முடிந்ததும் தக்க கூலி கூடக் கொடுப்பதில்லை. ராச்சோறு எடுத்து உண்ணும் இவர்களுக்கு முழு விடிவு எப்பொழுது தான் வரும் என்று தெரியவில்லை.

## ஊதியக்குறைவும், வறுமையும்

பகல் முழுவதும் சவுரியும், ஆரோக்கியமும் நெல் தூற்றினாலும், இரண்டு முற நெல் மட்டுமே கொடுக்கிறார்கள். ஊதியக் குறைவின் காரணமாக வறுமை ஏற்படுகிறது. ஆரோக்கியத்தின் மருமகள் சகாயம் துணி எடுப்பதற்குக் கூடப் போகமாட்டேன் என்கிறாள். ஒவ்வொரு வூட்டு ஆம்பளயும் மொறச்சி மொறச்சிப் பாக்கிறானுவ என ஆத்திரப்படுகிறாள். ஆனாலும் இதையெல்லாம் சகித்துக் கொண்டு ஆரோக்கியம் "இந்த வூட்ல அடுப்பு பொகயணுங்கிறதுக்காக நான் எப்படி என் உசுரத்தெனமும் விடுறெண்னு தெரிஞ்சா நீ இப்படிப் பேச மாட்ட" என்று கூறுகின்றாள். வறுமையின் காரணமாக கழுதையைக் கூட விற்று விடுகிறார்கள். தாங்களே கழுதை போல உழைக்க ஆரம்பிக்கிறார்கள். "கயிதெய போனப் பின்னால இங்கென்ன யிருக்கு? நாங்கயெல்லாம் சும்மாச்சிக்குத்தான் உசுரோட யிருக்கம்" என்ற மேரியின் கூற்றின் மூலம் வறுமையின் கொடுமையினை அறியலாம்.

## வறுமையும் கீழ்ப்படிதலும்

ஊதியக்குறைவால் வறுமை ஏற்படுகின்றது. வறுமை தாங்கமுடியாமல் கீழ்ப்படிந்து போகின்றார்கள். ஆரோக்கியம் ஒவ்வொரு வீடாகச் சென்று நாங்கள் இருப்பதை மறந்து விடாதீர்கள் என்கிறான் இதனை,

“இந்த வண்ணாத்தி மவள மறந்திடாததீங்க சாமீ... / பறவண்ணாத்தி ஆரக்கியம் தான் எசமாங்க..
என்று ஆரோக்கியம் கெஞ்சுவதன் மூலம் அறியலாம்.

## போராட்டமும் நீதியின்மையும்

வறுமையின் காரணமாக கீழபடிந்த தலித்திய மக்கள் அப்பொழுதும் தக்க ஊதியம் கிடைக்காத பொழுது போராடிப் பார்க்கிறார்கள். நெல் தூற்றியதற்கு தக்க தானியம் கிடைக்காத போது ஆரோக்கியம்

“உங்களாட்டம் நாலு பெரியவுங்க கிட்டச் சொல்லுங்களேன்
ஏ வண்ணாத்தி கயித” என்கிறாள் அதற்கு / “நாயம் பொளக்க வந்துட்டியா வடவாண்டி நாய”
என்று திட்டுகிறார்கள்.

“பொட்டச் சிறுக்கி நீ பேசாத, என்று அதட்டுகிறார்கள். பொங்கல், தீபாவளிக்கு என்றால் நல்ல உணவுகளை வாங்கிக் கொள் என்று கூறுகின்றனர். அதற்கு ஆரோக்கியம் “நான் பொங்க தீபாவளிக்கு மட்டும் வெளுத்தால் போதுங்களா சாமீ?” என்று எதிர்த்துப் போராடுகிறான். ஆனால் அங்கேயும் “அடி செருப்பால வாங்கித் தின்ன நாய பல்லப் புட்டுப்புடுவன் புட்டு” என்ற அதட்டலே கிடைக்கின்றது. போராடினாலும் நீதி கிடைப்பதில்லை.

## தொழிலில் புதிய முறைகளைக் கடைபிடிக்காதிருத்தல்

சாதிக் கொடுமைக்கும், பாலியல் கொடுமைக்கும் ஆளாக்கப்படுகிற இவ்வினத்தவர் தொடர் கொடுமைக்கு ஆளாகிறார்கள். ஊதியக்குறைவால் வறுமையும், வறுமையால் கீழ்படிதலும், போராடினாலும் நீதியின்மையும் இவர்கள் அனுபவிக்கும் தொடர் கொடுமைகள். சவுரியும், ஆரோக்கியமும் வாழுகின்ற ஊருக்கே பெரியசாமி என்ற சலவைத்தொழிலாளி வருகின்றான். அவன் சலவை செய்து கஞ்சி போட்டுத் தேய்த்துத் தருவதால் அவனிடமே அதிகமாகத் துணிகளை குடித்தனக்காரர்களும், காலனிக்காரர்களும் போடுகிறார்கள். அப்பொழுது மேரி ஆரோக்கியத்திடம் நாமும் சலவை செய்து கஞ்சி போடலாம் என்று கூறுகிறாள். ஆனால் ஆரோக்கியம் அதனை மறுத்துவிடுகிறான். தொழிலில் புதிய முறைகளைக் கடைபிடிக்காதிருத்தலும் வறுமைக்கு ஒரு காரணமாகி விடுகின்றது. கஞ்சிக்கே வழியில்லாத போதும் பிறந்த மண்ணைவிட்டுச் செல்ல மாட்டேன் என்ற பழமை வாதமும் வறுமைக்கு மற்றொரு காரணமாகும்.

## அடுத்த தலைமுறையினரின் மாற்றம்

சவுரியும், ஆரோக்கியமும் பொறுத்துக்கொண்டிருந்தாலும், சகாயமும், மேரியும், பீட்டரும் கொடுமைகளைப் பொறுத்துக் கொண்டிருக்கவில்லை. சகாயம் ராச்சோறு எடுக்கவும், துணிதுவைக்கவும் செல்ல மாட்டேன் என்று ஆரோக்கியத்திடம் சண்டையிட்டாலும், மேரி சகாயத்தை வெறுக்கவில்லை. மேலும், “நீ உன் பிராந்தியமும் சோறு, துணி எடுக்கப் போவமாட்டேன்னு எந்தலயிலே அடிச்சிச் சத்தியம் பண்ணு” என்கிறான். இறுதியில் சகாயமும், ஜோசப்பும் நகரத்துக்குச் சென்றுவிடுகிறார்கள். ராச்சோறு எடுக்கும் இவர்களுக்கு முழு விடிவு காலமாற்றத்தாலும், தலைமுறையின் மாற்றத்தாலுமே வரவேண்டும்.

# விதைச்சோளம் நாவலில் தலித்தியச் சிந்தனை

*சீ. நிர்மலா*, தமிழ் விரிவுரையாளர்,
மகாராசா மகளிர் கல்லூரி, பெருந்துறை - 638 052.

## முன்னுரை

தற்கால இலக்கியப் படைப்புகளில் தலித் இலக்கியம் தனக்கென ஓர் இடத்தைத் தக்க வைத்துள்ளது. தலித்துக்களின் விடுதலைக்காக மக்களிடம் தாக்கத்தை ஏற்படுத்துகின்ற சரியான இலக்கிய வடிவத்தைத் தேர்ந்தெடுப்பது இன்றியமையாதது. அவ்வகையில் இக்காலத் தமிழ் இலக்கிய வகைகளில் ஒன்றான நாவலில் தலித்துகளின் வாழ்க்கை முறை சித்தரிக்கப்படுகின்றது. அத்தகைய சிறந்த படைப்பான சூர்யகாந்தனின் விதைச்சோளம் நாவலில் ஒரு குறிப்பிட்ட தலித் சமூகத்தின் நிலை, இன்று அச்சமூக மக்களிடையே ஏற்பட்டுள்ள மாற்றம் ஆகியவற்றை ஆராய்வதே இக்கட்டுரையின் நோக்கம் ஆகும்.

## தலித் சொல் விளக்கம்

நாவலில் தலித் மக்களைப் பற்றி ஆராயும் முன் தலித் என்ற சொல்லுக்குரிய விளக்கத்தை அறிய வேண்டும். ஒடுக்கப்பட்ட மக்களின் அடையாளச் சொல்லாக அண்மைக் காலத்தில் கையாளப்படுவது "தலித்" என்ற சொல்லாகும். இச்சொல் தமிழ் வேரைக் கொண்டதல்ல. மராட்டியிலிருந்து கடன் வாங்கப்பட்டது. தலித் மக்களை காந்தியடிகள் அரிஜன் (கடவுளின் பிள்ளைகள்) என்றும், திராவிட இயக்கத்தினர் ஆதி திராவிடர் என்றும் அரசாங்க ஆட்சி முறையில் அட்டவணை இனத்தினர் என்றும் பொதுவாகத் தாழ்த்தப்பட்டவர் என்றும் கூறுவர். இவ்வாறு "தலித்" என்றசொல் பல்வேறு பொருள்களில் வழங்கப்படுவதை அறிய முடிகின்றது.

## விதைச்சோளம் நாவலில் சமுதாய மாற்றம்

சமுதாய வேறுபாடு, மொழி, இடம், சமயம், பண்பாடு, பதவி, பொருளாதாரம் ஆகிய பல்வேறு அடிப்படைக் காரணங்களால் ஏற்படுகின்றது. பொருளாதார ஏற்றம் பெற்றவர்கள் தங்களின் பண பலத்தாலும், செல்வாக்காலும் கீழ்சாதி மக்களை அடக்குதல் என்பது தொன்றுதொட்டு சமதாயத்தில் நிலவி வரும் ஒன்று. இன்றைய காலகட்டத்தில் கீழ்ச்சாதி மக்கள் விழிப்புணர்வு பெற்று எவ்வாறு மாற்றத்திற்கு உள்ளாகி வருகின்றனர் என்பதை நாவலில் ஆசிரியர் சுட்டிக்காட்டியுள்ளார்.

## தலைமுறை மாற்றம்

தாழ்ந்த சாதியினரின் இன்றைய சந்ததியரிடம் பெரும் மாற்றம் ஏற்பட்டு வருகிறது. மற்ற சாதியினரின் அடக்குமுறைகளைக் கண்டிப்பவர்களாகக் காணப்படுகின்றனர். மேலும், தங்கள் சாதியை மற்றவர்களிடம் வெளிப்படுத்த விரும்பாதவர்களாகவும் காணப்படுகின்றனர். இதனை நாவலில் வரும் ராம மாதாரி வேம்பன் ஆகியோரின் கூற்றிலிருந்து அறிய முடிகின்றது. ராம மாதாரி வேலைக்குச் செல்லும் இடத்தில் அவன் பேசும் தெலுங்கைக் கண்டு அங்கிருப்போர் நாய்க்கரே என்று அழைப்பதையும் அவன் கட்டும் உருமாலைக் கண்டு கவுண்டரே என்று சொல்வதையும் வேம்பனிடம் கூற அதற்கு வேம்பன் அது நம்மைத் தேடி வருகின்ற கௌரவம் என்று அறிவுரை கூறுவதின் வாயிலாகத் தங்கள் சாதியை வெளிப்படுத்த விரும்பாத தன்மையை உணரலாம்.

## சிந்தனை மாற்றம்

தொன்றுதொட்டு ஆதிக்க சக்திகளினால் அடிமைப்பட்டு நிமிர முடியாத தன்மையினராய்ச் சிந்திக்கும் தன்மை அற்றவர்களாய்க் கீழ்ச் சாதியினர் இருந்து வந்துள்ளனர். ஆனால் இன்று அவர்கள் சிந்திக்கும் திறன் பெற்றவர்களாய் ஆதிக்க சாதியினரை எதிர்க்கும் தன்மை உடையவர்களாய்க் காணப்படுகின்றனர். இதற்கு வேம்பன் நினைக்கும் எண்ணங்களே சான்று

"தனது தலைமுறையை இதில் சிக்கிவிடாமல்
மீட்க முனைப்பாக இருக்க வேண்டும். இருந்தால்
மட்டும் போதாது செயல்படுத்தவும் வேண்டும்.
அந்தச் செயல்பாடுதான் கடந்த காலத்தின்
இழப்புகளை ஈடுகட்டுவதாக ஆகும்.
நிலம் பார்த்தே உழைத்துக் கொண்டிருக்கிற
நாமெல்லாம் நிமிர்ந்து மேலே விரிந்திருக்கும்
ஆகாயத்தை அண்ணாந்து பார்க்க வேண்டும்"

இவ்வாறு தனது இனத்தாரைப் பற்றிய வேம்பனின் சிந்தனையிலிருந்து அவர்களது நிமிர்ந்த நிலையை உணரலாம்.

## மதமாற்றம்

இந்து சமயத்தில் வெறுப்படைந்து தலித் என்ற சமூக அடையாளத்தையே இழந்து எல்லோருடனும் சமமாகப் பழகி வாழ்க்கை நடத்தலாம் என்ற எண்ணத்தில் கிறிஸ்துவ மதத்தில் தலித் மக்கள் சேர்ந்தனர். சேரி

மக்கள் கிறிஸ்துவ சமயத்திற்கு மாறுவதைக் கண்டு இந்து பரிஷத் அமைப்பினர் சேரி மக்களிடம் அறிவுரை கூற முற்பட்டனர். அதற்கு,

“ச்செரி” இந்த இந்துக்களுக்குள்ளேமித்த வங்க
ஒசந்தவங்க”... எங்களைப் போல் உள்ளவிக
தாழ்ந்தவிகங்குற பாகுபாட்டே எப்ப ஒழிக்கப்போறீங்க
அதையைச் சொல்லுங்க் மொதல்லே”

என்று கேட்கும் அளவிற்குச் சிந்தனை பெற்றவர்களாக சேரி மக்கள் முன்னேறியிருப்பதை அறியலாம்.

### பொருளாதார மாற்றம்

சக்கிலியர்கள் செருப்புத் தைக்கும் தொழிலைச் செய்பவர்கள். கவுண்டர் தோட்டங்களில் பறி, தும்பி முதலியன கிழிந்துவிட்டால் அதைத் தைத்துக் கொடுப்பார். மேலும் குறிப்பிட்ட பண்ணையத்தில் குறிப்பிட்ட சக்கிலியன் காட்டு வேலை செய்து கொண்டும், மாடுகளை மேய்த்துக் கொண்டும் பண்ணை மாதாரியாக இருப்பான். இவ்வாறு மேல் சாதியினருக்குப் பணிவிடை செய்வதையே பெரும் கடமையாகக் கொண்டிருந்நதனர். ஆனால் இன்று இவர்களே தங்கள் வீடுகளில் மாடுகளை வைத்துப் பால் கறக்கும் அளவிற்கு முன்னேறியுள்ளனர். இதனைக் கண்டு மேல் சாதியினர் வயிற்றெரிச்சல் படும் தன்மையை ஆசிரியர் நாவலில் இயல்பாகச் சுட்டிக்காட்டுகிறார்.

### கலப்புத் திருமணம்

சமுதாயத்திலுள்ள ஏற்றத் தாழ்வுகளைப் போக்கக் காதல் ஒரு கருவியாகப் பயன்படுகிறது. இதற்கு நாவலில் குயவர் சாதியைச் சேர்ந்த நந்தவேலு சக்கிலியர் இனத்தைச் சேர்ந்த துளசி ஆகியோர் திருமணமும், நாயக்கர் மகள் ராஜலட்சுமி, சக்கிலிய இன நாச்சியப்பன் ஆகியோர் திருமணமும் சான்றாகும். மேலும் ஆசிரியர் கலப்புத் திருமணத்தோடு விதவைத் திருமணத்தையும் குறிப்பிடுகிறார்.

### தாழ்ந்த சாதியினரின் கல்வி கற்கும் ஆர்வம்

உயர் சாதியினரிடம் அடிமைப்பட்டுக் கிடந்ததற்குக் காரணம் கல்வி அறிவு இன்மையே என்பதைத் தாழ்ந்த சாதியினர் நன்கு உணர்ந்திருந்தனர். தங்களுடைய தலைமுறையையாவது இதிலிருந்து விடுவிக்க வேண்டும் என்று விரும்பினர். இம்மாற்றத்தை

“எத்தனையோ தூரம் எல்லாம் ஏமாந்து போயிட்டோம்.
அந்த ஏமாந்தவங்க நம்மளாட்ட
ஏமாளிப் பொழப்பு பொழைக்காமல் ரெண்டெழுத்தைப்
படிச்சு கருக்கடையா இருக்கட்டும்”
என்ற கூற்றின் வாயிலாக அறியலாம்.

### சமுதாய மாற்றத்தில் இயக்கங்களின் பங்கு

இன்றைய சூழலில் ஒவ்வொரு இனத்தாரும் தங்கள் முன்னேற்றத்திற்காகச் சங்கம் ஒன்றை ஏற்படுத்தி அதன் வாயிலாகப் பயன்பெறுகின்றனர். அவ்வகையில் நாவலில் வரும் சக்கிலியர் என்னும் இனத்தாரும் அம்பேத்கார் இளைஞர் சங்கம், தாழ்த்தப்பட்டோர் முன்னேற்றச் சங்கம் என்ற அமைப்புகளை ஏற்படுத்தி அதன் மூலம் தங்கள் இனத்தின் ஒற்றுமையை வலுப்படுத்தினர். இவ்வமைப்பின் செயல்பாட்டை இந்நாவலும் எடுத்துக் காட்டுகிறது.

### உயர்சாதியினர் மனமாற்றம்

கால மாற்றத்தில் உயர் சாதியினரும் தங்களின் கருத்துக்களில் மாற்றம் கொண்டவர்களாய்க் காணப்படுகின்றனர். இதனை,

“உடம்புக்கு முடியாமலும், உடம்பு ஒத்துழைக்காமலும்
இருக்கும் சில வீடுகளில் இந்தச் சக்கிலியப்
பெண்களையே கூட உணவு சமைக்கச்
சொல்லி விட்டு விட்டனர்”

என்ற நாவல் வரிகள் நமக்கு உணர்த்தும். மேலும் தாழ்ந்த சாதியினரின் விழாக்களை எள்ளி நகையாடியவர்கள் இன்று விருப்பமுடன் பார்ப்பவர்களாகக் காணப்படுகின்றனர் என்ற கருத்து சிந்தனைக்குரியது.

### முடிவுரை

புதினம் போன்ற இலக்கியப் படைப்பாசிரியர் அவர்கள் கண்ட கேட்ட துய்த்த நிகழ்ச்சிகளையும், காட்சிகளையுமே அவர்தம் படைப்புகளில் வெளிப்படுத்துகின்றனர். அவ்வகையில் கொங்குப் படைப்பாளியாகிய சூர்ய காந்தனும் தமது படைப்புகளைப் படைத்து வருகின்றார். இவரின் “விதைச்சோளம்” நாவல் சமுதாய மாற்றத்தை உள்ளடக்கமாகக் கொண்டது என்பதை மேற்கண்ட கருத்துக்கள் மூலம் அறிய முடிகின்றது. அத்தோடு இந்நாவல் முழுவதும் தலித்திய சிந்தனை விரவிக் காணப்படுவது நோக்கத்தக்கது.

# தலித் அழகியலில் ஆனந்தாயி

முனைவர் *பத்மாவதி விவேகானந்தன்*,பேருரையாளர்,
தமிழ்த்துறை மீனாட்சி மகளிர் கல்லூரி சென்னை

1989 இல் வெளிவந்த "பழையன கழிதலும்" நாவல் மூலம் சிறந்த நாவலாசிரியர்கள் வரிசையில் சேர்ந்த சிவகாமியின் "ஆனந்தாயி" 1992இல் வெளிவந்தது. முதல் நாவலான "பழையன கழிதலில்" தீண்டாமை கொடுமை, தலித் மக்கள் எளிதாகத் தாக்கப்படுதல், காவல்துறையினரின் போக்கு, பொய் வழக்குகள், குறைந்த கூலி, அடிமைகளாய் வாழும் அவலம், தலித் ஒற்றுமை போன்ற பிரச்சனைகள் ஆழமாக அலசப்பட்டுள்ளன. "ஆனந்தாயி" நாவலில் அதிகார வர்க்கமான ஆணின் அனைத்து சுயநலங்களும் அம்பலப்படுத்தப்பட்டுள்ளன. "ஆனந்தாயி"காவிய நாயகியைப் போல் முழுமையாகப் படைக்கப் பட்டிருக்கிறாள். நாவலின் மொழிநடை குறிப்பிட்ட மக்கள் பேசும் கிராமத்து நடையாக அமைத்து அழகு சேர்க்கின்றது.

நிலவுடைமை சமூகத்தில் தந்தை வழி சமூகம் உருவான காலத்தில் தனிச் சொத்துரிமையின் நீட்சியாகத் தோன்றிய பெண்ணடிமைத் தனத்தினால் பல்வேறு உரிமைகளை இழந்த பெண்கள் 18ஆம் நூற்றாண்டின் இறுதியிலிருந்து தமது உரிமைக்காகப் போராடத் துவங்கினர். அதன் வாயிலாகப் பல்வேறு உரிமைகளையும் பெற்று வருகின்றனர். இருந்த போதிலும் பெண்களின் பங்கு ஒரு சதவீதமாகவே இருந்து வருகிறது. குடும்ப நிறுவனம் பெண்களை அடிமைப்படுத்துவதில் பெரும்பங்கு வகிக்கின்றது. நகர்ப்புறப் பெண்களைப் போலவே கிராமப்புறப் பெண்களும் பல்வேறு துன்பங்களுக்கு ஆளாகி வருகின்றனர். ஏனைய சாதி ஆண்களால் மட்டுமல்லாத உயர்சாதி ஆண்களாலும் பல்வேறு துன்பங்களுக்கு ஆளாகின்றனர். தலித் பெண்களின் பிரச்சனைகளை மையாமாக வைத்து பாமாவின் "சங்கதி", "கருக்கு", சிவகாமியின் "பழையன கழிதலில்", "ஆனந்தாயி" அழகிய பெரிவனின் "தீட்டு" போன்ற நாவல்கள் வெளிப்படுத்தியுள்ளன.

தோழர் சுசிதாரு இந்தியாவில் பெரும்பான்மையான பெண்கள் தலித்துகளாகவும், பெரும்பாலான தலித்துகள் பெண்களாகவும் வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள் என்பதோடு "பெண்ணியமும் தலித்தியமும் ஒன்று மற்றொன்றின் நீட்சியாகவே உள்ளது"1 என்றும் கூறியுள்ளார். தலித் பெண்கள் சமத்துவமாக நடத்தப் படுவது போல் தோன்றினாலும் அவர்களுக்கும் பஞ்சாயத்தில் உட்காரும் உரிமை இல்லை. பாலியல் தொல்லைகள், குறைந்த கூலி போன்றவற்றால் துன்புறுகின்றனர். இதனை பாமா தனது கருக்கு நாவலிலும், சிவகாமி பழையன கழிதலிலும் நாவலிலும் சுட்டிக் காட்டியுள்ளனர்.

அதே நேரத்தில் தலித் பெண்களுக்குள்ள சுயமதிப்பு, கௌரவம், பெருமித உணர்வு போன்றவற்றையும் சுட்டிக் காட்டியுள்ளனர். ஆனந்தாயி நாவலில் வரும் பெரியண்ணனின் குடும்பத்தினர் பற்றிய சாதி குறிப்பிடப்படாவிட்டாலும் பாத்திரங்களின் மொழிநடை, வாழ்நிலை, உட்பூசல்கள் மூலம் அவர்கள் தலித் குடும்பத்தைச் சேர்ந்தவர்கள் என்பது சூசகமாகக் காட்டப்பட்டுள்ளது. தலித் அழகியல் என்பது தலித் கலகப் பண்பாட்டின் அடிப்படையிலேயே பார்க்கப்படுகிது. ஆனந்தாயி நாவலில் வரும் பெரியண்ணனின் தாயார் பூங்காவனம், லட்சுமி போன்றோர் ஒவ்வொரு விதத்திலும் தமது உரிமைகளை நிலை நாட்டுகின்றனர். மேலோட்டமாகப் பார்க்கும் போது "ஆனந்தாயி" மரபு ரீதியான பெண்ணாக, பொறுமையின் சிகரமாகத் தோன்றினாலும் குடும்பத்தின் உள்முகமாக ஒரு தாயாக அவள் நடத்தும் போராட்டங்கள் கர்வியத் தன்மை வாய்ந்தவையாக இருப்பதைக் காணமுடியும். (தலித் அழகியலின் ஒரு கூறான கலகப் பண்பாட்டினை இந்தப் பாத்திரப் படைப்புகளில் காணமுடியும்). அதே சமயம் பெண்களின் முக்கியமான பிரச்சனைகளைப் பற்றிய கேள்விகளை நாவல் முழுவதும் காண முடிகிறது.

ஏரிக்கரை ஓரமாக இருந்த பெயரில்லாத தெருவில் வசித்த வெள்ளையனின் பேரனான பெரியண்ணன் தன் காலத்தில் ரோடு போடுதல், பாலம் கட்டுதல் என்று ஒப்பந்தங்கள் எடுத்து தனது அந்தஸ்தை உயர்த்திக் கொள்கிறார். பணம் கையில் சேர்ந்தவுடன் மது, மாது என்று அலையும் பெரியண்ணன், லாட்ஜ் ஒன்றில் சந்திக்கும் லட்சுமியுடன் உறவு கொண்டு வாழ்கிறான். ஒரு கட்டத்தில் அவளை வீட்டிற்கே அழைத்து வந்து மாடியில் வைத்துக் கொள்கிறார். அம்மா, மனைவி, குழந்தைகள், ஊரார் என்று எதைப் பற்றியும் கவலைப்படாமல் அவளை வீட்டிலேயே வைத்து குடும்பம் நடத்துகிறான். லட்சுமி மூன்றுமுறை வீட்டை விட்டு ஓடிய போதிலும் அவளைத் தேடிப் பிடித்து அழைத்து வருகிறான். மனைவி, குழந்தைகளையும் லட்சுமியையும் கொத்தடிமைகளைக் காட்டிலும் கேவலமாக நடத்துகிறான். சுயநலத்துடன் ஆணின் பிரதிநிதியாக சர்வாதிகாரி போல் நடந்து கொள்கிறான். இப்படிப்பட்டச் சூழலில் ஆனந்தாயி குடும்பம் என்ற நிறுவனத்தில் எப்படி வாழ்கிறாள் என்பதையே நாவல் விவரிக்கிறது.

மனைவி இருக்கும் போதே இன்னொரு பெண்ணான லட்சுமியை வீட்டிலேயே கொண்டு வைத்துக் கொண்டு முறையற்ற வழிகளில் வாழ்க்கை நடத்தும் பெரியண்ணன் காமவெறிபிடித்த மனிதனாக இருக்கிறார். ஆனந்தாயி இதனைச் சகித்துக் கொண்டு வாழ்ந்த போதிலும் அவளது மாமியார் பாட்டி, "புருஷன் ஒன்னுதானா ஆயுசுக்கும்" என்று கேள்வி எழுப்புகிறாள். "சட்டியப் பிரிச்சுக்குடுறான்னு வேறயா போ" என்று அறிவுறுத்துகிறாள். பூங்காவனம் கர்ப்பவதியாவதற்குக் காரணமாயிருந்து ஓடிப்போன துரைசாமி குழந்தை பிறந்த பின் திரும்ப வருகிறான். தனியாக உழைத்து வாழும் அவளின் வீட்டிற்கு போகிறான். பூங்காவனமோ, "வெளியே போடா நாயே" எனத் துரத்துகிறாள். குழந்தையை வைத்து உறவு கொண்டாடுகின்றவனிடம் "நான் உனக்குப் பெக்கலேன்னு கூறுகிறாள். "வருவது வரட்டும்" என்னும் பூங்காவனத்தின் முடிவு இயல்பாக அதே நேரத்தில் அழுத்தமாகக் கூறப்பட்டுள்ளது. பெரியண்ணனின் காதல் பெண்ணாக வரும் லட்சுமி அவனது கொடுமைகளைத் தாங்க முடியாமல் பலமுறை ஓடிப் போகிறாள். "அன்பும், அனுசரனையும் இல்லாதவனிடம் நான் ஏன் இருக்க வேண்டும்" என்று கேள்வி எழுப்புகிறாள். ஒவ்வொரு முறை ஓடியபோதும் பெரியண்ணன் பெரும் செலவு செய்து மீண்டும் அழைத்து வந்து விடுகிறான். இறுதியில் பூச்சி மருந்து குடித்து அவனிடமிருந்து விடுதலையாகிறாள். பெரியண்ணனின் சட்ட திட்டங்களுக்கு வளைந்து கொடுத்து வாழ்ந்த போதிலும் ஆனந்தாயி சில சமயங்களில் சரியான கேள்விகளை எழுப்பவும் தயங்கவில்லை.

பெரியண்ணனிடம் தனக்குள்ள உரிமையை சுய விமரிசனம் செய்து பார்க்கும் ஆனந்தாயி, "பெற்றோர் மட்டும் உயிருடன் இருந்திருந்தால் எந்த காலத்திலோ பிள்ளைகளுடன் அங்கு போயிருக்கலாம். இப்போது கூட இவனை விட்டுப் பிரிந்தால் என்ன?" என்று நினைக்கிறாள். பிள்ளைகளின் பொருட்டு மனதை மாற்றிக் கொள்கிறாள். கொலையான அய்யாக்கண்ணுவின் மனைவிக்குச் சோறுபோட்டுக் கொடுத்ததற்காகக் கேள்விகளை எழுப்பிச் சண்டைபோட்டு பெரியண்ணன் தன்னுடைய ஆளுமையை உரிமையை நிலைநாட்டுகின்றான். அப்போது ஆனந்தாயி "நானு வயல்ல பாடுபட்டேனே; வீட்ல தினமும் வடிச்சுக் கொட்றேனே; அதுக்கெல்லாம் கூலி கணக்குப் போட்டுக் குடுத்துடு" எனக் கேட்கிறாள். குடும்பத்தில் பெண்ணின் உழைப்பிற்கு ஊதியம் எதுவும் இல்லை. அந்த உழைப்பின் பயனைக் குறிப்பிட்ட அந்த குடும்பத்தினரே அனுபவிப்பதால் கேள்விகள் எதுவும் கேட்க முடியாது. ஆதியில் பெண்கள் தனது இழந்த உரிமையைக் கேட்பதுபோல ஆனந்தாயி தனது உரிமையைக் கேட்கிறாள்.

கங்காணியின் மைத்துனி நீலவேணி தனது ஆசிரியர்களாலேயே பாலியல் வன்முறைக்கு ஆளாகிறாள். தொடரும் வதந்திகளால் அவளுக்கு முப்பது வயதுதாண்டியும் திருமணம் ஆகாமல் இருக்கிறது. தன்னைப் பற்றிய குற்றவுணர்வில் அழிந்து, ஊரார் தன்னைப் பற்றிப் பேசிக் கொள்வதை நினைத்து வருந்தியழும் அதே நேரம் மாணிக்கத்தைப் பற்றி நினைத்துப் பார்க்கிறாள். ஆணாக இருக்கும்

காரணத்தாலேயே மாணிக்கத்தின் பாலுறவு செய்திகள் கண்டிக்கப்படாததோடு அவனை "மைனர்" என்று செல்லமாக ஊர்மக்கள் அழைப்பதை நினைத்துப் பார்க்கிறாள்.

பெண், ஆணின் நிழல் கண்டாலே ஒதுங்க வேண்டும். வாய்திறந்து எதிர்ச்சொல் சொல்லக் கூடாது, கிழித்த கோட்டைத் தாண்டாமல், சன்னலில் வந்து நிற்காமல் பெண்ணாய் பதவிசாய் வீட்டின் மூலையில் இருந்தல் போதும் என்பது போன்ற கருத்தியல்கள் நுட்பமாக கேலிக்குள்ளாகியிருப்பதைக் காணமுடிகிறது.

பாலியல் ரீதியான உணர்வுகள் பெண்களுக்கு பெரும் துன்பமாக முடிகிறது. உறவு கருவுறுதலில் முடியும் போது சமூகத்தை எதிர்கொள்ள வேண்டிய சூழல் பெண்ணுக்கு மட்டுமே ஏற்படுகிறது. கிராமப்புறங்களில் இன்றும் பயிற்சியில்லாத பெண்களிடம் கருக்கலைப்பு செய்து கொண்டு உயிர்துறக்கும் பெண்கள் இருக்கிறார்கள். பார்வதியின் மகள் படிக்கப் போகுமிடத்தில் காதல் வயப்பட்டு கருவுற்றபோது, உருக்கங்குச்சியில் கருக்கலைப்பு செய்யப்பட்டு இறந்து போகிறாள். ஆனந்தாயியும் ஒருமுறை வஹிதா என்னும் கருக்கலைக்கும் பெண்ணிடம் சென்று பரிதவிக்கப்படுகிறாள். கள்ள உறவுகளால் தவறான கருக்கலைப்பிற்குட்படுவதாலும், சரியான மருத்துவர்களிடம் சென்றால் பணச்செலவு அதிகமாகும் என்பதாலும் ஏழைப் பெண்கள் பலர் இத்துயரத்துக்கு ஆளாக நேரிடுகிறது.

இந்தியாவில் இந்துமதம் ஆதிக்க அதிகாரங்களைத் தக்க வைத்துக் கொள்ள செய்த சூழ்ச்சிகளில் வருணாஸ்ருமம் மிகவும் முக்கியமானது. உலகின் வேறு எந்த நாட்டிலும் இல்லத புதுமையாக சாதி என்னும் பிரிவினை தோன்றுவதில் வருணதருமம் முக்கிய பங்கு வகித்தது. நால்வகையாக மக்கள் பிரிக்கப்பட்டனர். சாதிக்கொரு நீதி வகுக்கப்பட்டது. நால்வருணத்திற்கும் கீழாக பெண்கள் வைக்கப்பட்டனர். அவர்களுக்கும் கீழாக தலித் பெண்கள் உள்ளனர். தந்தை வழி சமூகத்தில் பெண்கள் பெரும் கொடுமைகளுக்காளாயினர். தலித் பெண்களோ பெண் என்ற அடிப்படையிலும், தலித் பெண் என்ற அடிப்படையிலும் ரெட்டை கொடுமைகளுக்காளாயினர். 20ஆம் நூற்றாண்டில் பெண்கள் பல உரிமைகளைப் பெற்ற போதிலும் அது முற்று பெறாத ஒன்றாகவே இருக்கிறது. பெண்களின் சொத்துரிமைப் பங்கு ஒரு சதவீதம் எனில் தலித் பெண்களின் சொத்துரிமையைப் பற்றிக் கூற வேண்டியதில்லை.

பெண்ணிய நோக்கில் ஆனந்தாயி பல்வேறு பிரச்சனைகளையும் விமரிசனத்திற்குள்ளாக்கி இருக்கிறது. முக்கியமாகக் குடும்பச் சூழலில் பெண் அடிக்கப்பட்டும், உதைக்கப்பட்டும் எத்தகைய பொருளாதார சுய உரிமையும் இன்றி ஒடுக்கப்படுவது காட்டப்பட்டுள்ளது. தந்தையாக, கணவனாக பெரியண்ணனின் சுரண்டல் குடும்ப வன்முறையாக, வலிமையுடன் கோலூன்றி இருப்பதும், ஆண் சமூகத்தின் குறியீடாகவும் அவர் படைக்கப்பட்டிருக்கிறார். தலித் கலகப் பண்பாட்டின் குறியீடாகப் பூங்காவனமும் பெரியண்ணனின் தாயாரும் விளங்குகின்றனர். முக்கியப் பெண் பாத்திரத்தின் பெயரைத் தலைப்பாகத் தந்திருப்பதின் மூலம் சிவகாமி பெண்ணின் தலையாய இடத்தை உறுதி செய்திருக்கிறார் என்ற தோன்றுகிறது.

## அடிக்குறிப்புகள்

1. நிறப்பிரிகை, நவம்பர், 1997 சுசிதாருவுடனான உரையாடல் ப. 77

## "கோவேறு கழுதைகள்" - நாவலில் தலித்தியம்

*நா. பரமசிவம்,* தமிழியல் துறை, ஆய்வியல் நிறைஞர்
பாரதியார் பல்கலைக் கழகம்,கோவை - 641 046.

ஒவ்வொரு நூற்றாண்டிற்குத் தக்கவாறு உலகமானது அறிவியலின் துணைகொண்டு வெகுவேகமாக வளர்ந்து, இன்றைய மக்களின் நவநாகரீக வளர்ச்சிக்கு அடிகோலினாலும் கூட, தனக்கென பாரம்பரியம் பண்பாட்டைக் காட்டிக்காத்து வரும் களமாக நம்நாடு உள்ளது. அவ்வாறு மக்களின் நாகரீகத்திற்கும், பண்பாட்டிற்கும் தீங்கு ஏற்படா வண்ணம் அக்காலத்தில் உள்ளோர் தொழில் அடிப்படையில் சாதிகளைப் பிரித்து செவ்வனே தத்தம் பண்பாட்டைக் காத்துவந்தனர். காலம் செல்லச் செல்ல அதிகாரம், ஆதிக்கம் செய்ய நினைத்தவர்கள் எதிர்த் தரப்பினரை நிலமற்றவர்களாய் ஆயுதமற்றவர்களாய் ஆக்கினர். மேலும், அடிமைகளாகவும் தீண்டத்தகாத தலித்தியர்களாகவும் ஆக்கப்பட்டதற்குக் காரணம் நிலமற்றவர்களாய் இருந்ததுதான். இதையே, நிலம்தான் எதையும் தீர்மானிக்கும் காரணியாக இரக்கிறது என்பது மார்சியம் வெளிப்படுத்தும் உண்மையாகும். எனவேதான் நிலமற்றவர்ளை "சேரி" என்னும் ஒதுக்குப்புற வாழ்வினை மேற்கொள்ள வேண்டிய அவலநிலைக்குத் தள்ளப்பட்டனர். எனவே, இமையத்தின் கோவேறு கழுதைகள் என்ற நாவலில் உள்ள தலித்தியம் பற்றியும், ஒரு தாழ்த்தப்பட்ட சமூகம் தன்னை அண்டிப் பிழைப்பினை நடத்தும் மற்றொரு தாழ்ந்த சமூகத்தை அடிமைப்படுத்தும் நிலையினையும் அவர்களின் அவலநிலையினையும் இந்நாவலின் வாயிலாகக் காணலாம்.

### கோவேறு கழுதைகள் - ஆரோக்கியம் :

இந்நாவல் முழுவதும் வண்ணார்களின் அவல நிலையைக் கூறும் களமாகப் படைக்கப்பட்டிருக்கிறது. இதிலும் இமையம் படைத்துள்ள கதாபாத்திரங்களில ஆரோக்கியம் என்ற பெண் பாத்திரமே முதன்மை கொடுத்து படைக்கப்பட்டிருப்பதைக் காணமுடிகின்றது. சாதாரணமாகவே ஆண், பெண் என்ற இரு பிரிவுகளில் ஆண்களைவிட பெண்களே மிக்க துன்பமும், வேதனையும் அடைவதை நாவல்கள் சித்தரிக்கின்றன. அதிலும் தலித்திய நாவலில் அப்பெண்கள் அடையும் துன்பநிலையைச் சொல்லிமாளாது. அப்பெண்கள் படும் அவலநிலைக்கு எடுத்துக் காட்டாகவே இப்பாத்திரம் படைக்கப்பட்டிருப்பதைக் காணலாம். தனக்கென காடு காணி இல்லாது, அடுத்த வேளைச் சோற்றுக்கு என்ன செய்வதென்று தெரியாது. அடுத்தவர்களை அண்டிவாழும் அவல வாழ்க்கையை இந்நாவலில் காணலாம். உதாரணமாக, அடுத்தவர்கள் வீட்டில் படியரிசி கேட்கப் போகும்போது,

"சாமியோவ், வண்ணாத்தி வந்திருக்கங்கோ"
"வண்ணாத்தி சாமி"
"படிங்க சாமி"
"வண்ணாத்தி மவ ஆரக்கியங்கோ"

என்று அடுத்தவர்களிடம் இரக்கும் பொழுது தன்னையும் தன் அவல நிலையையும் கூறி உள்ளதைக் காணமுடிகின்றது. ஊர்ப்பொங்கலில் ஆடு, மாடு வெட்டும் போது அவற்றின் தலையை வண்ணார்களான இவர்களுக்கு கொடுக்க வேண்டும் என்ற முறையைக் கூறுகின்றபோது மேல்சாதிக் காரர்களால் இவள் எவ்வாறு வசைபாடப்படுகிறாள் என்பதை, "அடி செருப்பாலன்னான், வண்ணார நாய, உனக்கு நெஞ்சுல எம்புட்டுத் திமிரு இருந்தா, இம்புட்டுப் பேரு மத்தியில எடுத்துப் பேசுவ, வண்ணார நாய" என்றும்,

"அடி செருப்பால, வாங்கித் தின்ன நாய! பல்லப் புட்டுப் புடுவேன் புட்டு"

"யாரடிவ, லாச் சட்டம் பேசுறவ? உங்கப்பன் வீட்டுச் சொத்தா?என்ற வசைகளையும்,"புள்ளென்னு பிண்டமாத் தரெயிலெ விழுந்ததிலிருந்து நாளதுதேதி வரெக்கும் எனக்கு வவுறே சாமியாப் போச்சி"

"கயிதெமாரி பொதிபொதியாத் துணியத் சுமந்தன்"
"ராவு, பகலு சட்டியத் தூக்கிட்டு ஊடு ஊடு நின்னன்"
"நான் பட்ட அவச்சொல்லும் இழிசொல்லும்..."
"எல்லாம் வவுத்துக்குத்தான்" என்று தனர் உண்டு உயிர் வளர்க்க தான் அவச்சொல்லும், தன் வாழ்வும் பற்றி எண்ணி தன் சாதியைக் குறைசொல்லி வாழும் தலித்திய வாழ்வை இவள் மூலம் உணரலாம்.

### அவல நிலை :

ஒரு தாழ்ந்த சாதியில் பிறந்த குற்றத்தைத் தவிர மற்ற எந்தத் தவறும் செய்யாது அப்பாவியாய் உலவவரும் பாத்திரம் மேரி என்ற பாத்திரமாகும். ஒரு தாழ்ந்த குலத்தில் பிறந்து உயர்சாதியினரால் பிழைப்பு

நடத்தும் வாழ்வைக் கொண்ட இவர்களை, தன்னை அண்டிப் பிழைப்பவர்கள் என எண்ணாது இவளை தன்னுடைய இச்சைக்கு அழைக்கின்றான் கொத்துக்கார சடையன். தான் எவ்வளவு கூறியும் செவிகொடாது வரும் சடையனிடம்

"வாண்டாம் சாமி"/"தம்பு சாமி"

"நல்லதில்ல சாமி"/"மானம் மருவாத பூடும் சாமி"

"தெருவில தலகாட்ட முடியாது சாமி"/"குடும்பம் அயிஞ்சி பூடும் சாமி"

"வண்ணாத்தி சாமி"/"வாக்கப்படப் போறவ சாமி"

"உசுரப் போக்கிப்பேன் சாமி"/என்று எவ்வளவு கெஞ்சியும் தன் வஞ்சத்தைத் தீர்த்துக் கொண்டான். மேரி "சத்தம் போட எண்ணினாலும் ஊரில் சடையனை ஒன்றும் செய்ய முடியாது". இவன் நினைத்தால் என்ன வேண்டுமானாலும் செய்யலாம். எனவே, இவர்கள் சரியில்லை என வேறு வண்ணானை போட்டால் தங்களுடைய பிழைப்பு என்னாவது? என எண்ணி தன் பிழைப்பை நினைத்து நொந்து கொள்கின்றாள்.

### வர்க்கப்பிரிவில் ஏற்றத் தாழ்வு :

வர்க்கப் பிரிவின் காரணமாக தாழ்ந்த சாதிக்காரன் வயதில் எவ்வளவு பெரியவனாக இருந்தாலும் அவனை வாடா, போடா என ஒருமையில் விளிப்பதைக் காணலாம். இந்நாவலில் இராமசாமி தாய் இறந்து விடுகிறாள். பாடை கட்டுவதற்காக சவுரியை இராமசாமி அழைக்கும் போது,

"எழுந்திருடா முண்டப் பயலே

முண்டப்பயல, தூக்கம் கோவலியா? ஒரு கொரல்ல "ஓனு" எழுந்திருக்க வேண்டாமா?"

"மனசுல கவல இருந்தா மனுசனுக்குத் தூக்கம் வருமாடா? முண்டப்பயல" என்று கூறி அழைத்துச் செல்கிறான். பின்னர் அவன் தாயிற்கு பாடை செய்து கொண்டிருந்ததால் நேரம் கடந்து போக பசிக்கு உணவு உண்ணக்கண்ட இராமசாமி, "வேல ஆவட்டுமடா, ஆவட்டும். முண்டப்பயல, சோறு தண்ணி குடிக்கிற நேரமாடா இது? "பாடெ ரடியாடா முண்டப்பயல" என்று வசை பாடுகிறார். மனிதனை மனிதன் என்று பார்க்காது, தனக்குக் கீழ் உள்ள தலித்துகளை ஒரு விலங்கு நிலையில் வைத்துப் பார்ப்பதைக் காணமுடிகிறது.

### தலித்துக்களே அடிமைப்படுத்திக் கொள்ளல்

அழகன், கருப்பாயி இருவரும் கணவன், மனைவி. இவர்கள் பறையர் இனத்தைச் சார்ந்தவர்கள். கருப்பாயி கவுண்டர் வீட்டில் வேலை செய்யும் போது அவருக்கும் இவளுக்கும் அந்தத் தொடர்பு ஏற்பட்டு விட ஓடைக்காட்டையும், களத்தையும் எழுதிவாங்கிக் கொண்டாள். அழகனும், கருப்பாயும் கவுண்டரிடம் அடிமைப் பறையனாக வேலை செய்தவர்கள். அழகன் களத்தில் ஆரோக்கியம், சவுரி இருவரும் களம் தூற்றி முடித்து மூன்ற முறம் அள்ளுவது வழக்கம். ஆனால் இரண்டு முறம் அள்ளச் சொல்கிறான் அழகன்,

"ஊர்ல புது வயக்கத்த உண்டு பண்ணாதீங்க, மூனு மொறமாப் போடுங்க சாமீ" என்று ஆரோக்கியம் கேட்டபோது,

"இனிமெ ரண்டுதான். இல்லாட்டி அடுத்த வருஷத்திலே இருந்து நீ வரவேணாம்"

"நாங்க ஒங்களன்டி ஊழியஞ் செஞ்சி பொயப்ப நடத்தறவுங்க சாமி"

"பொட்டச்சி நீ பேசாத"

"உங்களாட்டம் நாலு பெரியவககிட்டச் சொல்லுங்களன்"

"ஏ, வண்ணாரக் கயித, நாயம் பொளக்க வந்துட்டயா, நாயே"

"சாமியோவ், நாங்க சின்னக்குடிக்காரங்க" /"வாச்சட்டம் பேசறவளுக்கு இனிமே இங்க வேல கெடையாது" என்று ஆரோக்கியத்திடம் கூறுகின்றான். இதில் பறையனான அழகன் கவுண்டர் சாதியிலே அடிமை வேலை பார்த்தவன். ஆனால் கவுண்டர் நிலத்தை அபகரித்துக்கொண்டு பிழைப்பு நடத்திய இவன். தான் அடிமை வேலை பார்த்ததை முற்றிலும் மறந்துவிட்டு தன்னிடம் அடிமைவேலை செய்யும் இவ்வண்ணார்களை அடிமைப்படுதத்துவதைக் காணலாம். மேலும்,

"உங்க பற வண்ணாத்தி சாமி"/"பற வண்ணாத்தி ஆரோக்கியம் தான் எசமாங்க"

"உங்க பறையன் வூட்டு வண்ணாத்தி மவள மறந்திடாதீங்க" /பற வண்ணாத்தி தான் சாமீயோவ்"

என்ற ஆரோக்கியத்தின் கூற்றின் மூலம் வண்ணார்கள் பறையனிடம் அடிமை வேலை செய்ததை தலித்தியத்தின் மூலம் உணரலாம். முற்றாக, நாகரீகம் எவ்வளவு தான் வளர்ச்சி கொண்டாலும், மனிதனை மனிதன் அடிமைப்படுத்தும் படிநிலையை இன்றளவும் மாற்றவில்லை என்பதற்கு இமையத்தின் "கோவேறு கழுதைகள்" ஒரு சிறந்த சான்றாகும். தான் அடிமைப்பட்டு வாழ்ந்து பல இன்னல்களைச் சந்தித்திருந்தாலும் கூட, அதை முற்றிலும் மறந்து தன்னைச் சரணடையும் கீழ்சாதியை அடிமைப்படுத்துகின்ற நிலையை இன்றளவும் நடைமுறைப்படுத்தி வருகின்றது என்பதே நிதர்சன உண்மையாகும்.

# சமூக நிகழ்வுகளும் தலித் புதினப் பதிவுகளும்

*இரா. பழனிச்சாமி* முனைவர் பட்ட ஆய்வாளர், இக்கால இலக்கியத்துறை, தமிழியல் புலம்,
மதுரை காமராசர் பல்கலைக் கழகம், மதுரை - 21.

எந்த ஒன்றும் சூன்யத்திலிருந்து தோன்றுவதில்லை. ஒன்று தோன்றுவதற்கும், மற்றொன்றாவதற்கும் தொடர்ச்சியாக நடைபெறும் மாற்றங்களே காரணங்களாகின்றன. மனிதர்களின் தேவையே புதிய கண்டுபிடிப்புகளுக்குக் களமமைத்துக் கொடுக்கின்றன. இலக்கியக்களம் என்பதும் அதனுள் எழுந்துவரும் மாற்றங்களும் மக்களின் மனநிலையைப் பொறுத்தே தோற்றமும், வளர்ச்சியும் பெறுகின்றன. இலக்கியங்கள் சமூகத்தைக்காட்டும் காலக் கண்ணாடிகள் எனக்கூறுவது வெற்றுக் கருத்தல்ல. எந்தவொரு இலக்கியமும் சமூகத்தின் நிகழ்வுகளையே தமது படைப்பின் அடிச்சரடாகக் கொண்டுள்ளன. அவ்விலக்கியங்களில் எழும் மாற்றமென்பது மாறிவரும் மக்களின் மனநிலையைக் கருத்தில் கொண்டனவாக அமைந்துள்ளன. இதனைத் தமிழ்ப் புதின வரலாற்றின் நெடுகிலும் காணமுடியும். அத்தகைய சமூக மாற்றங்களின் வழியேதான் தற்பொழுது பல புதிய சிந்தனைகளைக் கொண்டதாகத் தமிழிலக்கியம் பன்முகம் காட்டி வருகிறது. அவற்றுள் தலித் புதினப் போக்குகளுக்கு எவ்வாறு சமூக நிகழ்வுகளும், மாற்றங்களும் காரணமாகியுள்ளன என்பதை விளக்கும் முகமாக இக்கட்டுரை அமைகிறது.

சமூகம் ஒவ்வொரு காலத்திலும் தம்மை நவீனப் படுத்திய வண்ணமே உள்ளது. காலத்திற்கேற்ப மாறாத மனிதனை மற்றவர்கள் கிஞ்சித்தும் மதிப்பதில்லை. மாற்றம் என்ற ஒன்றுதான் மாறாதது எனக்கூறுவது மாற்றத்தின் முக்கியத்துவத்தை எடுத்துரைப்பதாக அமைந்துள்ளது. தமிழ்ப்புதினம் 1879-ஆம் ஆண்டில் தோன்றிய பிரதாபமுதலியார் சரித்திரம் தொடங்கி இன்றுவரை பல்வேறு மாற்றங்களை உருவத்தாலும், உள்ளடக்கத்தாலும் பெற்று வளர்ந்து வந்துள்ளது. முந்தைய புதினங்கள் அப்பொழுது பெரும்பான்மையாக இருந்த பெண் அடக்குமுறைகளை எதிர்த்தும், பெண் கல்விக்கான முக்கியத்துவத்தை விளக்கும் வகையிலும் அறிவுறுத்துவதாக அமைந்தன. அதன்பிறகு விடுதலையின் அவசியம் உணரப்பட்ட காலத்தில் புதினங்களின் புதினங்களின் கதைக் கருவாக விடுதலைச் சிந்தனைகள் அமைந்தன.

சுதந்திரத்திற்கும் பிற்பாடே தலித் மக்களைப் பற்றித் தனியான இலக்கியப் பதிவுகள் புதினங்களைப் பொறுத்தவரை வந்திருக்கின்றன. டி.செல்வராசு எழுதிய மலரும் சருகும் என்ற புதினம் முதல் தமிழ் தலித் புதினமாகக் குறிப்பிடப்படுகிறது. ஆனால் 1979-ல் வெளிவந்த பூமணியின் பிறகு என்ற புதினத்தில்தான் தலித் இலக்கியத்தின் அனைத்து உட்கூறுகளும் திறம்பட கையாளப்பட்டுள்ளதைக் காணமுடிகிறது. நடப்பியல் (Realism) சார்ந்த தன்மைகள் புதினங்களில் முன்னமே பேசப்பட்டாலும் தலித் இலக்கியம் என்று தொண்ணூறுகளில் பேசப்பட்ட பிறகுதான் மொழிப் பயன்பாட்டில் மக்களின் வழக்கிலிருக்கும் மொழியை அதன் வீரியம் குறையாமல் பதிவு செய்த தன்மை நடைமுறைப்படுத்தப்பட்டது. இதற்குக் காரணமாக அமைந்தவை பின் நவீனத்துவம் போன்ற மேலை நாட்டுக் கோட்பாடுகளும், அம்பேத்கார் நூற்றாண்டு விழாவின் பயனாகத் தோற்றுவிக்கப்பட்ட சில அமைப்புகளுமாகும். மேலே கண்டவற்றுடன் இக்கோட்பாடுகளையும், இயக்கங்களையும் இணைத்துப் பார்த்தால் சமூக நிகழ்வுகள் எப்படி ஒரு இலக்கியத்தின் தோற்றத்திற்குக் காரணமாக அமைந்துள்ளன என்பதைத் தெளிவாக உணரலாம்.

தமிழ் தலித் இலக்கியத்தின் தோற்றத்திற்கு இதழ்கள் குறிப்பிடத்தக்க பங்களிப்பைச் செய்துள்ளன. நிறப்பிரிகை போன்ற இதழ்கள் தொடர்ந்து தலித் இலக்கியம் என்பதற்கான விவாதத்தை ஏற்படுத்தி அதனைப் பற்றிய புரிதல்களை மக்களிடம் கொண்டு போய்ச் சேர்த்துள்ளன. பல புதிய இதழ்களின் தோற்றமும்கூடத் தலித் இலக்கியத்தின் வளர்ச்சிக்குக் காரணமாக அமைந்துள்ளன. அவற்றுள் கோடாங்கி, தாய்மண், தலித் முரசு போன்ற தலித் சமூக இதழ்களும், காலச்சுவடு, வல்லினம், தீம்தரிகிட, நாவாவின் ஆராய்ச்சி போன்ற இலக்கிய இதழ்களும் தத்தமது பங்களிப்பைச் செய்துள்ளன. 1972-ல் பம்பாயில் ஒடுக்கப்பட்ட சிறுத்தைகள் (Dalit Panthars) என்ற

இயக்கம் தோற்றுவிக்கப்பட்ட பிறகுதான் வடமாநிங்களில் தலித் மக்களின் விழிப்புணர்வும், போராட்டக் குணமும் அடையாளப் படுத்தப்பட்டு இலக்கியத்திலும் தாக்கத்தை ஏற்படுத்தியது. அதே போன்ற நிலை தமிழகத்தில் தொண்ணூறுகளுக்குப் பிறகு தோற்றுவிக்கப்பட்ட அரசியல் இயக்கங்களான புதிய தமிழகம், விடுதலைச் சிறுத்தைகள், புரட்சி பாரதம் என்பவை அடிமைப்பட்டுக் கிடந்த மக்களை விழிப்புணர்வு அடையச் செய்தன. விழிப்புணர்வு அடைந்த சமூகம் பல புதிய தேடல்களைத் தேடுவது இயல்பே. அறிவுத்தாகம் ஊட்டப்படும்பொழுது மனிதனின் தேவையைத் தீர்க்க இலக்கியங்கள் படைக்கப் படுவதும் அவசியமாகவே அமைந்துவிடுகிறது. இவ்வகையில்தான் தலித் இலக்கியங்கள் தமிழில் தோற்றம் கொள்ள ஆரம்பித்தன எனக் கருத இடம் உண்டு.

தமிழகத்தில் தலித் இலக்கியம் என்று பேசப்படுவதற்கு முன்பு தலித் பற்றிய இலக்கியங்களைத் தந்தவர் சிவகாமி. இவரின் ஆனந்தாயி , பழையன கழிதலும் , குறுக்கு வெட்டு , ப.க.ஆ.கு . என்பவை சிறப்பாகப் பேசப்பட்டவை. இதில் பழையன கழிதலும் எனும் புதினம் தலித் அரசியல் தலைமையின் பலவீனத்தைப் பட்டவர்த்தனமாக்குகிறது. பிற்பகுதியில் தலித் பெண்ணிய எழுச்சியைச் சுட்டிக்காட்டுகிறது. இப்புதினம் வரும்பொழுது தலித் இலக்கியச் சிந்தனையோ, பெண்ணியச் சிந்தனையோ தமிழில் அதிகம் பேசப்படாத தன்மையைக் குறிப்பட்டுச் சொல்ல வேண்டும்.

தமிழில் தலித் இலக்கியம் என்று தனியாகப் பேச வேண்டியதின் சமூகத் தேவைகள் உணரப்பட்டபோது பாமாவால் எழுதப்பட்டு வெளிவந்த கருக்கு என்னும் தன் வரலாற்றுப் புதினம் மிகுந்த கவனத்தைப் பெற்றது. இதில் கவனிக்கப்பட வேண்டிய முக்கியமான விஷயம் தலித் இலக்கியம் தோன்றியுள்ள மொழிகளில் பெரும்பாலும் தன் வரலாற்றுப் புதினங்களே முதன் முதலாக வெளிவந்துள்ளன. இது கூட ஏதோ ஒரு தேவையை நினைவு படுத்துவதாகக் கொள்ளலாம். அத்தேவை என்பது தாழ்த்தப்பட்டவன் என்ற உணர்வுகள் உள்ளத்துள் அரித்துக் கொண்டிருந்த தன்மையானது இவ்விலக்கியம் பற்றிப் பேச ஆரம்பித்தவுடன் வெளிப்பட்டிருக்கலாம் எனக் கருத வாய்ப்பு இருக்கிறது. எனவேதான் எழுத்தாளர்கள் முதலில் தமது எண்ணங்களைப் பற்றித் தமது வாழ்வியலைப் பற்றி முதலில் எழுதத் துணிந்தனர் எனக் கொள்ளலாம்.

பெண்ணியச் சிந்தனைகள் மேலைநாடுகளில் முன்பே பேசப்பட்டு வந்தாலும் கூட தொண்ணூறுகளுக்குப் பிறகே தமிழில் தீவிரமான தாக்கத்தை ஏற்படுத்தியது. பெண் எழுத்து, பெண் மொழி, பெண்ணியம் என்று பொது நோக்கில் பேசப்பட்ட தன்மை எவ்வாறு மேலை நாடுகளில் நிறத்தை மையம் கொண்டதாகப் பிரிந்ததோ, அதனைப்போன்று தமிழ் இலக்கியங்களிலும் சாதி அடிப்படையில் பிரிந்தது எனக் கொள்ளலாம். இங்கு சாதிவாரியான கொடுமைகளும், பிரிவுகளும் நடைமுறையில் இருப்பதால் பெண்ணியம் என்பதையும் தாண்டித் தலித் பெண்ணியம் என்றளவில் தனித்துப் பேசுவதற்கான அவசியமும் ஏற்பட்டது. அனைத்துச் சாதிப் பெண்களுக்கும் இழைக்கப்படும் அடக்குமுறைகளுடன் கூடுதலாக சில அடக்குமுறைகளைத் தலித் பெண்கள் பெறுவதால் இதனைத் தவிர்க்க முடியவில்லை. இதற்கு சமூகத்தில் ஏற்பட்டுள்ள பிளவுகளும், வேற்றுமைப்படுத்தப்பட்டு தனிமைப் படுத்தப்பட்ட நிகழ்வுகளுமே காரணங்களாக அமைகின்றன. இச்சிந்தனையையும் முன்னெடுத்துப் புதினம் படைத்தவராக பாமாவே உள்ளார். அவரின் சங்கதி என்னும் புதினம் தலித் பெண்ணியம் எது? அது என்ன தேவையுடன் செயல்படப் போகிறது என்பதை தெரிவிக்கும் வகையில் அமைந்துள்ளது.

பெரும்பாலான தலித் புதினங்கள் கிறித்துவ இறையியலை மையம் கொண்டதாக அமைந்துள்ளன. இந்து மதத்தில் கடைப்பிடிக்கப்படும் வேற்றுமைகளுக்குத் தீர்வு ஏற்படும் எனும் நோக்கில் கிறித்துவ மதத்திற்கு மதம் மாறியவர்கள் ஏமாற்றத்திற்குள்ளாயினர். அங்கும் சாதியம் தமது கோரமுகத்தைக் காட்டி அவர்களைப் பயமுறுத்தியதால் அதிருப்திக்கு உள்ளான மக்கள் பல்வேறு சபைகளாகப் பிரிந்தனர். தலித் மக்கள் ரோமன் கத்தோலிக்க (R.C) சபையில்தான் பெரும்பான்மையாக உள்ளனர். இங்கு எழுபத்து ஐந்து சதவிகிதம் பேர் தலித் மக்கள் இருந்தும் இவர்களை மேலாதிக்கம் செய்யும் ஆயர்களாகவும், பிஷப்புகளாகவும் இருபத்து ஐந்து சதவிகிதம் உள்ள மேல்சாதிக் கிறித்துவர்களே உள்ளனர். இந்நிலையை எதிர்த்து மக்கள் செய்த கிளர்ச்சியின் பயனாக பல நன்மைகள் ஏற்பட்டுள்ளன. சாதிவாரியாகப் பிரித்திருந்த தேவாலயம் திருநெல்வேலி மாவட்டம் வடக்கன்

குளத்தில் மாற்றியமைக்கப்பட்டது இதற்கு நல்ல சான்று. பிற சாதிப் பங்குக் குருக்களை வேண்டாமென தலித் மக்கள் விரட்டிய சம்பவமும் தமிழகத்தில் நடந்துள்ளது. இவற்றையெல்லாம் உட்செரித்த ஒரு புதினமாக மாற்குவின் யாத்திரை அமைந்துள்ளது. இப்புதினம் எழ மேலேகண்ட சமூக நிகழ்வுகளே காரணங்களாக அமைந்தன என்பது குறிப்பிடத்தக்கது. கிறித்துவமதத்தில் உள்ள வேற்றுமைகளைப் படம் பிடித்துக் காட்டுவதாகப் பாமாவின் புதினங்களும், ராஜ்கௌதமனின் சிலுவைராஜ் சரித்திரமும் உள்ளது நினைவிற் கொள்ளத் தக்கது.

எந்தவொரு போராட்டமும் ஏதாவது ஒரு கொள்கையின்றி வெற்றி பெற்றதாகச் சரித்திரம் கிடையாது. அவ்வகையில் தலித் மக்களின் வாழ்க்கை முன்னேற்றத்திற்கு உழைக்கக் கூடிய கட்சியாக கம்யூனிஸ்ட் கட்சிகள் இருந்துள்ளன. தஞ்சைப் பகுதிகளில் இக்கட்சியினர் உழைக்கும் தலித் மக்களுக்குச் சமூக விழிப்புணர்வை ஏற்படுத்தினர். இங்குள்ள உடைமைச் சாதியினர் கம்யூனிஸ்ட் கட்சியைத் தலித் கட்சி என்றே அழைத்து வந்தனர் என்பதன் மூலம்அக்கட்சியின் செயல்பாட்டை அறியமுடிகிறது. இந்நிலையை அடிப்படையாக வைத்து கம்யூனிஸ்ட் சித்தாந்தத்துடன் சோலை சுந்தரபெருமாள் செந்நெல், தப்பாட்டம் என்ற இரு தலித் புதினங்களைத் தந்துள்ளார். செந்நெல், இந்திரா பார்த்தசாரதியின் குருதிபுனலின் கருத்தினை அடியோடு மாற்றுகிறது. இங்கு ஒரே சம்பவமே (கீழ வெண்மணி) காலத்திற்கேற்ற வகையில் மாறுபட்டுள்ளது. குருதிப்புனல் 1975-இல் வெளியான புதினம். செந்நெல் தலித் இலக்கியம் எனப் பேசப்பட்ட பிறகு வெளியான புதினம். இரண்டும் கதை கூறும் தன்மையில் வேறுபடுகின்றன. முந்தையது ஆண்மையற்றவன் என உளவியல் காரணம் கூற, பின்னது சாதியின் உக்கிரம்தான் என வெளிப்படுத்துகிறது. இங்கு கட்சி சார்ந்த சமூக நிகழ்வுகள் தலித் புதினப் போக்கிற்கு மற்றொரு தளத்தை அமைத்துக் கொடுத்துள்ளதை அறியமுடிகிறது.

தலித் என்ற சொல் சாதிச் சார்பற்றது என்று குறிப்பிடப்பட்டாலும் கூட இதனை அனைத்துச் சாதி மக்களும் சாதி சாராத இயக்கமாகப் பார்க்க முன்வரவில்லை. இந்தியாவின் அனைத்து நிகழ்வுகளிலும் சாதியின் ஊடாட்டம் இருந்தே வருகிறது. அப்படியிருக்கையில் இதில் மட்டும் சாதியாக்கம் இருக்காதென்றும் எதிர்பார்க்கமுடியாது. எனவேதான் தலித் என்ற சொல் குறிக்கும் மக்களாகக் குறிப்பிடப்படுவோருக்குள்ளும் தம் சாதிதான் உயர்ந்தது என்று நிலைநாட்டும் தன்மைகள் அதிகரித்து வருகின்றன. அதேபோல் கீழ் மேல் வேற்றுமை நடைமுறையில் உள்ளது. உழைப்புச் சுரண்டல், சாதிய ஏற்றத் தாழ்வு, அடிமைப்படுத்தல் என்பதும் கூட இங்கேயும் தொடர்ந்து நடந்த வண்ணமே உள்ளன. எனவே, இத்தகைய நிலையையும் எடுத்துக் காட்ட வேண்டிய கட்டாயம் படைப்பாளிகளுக்கு ஏற்படுகிறது. இத்தகைய சமூக நிகழ்வினையே இமையம் கோவேறு கழுதைகள் என்ற புதினத்தின் மூலமும், பாமா வன்மம் என்னும் புதினத்தின் மூலம் எடுத்துக் காட்டுகின்றனர். இங்கு பேசப்படும் தலித் உட்சாதி முரண்பாடுகள் பிற சாதியினரின் அடக்குமுறைகளுக்குச் சற்றும் சளைக்காதவை என்பதை நினைவில் கொள்ள வேண்டும். தீட்டுச் சம்பவங்கள் மட்டுமே சற்று மட்டுப்பட்டுள்ளன என்பது குறிப்பிடத் தக்கது.

மேலேகண்ட கருத்துக்களின் மூலம் தலித் இலக்கியங்கள் சமூகத்தில் இருந்து எழும்பும் சம்பவங்களின் மூலமே தோற்றம் பெற்றுள்ளன என்பதையும், அடுத்தடுத்து வரும் சமூக மாற்றங்களே இலக்கியத்தின் உள்ளடக்கத்தில் மாற்றம் ஏற்படக் காரணமாகின்றதையும் அறிய முடிகிறது. இந்நிலையில் அனைத்து வகை இலக்கியங்களிலும் உள்ள சாபக்கேடு தலித் இலக்கியத்திலும் தொடர்கிறது. இந்தியாவில் ஆண்களுக்குச் சமமான எண்ணிக்கையில் பெண்கள் இருந்தாலும் படைப்பாளிகள் என்று பார்க்கும்போது எவ்வாறு மிகக் குறைந்த எண்ணிக்கையில் பெண் படைப்பாளிகள் உள்ளனரோ அதைப் போன்றே தலித் இலக்கியம் படைக்கும் படைப்பாளிகளும் உள்ளனர். பாமா என்ற பெண்ணால் தொடங்கி வைக்கப்பட்டதாகத் தமிழ்த் தலித் இலக்கியம் இருந்தும்கூட இன்றும் பாமா, சிவகாமி என்ற இரு பெண்கதைத் தவிர வேறு படைப்பாளிகள் உருவாகாதது ஏன்? என்ற வினாவிற்கு இன்றுவரை விடையில்லை. இத்தகைய நிலைக்கு ஆண் அடக்கு முறையும், சமூகக் கட்டுப்பாடுகளும் கூட காரணமாக இருக்கக்கூடும். இந்நிலை தொன்றுதொட்டு இலக்கியங்களில் ஏன் தொடர்கிறது என்பதனை அனைத்து வகை இலக்கியங்களையும் அடிப்படையாக வைத்து சமூக நிகழ்வுகளையும் கணக்கில் கொண்டு விரிவாக ஆராய இடமுண்டு.

# <u>உப்பு வயல் புதினத்தில் - தலித்தியம்</u>

*இர.பானுமதி,*எம்.ஏ.,எம்ஃபில்.,பி.எட்., விரிவுரையாளர், தமிழ்த்துறை,
அருள்மிகு பழனியாண்டவர் மகளிர் கலைக் கல்லூரி , பழனி.

## முன்னுரை

இன்றைய இந்திய சமூக அமைப்பிலே பலவிதமான வேதனைகளும், விநோதங்களும் நிறைந்து காணப்படுகின்றன. அப்படிப்பட்ட சமுதாயத்திலே வாழக்கூடிய தலித்திய மக்களுக்கு வாழ்க்கை ஓர் அறைகூவலாகவே இருந்துவருகிறது. ஒதுக்குப்புற விளிம்பில் இருக்கக்கூடிய, மக்கிப்போன சேரியில் வாழும் இம்மக்களின் நம்பிக்கைகளையும், கனவுகளையும் இன்று வேகமாக வளர்ந்துவரும் புதிய முதலாளித்துவம் எப்படியெல்லாம் சிதைத்துச் சின்னாபின்னமாக்குகிறது என்பதை ஸ்ரீதரகணேசனின் உப்புவயல் என்ற புதினத்தின் மூலம் காட்டுவதே இந்த ஆய்வுக்கட்டுரையின் நோக்கமாகும்.

## தலித்திய விளக்கம்

அண்மைக் காலத்தில், சயிதுக - பண்பாட்டுத்தளத்தில் தோன்றியுள்ள தலித் எழுச்சி மிகவும் கவனிக்கத்தக்கதாக உள்ளது. தலித் என்ற சொல். தாழ்த்தப்பட்ட சில சாதிகளின் ஒரு கூட்டு வடிவ இலட்சினையாகவும், ஒரு பண்பாட்டு அரசியலின் அடையாளமாகவும் இருக்கின்றது என்கிறார். (தி.சு.நடராசன் - திறனாய்வுக்கலை, ப.212)

தலித் என்பது ஸ்தல் என்னும் சமஸ்கிருதச் சொல்லிலிருந்து தோன்றியது. மராட்டியத்திலுள்ள தாழ்த்தப்பட்ட சாதிகளான மகார், மாங்கு, சாமர், தோர் போன்றோரைக் குறிக்கக்கூடிய பொதுச்சொல்லில் அதாவது மராட்டிய அட்டவணைச் சாதிகளுக்குரிய பொதுச்சொல்லாகத் தலித் என்று பயன்பட்டது. இன்று இது தாழ்த்தப்பட்ட சாதியினரை மட்டும் குறிப்பதாக உள்ளது என்று கூறுகிறார். (கோ.கேசவன், தலித் இலக்கியம் சில கட்டுரைகள், ப.9)

## தலித்தியத்தின் கூறுகள்

சமுதாயத்திலே அனைவருக்கும் சகல உரிமையோடு வாழ வேண்டும் என்ற உணர்வுகள் இருக்கும். அதற்கேற்ப மரபு வழிப்பட்டு இறுகிக்கிடக்கின்ற இந்தச் சமுதாய அமைப்பு என்ற நிறுவனம், விதித்திருக்கின்ற அடிமைத்தளையிலிருந்து விடுதலை வேண்டுகிற உணர்வு, தலித்திய உணர்வாகும் என்கிறார் தி.சு.நடராசன் அவர்கள். (தி.சு.நடராசன், திறனாய்வுக் கலை, ப.213)

## தலித்தியத்தின் நோக்கம்

இந்திய சமூக அமைப்பு நடைமுறையில் சாதிய அமைப்பு முறையாக நீடித்து வருகிறது. இந்நிலையில் சமநீதி, மனித மாண்பு, தன்மானம் ஆகியவற்றை நிலைநாட்டுகிற மனிதம் என்கிற உயரிய விழுமியத்தையே தலித் இலக்கியம் மையமாகக் கொண்டுள்ளது. (முனைவர்.அந்தோனிகுருசு. தலித்தியக் கருத்தாடல்கள். ப.25)

## தலித்தியப் பெண்களின் நிலை

தலித்தியத்தில் உள்ள பெண்களின் நிலையை நாம் பார்த்தோமேயானால் மிகவும் கொடூரமான தன்மை வாய்ந்ததாகக் காணப்படுகின்றது. பொதுவான முறையில் பார்த்தால் பெண் என்பவளே அடிமைப்பட்டுக் காணப்படுபவளாவாள். அதிலும் தலித்துப் பெண்ணின் நிலையென்றால் கேட்கவே வேண்டாம்.

தலித்துப் பெண்களுக்கெதிரான வன்முறைகள் பலவடிவங்களில் பல காலமாக வெளிப்பட்டு வருகின்றது. அடக்குமுறைகளுக்குத் தலித்துப் பெண் - உடல் ஒரு ஆடுகளமாக ஆக்கப்படுகிறது. (தி.சு.நடராசன் - திறனாய்வுக்கலை, ப.214) என்பதற்கேற்ப இப்புதினத்தில் காணப்படும் பெண்ணான வடுவச்சியை முதலாளித்துவ வர்க்கம் சீரழிக்க நினைக்கின்றது. அதிலிருந்து வெளிப்பட்டு ஒரு புரட்சிக்குரல் எழுப்புகிறாள். ஆனாலும் இறுதியில் முடிவுகாணா ஒரு சோகநிலைதான் ஏற்படுகிறது. தங்களின் அடிமைத்தளையிலிருந்து விடுதலையடைய இயலாமல் துன்புறும் நிலையே மிகவும் அவலத்தை ஏற்படுத்துகிறது.

## தலித் மக்களின் அவல வாழ்க்கை நிலை

தலித் மக்கள் தாங்கள் நல்ல நிலையிலே வாழ வேண்டும் என்ற எண்ணம் விரவியிருந்தாலும் சமுதாயமானது அவர்களை வாழவிடாது என்பதை இப்புதினம் பல இடங்களில் பதிவு செய்துள்ளது.

தலித்துகள் எப்போதுமே சரணாகதி அடைந்தவர்களாக, ஆதிக்கசாதி எசமானர்களைச் சார்ந்து நத்திப் பிழைப்பதில்தான் அவர்கள் வாழ்வுரிமை அடங்கியிருக்கிறது என நம்புவோர்களாக, அவர்களது ஆதிக்க அதிகாரங்களுக்கும் அடிபணிந்து கிடப்பவர்களாக அடிமைநிலையில் இருப்பதைச் சொல்லிச் சொல்லியே ஆதரவுக்குக் கெஞ்சிக் கிடப்பவர்களாகக் காட்டப்படுகின்றனர் என்பதனை இப்புதினத்தில் பல இடங்களில் சுட்டிக்காட்டியுள்ளார். (முனைவர். அ.அந்தோனிகுருசு, தலித்தியக் கருத்தாடல்கள், ப.63) வேர்வையில் வேர்த்து திரேகம் உப்பு நீராய் ஓடும். நிலத்தில்தான் உப்பு வார வேண்டும் என்பதில்லை. எங்கள் உடம்பிலும் உப்பு திட்டுத் திட்டாகப் பொரிந்து நிற்கும். நாக்கு தண்ணீர்க்கு ஏங்கும். அளத்து மேட்டில் அளவோடுதான் தண்ணீர் குடிக்க வேண்டும். அடிக்கடி தண்ணீர் குடிக்கப்போனால் கங்காணிமார்கள் கண்டால் திட்டுவார்கள். கெட்ட வார்த்தைகளைச் சொல்லி ஏசுவார்கள். (ஸ்ரீதரகணேசன். உப்புவயல், ப.15) என்பதைக் காணும் பொழுது தலித் மக்களின் வாழ்க்கையில் ஏற்படும் அவலநிலையை அறிய முடிகிறது.

## உழைக்கும் வர்க்கத்திற்கு ஊதியமின்மை

சமுதாயத்தில் தாழ்த்தப்பட்ட மக்களிடமிருந்து அதிக உழைப்பு உறிஞ்சும் முதலாளித்துவ வர்க்கமானது அவர்களுக்குத் தகுந்த ஊதியத்தைத் தர மறுப்பதோடு, அவர்களைத் தகாத முறையில் ஏசுகின்றனர் என்பதை இப்புதின ஆசிரியர் தெளிவாகப் படம் பிடித்துக்காட்டுகிறார்.

காலையில் இருந்து சாயங்காலம் வரைக்கும் உப்புப்பெட்டி சுமக்கணும். இதற்குள்ள நூறுதடவையாவது கங்காணி ஏச்சையும் பேச்சையும் கேட்டாகணும். விடாதே, விடாதே என்று வேனா வெயில்லே ஓடி ஓடி உப்புப்பெட்டி சுமந்தால், பிட்டி எலும்பு உடைஞ்சு போன மாதிரி வலிக்கும். சோர்ந்து போய் வீடு திரும்பும் போது 10 ரூபாய் காசு கிடைக்கும். இந்தக் காசுக்காகத்தான் இந்தப்பாடு என்று தலித் மக்களின் உழைப்பை உறிஞ்சி அவர்களின் கூலியைக் குறைப்பது எடுத்துக் காட்டப்படுகிறது. (ஸ்ரீதர கணேசன் – உப்பு வயல், ப.9)

## தாழ்த்தப்பட்ட மக்களுக்கு கற்பு நிலையில் பாதுகாப்பின்மை

தலித் மக்களின் கற்பிற்கு எந்தவிதமான பாதுகாப்புத் தன்மையும் இல்லாமல் காணப்படுவதே இப்புதினத்தின் முக்கியக் கருத்தாக்கமாகும் என்பது நேர்த்தியாக ஓரிடத்தில் குறிப்பிடப்படுகிறது. நான் ஒத்தையில் நின்று சாமான்களைத் தூக்கிவைத்தேன். கடைசியாக ஒரு மம்மெட்டியையும், சட்டிகளையும் தூக்கிக் கொண்டுபோய் செட்டுக்குள் நுழையவும் யாரோ உள்ளே இருப்பது போல நிழலாடியது. திக்கென்றிருந்தது. பயந்துபோனேன். உள்ளே போய்விடவில்லை. கையில் உள்ள சாமான்கள் பொத்தென்று விழுந்தன. அந்த சத்தம்தான் பெரிதாகக் கேட்டது. வேர்க்க வேர்க்க அந்தாளைப் பார்த்தேன். வாட்டசாட்டமாக இருந்தான். தும்பைப்பூ போன்ற வேஷ்டி, பாலீஸ்டரில் கட்டம் போட்ட சட்டை, சுருள் சுருளான முடி, நல்ல வளர்த்தி, அளத்து முதலாளியா? எந்த அளத்து முதலாளி? இங்க எப்படி முளைத்தான்? திட்டம் போட்ட சதியா? எலிப்பொறியில் அகப்பட்டுக் கொண்டோமா? எல்லாமே ஓர் மின்னல் போல் நினைவில் வந்தன. நான் மறுகணமே சுதாரித்துக் கொண்டேன். படங்களில் வருகிற வில்லன் போல சிரித்தான். எங்க போறே, வா என்றான். சில பச்சை நோட்டுக்களைத் தூக்கி விரித்து ஆட்டினான். என்று பார்க்கும்பொழுது தலித் மக்கள் எல்லோரும் பணம் கொடுத்தால் பல்லைக்காட்டிக் கொண்டு வந்துவிடுவார்கள் என்று நினைக்கின்றது இம்முதலாளித்துவம். அதனை மறுக்கும் முகமாக கதைநாயகி வடுவச்சி அமைந்துள்ளான் என்பதனை புதினம் தெளிவாக விளக்குகிறது. (ஸ்ரீதர கணேசன் – உப்பு வயல், ப.20-21)

## தலித் மக்களின் போர்க்குரல்

வடுவச்சிக்கு நடந்த நிலையினை எதிர்த்து தலித் மக்கள் அனைவரும் அவர்களின் சங்கத்தின மூலம் கண்டன ஊர்வலம் சென்று மாவட்ட ஆட்சியாளரிடம் மனு கொடுக்க முனைந்தனர். ஊர்வலம் கிளம்பியது.

கோஷங்கள் கனத்த ஒலியோடு எங்கும் எழுந்த வண்ணமிருந்தன. ஓர் உணர்ச்சிப் பூர்வமான நேரம் இது. உப்புத் தொழிலாளர்கள்சங்கம் -வாழ்க.தொழிலாளர்கள் ஒற்றுமை ஓங்குக. ஒன்றுபடுவோம் - போராடுவோம் - வெற்றிபெறுவோம். வெற்றிகிட்டும்வரை - போராடுவோம். ஒன்றுபட்ட தொழிலாளி முன்னே, எழுந்துவிட்ட தொழிலாளி முன்னே சாதி இல்லை - இனமில்லை - மொழி இல்லை - கொள்கை உண்டு - கோரிக்கைகள் பல உண்டு. உப்பள முதலாளிகளே உழைக்கும் உப்பள தொழிலாளிக்கு நியாயமான கூலியை வழங்கு. பெண் தொழிலாளிகளை மானபங்கப்படுத்தாதே. உப்பளத்தில் உழண்டாலும் - ஆலையில் உழைத்தாலும் - போராடுவோம், போராடுவோம். உப்புத்தொழிலாளர்கள் சங்கம் வாழ்க என்று அவர்களின் போர்க்குரல் மிகவும் கம்பீரமாக வானைக் கிழித்துக் கொண்டு ஒலித்தது என்பதை மிக நேர்த்தியாகப் புதின ஆசிரியர் கையாண்டிருக்கிறார். (ஸ்ரீதரகணேசன்-உப்புவயல், ப.92-93)

## போர்க்குரலால் ஏற்படும் எதிர்விளைவுகள்

தலித் மக்கள் போர்க்குரல் கொடுத்துத் துறைமுக வாசல் முக்கு திரும்பும் பொழுதே யாரும் எதிர்பாராத வகையில் சரசரவென்று கற்கள் ஊர்வலத்தின் மேலே விழுந்தன. அதில் யார் யாருக்கெல்லாமோ பல அடிகள் பட்டன. பின்னர் போலீஸ், வேனில் வந்து கண்ணீர்க் குண்டுகளைத் தூக்கி வீசினார்கள். ரவுடி கும்பல்கள் வந்து அடிதடி ரகளை செய்தன. இவையெல்லாமே முதலாளித்துவ வர்க்கத்தினரால்தான் நடத்தப்படுகின்றன என்பதை உணரமுடிகின்றது. எதிர்த்தப் போர்க்குரல் கொடுத்த மக்களை மாறுகை, மாறுகால் வாங்கி, துப்பாக்கிச்சூடு நடத்தி ஒடுக்குகிறதது முதலாளி வர்க்கம். இறுதியில் தலித் மக்கள் பல்வேறு இன்னல்களைத்தான் எதிர்நோக்குகின்றனர்.

## தொகுப்புரை

என்னதான் போராட்டம் நடத்தினாலும், ஊர்வலம் போனாலும் முதலாளிவர்க்கம் அவர்களுடைய செல்வாக்கினை வைத்து அடிமையாகவே வைத்திருக்கும் யதார்த்தநிலை இப்புதினத்தில தெளிவாகக் காட்டப்பட்டுள்ளது. தாழ்த்தப்பட்ட உழைக்கும் வர்க்கம் பட்ட துன்பங்கள் எல்லாம், விழலுக்கு இறைத்த நீர்போல ஆகியது. தாழ்த்தப்பட்ட நிலையிலுள்ளோர் வாழ்க்கையில் முன்னேற நினைத்தாலும் சமுதாயம் அவர்களை முன்னேற விடாமல், தங்கள் அதிகாரத்தினையும், அடக்குமுறைகளையும் கையாண்டு அவர்களைப் பின்னுக்குத்தள்ளி விடுகிறது. அவர்கள் மீண்டும் தங்களுடைய பழைய வாழ்க்கையான அடிமைத்தளை வாழ்க்கைக்கே சென்றுவிடும் நிலை உருவாகின்றது. உப்புவயலில் வேலை செய்யும் அவர்களுடைய வாழ்க்கையோ, உப்புச் சப்பற்ற வாழ்க்கையாக பல முரண்பாடுகள், மோதல்கள் போன்ற போராட்டங்கள் நிறைந்த சுமையாயும் நிம்மதியுமற்ற வாழ்வாகவும் அமைகிறது. இத்தகைய நிலை மாற வேண்டும். முதலாளி வர்க்கம் எத்துணைதான் கொடுமைகள், அநீதிகள் இழைத்தாலும் உப்பளத்தொழிலாளர்கள் மனம் தளராமல் தங்களுடைய போர்க்குரலை நிறுத்தாமல் என்றாவது ஒருநாள் விடிவுநிலை ஏற்படும்என்ற நம்பிக்கையோடு போராட வேண்டும் என்பதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

# விதைச் சோளம் புதினத்தில் தலித்தியம்

*க.பிருந்தா* விரிவுரையாளர் – தமிழ்த்துறை ,
ஸ்ரீ ஜி.வி.ஜி. விசாலாட்சி மகளிர் கல்லூரி, (தன்னாட்சி)உடுமலை.

## முன்னுரை

18, 19–ஆம் நூற்றாண்டுகளில் தொடங்கி இந்நூற்றாண்டில் மிகப் பரவலான ஒரு இலக்கிய வகையாக வளர்ந்திருப்பது நாவலாகும். நாவல் சமூகத்தைப்பற்றியும், அரசியல், சமயப் பிரச்சனைகளை விமர்சிக்கும் அரங்கமாகவும் விளங்குகிறது. சமுதாயப் பிரச்சனைகளையும், குடும்ப உறவுகளையும் தன் எழுத்துகளில் பதிவு செய்யும் சூர்யகாந்தனின் விதைச் சோளம் என்ற நாவல் ஆய்வுக்கு எடுத்துக்கொள்ளப்படுகிறது. இந்நாவல் தலித் மக்களின் வாழ்க்கையையும் சமூகத்தில் எப்படிக் கீழ் நிலையிலேயே அடக்கப்பட்டு வாழ்கிறார்கள் என்பதையும் கூறுவதாக உள்ளது. இந்நாவல் அரிசன மக்களின் ஜுவித ஓவியங்களாகத் திகழ்கின்றது.

## விதைச்சோளம் கதைக்கரு

பேளூர் அருகே உள்ள ஒரு குக்கிராமத்திற்கு பிழைப்பு நடத்த வந்தவன் திம்மன். இங்கு வந்த காலம் தொட்டு பண்ணையாளாகச் சேர்ந்து, விசுவாசமாக உழைத்து வந்தான். இவன் மகன் வேம்பன். தன் உழைப்பின் காரணமாக பண்ணையத்தை விரிவடையச் செய்தான். தன் மகன் வேம்பனையும் பண்ணையத்தில் சேர்த்தான். தன்னுடைய முதலாளியான கவுண்டரின் குழந்தைகளைக் காப்பாற்றும் போது, மாட்டுக் கொம்பால் குத்தப்பட்டு இறந்தான். தன்னுடைய தந்தை இறந்த பிறகு வேம்ப மாதாரி பணிகளைத் தொடர்ந்தான். தன் முழு உழைப்பையும் செலுத்தி பாடுபட்டு விளைச்சலைப் பெருக்கினான். எனினும் அவனுக்குக் கிடைக்க வேண்டிய நியாயமான கூலி கிடைக்கவில்லை. தங்கள் உழைப்பால் தோட்டங்களும், வயல்களும் பசுமை குன்றாமல் இருப்பதையும், தங்கள் வாழ்வு காய்ந்து கிடப்பதையும் கண்ட இம்மக்கள், கூலி உயர்வு கேட்கத் தீர்மானித்தனர். வேம்பனும் இதற்கு உடன்பட்டான். ஆனால் பண்ணையாரோ வேறு ஒரு ஆளை பண்ணைக்கு சேர்த்துக் கொண்டார். இந்நிகழ்வு அவன் மனதில் பெரும் பாதிப்பை ஏற்படுத்துகின்றது. இதன் காரணமாகவே உடல் நலம் பாதிக்கப்பட்டு வேம்பனின் மனைவி மாதாள் இறக்கிறாள். பண்ணையத்தைத் தவிர வேறு எதையும் அறியாது, தன் உயிரையும் கொடுத்து உழைத்த வேம்பன், முதலாளி வர்க்கத்தின் சுரண்டல் காரணமாக உயிரை விடுகிறான். வாழையடி வாழையாக பிறருக்கு உழைத்தே முதுகு குனிந்தவர்கள், நிமிர்வதற்கு வாய்ப்பு இல்லாமலேயே மடிகிறார்கள்.

## தலித்துக்களின் பொருளாதார நிலை

சமூகம் பொருளாதார நிலையில் மேம்பாடு அடைய இவர்கள் கீழ் நிலையில் இருந்து உழைப்பவர்களாக இருந்தாலும், இவர்கள் வறுமையின் கோரப்பிடியிலேயே உள்ளனர். மூணுவேளை உண்ண உணவும், நோம்புச் சமயங்களில் கட்டுவதற்கு எடுத்துத்தரும் வேட்டி துண்டும், மாதம் அல்லது வருசச் சம்பளமாவோ ஒட்டு மொத்தமாகப் பெறும் கூலியுமே இவர்களுக்குக் கிடைக்கும் வருமானம். இவர்கள் தங்கள் உழைப்பால் மண்ணுக்கு வியர்வை மாலை அணிவித்தபோதும், அதற்குத் தகுந்த பலன் இவர்களுக்குக் கிடைப்பது இல்லை.

## தொழில்

ஆதியில் செய்யும் தொழிலுக்கேற்ப இருந்த பிரிவு இன்று ஜாதியின் அடிப்படையில் இருப்பதாக அமைகிறது. தொழிலின் அடிப்படையில் இவர்கள் தாழ்த்தப்பட்டவர்கள், தீண்டத்தகாதவர்கள் என்ற நிலை இன்றைய சமுதாயத்தில் வேறூன்றிவிட்டது. செருப்புத் தைப்பதும், எருமை மாட்டுத் தோல்களில் பறி தைப்பவர்களும் கீழே குனிந்தே குன்றிப் போயிருந்தனர். நிமிரும் வாய்ப்பை வாழ்க்கை அவர்களுக்கு வழங்கவே இல்லை. இறப்பு வீடுகளில் தப்பட்டை அடிப்பதும் மயானக் காட்டில் குழிவெட்டுவதும், சாவுச் செய்தியை அடுத்த ஊர்களுக்குக் கொண்டு போகிறவர்களும் இவர்களாகவே இருந்தனர். பண்ணையாளாக இருந்து அனைத்து வேலைகளையும் செய்வர். இதைத் தவிர புடுச்சாந்து மேய்த்தலும் இவர்களது தொழிலாக இருந்தது. எனினும், ஈன்ற நாளில் இருந்து பசுவை முதலாளிகளுக்குக் கொடுக்கும் போது அதற்கான நியாயமான பணம் கொடுக்கப்படமாட்டாது வாழைக்கு நீர் ஊற்றி வளர்த்து அது முறிந்துவிடாமல் பாதுகாத்து அது குலை தள்ளும்போது அதை கொண்டாட முடியாதது போலத்தான் இவர்கள் நிலையும் இருந்தது.

## கல்வி

நிம்மன் தன் காலத்தில் கல்வியைப் பற்றிக் கவலைப்படாதவனாக இருந்தான். அதனால் வேம்பனை காடு மேடா அலஞ்சு காட்டுப் பாடத்தெ படிக்கட்டும் என்று இவனையும் பண்ணையத்தில் சேர்ந்தான். வேம்பனுக்கு படிக்க வேண்டும் என்று இருந்த ஆசை அடியோடு அழிந்தது. ஆனால் தன் குழந்தைகளுக்குக் கல்வி கொடுக்க வேண்டும் என்ற எண்ணம் அவன் மனதில் இருந்தது. கல்வி இருந்தால் பிறரின் சுரண்டலைத் தடுக்கலாம் என்ற எண்ணமும் கொண்டிருந்தான்.

> மாங்குமாங்குன்னு பாடுபட்டே இருக்குறோமே ஒழிய
> ஏதாச்சும் ரெண்டெழுத்தைப் படிச்சுப் பார்க்கத்
> தெரியுதா? நம்மளோட கடும்பாட்டையெல்லாம்
> காலாகாலமா மித்தவங்க உறிஞ்சியிட்டே
> இருக்கிறாங்க... அப்பிடிங்கிறதையும் அதுக்குப்
> படிப்பறிவில்லாமப் போனதும் முக்கியமான
> காரணமுங்குறதையும் அறிஞ்சு அதுலயிருந்து
> மீளத்தான் முடிஞ்சுதா...? (ப.18)

என்ற மனக் கூற்றின் வழி அவன் உளப்பாங்கை அறியலாம். கல்வி அனைவருக்கும் உரிய சொத்தாக இருந்த போது, கீழ்மட்டத்திலிருப்பவர்களுக்கு மட்டும் அது மறுக்கப்பட்டே வருகிறது.

## அதிகார வர்க்கத்தின் ஆணவப் போக்கு

குட்டக் குட்டக் குனிந்தால் குட்டிக் கொண்டேதான் இருப்பார்கள். அப்படித்தான் முதலாளிகளும் தங்களுக்குக் கட்டுப்பட்டே வாழும் தலித்துக்கள், தங்களுக்கு எதிராக ஏதும் சொல்லும் பட்சத்தில் அவர்களை உயிரோடு சோளக்குழியில் இறக்கி குழியை அடைக்கும் முறையும் இருந்தது. மேலும் அம்மக்களின் வறுமை நிலையை தனக்குச் சாதகமாகப் பயன்படுத்திக் கொள்ளும் மேல்சாதியினரும் இருந்தனர். தலித் பெண்களைத் தங்களது ஆசைக்கு இணங்க வைக்கவும் முடியாதபட்சத்தில் அவர்களை மிரட்டியும் துன்புறுத்தியும் வந்தனர். விலைமதிப்பற்ற மனித உயிரையும் அவர்கள் துச்சமாகவே எண்ணினர்.

## சமுதாயத்தில் தலித்துக்கள்

தலித் மக்கள் உயிரைக் கொடுத்து உழைத்தாலும், விசுவாசத்தோடு நடந்து கொண்டாலும் மாதாரி என்கிற நிலையில் வைத்தேதான் பார்க்கப்படுகிறவர்களாக இருந்தனர். ஈயப் போசியிலோ, மண் சட்டியிலோ சோறு வாங்கி மரநிழலிலோ அல்லது முதலாளி வீட்டின் வாசலிலோ தான் அமர்ந்து உண்ண வேண்டி இருந்தது. இவர்கள் தங்களின் சுக துக்கங்களை தங்கள் முதலாளிகளிடம் பகிர்ந்து கொள்கின்றனர். முதலாளி வீட்டில் நடக்கும் எந்த நிகழ்ச்சியானாலும் தங்கள் பங்களிப்பைச் செய்கிறார்கள். ஆனால் இவர்கள் இறப்பைக் கூட அவர்கள் லட்சியம் செய்தில்லை. யார் எதைச் சொன்னாலும் சொரீங்சாமி என்று கூறி பழக்கப்பட்டு விட்டார்கள். பிற சாதிக்காரர்கள் வசிக்கும் தெருவில் செருப்புப் போடக்கூடாது, தோளில் துண்டு போடக்கூடாது, பொதுக்கிணற்றில் நீர் சேந்தக் கூடாது போன்றவை அவர்கள் மனதில் இயல்பாகவே ஊறிவிட்டன. எனவே அதிகார வர்க்கத்தினர் தங்கள் அதிகாரத்தைச் செலுத்த தடையேதும் இல்லாமல் இருந்தனர்.

## முடிவுரை

அரசாங்கம் தலித்துக்களின் முன்னேற்றத்திற்காகப் பாடுபட்டாலும், யானைத் தன்னை அடிப்பதற்கான பிரம்பைத் தானே எடுத்து பாகனிடம் கொடுப்பது போல இவர்களே மனதளவில் பின்தங்கிய நிலையில் உள்ளனர். தலித்துக்களுக்கோ காலங்காலமாக குட்டப்பட்டுக் கிடந்ததால் அடிமை என்ற எண்ணம் வேரூன்றிவிட்டது. அந்த எண்ணத்தை இவர்கள் அகற்றினால்தான் இவர்கள் வாழ்வில் வசந்தம் வீசும்.

## "கடம்பவனம்" - தீண்டாமை ஒழிப்புப் பிரதிபலிப்பு

*E. பிரேமா,* ஆங்கிலத்துறை
சௌராஸ்ட்ரா கல்லூரி, மதுரை

அரிது அரிது மானிடராய்ப் பிறப்பது அரிது. அதைவிட அரிது கூன் குருடு, செவிடு, ஆகிய ஊனங்கள் இல்லாமல் பிறப்பது, அதனினும் அரிது ஜாதி, மதம், பேதம் இல்லாமல் வாழ்வது. இந்தியா சுதந்திரம் பெறுவதற்கு முன்பு ஆங்கிலேயர் ஆட்சிக் காலத்திலிருந்து மனிதன் மனிதனையே அடிமைப்படுத்தியிருந்தான். ஆனால் அது தற்போது மற்றிலும் மாறி மனிதர்கள் மனித நேயத்துடன் வாழ்கிறார்கள். தென்னகத்திலே ஆலயப்பிரவேசம் என்ற மறுமலர்ச்சி மகத்துவம் நிகழந்தது என்றால் அதற்கு முன்மாதிரியாக அமைந்தது மதுரை மாநகர் மீனாட்சி அம்மன் ஆலயப்பிரவேசம் தான்.

சுதந்திரம் என்பது ஒவ்வொரு வகுப்பும் முன்னேற வேண்டும். மக்களுக்குள் சுயமரியாதையும், சமத்துவமும், சகோதரத்துவமும் ஓங்கி வளர வேண்டும். உயர்வு, தாழ்வு எனும் உணர்ச்சி ஒழிந்து அனைத்துயிர்களும் ஒன்றென்று எண்ணும் உண்மை அறிவு மக்களிடம் வளர வேண்டும் என்று பெரியார் கருதினார்.

பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும் - சிறப்பொவ்வா
செய்தொழில் வேற்றுமை யான் (குறள் : 972)

பெருமைக்கும் ஏனைச் சிறுமைக்கும் பெயர் பெற்றது நம்நாடு. பல சிறுமைகள் பல நம்நாட்டில் தோன்றி நம்மை துயருறுத்துகின்றன. அவற்றில் தீண்டாமை முதன்மையானது. மேல் சாதிக் கொடுமைகளால் அழிந்து போனவர்களின் கண்ணீர்க் கதைகள் ஏராளம். இதே கருத்தை மையமிட்டுப்பிறந்த புதினம் தான் "கடம்பவனம்"

கடம்பவனம் என்பது மதுரை மாநகரின் பழைய பெயர். 60 ஆண்டுகளுக்கு முன்பு தீண்டதமையை எதிர்த்துர் போர்க்குரல் எழுகிறது. அது ஆலயப்பிரவேசமாய் வெடிக்கிறது. அதற்குத் தலைமை தாங்கியவர் வைத்திய நாதய்யர். அவருக்குத் துணை நிற்கிறார் பசும்பொன் முத்துராமலிங்கத் தேவர். சனாதனக் கொடி பிடிக்கும் கோயில் பட்டர்களை எதிர்த்து ஆர்.எஸ். நாயுடு போன்றவர்களின் நடவடிக்கையாகிய (1937 - 1939) மூன்றாண்டு கால நிகழ்வுகளை நம் கண்முன்னே இப்புதினம் நிறுத்துகிறது. காதல் கதையுடன் கூடிய சமூக அவலத்தை வெளிச்சத்திற்குக் கொண்டுவர முயலும் பாங்கு வெற்றியை நல்கும் முயற்சியாகும். அனைத்திற்கும் அரனாக, "மீனாட்சி கோயிலைச் சுற்றிச் சுற்றி வந்தேன். கல்லும் கதை சொன்னது. பிரகாரங்கள் என்னோடு பேசின. எழுது எழுது என்று என்கை விரல்களில் வந்து அமர்ந்து கொண்டன. சித்திரமானது அடுக்கப்பட்ட, செதுக்கப்பட்ட கல்லாய் மாறி அழியாதிருக்கும் அதிசயத்தின் ஊடே முக்காலமும் தெரிந்தது. ஆம் இக்காலமும் தெரிந்தது. இப்போதும் ஆங்காங்கே கோவில் நுழைவுப்போராட்டம் நடக்கும் போது அன்றைக்கும் அந்த மாந்தர்களை அது என்னென்ன பாடுபடுத்தியிருக்கும்" என்ற ஆசிரியரின் கூற்று அமைகின்றது. சேரி வீட்டுப் பையன் முனியனையும், தேவர்வீட்டுப் பையன் வெள்ளைச்சாமியையும் ஹரிஜன நேசா இயக்கத்தின் மூலம் நண்பர்களாக அறிமுகப்படுத்தி உலாவரவைத்திருப்பது ஆசிரியரின் பெருந்தன்மையை காட்டுகிறது.

குப்பன், சுப்பன் தீண்டத்தகாதவர்கள், ஆனால் நம் மதத்திற்கு அப்பாற்பட்ட வெள்ளைக்காரர்களை மட்டும் கோயிலுக்குள் அனுமதித்தனரே நிறத்திமிரும் காரணமா என்ற கூற்று தீண்டாமைப் பாகுபாட்டைத் தோலுரித்துக் காட்டுகின்றன. முனியன் பட்டணத்திலே போய் படித்தவன். உலக விவகாரமெல்லாம் பேசுவான். பல புத்தகங்கள் படிப்பான். அவைபற்றித் தன் நண்பனுக்குச் சொல்லுவான். வெள்ளைச்சாமிக்குப் பல

விசயங்கள் புரியாவிட்டாலும் அவனின் விஸ்தாரமான ஞானம் கண்டு வியந்து கொண்டான். ஆலயப் பிரவேச வரலாற்றை எடுத்துக்காட்டும் ஆசிரியர் உலகிற்கு முன் மாதிரியாக இன்றும் திகழ்ந்து கொண்டிருக்கும் மதுரை மீனாட்சி அம்மன் கோவில் பிரவேசம் மற்றும் அதன் உரிமை குறித்தும் ஆஸ்வரன், தியாகு, வெங்கட் ஆகிய படைப்பாளிகளின் கருத்துக்கள் மூலம் அடிக்கோடிட்டுக் காண்பிக்கிறார்.

கணேச பட்டர், ஈஸ்வரன் இருவரின் உரையாடலின் மூலம் ஆசிரியர் ஆகமங்களையும், அதன் மீதான விருத்திகளையும் தீபிகைகளையும், பத்ததிகளையும் பயாஸ்கோப்புப் படம் போல் காட்டியிருப்பது சிறப்பு.

"வா வா ஈஸ்வரா எப்படி இருக்கே? உக்காரு. உக்காரு. ஒன் காங்கிரஸ் வேலையெல்லாம் எப்படி இருக்கு. "ஏதோ சித்தப்பா" "என்னாயிடுத்து நோக்கு. வருத்தமாய்ப் பேசற. இந்த ராஜதானியில் காங்கிரஸ் ஆட்சியைப் பிடித்திடுத்து. இனிமே வெள்ளைக்காரன் கப்பல் ஏறிடுவான்னுதானே எல்லாம் பேசிக்கறா"

"அவன் ஒரு நாள் போகத்தான் போறான். ஆனா நாம ஒருத்தருக்கொருத்தர் அடிச்சுக்குவம் போலிருக்கே" "என்ன சொல்லற நீ" சித்தப்பா நேரடியாவே கேக்கிறேன். ஹரிஜனங்களைக் கோவிலுக்குள்ள விட்டா என்ன" கணேச பட்டரின் கண்கள் முயல்குட்டியாய் மிரண்டு அலை பாய்ந்தன. பட்டமார் பையன் கேட்கிற கேள்வியா இது. "ஈஸ்வரா என்ன பேச்சுப் பேசற பஞ்சமர்கள உள்ள விட்டா கோவில் தீட்டுப்பட்டுப் போகும் அம்மனுக்கும் சாமிக்கும் சக்தியே போயிடும்"

"என்ன இப்படிச் சொல்றேள். கடவுளை விட மனிதர்களுக்கு அவ்வளவு சக்தியா? அவளால சாமி தீட்டுப்பட்டால் என்றால் சாமிக்கு அது கௌரவக்குறைவு இல்லையா?" "அசுத்தமான இடத்துள திவ்வியமான தெய்வம் பிரசன்னமாகாது என்பது தான் அதனோட அர்த்தம், அதவிட்டு குதர்க்கியாய் பேசாதே"

"மனுசள்ள சுத்தமானவா, அசுத்தமானவா உண்டா"

"ஆமா, நாலு நாளைக்கு ஒருக்கா குளிக்கறவன் இருக்கான், தினசரி ரெண்டு தடவை குளிக்கிறவன் இருக்கான்" ஜெயித்துவிட்டவராய் அவிழ்த்து விட்ட கொண்டையைக் கோதிவிட்டார்.

"அப்படீன்னா பஞ்சமர்கள் குளிச்சு முழுகி சுத்தபத்தமா வந்தா உள்ளே விடுவேளா?

சிக்கல் விழுந்தது

ஃசுத்தம் பற்றிக் கேட்டாலே உதாரணத்துக்கு சொன்னேன் உன்குத் தெரியாதா அது பொறப்போட வந்தது"

"என்ன சொல்றேள்"

"பொறப்பிலேயே சுத்தமானவா, அசுத்தமானவான்னு உண்டு ரிக்வேதத்திலே புருஷ சுத்தம் சொல்லியிருக்கிறது நோக்கு தெரியுமில்லே"

"சூத்ராள் கடவுளின் பாரத்திலேருந்து வந்தவாங்கிறது தானே. அத நான் நம்பல"

"ஏன் நம்பள? அவா அவா செய்யற வேலைய நெனச்சுப்பார். நான் சொல்றது புரியும்"

"இது என்ன வகை நியாயம்? அவா அந்த மாதிரி வேலை செய்யனும்னு நீங்களா ஏற்பாடு பண்ணி வச்சிண்டு இப்ப அதையே காரணம் காட்டேறேளா"

உச்சி வெயில் சூரியன் வார்த்தைகளில் இறங்கியிருந்தான்

"நாங்க செஞ்ச ஏற்பாடு இல்ல அம்பி. பகவான் செஞ்ச ஏற்பாடு"

"அப்ப அந்த பகவான் அவா கோவிலுக்குள்ள வந்தா தான் கெட்டுப் போவேன்னு ஏன் சொல்லணும்"

"ஆகமங்கள்ல சொல்லியிருக்கு"

"என்ன சொல்லியிருக்கு ? பஞ்சமர்கள உள்ளே விடப்புடாதுன்னு சொல்லியிருக்கா"

கணேச பட்டருக்கு சிரசில் யாரோ நங்கென்று எதாலோ தட்டியது போலிருந்தது.

இப்படியே தர்க்கம் நீண்டு கொண்டே செல்கிறது. இக்கூற்றுக்கள் யாவும் தீண்டாமை ஒழிப்புப் போக்கை முன்னிலைப்படுத்துகின்றன.

## சமூகச் சீர்திருத்தம் ஒரு வரையறை

சமூகச் சீர்திருத்தம் என்பது அடித்தளமாகப் பொருளியல் துறையில் ஏற்படும் வளர்ச்சியைக் கொண்டிருக்கிறது. இது மனிதன் சமூகமாக இதரர்களுடன் பரிவர்த்தனைசெய்து கொள்கிறவனாக இயங்கத் தொடங்கிய நாளிலிருந்தே தொடங்கியிருக்கிறது. பிறப்பில் உயர்வு தாழ்வு கற்பிக்கிற அந்தக் கொடுமையில் இந்தக் காலகட்டத்தில் என்ன மாற்றங்கள் நிகழ்ந்துள்ளன என்பது இங்கே ஆராயப்படுகின்றது. பிறப்பில் உயர்வு தாழ்வு என்பதில் இரு கூறுகள் உள்ளன. ஒன்று சாதியின் பெயரால் நடத்தப்படுவது, மற்றொன்று பால் அடிப்படையில் நடத்தப்படுவது வேறு வார்த்தைகளில் கூறினால் சாதிய ஒடுக்குமுறைக்கும், பெண்ணடிமைத்தனத்திற்கும் எதிரான செயல்பாடுகளே இங்கே சமூகச் சீர்திருத்தங்கள் என்று கொள்ளப்படுகின்றன.

இவ்வாறே தமிழகத்திலும் சமூக சீர்திருத்தமானது இத்தகைய இன்றியமையாக் காரணங்களைச் சுற்றிச் சுற்றி வந்திருப்பதைக் காண முடியும். வரலாறு அந்தக் கடமையைச் சுமத்தியிருந்தது தமிழகம் ஈன்றெடுத்த சில மகத்தான மனிதர்கள் இயக்கங்கள் அதனைத்தங்கள் தோள்மீது தாங்கிக் கொண்டனர்.

## நாடார்களின் ஆலய நுழைவுப் போராட்டம்

இந்து சமயத்துக்குள்ளேயே இதர சாதி இந்துக்களுக்குச் சமேதர்களாய்த் தங்களை நிலைநிறுத்திக்கொள்ளப் போராடத் துணிந்தனர் நாடார் சமூகத்தினர். அதனுடைய வெளிப்பாடாய் அமைந்தது ஆலய நுழைவுப் பேராட்டம்.

திருச்செந்தூரில் சுப்பிரமணிய சுவாமி கோவிலுக்குள் அன்றைக்கு நாடார்கள் நுழைய முடியாது. 1872ல் இதனை மீறி ஏழு நாடார்கள் கோயிலுக்குள் நுழைந்தார்கள். கோயில் நிர்வாகம் இவர்கள் மீது வழக்குத் தொடுத்தது. டோபி, பார்பர் போன்ற இதர கீழ்சாதியினருக்கு கொடிமரம் வரை செல்ல அனுமதி இருக்கும் போது நாடார்கள் நுழைந்தரல் கோயிலின் புனிதம் கெட்டுவிடாது என்று சொல்லி அவர்களை விடுதலை செய்து விட்டார் நீதிபதி. அதன் பின் கோவிலுக்குள் நுழைந்து கொடிமரத்தின் அருகே நின்று கடவுளை வணங்கும் உரிமை நாடார்களுக்குக் கிடைத்தது. இது முதல்வெற்றியாகக் கருதப்பட்டது.

## முடிவுரை

பெரியார் ஒரு தனி மனிதரின் பெயரல்ல. ஒரு நாட்டின் நூற்றாண்டு வரலாறு. மனித சமுதாயத்தின் ஒரு மகத்தான தத்துவம் உலகில் தோன்றி மறையும் கோடானகோடி மனிதர்களில் மிகச் சிலரே இப்படி வரலாறாக வாழ்க்கையின் தத்துவமாக வாழந்து மறைகின்றனர். பெரியார் மட்டும் பிறக்காவிட்டால் இருண்டு கிடந்த தமிழ்நாட்டிற்கு ஒளி கிடைத்திருக்காது. மனித சமூகத்தில் சுயமரியாதை உணர்ச்சியும், சகோதரத்துவமும் தோன்ற வேண்டும். ஒருவன் உயர்ந்தவன், ஒருவன் தாழ்ந்தவன் என்ற எண்ணம் அகல வேண்டும். உலகுயிர் அனைத்தும் ஒன்றென்னும் எண்ணம் உதிக்க வேண்டும். வகுப்புச் சண்டைகள் மறைய வேண்டும்.

# "தாகமுள்" "துண்டு" சிறுகதைகளில் தலித்தியச் சிந்தனைகள்

பேராசிரியை. *பே. மஹேஸ்வரி*, தமிழ்த்துறை,
ந.க.ம. கல்லூரி, பொள்ளாச்சி.

**தலித்தியம் :**

அடக்கப்பட்ட, அமுக்கப்பட்ட, நசுக்கப்பட்ட, ஓரம் கட்டப்பட்ட மக்களின் அனுபவங்களின் துயரக்குரலே, புரட்சிக் குரலே தலித்தியம். சமூக, அரசியல், பொருளாதார, சாதிய அடக்கு முறைகளில் இருந்து மீறி வெளிவரத் துடிக்கும் உணர்வை, முனைப்பை, தேவையை வெளிப்படுத்துவதே தலித்தியம். "தலித் "என்பது சாதியைக் குறிப்பதல்ல, இது அனுபவங்களையும், அது தரும் சந்தோஷங்களையும், சோகங்களையும் உணர்வது. கொடுமைக்கும், ஒடுக்கு முறைக்கும் எதிரான எழுச்சி தலித்தியம்". "முகில் தமிழில் தலித் இலக்கியம்" நூலில் குறிப்பிடப்பட்டுள்ளது.

"தலித்" என்பது வேதனையின் குறியீடாக இருக்க வேண்டுமேதவிர சுரண்டலின் குறியீடாக ஆகிவிடக்கூடாது. சுரண்டலின் மற்றும் கொடுமை, அக்கிரமங்களை எதிர்க்கிற குறியீடாக மலர வேண்டும். அவமானம், பாதுகாப்பின்மை, எதிர்ப்பு ஆகிய பொருள்களைத் "தலித்" என்கிற சொல் தர வேண்டும் என்பார் சித்தலிங்கையா.

**சமுதாயத்தில் தலித் மக்களின் நிலை :**

ஆயிரக்கணக்கான ஆண்டுகளாகச் சமூக அரசியல் பொருளாதாரத் தளத்தில் மிகவும் ஒடுக்கப்பட்டவர்களாக உள்ளவர்கள் தலித் மக்கள். நாடுசுதந்திரம் அடைந்து சுதந்திரப் பொன்விழா கொண்டாடிய பின்னும், சாதிச் சண்டைகளும், சாதியின் பெயரால் தலித்மக்கள் இழிவுபடுத்தப்படும் நிலையும் தொடர்ந்து வருவது ஆரோக்கியமான சூழல் அன்று. இன்று நடைபெறும் சாதிய மோதல்களுக்கு ஆளாகுபவர்கள் பிற்படுத்தப்பட்டவர்கள். மிகவும் பிற்படுத்தப்பட்டவர்கள், தாழ்த்தப்பட்டவர்கள். இவர்களில் அதிகம் பாதிக்கப்படுபவர்கள் தலித் மக்களே. சான்றாக இதற்கு முதுகுளத்தூர், கீழவெண்மணி, கொடியங்குளம் போன்ற இட மக்களைக் குறிப்பிடலாம்.

**இலக்கியத்தில் தலித் மக்களின் நிலை :**

இந்திய சாதியச் சமுகக் கட்டமைப்பின் தொடக்க காலந்தொட்டே மனித சமுதாயத்தின் ஒரு பகுதி மக்கள் சமூக - பண்பாட்டுமரபுகளிலிருந்தும் விலக்கிவைக்கப்பட்டுள்ளதைச் சமூக வரலாறு புலப்படுத்துகின்றது. இவர்கள் இழிவானவர்களாகக் கருதப்பட்டனர். சமுதாயத்தின் விளிம்பு நிலையில் அல்லது சாதியடிப்படையில், கீழ்நிலையில் நிறுத்தப்பட்டனர். தூய்மைக் கோட்பாட்டின் அடிப்படையில் தீண்டத்தகாதவர்களாக ஆக்கப்பட்டனர். தீண்டாமை இவர்களது பிறப்போடு தொடர்பு படுத்தப்பட்டது. இச்சமூக வராலாற்றுப் போக்கின் பிரதிபலிப்பாகவே தமிழ் இலக்கிய மரபும் அமைந்திருப்பதைக் காண முடிகிறது.

பொதுவாகத் தமிழ் இலக்கிய வரலாற்றின் நெடுகிலும், தலித்துகள் இலக்கிய மரபில் புறக்கணிக்கப் பட்டவர்களாகவும், விளிம்பு நிலையில் நிறுத்தப்பட்டவர்களாகவும் காட்சியளிக்கின்றனர். இலக்கியங்களின் கருப்பொருளாக - உள்ளடக்கமாகத் தலித்துகள் இருக்கவில்லை. கதைப் போக்குகளில் தெளிவில்லாத சித்திரங்களைப் போலவே சுட்டப்படுகின்றனர். பண்பாட்டு மரபு அற்றவர்களாக ஒதுக்கப்படுகின்றனர். இவற்றுக்கான அளவு கோல்களை இலக்கணங்கள் முன்னெடுத்துக் கொடுத்திருப்பதையும் அறிய முடிகிறது. செவ்வியல் இலக்கியம் என்று போற்றப் பெறும் சங்க இலக்கியம் தொடங்கி அண்மைக் காலம் வரை இப்போக்கு நிலவியிருந்ததை இலக்கிய வரலாறு எடுத்துக் காட்டுகிறது.

தூய்மைக் கோட்பாட்டின் அடிப்படையில் குடிகளுக்கிடையில் உயர்வு, தாழ்வு கற்பிக்கப்பட்டதையும் அவை இவர்தம் பிறப்போடு சார்த்தி வழங்கப்பட்ட சமூக வழக்கினையும் பாடல்கள் பதிவு செய்துள்ளன. பாணர், துடியர், பிறர் அழுக்கை வெளுப்போர், கூடை முடைவோர், வயல் வெளிகளில் வேலை செய்தோர் முதலானோர் இழிந்தவர்களாகச் சுட்டப்படுகின்றனர். புலையன், புலைத்தி, இழிபிறப்பாளன், இழிசினன், கடைசியர் என்று இகழப்படுகின்றனர். இம்மக்கள் சமூகத் தகுதியும், இலக்கியத் தகுதியும் பெறுவதினின்றும் மறுக்கப்படுகின்றனர். இவர்களுடைய வாழிடம் புறஞ்சேரி என்று குறிப்பிடப்படுகிறது.

தோல் பொருள், பிறர் அழுக்கு, பிரசவத் தீட்டு முதலியவற்றோடு தொடர்புடையவர்களை

இழிவானவர்களாகச் சங்க இலக்கியம் சுட்டுவதை அறிந்து கொள்ள முடியும். இம்மக்கட் பிரிவினரே பிற்காலத்தில் வைதீகப் பண்பாட்டுச் சூழலில் தீண்டாமைக் கொடுமைக்கு உட்படுத்தப்பட்டுத் தீண்டத்தகாதவர்கள் ஆக்கப்பட்டனர். இடைக்காலத்தில் வேளாண்மை மயமாக்கலின் வரலாற்றுப் பின்னணியில் மையமிட்ட அரசதிகாரங்கள் தோன்றி வளர்ந்தன. இவை கோயில் அதிகாரத்தை மையமிட்ட அதிகாரக் கட்டமைப்பாக அமைந்திருந்தது குறிப்பிடத்தக்கது. இதில் தீண்டத்தகாதவர்கள் கோவிலுக்கு வெளியே நிறுத்தி வைக்கப்பட்டனர். வாழிடங்களைப் பொறுத்து ஊருக்கு வெளியே ஒதுக்கி வைக்கப்பட்டனர். தீண்டத்தகாதவர்களுக்கும், பிறருக்கும் இடையேயான இத்தகைய பொருண்மை வேறுபாடுகளை இடைக்காலத்தில் தோன்றிய பக்தி இலக்கியங்கள் நிலை நிறுத்தியுள்ளன. நம்மாழ்வாரின் பாடலைச் சான்றாகச் சுட்டலாம்.

"குலம் தாங்கு சாதிகள் நாலிலும் கீழ் இழிந்து எத்தனை/நலம்தான் இல்லாத சண்டாளர் களாயினும் வலம் தாங்கு சக்கரத்து அண்ணல் மணிவண்ணாற்கு ஆள் என்றுஉள்/கலந்தார் அடியார் தம் அடியார் என் அடிகளே"./என்னும் நாலாயிரத் திவ்யப் பிரபந்தத்தில், "குலம் தாங்கு சாதிகள் நாலிலும் கீழ் இழிந்து எத்தனை நலம்தான் இல்லாத சண்டாளர்" என்பது தீண்டத்தகாதவர்களைக் குறிக்கின்றது. இத்தகைய தீண்டத்தகாதவர்களை சமுதாயம் எந்த அளவிற்கு வெளிக்காட்டுகிறது என்பதை, தாகமுள், துண்டு, ஆகிய சிறுகதைகளின் வாயிலாக விளக்குவதே இக்கட்டுரையின் நோக்கம்.

## "தாகமுள்" சிறுகதையில் தலித்தியம் :

மனிதநேயம் எனும் மானிட பண்புக்கெதிரே ஜாதிப்பிரிவினை என்னும் சுயநலத்தின் கொடுமையை எடுத்துக்காட்டுகிறது. இக்கதை முத்தையாபுரத்து குருக்கள் சங்கரய்யரின் மனைவி பிரசவத்தில் உயிரிழந்துவிட, குழந்தை மட்டும் பிறவிக் குருடாகப் பிறக்கிறது. வேலைக்காரி கண்ணம்மா அவளுள் எழுந்த இரக்க உணர்வால் அந்தக் குழந்தையைப் பராமரிக்கிறாள். நாள் செல்லச் செல்ல ஊரில் "கசமுசா" என்று பேசிக் கொள்கிறார்கள். அரிஜனப் பெண் எப்படி குருக்கள் வீட்டிற்குள் வரலாம்? ................ கண்ணம்மா இருபது வயதைத் தொடத்துடிக்கும் இளமைப் பருவமும் நல்ல உடல்வாகும் கொண்டவள்.... இதனால் போகப் போகப் பேச்சு வேறு திசையில் செல்கிறது.

ஒரு நாள் நாட்டாமைக்காரர் கோயில் குருக்களைச் சந்தித்து, வேலைக்காரப் பெண்ணுக்கும் அவருக்கும் முடிச்சுப்போட்டுப் பேச்சு அடிபடுவதைப் புகார் செய்கிறார். வெளியூர் சென்றிருந்த சங்கரய்யர் வீடு திரும்பினதும் - கண்ணம்மா, ஊருக்குள்ளே அசிங்கமாகக் கன்னாப் பின்னான்னு பேசுவதால், தான் தன் ஜாதி சனம் இருக்கிற பக்கமே போய்விடுவதாகவும், குழந்தையை விட்டுத் தன்னால் பிரிய முடியாது ஆகையால் அதையும் தன்னுடன் கொண்டுபோகக் கோருகிறாள்.

"கண்ணம்மா, என்னைக் கலியாணம் பண்ணிக்கணும்னு நீ ஆசைப்படறியா?

ஐயா! சாமி! மதுரைவீரன் சத்தியமா எனக்கு அப்படியொண்ணும் எண்ணமில்லீங்க.. கண்ணில்லாத இந்த குழந்தை தவிர, எனக்கு இந்த உலகத்திலே ஒண்ணும்மே வேண்டாங்க! என்று கூற,

குருக்கள் சுவாமி படத்தின் அருகிலிருந்து ஒரு மஞ்சள் கயிற்றை அவளிடம் கொடுத்து, அவளையே கட்டிக் கொள்ளச் சொல்கிறார். ஊர் வாய் ஓய்ந்தாலும், கண்ணம்மா அரிஜனப் பெண் ஆகையால், ஐயரும் அவளும் "ஜாதி ப்ரஷ்டம்" செய்யப்படுகிறார்கள். ஐய்யர் கோயிலுக்குள் வரக்கூடாது. ஊரில் எந்த நல்லது பொல்லாததுக்கும் அவர்களுக்கு அனுமதி கிடையாது. மற்றவர்களும் போகக்கூடாது. ஊர்ப் பொதுக் கிணற்றில் அவர்களுக்குக் குடிநீர் எடுப்பதற்கும் உரிமையில்லை. அதனால், குருக்கள் விவசாயியாக மாறிவிட்டார். அவர்களுடைய தண்ணீர்த் தேவைகளுக்கு இரண்டு மைல் தொலைவிலிருந்து கண்ணம்மாள் கொண்டு வந்து விடுவாள். கண்ணம்மாளுக்கு அவர்கள் தோட்டத்திலேயே ஒரு கிணறு தோண்டினால் என்ன? என்ற எண்ணம் செயலாகிறது. அவர்கள் இருவருமே தோண்டி இனிப்பான தண்ணீர், சுருக்கவே கிடைத்து விடுகிறது. இதற்குள் பட்டணத்திலிருந்து சங்கரய்யருக்கு அவருடைய நண்பர் சத்திய மூர்த்தியின் முயற்சியால் அழைப்பு வருகிறது. அவருடைய வித்யா ஞானத்துக்கேற்ப இடம், கூடவே குழந்தையின் எதிர்காலத்தையும் அங்கே கவனிக்க முடியும்.

கோடை வறட்சி ஊரார் தண்ணீருக்குத் தவிக்கிறார்கள். ஆனால், சங்கரய்யர் வீட்டுக்கிணறு ஜீவ ஊற்று. ஜனங்கள்படும் கஷ்டம் பொறுக்காமல் ஐயர், "தண்ணீருக்கு ஜாதி கிடையாது. தாகமுள்ளோர் சேந்திச் செல்லுங்கள்" என்று அட்டையில் எழுதித் தொங்கவிடுகிறார். ஆனால், கிணற்றருகே யாரும் வரவில்லை.ஊர்க்கட்டுப்பாடு அவ்வளவு கடுமை.

பட்டணத்துக்குப் போய்விட ஐயர் தீர்மானிக்கிறார். போகுமுன் நாட்டாண்மைக்காரரை அவர் வீட்டில் சந்தித்து, அவருடைய தாத்தா தன்னுடைய தாத்தாவுக்கு இதுவரை அவர் இருக்கிற பூமியைத் தானமாய்க் கொடுத்தற்கான பத்திரத்தைக் கொடுத்துவிட்டுச் செல்கிறார்.

சங்கரய்யரும் கண்ணம்மாவும் அந்த ஊரை விட்டுப் போனது, முத்தையாபுரத்து மக்களுக்கு அளவு கடந்த மகிழ்ச்சி. ஆம், கண்ணம்மாவும் அவரும் வெட்டியெடுத்த கிணற்றில் "பலாப்பழத்தை ஈ மொய்ப்பது போன்று ஊரார் போட்டி போட்டுக் கொண்டு தண்ணீர் எடுத்தார்கள்".

குருக்களின் மனைவி உயிரோடு இருக்கும் வரை வீட்டில் வேலை செய்து கொண்டிருந்த கண்ணம்மா அரிஜன் என்று அறிந்திருந்த ஊர்மக்கள், அவள் இறந்த பின்பு, அவள் குழந்தைக்கு கண்ணம்மா வளர்ப்புத் தாயானபோது தவறாகப் பேசுகிறார்கள். சங்கரய்யரும், கண்ணம்மாவும் ஊரைவிட்டுச் சென்றுவிட்ட பிறகு ஜாதி மறைந்து அவர்கள் வெட்டிய கிணற்றில் தண்ணீர் எடுக்கிறார்கள் என்றால், அவர்களுடைய மனதில், உணர்வில் ஜாதி ஒரு தொற்று நோயாகவே இருந்திருக்கிறது என்பதை உணர முடிகிறது.

**"துண்டு" - சிறுகதையில் தலித்தியம் :**

எவ்வளவு நாகரிகம் மேம்பட்டாலும், உயர்வு தாழ்வு என்ற ஏற்றத் தாழ்வு மாறவில்லை. "சாதி" என்னும் போர்வை இன்னும் விலக்கப்படாமலேயே இருக்கிறது, என்பதற்கு ஆதாரமாக விளங்குவதே இக்கதை. வேலு சிறந்த வேலையாள். பண்ணையார் அம்பலக்காரர் வீட்டில் ஓயாது வேலைசெய்து கொண்டே இருப்பவர். வேலை செய்யும் பணியாள் என்பதற்கு ஆதாரமாகத் தோளில் எப்போதும் துண்டு அணிந்திருப்பவர். அது மரியாதைக்குச் சின்னம். அடிமைத்தனத்திற்கும் சின்னம். இது வேலை செய்யும் போது தலையிலும், பண்ணையார் மற்றும் உயர் சாதியினரைக் கண்டதும் முழங்கையிலும் சாதாரண நேரங்களில் தோள்களிலும் அது மாறி மாறி பயணம் செய்யும். முதலாளி அம்பலக்காரர் வேலுவிடம் சாதூரியமாகப் பேசியே வேலை வாங்குகிறவர். இன்னொரு சிப்பந்தியைப் பற்றிக் குறை கூறினால், வேலு, மேலும் நன்றாகப் பணியாற்றுவான் என்று நினைப்பதோடு மட்டுமல்லாமல் ஓய்வில்லாமல் வேலை வாங்கிக் கொண்டே இருக்கிறார். சலிப்பில்லாமல் வேலை செய்யும் வேலுவுக்குத் தன் துண்டு மட்டுமே சோர்வைத் தருகிறது. காரணம் அம்பலக்காரர் வீட்டை அடையும் வரை தோளில் தொங்கும் துண்டு, அவரையோ அவரது வீட்டாரையோ கண்டதும், முழங்கைக்கு இறங்கிவிடும். அவர் சொல்லுகிற வேலையைச் செய்ய ஆயத்தம் ஆகும் போது, துண்டு தலையைச் சுற்றிக்கொள்ளும்.

ஒரு முழுநாள் பணியாற்றிய வேலு, மறுநாள் வேண்டுமென்றே துண்டை எடுத்துச் கொள்ளவில்லை. மனைவி எடுத்துக் கொடுக்க முற்படும் போது, வேலு, இந்தத் துண்டுக்கு, "எழவு கூட்டத்தான் நேரஞ் சரியாயிருக்கு. தலையிலெ கட்டுகிறது; ஆளைக் கண்டா அவுத்து மொழங்கையிலே போடுகிறது; இடுப்பிலெ கட்டுறதுன்னு இதுக்கே பொழுது சரியாயிருக்கு. துண்டே வேணாம். நான் போறேன்" என்று சொல்கிறார். அம்பலகாரர் திண்ணையில் வந்து உட்கார்ந்து முதுகைச் சரித்துக் கொண்டு பார்த்தார். வேலு எதிரில் இளம் வெயிலில் நின்றார். அவர் வெகு நேரம் உற்றுப் பார்த்துவிட்டு உள்ளே போய் ஒரு புதுத் துண்டைப் பெட்டியிலிருந்து எடுத்துக் கொண்டு வந்தார். "இந்தாடா வேலு. துண்டில்லாம நல்லா இல்லடா ஒனக்கு, இதை வைச்சுக்கோ அப்பத்தான் அம்சமா இருக்கும்" என்கிறார். இக்கதையில் இடம்பெறும் துண்டே, சாதியின் தன்மையினை வெளிப்படுத்துவதாக அமைகிறது. பூடகமாக பல உண்மைகளை வெளிப்படுத்தும் இக்கதையில் துண்டு என்பது குறியீடாகவும், ஜாதி உணர்வே துண்டாவும் அமைகிறது. ஜாதி உணர்வின் வீச்சை வெளிப்படுத்தும் கதை அந்தக் கலவரத்தினால் நாடே துண்டுபடும் நிலையை உணர்த்துகிறது.

**முடிவுரை :**

"ஜாதி" என்பது சமுதாய உணர்வைக் கடந்த ஒன்று. மக்கள் மத்தியில் ஏற்றத்தாழ்வு ஏற்படுத்தும் ஒரு ஊடகம். "மகாத்மா காந்தியடிகள், "அரிஜன" - என்பது இறைவனின் குழந்தைகள்" - என்று கூறிய நிலை மாறி, சமுதாயத்தில் உயர்ந்த சாதியினர் மத்தியில், மனதில், உணர்வில், ஜாதி ஒரு தொற்றுநோயாகவே இருந்திருக்கிறது என்பதை உணர முடிகிறது. தாகமுள், துண்டு ஆகிய இரு சிறுகதைகளிலும் "ஜாதி" என்பது படித்தவர்கள் மத்தியிலும், நல்ல பண்புள்ளவர்கள் மத்தியிலும் பயிர்களுக்கிடையே தோன்றிய களைகளைப் போல் ஊடுருவி உள்ளது. எனவே, இந்த ஜாதியாகிய களைகளைக் களைந்து, சமத்துவத்தை மேலோங்கச் செய்ய வேண்டும்.

# திராவிட இயக்கச் சிறுகதைகளில் தலித்தியச் சித்திரிப்பு

*போ. மாரிராஜ்*, விரிவுரையாளர், தமிழ்த்துறை,
வி.இ.நா.செ.நா. கல்லூரி, விருதுநகர்.

திராவிட இயக்கமானது சாதிய ஒழிப்பைத் தனது கொள்கைகளில் ஒன்றாகக் கொண்டுள்ளது. அதனுடைய படைப்பாளிகளுள் பெரும்பான்மையோர் பிற்படுத்தப்பட்ட சமுதாயப் பின்னணியைக் கொண்டவரேயாவர். ஆகவே அவர்களது படைப்புகளின் களமானது பிற்படுத்தப்பட்டோர் இன மக்களின் வாழ்க்கை, பழக்க வழக்கங்கள், பிரச்சனைகள் ஆகியவற்றைப் பின்புலமாகக் கொண்டுள்ளது. இருப்பினும் கொள்கை நோக்கோடு தலித் எனப்படும் தாழ்த்தப்பட்டோர் இனமக்களது பிரச்சனைகளையும் அவர்களது சிறுகதைகளில் சித்திரித்துள்ளனர். அண்ணாத்துரை, கருணாநிதி, இராம.அரங்கண்ணல் ஆகியோரின் சிறுகதைகளில் தலித் பற்றிய சித்திரிப்பு எவ்வாறு அமைந்துள்ளது என்பதை ஆராய்வதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

## திராவிட இயக்கமும் தலித் மக்களும்

திராவிட இயக்கங்களான தி.மு.க., தி.க., தோற்றுவிக்கப்படுவதற்கு மன்னர் திராவிட இயக்கச் சிந்தனையாளர்கள் "சுயமரியாதை இயக்கம்" என்னும் அமைப்பில் செயல்பட்டு வந்தனர். 1929ஆம் வருடம் செங்கற்பட்டு சுயமரியாதை மாகாண மாநாட்டில் நிறைவேற்றப்பட்ட தீர்மானங்களில்,

"மக்கள் பிறவியினால் உயர்வு தாழ்வு உண்டென்ற கொள்கையை இம்மாநாடு அடியோடு மறுக்கின்றது. வருணாசிரமமென்ற கொடுமையான கட்டுப்பாட்டையும், சமுதாய முறையில் காணப்படும் பிராமணர், சஷத்திரியர், சூத்திரர், பஞ்சமர் முதலிய ஆட்சேபகரமான பிரிவுகளையும் ஏற்றுக் கொள்ளக்கூடாது. மனித நாகரீகத்திற்கும் தேச முன்னேற்றத்திற்கும் தடையான தீண்டாமை என்பதை ஒழித்து எல்லா இடங்களிலும் எல்லா மக்களுக்கும் சமஉரிமை கொடுக்க வேண்டுமென்று இம்மாநாடு தீர்மானிக்கின்றது"1 எனத் தலித் மக்களின் மீதான பிரச்சனைகளில் கவனம் செலுத்தியுள்ளது. அவைகளே திராவிட இயக்கங்களின் தலித் மக்களின் மீதான அடிப்படைக் கொள்கை என்னும் கருதலாம். அதனடிப்படையிலேயே திராவிட இயக்கச் சிந்தனையாளர்கள் தமது செயல்பாடுகளை ஒழுங்கமைத்துக் கொண்டனர். சாதியத்தை ஆரியரின் வருணாசிரம முறையோடு தொடர்புபடுத்தி மேல்சாதி எனப்படுவோர் அனுபவிக்கும் அனைத்து உரிமைகளையும் தலித் மக்களும் அனுபவிக்க வேண்டும் என்பதே தலித் மக்கள் பற்றிய திராவிட இயக்கங்களின் நிலைப்பாடாகும்.

## கருணாநிதியின் பிரேத விசாரணை

சமுதாயத்தில் சாதிமுறையின் அடிப்படையில் உயர்நிலையினராகக் கருதப்பெறுவோர், தாழ்நிலையினராகக் கருதப்பெறும் சில பிரிவினரைத் தீண்டுதற்கும் காண்பதற்கும் தகுதியற்றவராக மனித நேயமின்றி நடத்தும் முறையானது சமுதாய அவலங்களில் மிகவும் கொடுமையானதாகும். சாதியம் இயங்கும் பல தளங்களையும் விமர்சனம் செய்கின்றதோடு தலித் மக்களுக்கு ஆதரவான போராட்டங்களையும் விமரிசித்து "பிரேத விசாரணை" என்னும் சிறுகதையைக் கருணாநிதி எழுதியுள்ளார். அச்சிறுகதை மூன்று விதமான விமரிசனத்தைக் கொண்டுள்ளது. அவை வருமாறு; 1) தலித் மீதான பாலியல் சுரண்டல், 2) தலித் மீதான தீண்டாமை 3) தலித் போராட்டங்கள் என்பவனாகும்.

### 1. பாலியல் சுரண்டல்

உயர்சாதியைச் சேர்ந்த பண்ணையார்கள் தங்களிடம் பண்ணை வேலை பார்க்கும் மக்களிடம் ஆதிக்கம் செலுத்துகின்றனர். காத்தமுத்து, கருப்பாயி ஆகிய இருவரும் கணவன் மனைவியாவர். இருவரும் பறையர் இனத்தைச் சார்ந்தவர்கள். சோலையூர் கிராமத்துப் பெரிய பண்ணை அண்ணாமலை முதலியாரிடம் வேலை செய்கின்றனர். பண்ணையார் விநாயகர் கோயில் கட்டியபோது அதில் பணிபுரிந்த காத்தமுத்து இறந்து விடுகிறான். கணவனை இழந்த கருப்பாயி தொடர்ந்து பண்ணை வேலையே செய்து வருகிறாள். அவள் பண்ணையாரின் பாலியல் சுரண்டலுக்கு உள்ளாகிறாள் கர்ப்பம் ஆகின்றாள்.

"வெளியே தலைநீட்ட வெட்கம். ஊரிலிருந்தால் தலையை வெட்டிவிடுவேன் என்று முதலியார் இறுதி எச்சரிக்கை விடுவித்தார். அவசரச்சட்டம், அந்த அபலைப் பறைச்சியால் அதைத் தாங்க முடியுமா? எஜமான் உத்திரவல்லவா? கருப்பாயி தேசப்பிரஷ்டம் செய்யப்பட்டாள்"2 பண்ணையாரின் மிரட்டலுக்கு அஞ்சி கருப்பாயி வேறு ஊருக்குச் செல்கிறாள். இதன் மூலம் பண்ணையாரின் பாலியல் சுரண்டலும், ஆதிக்கம் செலுத்திய

தன்மையும் புலப்படும்.

## 2. தீண்டாமை

உயிர் காக்கும் புனிதமான தொழிலை மேற்கொள்ளும் மருத்துவர்கள் கூடச் சாதிவேறுபாடு பாராட்டும் இழிநிலை காணப்படுகின்றது. கருப்பாயி பிரசவ வேதனையுடன் ஒரு மருத்துவமனையை அணுகுகின்றாள் அதில் "வினைதீர்த்தவூர் கிராம தர்ம ஆஸ்பத்திரி எந்நேரமும் சிகிச்சை செய்யப்படும்"3 என எழுதப்பட்டுள்ளது. ஆனால் அதற்கு மாறாக "தூ..... பறநாயே ...... துரத்துகழுதையை..... உம் ஒத்தி நில்லு...."4 எனக்கூறி சிகிச்சையளிக்க மறுக்கப்படுகின்றது. அதே நேரத்தில் மருத்துவர், பிச்சமூர்த்தி பண்ணையார் என்பவருக்கு ஏற்பட்ட தலைவலிக்கு சிகிச்சை அளிக்க காரில் ஏறிச் செல்கின்றார். இதன் மூலம் தலித் மக்களுக்கு இழைக்கப்படும் தீண்டாமைக் கொடுமையை உய்த்துணரலாம்.

3) "நாளை காலை எட்டு மணிக்கு வினைதீர்த்த ஸ்வாமி கோயிலில் அரிஜன ஆலயப்பிரவேசம் அதிவிமரிசையாக நடைபெறும். பக்தர்கள் வருக, வருக"5 என விளம்பரம் செய்யப்பட்டு அக்காலகட்டத்தில் கோயில் நுழைவுப் போராட்டம் நடைபெறுவதற்கான ஆஹத்த வேலைகள் நடந்து கொண்டிருந்தன. எந்தக் கோயிலினுள் நுழைவதற்காகத் திட்டமிட்டு வேலைகள் நடைபெறுகின்றனவோ அந்தக் கோயிலின் குளத்தில் கருப்பாயி விழுந்து தற்கொலை செய்து கொள்கிறாள். அதனால் கோயில் நுழைவுப் போராட்டம் நடைபெறாமல் நிறுத்தி வைக்கப்படுகிறது. பிரசவ வேதனையால் துடித்த கருப்பாயி தன்நிலை உணர்ந்து உயிரை விடுகிறாள். இதனை உணராத மக்கள் "சண்டாளர்களைக் கோயிலில் விடுறதுண்ணா சாமிக்கு அடுக்கவில்லை சகுனத்தடை ஏற்பட்டுவிட்டது என்றும், தலைமுறை தலைமுறையாகக் காணாத பழக்கம், இந்த அக்கிரமத்தை ஆண்டவன் சகிப்பாரா ! திருக்குளத்தையே தீட்டாக்கி விட்டாளப்பா"6 என்று கூறுவதிலிருந்து அக்காலத்திலிருந்த தலித் மக்கள் போராட்ட உணர்வுக்குத் தடைசெய்த தன்மை வெளிப்படுவதைக் காணலாம்.

## உரிமை பறிக்கும் பொருளாதாரக் கட்டுப்பாடு

இராம. அரங்கண்ணல் எழுதியுள்ள "உலகம் யாருக்கு" என்னும் சிறுகதையில் இரண்டு கலப்புத் திருமணங்கள் நிகழ்கின்றன. ஒன்று குமரன் என்பவன் அலமு என்னும் குறப்பெண்ணை மணக்கிறான். மற்றொன்று அஞ்சான் என்பவன் சிங்கி என்னும் குறப்பெண்ணை மணக்கிறான். ஆனால் குமரனின் திருமணம் வெற்றி பெறுகிறது. அஞ்சானின் திருமணமோ அதிகார வர்க்கத்தினரால் சிதைக்கப்படுகின்றது. அதற்குக் காரணம் குமரன் அவ்வூர் பண்ணையார் கோவிந்தப்பிள்ளையின் மகன், அஞ்சான் தலித் வகுப்பைச் சார்ந்தவன், பண்ணையாரிடம் வேலை செய்து அடிமை வாழ்வு வாழ்பவன். குமரன் கல்லூரியில் படித்தவனாதாலால் அவன் காதலுக்கு அவனுடைய தந்தை அங்கீகாரம் கொடுக்கமாட்டார் என்பதை உணாந்து திருமணத்திற்கு அவன் ஏற்படுத்திக்கொண்ட பாதுகாப்பினை பின்வருகின்ற விவரிப்பு மூலம் அறியமுடிகின்றது.

"காதல் மணம்" என்ற தலைப்பிட்டு அலமுவும் குமரனும் "ரிஜிஸ்டர்" கல்யாணம் செய்து கொண்டதாக விளம்பரம் செய்திருந்த செய்தி புகைப்படத்தோடு வந்திருந்தது. செய்திக்குக் கீழ் குமரனுடைய "தீவிரப்போக்கு" குறித்து சிறு குறிப்பும் தந்திருந்தார் பத்திரிக்கையாசிரியர்"7 சட்டத்தின் துணைகொண்டு தன் திருமணத்திற்கு குமரன் பாதுகாப்பைத் தேடிக் கொண்டான். அஞ்சானால் அவ்வாறு செய்ய இயலவில்லை. அதற்கு மாறாக பண்ணையார் வீட்டிலிருந்த மாடு ஒன்றைத் திருடி விட்டான் எனக் கோவிந்தப்பிள்ளையால் போலீசில் புகார் செய்யப்பட்டுக் கைது செய்யப்படுகின்றான்.

பண்ணையாரின் முயற்சியால் அஞ்சான் சிங்கி கலப்புத் திருமணம் சிதைக்கப்படுகின்றது. அஞ்சான் விரும்பியவாறு வாழ முடியாமைக்குக் காரணம் பண்ணையடிமை முறையே ஆகும்.

அதே போன்று "கணக்குத் தீர்ந்தது" என்னும் கதையில் பரமசிவ முதலியாரிடம் வேலைபார்க்கும் பரமன் தான்பெற்ற நூறு ரூபாய் கடனுக்காகத் தன் குடும்பத்தையே அடிமையாக எழுதிக்கொடுக்கின்றான். அதுமட்டுமில்லாமல் பரமனின் குடும்பத்திற்குப் புதிய உறுப்பினராக வரும் மருமகளையும் அடிமையாகவே எண்ணுகிறார் பரமசிவ முதலியார். இதன் மூலம் இச்சிறுகதை சுதந்திர இந்தியாவில் தலித் மக்கள் பண்ணையடிமைகளாக வாழ்கின்ற அவலத்தைச் சித்தரிக்கின்றது.

## தலித் மக்களின் வாழ்நிலை

நமது நாடு விவசாய நாடாகும். விவசாயப் பணிகளில் கூலிவேலை செய்பவர்கள் தாழ்த்தப்பட்ட இனத்தைச் சார்ந்தவர்கள் ஆவர், அவர்கள் அன்றாடம் உழைத்தால் மட்டுமே உயிர்பிழைத்து இருப்பதற்கான உணவுத்தேவைகளைப் பூர்த்தி செய்ய இயலும்.

"பள்ளன், பறையன், தோட்டி, தொம்பன், உட்கார்ந்துகொண்டே எவ்வளவு நாள் சாப்பிட முடியும்?

ஏய்த்துப் பிழைக்கும் தொழில் ஆதி - திராவிட வர்க்கத்திற்கே விதிவிலக்கு"8 என அண்ணாத்துரை தம் சிறுகதை ஒன்றில் தலித் மக்களின் உழைப்பினைச் சுட்டுகிறார். உழைப்பின் மூலம் மட்டுமே பொருளாதாரத்தை ஈட்டுகின்றனர் எனவும் கூறுகின்றார். ஆனால் அவர்கள் பாக்கும் வேலையில், உழைப்பில் எந்தவொரு மேல் வர்க்கத்தினரும் நிறைவடைய மாட்டார்கள் என்பதை "ஐயர் மட்டும் என்ன, வேறு எந்த ஜாதி "எஜமானன்" தான் பள்ளன். பறையன் வேலையில் திருப்திப்படுவான், மனமார அன்பு காட்டுவான்?"9 என அனைத்து நிலவுடைமையாளர்களுமே உழைப்பினை அதிகமாகச் சுரண்டுபவர்களாகவும், சுரண்டல்களுக்கு உள்ளாகுபவர்களாகத் தலித் உழைப்பாளிகள் உள்ளனர் என்ற கருத்தினை அண்ணாத்துரை தம் கதையின் மூலம் முன்வைக்கிறார்.

## மனுநீதியும் பெயர் வைப்பும்

அந்தணர்களைப் பிறப்பின் அடிப்படையில் உயர்வுபடுத்தி எழுதப்பட்டது மனுநீதி என்னும் நூலாகும். அதில் பெயர் வைப்பது குறித்து

"பிராமணனுக்கு மங்களத்தையும், சத்திரியனுக்கு பலத்தையும், வைசியனுக்குப் பொருளையும், சூத்திரனுக்குத் தாழ்வையும் காட்டுகிறதான பெயரை இடவேண்டியது. சூத்திரனுக்குத் "தாஸன்" என்ற தொடர் பெயராக இடவேண்டியது"10 எனச் சாதிக்குச் சாதி வேறுபாடு இருக்க வேண்டுமெனக்கூறும். இருப்பினும் அம்முறையைத் தற்போது சமுதாயத்தில் கடைபிடிப்பதில்லை. எல்லோரும் ஒரே மாதிரியான பெயர் வைக்கும் பழக்கம் நடைமுறை ஆகிவிட்டது. ஆயினும் தலித் மக்கள் "சாமி" என்னும் இறுதி ஒட்டுடன் முடியும் பெயரைச் சூட்டினால், "பார்ப்பனர், ஏன் பார்ப்பனரல்லாத எந்த எஜமானருமே, அதுபோன்ற அல்லது வேறு அழகான பெயருள்ள எந்த ஆதி திராவிடனையும் அப்பெயர் முற்றிலும் சொல்லி அழைப்பதில்லை காரணம்? அப்பெயரில் கடைசியில் இருப்பது "சாமி" என்ற சொல் பாருங்கள்"11 எனப் பழைய மனுநீதி முறையையே உயர்சாதியினர் கடைபிடிக்கும் பிற்போக்கான பழக்கத்தை அண்ணாத்துரை குறிப்பிட்டுள்ளார். "சாமி" என்ற சொல் சமூகத்தில் உயர்வான மதிப்பீட்டைப் பெற்றிருப்பதால் அச்சொல்லால் தலித் மக்களை அழைக்க உயர்சாதியினர் வெறுக்கின்றனர் எனலாம். பெயரிலும் தாழ்நிலையை அடையாளப்படுத்த வேண்டும் என்பது மனுநீதியின் பெயர் வைப்பு முறையோடு ஒத்துள்ளது எனலாம்.

## தொகுப்புரை

திராவிட இயக்கங்கள் ஆரம்ப காலத்திலிருந்தே தீண்டாமை எதிர்ப்பு, சாதி ஒழிப்பு எனத் தலித் மக்களின் நலனன்களில் அக்கறை செலுத்தி வந்துள்ளனர். ஆயினும் அவர்களது இலக்கியங்களில் தலித் மக்கள் பிரதானப் பாத்திரங்களாகச் சித்திரிக்கப்படவில்லை. பண்ணையார்களின் சுரண்டல், பாலியல் ஆதிக்கத்திற்கு உட்படுபவர்களாகவும் பொருளாதாரத்தில் நிலமற்ற உழவர்களாகவும், பிழைப்பிற்காக நிலவுடமையாளர்களைச் சார்ந்து இருப்பவர்களாகவும், குடியிருக்கச் சொந்த வீடின்றி உயர்சாதியினரின் தீண்டாமைக் கொடுமைக்கு உள்ளாகுபவர்களாகவும் சித்திரிக்கப்பட்டுள்ளனர்.

## குறிப்புகள்

1. நமது குறிக்கோள் (முதல் பாகம்), சுயமரியாதை-ஜஸ்டிஸ்-சமதர்ம திராவிடர் கழக மாநாட்டுத் தீர்மானங்கள், பக் 61-7. 2. மு. கருணாநிதி, கலைஞர் கருணாநிதியின் சிறுகதைகள், ப. 152, 3. மேலது ப. 150, 4. மேலது ப. 150, 5. மேலது ப. 148, 6. மேலது ப. 151-152, 7. இராம. அரங்கண்ணல், திராவிட இயக்க எழுத்தாளர் சிறுகதைகள் ப. 13. 8. மோ. பாட்டழகன் (தொ.) பேரறிஞர் அண்ணாவின் சிறுகதைகள் - தீட்டுத்துணி (முதல்தொகுப்பு) ப. 397, 9. . மேலது ப. 399, 10. தந்தை பெரியார், மனுநீதி - ஒரு குலத்துக்கு ஒரு நீதி, ப. 10, 11. மோ. பாட்டழகன் மு.கு. தீட்டுத்துணி, ப. 401.

## பயன்பட்ட நூல்கள்

1. மோ. பாட்டழகன் (தொகுப்பாளர்), பேரறிஞர் அண்ணாவின் சிறுகதைகள் (முதல் தொகுப்பு), மீனா கோபால் பதிப்பகம், சென்னை 1999.
2. மு. கருணாநிதி,கலைஞர் கருணாநிதியின் சிறுகதைகள், பாரதி பதிப்பகம், சென்னை - 1998.
3. இராம. அரங்கண்ணல், திராவிட இயக்க எழுத்தாளர் சிறுகதைகள், பூர்ணிமா பதிப்பகம், சென்னை. 1997.
4. தந்தை பெரியார், மனுநீதி - ஒரு குலத்துக்கு ஒரு நீதி! பெரியார் சுயமரியாதை பிரச்சார நிறுவன வெளியீடு சென்னை.
நமது குறிக்கோள் - பெரியார் சுயமரியாதை பிரச்சார நிறுவன வெளியீடு சென்னை. 1992

# கே. டானியலின் பஞ்சமர் நாவல் : தலித்தியப் பார்வை

*நா.ரேணுகா* ஆய்வாளர்,
அண்ணா பொதுவாழ்வியல் மையம், சென்னைப் பல்கலைக் கழகம்

தாழ்த்தப்பட்டவர்கள், மலைவாழ் மக்கள், புதிய பௌத்தர்கள், உழைக்கும் மக்கள், நிலமற்றவர்கள், ஏழை விவசாயிகள், பெண்கள், அரசியல் ரீதியாகவும் பொருளாதார ரீதியாகவும் மதத்தின் பெயரால் சுரண்டப்படும் அனைவரும் தலித்துகள் என்று சொல்லப்பட்டு வந்தன. இருப்பினும்தமிழ்ச் சூழலைப் பொறுத்தவரையில் நால் வருணத்திற்குள் குறிக்கப்படாமல் தீண்டாமைக் கொடுமைகளுக்கு உள்ளாகும் மக்களை தலித் எனக் குறிக்கின்றனர்.

இம்மக்களைத் தமிழ் இலக்கியங்கள் இழிசனர் என்று குறிக்கிறது. இன்று கிடைக்கும் தமிழின் முதல் நூலான தொல்காப்பியம் இவர்களை நால் குலத்தில் சொல்லாது இழிந்தோர் எனக் குறிக்கிறது. மனுதர்மமும் இவர்களை நால் வருணத்திற்குள் அடக்காது பஞ்சமர் எனக் குறிக்கிறது. இது இப் பகுப்பைப் பிறப்பினடிப்படையில் செய்கிறது.

### பஞ்சமர் – சொல்லாடல்

நான்கு வருணங்களுக்குள் வராதவர்கள் ஐந்தாவது வருணத்தவர் என்ற பொருளில் பஞ்சமர் என்று வழங்கினர். ஆனால் இச்சொல்லாடலை எதிர்த்து எம்.சி.இராசா, சி.அயோத்திதாசர், இரட்டைமலை சீனிவாசன் போன்றோர் போராட்டம் நடத்தினர். இச்சூழலில்; ஈழச் சூழலில் தலித் மக்களைக் குறித்து விரிவாக பேசிய தலித் இலக்கிய முன்னோடியான கே.டானியல் தம் நாவலொன்றிற்கு பஞ்சமர் என்று பெயரிட்டமை கவனத்திற்குரியது. இவர், பள்ளர், பறையர், நளவர். வண்ணார், அம்பட்டர் எனும் ஐந்து சாதிகளை இணைத்த சொல்லே பஞ்சமர் என்று பஞ்சமர் என்ற சொல்லுக்குரிய விளக்கத்தைக் கூறுவதுடன், இலங்கைத் திருநாட்டில் உரிமைகள் மறுக்கப்பட்டவர்களுள் குறிப்பிடத்தக்க நளவன், பள்ளன், பறையன், வண்ணான், அம்பட்டன் என்ற ஐந்து சாதியினரையும் பஞ்சமர் என்ற சொல்லுக்குள் அடக்கியுள்ளனர். என்று பஞ்சமர்கள் யார் யாரென விரிவும் தருகிறார். ஆனால் தற்போது தாழ்த்தப்பட்ட மக்களைக் குறிக்கும் பறையன், பஞ்சமன், ஆதிதிராவிடன், அரிஜன் முதலான சொற்களுக்குப் பதிலாக, தலித் என்ற சொல்லாடல் கையாளப்படுகிறது.

### ஈழத் தலித் இலக்கியப் போக்கு

ஈழத்தைப் பொறுத்தவரையில் தலித்துகளாக குறிக்கப்படும் மக்கள் வேளாள மக்களால் அடிமைப்படுத்தப்பட்டு ஒடுக்குமுறைக்கு உள்ளாகினர்.இத்தீண்டாமை எதிர்ப்புணர்வின் வெளிப்பாடாக தலித் புரட்சிகள் ஏற்பட்டன. அதற்கான செயல்பாடுகளில் ஒன்றாக இலக்கியத்தை மேற்கொண்டனர்.ஈழத் தமிழர்களிடையே நிலவிய சாதிப்பிரிவினைகளும் வர்க்க வேறுபாடுகளும் அதனூடாக நிகழ்ந்த தீண்டாமைக் கொடுமைகளும் அங்கே தலித் இலக்கியங்கள் தோன்ற காரணமாயின. இந் நிகழ்ச்சிகளே தலித் நாவல்களின் கதைக்களமான அமைந்தன.

### கே.டானியலின் ஆக்கங்கள்

தமிழில் எழுதப்பட்ட தலித் ஆக்கங்களில் ஈழத்துப் படைப்பாளர் கே.டானியல் எழுதிய தலித் நாவல்கள் முதலிடம் வகிக்கின்றன. இவ்வாறாக, கே.டானியலின் ஆக்கங்கள் ஈழத் தமிழ்த் தலித் இலக்கியத்தில் கவனத்திற்குரிய இடத்தைப் பெறுகின்றன. இவரது அடிமைகள். கானல், கோவிந்தன், தண்ணீர், பஞ்சமர், பஞ்ச கோணங்கள் முதலான நாவல்கள் அனைத்தும் தலித் மக்களின் பிரச்சனைகளை, உணர்வுகளை மையப்படுத்திய தலித் நாவல்கள்.மையக்குறி, முருங்கை இலைக் கஞ்சி, இருளில் கதிர்கள் முதலிய குறும் நாவல்களும் தலித் தொடர்புடையனவே.

### கே.டானியல் நாவல்கள் : கருத்து நிலை

கே.டானியல் தம் நாவல்களில் ஈழ மக்களின் சாதிப் பிரச்சனைகளையும் கொடுமைகளையும் மேல சாதியினரின் ஊழல்களையும் முன்னெடுத்து பேசுகிறார். தலித் மக்கள் விடுதலை பெற வேண்டிய உணர்வையும் எழுச்சியையும் தம் நாவலில் வீச்சுடன் எடுத்துரைக்கிறார். இவரது நாவல்கள் வேளாள சாதியினரின் ஒடுக்குமுறைக்கெதிரான எதிர்ப்புணர்வாக அமைகின்றன.

இவர் தலித் பிரச்சினைகளை மாவோ சிந்தனை வயப்பட்டு இடதுசாரி அரசியலூடாக வர்க்கப் பார்வையில் காண்கிறார். இதனால் இவரது நாவல்களில், சாதி வேறுபாடு சிறிது மட்டுப்பட்டு வர்க்க ரீதியில் அடிமைப்பட்டு பொருளாதாரச் சூழலில் உழலும் தலித்துகளைப் பற்றி விரிவாக பேசுகிறார். என்னால் படைக்கப்பட்ட இலக்கியங்களில் சாதிப் பிரச்சினை வர்க்கப் பிரச்சினைக்கு அப்பாற்பட்ட ஒன்று என்று நான் எழுதியதில்லை. கூர்ந்து கவனித்துப் பார்க்குமிடத்தில் வர்க்க உணர்வை ஒரு படி முன் தள்ளுவதற்காகவே எனது சொந்த அனுபவங்களுக்குட்பட்ட காரண காரியங்களை வைத்து அவற்றை ஒரு வர்க்கப் போராட்டத்திற்கான பாதைக்கு முன்னெடுத்துச் செல்லவே முயற்சித்திருக்கிறேன்.என்று கே.டானியல் தம் நாவல் குறித்தும் தம்முடைய வர்க்கப் பார்வைக் குறித்தும் குறிப்பிடுவது கவனத்திற்குரியது.

## பஞ்சமர் நாவல் : கருப்பொருளும் கதைக்களமும்

கே.டானியலின் நாவல்களுள் பஞ்சமர் நாவலை மட்டும் ஆய்வுக்கு எடுத்துக் கொள்வதால், அந்நாவலை இங்கு ஆராய்கிறோம்.சாதிய ஒடுக்குமுறைக்கு எதிராகப் பஞ்சமர் என்றழைக்கப்பட்ட தலித் மக்களின் எழுச்சி, அதனூடாக ஏற்பட்ட சாதி மோதல்கள், ஆதிக்கசாதியினர் தலித் பெண்கள் மேல் செலுத்திய பாலியல் வன்முறைகளை வெளிச்சத்திற்குக் கொண்டு வருதல் முதலான செயல்பாடுகள் பஞ்சமர் நாவலின் கருப்பொருளாக அமைந்தன.பஞ்சமர் நாவல் 1956 முதல் 1969 வரை இடைப்பட்ட காலத்தில் நடந்த, வேளாளர் - பஞ்சமர்களுக்கு இடையே நடந்த போராட்டங்கள். பஞ்சமர்கள் (தலித்) எழுச்சி முதலானவற்றை மையமாகக் கொண்டு எழுதப்பட்டது.

நந்தாவில், வட்டுக்கோட்டை முதலிய சிற்றூர்களை நிகழ்களமாகக் கொண்டு தேநீர்க் கடைகளில் பஞ்சமர்கள் நுழைவு, பஞ்சமர்கள் கந்தசாமி கோயில் நுழைவு, ஒடுக்குமுறைகளை எதிர்த்து மீறுதல் எனப் பஞ்சமர்கள் நடத்திய போராட்டங்கள் அனைத்தும் கதைக் கருவாக அமைந்துள்ளன.பஞ்சமர் நாவலில் சொல்லப்படும் நிகழ்வுகள் யாவும் ஈழத்தில் தலித்துகளால் நடத்தப்பட்ட உரிமைப் போராட்டங்களே. இப்போராட்டங்களில் டானியல் அவர்கள் கலந்து கொண்டார் என்பதும் இப்போராட்டங்கள் அவரது சமகாலத்தில் நடைபெற்றது என்பதும் இந்நாவல்கள் வீரியத்துடன் உள்ளார்ந்து அமையக் காரணமாய் அமைந்தது. இதனால் இதனை கதை என்று கூறுவதை விட ஈழத்தில் நடந்த தலித் எழுச்சி போராட்டங்களின் சம்பவக் கோவை என்று கே.டானியல் அவர்களே குறிப்பிடுகிறார்.

## ஆதிக்கச் சாதியினரின் கொடுஞ்செயல்கள்

ஆதிக்கச் சாதியினரால் தலித் மக்கள் அனுபவிக்கும் தீண்டாமைக் கொடுமைகளையும் அதற்கும் மேலாக வேளாள மக்கள் தலித் மக்கள் மீது செலுத்திய அடக்குமுறைகளையும் கொடுமைகளையும் இந்நாவலில் காட்டியுள்ளார். சான்றாக, வில்லுண்டியிலை முதலி சின்னத் தம்பின்ரை உயிரை எடுத்தாங்கள். பச்சிலைப் பள்ளிக் கந்தையனை வைக்கல் பட்டடைக்க உயிரோடை போட்டுக் கொளுத்தினாங்கள். காரை தீவுக்கை எல்லுவனை விதையை நெரிச்சுக் கொண்டு போட்டு, கிணத்தடி ஆடகாலிலை கட்டித் தூக்கினாங்கள். கரவெட்டியிலையும் பூனரியிலையும், இருவாலைக்கையும் வீடுவாசல்களைக் கொளுத்தினாங்கள்... என்னர இந்த அறுபத்தைஞ்சு வயதுக்கிடையிலை எனக்குத் தெரிஞ்சது இவ்வளவு. என்று பஞ்சமர் நாவலில் வரும் ஐயாண்ணன் கதாபாத்திரம் கூறுவதைக் காட்டலாம்.

## கதை மாந்தர்களும் மொழியும்

இந்நாவலில் வரும் மக்கள் அனைவரும் தலித் மொழியிலே பேசுகின்றனர். தலித் மக்களின் பேச்சு வழக்கில் அமைந்த இவ்வழக்கு இழிசினர் வழக்கு என்று கூறினாலும் தமிழுக்கு எசமானர்கள் இவர்களே. இவர்களின் வழக்கே தமிழ் என்று இந் நாவலின் முன்னுரையில் எடுத்துரைக்கிறார்.இவர்களே தமிழுக்கு எசமானர்களுமாவர். அதனால் இந்த எசமானர்கள் பேசிய வழக்கையே தமிழென ஏற்று இதன் பாத்திரங்களுக்குப் பூரண சுதந்திரம் கொடுத்துப் பேச வைத்திருக்கிறேன்.

என்ற கூற்றே இதனை மெய்ப்பிக்கிறது.

இந்நாவலில் வலம் வரும் மக்கள் யாவரும் வாழும் மக்களே. ஈழப் போராட்டத்தில் பங்கெடுத்த மக்களின் பிரதிநிதிகள். ஐயாண்ணர் என்ற பாத்திரம் மாக்ஸிம் கார்க்கியின் தாய் நாவலின் இராசண்ணர் பாத்திரத்தின் பாதிப்பு என கே.டானியல் அவர்கள் குறிப்பிடுகிறார்.

# அன்பாதவனின் நெருப்பில் காய்ச்சிய பறையில் தலித்தியம்

*ப.வடிவேல்* விரிவுரையாளர்,
தமிழ்த்துறை, ந.க.ம.கல்லூரி, பொள்ளாச்சி – 1.

தலித்தியம் என்பது தீண்டத்தகாதவர்கள் என்று புறக்கணிக்கப்பட்ட மக்களைச் சமூக அளவில் முன்னேற்றத் தோன்றிய இயக்கமாகும். காலங்காலமாகப் போராட்டமே வாழ்வாகி எதிர்பார்ப்புகளெல்லாம் ஏமாற்றமாகி, பொருளாதார நிலையிலும், அரசியல் நிலையிலும், பண்பாட்டு நிலையிலும் வதைப்பட்ட இம்மக்கள் ஒன்றுபட்டுப் போராடுவதற்கு இவ்வியக்கம் செயல்பட்டு வருகின்றது. வேதனை, துன்பம், அடிமைத்தனம், அவமானம், புறக்கணிப்பு, வெறுப்பு போன்றவற்றால் இந்தியச் சமூகத்தில் தலித்துகள் அனுபவிக்கும் வன்கொடுமைகளைத் தன்னுள் உள்ளடக்கமாகக் கொண்டு நிற்கும் படைப்புகளையே தலித் இலக்கியங்கள் எனலாம்.

## தலித்தியக் கவிதைகள்;

காலந்தோறும் புதுப்புதுப் பரிமாணங்கள் காட்டிநிற்கும் கவிதையின் ஒரு பரிமாணம் அல்லது ஒருமுகம் தலித் கவிதைகள். இவை தலித் மக்களின் குமுறல்களை அழும்குரலில் வெளியிடுவன எனும் ஒற்றைச் செயலோடு நின்று விடுவனவல்ல. கசந்து போன தலித் வாழ்வின் நம்பிக்கைக் கீற்றுகளாய் ஒளிரும் பண்பாட்டு மின்னல்களைப் பதிவு செய்வதும் இவற்றின் கடமையே, கவிதை வடிவம் நீண்ட காலமாகத் தலித் வாழ்க்கையிலிருந்து விலகியே இருந்தது. இருப்பினும், எண்பதுகளுக்குப் பிறகு கவிதைகளில் தலித்தியம் தடம்பதிக்கத் தொடங்கியுள்ளது. தலித்தியக் கவிதைகள் அடித்தள மக்களின் பிரச்சனைகளை மிகக் கவனமாகத் தேர்ந்தெடுக்க வேண்டும். உணர்வுகளையும், பழகு மொழியையும் மிகச் சாதுரியமாகக் கலைவயப்படுத்த வேண்டும். இயல்பாகவும், உண்மையாகவும் இது வெளிப்பட வேண்டும் எனும் இலக்கிய விமர்சகர் தி.சு.நடராசன் அவர்கள் கருத்தையும், வலிகளின் குரலாய்க் கவிதைகள் வெளிப்படுவதென்பது தலித் படைப்பாக்கத்தில் தவிர்க்க இயலாதது. நீண்ட காலத்திற்குப் பிறகு ஒலிக்கும் ஒரு புதிய குரலை வாசகனும் விமர்சகனும் அடையாளங்காண்பதும் புரிந்து கொள்வதுங்கூட காலத்தின் கட்டாயங்கள் தாம் எனும் அன்பாதவனின் கருத்தும் தலித் கவிதைகள் குறித்து எண்ணும் போது மனதில் கொள்ள வேண்டிய கருத்துக்களாக உள்ளன.

## அன்பதாவன் கவிதைகள்:

2004ஆம் ஆண்டிற்கான இலக்கியப் பரிசு பெற்ற கவிஞர் அன்பாதவனின் கவிதைகள் குறித்து'. ஒரு தலித் கவிஞனுடைய காயம்பட்ட நெஞ்சின் சீற்றம் நெருப்பில் காய்ச்சிய பறையாக அதிர்கிறது. அதே சமயம் அந்தக் கலைஞனுக்குள் மறைந்திருக்கும் அன்பின் பெருக்கு சலிப்பின்றி ஓடும் ஓடையின் சலசலப்புப் போல் ஒரு தொலைதூர நாதசுர இழைவு போல் ஒரு கவிதைகளெங்கும் மொட்டவிழ்த்துக் கொண்டே இருக்கிறது. ஒரு கணம் பூகம்பம் – மறுகணம் வீறிடும் ஒரு மழலையின் உயிர்ப்பு என மாறிமாறிச் சாட்டையின் வீச்சாகவும், சங்கீதமாகவும் அனுபவம் தருகின்றன அன்பாதவன் கவிதைகள் என சிற்பி இலக்கிய விருது 2004-க்கான குழு கணித்துள்ளது.

நூலில் நெருப்பில் காய்ச்சிய பறை எனும் தலைப்பிலான முதற்கவிதையிலேயே பறையின் முழக்கத்தை நெருப்பின் தகிப்பில் பொங்கியெழும் பெருமுழக்கம், சிறு தீண்டலிலும் காற்றின் அணுக்களில் பேரலையாய் அதிர்வுகள் எனும் இவையாவும் மறுக்கப்பட்டவர்களின் மனதாகவும், ஒடுக்கப்பட்டவர்களின் குரலாகவும் தொனிக்கிறது என்கிறார். இவரது கவிதையில் பறை என்பது ஒரு எதிர்ப்பின் குரலாக ஒலிக்கிறது.

## மாறுவேடம்;

சமூக அவலங்களைப் பார்த்து கோபப்பட்டு அதனால் ஒன்றும் பிரயோசனம் இல்லை என்று உணர்ந்து கொண்ட ஒரு இயலாமையின் உச்சகட்டத்தில் கோபம் மாறுவேடம் அணிந்து நையாண்டியாக இவரது கவிதைகளில் தெரிவிக்கின்றன. கனாக்கண்டேன் தோழா கவிதையில்

யானை முகத்தோனின்
பால்குடி நாளின் மாலைவெய்யிலில்

பனைமரத்தடியில் கள்ளச்சாராயம் பருகியபடி யோசித்த
பக்தரின் மனதில் ஞான மின்னல்
துடியான நம்ம கருப்புசாமி மட்டும்
சாராயம் குடிச்சு குடல்கறி தின்று
ஒரு திருவிளையாடல் நடத்தினா...
...ம்ம் நம்ம சாமிக்கெல்லாம் வெவரம் பத்தாது என்பதில் அவரது கோபத்தின் இலக்குப் புரிகிறது.
இது பேன்றே கடவுளர் தொடர்பான அவரது கவிதை வரிகள் சில
... ஆனாலும் சேரியின் சின்னத் தெருக்குள்
மாரியம்மன் தேர் வந்ததேயில்லை
கருவாட்டுக் குழம்பும் முருங்கைக் கீரையும்
அரிசி அடையும் – பிரசாதங்கள் ஆகாதா
நம்ம சாமிக்கு பிடிச்சதை தானே

நாம் படையல் போட முடியும். யோசி நீ கருப்பா என்பதாக மேற்சுட்டிய இலக்கை மையப்படுத்தியே நையாண்டி செய்கின்றன.

**பெயர்:**

ஒரு மனிதனை அடையாளப் படுத்தும் பெயரே கூட இவர்களுக்கு சாதியையும் தொழிலையும் அடையாளப்படுத்தியே அமைகிறது என்பதை பெயர் என்னும் கவிதையில்,

அம்மாவும் அப்பாவும் ஆசையோடு வைத்த பெயரில்
யார் அழைக்கிறார்?
சாதியும் தொழிலுமே பெயராச்சு
ஆலயங்களுள் நுழைய மறுக்கப்பட்ட எனக்கு
உதவாத ஆண்டவனின் பெயர்கள் எதற்கு
புறக்கணித்துத் தூக்கி எறிகிறேன் எனச் சுட்டுகின்றார்.

கடவுளே ஆனாலும் தலித் அவதாரம் எடுப்பின் மிகுந்த சிரமத்துக்கு உள்ளாவார் என்பதாக சாபவரம் எனும் கவிதையில்,

கொசுவெனப் பிறப்பினும் கிடைத்திருக்கும் பயமும் மரியாதையும்
தலித் வாழ்வை வாழ இறைவனாலும் முடியாது.
ஆயுதங்களில்லா தலித் அவதாரம்
முட்டாள்தனமான திருவிளையாடல் என்கிறார்.

சினம் காட்டும் கொச்சைச் சொற்கள்:

மாட்டுக்கறி எனும் தலைப்பிலான கவிதையில் பசுவதை பற்றிய பதிவுகளை வெளிப்படையாகவே விளாசியுள்ளார்.

ஏம் மாமா கறி வாங்கலியா...
அதுதான் மடசாமியாரும் கறிவெட்டக் கூடாதுன்னு
சொல்லிட்டாராம், காவிக் கொடிக்காரனுங்க
கடைகிட்ட கலாட்டா பண்றாங்களாம்...
மாட்டுக்கறி துன்னாம நாக்கே சவசவன்னுது என்று

மாமனும் மருமானும் பேசிக் கொள்வதாகச் செல்லும் கவிதையில்

நம்மாளுவ மாட்டுக்கறிதுன்னா,

அவுருக்கு இன்னா வந்துதாம் மாமா...

ம்ம்... மாடு கோமாதாவாம் லச்சிமியாம்.

அப்போ பால் குடிக்கலாமா?

பாலும் மாட்டோட ரத்தம் தான்...

கன்னுக் குட்டிக்கு துரோகம் செய்றத பூணூல் ஒத்துக்கும்.

என சினம் சொற்களாய் சிதறுகின்றது.

நிறம் என்னும் கவிதையிலோ பூடகமோ, மேல்பூச்சோ, ஒளிவுமறைவோ இன்றி சினத்தில் சொற்கள் நிர்வாணமாய் நிற்கின்றன.

நூலின் இறுதியில் வலிகளின் குரலாய்க் கவிதை என்னும் கட்டுரையில் ஒரு சராசரி மனிதன் எனில் கெட்ட வார்த்தைகளை வெளிப்படையாக பிரயோகிக்க முடியும். ஆனால் படைப்பாளியாக பரிணமிக்கையில் அது நுட்பங்கள் நிறைந்த கலைப்படைப்பாகவும் இருத்தல் வேண்டும். சற்றே சறுக்கினாலும் வார்த்தைச் சிங்கங்கள் எழுதுபவனை விழுங்கி விடும் அபாயம் உண்டு என்று புரிந்து கொண்டு எழுதிய அவரே மேற்காட்டிய இருகவிதைகளிலும் தவறிவிட்டதாகவே தெரிகின்றது.

### தலித்தியக்குரல்:

இறுதியாக உள்ள இனி எம்முறை, இடியின்மொழி, கறுப்புப்படை எனும் மூன்று கவிதைகளும் தலித்துக்களுக்கு நம்பிக்கை ஊட்டுவனவாக அமைந்துள்ளன.

...எமது கரங்கள் ஒன்றிணைந்து எழுகிறோம்

புதிய உத்வேகத்தோடு

பழைய கேள்விகளுக்கு பதிலாய்... என இனி எம்முறையிலும்

தெருக்கூட்டும் பாடல்கள் துடைப்பங்கள்,

மலவாளிகளை, பிணமடிக்கும் கழிகளை

ஆயுதமாக ஏந்துகிறோம்

எம்மை நிராகரித்து நிறுவப்பட்ட

எல்லாவற்றிற்கும் எதிராக என இடியின் மொழியிலும்,

வெள்ளை கறுப்பு எனும் நிற பேதங்களை சதுரங்கக்

காய்களாக்கிக்கொண்டு,

சதுரங்கத்தில் சரிசமமாய் இருப்பினும்

கறுப்பாய் இருப்பதால் அவமானக் கேவலமோ?

தேவையில்லை. வெள்ளைப்படையே வா

காலங்காலமான உன் தாக்குதலுக்குப் பதிலாய்க்

காத்திருக்கிறது கறுப்புப் படை

எதிர்க்கத் துணிவுடன் எமக்குண்டு வீரர்கள் என

கசந்துபோன தலித் வாழ்வின் நம்பிக்கைக் கீற்றுகளாய் சில சரிவுகளை உட்பொதிந்து தலித்துகளின் ஒட்டுமொத்தக் குரலாக

நெருப்பில் காய்ச்சிய பறையை அதிர ஒலித்துக் காட்டியுள்ளார் அன்பாதவன்.

# கழிசடை - பின் நவீனத்துவத்துள் தலித்தியத்தின் இயங்குதளம்

*முனைவர். திருமதி. சி. வாசுகி*, தமிழ்த்துறை,
அ.ப.ம. கலைக் கல்லூரி, சின்னக்கலையம்புத்தூர், பழனி.

## முகவுரை :

மனித சமுதாயம் மேம்பட்டு வருகின்றது என்பதைப் பொருளியல் ஆக்கமும் பல்வேறு கோணங்களில் பரிணமித்துக் கொண்டிருக்கும் இலக்கியக் கருத்தாக்கங்களும் மெய்ப்பிக்கின்றன. மரபை அடுத்து நவீனத்துவம் பிறந்தது. இதிலிருந்து பின் நவீனத்துவம் கிளைத்தது. நவீனத்துவம் தேசியம் என்றால் பின் நவீனத்துவம் சமுதாயம் எனலாம் மனித வளர்ச்சியைக் குன்றச் செய்யும் சமுதாயச் சிக்கலுக்கான காரணங்கள் அனைத்தையும் பின் நவீனத்துவக் கூறுகளாகக் கொள்ளலாம். புனைவியல், நடப்பியல் ஆகியவற்றின் கூறுகளையும் இது கொண்டிருப்பினும் செயல்படும் முறையாலும் தீர்ப்பளிக்கும் விதத்தாலும் அவற்றினின்று வேறுபடுகின்றது. "போஸ்ட் மார்டனிசம் எதையும் கேள்விக்குள்ளாக்குகிறது. கிண்டல் செய்கிறது. மீண்டும் வேறுமாதிரி வாசித்துப்பார்க்கச் சொல்கிறது." (எம். ஜி. சுரேஷீடன் ஓர் உரையாடல் கருத்தியல் - பரிசோதனை - புனைவு, ப.6) எனவரும் எம்.ஜி. சுரேஷின் கூற்று இதற்குப் பொருந்துகிறது. எனவே ஒன்று விதிக்கப்பட்ட நிலையிலிருந்து மாறி மேம்படுத்துவதற்காக அடித்தளமிடுவதும் மக்களுக்குப் பயன்படாத மரபுசார்ந்த அனைத்தையும் மாற்றுவதும் பின் நவீனத்துவம் எனக் கொள்ளலாம்.

"ஒவ்வொரு விஷயத்திற்கும் ஒவ்வொரு நியாயம், தர்க்கம் இருக்கிறது என்கிறார், எம்.ஜி. சுரேஷ். இக்கூற்றை நன்கு ஆராய்வோமெனில் கண்ணுக்குப் புலப்படும் அத்தனை பிரச்சனைகளையும் தன் போக்கில் அலசி ஆராய்வது, பிரச்சினைகளின் தன்மைக்கேற்ப இதன் ஆராய்ச்சியும் வேறுபடும் என்பது தெளிவாகின்றது. இவ்வடிப்படையில் அறிவழகனின் "கழிசடை" என்னும் புதினத்தில் காணலாகும் தலித்தியப் பிரச்சினை இவண் ஆராயப்படுகின்றது.

## தலித்தின் துன்பநிலை :

இப்புதினத்துள் பிணம் எரிப்போர், மலம் அள்ளுவோர் ஆகியோர்படும் அல்லல்கள் இயல்பாக எடுத்தியம்பட்டுள்ளன. இவற்றுள் மலம் நீக்குவோரின் துன்பநிலை புதினம் முழுவதும் நிறைந்து படிப்போரைத் துயரத்தில் ஆழ்த்துகின்றது. "இப்புண்யபூமியின் பூர்வ குடிகள் 5.77 லட்சம் பேர் (தமிழ்நாட்டில் மட்டும் 35561 பேர்) மனித மலத்தைக் கைகளால் அகற்றும் இழிவான பணியைச் செய்து கொண்டிருக்கிறார்கள்." (தீம் தரிகிட, பிப்ரவரி 1-15, 2005, ப.8) என்று ஒரு புள்ளிவிபரம் கூறுகிறது. நம் உடம்பின் வியர்வை நாற்றத்தையும் மலத்துவாரம் வெளிவரும் காற்றின் நாற்றத்தையும் பொறுக்க இயலாமல் முகம் சுளிக்கும் நாம், நம் உடம்பிலிருந்து வெளியேறிய மலத்தை நம்மிடையே ஒருவராக நமக்கு இருக்கும் அதே உணர்வுகளையும் ஆசைகளையும் எதிர்பார்ப்புகளையும் உடையோரைக் கைகளால் தூய்மைப்படுத்தச் சொல்வது நியாயமான செயலா? சற்றுச் சிந்தித்துப் பார்ப்போம்.

## மனிதனை மனிதன் அடிமைப்படுத்தும் எண்ணம் எப்படி வந்தது?

உலக உயிர்களிடையே உயர்வாகக் கருதப்படும் மனிதர்களிடம் மட்டும் காணப்படும் சாதியப் பிரிவினைகளால் மனிதனை மனிதன் அடிமைப்படுத்தும் பழக்கம் மெல்ல, மெல்லக் கருக்கொண்டு வளர்ந்து ஆழ வேரூன்றி அழிக்க முடியாத விஷ விருட்சமாக இன்று வளர்ந்து நிற்கின்றது. இச்சாதியப் பிரிவினுள் பேராபத்தினை விளைவிக்கக் கூடியது தீண்டாமையாகும். சாதி, தீண்டாமை, என்ற இரண்டையும் அடிப்படையாகக் கொண்டு பொருளாதாரக் கொள்கையை உயர்ந்தோர் வகுத்தனர். இதனால் சொத்துக்குச் சொந்தக்காரர்கள் உயர்சாதிக்காரர்களாகவும் ஏழ்மையில் வாழ்வோர் பொருளாதாரத்தில் தாழ்ந்தோராகவும் ஆகி நாளடைவில் தாழ்ந்த சாதிக்காரர்களாகவும் ஆக்கப்பட்டனர். இதனை "ஒரு சிலர் மட்டும் வாழ்வுரிமையையும் வளமான எதிர்காலத்தையும் தமக்கே உரியவனாகத் தக்க வைத்துக் கொள்வதற்கு ஏதுவாகப் "பிறப்பு" என்பது தீர்மானிக்கும் தளமாகச் சித்தரிக்கப்படுகின்றது. உடைமை - அதிகாரம்- ஆதிக்கம் என்கிற பிரிக்க முடியாத

சமூக நியதிகளில் அவை நிலைநிறுத்தப்படுகின்றன. மேற்கூறிய அனைத்தையும் ஒடுக்கப்படுவோர் தங்கள் விதி, கர்ம வினை, கடவுள் தீர்ப்பு, முற்பிறப்புத் தொடர்ச்சி என்று பாவித்து, பிறப்புமுதல் இறப்புவரை எதிர்ப்பின்றி ஏற்றுக்கொண்டு வாழவேண்டிய நிர்பந்தத்திற்குத் தள்ளப்படுகின்றனர். சமூகத்தில் ஆதிக்கம் செலுத்துவோர் - ஆதிக்கம் புரிவோர் ஆகியோரது அறம், ஒழுக்கம் ஆகியவை ஒடுக்கப்படுவோருக்கு எதிரானவைகளாக இருந்தபோதிலும் அவை சமூகக் கடமைகளாக்கப்பட்டு , நியாயப்படுத்தப்பட்டு, நடைமுறைப்படுத்தப்படுகின்றன. (தலித்தியக் கருத்தாடல்கள், முனைவர் அந்தோணி குருசு, ப.166) இத்தகைய சமுதாயத்தில் வலிந்து ஒடுக்கப்பட்டு மலம் அள்ளும் தொழிலுக்குத் தள்ளப்பட்டவன்தான் ராசப்பன் என்ற அனுமந்தய்யா. ஒடுக்கப்பட்டவர்கள் என்பதற்காக, பெற்றோர் இட்ட மதிப்புமிகு பெயர்களாகிய "சின்னச்சாமி, பாலைய்யா, ரோசய்யா," போன்ற "சாமி, அய்யா," என முடியும் பெயர்களை உச்சரிப்பதற்கும் உயர்சாதிக்காரர்கள் மறுக்கின்றனர். இதனைக் கீழ்வரும் சான்றால் அறியலாம்.

"ஒன்னோட பேரு இன்னடா?" சின்னசாமி, சாமி

இன்னாது சின்னசாமியா? பெரியசாமி இந்த உலகத்தப்படச்சாரு. நீங்க சின்னசாமி ஆள வந்தீங்களோ? "(அறிவழகன், கழிசடை, ப.65) எனப் பணி வழங்கும் ஆய்வாளர் வினவுகின்றார். மேலும் அப்பெயரை மாற்றிக் கொள்ளுமாறும் ஆணையிடுகின்றார். "இனிமே ஒம்பேரு சின்னாச்சாமில்ல. சின்னப்பையன் ...... என்ன. வேலைக்கு சேத்துக்கட்டுமா"? (ப. 66) எனப் பெயர் மாற்றம் செய்து பணியைக் கொடுத்தார். அவரே அடுத்த நபரை விசாரிக்கின்றார். "பேர சொல்லு. "பாலைய்யா" சாமி. பெரிய தொர பாரு .... உன்னல்லா பாலு அய்யான்னு கூப்பிடனும் இல்ல ...." எனக் கூறுகின்றார். அதேபோல் ரோசய்யா தன் பெயரை ஆய்வாளரிடம் கூறியவுடன் அவருக்குச் சினம் தலைக்கு ஏறியது. "ஒம்மனசுல இன்னாடா நெனச்சுக்குன்னு இருக்கிற? இம்மா நேரமா நான் கழுதைக்குக் கத்தறாப்பல கத்திக்கினு இருக்கறேன். உன்னமட்டும் நான் தனியா அய்யான்னு கூப்படனுமா" (ப. 66) என ஆவேசமாக ஆய்வாளர் வினவுகின்றார்.

இக்கூற்றுகள் யாவும் உயர்சாதிக் காரர்களின் ஆதிக்கம் செலுத்தும் தன்னலப் போக்கை அம்பலப்படுத்துகின்றன. கௌரவத்தைப் பெறுவதிலும் பொருளாதாரத்தை வளர்த்துக் கொள்வதிலும் பெருமைதரக்கூடிய அனைத்திலும் உயர்சாதிக்காரர்கள் தாங்களே முன்னிலை வகிக்க வேண்டும் என எண்ணுகின்றனர். இதுமட்டுமன்றி ஏகபோக இன்பங்கள் அனைத்திற்கும் தாங்களே உரியவர்கள் எனவும் கருதுகின்றனர். இப்புதினம் முழுவதும் இவ்வெண்ணம் பிரதிபலிக்கின்றது. இக்கருத்துக்களின் வாயிலாக ஒடுக்கப்பட்டோர், தாழ்த்தப்பட்டோர் என்ற மக்களினம் இயற்கையான உருவானதல்ல, உருவாக்கப்பட்டது. என்பது மெய்யாகின்றது. "இந்துமதம் சமமற்ற உறவுமுறை மூலம் ஏற்றத்தாழ்வான படிநிலையைச் சமூகத்தைத் தோற்றுவித்து வர்க்கம் - சாதி - அதிகாரம்-நிலம் ஆகியவற்றுக்கு இடையிலான உறவுகளையும் நிலைப்படுத்தி வலுப்படுத்தியது. இதனால் சமத்துவமின்மை என்கிற நிலைப்பாடு ஜனநாயகமின்மைக்கு இட்டுச் சென்றது. ஜனநாயகமற்ற சமூகத்தில் சுதந்திரம் நிலவ வழியில்லை. சுதந்திரம் நிலவாமையால் சாதியத்துக்கு ஏற்ற தொழில் தேர்வு முறை திணிக்கப்பட்டது. (தலித்தியக் கருத்தாடல்கள், ப.168).

அவ்வாறு உருவாக்கப்பட்டாலும் நாம் தூய்மையான சூழலில் வாழ்வதற்காகத் தங்களையே அசுத்தப்படுத்திக்கொள்வோரை நாளும் நன்றியுடன் நினைத்துப் பார்க்க வேண்டும். ஏனெனில் அவர்கள் "தினமும் ஐந்து மணிக்கு முன்பே வீட்டை விட்டுக் கிளம்பி விடுவதால் தமது குழந்தைகளுக்குச் சரியான உணவு, உடை, கல்வி .... முதலிய அடிப்படைத் தேவைகளை வழங்கி இவர்களால் பராமரிக்க முடிவதில்லை (தீம் தரிகிட, பிப்ரவரி 1-15, 2005, ப.8) இவ்வாறு தங்கள் நலனைச் சற்றும் நினைத்துப் பார்க்க இயலாத அளவிற்கு இவர்களுடைய தொழில்முறை அமைந்துள்ளது.

### சூழலால் மாறிய ராசப்பனின் வாழ்க்கை :

கிராமத்தில் ஊர்மாட்டை மேய்த்து வந்தது இராசப்பனின் குடும்பம். ஊரார் வழங்கும் உணவை உண்டு மகிழ்வாகக் காலங்கழித்து வந்தனர். அவ்வூர் பண்ணையார்க்குத் தீராத தொழுநோய் ஏற்பட்டதால் ஊரைவிட்டு ஒதுக்கி வைக்கப்பட்டார். அவருடைய துன்பத்தைக்கண்டு மனமிரங்கி அவருக்கு உதவி வந்தான் இராசப்பனின் தந்தை முனியப்பன். இதனை ஊரார் ஏற்றுக்கொள்ளவில்லை. கீழ்சாதிக்காரன் அவரைத் தொட்டுச்

சமமாக இருந்து பணிவிடை செய்வதா எனச் சினந்தனர். சாதிய ஆதிக்கந்தான் இங்கு தலை தூக்கியது. அதனால் ஊரார் அனைவரும் கூடி பண்ணையாரையும் முனியப்பனையும் ஊருக்கு ஒதுக்குப்புறத்தில் அவர்கள் தங்கியிருந்த குடிசையுடன் சேர்த்துத் தீயிட்டனர். இருவரும் மாய்ந்தனர். ராசப்பனையும் இவ்வாறு மாய்க்கத் தேடினர். இவர்களிடம் தப்பிய ராசப்பன் அடுத்த ஊரைச் சேர்ந்த, முன்பின் தொடர்பில்லாத கொண்டம்மாவால் காப்பாற்றப்பட்டான். அவள் தன் தந்தையின் உதவியால் அவ்வூர் நகராட்சியில் துப்புறவுப் பணியில் சேர்ந்தான். அன்று முதல் கொஞ்சம் கொஞ்சமாகத் தொழிலைக் கற்ற அவன் நிரந்தரமாக மலம் அள்ளும் தொழிலுக்குத் தள்ளப்பட்டான். தொடக்கத்தில் அவனால் இதைச் சகிக்க முடியவில்லை என்றாலும் வயிற்றுப்பாடு இதனை ஏற்கச் செய்தது.

"அனுமந்தய்யா டப்பாவில் நிறைந்திருந்த மல நீரை எடுத்து வாளியில் ஊற்றிவிட்டு அதனைக் கழுவிச் சுத்தம் செய்யக் காத்திருந்தான். வீட்டுக்காரம்மாள் குடத்து நீருடன் வந்து நின்று சுவரின் அடுத்த பக்கம் இருந்த அனுமந்தய்யாவிற்கு குரல் கொடுத்தாள். ஏண்டாப்பா... தண்ணி ஊத்தலாமா? .... ஊத்தும்மா... ஊற்றும்போது தண்ணீர் தெரித்து மேலே பட்டுவிடாமல் இருக்க எச்சரிக்கையுடன் எட்டி விலகி நின்றபடி நீரை ஊற்றினாள். மலடப்பாவையும் மலத்தரையையும் குனிந்து கழுவிய அனுமந்தய்யாவின் முகத்திலும் உடம்பிலும் நீர் தெறித்துப் படிந்தபோது முகத்தில் எந்த மாற்றமும் இல்லாமல் வேலையில் கவனமாக இருந்தான். "(ப. 210) இக்கூற்று அவனுடைய சகிப்புத் தன்மைக்குச் சான்று பகர்கின்றது. இத்தொழில் புரிவோர் அனைவரும் இத்தகைய துன்பமே அடைகின்றனர்.

இவர்கள் பாதாளச் சாக்கடைகளில் ஏற்படும் அடைப்பை நீக்குவதற்காகச் சொல்லொனாத் துயரை அடைகின்றனர். "ஐசக் இருகைகளையும் கரைமேல் ஊன்றியபடி மெல்ல உடம்பைக் கொஞ்சம் கொஞ்சமாக உள்ளே நுழைத்தான். சாக்கடை நீர் கழுத்து வரைக்கும் வந்தது. முழுகுவதற்கு முன் சற்று நின்று நிதானித்தான். பின் திடுதிப்பென்று இரண்டு கைகளையும் எடுத்துக்கொண்டு பட்டென்று உள்ளே மூழ்கினான். அவனால் சரியாக "தம்" கட்ட முடியவில்லை. தலை உடம்பெல்லாம் மலம் கட்டி, கட்டியாக ஒட்டிக் கொண்டிருந்தது. உதட்டில் இருந்ததை விரலால் வழித்து எறிந்தான்." (ப. 236) சாக்கடை நீர் காலில் பட்டுவிடக்கூடாது என்பதற்காகப் பார்த்துப் பார்த்து ஒதுங்கி நடக்கும் நாமும் மனிதர்கள்தான். பல்லாயிரக்கணக்கான மக்களின் கழிவுகளைச் சுமந்து கொண்டு ஓடிவரும் சாக்கடையைப் புனித ஆறாகக் கருதி எவ்விதச் சலனமும் இல்லாமல் உள்ளே இறங்கி தொழில் தர்மத்தைக் காக்கத் துன்பத்தை நாளும் அனுபவிக்கும் அவனும் மனிதன்தான். "மனிதன்" என்னும் சொல்லால் மட்டுமே நாம் ஒன்றுபட்டுள்ளோம். மனிதத் தன்மைகளும் படும்துன்பங்களும் வேறுபடுகின்றன. காக்கை குருவி எங்கள் சாதி எனப்பாடிய பாரதியாரும் வாடிய பயிரைக் கண்ட போதெல்லாம் வாடிய வள்ளலாரும் வாழ்ந்த நாட்டில்தான் நாம் வாழ்கின்றோம்.

**கொண்டுவரப்பட்டவர்களால் உருவாகிக் கொண்டே இருப்பவர்கள் :**

"17 ஆம் நூற்றாண்டிற்கு முன்புவரை கல்தோன்றி மண்தோன்றா காலத்தே முன் தோன்றிய தமிழ்க் குரங்கிற்கு மலத்துவாரம் பரிணாம வளர்ச்சியில் உருவாகா திருந்தா என்ன? நவது வாரங்களில் ஒன்றான வாய் துவாரமே கொண்டு கொள்வதும் தள்ளுவதுமான பணியை 17 ஆம் நூற்றாண்டுவரை "தமிழர்கள்" செய்து கொண்டார்களாமோ? (புத்தமித்திரன் அருந்ததியனள் "17 ஆம் நூற்றாண்டில் மலம் அள்ளுவதற்காகக் கொண்டு வரப்பட்டார்கள் என்ற வரலாற்றுப் புனைவு குறித்து கேட்டபோது கூறப்பட்டதிலிருந்து" தீம்தரிகிட, பிப்ரவரி 1-15, 2005, 2005, ப.8) இக்கூற்று மனிதக் கழிவை மனிதர் அகற்றும் வழக்கம் நம் முன்னோர் காலத்தில் இல்லை; தன்னலங் கருதுவோர் சிலரால் 17 ஆம் நூற்றாண்டில் திட்டமிட்டேகொண்டு வரப்படடது என்பதைப் புரியவைக்கின்றது. இவ்வாறு கொண்டு வரப்பட்டவர்களின் வாயிலாகப் பெருகிய இத்தொழிலாளர்களின் எண்ணிக்கை இந்தியாவில் இப்பொழுது ஐந்து லட்சத்தி எழுபத்து ஏழாயிரமாக வளர்ந்துள்ளது.

விஞ்ஞான ரீதியாக நாம் ஹைடெக் நாகரிகத்தை நோக்கிப் பயணித்துக் கொண்டுள்ள இதே வேளையில் இத்தகையோரின் தொழில் நவீன முறைகளாக்கப்படாமல் இருப்பது கேலிக்குரியதோ. ஏனெனில் வசதி படைத்தவர்கள்தான் வீட்டுக்குள்ளேயே அனைத்துத் தேவைகளையும் நிறைவேற்றிக்கொள்ள விரும்புகின்றனர். அவர்கள் உணவுப் பொருட்களைத் தேர்ந்தெடுப்பதிலும் ஆடை, அணிகலன்களை

வாங்குவதிலும் சடங்கு சம்பிரதாயங்களைக் கடைபிடிப்பதிலும் நுணுக்கமான முறைகளைப் பின்பற்றுகின்றனர். இத்தகையோரால் ஏன் நவீன முறைக் கழிப்பறைகளை அமைத்துக்கொள்ள இயலாது?

**தன்பணியைத் தானே செய்வதன் மூலம் இத்துயர் துடைத்தல்.**

காந்தியடிகள் தான் பயன்படுத்திய கழிப்பறையைத் தானே தூய்மை செய்து பிறரும் இதேபோல் தன் பணிகளைத் தானே செய்துகொள்ள வழிகாட்டினார் எனப்படித்து அறிந்துள்ளோம். எவ்வெவற்றிற்கெல்லாமோ பிறரை உதாரணமாக்கிக் கொள்ள விழையும் நாம் இத்தகைய சமுதாய நிகழ்வுகளுக்கும் பிறரை உதாரணமாக்கிக் கொண்டால் என்ன?

மலம் கழித்துவிட்டு மலத்துவாரத்தை நாம்தானே தூய்மைப்படுத்திக் கொள்கின்றோம். நாற்றமுடையதெனக் கருதி இதற்குப் பிறருடைய கைகளை நாம் எதிர்நோக்குகின்றோமா? தூய்மைப்படுத்த உதவிய நம் கையை ஒதுக்கியா வைக்கிறோம். அக்கையுந்தானே இணைந்து பிற பணிகளுக்கு உதவுகின்றது. இதை மட்டும் எவ்வாறு நாம் ஏற்றுக்கொண்டோம். பண்டுதொட்டு நம் வாழ்க்கையில் இந்நிகழ்வு இயல்பாகிவிட்டதல்லவா? ஒவ்வொரு இல்லத்திலும் அக்குடும்பத்தைச் சார்ந்தவர்கள் தானே கழிப்பறையைப் பயன்படுத்துகின்றனர். இக்கழிப்பறையை இவ்வில்லத்தாரே தூய்மைப் படுத்துவதில் என்ன கேவலம் ஏற்படப்போகின்றது. அனைவரும் இவ்வாறு சிந்தித்துப் பார்த்தார்களானால் தொழில் மலம் தூய்மைப்படுத்த மனிதர் உதவும் தொழிலே அற்றுப் போகும். இது நிகழ வேண்டும்.

இல்லக் கழிப்பறைகளை இவ்வாறு தூய்மைப்படுத்தலாம். பொது நிறுவனங்களில் என்ன செய்வது என்ற வினாவும் எழுகின்றது. இவ்விடங்களில் வேண்டுமென்றால் இப்பணியாளர்களைப் பயன்படுத்தலாம். ஆனால் இக்கழிப்பறையைப் பயன்படுத்துவோர் தங்கள் இல்லக் கழிப்றைகளைப் பயன்படுத்துவதுபோல் எண்ணித் தூய்மையைப் பேணி சிறுநீர் நாற்றமோ, மலமோ வெளியில் தெரியாத அளவிற்குப் பார்த்துக்கொண்டால் இத்தொழிலைச் செய்வோர் இதனைச் சுமையாகக் கருதமாட்டார்கள்.

**தொகுப்புரை :**

1. நம் நாட்டுச் சூழல் அடிப்படையில் கருத்தூன்றிச் சிந்தித்தோமானால் கழிப்பறையைத் தூய்மைப் படுத்துதல், பாதாளச் சாக்கடை அடைப்பை நீக்குதல் போன்ற தொழில்களை முற்றிலும் நவீன முறையில செய்து முடிக்க இயலாது. ஆனால் இத்தொழில் புரிவோரின் துயரங்களை முடிந்த அளவு குறைக்கலாம். எவ்வாறெனில்,

2. தூய்மைக்காக மருத்துவர்கள் யையில், காலில், தலையில் ஏன் உடம்பிலும் உறைமாற்றிக் கொள்கின்றனர். குளிர்காலத்தில் நம்முள் பலர் இத்தகைய பாதுகாப்பைத் தேடிக் கொள்கின்றனர். இதேபோல் இவர்களுக்கும் நாற்றத்தைத் தவிர்க்கவும், அசுத்தங்கள் உடல்மீது படாமல் இருப்பதற்கும் உறைகள் வழங்கலாம். பாதாளச் சாக்கடையில் மூழ்குவோருக்கு தலைமுதல் கால்வரை உடல் முழுவதும் மறைக்கும்படியான உறைகள் வழங்குதல் வேண்டும்.

3. இந்நடவடிக்கையை மேற்கொண்டலால்தான் மனித நேயம் காக்கப்படும். ஏனெனில் மனித இன மேம்பாட்டிற்காகப் பேசப்படும் ஒவ்வொரு கருத்தும் மனிதனாகப் பிறந்த அனைவருக்கும் பொருந்தும். எனவே, சிலரை மட்டும் இதற்குத் தேவையற்றவர்களாகக் கருதுவது எவ்விதத்தில் நியாயமாகும்.

4. நாம் நறுமணமிக்கவர்களாகவும், பகட்டாகவும் இச்சமுதாயத்தில் உலவ உதவுவோரின் சிக்கல்களை அடையாளங்கண்டு உதவ நாம் அனைவரும் முன்வந்தால் ஒழிய அப்பாவிகளாகிய அவர்கள் மேன்மையடைய வழியில்லை. இவர்களுடைய உழைப்பு சுரண்டப்படாமல் ஊதியம் உயர்வாகக் கொடுத்தால் பாதித் துன்பமேனும் குறையும்.

**ஆய்வுக்குப் பயன்பட்ட நூல்கள் :**


1. அறிவழகன், கழிசடை, பல்கலைப் பதிப்பகம், சென்னை, 2003.
2. முனைவர். அந்தோனி குருசு, தலித்தியக் கருத்தாடல்கள், ஸ்ரீ செண்பகா பதிப்பகம், சென்னை, 2003.
4. தீம்தரிகிட, பிப்ரவரி 1-15, 2005.

# பூமிக்குப் பொறுக்காது - சிறுகதையில் தலித்தியம்

*பா.வேலம்மாள்* தேர்வுநிலை விரிவுரையாளர்
ஸ்ரீபராச்சதி மகளிர் கல்லூரி, குற்றாலம்.

சமுதாயம் என்பது மக்கள் இணங்கி வாழும் அமைப்பாகும். இந்த இணக்கம் அல்லது ஒருமைப்பாடு பொருளாதார மேம்பாட்டுக்கு மட்டுமின்றி, மனிதனின் அரசியல் கலாச்சார வாழ்வுக்கும் தேவையாகும். நம்நாட்டின் ஆழமாக வேரூன்றிய சாதி முறை பல்வேறு தீய விளைவுகளை உருவாக்கியதுடன் வறுமைக்கும் காரணமாக அமைந்தது. மேல் சாதிக்காரார்களுக்குப் பணிவிடை செய்வதற்காகவே கீழ் சாதிக்காரார்கள் படைக்கப்பட்டுள்ளனர் எனச் சயமச் சாத்திரங்கள் போதித்தனர். அது அவர்களின் முன்வினைப் பயன் என்று மனுதர்மம் கூறியது. நிலத்தில் அவர்கள் உரிமை இழந்ததுடன் கல்வி, ஆட்சிப் பணிகள் முதலியனவும் அவர்களுக்கு மறுக்கப்பட்டன. ஊதியம் எதுவுமின்றி மேல் சாதியினருக்கு உழைக்க வேண்டிய அவல நிலைக்கு அவர்கள் ஆளாயினர். சமுதாயத்தைப் பிரித்துப் பாழ்படுத்தும் காரணிகளுள் சாதி முறைமுக்கியமாக ஒன்று. நம்நாட்டின் ஆழமாக வேரூன்றிய சாதிமுறையை ஒழிப்பதற் பல பெரியோர்கள், தலைவர்கள் கடுமையான முயற்சிகளை மேற்கொண்டனர். தமிழகத்தைப் பொறுத்த மட்டில் சங்க காலத்திலிருந்தே சாதிக்கு எதிரான குரல் ஒலித்து வந்தாலும் சாதி ஒடுக்கு முறைகள் நம் நாட்டை விட்டு ஒழியவில்லை. சமுதாயத்தின் ஒருமைப்பாட்டுத் தடையாக இருக்கும் சாதி முறைக்கு எதிராக எழுத்தாளர்கள் குரல் கொடுக்கின்றனர். இன்றைய தமிழ் இலக்கிய உலகின் தலித்தியம் சிறந்த கோட்பாடுகளுள் ஒன்றாகக் காணப்படுகிறது. "வரலாற்றில் நீண்ட நெடுங்காலம் அடிமைப்பட்டுக் கிடக்கும் தலித்துக்களின் விடுதலைக்கு தலித்துகள் மட்டுமே குரல் கொடுக்க முடியும், தலித் இலக்கியத்தைத் தலித்துக்கள் மட்டுமே எழுத வேண்டும், எழுத முடியும், என்பது மட்டுமல்லாமல் தலித்தின் வலியை மனித வலியாக உணரும் எவருமே தலித் இலக்கியம் படைக்கலாம்" என்பற்கிணங்க படைக்கப்பட்ட தலித் சிறுகதைத்தொகுப்பே "பூமிக்குப்பொறுக்காது" தொகுப்பு.

மார்க்சிஸ்ட் கட்சி நடத்திய தீண்டாமை ஒழிப்பு மாநில சிறப்பு மாநாட்டினையொட்டி தமிழ்நாடு முற்போக்கு எழுத்தாளர் சங்கத்தின் படைப்பாளிகளான, மறைந்த கந்தர்வன், மற்றும் டி.செல்வராஜ் மேலாண்மை பொன்னுச்சாமி, சோலை சுந்தர பெருமாள், ச.தமிழ்ச்செல்வன், க.சி.சிவக்குமார், தேனி சீருடையான், ஆதவன் தீட்சண்யா, அல்லி உதயன், பவா.செல்லத்துரை, இலட்சுமணன் பெருமாள், ப.சீவகாருண்யன், மதியழகன், பெரணநல்லூர் சேகரன், மணிநாத், ஆகியோருடைய சிறுகதைகள் "பூமிக்குப் பொறுக்காது" என்ற தலைப்பில் கீழ் தொகுக்கப்பட்டுள்ளது. இதில் "பூமிக்குப் பொறுக்காது" என்ற மேலாண்மை பொன்னுச்சாமியின் சிறுகதை மட்டும் இங்கு ஆய்விற்கு எடுத்துக்கொள்ளப்பட்டுள்ளது.

தொடக்கத்தில் தொழில் அடிப்படையில் தான் சாதி அமைந்திருந்தது. சமய உணர்வு வளர்ந்து சமய அமைப்புகள் நிறுவப்பட்டு சமய நூல்கள் உருவான பின்னர் சாதி கடவுளால் படைக்கப்பட்டது என்னும் கொள்கை உருவானது. இந்தக் கருத்துக்குச் சயமங்களும், சமயங்களுக்காகத் தோன்றிய சாத்திரங்களும் வலிமை சேர்த்தன. "இறைவனின் முகத்திலிருந்து பிராமணர்களும், தோளிலிருந்து சத்திரியர்களும், தொடையிலிருந்து வைசியர்களும், பாதங்களிலிருந்தும் சூத்திரர்களும் தோன்றினர்". சத்திரியர்களுக்கு நாடு காப்பதையும், வைசியர்களுக்குச் செல்வம் ஈட்டுவதையும் சூத்திரர்களுக்கு ஏவல் புரிவதையும் இந்நூல் கடமையாகக் கூறுகிறது". எனவே வருணாசிரமப் போர்வையில் சாதிகள் வளர்ந்து, நிலவுடைமையில் வடிவம் கொண்டன. சாதி முறை சமுதாயத்தில் பல்வேறு தீய விளைவுகளுக்குக் காரணமாக அமைந்தது. அதில் ஒன்று அடிமைத்தனமும் ஒடுக்கு முறையும் ஆகும். இதனை அடிப்படையாகக் கொண்டு படைக்கப்பட்டதே "பூமிக்குப் பொறுக்காது" சிறுகதை.

## பூமிக்குப் பொறுக்காது சிறுகதை

அக்டோபர் 2004-இல் வெளியிடப்பட்ட இச்சிறுகதை மேலாண்மை பொன்னுச்சாமியால் எழுத்தப்பட்டது. வரலாற்றில் நீண்ட காலமாக அடிமைப்பட்டுக் கிடக்கும் தலித்துக்களுக்கு விடுதலை கிடைத்தது போல இருந்தாலும் அவர்கள் இன்னும் எங்ஙனம் அடிமைப்பட்டு கிடக்கின்றனர். அவர்களின் மனவேதனை என்ன என்பதனை இக்கதை விளக்குகின்றது. சுடுகாட்டின் வெட்டியானக இருக்கின்றான். சங்கரபாண்டி அந்த ஊரிலே பெரிய வீட்டுச்சாமி இறந்து போகிறார். ஊருக்கே நாட்டாமை, பெரிய வீடு, சமுத்திர சம்பாத்தியம் சங்கரபாண்டி பெரிய வீட்டு சாமியிடம் பிரசவச் செலவுக்காக கைநாட்டு வைத்து, மூன்னூறு ரூபாய் வாங்கினான். அந்த கடனை ஒன்றை வருடம் பாடுபட்டும் அவன் நிலைத்தைப் பறித்து கொண்டார்கள். எனவே சங்கரபாண்டி பெரிய வீட்டு சாமியின் பிணத்தைச் சிதையிலிருந்து எடுத்து கோபத்தோடு அடிக்க நினைக்கிறான். குடித்து விட்டு திட்டுகிறான். இது பெரிய வீட்டிற்கு தெரிந்து சங்கரபாண்டியை கந்தல் துணியாக அடிக்கின்றார்கள். இதனைக் கண்ட முத்தாண்டி என்ற சங்கரபாண்டியின் நண்பன் இது பூமிக்குப் பொறுக்காது என்கிறான். மயானக்கரை வேலையைத் தன் தலைமுறையோடு தலை முழுகி விட்டு ஆரம்பத்தில் தன் பிள்ளைக்குப் படிப்பு எதற்கு என்று நினைத்த சங்கரபாண்டிமகனை நன்கு படிக்க வைக்க நினைக்கிறான்.

## அடிமைத்தனமும் ஒடுக்குமுறைகளும்

சாதி முறை மனிதர்களை மேல் சாதி, கீழ்சாதி என்று பிரித்ததால் கீழ் சாதியைச் சேர்ந்தவர்கள் அடிமைத்தனத்திற்கும் அதன் விளைவான ஒடுக்கு முறைகளுக்கும் உள்ளாயினர். மேல் சாதிகாரர்களுக்குப் பணிவிடை செய்வதற்காகவே கீழ்சாதிக்காரர்கள் படைக்கப்பட்டுள்ளனர் என்றே நினைத்தனர். மேல் சாதிக்காரர்களின் சட்டத்திட்டங்களை மீறியவர்கள் கடுமையான தண்டனைகளுக்கு உள்ளாயினர். அபராதம் விதித்தல், சாட்டைகளால் அடித்தல், நிலங்களைப் பிடிங்கிக் கொள்ளுதல் என்று பல தண்டனைகளை வழங்கினர். இப்படி தாழ்த்தப்பட்ட மக்களுக்கு இழைக்கப்பட்ட துன்பங்களை எண்ணி மனிதநேயம் மிக்க உணர்வோடு மேலாண்மை பொன்னுச்சாமி வருந்துகின்றார். மோல்சாதியினர் ஒடுக்கு முறைகளால் தாழ்த்தப்பட்டவர் அடைந்த துயரத்தினை "நிதானம் தப்பிப் பேசாதே. நீ என்ன சாதி, இது என்ன ஊருன்று ஞபாகத்துலே வைச்சுப்பேசு. தூண்லே கட்டிவைச்சு, தொலியை உரிச்சுப்போடுவேன், ராஸ்கல் என்ன நெனைச்சுக்கிட்டுருக்கே? படுவா, தொலைச்சுப்போடுவேன் தொலைச்சு போடாநாயே" என்று ஒடுக்கப்பட்டோர் படும் தீமையை உரைக்கின்றார். காலடியில் மிதிபட்டுக் காலமெல்லாம் உழைத்தாலும் தாழ்த்தப்பட்டவர்கள் காலங்காலமாக வளர்ச்சி குன்றியே வாழ்கின்றனர்.

## கல்லாமையும் வளர்ச்சியின்மையும்

உலகில் படிப்பறிவில்லாதவர்கள் அதிகமாக வாழும் நாடு இந்தியா கல்லாமை இங்க வளர்ந்ததற்கு வறுமை காரணம் என்று கூறுவதை விடவும் இங்கு நிலவி வந்த சாதிச் சட்டகளே முக்கியமான காரணங்களாகும். தொல்காப்பியரின் "ஓதலும் தூதும் உயர்ந்தோர் மேன" என்ற உரையினை தங்களுக்குச் சாதகமாக எண்ணிக் கொண்டு தாழ்த்தப்பட்ட மக்கள் படிப்பதற்கு உரிமை மறுக்கப்பட்டதால் தான் இங்கு கல்லாமை கால் கொண்டது. தாங்கள் படிப்பது தேவை இல்லை என்று தாழ்த்தப்பட்டவர்களே நினைக்குமளவிற்கு அவர்கள் தள்ளப்பட்டார்கள். கல்லாமையினால் ஒடுக்கப்பட்டமக்கள் தங்களது இழிநிலையின் காரணத்தை சிந்திக்க முடியாமல் போனது. இக்கதையில் சங்கரபாண்டியன் மனைவி விடுதியில் நின்று படிக்கும் தன் மகனுக்கு பணம் அனுப்பச் சொல்லும் போது

> "ஆமடி, எளிய சாதிப்பயபுள்ளே படிச்சு, சர்க்காரு
> நடத்தப்போகுதாக்கும்? படிச்சு, எண்ணத்தைக்கிழிக்கப்
> போறான்? வரச்சொல்லு நாலு பன்னியைப் பத்திக்கிட்டுத்
> திரியட்டும்"

என்ற சங்கரபாண்டியின் கூற்று தாழ்த்தப்பட்ட மக்கள் கல்வியின் பெருமையை உணராமைத் தெரிகின்றது.

### வேறுபடுதலும் கோபப்படுதலும்

சாதி அடிப்படையிலான வேறுபாடுகள் வலிமை அடைந்து, மனிதர்கள் ஒருவரோடு ஒருவர் அந்நியப்படும் சூழ்நிலையும் வேறுபடும் சூழ்நிலையும் ஏற்பட்டு, அதனால் அமைதியாக இருப்பவர்கள் கூட கோபப்படும் சூழல் ஏற்படுகிறது. இதானல் கலவரங்கள் ஏற்பட்டு உயிர்கொலைகளுக்கும் காரணமாக அமைந்து விடுகின்றது.

"நாற்சதுக்காரமான கரிசல் காடு தாத்தனின் வியர்வைச் சம்பாத்தியம், அப்பன் ஆத்தாளின் காலடிப்பட்ட மண், என் பிள்ளைகளிடம் ஒப்படைத்திருக்க வேண்டிய வம்சச் சொத்து பறிபோய்விட்ட தர்மம் தட்டிப் பறித்த அதர்மம். நியாயம் கேட்கப் போன என் தொலியை உரிக்கப்போவதாய் மிரட்டிய அநியாயத் துரியோதனன் - சங்கரபாண்டியின் மனத்திற்குள் ஜீவாலை விடுகிற நினைவுகள். ஒரே திசையில் உக்கிரமாகிற நினைவுகள், ஒரு போக்காய்ப் பாய்கிற போர்குணத்தீவிரம் பெரிய வீட்டு சாமியின் சிதைய உடைச்சு, பிரேதத்தை எடுத்து மாட்டுத் தொலியை உரிக்கிற மாதிரி இவன் தொலியையும் உரிச்சு - தனித்தனியா வேக வைச்சா என்ன? என்ற சங்கரபாண்டியின் மூளையில் முளைவிடுகிற குரூரம் பெரும் கலவரமாக வெடிப்பதற்கான அறிகுறி ஆகும். காலங்காலமாக இருந்து வரும் தீண்டாமைக் கொடுமை, கலவரமாக மாறும் என்பதை ஆசிரியர் சுட்டி காட்டுகின்றார்.

### சாதி முறைக்குத் தீர்வுகள்

சாதிப் பிரிவினைகளும், மேல் சாதியினரின் அடக்கு முறைகளும் கல்வி பெறுதலால் மட்டுமே முடியும் என்ற தீர்வினை ஆசிரியர் கூறுகின்றார். சாதி வேறுபாடுகள் இன்றி அனைத்து மாந்தர்களும் கல்வி கொடுக்கப்படவேண்டுமென்று சட்டங்கள் இருந்தாலும் ஒரு பகுதியினர் மட்டுமே கல்வியறிவு பெற முடிந்தது. எல்லோருக்கும் அந்த வாய்ப்புகிட்டவில்லை. அதற்கு தாழ்த்தப்பட்ட மக்கள் விழிப்புணர்வு பெற வேண்டும் என்ற கருத்தினை சங்ரபாண்டி மூலம் விளக்குகின்றார் ஆசிரியர். எந்த சங்கரபாண்டி மகன் படிக்க வேண்டாம் பன்றி மேய்த்தால் போதும் என்றானோ, அவனே இறுதியில் "நம்ம தலைமுறையோடு மயானக்கரை வேலையத் தலை மொழுகிறணும்டா, எண்ணத்துக்கு இந்த அடிமைச் சோலி?" மனசுக்குள் இறுகிப் போன வன்மம் வைராக்கியமாய் ஒரு நினைவு "படிக்கிற பிள்ளைக்கு மொதல்லே ரூபா அனுப்பி வைக்கணும்" என்கிறான் ஒடுக்கப்பட்ட மக்கள் அறிவு சார்ந்த கல்வி பெற்றால் விழிப்புணர்வு அடைந்துவிடுவர்.

மேலாண்மை பொன்னுச்சாமி "பூமிக்கு பொறுக்காது சிறுகதை மூலாமாக தலித்தியம் பற்றி பேசி, தலித்துகளுக்கு விழிப்பூட்டும் வகையில் தன் படைப்பை படைத்துள்ளார்.

# "தகனம்" ஆண்டாள் பிரியதர்ஷினி ஒரு பார்வை

*திருமதி. இரா.ஜெயப்பிரதா தேவி* , தேர்வு நிலை. விரிவுரையாளர்,
தமிழ்த்துறை எம்.வி.எம்.அரசு மகளிர் கலைக் கல்லூரி, திண்டுக்கல்.

தமிழ் இலக்கியங்களுக்கு நெடுங்காலம் செய்யுள் வடிவமாக இருந்தது. மேனாட்டார் வருகையால் இந்நிலை மாறி உரைநடை வளர்ச்சி பெற்றது. உரைநடையும் இலக்கியத்திறனை விளங்கச் செய்யமுடியும் என்பதை உணர்த்தவே பிறந்தன சிறுகதையும் புதினமும், சிறுகதை தென்னை, பனை போல் விளங்கப் புதினமோ புளி, ஆல் போன்று விளங்கின்றன. ஒரு அடிமரத்தில் தொடங்கிப் பல கிளைகளாகக் கிளைத்து இலையும், பூவும் காயுமாகத் தழைத்து விளங்கும் மரம் போன்று ஒரு கதைக் கருவிற்குப் பல நிகழ்ச்சிகளையும், பல கருத்துக்களையும், பல பாத்திரங்களையும் படம் பிடித்துக் காட்டுவது புதினமாகும்.

"நாவல் என்பது சமகாலச் சரித்திரம்" என்கிறார். நியார்ஜ்மூர். இக்கருத்தை உண்மையாக்கும் புதினம் தான் "தகனம்". இன்றைய நடைமுறையில் தலித் இலக்கியங்களின் வரவு அதிகம் தாழ்த்தப்பட்டவர்கள், ஒடுக்கப்பட்டவர்கள், உரிமைமறுக்கப்பட்டவர்கள் என இவர்களை உலகத்திற்கு வெளிச்சம் போட்டுக் காட்டும் இலக்கியங்களே தலித் இலக்கியங்களாகும். ஆண்டாள் பிரியதர்ஷினி படைத்துள்ள தகனம், வெட்டியானின் வாழ்வியலைப் படம் பிடித்துக் காட்டுவதால் தலித் இலக்கியமாக மணம் பரப்புகிறது.

"தகனம்" புதின இலக்கிய வகையைச் சார்ந்தது. புதினம் என்பது அன்றாட வாழ்வில் இடம்பெறும் நிகழ்ச்சிகளையும் மனிதர்களையும் அடிப்படையாகக் கொண்டு அவற்றிற்கு உயிரும் உணர்ச்சியும் ஊட்டிக் கதையைப் புனையப்படும் இலக்கியமாகும். இவ்வாறு புதினம் படைக்கும் ஆசிரியர் "கூடிய வரையில் ஆசிரியர் தமக்கு நன்கு தெரிந்த வாழ்க்கைப் பகுதிகளையும் இடங்களையும் வைத்தே புதினம் பெறுதல் நல்லது" என்று கூறுகிறார். மு.வ.இதனைப் பார்க்கும் பொழுது, ஆசிரியர் ஆண்டாள் பிரியதர்ஷினி தகனம் புதினத்தைப் படைக்க மிகவும் சிரமப்பட்டு இருக்க வேண்டும். ஏனென்றால் பெண்களுக்கு மிகவும் புதியதான ஒரு களத்தை ஆசிரியர் தேர்ந்தெடுத்துள்ளார். இப்புதினத்தை உணர்ந்து எழுதவேண்டும் என்ற ஆவலினால் ஆசிரியர் மயானத்திலேயே பல நாட்கள் தங்கியதாகக் கூறுகிறார். பெண்கள் மயானத்திற்கு வருதல் கூடாது என்ற மரபை மூடப்பழக்கத்தை உடைத்தெறிந்துதான் பிறந்துள்ள இத்தலித் இலக்கியம்.

நம்முடைய வாழ்க்கையில் நாம் சாதாரணமாக நினைப்பவை, அசாதாரணமானவை என்பதை விளக்குவதுதான் "தகனம்" என்னும் புதினம். கரவறையில் தொடங்கிக் கல்லறையில் முடியும் மனித வாழ்க்கையைப் பல புதினங்களாகப் படித்துள்ளோம். ஆனால் "தகனமா" மயானத்தில் பிணங்களை எரிப்பதைப் பணியாகக் கொண்டு, பசிக்கு இரை தேடும் அவல வாழ்க்கை வாழ்கின்ற மக்களைப் பற்றிக் கூறுகின்றது. இதற்கு வாழ்த்துரை வழங்கியுள்ள கரிசல் காட்டு வேந்தன் இதனை "மயானபூமிவாழ் மக்களைப் பற்றிய விஸ்தாரமான முகாரிராக ஆலாபனம்" எனச் சிறப்பிக்கின்றார்.

இப்புதினம் வெட்டியான், குடிமகன் என்ற இருவேறுபட்ட மக்களை நமக்கு உணர்த்துகின்றது. இடுகாடுகளில் பிணம் எரிந்து முடியும் வரை வெட்டியான் பக்கத்தில் இருப்பதில்லை. வெட்டியான் என்பது குடிமகனைக் குறிக்கும். இவனுக்கு உதவியாளர்தான் வெட்டியான் வெட்டியான் தொடாத சாதிக்காரன். குடிமகன் அப்படி இல்லை. குடிமகன் நம்மைத் தொட்டு எண்ணெய் வைப்பது, நகங்களை வெட்டுவது, காலில் தைத்த முள்ளை எடுப்பது, முடிவெட்டி விடுவது போன்ற அனைத்துச் செயல்களையும் செய்பவன். நம் அனைவரின் பிறப்பு, இறப்பு இரண்டிலும் இவர்கள் இடம் பெறுவதால் தான் இவர்களைக் குடிமகன், குடிமகள் எனக் கூறுகிறோம். இவர்களை விடக் கீழாக விளங்குகின்ற வெட்டியானின் வாழ்வியலைத்தான் "தகனம்" வெளிப்படுத்துகின்றது.

தாழங்குப்பத்தில் வாழும் இருசப்பன்தான் இப்புதினத்தின் தலைவன். இவனுக்கு சின்னராசு, சம்பத்த

இராணி, தரேசு என்ற நான்கு வாரிசுகள். இயலாமையையும், சோர்வையும் சொத்தாகக் கொண்டுள்ள முனியம்மா இருசப்பனின் மனைவி. இதில் சின்னராசு மட்டும் ஒன்பதாம் வகுப்பு வரை படித்தவன். இதனால் தந்தையின் தொழிலைப் பார்க்க விரும்பாமல், வெளியூருக்கு வேலைதேடிச் செல்கிறான். இவன் படித்த படிப்பிற்கு எடுபிடி வேலைகள்தான் கிடைக்கின்றன. இந்த வேலைகளினால் தன்னுடைய தன்மானம் பாதிக்கப்படுவதால், எந்த வேலையிலும் நிலைத்து நிற்க முடியாமல் சொந்த ஊருக்கே திரும்புகிறான்.

ஊரில் அத்தை மகள் சின்னப் பொண்ணுவைச் சந்திக்கிறான். இரு குடும்பத்திற்கும் இடையே பேச்சு வார்த்தை கிடையாது. இருந்தாலும் இருவருக்குமிடையே மனதிலும் ஆசை ஏற்படுகின்றது. ஊர் திரும்பினாலும் தந்தையின் தொழிலைப் பார்க்க விரும்பாத சின்னராசு படிப்படியாக அரசியலில் ஈடுபட்டுப் பெரியபுள்ளி ஆகிறான். ஆனாலும் தன்னுடைய குடும்பத்தைக் காப்பாற்றும் முழுப் பொறுப்பையும் அவன் ஏற்றுக் கொள்ளவில்லை. மேலும் சின்ன பொண்ணுவிடம் கொண்ட ஆசையையும் மாற்றிக் கொள்கிறான். தொழிலில் ஏற்பட்ட தகராறில் இரு சப்பன் அடிபட, குடும்பத்திற்கு வந்து கொண்டிருந்த வருமானமும் நின்றுவிட, குடும்பம் வறுமையில் வாடுகின்றது.

சிறுவர்களை சுரேசும், சம்பத்தும் சின்னப் பொண்ணுக்குத் துணையாகப் பிணங்களை எரிக்க உதவுகின்றனர். இதனால் கிடைக்கும் சிறு வருமானத்தை வீட்டிற்கு அளிக்கின்றனர். சின்னப் பொண்ணுதான் குடும்பத்தைக் காப்பாற்ற, பெண் என்றும் பாராமல் வெட்டியானின் தொழிலைச் செய்ய நேரிடுகின்றது. ஆனால் முனியம்மாவின் மகள் ராணி மட்டும், பெயருக்கு ஏற்ப ராணியாக வாழ ஆசைப்படுகிறாள். வயதிற்கு வந்த பிறகும் பொறுப்பில்லாமல் விளங்கும் ராணி, தவறான காதல் வயப்படுகிறாள். இந்நிலையில் பிணத்தைத் தோண்டி எடுக்கும் பொழுது அக்குழியில் தவறி விழுந்து சுரேசு அந்த அதிர்ச்சியில் பிணத்தை எரிக்கும் பொழுது கண்ணாடி பாட்டில் சிதறிக் கண்ணில்பட பார்வை இழக்கிறான். இத்தகைய சூழலில் தான் புதினத்தை முடிக்கிறார் ஆசிரியர். துன்பத்திற்கு மேல் துன்பம் மட்டுமே இடம்பெறுகின்றது.இதற்கெல்லாம் மூலகாரணமாக விளங்குவத இவர்களுடைய பொருளாதாரச் சிக்கல்தான் என்பது விளங்குவது. பகல் வேளையில் பலருடன்செல்வதற்கு கூட அச்சப்படும் இடுகாட்டில் இரவு பகல் பாராமல் வேலை செய்கின்றனர். இந்த தொழிலையும் கடனே என்று செய்யாமல் கடமை உணர்வுடன் செய்கின்றனர். "தப்பை மறைக்கத் தொண போற தொழிலு இல்ல இது ஒவ்வொரு பொணைத்தை எரிக்கப் போனபோதும் நா, சாமிய வேண்டுறதன். இந்தாளோட ஆத்மா நல்லபடியாச் சாந்தியடையனும் னுட்டு. எல்லாப் பொணத்துக்கும் கடைசிச் சொந்தக்காரங்க நாங்கதான் ஸார். நாங்கதான் அவங்களை வழியனுப்புகிறோம். புனிதமா பண்ற தொழில் சார் இது" என்ற சின்ன ராசுவின் கூற்று இவர்களுடைய தொழில் தர்மத்தை நமக்கு உணர்த்துகின்றது. அனாதைப் பிணங்களைக் கூட அக்கறையுடன் எரிக்கின்றனர் என்பதாலும் இவர்களின் தொழில் தர்மம் புலப்படுகின்றது.

"சுடுகாட்டு புகைக்கு ஆஸ்துமாதானே தோஸ்து" என்று கூறும் இருசப்பன் யதார்த்தத்தை ஏற்றுக் கொள்கிறான். இருசப்பனின் தந்தை இப்புகையினால் பாதிக்கப்பட்டு கண்ணை இழந்து திண்ணையில் முடங்கிக் கிடக்கிறான். தனக்கும் இத்தகைய நிலைதான் விதிக்கப்பட்டுள்ளது என்பதை உணர்ந்தாலும் இருசப்பனுக்குத் தன்னுடைய தொழின் மீது கோபமோ, வெறுப்போ ஏற்படவில்லை. இவர்களெல்லாம் தெரிந்தே தங்களுடைய வாழ்க்கையைப் பலி கொடுத்துப் புனிதவேள்வி செய்கின்றனர். ஜிலேபி, மைசூர்பாகு, லட்டு, வடை, முறுக்கு என்று பலவகையான பலகாரங்கள் இவர்களுக்குக் கிடைக்கின்றன என்றாலும் அவை அனைத்தும் காக்கைப் பலகாரங்கள்தான்.

பிணத்தை எரிப்பது கூடப் பரவாயில்லை புதைத்த பிணத்தைத் தோண்டி எடுப்பது மிகவும் சிரமமான வேலை என்பதை ஆசிரியர் மிகச் சிறப்பாக எடுத்துரைத்துள்ளார் மண்ணை வெட்டும் பொழுது ஏற்படும் நாற்றம் உயிரைப்பிடுங்கும் நாற்றம் என்றும் மயக்கம் வரவழைக்கும் நாற்றம் என்கிறார் ஆசிரியர். சின்ன பொன்னு சம்பத்து சுரேசு மூவரும் ஒரு பிணத்தைத் தோண்டி எடுக்கும் காட்சியைப் படிக்கும் பொழுது உலகத்தின் அத்தனை அறுவெறுப்பும் நம்மிடத்தில் ஏற்படுகிறது என்பதை மறுப்பதற்கில்லை. மழைக்காலத்து ஓர் நாளில்

பிணக்குழியில் விழுந்த சுரேசை தூக்கிவிடக்கூட ஆளில்லாமல் பாடுபடும் காட்சியைப் படிக்கும் பொழுது மனமே அழுகிறது. உயிரைப் பணயம் வைத்து வேலை பார்க்கும் இவர்களுக்குப் பிணத்தின் உறவினர்கள் கூலி கொடுக்கப்படும் பாட்டை பின் வருமாறு ஆசிரியர் உணர்த்துகிறார். "கொஞ்சம் கூலியக் கொறைச்சுக்கோ", கொள்ளை அடிக்காதே வெட்டியானுக்குக் கொடுத்தே நா செத்துருவேன்" கலியாணத்தை விட கருமாதி செலவு ஜாஸ்தி" எனப்புலம்பும் மக்களின் மனித நோயத்தை என்னென்று கூறுவது.

இவை அனைத்தையும் விடப்புதிய ஒரு மரபை ஆசிரியர் படைத்துள்ளார். வெட்டியான் தொழிலுக்கு உரியவர்கள் ஆண்கள்தான என்ற நிலையை மாற்றிப் பெண்களும் இதில் பங்கெடுக்க முடியும் என்பதை சின்னபொன்னு பாத்திரத்தின் மூலம் நிரூபித்துள்ளர். வித்தியாசமான இத்துறையிலும் பெண்களின் பங்கு உண்டு என்பதை ஆசிரியர் உணர்த்துவது பெண்ணிணத்தைப் பெருமைப்படுத்துகிறது.

ஆதரவற்ற குடும்பத்தைக் காப்பாற்ற இத் தொழிலை மேற்கொள்ளும் சின்ன பொன்னு பல பிரச்சனைகளைச் சந்தித்தாலும், சவாலாகவே ஏற்றுக் கொள்கிறாள். காதலை இழந்தாலும் கலங்கவில்லை. சுடுகாட்டுப் புகையால் உயிரிழக்கும் அபாயம் உண்டு என்பதை நிதர்சனமாக உணர்ந்தாலும், பெண்ணாக இருந்தும் தைரியமாக ஏற்றுக் கொள்கிறாள். இத்தகைய மனப்பக்குவாம், பாரதியின் புதுமைப் பெண்ணை நமக்கு நினைவூட்டுகின்றது. பிணத்தை எரிக்கும் முறையை ஆசிரியர்மிகத் துல்லியமாக எடுத்துரைக்கினற்ார். ஆசிரியரின் இத்தகைய அனுபவம நம்மை வியக்க வைக்கிறது.

பிணத்தை எரிக்கும் பொழுது தண்ணீர் பீச்சி அடிக்கும் தண்ணீரில் மூழ்கிய பிணங்கள் விறைத்துக் கொண்டு எழுந்து உட்காரும். ஆஸ்பத்திரியில் இருந்து வந்த பிணங்கள் என்றால் பாட்டில் வைத்துத் தைத்திருப்பார்கள் எரிக்கும்போது அதுபடீரென்று வெடித்துச் சிதறும். இத்தனை இடர்பாடுகளுக்கிடையிலும் பிணத்தை வெட்டிக்கம்பால் புரட்டிப், புரட்டிப் போட்டு எரிக்க வேண்டும் பிணம் நன்றாக எரியவில்லை என்றால் இவர்களைத்தான் குறை கூறுவார்கள்.

மேலும் சில பழக்கவழக்கங்களையும் ஆசிரியர் புலப்படுத்துகின்றார். நெஞ்சு வேகாத அபூர்வங்களுக்கு மட்டும் ஆமணக்கு வித்துக் கொண்டு வந்து போட்டுக் குத்திக் குத்திக் வேக வைக்க வேண்டும். தலைக்கோழி கூப்பிடும் நேரத்தில் துக்கவீட்டின் தலைவாசலில் போய்குடிமகன் நின்றாலே, பிணத்தின் நெஞ்சு வேகவில்லையென்று, அவ்வீட்டு மக்கள் தெரிந்து கொண்டு விடுவார்கள். பிணத்தைக் குப்புறப்போட்டு எரித்தால் எழுந்திரிக்காது. தலைச்சன் பிணத்தை எரிக்கும்போது பாத்தியப்பட்டவர்கள் உடனிருந்து எரிப்பார்கள். ஏனென்றால் தலைச்சனின் மண்டை ஓட்டை மாந்ரீகத்துக்கு எடுத்துக் கொண்டு போய் விடுவார்கள் என்பது நம்பிக்கை இவ்வாறு பல செய்திகளைப் பட்டியலிடுவது போன்று புதினத்தைப் படைத்துள்ளார் ஆசிரியர். கவனிப்பாரில்லாத காட்டுப்பூ மனிதர்களின் கதை இது. நெருப்புத் தின்னக் கொடுக்கும் வெற்று உடம்பு பாத்தியஸ்தக்காரர்களின் பரிதாபக்கதை இது. அங்கே போவதற்கு முன்பு நாம் அவர்கள் சிந்திப்பதில்லை. அங்கே போன பின்பும் சிந்திப்பு நம்மிடம் இருப்பதில்லை. இப்படியாகச் சமுதாயக் கரிசனம் இல்லாம மனிதப் பிணங்களாகவே இவர்களின் இருப்பு தொடர்கிறது. மாறாதவறுமையும், குறையாத கண்ணீரும், தேயாத சோகமும் கொண்ட இவர்களை நாம் சிந்திக்க வேண்டும்.

இந்நூலில் ஒவ்வொரு அத்தியாயத்திற்கும் முன்னுரையாக பாரதி, பட்டினத்தார், நாட்டுப்புறப்பாட்டு, அரிச்சந்திரா புராணம், போன்றவற்றிலிருந்து சில வரிகளே இடம் பெற்றாலும் மிகப் பொருத்தமாக அமைந்துள்ளது. அமங்கலப் பொருட்களைப் பாடுதல் கூடாது என்பது பழைய மரபு. இத்தகைய மூடப் பழக்க வழக்கத்தினால்தான் தாழ்த்தப்பட்ட பலதரப்பட்ட மக்களின் வாழ்வியல் துன்பங்களைச் சமுதாயம் அறிய முடியாமலேயே போய்விட்டது. இத்தகைய மரபை மீறியதால்தான் "தகனம்", "தோட்டியின் மகள்" போன்ற புதினங்கள் மலர்ந்துள்ளன. மொத்தத்தில் பறையருக்கும் இங்கு தீர் புலையருக்கும் விடுதலை" என மகாகவி பாரதி முன்மொழிந்ததை ஆசிரியர் வழி மொழிந்துள்ளார். எனவே இந்தப் படைப்பைக் கவன ஈர்ப்புத் தீர்மானம் எனலாம்.

